# ஒப்புமை அரசாங்கங்கள்

ப. ராமசாமி



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

இந்நூலாக்கத்திற்கு மூல முழுமுதற் காரணமான பேராசிரியர், பேரறிஞர், டாக்டர். கா. மீனாட்சி சுந்தரனார் எம்.ஏ; எம். லிட்; பி எச். டி அவர்களுக்கு நன்றியறிதலுடன் அன்பளிப்பு.

திருப்பூர்
10.3.78.

ப. ராமசாமி
நூலாசிரியன்.

த. பா. நி. (க. வெ.) வரிசை எண் —785

# ஒப்புமை அரசாங்கங்கள்

(பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்

ப. ராமசாமி, எம். ஏ, எம். எட்,
துணைப் பேராசிரியர்,
அரசு பயிற்சிக் கல்லூரி,
குமாரபாளையம்,
கோவை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition— January, 1978
Number of Copies— 2000

T. N. T. B. S. (C.P.) No. 785



COMPARATIVE GOVERNMENTS

P. RAMASWAMY

**Price Rs. 11-85**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by* ..
BALMURSUNS PRINTERS
74, Sir Theagaraya Road, Pondy Bazaar,
Madras-600 017

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினேழாண்டு கள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய் துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்று விப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணித வியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளி யியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறு வனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான ஒப்புமை அரசாங்கங்கள் என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **785** ஆவது வெளி யீடாகும். கல்லூரித் தமிழ்க்குழுவின் சார்பில் வெளியான **35** நூல் களையும் சேர்த்து இதுவரை **820** நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில் நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளர வேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர் களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக!

செ. அரங்கநாயகம்

# பொருளடக்கம்

# 1. அடிப்படை அரசியல் கருத்துகள்

## (Fundamental Political Ideas)

[**அரசியல் நூல் :** அரசியல் இலக்கணம்—அரசியல் பிரிவுகள்—அரசியல் அடக்கம்.

**அரசியல் அறிவியலா ?** அறிவியல் தன்மைகள்—அரசியலின் தன்மை—அரசியல் ஒரு சமூக அறிவியல்—அரசியல் ஒரு கலை.

**அரசியல் முறைகள்:** வரலாற்று முறை—பரிசோதனை முறை—ஒப்பீட்டு முறை—உற்று நோக்கு முறை—தத்துவ முறை.

**அரசியலும் ஏனைய சமூக இயல்களும் :** அரசியலும் வரலாறும்—அரசியலும் பொருளியலும்—அரசியலும் சமூக இயலும்—அரசியலும் அறமும்—அரசியலும் உளவியலும்—அரசியலும் புள்ளியியலும்—அரசியலும் சட்ட இயலும்—அரசியலும் புவியியலும்.

**சில முக்கிய அரசியல் கருத்துகள் :** சமுதாயம்—நாடு—அரசு—இறைமை—அரசியலமைப்பு—சட்டமன்றம்—நிருவாகத்துறை—நீதித் துறை—நாட்டினம்—தேசம்—தேசிய ஜனநாயகம்—சட்டம்—வழக்கம்—சுதந்திரம்—சமத்துவம்—குடிமை—உரிமைகள்—கடமைகள்.]

ஆதிகாலத்தில் மனிதன் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தாலும் தனியொருவனாக வாழவில்லை. 'தனியொருவனாக வாழ்வதென்றால், அவன் விலங்காக இருக்கவேண்டும் அல்லது தெய்வமாக இருக்கவேண்டும்' என்று அரிஸ்ட்டாட்டில் கருதுகிறார்.[1] மனிதன் விலங்காகவும் இல்லை; தெய்வமாகவும் இல்லை. எனவே, மனிதனாக, சமுதாயத்தில் ஒருவனாக வாழ்ந்தான். சமுதாய வாழ்க்கையானது மனிதனது உட்கிடக்கையாகும் (Instinct).

[1]Aristotle: 'He who is unable to live in society, or who has no need because he is sufficient for himself, must be either a beast or God.'

சமுதாய வாழ்க்கை நெறிப்படுத்தப்படவேண்டும். விதிகளால் ஒழுங்குபடுத்தப்படவேண்டும். ஒவ்வொரு தனி மனிதனின் நலமும் மற்றவரின் நலத்திற்கு இடையூருக இருக்கக் கூடாது.

## அரசியல் நூல்

### அரசியல் இலக்கணம்

பிளன்சிலி (Bluntschli) என்பவர் கருத்துப்படி நாடு (State) பற்றிக் கூறும் நூல் அரசியலாகும். இந் நூல் நாடு பற்றியும், நாட்டின் அடிப்படைக் கருத்துகள்பற்றியும், அதன் வகைகள், வளர்ச்சி, இன்றியமையாமைபற்றியும் கூறுகிறது.[2] பிளன்சிலி தமது இலக்கணத்தில் அரசு என்ற சொல்லைப் பயன்படுத்தவே யில்லை. ஏனெனில், அரசு நாட்டினுள் அடங்கும் எனக் கருதுகிருர்.

பேராசிரியர் ஸ்டீஃபன் லீக்காக் (Dr. Stephen Leacock)[3], சீலி (Seely)[4] ஆகியவர்களது அரசியல் பற்றிய இலக்கணத்தில் நாடு என்னும் சொல்லைக் கையாளவில்லை. இவர்களது இலக்கணப்படி அரசு பற்றிய நூல் அரசியலாகும்.

லாஸ்கி (Laski)[5], கெட்டில் (Gettel)[6], கில்கிரைஸ்ட் (Gilchrist)[7], கார்னர் (Garner)[8] போன்றவர்கள் நாடு பற்றியும் அரசு பற்றியும்

[2] Bluntschli: 'Political science is concerned with the state, which endeavours to understand and comprehend the state in its fundamental conditions, in its essential nature, its various forms of manifestation, its development.'

[3] Prof. Stephen Leacock: 'Political science deals with government alone.'

[4] Seely: 'Political science investigates the phenomena of government as Political Economy deals with wealth, Biology with life, Algebra with numbers and Geometry with space and magnitudes.'

[5] Prof Laski: 'The study of politics concerns itself with the life of man in relation to organised states.'

[6] Gettle: 'Political science is the science of the state. It deals with the association of human beings that form political units, with the organisation of their government, and with the activities of the governments in making and administering law and in carrying an entire state relation.'

[7] Gilchrist: 'Political science is concerned with the historical survey of origin, development and evolution of the state, the development of political ideals and theories, the analysis of the fundamental nature of the state, its organisation, relation to the individuals that compose it, and its relation to other states.'

[8] Prof. Garner: 'The fundamental problems of political science include, first, an investigation of the nature of the state as the highest political agency for the realisation of the common ends of society and the formulation of the fundamental principles of state life; secondly, an inquiry into the nature, history and forms of political institutions; and, thirdly, a deduction here form, so far as possible, of the laws of political growth and development.'

கூறும் நூல் அரசியலாகும் எனக் கருதுகின்றனர். நாட்டையும் அரசையும் தனித்துப் பிரிக்க முடியாது. நாடு இல்லையேல் அரசு இல்லை. அரசு இல்லாவிடில் நாடு இயங்காது. எனவே, இவ் விரண்டையும் பற்றிய நூல் அரசியல் நூல் என்பதுவே சிறந்த கருத்தாகும். பிளன்சிலியின் கருத்தாகிய அரசியல் நாடு பற்றியே தனித்துக் கூறுகின்ற நூல் என்பதும், லீக்காக்கின் கருத்தாகிய அரசியல், அரசு பற்றியே தனித்துக் கூறுகின்ற நூல் என்பதும் மிகுபட்ட கருத்துகளாகும். அரசியல் என்னும் அறிவியல் நாடு, அரசு ஆகிய இரு பொருளைப் பற்றியும் கூறும் நூலாகும்.

## அரசியல் பிரிவுகள்

அரசியல் நூல் அரசியல் தத்துவம் என்றும், அரசியலமைப்பு என்றும் இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. நாட்டின் தன்மை, நோக்கங்கள், நாட்டின் தோற்றம், வளர்ச்சி, நாட்டிற் கும் தனி மனிதனுக்கும் உள்ள உறவு, நாடுகளிடையே நிலவும் உறவு, நாட்டின் சட்டங்கள், சுதந்திரம், சமத்துவம் ஆகியன பற்றி அரசியல் தத்துவம் அல்லது அரசியல் கோட்பாடுகள் கூறு கின்றன. அரசியலமைப்புகள் நாட்டின் நிறுவனங்கள் பற்றியும் அந் நிறுவனங்களின் அமைப்பு, செயல்முறைகள் பற்றியும் கூறு கின்றன. அரசியல் கோட்பாடுகளின் செயல்முறைகளை அரசாங்க அமைப்புகளில் காணலாம். அரசியல் நூலின் இவ்விரு பகுதிகளும் தனித்து நிற்பன அல்ல. ஒன்றிற்கொன்று தொடர்புடையன வாகும்.

## அரசியல் அடக்கம் (Scope of Politics)

அரசியல் நூலில் நாட்டின் தோற்றம், தன்மை, நோக்கம் ஆகியன கூறப்படுகின்றன. தோற்றம் பற்றித் தந்தை வழிமுறை, தாய் வழிமுறை, சமுதாய ஒப்பந்தம், பரிணாமமுறை ஆகிய கோட்பாடுகள் கூறப்படுகின்றன. ஆதிகாலத்தில் தொடங்கிய அரசாங்க முறையும், அவைகளின் நிறுவனங்களும், இவைகளின் வளர்ச்சிகளும் சொல்லப்படுகின்றன. தற்கால அரசாங்கங்களின் அமைப்பும் செயல்முறைகளும் அடங்கியுள்ளன. நாட்டின் நீதி முறைக் கோட்பாடு வலியுறுத்தப்படுகின்றது. பேராசிரியர் கார்னரின் (Garner) கூற்றுப்படி நாட்டின் தன்மையை ஆய்தல் அரசியல் நிறுவனங்களை அறிதல், அரசியல் வரலாற்றை அறிதல் ஆகியன அரசியல் நூலின் அடக்கமாகும்.

## அரசியல் அறிவியலா?

### அறிவியல் தன்மைகள்

அரசியல் அறிவியலா என்பதை அறிய அறிவியலின் தன்மைகளைக் காணவேண்டும். இயற்பியல், வேதியியல் போன்றன அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட அறிவியல்களாகும். இவைகள் திட்டமானவை. எங்கும் எக்காலத்தும் செல்லுபடியாகக் கூடிய விதிகளையுடையன. சுட்ட சுண்ணும்பின்மீது நீரை ஊற்றினால் கரியமிலவாயு தோன்றும். நீரை மின்சாரத்தால் பகுத்தால் இரு மடங்கு ஹைட்ரஜன் வாயுவும், ஒரு பங்கு பிராண வாயுவும் தோன்றும். இவ்வறிவியல் உண்மைகள் திட்டமானவையாக இருக்கும். நிரந்தரமானவையாகவும் இருக்கும். எங்குப் பரிசோதனை செய்தாலும், எக்காலத்தில் செய்தாலும் இதே முடிவைக் காணலாம். இந்த இயற்பியல்கள் (Physical Sciences) சடப்பொருளைச் சார்ந்தனவாக உள்ளன.

### அரசியலின் தன்மை

அரசியல் மனிதர்களைச் சார்ந்ததாக உள்ளது. இயற்பியல் கையாளும் பொருள்கள் உணர்வற்றன; உயிரற்றன. மனிதன் மாறிக்கொண்டும் வளர்ந்துகொண்டும் செல்பவனாக இருக்கிறான். மனிதனின் உணர்வுகளை அளக்க முடியாது. ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொருவிதமாகச் செயல்படுவான். விளைவு ஒரே மாதிரியாக இருக்காது. எனவே, மனிதனையும், அவனது அரசியல் சமூகத்தையும், சூழ்நிலைகளையும் சார்ந்துள்ள அரசியல், இயற்பியல்களைப் போன்றோ வேதியியலைப் போன்றோ அமையாது. எனவே, அரசியல் திட்டமான அறிவியல் என்று கூறுவது பொருந்தாது.

### அரசியல் ஒரு சமூகவியல்

இருப்பினும், அரசியலிலும் அறிவியல் முறைகள் கையாளப்பட்டு முடிவுகள் தொகுக்கப்படுகின்றன. பொருளியல் போலவும், வரலாறு போலவும் அரசியலிலும் மனிதனையும் அவனது சமூகத்தையும் சார்ந்தனவாக உள்ளன. எனவே, அரசியலை ஒரு சமூகவியல் எனக் கூறலாம்.

### அரசியல் ஒரு கலை

அரசியலைக் கலையென்றும் கருதுகின்றனர். தத்துவ அறிவைச் செயலில் பயன்படுத்திப் பயனை அடைதல் கலையாகும். நிறங்களைப்

பற்றிய அறிவு அறிவியலாகவும், அந் நிறங்களை ஓவியத்தில் பயன் படுத்துதல் கலையாகவும் கருதப்படுகின்றன. அரசியலின் தத்துவ அறிவைப் பயன்படுத்தி நல்ல அரசாங்கத்தை நிறுவுதல் கலையே ஆகும். இந்த முறையில் பார்த்தால் அரசியலை ஒரு கலையெனவும் கொள்ளலாம். அரசியல் ஓரளவு கலையாகக் கருதப்படுகின்றது.

## அரசியல் முறைகள்

### வரலாற்று முறை (Historical Method)

ஒவ்வொரு விஞ்ஞானத்திலும் செய்திகளைச் சேகரிப்பதற்கும், உண்மைகளை அறிவதற்கும் வழிமுறைகள் கையாளப்படுகின்றன. அதேபோல அரசியலிலும் பல முறைகள் கையாளப்பட்டுப் புள்ளி விவரங்கள் சேகரிக்கப்பட்டு முடிவுகள் காணப்படுகின்றன. வரலாற்றிலிருந்து சமூகச் செய்திகளையும், அரசியல் புள்ளி விவரங் களையும் சேகரித்து அரசாங்கம் பற்றியும், அதன் தன்மைகள் பற்றி யும், நன்மைதீமைகள் பற்றியும் அறிகிறோம். பேராசிரியர் பிரைஸின் (Bryce) கூற்றுப்படி வரலாறு அடிக்கடி தவறான வழிகளைக் காட்டுவதால், முழுவதும் வரலாற்று முறையைச் சார்ந் திருக்கக் கூடாது. தனியாளின் விருப்பு வெறுப்புகளுக்கு வரலாறு அடிக்கடி இடமளிக்கிறது.

### பரிசோதனை முறை (Experimental Method)

உலகம் ஒரு பரிசோதனைக்கூடமாக உள்ளது. கூட்டாட்சியும் ஒருமுக ஆட்சியும், பாராளுமன்றமுறை அரசாங்கமும், குடியாட்சித் தலைவர்முறை அரசாங்கமும் பரிசோதனைக்குட்பட்டு விளைவுகள் தெரியப்படுகின்றன. நன்மை பயக்குமாயின் ஏற்கிறோம்; அல்ல வெனில் தவிர்க்கிறோம். இந்தப் பரிசோதனைமுறையிலும் அரசியல் செய்திகள் தொகுக்கப்படுகின்றன.

### ஒப்பீட்டு முறை

அரிஸ்டாட்டில் 158 அரசியலமைப்புகளை ஒப்பிட்டு ஓர் அரசிய லமைப்பை வகுத்துள்ளார். பழங்கால அரசியல் நிறுவனங்களையும், இடைக்கால நிறுவனங்களையும் ஒப்பிட்டு நவீன காலத்திற்கேற்ற அரசியல் நிறுவனங்களை வகுக்கலாம். இவ் வொப்பீட்டு முறையும் அரசியலில் கையாளப்படுகின்றது.

### உற்றுநோக்குமுறை (Observational Method)

பேராசிரியர் பிரைஸ் பாராட்டும் உற்றுநோக்கல் முறையும் அரசியலில் ஆதிக்கம் கொண்டுள்ளது. இம்முறையில் சமுதாய,

அரசியல் நிலைகளை நன்கு உற்றுநோக்கி முடிவுகளைக் காணலாம். அறிவியல் கண்ணோட்டத்துடன் விருப்பு வெறுப்பின்றி உற்று நோக்கல் வற்புறுத்தப்படுகின்றது.

**தத்துவ முறை** (Philosophical Method)

பிளேட்டோ, ரூஸோ, கான்ட் போன்ற தத்துவ அறிஞர்கள் தங்கள் மனக்கண் கொண்டே முறைகளை வகுத்துள்ளனர். மனிதனின் தன்மைகளைக் கண்ட ரூஸோ அரசியல் நிறுவனங்கள் சுதந்திரம் அளிப்பனவாக அமையவேண்டியதை வற்புறுத்தியுள்ளார். இவர்கள் கையாண்டுள்ள தத்துவமுறையானது நடைமுறைகளைக் கருத்தில் கொள்வதில்லை.

## அரசியலும் ஏனைய சமூக இயல்களும்

அரசியல், சமூக இயல், பொருளியல், ஒழுக்கவியல் (Ethics), வரலாறு ஆகிய சமூக இயல்கள் அனைத்தும் மனிதனைப்பற்றிய இயல்களாகும். சமூக இயல் ஒவ்வொன்றும் மனிதனைத் தன் கோணத்தில் காட்டுகின்றன. எனவே, அனைத்துச் சமூக அறிவியல்களும் மனிதனைப்பற்றியே கூறுவதால் அவைகளின் தொடர்புகளை அறிதல் நலம் பயக்கும்.

**அரசியலும் வரலாறும்** (Politics and History)

அரசியலுக்கும் வரலாற்றிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. தங்கள் வளர்ச்சிக்கு ஒன்றையொன்று சார்ந்திருக்கின்றன. சர் ஜான் சீலி (Sir John Seely) என்பவர் கூற்றுப்படி,

> அரசியலின்றி வரண்டிடும் வரலாறு,
> வரலாறின்றி வேரறும் அரசியல்.[9]

வரலாறு பழக்க வழக்கங்களையும், மரபுகளையும், நிறுவனங்களையும், நிகழ்ச்சிகளையும் குறிப்பிடுகின்றது; மனித நாகரிக வளர்ச்சியின் படிகளைக் காட்டுகின்றது. அரசியலறிஞர்களுக்கு வரலாறு ஒரு சோதனைச் சாலையாக அமைகின்றது. அரசியற் கோட்பாடுகளின் வெற்றிதோல்விகளைக் காட்டுகின்ற களம் ஆகும். எனவே, வரலாற்றின் நதிக்கரையில் படிந்துள்ள பொன் அரசியலாகும்

[9] Sir John Seely Says,
'History without Political Science has no fruit
Political Science without History has no root.'

என்று பேராசிரியர் ஆக்ஷன் (Action) கூறுகிறார்.[10] வரலாற்றின் அடிப்படையில் அமையாத அரசியல் வெறுக்கத்தக்கதாகுமென சீலி குறிப்பிடுகிறார். வரலாற்றுச் சான்றில்லா அரசியல் வெற்றுக் கோட்பாடு ஆகும். எனவே, அரசியல்மீது வரலாறு செல்வாக்கு கொள்கிறது.

இதேபோல வரலாற்றின்மீதும் அரசியல் செல்வாக்கு கொள்கிறது. அரசியல் நிகழ்ச்சிகள் இன்றி வரலாறு தழைக்க முடியாது. இந்திய தேசியக் காங்கிரஸின் நடவடிக்கைகள், 1935ஆம் ஆண்டின் இந்திய அரசியல் சட்டம், அமெரிக்க அரசியலமைப்பை வகுத்த ஃபிலடெல்பியா மாநாட்டுச் செயல்முறைகள் ஆகிய அரசியல் நிகழ்ச்சிகள் இல்லாவிடில் வரலாறு வரண்டதாகி வெறும் இலக்கியமாகிவிடும்.[11]

வரலாறும் அரசியலும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன ; சார்புடையன. எனினும், இவைகளிரண்டும் தனித்தனி நூல்களாகும். இவ்விரண்டும் கீழ்க்காணும் விதத்தில் வேறுபட்டன:

(1) வரலாறு இறந்தகாலத்தைக் கூறிக்கொண்டே செல்லும். இக் குறிப்பிலிருந்து அரசியல் தனது கொள்கையை வகுத்துக் கொள்ளும்.

(2) அரசியலில் நீதிக் கருத்திற்கு இடமுண்டு. நீதிக் கருத்துகளை அரசியல் தனது வழிகாட்டியாகக் கொள்கிறது. வரலாறு நீதி அநீதி நோக்காமல் உள்ளதை உள்ளபடியே சொல்கின்றது.

(3) அரசியலில் தத்துவம் கையாளப்படுகிறது. நுண்பொருள்களுக்கும் இடமுண்டு. ஆனால், வரலாற்றில் பருப்பொருள்களும் எடுத்துக்காட்டுகளுமே உள்ளன.

(4) வரலாறு விரிந்த தன்மையுடையது. சமூக வாழ்க்கை அனைத்தையுமே கூறுகின்றது. ஆனால், அரசியல் குறுகிய தன்மையது. சமூகத்தின் அரசியல் வாழ்வை மட்டும் குறிப்பிடுகின்றது.

[10] Lord Action says, 'The science of politics is the one science that is deposited by the stream of history like the grains of gold in the sands of a river.'

[11] Prof. Seely says, 'Politics is vulgar when not liberalised by History, and History fades into mere literature when it loses sight of its relation to Politics,'

**அரசியலும் பொருளியலும்** (Politics and Economics)

அரசியலும் பொருளியலும் ஒன்றிற்கொன்று நெருங்கிய தொடர்புடையன. ஆடம் ஸ்மித் (Adam Smith) பொருளியலுக்கு விளக்கம் கூறும்போது அரசியல் பொருளியல் (Political Economy) என்ற சொல்லைக் கையாளுகிறார். இதன் வழி அரசியல், பொருளியல் ஆகியவைகளின் நெருக்கத்தை அறியலாம்.

பொருளாதாரம் அரசியல்மீது செல்வாக்குச் செலுத்துகிறது. பொருளாதாரக் கருத்துகளின் அடிப்படையிலேயே காரல்மார்க்ஸ் தனது அரசியல் கோட்பாட்டை வகுத்துள்ளார். பொதுவுடைமை, சமூகவுடைமை ஆகிய அரசியற் கோட்பாடுகள் பொருளியல் அடிப்படையில் தோன்றியனவாகும். நிலமானிய முறைகளும், முதலாளித்துவ முறைகளும் பொருளியலின் கூறுபாடுகளாகும். இருப்பினும், இவைகள் அரசியல் ஆதிக்கம் உடையன.

இதேபோல அரசியலும் ஒரு நாட்டின் பொருளியல்மீது செல்வாக்குக் கொண்டுள்ளன. நாட்டின் பொருளாதார நடவடிக்கைகள் அனைத்தும் அரசியல் சூழ்நிலையிலும் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிலுமே நிகழ்கின்றன. அரசியல் கொள்கைகளுக்கு ஏற்பவே நாட்டின் பொருளாதாரம் அமையும். ஆலைகளைத் தேசியமயமாக்குதல் அரசியற் கோட்பாடு. ஆனால், இவைகள் பொருளாதாரத்துறையில் விளைவுகளை ஏற்படுத்துகின்றன.

பொது நிதித்துறையானது (Public Finance) அரசியல், பொருளியல் ஆகிய இரு துறைகளையும் சார்ந்துள்ளன. பல அரசியல் பிரச்சினைகள் பொருளாதாரத்தைப் பாதிக்கின்றன. பல பொருளாதாரப் பிரச்சினைகள் அரசியலைப் பாதிக்கின்றன.

**அரசியலும் சமூக இயலும்** (Politics and Sociology)

சமூக இயலானது மக்களின் சமூக உறவுகள், சமுதாய வாழ்க்கை ஆகியனபற்றிக் கூறும் நூலாகும். சமுதாய நிறுவனங்களான சாதி, சமயம், திருமணம், கலை, கலாச்சாரம் ஆகியன பற்றியும், இவைகள் காலத்தால் வளர்ந்த வகைபற்றியும் சமூக இயலில் காணலாம். அரசியலானது மக்கள் அரசியல் உறவுகள் பற்றியும், அரசியல் வாழ்க்கைபற்றியும் கூறுகிறது. அரசியல் நிறுவனங்களான நாடு, அரசு, சட்டம், நீதிமுறை ஆகியவைபற்றியும், இவைகள் காலத்தால் வளர்ந்த வகைபற்றியம் அரசியலில் காணலாம்.

அரசியல் வாழ்க்கையும், அரசாங்க நிறுவனங்களும் மக்களின் சமுதாய வாழ்வின் ஒரு பகுதியாகவே அமைகின்றன. சமூகவியலானது அரசியல் நடத்தைபற்றியும், மனிதன் ஏன் அரசியல் வாழ்வில் பங்குகொள்ளுகிருன் என்றும் சொல்லுகிறது. நாடு, அரசு ஆகியவற்றின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் சமூகவியல் காட்டுகிறது. அரசின் கொள்கையாலும் செயல்முறைகளாலும் சமுதாயப் பழக்கவழக்கங்களும், சமுதாய நிறுவனங்களும் மாறுதல் அடைகின்றன. அரசியலும் சமூகவியலும் ஒன்றையொன்று சார்ந்தனவாகும். ஒன்றன்மீதொன்று செல்வாக்குக் கொண்டதாகும்.

இவ்விரு இயல்களுக்கும் அடிப்படை வேறுபாடுகளும் உண்டு. சமூக இயல் விரிந்தது ; அரசியலைத் தன்னுள் கொண்டுள்ளது ; மிகப் பழமையான சமூக நடத்தைபற்றிக் கூறுவது ; சமுதாய நடவடிக்கைகளை மறைவின்றிக் கூறுவது. ஆனல், அரசியல் குறுகியது ; சமுதாயத் தோற்றத்திற்கும் பிந்தியது ; அரசியல் நடவடிக்கைகளின்பாற்பட்டது.

## அரசியலும் அறமும் (Politics and Ethics)

அரசியல் அறிஞர்களான பிளேட்டோ, அரிஸ்டாட்டில் போன்றவர்கள் அரசியலையும் ஒழுக்கவியலையும் இணைத்தே கூறுகின்றனர். ஒழுக்கத்தின்பாற்பட்ட அரசில்தான் மக்கள் அற உணர்வு உடையவர்களாக இருப்பர். இவ்விரு இயல்களின் பொது நோக்கம் நன்னடத்தையாகும். ஒழுக்கவியல் நன்னடத்தையை வகுத்துப் போற்றுகிறது. அரசியல் நன்னடத்தையை வகுத்து நடைமுறைப்படுத்துகின்றது. தீய நடத்தையினரைத் தன் மறவலி கொண்டு தண்டிக்கிறது. நாட்டின் சட்டங்கள் அனைத்தும் நீதியின் பாற்பட்டன. நீதியை வலியுறுத்துவனவாகவேயுள்ளன. எனவே, ஒழுக்கவியலும் அரசியலும் இணைந்தனவாகும். அறத்துறையிலிருந்து அரசியலைப் பிரித்தல் தீங்கானதாகும்.

## அரசியலும் உளவியலும் (Politics and Psychology)

உளவியல் மனிதனின் உள்ளத்தைப்பற்றியும், சூழ்நிலைக்கேற்ற அவனது நடத்தைபற்றியும் கூறுகின்றது. மக்களின் உளவியலின் அடிப்படையிலேயே அரசியலின் கொள்கைகளும் கோட்பாடுகளும் தோன்றுகின்றன. ஒரு நாட்டின் அரசியலமைப்பே அந்நாட்டு மக்களின் மன வேட்கையைப் பொறுத்ததாகும். இங்கிலாந்தில் முடியுடைய மன்னர் இருப்பதும், பாராளுமன்றமுறை அரசாங்கம் பின்பற்றப்படுவதும், அம் மக்களின் மனநிலையையே காட்டு

கின்றது. அமெரிக்க அரசியலமைப்பும் சுவிட்ஸர்லாந்தின் அரசியலமைப்பும் தனித்தனிப் பண்புடையனவாகி அந்நாட்டின் வேட்கையைக் காட்டுவனவாக உள்ளன. குடியாட்சி நாட்டில் மக்கள் மனத்தை அறியாது புறக்கணிக்கும் எந்த அரசியல் தலைவரும், அரசியல் கட்சியும், எந்த அரசியற் கோட்பாடும் வெற்றிபெருது. எனவே, உளவியலானது அரசியலில் செல்வாக்குடையதாகும்.

**அரசியலும் புள்ளியியலும்** (Politics and Statistics)

புள்ளியியலில் கருத்துகள் சேகரிக்கப்படுகின்றன ; பகுக்கப்படுகின்றன ; அட்டவணைப்படுத்தப்படுகின்றன. ஒரு நாட்டில் நகர் வாழ்வோர் எத்தனை பேர், கிராமத்தில் வாழ்வோர், கற்றவர்கள் எத்தனை பேர், இதில் ஆண் பெண் எத்தனை பேர்? இவர்களில் வயதுவாரியான எண்ணிக்கை யாது என்பன போன்ற விவரங்களை அளிப்பது புள்ளியியலாகும். இவ் விவரங்கள் அரசியலுக்குப் பெரிதும் பயன்படுகின்றன. இவைகளின் அடிப்படையிலேயே அரசாங்கத் திட்டங்கள் தீட்டப்படுகின்றன. திட்டங்களின் வெற்றிதோல்விகளை மதிப்பிடுவதற்கும் புள்ளிவிவரங்கள் அவசியமாகும். விஞ்ஞானிக்கு ஆய்வுக்கூடம் போல அரசியலறிஞருக்குப் புள்ளியியல் பயன்படுகிறது. எனவே, தற்கால அரசாங்கங்களில் புள்ளியியல்துறை முக்கியமான துறையாகக் கருதப்படுகின்றது. அரசியலும் புள்ளியியலும் நெருங்கிய தொடர்புடையனவாகும்.

**அரசியலும் சட்ட இயலும்** (Politics and Jurisprudence)

சட்டவியலானது சட்டம்பற்றிய இயலாகும் (Science of Law). அரசாங்க அங்கங்களான சட்டமன்றங்கள் சட்டத்தை இயற்றுகின்றன. நிருவாகத்துறை சட்டத்தை நடைமுறைப்படுத்துகிறது. நீதித்துறை சட்டங்களுக்கு விளக்கம் கூறுகின்றது. அரசாங்கத்தின் மூன்று அங்கங்களும் சட்டத்தின் அடிப்படையில் சட்டத்தோடு தொடர்புடையன. இவைகள் சட்டத்தைப்பற்றிய நூலாகிய சட்டவியலோடு தொடர்புடையனவென்பதற்கு மேலும் எடுத்துக்காட்டுகள் அவசியமில்லை.

நாட்டிடைச் சட்டமும் (International Law), அரசியலமைப்புச் சட்டமும், சட்டவியலும் அரசியலின் பகுதிகளேயாகும். இவைகள் வசதியின் காரணமாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மேலும், அரசும் சட்டத்தால் தோற்றுவிக்கப்பட்ட ஒரு நிறுவனமாகும். அரசு பிறர்மீது வழக்குத் தொடரவும், பிறரால் வழக்குத் தொடரப்படவும் தகுதியுடையதாகும். சட்டம் அரசைத் தோற்றுவித்துள்ளது. அரசு சட்டத்தைத் தோற்றுவித்துள்ளது. எனவே, சட்டவியலும் அரசியலும் அழியாத் தொடர்புடையனவாகும்.

### அரசியலும் புவியியலும் (Politics and Geography)

புவியியல் அரசியலின்மீது மிகுந்த செல்வாக்குடையதாகும். அரசாங்க அமைப்பும், அரசியல் நிறுவனங்களும், நில அமைப்பிற்கு ஏற்ப அமைகின்றன. மேலும் மக்களின் பண்பின்மீதும் நடத்தையின்மீதும் இயற்கைச் சூழ்நிலை ஆதிக்கம் கொள்கிறது. அரசியல் வல்லுனரான ரூஸோவின் கருத்துப்படி வெப்பம் மிக்க நாடுகளில் வல்லாட்சியும், குளிர்மிக்க நாடுகளில் அரசியல் குழப்பமும், மிதவெப்ப நாடுகளில் நல்லாட்சியும் நடைபெறும். தட்ப வெப்பநிலை, உணவு, மண் ஆகிய இயற்கைக் கூறுபாடுகள் அரசியலில் செல்வாக்கு உடையனவாகும்.

கூட்டாட்சி அரசு நிறுவப்படுவதற்குக் கூட்டாட்சியின் உறுப்பு நாடுகளிடையே அண்மையும், தட்பவெப்பநிலையில் ஒருமைப்பாடும் வலியுறுத்தப்படுகின்றன. மலைப்பாங்கான சுவிட்ஸர்லாந்தின் அரசியலமைப்பும் நிறுவனங்களும் தனித் தன்மையுடையனவாகும். இருப்பினும், விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாக மனிதன் இயற்கையை வென்றுள்ளதால் இக்காலத்தில் புவியியலின் ஆதிக்கம் மிக அதிகம் எனக் கூற முடியாது. அதே நேரத்தில் அரசியலின் மீது புவியியலுக்கு இருக்கும் செல்வாக்கையும் மறுக்க இயலாது.

## சில முக்கிய அரசியல் கருத்துகள்
## (Some Important Political Concepts)

### சமுதாயம்

மக்களின் கூட்டமே சமுதாயம் எனப்படுகிறது. சமுதாய உறுப்பினர்களுக்கு இடையே ஒருவருக்கொருவர் கொண்டுள்ள உறவு, சமுதாயப் பழக்கவழக்கங்கள், சமுதாயக் குழுக்கள், சமுதாய நிறுவனங்கள் ஆகிய அனைத்தும் சமுதாயத்தில் அடங்கியனவாகும். மேக் ஐவரின் (Mc Ivor) கருத்துப்படி சமுதாயமானது பழக்கவழக்கங்களையும், நடைமுறைக் கோட்பாடுகளையும் கொண்டதாகும். சமுதாயத்தில் ஒருவரையொருவர் சார்ந்திருக்கின்றனர். சமுதாயம் தனது அங்கத்தினர்களின் நடத்தையையும் சுதந்திரத்தையும் தீர்மானிக்கிறது. சமுதாயத்தின் அமைப்பு சிக்கல் மிக்கதாகவும், மாறக்கூடியதாகவும் இருக்கிறது.

குடும்பம், சமயம், சாதிமுறைகள், தொழிற்சங்கங்கள், வாணிபச் சங்கங்கள் இவைகளுள் பெரிய நிறுவனமாகிய அரசு ஆகிய அனைத்தும் சமுதாய நிறுவனங்களாகும். சமுதாயத்திற்கும்

அரசிற்கும் உள்ள ஒப்பீட்டைப் பிறிதொரு பகுதியில் தெளிவாகக் காணலாம்.

### நாடு (State)

நாடு என்பது அரசியலமைப்புடைய சமுதாயமாகும். நிலப் பரப்பு, மக்கள்தொகை, அரசாங்கம், இறைமை ஆகியன நாட்டின் இன்றியமையாக் கூறுபாடுகளாகும். பொதுவாக ஏற்றுக் கொள்ளப்படும் பேராசிரியர் கார்னரின் (Garner) இலக்கணப்படி எண்ணிக்கையில் அதிகமாகவோ குறைவாகவோ உள்ள மக்கள் சமுதாயம். இது வெளிக்கட்டுப்பாட்டிலிருந்து சுதந்திரத்துடனும், ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பை நிரந்தரமாகக்கொண்டு அமைக்கப் பட்ட அரசாங்கத்துடனும் உள்ளது. பெரும்பான்மையோர் அதற்குக் கீழ்ப்படிந்து வாழவேண்டும். நாடுபற்றியும், அதன் இன்றியமையாக் கூறுகள்பற்றியும் பிற்பகுதிகளில் காணலாம்.

### அரசு (Government)

நாட்டின் நான்கு உறுப்புகளில் அரசாங்கமும் ஓர் இன்றி யமையாத உறுப்பாகும். நாடு ஒரு கருத்துப்பொருள். எனவே, தானுக இயங்காது. நாட்டை இயக்குவது அரசாங்கம் ஆகும். சட்டங்களை இயற்றுவதும், அவைகளைச் செயல்படுத்துவதும், அவைகளுக்கு விளக்கம் அளிப்பதும் அரசாங்கத்தின் மூன்று பணிகளாகும். அரசாங்கத்தின் இம் மூன்று பணிகளையும் வெவ் வேறு உறுப்புகள் செய்கின்றன. சட்டம் இயற்றுதலைச் சட்ட மன்றங்களும், சட்டங்களை நடைமுறைப்படுத்துதலை நிருவாகத் துறையும், சட்டங்களுக்கு விளக்கம் அளித்தலை நீதிமன்றங்களும் செய்கின்றன. சி. எப். ஸ்ட்ராங் அவர்களின் இலக்கணப்படி இறைமை அதிகாரங்களைச் செலுத்தும் உரிமை பெற்றுள்ள ஒரு நிறுவனம் அரசாங்கமாகும். அரசு பல அமைப்புகளையுடைய தாகும். முடியரசு, வல்லாட்சி, உயர் குடியினர் ஆட்சி, குடியாட்சி எனப் பல வகைப்படும். மேலும், இவைகள் ஒருமுக அரசு என்றும், கூட்டாட்சி அரசு என்றும், பாராளுமன்றமுறை அரசு என்றும், தலைவர்முறை அரசு என்றும் பிரிக்கப்படுகின்றன.

### இறைமை (Sovereignty)

இறைமை நாட்டின் ஒரு கூறுபாடாகும். உள்நாட்டில் உள்ள மக்கள் அனைவரும், நிறுவனங்கள், சங்கங்கள் அனைத்தும் அரசிற்குப் பணியவேண்டும். அரசினும் உயர்ந்ததோர் நிறுவனம்

அதன் ஆட்சி நிலத்தில் இருக்கக்கூடாது. அரசின் இந்த வல்லமை உள் இறைமை எனப்படும். இவ்வரசின் செயல்கள் மற்ற அரசுகளுக்கு அடங்கியதாக இருக்கக்கூடாது. இது வெளி இறைமை எனப்படும். சுருங்கக் கூறின், ஆற்றல் மிக்க மற்றவரால் கட்டுப்படுத்தப்படாத அரசின் அதிகாரமே இறைமை எனப்படும்.

ஜான் ஆஸ்டினுடைய (John Austin) இலக்கணப்படி ஒரு சமூகத்தில் பிறருக்குப் பணியாத வல்லமையுடைய குறிப்பிட்ட ஒருவர் மட்டும் இருப்பார். இவரது உத்தரவுகளே சட்டங்களாகும். இச் சட்டங்கள் பெரும்பான்மை மக்களைப் பணியவைக்கும். முழுமையானதும், வரையறையற்றதும், பிரிக்கமுடியாததுமான அவரது அதிகாரமே இறைமை ஆகும்.[12]

**அரசியலமைப்பு**

அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பு, இவர்களது உரிமைகளும் கடமைகளும், அரசாங்க உறுப்பாகிய சட்டத்துறை, நிருவாகத்துறை, நீதித்துறை ஆகியவற்றின் அமைப்பு, உறுப்புகளிடையே தொடர்பு, இவைகளது அதிகாரங்கள் ஆகியவைகளுக்காக உள்ள விதிகளும் நெறிமுறைகளும் அரசியலமைப் பெனப்படும். சி. எப். ஸ்ட்ராங் என்பவரின் இலக்கணப்படி ஆளுவோர், ஆளப்படுவோர் ஆகியோர்களுக்கிடையே உள்ள தொடர்பைக் காட்டும் விதிகளின் தொகுப்பே அரசியலமைப் பாகும்.[13] அரசாங்கத்தின் அதிகார வரம்பைக் கட்டுப்படுத்துவதும், ஆளப்படுவோரின் உரிமைகளுக்கு உத்தரவாதம் அளிப்பதும், இறைமை அதிகாரத்தை வரையறுப்பதும் அரசியலமைப்பின் நோக்கங்களாகும்.

**சட்டமன்றம்**

அரசாங்கத்தின் முப்பெருந் துறைகளுள் சட்டத்துறையும் ஒன்றாகும். சட்டங்களை இயற்றுதல் இதன் தலையாய பணியென லாம். சட்டங்கள் இயற்றப்பட்டால்தான் அதன் வழி நிருவாகம் செய்தலும், நீதி கூறுதலும் நடைபெறும். எனவே, அரசாங்கப்

[12] John Austin says, 'If a determinate human superior, not in the habit of obedience to a like superior, receive habitual obedience from the bulk of a given society, that determinate superior is soverign in that society, and that society (including the superior) is a society political and independent.'

[13] C. F. Strong says, 'A constitution may be said to be a collection of principles according which the powers of the government, the rights of the governed and the relations between the two are adjusted.'

பணிகளில் சட்டம் இயற்றுதல் முதன்மைப் பணியாக அமைகின்றது.

சட்டமன்றங்களின் அமைப்பு நாட்டிற்கு நாடு வேறுபடுகின்றது. பொதுவாகச் சட்டமன்றங்களில் மேலவையென்றும் கீழவை என்றும் இரண்டு அவைகள் உள்ளன. இந்த அவைகளின் அமைப்பும் நாடுகளிடையே வேறுபடுகின்றன. கீழவைகள் பொதுவாக மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளையுடையன. மக்களிடமே சட்டத்தை ஆக்கும் இறைமை அதிகாரமுண்டு என்பதற்குச் சான்ருகக் கீழவையின் அமைப்பு விளங்குகின்றது.

சட்டமியற்றும் முறையும் நாட்டிற்கு நாடு வேறுபாடு உடையது. நேரிடைக் குடியாட்சி நிலவும் நாடுகளில் சட்டம் செய்யும் முறை மற்ற நாடுகளிலிருந்து வேறுபட்டுள்ளது. தற்காலத்தில் அரசாங்கத்தின் பணிகள் விரிந்துகொண்டு செல்வதால் சட்டமன்றங்களின் பணிகளும் வளர்ந்துள்ளன.

### நிருவாகத்துறை

சட்டமன்றங்களால் இயற்றப்பட்ட சட்டங்களைச் செயல்முறைப்படுத்தும் துறை நிருவாகத்துறை எனப்படும். நிருவாகத் துறையின் அமைப்பில் நாடுகளிடையே வேறுபாடுகள் உண்டு. சட்டத்துறைக்கும் நிருவாகத் துறைக்கும் நெருங்கிய உறவு இருக்கும். நிருவாக முறைக்குப் பாராளுமன்ற முறை நிருவாகம் என்று பெயர். சட்டத் துறையிலிருந்து தனித்து இயங்கும் நிருவாக முறைக்குத் தலைவர் முறை நிருவாகம் என்று பெயர். நிருவாகத் துறையின் பணிகள் தற்காலத்தில் விரிந்து செல்லுவதால் அதன் அதிகாரங்களும் அதிகரித்துள்ளன.

நிருவாகத்தின் தலைவரும், அவரோடு இணைந்த அமைச்சரவையும் நிருவாகத்துறையில் அடங்குவர். அரசாங்க அலுவலர்களும், அவர்கள் பணியாற்றும் பொதுத் துறையும், படைத்துறையும் ஆட்சித்துறை எனப்படும்.

### நீதித்துறை

இயற்றப்பட்ட சட்டங்களுக்கு விளக்கம் அளிப்பதும், சட்டங்களைப் பிழைத்தோரைத் தண்டிப்பதும், மக்களின் உரிமைகளைப் பாதுகாப்பதும் நீதித்துறையாகும். நீதித்துறை முக்கியப் பணிகளையாற்றுவதால் இத் துறையின் சுதந்திரம் எல்லா நாடுகளிலும் வற்புறுத்தப்படுகின்றது. சட்டத்துறை, நிருவாகத்துறை ஆகிய

வற்றின் நீதித்துறையின் மீதான தலையீடு தவிர்க்கப்படுவதாலும், நீதிபதிகளின் பதவிக் காலமும் ஊதியமும் பாதுகாக்கப்படு வதாலும் நீதித்துறையின் சுயேச்சை காக்கப்படுகின்றது.

இங்கிலாந்து போன்ற நாடுகளில் பாராளுமன்றத்தின் சட்டங்களைத் திறனய்வு செய்யாமல் ஏற்க வேண்டியது நீதித் துறையின் கடமையாகும். அமெரிக்கா போன்ற நாடுகளில் பாராளுமன்றச் சட்டங்களையும் அரசியலமைப்பிற்கு முரணனது எனக் கூறும் மேலாண்மை அதிகாரம் தலைமை நீதிமன்றத்திற்கு உண்டு. இந் நீதிமன்றம் தனது அதிகாரத்தை அரசியலமைப் பிடமிருந்து பெறுகின்றது. நீதிமன்றங்களின் அமைப்பும், அதி காரங்களும் பணிகளும் உலக நாடுகளிடையே வேறுபடுகின்றன. பொதுவாக உரிமைகளின் பாதுகாப்பிற்கு நீதிமன்றங்களின் சுதந்திரம் எல்லா நாடுகளிலும் வலியுறுத்தப்படுகின்றது.

### நாட்டினம் (Nationality)

இனத்தாலும், மரபாலும், பழக்க வழக்கங்களாலும், மொழி யாலும் ஒன்றுபட்ட மக்கள் இனத்தைக் குறிப்பதே நாட்டினம் (Nationality) எனப்படும். பேராசிரியர் பிரைஸ் என்பவரின் இலக் கணப்படி மொழி, இலக்கியம், கருத்துகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்ருல் இணைக்கப்பட்ட மக்கள் தொகுப்பே நாட்டினம் ஆகும்.[14] இம் மக்கள் தொகுப்பு மற்ற மக்கள் தொகுப்புகளி லிருந்து தனித்து நிற்கக்கூடியதாகும்.

### தேசம் (Nation)

நாட்டினத்தார் அமைக்கும் அரசு தேசம் (Nation)[15] ஆகும். தேசத்தினரிடையே இனத்தில், மொழியில், மரபில், கலாச்சாரத் தில், சமயத்தில், நில அமைப்பில், வரலாற்றுப் பொது மரபில், பொது அரசாங்கத்தில், அரசியல் பொது வேட்கையில், பொது நலத்தில்—இணைப்பும் ஒருமைப்பாடும் காணப்படும்.

### தேசிய ஜனநாயக அரசு

வரலாற்று வழி வந்த தேசிய உணர்ச்சிகளின் அடிப்படையில் அரசுகள் தோன்றியுள்ளன. இவைகளைத் தேசிய அரசு (National State) எனலாம். அரசியலின் முன்னேற்றப் பாதை

[14] Lord Bryce defines, 'A Nationality is a population held together by certain ties, as for example, language and literature, ideas, customs and traditions, in such a way as to feel itself a coherent unity distinct from other populations similarly held together by like ties of their own.

[15] Lord Bryce says, 'A Nation is a nationality which has organised itself into a political body either independent or desiring to be independent.'

நம்மைக் குடியரசுக்குக் (Democratic State) கொண்டு வந்துள்ளது. வரலாற்று வழிவந்த தேசிய உணர்வும், முன்னேற்றத்தின் விளைவான ஜனநாயகமும் இணையும்போது தேசிய ஜனநாயக அரசு (National Democratic State) தோன்றுகிறது. தேசிய ஜனநாயக அரசில் தேசிய உணர்வும் ஜனநாயகப் பண்பும் இணைந்து இருப்பதைக் காணலாம்.

நாட்டினத்தார் (Nationality) ஒற்றுமையுணர்ச்சியுடன் தமக்கென ஓர் அரசியல் முறையை வகுக்கும்போது மக்களின் சுதந்திரத்தையும் நலனையும் அவர்களது இறைமையையும் காக்கும் வகையில் ஜனநாயக அரசாக வகுத்தால் அது தேசிய ஜனநாயக அரசாகும்.

அதிகாரத்துவமும் சர்வாதிகாரப் போக்குமுடைய பாசிசம், பொதுவுடைமை ஆகிய கொள்கைகளில் தேசிய உணர்ச்சி மலர்ந்துள்ளதைக் காண்கிறோம். இவர்களும் மக்கள் ஜனநாயகம், மக்கள் குடியரசு, ஜனநாயகக் குடியரசு என்னும் சொற்றொடர்களைப் பயன்படுத்துகின்றனர். எழுதப்பட்ட அரசியலமைப்புகளையும் கொண்டுள்ளனர். ஆனால், நடைமுறையில் தேசிய அரசாக உள்ளதே தவிர, தேசிய ஜனநாயக அரசாக இருப்பதில்லை.

**சட்டம்**

சமுதாய வாழ்வு ஒழுங்குபட நடைபெறவும், சமூகத்தில் பாதுகாப்பு நிலவவும் சட்டங்கள் தேவைப்படுகின்றன. மனிதனின் சுயநலத்தால் மற்றவர்களது உரிமைகள் பறிக்கப்படும்; சமூகத் தீங்கு தோன்றும்; எனவே, சட்டங்கள் இயற்றப்பட்டு அவைகள் நடைமுறைப்படுத்தப்பட வேண்டும். சட்டங்களை மீறுபவர்கள் விசாரிக்கப்பட்டுத் தண்டிக்கப்பட வேண்டும். இவைகள் அரசாங்கத்தின் தலையாய கடமைகளாக இருக்கின்றன. சட்டங்களை இயற்றுவதும், அவைகளைச் செயல்முறைப்படுத்துவதும், அவைகளை மீறுபவர்களைத் தண்டிப்பதும் அரசாங்கத்தின் முப்பெரும் பணிகளாகும். இவைகளை முறையே சட்டமன்றங்களும், நிருவாகத்தினரும், நீதிமன்றங்களும் செய்கின்றன. பழக்க வழக்கங்களும் சட்டத்தைப் போல் மதிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. இங்கிலாந்தில் பழக்க வழக்கங்கள் சட்டத்திற்குச் சமமாக ஏற்றுக்கொள்ளப்பட்டு இவைகளை மீறுபவர்களும் நீதிமன்றத்தால் தண்டிக்கப்படுகின்றனர். எனவே, சட்டம் என்பது சட்டசபைகளால் இயற்றப்பட்டது மட்டுமல்ல. சட்டத்திற்கு இலக்கணம் கூறும் பவுண்டு (Pound) என்பவர்

'நீதி வழங்குவதில் நீதிமன்றங்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு, நடைமுறைப்படுத்தப்படும் கோட்பாடுகளே சட்டமாகும்' என்கிறார்.[16]

**வழக்கம்** (Custom)

நீண்ட நாள் கடைப்பிடிக்கப்படும் பழக்கம் தனி மனிதனுக்கும் சமூகத்திற்கும் வழக்கமாக மாறுகிறது. ஆரம்ப காலத்தில் சமூகத்தில் நிலவிய வழக்கங்களே அதை இயக்கும் விதிகளாக அமைந்தன. இவைகள் பெற்றோர்களாலும், பெரியோர்களாலும், சமய நிறுவனங்களாலும் வலியுறுத்தப்பட்டன. சமூகம் ஏற்றுக் கொண்ட வழக்கத்திலிருந்து பிறழ்வது கண்டிக்கத் தக்கதாக அமைந்திருந்தது. ஆனால், தண்டனைக்குரியதாக இருப்பதில்லை. சமுதாயத்திற்கு இன்றியமையாத வழக்கங்கள் கட்டாயப்படுத்தப் படவேண்டியதாகவும், இவைகளிலிருந்து தவறுவோர் தண்டிக்கப் படவேண்டியவர்களாகவும் இருக்க வேண்டும். இதற்குச் சமூக அதிகாரிகளும் சமுதாய நிந்தனையும் மட்டும் போதாது. அரசும், அரசாங்கத்தின் மறவலியும் அவசியமாகின்றது. எனவே, சமுதாயத்திற்கு அத்தியாவசியமான வழக்கங்களை அரசு சட்டமாக ஏற்றிச் செயல்படுத்துகின்றது. இதிலிருந்து பிறழ்வோரை அரசு தனது அதிகாரத்தைக் கொண்டு தண்டிக்கின்றது.

வழக்கத்திற்குச் சில பண்புகள் வலியுறுத்தப்படுகின்றன. வழக்கங்கள் நீண்ட காலம் கடைப்பிடிக்கப்பட்டாலும், சமுதாயம் அதை ஏற்றுச் செயல்படுத்தினாலும் வழக்கம் சட்டத்தின் நிலையை எய்துவதற்கு அது பகுத்தறிவிற்கு ஒத்ததாக இருக்கவேண்டும்.[17] ஆலயங்களில் உயிர்ப்பலியிடுதல் வழக்கமாக இருப்பினும், அது பகுத்தறிவிற்குப் புறம்பானதாக இருந்ததால் சட்டத்தால் தடுக்கப் பட்டுள்ளது. வழக்கத்தின் இரண்டாவது கூறுபாடு அஃது இயற்றப்பட்ட சட்டங்களுக்கு முரணாக இருக்கக்கூடாது.[18] எடுத்துக் காட்டாகத் தீண்டாமை இந்தியாவில் வழக்கமாக இருந்தது. தீண்டாமை ஒழிக்கப்பட்டுச் சட்டம் இயற்றப்பட்டதால், அது வழக் கத்தின் நிலையை இழந்தது. நெடுங்காலமாகப் பின்பற்றப்படும்

[16] Pound says. 'The body of principles recognized or enforced by public and regular tribunals in the administration of justice.'

[17] Salmond says, 'A custom must be reasonable. The authority of usage is not absolute, but conditional on a certain measure of confirmity with justice and public utility.'

[18] Lord Coke says, 'No custom or prescription can take away the force of an Act of Parliament.'

செயலே வழக்கத்தின் நிலையை எய்தும்.[19] சமீபத்தில் தோன்றிய ஒரு பழக்கம் வழக்கத்தின் நிலையை அடைவதில்லை.

சமுதாயத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டதும், பகுத்தறிவிற்கு ஒட்டியதும், சட்டத்திற்கு முரண் அல்லாததும், நெடுங்காலம் பின்பற்றப்படுவதும் வழக்கம் ஆகின்றது.

**சுதந்திரம் (Liberty)**

பிறர் கட்டுப்பாடின்றித் தான் எண்ணவும், எண்ணியதைச் செய்யவும் உள்ள உரிமையே சுதந்திரம் எனப்படும். சுதந்திரம் நாட்டின் சுதந்திரமாகவும், தனிநபர் சுதந்திரமாகவும் இருக்கும். ஒரு நாடு மற்றொன்றின் கட்டுப்பாட்டில் இல்லாமல் தன் உள் விவகாரங்களையும் வெளி விவகாரங்களையும் தானே தீர்மானித்துச் செயல்பட உள்ள உரிமையே நாட்டின் சுதந்திரமாகும். அதே போலப் பிறர் கட்டுப்பாடின்றித் தான் சிந்திக்கவும் எண்ணவும் உள்ள உரிமையும், சிந்தனையைச் செயல்படுத்த உள்ள உரிமையும் தனி நபர் சுதந்திரம் ஆகும்.

ஆனால், சுதந்திரம் என்பது பூரணக் கட்டுப்பாடில்லா நிலையல்ல. கட்டுப்பாடுகளில்லாவிடில் முரண்பாடுகளும் குழப்பங்களும் தோன்றும். சுதந்திரத்திற்கு ஆபத்து நேரிடும். எனவே, சுதந்திரத்தை அனுபவிப்பதற்காகவே கட்டுப்பாடு அவசியமாகிறது. நாம் அடைய விரும்பும் சுதந்திரம் மற்றவர்களுக்கும் உண்டு. எனவே, ஒருவர் அனுபவிக்கும் சுதந்திரத்தை மற்றவர்களும் அனுபவிக்க வழிவகுத்தும், பிறருக்கு இடையூறு இல்லாதும், பிறர் கட்டுப்பாடு இல்லாததும் அனுபவிக்கும் உரிமையே சுதந்திரமாகும்.[20] நீ எந்தச் சுதந்திரத்தை விரும்புகிறாயோ அந்தச் சுதந்திரத்தை மற்றவர்களுக்கும் கொடு[21] என்பதே சுதந்திரம் அனுபவிப்பதிலுள்ள அடிப்படைக் கோட்பாடாகும்.

சுதந்திரம் சட்டங்களால் பாதுகாக்கப்பட வேண்டும். அப்போதுதான் தனி மனிதன் தன் சுதந்திரத்தை அனுபவிக்கவும், தன் ஆளுமையை வளர்த்துக்கொள்ளவும், திறமைகளைப் பயன்படுத்தவும், வாழ்க்கைத் திட்டங்களைத் தயாரிக்கவும் இயலும். மதம், இனம், மொழி ஆகிய வேறுபாடுகளின்றி அனைவரும்

[19] Littlekon says, 'No custom is to be allowed, but such custom as hath been used by title of prescription that is to say from time out of mind.

[20] Declaration of Rights of man (1789) defines Liberty. 'Liberty is the power to do anything that does not injure another.'

[21] 'Do unto others as you wish to be done by.'

அனுபவிக்குமாறு அரசால் சுதந்திரம் பாதுகாக்கப்பட வேண்டும். எளியவர்களுக்கும் சுதந்திரம் வேண்டுமென்றால் சட்டமும், சம சுதந்திரத்திற்கு வாய்ப்பளிக்க அரசும் அவசியப்படுகின்றன.

அரசியல் சுதந்திரம், பொருளாதாரச் சுதந்திரம், இயற்கைச் சுதந்திரம், குடிமைச் சுதந்திரம், தனியாள் சுதந்திரம், தேசியச் சுதந்திரம் எனச் சுதந்திரம் பல வகைப்படும்.

**சமத்துவம் (Equality)**

1789ஆம் ஆண்டில் பிரான்சு நாட்டில் தேசிய சபை வெளியிட்ட மனித உரிமைப் பிரகடனத்தில் சமத்துவம் வலியுறுத்திக் கூறப்படுகிறது[22]. மக்கள் பிறக்கும்போது சுதந்திரமாகவும் சமத்துவத்துடனும் பிறக்கிறார்கள். இந்தச் சுதந்திரமும் சமத்துவமும் உரிமைகளை அனுபவிப்பதில் தொடர்ந்து இருக்க வேண்டும். பிரான்சு நாட்டின் இந்தத் தத்துவத்தை அமெரிக்கச் சுதந்திரப் பிரகடனமும் கூறுகின்றது[23].

உடற்கூறுகளிலும், திறமையிலும், அறிவாற்றலிலும் மக்களிடம் சமத்துவமின்மையைக் காண்கிறோம். இயற்கையிலுள்ள இவ் வேறுபாடுகளை மாற்றுவது இயலாது. எனவே, சமத்துவம் என்ற சொல் இவைகளுக்குப் பொருந்தாது.

ஒரு நாட்டின் குடிமக்களிடையே சாதி, சமயம், இனம், மொழி, மரபு, பிறப்பிடம் ஆகியவைகளின் அடிப்படையில் வேறுபாடு காட்டாது, தனிச்சலுகைகள் கொடுக்கப்படாது இருக்க வேண்டும். உரிமைகளை அடைவதிலும், அவைகளை அனுபவிப்பதிலும் சமத்துவம் இருக்க வேண்டும். செல்வந்தனாயினும், ஏழையாயினும், உயர்குடிப் பிறந்தவனாயினும் தாழ்ந்தவனாயினும், ஆணாயினும், பெண்ணாயினும் சட்டத்தின் முன் சமமாகக் கருதப்பட வேண்டும். அரசாங்கத்தில் பதவிகளை வகிப்பதில் சமசந்தர்ப்பங்கள் கொடுக்கப்படவேண்டும். இவைகளின் அடிப்படையிலேயே சமத்துவத்திற்குப் பொருள் கொள்ளவேண்டும்.

சட்டத்தின் முன் சமத்துவம், அரசியல் சமத்துவம், பொருளாதாரச் சமத்துவம், சமுதாயச் சமத்துவம் எனச் சமத்துவம் வகைப்படுத்தப்படுகின்றது.

[22] Declaration of Rights of man (1789) issued by National Assembly of France runs, 'Men are born, and always continue, free and equal in respect of their rights.'

[23] American Declaration of Independence says, 'We hold these truths to be self-evident, that all men are created equal.'

சட்டத்தின் முன் அனைவரும் சமமாவர். சட்டத்தால் அளிக்கப்படும் பாதுகாப்பு அனைவருக்கும் உண்டு. நாட்டின் அரசியலில் பங்கு பெறுவதிலும், தேர்தலில் நிற்பதிலும் வாக்கு அளிப்பதிலும், பதவிகளை வகிப்பதிலும் சமத்துவம் பாதுகாக்கப்பட வேண்டும். தான் விரும்பும் தொழிலைச் செய்யவும், நாட்டின் இயற்கையான பொருளாதார வளங்களை அனுபவிக்கவும் சம உரிமைகள் தேவைப்படுகின்றன. சமுதாயத்தில் சமத்தகுதியுடன் வாழவும், பிறரால் சுரண்டப்படாமல் இருக்கவும் வேண்டும். இந்தச் சமத்துவங்கள் சட்டத்தால் பாதுகாக்கப்படுகின்றன.

## குடிமை (Citizenship)

குடியுரிமைகள் உள்ள ஒருவன் குடிமகன் ஆவான். இவனுக்கு அரசியலில் பங்கு பெறவும், தேர்தலில் வாக்களிக்கவும், போட்டியிடவும், சட்டத்தால் பாதுகாக்கப்படவும், சட்டத்தின் முன் சமத்துவம் பெறவும் உரிமைகள் உண்டு.

பழைய கிரேக்க ரோமானிய நகர அரசுகளில் ஒரு சிலருக்கு மட்டுமே குடியுரிமைகள் இருந்தன. நாட்டின் நிருவாகத்தில் நேரடியாகப் பங்கு பெற்றவர்களே குடிமக்கள் எனக் கருதப்பட்டனர். குடிமக்களின் நிலையடையாத ஆயிரக்கணக்கான அடிமைகள் வாழ்ந்தனர். இவர்களுக்குக் குடியுரிமைகள் இல்லை.

தற்காலத்தில் ஒரு நாட்டில் பிறந்தவர்களும், அயல் நாட்டிலிருந்து நிரந்தரமாகக் குடியேறிக் குடியுரிமை பெற்றவர்களும் குடிமக்களாவர். அவர்களுக்குக் குடியுரிமை உண்டு. இவர்கள் உரிய உரிமைகளைப் பெறவும் கடமைகளை ஆற்றவும் தகுதியுடையவர்கள் ஆவர்.

குடிமகனை அயல் நாட்டாரிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவதும் அவசியமாகும். வேறு நாட்டவன் ஒருவன் குடியுரிமை பெறாத நிலையில் தற்காலிகமாக ஒரு நாட்டில் தங்கி இருந்தால் அயல்நாட்டான் ஆவான். அயல்நாட்டானும் வரி செலுத்த வேண்டும். இவனுக்கும் மதச் சுதந்திரம் உண்டு. சட்டத்தால் பாதுகாப்பும் பெறலாம். ஆனால், நாட்டின் அரசியலில் பங்கு பெற இயலாது. தேர்தலில் போட்டியிடவோ வாக்களிக்கவோ உரிமையில்லை. அரசாங்கப் பதவிகளையடைவதில் உரிமையோ, சட்டத்தின் முன் சமத்துவமோ கிடையாது. அயல் நாட்டானுக்கு நாட்டைக் காக்கப் போரிடவோ, ராணுவத்தில் பணியாற்றவோ உள்ள கடமைகளும் இல்லை. குடிமகனுக்கு உரிமைகளும் அதற்கேற்ற கடமைகளும் உண்டு.

**உரிமைகள் (Rights)**

அரிஸ்ட்டாட்டில் கருத்துப்படி மனிதன் வாழ்ந்தால் மட்டும் போதாது. நன்ருக வாழவேண்டும். நல்வாழ்விற்கும், முழு ஆளுமை வளர்ச்சிக்கும், ஆளுமை வெளியீட்டிற்கும் அவசியமான சில நிபந்தனைகளே உரிமைகள் எனப்படும். இவைகள் சமுதாயத்தோடு தொடர்புடையனவாகும். சமுதாயத்தில் வாழும் மனிதனுக்கே உரிமைகள் அவசியம். காட்டில் தனித்து வாழும் ஒருவனுக்கு உரிமைகள் சொல்லப்படுவதில்லை. அதே போல விலங்குகளுக்கும் உரிமைகள் கிடையா.

வல்லாட்சிகளில் மக்களின் உரிமைகள் பறிக்கப்பட்டு அடிமை நிலையில் வாழ்ந்தார்கள். குடியாட்சிகள் மலர்ந்துள்ள தற்காலத்தில் உரிமைகள் வகுக்கப்பட்டு, அவைகள் சட்டத்தால் பாதுகாக்கப்படுகின்றன. மனித வாழ்விற்கு இன்றியமையாத உரிமைகள் நாட்டின் அடிப்படைச் சட்டமான அரசியலமைப்புகளில் இணைக்கப்பட்டுள்ளன. இவ்வுரிமைகளைக் காப்பதில் நீதிமன்றங்கள் பாதுகாவலனாகச் செயல்படுகின்றன. உரிமைகளில் பல வகைகள் உள்ளன. வாழ்வதற்கான உரிமை, சுதந்திரத்திற்கான உரிமை, அரசியல் உரிமைகள், சொத்துரிமை, சமய உரிமை, கல்வி கலாச்சார உரிமைகள், சுரண்டப்படாமலிருப்பதற்கான உரிமைகள், உரிமைகள் பறிக்கப்பட்டால் சட்டப்படியான பரிகாரம் தேடும் உரிமை என உரிமைகள் வகுக்கப்பட்டுப் பாதுகாக்கப்படுகின்றன.

இந்திய அரசியலமைப்பில் அடிப்படையுரிமைகள் சொல்லப்பட்டுள்ளன. அடிப்படையுரிமைகளின் பிரகடனம் அமெரிக்க அரசியலமைப்பிலும் அடங்கியுள்ளன. உரிமை மசோதா, உரிமைகளுக்கான விண்ணப்பம் ஆகிய ஆவணங்களில் இங்கிலாந்து மக்களின் உரிமைகள் கூறப்பட்டுள்ளன. இவ்வுரிமைகள் சட்டத்தால் பாதுகாக்கப்படுகின்றன.

**கடமை (Duty)**

உரிமைகளைப் பற்றிக் கூறும்போது கடமைகளையும் காண வேண்டும். ஏனெனில், உரிமைகளும் கடமைகளும் இணைந்து செயல்படுவனவாகும்[24]. உரிமைகளை அனுபவிக்கும் ஒருவர் மற்றவர்களுக்கும் நாட்டிற்கும் பிரதிபலனாகச் செய்யவேண்டியவைகளே கடமைகள் எனப்படும்.

[24] Salmond says, 'Rights and duties are necessarily correlative. There can be no right without a corresponding duty, or duty without a corresponding right, any more than these can be a husband without a wife, or a father without a child.'

கடமைகள் நீதியின்பாற்பட்டன என்றும், சட்டத்தின் படியான கடமையென்றும், உடன்பாட்டுக் கடமையென்றும் (Positive Duty), எதிர்மறைக் கடமையென்றும் (Negative Duty) பகுக்கப்படுகின்றன. தானதருமங்கள் செய்யவேண்டுமென்பதும், உண்மையே பேசவேண்டுமென்பதும் நீதியின்பாற்பட்ட கடமைகளாகும். இவைகளைச் சட்டங்கள் வற்புறுத்துவதில்லை. ஆனால், சட்டத்தின்பாற்பட்ட கடமைகளைச் சட்டம் வற்புறுத்துகிறது. நீதிமன்றத்தில் சான்று பகரும் ஒருவர் உண்மையே பேச வேண்டும் என்று சட்டம் வற்புறுத்துகிறது. நீதிமன்றத்தில் பொய்ச்சான்று கூறினால் பிறரது நலன் பாதிக்கப்படுகிறது. எனவே, உண்மையே பேசுதல் நீதியின்பாற்பட்ட கடமையாயினும், நீதிமன்றத்தில் உண்மையே கூற வேண்டியது சட்டத்தின்பாற்பட்ட கடமையாகின்றது. பிறரிடம் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டியதும், பிறரது உயிருக்கும் உடலுக்கும் தீங்கு விளைவிக்காது இருப்பதும் சட்டத்தால் வற்புறுத்தப்படுகிறது. உடன்பாட்டுக் கடமை (Positive Duty) என்பது செய்யவேண்டியதை வற்புறுத்துவதாகும். சாலையில் செல்பவர்கள் சாலை விதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இஃது உடன்பாட்டுக் கடமை யாகும். இக்கடமை செய்யப்படாவிடில் தண்டனை கிடைக்கும். எதிர்மறைக் கடமை என்பது செய்யக் கூடாதது ஆகும். இது சட்டத்தால் தவிர்க்கப்படுகின்றது. எனவே, இதைச் செய்பவர் தண்டிக்கப்படுகிறார்[25]. அரசாங்க முத்திரையைத் தனிநபர் பயன்படுத்தக்கூடாது என்பது எதிர் மறைக் கடமையாகும்.

குடிமகன் நாட்டிற்கு ஆற்ற வேண்டிய கடமைகளும் உண்டு. தன்நாட்டின் மீதும், அரசாங்கத்தின் மீதும், அரசியல் அமைப்பின் மீதும், சட்டதிட்டங்களின் மீதும் பற்றுடையவனாக இருக்க வேண்டும். இவைகளைப் பேண வேண்டும். அரசாங்கத்திற்கான வரிகளைச் செலுத்தவேண்டும். நாட்டின் சட்டங்களுக்குப் பணிய வேண்டும். வாக்களிப்பதிலும், பொதுப் பதவிகள் வகிப்பதிலும் நாணயமும் நேர்மையும் பின்பற்றப்படவேண்டும். சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவதில் அரசுக்கு உதவ வேண்டும்.

எனவே, உரிமைகளை மட்டும் பேணாது, நாட்டிற்கும் அரசாங்கத்திற்கும் தன் கடமைகளை ஆற்றுவது நல்ல குடிமகனின் பண்பாகும்.

[25] Prof. Gray says, 'The acts or forbearanace which an organised society commands to protect rights are the duties of the persons to whom these commands are directed.'

சரியான கருத்து (Concept) ஏற்படுவதற்கும், பாடத்தைத் தெளிவாக அறியவும் இவ்வடிப்படைக் கருத்துகளை நாம் அறிவது அவசியமாகும். இந்த அடிப்படைக் கருத்துகள் இந்நூலின் பின்பகுதிகளில் சம்பந்தப்பட்ட தலைப்புகளுடன் மேலும் விரிவாக விளக்கப்படும்.

## முக்கிய வினாக்கள்

1. அரசியல் நூலின் இலக்கணம் கூறி, அதன் அடக்கத்தைக் காண்க.
2. அரசியல் ஓர் அறிவியல், அரசியல் ஒரு கலை ஆய்க.
3. அரசியலில் கையாளப்படும் முறைகள் யாவை?
4. அரசியலுக்கு ஏனைய இயல்களோடு உள்ள தொடர்பினைக் கூறுக.
5. குறிப்பு வரைக:

(அ) இறைமை
(ஆ) அரசியலமைப்பு
(இ) நாட்டினம்
(ஈ) தேசிய ஜனநாயகம்
(உ) உரிமைகள்

# 2. நாடு (State)

[நாட்டின் முக்கியத்துவம் — நாட்டின் பொருள்— நாட்டின் இலக்கணம்.

## அ. நாட்டின் கூறுபாடுகள்

**மக்கள் தொகை :** மக்கள் தொகையின் அவசியம்— மக்கள்தொகையின் அளவு—அதிகமான மக்கள்தொகை —குறைவான மக்கள்தொகை—விரும்பத்தக்க மக்கள் தொகை—மக்களின் விரும்பத்தக்க பண்பு—நன்மக்கள் — மக்கள்தொகையின் பகுப்பு.

**ஆட்சிநிலம் :** ஆட்சி நிலம் அவசியமில்லை என்ற கருத்து—ஆட்சி நிலத்தின் அவசியம்—ஆட்சி நிலத்தின் அறுதி — ஆட்சி நிலத்தின் அளவு — சிறிய ஆட்சி நிலத்தின் நன்மைகள்—சிறிய ஆட்சிநிலத்தின் தீமைகள் —பெரிய ஆட்சி நிலத்தின் நன்மைகள்—பெரிய ஆட்சி நிலத்தின் தீமைகள்—அனுகூலமான ஆட்சி நிலம்— ஆட்சி நிலத்தை அடைதல்.

**அரசு :** அரசின் அவசியம்—அரசு நாட்டின் ஏவலர் —அரசின் அடக்கம்—அரசின் நிறுவனங்கள்—அரசின் வகைகள்.

**இறைமை :** இறைமையின் இலக்கணம்—இறைமை யின் அவசியம்—இறைமையின் தன்மை—இறைமையின் வகைகள்—இறைமையின் பகுப்பு.]

**நாட்டின் முக்கியத்துவம்**

நாடு இருப்பதாலேயே நமது நாகரிக வாழ்க்கை இயங்கு கின்றது. நாம் அமைதியாக வாழ்ந்து முன்னேற்றப் பாதையில் செல்கின்றோம். சட்டதிட்டங்களை மதித்து வாழும் முறையை

உணர்கிறோம், மனித வாழ்க்கையை ஒழுங்குள்ளதாக்கி நடத்திச் செல்வதும் அரசே ஆகும். இலக்கிய வளர்ச்சியும், கலை வளர்ச்சியும், அறிவியல் வளர்ச்சியும், தனி நபரின் ஆளுமை வளர்ச்சியும், தொழிலும், வாணிபமும் நாட்டின் ஆதரவில் நடை பெறுவனவாகும். இம் முன்னேற்றங்களுக்குத் தேவையான அமைதி. ஒழுங்கு, பாதுகாப்பு, சுதந்திரம் ஆகியன நாடு இருப்ப தாலேயே நாம் அனுபவிக்க முடிகின்றது. மனித சமுதாயம் நாகரிக வளர்ச்சியில் பல்லாயிரக்கணக்கான மைல்களைத் தாண்டி உச்சநிலை அடைந்திருக்கிறதென்றாலும், பழைமை காக்கப்படுகிறது என்றாலும், புதுமைகள் தோன்றுகின்றனவென்றாலும் இவை களுக்குக் காரணம் நாடேயாகும். உலகின் எல்லா மக்களும் ஏதாவது ஒரு நாட்டின் குடையின்கீழ் வாழ்கின்றனர். பேராசிரியர் லாஸ்கியின் (Laski) கூற்றுப்படி, சமுதாய அமைப்பிற்கு நாடே அடிக்கல்லாகும். அரசியல் நிறுவனங்கள் பல இருப்பினும், இவை களுள் நாடு மிகவும் முக்கியம் வாய்ந்ததாகக் கருதப்படுகின்றது. சட்டங்களை ஏற்படுத்தி ஒழுங்கு முறைகளை வகுத்து நம்மை நடத்திச் செல்வது அரசாங்கமானாலும், இது நாட்டின் கூறுபாடே யாகும்.

### நாட்டின் பொருள்

அரசியலில் அரசிற்கு விஞ்ஞான ரீதியான பொருள் உண்டு. ஆனால், சாதாரண வழக்கு முறையில் நாடு என்ற சொல் தெளி வற்ற நிலையிலும், பொருள் மாறுபட்ட நிலையிலும் பயன்படுத்தப் படுகின்றது. அரசாங்கம், மாநிலம், தேசம் ஆகிய சொற்கள் பயன்படுத்தப்படவேண்டிய இடத்தில் நாடு என்னும் சொல் பயன்படுத்தப்படுகின்றது.

நாட்டு உதவி, நாட்டு நிருவாகம், நாட்டு விதிகள் என்ற வார்த்தைகள் அரசாங்க உதவி, அரசாங்க நிருவாகம், அரசாங்க விதிகள் என்ற சொற்களுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படு கின்றன. இவ்விடத்தில் நாடு என்னும் சொல் அரசாங்கம் என்னும் பொருளில் வழக்கு முறையில் கையாளப்படுகின்றது. நாடும் அரசாங்கமும் வேறுபாடு உடையன, ஆதலால் இது தவறாகும்.

தமிழ்நாட்டு மாநிலம், கேரள மாநிலம், கர்நாடக மாநிலம், என்ற கருத்துகளைக் காட்டத் தமிழ்நாட்டு அரசு, கேரளஅரசு, கர்நாடக அரசு என்ற சொற்களை நடைமுறையில் பயன்படுத்து கிறோம். அரசியல் முறைப்படி நோக்கின் இது தவறுடையதாகும். தமிழ்நாடு, கேரளம், கர்நாடகம் ஆகியன இந்திய நாட்டின்

உறுப்புகளே ஆகும். அமெரிக்கக் கூட்டாட்சியின் உறுப்புகளை டெக்ஸால் அரசு, அலபாமா அரசு, விஸ்கான்சின் அரசு என்று குறிப்பிடும் போதும், அரசு என்ற சொல்லை அறிவியல் முறையில் நாம் கையாளுவதில்லை. கூட்டாட்சியின் உறுப்புகளை நாடு என அழைப்பது குறையுடையது ஆகும். ஏனென்றால், இவ்வுறுப்பு களுக்கு இறைமை அதிகாரம் கிடையாது. இறைமை கூட்டாட்சி அரசிற்கே உண்டு. தமிழ்நாட்டில் மக்கள்தொகையும், நிலப் பரப்பும், அரசாங்கமும் இருப்பினும் இறைமை இன்மையால் நாடு என அழைக்க இயலவில்லை. இறைமை இந்திய அரசிடமே உள்ளது.

தேசம் என்று பொருள்படும்படியும் அரசு என்ற சொல் கையாளப்படுகின்றது. ஐக்கிய நாடுகளின் ஸ்தாபனத்தில் (United Nations Organisation) நாடுகளே அங்கம் வகிக்கின்றன. இவ்விடத்தில் நாடு என்ற சொல்லைக் குறிக்க தேசம் (Nation) என்ற சொல் கையாளப்படுகின்றது.

இவ்வெடுத்துக்காட்டுகளிலிருந்து நாடு என்ற சொல் நடைமுறையில் அரசியல் முறைப்படி பயன்படுத்தப்படுவதில்லை. அரசியலின்படி நாட்டுக்குக் கூறப்படும் இலக்கணத்தை நோக்கின், சாதாரண நடைமுறையில் பயன்படுத்தப்படும் சொற்களின் பொருத்தமின்மையை நாம் உணரலாம்.

**நாட்டின் இலக்கணம்**

பொதுவாகச் சமூக விஞ்ஞானங்களில் வரையறுப்புகள் பற்றிய பிரச்சினைகள் எழுவதுண்டு. அரசியலிலும் இலக்கணங்கள் பற்றிய பிரச்சினைகள் உண்டு. நாட்டிற்கு அரசியல் நிபுணர்கள் பல்வேறு இலக்கணங்கள் கூறுகின்றனர். ஒவ்வோர் ஆசிரியரும் ஒவ்வோர் இலக்கணம் கூறுவதால் இலக்கண ஒருமைப்பாடு காணமுடிவதில்லை. இருப்பினும், அவ்விலக்கணங்களில் முக்கியமான சிலவற்றை இங்குக் காண்பது பயனுடையதாகும்.

பிளண்ட்சிலியின் (Bluntschili) கூற்றுப்படி, நாடு என்பது அரசியலமைப்புடன் குறிப்பிட்ட ஆட்சி நிலத்தில் வாழும் மக்களாவர்.[1]

உட்ரோ வில்சனின் (Woodrow Wilson) இலக்கணப்படி, குறிப்பிட்ட நிலப்பரப்பில் சட்ட அமைப்பிற்குட்பட்டிருக்கும் மக்களே நாடு எனப்படுவர்.[2]

[1] Bluntschili: 'The state is politically organised people of a definite territory'
[2] Woodrow Wilson, 'A State is a people organised for law within a definite territory'.

புரூஸ்டரின் (Brewster) கருத்துப்படி, நாடு என்பது இறைமை உடைய அரசாங்கத்தின் நிலப்பரப்பில் வாழும் அமைப்புடைய மக்களாவர்.[3]

மேக் ஐவர் (Mac Iver) என்பவரின் கருத்துப்படி, அரசாங்க ஆணையாகிய சட்டப்படி நடக்கும் மக்களையும், தண்டிக்கும் வல்லமையுள்ள அரசாங்கத்தையும், குறிப்பிட்ட ஆட்சிநிலத்தையும் கொண்டது நாடாகும்.[4]

கார்னரின் (Garner) இலக்கணப்படி, எண்ணிக்கையில் அதிகமோ குறைவோ ஆன மக்கள் சமுதாயம் வெளிக்கட்டுப்பாட்டிலிருந்து சுதந்திரத்துடன் ஒரு குறிப்பிட்ட ஆட்சி நிலத்தை நிரந்தரமாகக்கொண்டு அமைக்கப்பட்ட அரசாங்கத்துடன் வாழ்தலாகும். இவர்களில் பெரும்பான்மையோர் அதற்குக் கீழ்ப்படிய வேண்டும்.[5]

பெரும்பான்மையினரால் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும் பேராசிரியர் லாஸ்கியின் இலக்கணமாவது, தனது குறிப்பிட்ட ஒரு ஆட்சிநிலத்தில் மற்ற ஸ்தாபனங்களின்மேல் ஆதிக்கம் கொண்டு அரசாங்கம், மக்கள் என்று பிரிக்கப்பட்டு நிரந்தரமாக அமைந்துள்ள சமுதாயம் அரசாகும்.

மேற்கூறப்பட்ட பல இலக்கணங்களில் பேராசிரியர் லாஸ்கியின் இலக்கணமும், பேரறிஞர் கார்னரின் இலக்கணமும் ஏற்புடையதாகத் தென்படுகின்றன. இவ்விலக்கணங்களே நாட்டின் எல்லாக் கூறுபாடுகளையும் கொண்டுள்ளன. மற்ற இலக்கணங்கள் நாட்டின் ஏதாவது ஓர் அம்சத்தைக் கூறுகின்றனவேயொழிய முழுமையுடையனவாக இல்லை.

## நாட்டின் கூறுபாடுகள்

(Elements of the states)

நாட்டிற்குக் கூறப்பட்ட இலக்கணங்களிலிருந்து மக்கள் தொகை, நிலப்பரப்பு, அரசாங்கம், இறைமை ஆகிய நான்கு கூறுபாடுகளை உடையதே நாடு என அறியலாம்.

[3] Brewster: 'The state may be difined as an organised group of people who occupy a territory and a sovereign government'.

[4] Mac Iver: 'State is an association which acting through law as promulgated by a government, endowed to this end with coercive power, maintains within a community, territorcally demariated the universal external conditions of social order'.

[5] Garner: 'State, as a concept of political science and public law, is a community of persons more or less numbers permanently occupying a definite portion of territory independent or nearly so of external control, and possessing an organised government to which the great body of inhabitants render habitual Obedience'.

## மக்கள் தொகை

### மக்கள்தொகையின் அவசியம்

மக்கள்தொகை யில்லாத ஒரு நிறுவனத்தை நாடு என்று நாம் கூற இயலாது. நாட்டின் ஆரம்பமே மக்கள்தொகையுடன் இணைந்ததாகும். நாட்டை நிறுவியவர்களும் இவர்களேயாவர். நாட்டின் நான்கு கூறுகளில் மக்கள்தொகையும், நிலப்பரப்பும் முக்கியமானவை. அதன் பிறகே அமைப்புடைய அரசாங்கமும் இறைமையும் தோன்றின. எனவே, மக்கள்தொகை நாட்டின் முக்கியக் கூறுபாடு ஆகும்.

### மக்கள்தொகையின் அளவு

ஓர் அரசை ஏற்படுத்துவதற்கு மக்கள்தொகையின் அளவு வரையறுக்கப்படவில்லை. குறைந்த மக்கள்தொகையுடைய மொனுக்கோவும் (Monaco), மிகுந்த மக்கள்தொகையுடைய சீனுவும் வேறுபாடின்றி நாடுகளாகவே கருதப்படுகின்றன. இருப்பினும், கிரேக்க அரசியல் ஞானிகள் சிறந்த நாடாவதற்கு ஒரு குறிப்பிட்ட மக்கள்தொகையைக் காட்டுகின்றனர். பிளேட்டோவின் (Plato) கருத்துப்படி ஐயாயிரத்து நாற்பது குடிமக்கள் கொண்ட நாடு விரும்பத்தக்கதாகும். ஏதென்சு, ஸ்பார்ட்டா போன்ற நகர அரசுகளின் மக்கள்தொகையைக் கருத்தில் கொண்டு பிளேட்டோ ஒரு நாட்டில் இருக்கவேண்டிய மக்கள்தொகை அளவைக் கூறியுள்ளார். கிரேக்க நகர அரசுகளின் மக்கள்தொகை தற்கால ஒரு நகராட்சியின் மக்கள் தொகையின் அளவே இருந்தது. அரிஸ்ட்டாட்டில் (Aristotle) கூற்றுப்படி, ஓர் அரசில் ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் தொகை இருக்கவேண்டும். நேரடி மக்களாட்சியினை ஆதரிக்கும் இயற்கைக் கொள்கையினரான ஜேன் ஜேக்குவிஸ், ரூஸோ, ஆகியோர் ஓர் அரசில் பத்தாயிரம் மக்கள் இருப்பது சாலச்சிறந்தது எனக் கருதுகிறுர்கள். அரசாவதற்கு மக்கள்தொகையின் அளவு குறிக்கப்படாவிடினும், அதிக மக்கள் தொகையிலும், குறைந்த மக்கள்தொகையிலும் முறையே அவைகளுக்கே உரித்தான குறை நிறைகள் உள்ளன.

### அதிகமான மக்கள்தொகை

**நன்மைகள் :** அதிகமான மக்கள்தொகை இருப்பதில் பல நன்மைகள் உள்ளன. மனித சக்தி தேவையான அளவு கிடைக்கும். இச் சக்தியைப் பயன்படுத்தி நாட்டின் இயற்கை வளங்களை நுகரும் பண்டங்களாக மாற்றலாம். அதிக மக்கள்

தொகை இருக்கும்போது பல்வேறுபட்ட மக்களும் வளம் பொருந்திய கலாச்சாரங்களும் இருக்க இயலும். மேலும், நாட்டின் பாதுகாப்பிற்கும் அதிகமான மக்கள்தொகையும், மனித சக்தியும் வரவேற்கப்படுகின்றன.

ஏகாதிபத்தியப் போக்குடைய ஹிட்லர், முஸோலினி போன்ற வல்லாட்சியாளர்கள் அதிகமான மக்கள்தொகை இருப்பதை விரும்பினர்கள். திருமணம் ஆகாதவர் மீது வரிவிதித்தனர். தகுதியுடையவர் திருமணம் செய்துகொள்ளும்படி வற்புறுத்தப் பட்டனர். திருமணங்களுக்குக் கடன்கள் வழங்கப்பட்டன ஒரு குழந்தை பிறந்தவுடன் $\frac{1}{4}$ பங்கு கடனும், நான்கு குழந்தைகள் பிறந்தவுடன் முழுக்கடனும் நீக்கப்பட்டன. சோவியத் ரஷ்யாவும் மக்கள்தொகைப் பெருக்கத்தை ஆதரிக்கிறது. அதிகக் குழந்தை களுள்ள பெரும் குடும்பத்திற்கு அரசாங்கம் பொருளுதவி செய் கின்றது. மேலும், திருமணமின்றிக் குழந்தைகள் பெற்ற கன்னித் தாய்களுக்கும் அரசாங்கம் ஆதரவு அளிக்கின்றது. பத்துக் குழந்தைகளுக்குமேல் ஈன்றெடுத்த ரஷ்யப் பெண்மணிகளுக்கு 'வீரத்தாய்' என்ற விருது அளிக்கப்படுகின்றது. ஏகாதிபத்தியத் திற்கும், குடியேற்ற நாடுகளை ஏற்படுத்துவதற்கும் மக்கள்தொகை யின் பெருக்கம் வரவேற்கப்படுகின்றது.

**தீமைகள் :** அதிகமான மக்கள்தொகை இருப்பதில் தீமை களும் உள்ளன. உணவுப் பிரச்சினைகளும், வேலை வாய்ப்புப் பிரச்சினைகளும் ஏற்படுகின்றன. குறைவான இயற்கை வள முடைய நாடு அதிக மக்கள் தொகையைப் பேண இயலுவதில்லை. எல்லா மக்களின் உடல் நலத்தையும் பொதுச் சுகாதாரத்தையும் கவனிக்க முடிவதில்லை. பொருத்தமான கல்வியையும், தொழிலை யும், தொழிற்பயிற்சியையும் அரசாங்கம் அளிக்க முடிவதில்லை. எனவே, இந்தியா போன்ற நாடுகளில் அதிகமான மக்கள் தொகையின் தீங்கை அறிந்து மக்கள்தொகைப் பெருக்கத்தைத் தடுக்கத் தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

**குறைவான மக்கள்தொகை**

**நன்மைகள் :** குறைவான மக்கள்தொகை இருப்பின் அனைவருக்கும் வேலை வாய்ப்பு அளிக்க முடியும். உணவு, உடை, உறைவிடம் ஆகியன அனைவருக்கும் குறைவின்றிக் கிடைக்கும். மக்களின் உடல் நலம், சுகாதாரம் ஆகியவைகளை எளிதில் பேணலாம். இதன்மூலம் நாட்டின் பொதுச்சுகாதாரம் முன்னேறும். மக்களின் சராசரி ஆயுட்காலம் அபிவிருத்தியடையும். பொருத்த மான கல்வியும் பயிற்சியும் அளிக்க இயலும். குறைவான மக்கள்

தொகையின் நன்மை கருதியே இந்தியா போன்ற நாடுகளில் குடும்பக்கட்டுப்பாடு தீவிரப்படுத்தப்படுகிறது. பிறப்பு விகிதங்கள் குறைவாக இருந்தால் திட்டங்களை நன்கு நடைமுறைப் படுத்த இயலும். வாழ்க்கை வசதிகளை அதிகரிக்க முடியும்.

கிரேக்க நகர அரசுகள் போன்ற குறைந்த மக்கள் தொகை இருப்பின், மக்களிடையே நெருங்கிய தொடர்பும், நாட்டுப்பற்றும், தேசிய ஒருமைப்பாடும் எளிதில் ஏற்படும். மக்களின் சக்திகளை ஒருமுகப்படுத்துவதற்கும், தேசிய நலனை வளர்ப்பதற்கும் குறைந்த மக்கள் தொகை மேலும் சாதகமாக அமையலாம்.

**தீமைகள் :** மக்கள் தொகை குறைவாக இருப்பின் நாட்டின் இயற்கை வளங்களை நன்கு பயன்படுத்த இயலாது. மனித சக்தி குறைந்துவிடும். மேலும், நாட்டை நன்கு பாதுகாப்பதும் இயலாததாகிவிடும். மக்கள்தொகை அதிகம் உள்ள நாடுகள் மக்கள்தொகை குறைவாக உள்ள நாடுகளின் மீது ஆக்கிரமிப்புச் செய்து அடக்க முற்படும். சுதந்திரம் பறிபோகும் சூழ்நிலையும் உருவாகலாம். சிறிய நாடுகளைப் பெரிய நாடுகள் விழுங்குவது வழக்கமாகும். உற்பத்தியை அதிகரிப்பதற்கும் குறைந்த மக்கள் தொகை சாதகமாக அமையாது.

**விரும்பத்தக்க மக்கள்தொகை**

மிக அதிகமான மக்கள்தொகை விரும்பத்தக்கதல்ல. அதே போல மிகக் குறைவான மக்கள்தொகையும் விரும்பத்தக்கதல்ல. அரிஸ்டாட்டில் கருத்துப்படி, செடிகள், விலங்குகள், கருவிகள் இவைகளின் அளவிற்கு ஓர் எல்லையுண்டு. இவைகளின் அளவு மிக மிகுதியானாலும், மிகக் குறைந்தாலும் தன் இயல்பை இழந்து விடுகின்றன. இருப்பினும், இவைகள் தங்கள் முழுத்தன்மையை இழப்பதோ அல்லது அழித்துக்கொள்வதோ இல்லை. உதாரணமாக, ஒன்பது அங்குல நீளமுள்ள கப்பல் கப்பலாகாது. அது போலக் கால் மைல் நீளமுள்ள கப்பலும் கப்பலாகாது. இவைகள் சிறிய அல்லது பெரிய கப்பல்கள் எனப்படினும், கடற்பயணத்திற்கு ஏற்றதல்ல. அதே போல மிகச் சிறிய மக்கள்தொகையுடைய அரசும் மிகப் பெரிய மக்கள்தொகையுடைய அரசும் அரசாகாது.[6]

[6] Aristotle: 'To the size there is a limit, as there is to other things, plants. animals, implements: for none of these retain there natural power when they are too large or too small, but they either wholly lose their nature, or are spoiled. For example, a ship which is only a span long will not be a ship at all, nor a ship a quarter of a mile long; yet these may be a ship of a certain size, either too large or too small, which while still be a ship,but bad for sailing. In like manner a state when composed of too few is not as a state ought to be self-sufficing; when of too many, though self-sufficing in all mere necessaries it is a nation and not a state, being almost incapable of constitutional government.'

மக்கள்தொகையின் அளவு ஓர் அரசை நடத்துவதற்குக் குறைவில்லாமல் போதுமானதாகவும், அரசின் நிலவளத்திற்கு மேல் அதிகம் இல்லாமலும் இருக்கவேண்டும். இயற்கை வளத்திற்கேற்பவும், வேலை வாய்ப்புகளுக்கேற்பவும், உணவிடும் சக்திக்கேற்பவும் அமையும் மக்கள் தொகையே ஓர் அரசுக்கு விரும்பத்தக்க மக்கள்தொகையாகும். இயற்கை வளத்தில் நாடுகளுக்கிடையே வேறுபாடுகள் இருப்பது போல விரும்பத்தக்க மக்கள்தொகையின் அளவும் நாட்டிற்கு நாடு மாறுபடும்.

### மக்களின் விரும்பத்தக்க பண்பு

ஓர் அரசின் கீழ் வாழும் மக்கள் இனத்தாலும், மதத்தாலும், மொழியாலும், பழக்கவழக்கங்களாலும், கலாச்சாரங்களாலும் ஒன்றுபட்டவர்களாகவும் ஒருமுக நோக்குடையவர்களாகவும் இருப்பின் ஒற்றுமையும் ஒருமைப்பாடும் எளிதில் ஏற்படும். இவைகளில் மக்கள் மாறுபட்டவர்களாக இருப்பின், அவர்களிடையே வேறுபாடுகளும், ஒற்றுமையின்மையும், உள்நாட்டுப் பூசல்களும் அடிக்கடி தோன்றும். ஆனால், ஓர் அரசில் ஒரே இன மக்கள் வாழ்வதென்பது தற்காலத்தில் இயலாத ஒன்றாகும். அமெரிக்கா, இந்தியா போன்ற நாடுகளில் மதத்தாலும், மொழியாலும், பழக்க வழக்கங்களாலும் மாறுபட்ட பல்வேறு கலாச்சாரங்களையுடைய மக்கள் வாழ்கின்றனர். இவர்கள் ஓரினத்தைச் சார்ந்தவர்கள் அல்லர். இருப்பினும், அமெரிக்காவும் இந்தியாவும் சிறந்த அரசுகளாகக் கருதப்படுகின்றன. எனவே, இந்தியா, இந்தியன் என்ற தேசிய உணர்வுகளே விரும்பத்தக்க குடிமகனின் தன்மைகளாக அமைகின்றன.

### நன்மக்கள்

ஒரு நல்ல அரசை ஏற்படுத்துவதற்கு மக்களின் எண்ணிக்கையைவிட மக்களின் தன்மையே முக்கியமாகக் கருதப்படுகின்றது. அரிஸ்டாட்டில் கூற்றுப்படி, நல்ல மக்கள் நல்ல அரசையும், தீய மக்கள் தீய அரசையும் ஏற்படுத்துகின்றனர்.[7] நன்மக்களின் குணங்கள்பற்றி சால்டன் (Soldan) என்பவர் கூறுகிறார். கலாச்சாரநிலை, உடல்நிலை, ஒருமைப்பாட்டுநிலை ஆகியன மக்களின் தன்மையைத் தீர்மானிக்கின்றன. நல்ல கலாச்சாரமுள்ள மக்கள் இயற்கையிலேயே கல்வி, கேள்வி, அறிவுகளில் சிறந்தவர்களாக அமைவர். உடல் நலமுள்ள மக்கள் வலிமை

[7] Aristotle: 'A gold Citizen makes a good state and a bad Citizen a bad State'.

யுடையவர்களாகவும், செயற்கரியன செய்பவர்களாகவும் இருப்பர். நோய்நொடியின்றி வாழும் மக்களது உடல்திறனும் உள்ளத் திறனும் நன்கு இருக்கும். ஒருமைப்பாட்டை விரும்பும் மக்கள் மதத்தாலும், கலாச்சாரத்தாலும், மொழியாலும், கொள்கையாலும் தங்களிடையே எழும் வேறுபாடுகளைப் பெரிதெனக் கருதாது நிகழும் வேறுபாடுகளிடையே ஒருமைப்பாடு காண்பர். நாட்டின் பொருளாதார சமூக அரசியல் சீரமைப்புகளில் ஆர்வத்துடன் நிர்மாணப் பங்கினை ஏற்பர். எனவே, ஓர் அரசில் மக்கள்தொகை யைத் தீர்மானிக்க நன்மக்கள் தொகையைக் கருத்தில் கொள்ளு தல் அவசியமாகும். ஆங்கிலேயர், ஜப்பானியர் ஆகியவர்களது மக்கள்தொகை குறைவாயினும், அவர்களிடையேயுள்ள நன் மக்கட்பண்பு கருதப்பட்டுப் போற்றப்படுகின்றது.

### மக்கள்தொகையின் பகுப்பு

மக்கள்தொகையை இரண்டாகப் பகுக்கலாம். இந்தப் பாகுபாடு ஓர் அரசின் கீழ் வாழும் மக்கள் அனுபவிக்கும் உரிமை களைப் பொறுத்து அமைவதாகும். அரசியல் உரிமைகள் உட்பட அனைத்து உரிமைகளையும் உடைய மக்கள் குடிமக்கள் (Citizen) எனப்படுவர். ஒரு நாட்டின் குடியுரிமை இழந்தவர்கள் பிரஜா உரிமையற்ற மக்களாகக் (Subjects) கருதப்படுகின்றனர். கிரேக்க நாட்டில் அடிமைகள் குடியுரிமை அற்றவர்களாக இருந்தனர். அயல்நாட்டவரும் (Aline) குடியுரிமையுடையவரல்லர். எடுத்துக் காட்டாக, இந்தியாவில் கல்விகற்க வந்திருக்கும் ஓர் அமெரிக்கன் அயல்நாட்டானாகவும், குடியுரிமை அற்ற மகனாகவும் கருதப் படுவான். இவருக்கு அரசியலில் பங்குகொள்ளும் ஓட்டுரிமையோ, வேலை வாய்ப்புகளில் உரிமை கோரும் சமத்துவமோ கிடையாது. ஆனால், சட்டத்தின் பாதுகாப்பைப்பெறும் உரிமைகளும், கலாச் சார சமய உரிமைகளும் உண்டு. போரில் பணியாற்றுவது போன்ற கடமைகளிலிருந்து இவருக்கு விலக்களிக்கப்படும். குடி மக்களுக்கு அரசியல் உரிமையும், நாட்டின் பாதுகாப்பிற்கான கடமைகளும் இணைந்து இயங்கும். ஒரு நாட்டின் குடிமகன் பிறிதோர் நாட்டிற்குச் செல்லும்போது சாமான்ய மகனாக இருக் கிறான். ஒருவனுக்குக் குடியுரிமை ஒரு நாட்டில் மட்டுமே உண்டு. கிரேக்க நாட்டில் குடியுரிமைகள் அந்நாட்டின் மக்கள் சிலருக்கே அளிக்கப்பட்டன. அரசாங்கத்தில் நேரடியாகப் பங்கு கொண்டவர் களுக்கு மட்டுமே குடியுரிமை வழங்கப்பட்டது. ஆனால், தற் காலத்தில் ஒரு நாட்டில் பிறந்த அனைவரும் அந்நாட்டின் குடிமக்களாவர்.

## ஆட்சிநிலம்

### ஆட்சிநிலம் அவசியமில்லை என்ற கருத்து

சர் ஜான் சீலி (Sir John Seeley), லியோன் டூகிட் (Leon Duguit),[8] வில்லோபி (Willoughby)[9] போன்ற அரசியல் பேராசிரியர்கள் நிலப்பரப்பு அரசின் கூறுபாடு அல்ல என்றும், அரசாவதற்கு நிலப்பரப்பு இன்றியமையாதது அல்லவென்றும் கருதுகின்றனர். பேராசிரியர் சீலியின் கருத்துப்படி, ஒருங்கிணைந்த சமுதாயமும், கோட்பாடுடைய அரசாங்கமும் இருந்தாலே நாடாவதற்குப் போதுமானது. நாடு அமைவதற்கு நிலப்பகுதி அத்தியாவசியமான ஒரு கூறுபாடல்ல என்று டூகிட் கூறுகிறார். வில்லோபியின் கூற்றுப்படி, நாடு என்பது மக்களோ, அரசாங்கமோ, இறைமையோ, அரசியலமைப்போ அல்ல. நிலப்பரப்பும் நாடாகாது. நாடு என்பது குறிப்பிட்ட சமுதாயத்தின் அரசியல் இணைப்பேயாகும்.

### ஆட்சிநிலத்தின் அவசியம்

நாட்டுக்கு நிலப்பரப்பு அவசியமில்லையென்ற கருத்துத் தற்காலத்தில் ஏற்றுக் கொள்ளப் படுவதில்லை. நாடு அமைவதற்கு மக்கள்தொகை எவ்வளவு அவசியமோ அதே போல நிலப்பரப்பும் அவசியமாகும். குறிப்பிட்ட எல்லையுடைய நிலப்பரப்பு இருந்தால் தான் நாட்டுப்பற்றும், மக்களிடையே உறவும் ஏற்படும். இந்தியாவிற்குக் குறிப்பிட்ட ஒரு நிலப்பரப்பு இருப்பதாலேயே இந்த நிலப்பரப்பு நம்முடையதென்ற உணர்வும், இந்த நிலப்பரப்பின் மீது பிறர் ஆக்கிரமிப்புச் செய்யும்போது உடல் பொருள் ஆவியைத் தியாகம் செய்து நிலப்பரப்பைக் காக்க வேண்டுமென்ற நாட்டுப் பற்றும் ஏற்படுகின்றன. இந்த நிலப்பரப்பின் மீது வாழும் நமக்கு இந்தியர் என்ற உணர்வும் தோன்றுகின்றது. மேலும், இந்த நாட்டில் நமது பெற்றோர்களும் முன்னோர்களும் பிறந்து வாழ்ந்தனர் என்ற பெருமிதமும் உண்டாகின்றது. எனவே, நாம் தாய்நாடு என்றும், மற்றச் சிலர் தந்தை நாடு என்றும் நிலப்பரப்புகளை அழைத்துக்கொள்கிறோம். சகக் குடிமகன் என்ற பற்றுத் தோன்றுவதும் நிலப்பரப்பினாலேயே ஆகும்.

[8] Leon Duguit says, 'The word state designates the rulers...or else the society it self in which the differentiation between rulers and ruled exists and in which, for that very reason, a public power exists... In almost all human socities, large or small, primitive or civised territory is not an indispensable element in the formation of a state'.

[9] W. W. Willoughby says, "The state itself then is neither the people the Government the magistracy nor the constitution. Not is it indeed the territory over which its authority extends. It is the given community of given individuals valued in a certain aspect, namely as a political unity."

தற்காலத்தில் சர்வதேசச் சட்டம் ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பு வேண்டும் என்பதை ஏற்றுக்கொள்கின்றது. மக்களும் அரசாங்கமும் மட்டும் நாடாவதற்குப் போதுமான தாகாது. ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பும் அவசியமாகும். யூதர் சமுதாயம் தங்களுக்குள் ஓர் அரசாங்கத்தை அமைத்து வாழ்ந்தும், குறிப்பிட்ட நிலப்பரப்பு இல்லாத காரணத்தால் நாடாக மதிக்கப் படாமல் இருந்தது. ஆனால், இவர்கள் பாலஸ்தீனத்தின் இஸ்ரேல் நிலப்பரப்பை நிரந்தரமாகக் கொண்டு வாழ்ந்தபோது நாடு என ஏற்றுக்கொள்ளப்பட்டனர். நாடோடிக் கூட்டத்தில் மக்கள் தொகை உண்டு. அவர்களிடையே தலைவன், ஆள்வோர், ஆளப் படுவோர் என்ற அரசாங்க அமைப்பும், அவ்வரசாங்க ஆணை மதிக்கப்படும் இறைமையும் இருக்கலாம். இருப்பினும், நிரந்தரமாகத் தங்க ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பு இன்மையால் அதை நாடு என அழைக்க இயலுவதில்லை. எனவே, குறிப்பிட்ட நிலப்பரப்பு நாட்டின் அத்தியாவசியக் கூறுபாடுகளில் ஒன்ருகும். நாட்டிற் குரிய நிலப்பரப்பு வரையறுக்கப்பட்டிருக்கும்போது நாடு களிடையே ஏற்படும் ஆக்கிரமிப்புகளை எளிதில் காணலாம். ஆக்கிரமிப்புச் செய்த நாட்டையும், ஆக்கிரமிப்புக்குள்ளான நாட்டையும் அறுதியிட்டுக் கூறமுடியும். எனவே, குறிப்பிட்ட நிலப்பரப்பும் நாட்டின் ஓர் அத்தியாவசியக் கூறுபாடாகும்.

**ஆட்சிநிலத்தின் அறுதி** (Area of territory)

நிலத்தின் மேற்பரப்பும் அந்தப் பரப்பின் மீது இருக்கும் காற்று மண்டலமும் நிலப்பரப்பினுள் அடங்கும். எனவேதான் அயல்நாட்டு விமானங்கள் அனுமதியின்றி ஒரு நாட்டின் மீது பறந்தால் அதை ஆக்கிரமிப்பாகக் கருதுகிறோம். மேலும், நிலப் பரப்பின் மீதுள்ள ஆறுகள், மலைகள், காடுகள் போன்ற இயற்கை வளங்களும் நிலப்பரப்பில் அடங்கும். அந்நிலப்பரப்பின் கீழ் உள்ள கனிவளங்களும் அந்த நாட்டையே சாரும். நிலப்பரப்பின் கடற்கரை ஓரத்திலிருந்து மூன்று கல் தொலைவுள்ள கடலும் அரசின் நிலப்பரப்பாகக் கருதப்படுகின்றது. அயல்நாட்டுக் கப் பல்கள் இக்குறிப்பிட்ட கடல் எல்லைக்குள் அனுமதியின்றி நுழை வது ஆக்கிரமிப்பாகக் கொள்ளப்படுகின்றது. இக் குறிப்பிட்ட எல்லைக்கப்பால் உள்ள கடல்பகுதி சர்வதேசக் கடலாகும். நிலத்தின் அமைப்பு, பரப்பு, சீதோஷ்ணநிலை, நீர்வளமும், நில வளமும், கனிவளங்கள் ஆகியனவும் நிலப்பரப்பில் அடங்குவன வாகும். இவைகளுக்கு ஏற்பவே ஓர் அரசின் நிலை மாறுபடும். ஜெர்மனியில் ஏராளமான நிலக்கரி கிடைத்ததால் தொழில் வளம் மிக்க நாடாகவும், இராணுவ பலம்பொருந்திய நாடாகவும் ஹிட்லர் இந்நாட்டை அமைத்தார். வட தென் அமெரிக்காக்களைப் பிரிக்கும்

பனுமாக் கால்வாயும், ரஷ்யாவின் மிகப்பெரிய நிலப்பரப்பும், கிரீன் லாந்தின் சீதோஷ்ண நிலேயும், இந்தியாவின் இமயமலேயும் அந்தந்த நாடுகளின் செல்வாக்கில் பங்கு கொள்கின்றன எனப் பேராசிரியர் அலெக்ஸாண்டர் கூறுகிருர்.

### ஆட்சிநிலத்தின் அளவு

அரசை உண்டாக்குவதற்கான நிலப்பரப்பின் அளவு வரை யறுக்கப்படவில்லே. ஓர் அரசிற்கு எப்படி ஒரு குறிப்பிட்ட மக்கள்தொகை சொல்லப்படவில்லேயோ அது போலவே நிலப் பரப்பின் அளவும் சொல்லப்படவில்லே. ஜான்மெரினே, மொனுக்கோ, லக்சம்பர்க், வேட்டிகன் ஆகியன சிறிய நிலப் பரப்புகளே உடைய அரசுகளாக உள்ளன. ரஷ்யா, அமெரிக்கா, இந்தியா போன்ற அரசுகள் விரிந்த நிலப்பரப்பிணயுடைய அரசு களாக உள்ளன. இத்தாலியில் உள்ள ஜான்மெரினே 95 சதுரக் கிலோமீட்டர்களே உடையதாகவும், ரஷ்யா 2,18,49,035 சதுரக் கிலோமீட்டர்களேயுடையதாகவும், அமெரிக்கா 90,81,870 சதுரக் கிலோமீட்டர்களேக் கொண்டதாகவும் (Figures from The Statesman Year Book), இந்தியா 32,80,000 சதுரக் கிலோ மீட்டர் பரப் புடையதாகவும், (மத்திய புள்ளிவிவர ஸ்தாபனத்தின் 1973-74ம் ஆண்டிற்கான புள்ளிவிவரங்களின்படி) இருக்கின்றன. இருப்பி னும், நிலப்பரப்பின் அளவு வேறுபாடு கருதப்படாமல் வேட்டிகன் நகரமும் ரஷ்யாவும் நாடுகளாகவே கருதப்படுகின்றன. அரசியல் அறிஞர்களிடையே நிலப்பரப்பின் அளவு பற்றிய கருத்து வேறு பாடுகள் நிலவுகின்றன. மிகப் பெரியதோ மிகச் சிறியதோ அல்லாத நடுத்தரமான நிலப்பரப்பை உடைய நாட்டை அரிஸ்ட்டாட்டில் ஆதரிக்கிருர். நேரிடைக் குடியாட்சியை விரும்பும் ரூஸோ சிறிய நிலப்பரப்பை உடைய அரசை விரும்புகிருர். நாடாவதற்கு நிலப் பரப்பின் அளவு வரையறுக்கப்படாவிடினும், சிறிய நிலப்பரப்பிலும் பெரிய நிலப்பரப்பிலும் முறையே அவைகளுக்கே உரித்தான குறை நிறைகள் உள்ளன.

### சிறிய ஆட்சிநிலத்தின் நன்மைகள்

சிறிய ஆட்சிநிலமுடைய நாடுகளுக்குச் சில நன்மைகள் உண்டு. நேரடிக் குடியாட்சி முறையை நிறுவி நன்கு செயல் படுத்தலாம். மக்கள் எளிதில் கூடவும், தங்கள் கருத்துகளே வெளியிடவும் வசதியாக இருக்கும். நேரடிக் குடியாட்சி முறையை வலியுறுத்தும் ரூஸோ சிறிய நிலப்பரப்பை ஆதரிக் கிருர். சுவிட்ஸர்லாந்து நாடு சிறிய நிலப்பரப்பை உடையதால் அங்கு நேரடிக் குடியாட்சி முறை நன்கு நடைபெறுகிறது.

மேலும், மக்களிடையே நெருக்கமும் நாட்டுப்பற்றும் ஏற்படுவதற்குச் சிறிய நிலப்பரப்பு சாதகமாக இருக்கும்.

**சிறிய ஆட்சிநிலத்தின் தீமைகள்**

பெரிய மீன் சிறிய மீன்களை விழுங்குவது இயற்கையாகும். அதுபோலச் சிறிய நாடுகள் பெரிய நாடுகளுக்கு இரையாகின்றன. வலிமைமிக்க பெரிய நாடுகளின் ஆக்கிரமிப்புக்குச் சிறிய நாடுகள் உள்ளாகின்றன. பெல்ஜியம், போலந்து போன்ற நாடுகள் ஹிட்லரின் ஆக்கிரமிப்பிற்குள்ளானதை வரலாறு காட்டும். ஜெர்மானியப் பேராசிரியர் டிரிட்ஸ்கி (Trietschke) சிறிய அரசாக இருப்பது பாவம் என்று கூறுகிறார்.[10] மேலும் சிறிய நிலப்பரப்புடைய அரசுகள் எல்லா வளங்களையும் உடையதாக இருக்காது. தங்கள் நாட்டிற்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் தயாரித்துக்கொள்ள இயலாது. மற்ற நாடுகளைச் சார்ந்து இருக்க வேண்டும்.

**பெரிய ஆட்சிநிலத்தின் நன்மைகள்**

பெரிய நிலப்பரப்புடைய அரசுகளே தற்காலத்தில் விரும்பப்படுகின்றன. பெரிய நிலப்பரப்புடைய அரசுகளில் இயற்கை வளம் மிகுந்திருக்கும். நாட்டிற்குத் தேவையான எல்லா வகைக் கனிவளமும் நிறைந்திருக்கும். கனிவளம் நிறைந்திருப்பதால் தொழிற்சாலைகள் பெருகவும் உற்பத்திப் பெருக்கத்திற்கும் வாய்ப்பு ஏற்படும். பெரிய அரசுகளின் மக்கள்தொகைக்கு ஏற்ப உற்பத்தியை அதிகரிக்க முடியும். வேலை வாய்ப்புகளுக்கு விரிந்த சந்தர்ப்பங்கள் உண்டு. உற்பத்திப் பொருள்களுக்கு உள்நாட்டுச் சந்தையே போதுமானதாகவும் இருக்கும். மக்கள் தொகை பெருக்கத்திற்கு இடம் அளிக்கவும் பெரிய நிலப்பரப்பு வசதியாக இருக்கின்றது. உணவு, உடை, இருப்பிடம் ஆகிய வசதிகளை மக்களுக்குக் கொடுக்க இயலும். மேலும், பாதுகாப்புச் சாதனங்களை வலுப்படுத்தவும் பெரிய நிலப்பரப்புச் சாதகமாக இருக்கும். பல்வேறு சீதோஷ்ண வகைகளையும், இன மக்களையும், கலாச்சாரத்தையும் உடையதாகப் பெரிய நிலப்பரப்பு அமையும்.

பெரிய அரசுகளில் குடியாட்சியை நன்கு நிறுவ முடியாது என்ற ரூஸோவின் கருத்து வரலாற்றில் பொய்ப்பிக்கப்படுகிறது. நேரிடைக் குடியாட்சி முறையை நிறுவ முடியாவிட்டாலும் கூட்டாட்சி முறையில் குடியாட்சி முறையை நன்கு நடைமுறைப்படுத்தலாம். அமெரிக்கா போன்ற நாடுகளில் கூட்டாட்சி முறைக்

[10] Triestchke: 'The state is power and it is a sin for the state to be small'.

குடியாட்சி நன்கு நடப்பதைக் காண்கின்றோம். இந்தியாவில் பரந்த நிலப்பரப்பையும், மொழியாலும், இனத்தாலும், மதத்தாலும் பல்வேறுபட்ட மக்கள் இனம் இருப்பதையும் காணலாம். இந்தியா ஒரு சிறந்த குடியாட்சி நாடாக அமைவதில் இவ் வேறுபாடுகள் இடையூருக இருப்பதில்லை. வேற்றுமையிலே ஒற்றுமை காண முடிகிறது. பல்வேறுபட்ட கலாச்சார வளர்ச்சிகளையும் காண்கிரோம். சிறிய நிலப்பரப்பாக இருப்பதில் கிடைக்கும் நன்மைகளைப் பெரிய நிலப்பரப்பிலும் தற்காலத்தில் அடைய முடிகின்றது.

### பெரிய ஆட்சிநிலத்தின் தீமைகள்

ரூஸோ கருதும் நேரிடைக் குடியாட்சி முறையைப் பெரிய நிலப்பரப்புள்ள அரசுகளில் செயல்படுத்த முடியாது. நேரிடைக் குடியாட்சி முறையின் சாதனங்களான குடியொப்பம், மக்கள் வாக்கெடுப்பு, மீட்புரிமை, மக்கள் துவக்கம் ஆகியனவற்றைப் பெரிய நிலப்பரப்புள்ள நாடுகளில் கையாள முடிவதில்லை. பல்வேறுபட்ட மக்கள் இன்மும், வேறுபாடுடைய மதத்தினரும், மொழியால் வேறுபட்டவர்களும் அமெரிக்கா, இந்தியா, ரஷ்யா போன்ற பெரிய நிலப்பரப்புடைய நாடுகளில் இருப்பர். இவர்களிடையே ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டுணர்வையும் ஏற்படுத்துவது கடினமான செயலாகும். நிலப்பரப்புப் பெரியதாகும் போது அதற்கேற்ப மக்கள்தொகையும் அதிகமாகும். இவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதும் இவர்களுக்கு வேலை வாய்ப்பு அளிப்பதும் பிரச்சினைகளாக உருவாகும். விரிந்த பரந்த நிலப்பரப்பைப் பாதுகாப்பதும், அதில் சிறந்த நிருவாகம் அமைப்பதும் கடினமாகும்.

### அனுகூலமான ஆட்சிநிலம்

மிகப்பெரியதாகவோ அல்லது மிகச்சிறியதாகவோ நிலப்பரப்பு அமையாமல் ஓர் அரசிலிருக்கும் மக்கள்தொகைக்கு ஏற்பத் தேவையான வளங்களுடன் அமையும் நிலப்பரப்பே அனுகூலமான நிலப்பரப்பாகும். தன் சுய தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளக் கூடியதாக இந் நிலப்பரப்பு இருக்கும். நாட்டின் பாதுகாப்பும் நிருவாகமும் அனுகூலமான நிலப்பரப்பில் சிறப்பாக அமைந்திருக்கும். மக்கள்தொகைப் பிரச்சினைகளும் வேலை வாய்ப்புப் பிரச்சினைகளும் அனுகூலமான நிலப்பரப்பில் இருக்காது.

### ஆட்சிநிலத்தை அடைதல்

நிலப்பரப்பை ஆக்கிரமிப்பு மூலமும் சமாதான வழியிலும் அடையலாம். போரிட்டு வெற்றி பெற்று நிலப்பரப்பை இணைத்தல் ஆக்கிரமிப்பு முறையாகும். விலைக்கு வாங்குவதும்,

திருமண ஒப்பந்தத்தில் பரிசாகப் பெறுவதும், மன ஒப்புதலுடன் அளிப்பதும் பெறுவதும் நிலப்பரப்பை அடையும் சமாதான முறை களாகும். ஹிட்லர் போன்ற ஆக்கிரமிப்பாளர்கள் போரிட்டு நிலப் பரப்பைப் பெற்றனர். இவ்வாக்கிரமிப்புகளைத் தடுக்க அவ்வப் போது உலக நாடுகளிடையே சமாதான முயற்சிகள் நடை பெறுகின்றன.

## அரசு

### அரசின் அவசியம்

நாட்டின் நான்கு உறுப்புகளுள் அரசும் ஒன்றாகும். அரசு இன்றி நாடு செயல்பட முடியாது. நாட்டின் கீழ் வாழும் மக்களை ஒருங்குபடுத்தவும், பொது நலனைப் பேணவும் அரசு அவசிய மாகும். ஒரு நாட்டில் இனத்தால் மாறுபட்டவர்களும் மொழி யால் வேறுபட்டவர்களும், கொள்கை வேறுபாடுடையவர்களும் இருப்பர். இவர்களை ஒன்றுபடுத்தி வழி நடத்திச் செல்வது அரசு ஆகும். போட்டிக் குழுக்களும், ஒன்றுக்கொன்று முரண் பட்ட அமைப்புகளும் சச்சரவிடும் கூட்டங்களும் அரசால் கண் காணிக்கப்படுகின்றன. எனவே, ஒவ்வொரு நாட்டிற்கும் ஏதாவது ஒரு வகை அரசு அவசியமாகிறது.

### அரசு நாட்டின் ஏவலர்

நாடு தானாக இயங்க முடியாது. அரசின்மூலமாகத்தான் இயங்குகிறது. சட்டங்களை இயற்றியும், நடைமுறைகளை வகுத்தும், அச்சட்டங்களையும் நடைமுறைகளையும் செயல்படுத்தி யும், மீறுபவர்களைத் தண்டித்தும் அரசு நாட்டிற்காகச் செயல் படுகிறது. எனவே, அரசு நாட்டின் ஏவலராகப் பணிபுரிகிறது. அரசு தன் அதிகாரங்களை நாட்டிடமிருந்தே பெற்றுள்ளது. நாடே அதிகாரத்தின் பிறப்பிடமாகும். அரசிற்குப் பணிதல் என்பது நாட்டிற்குப் பணிதலாகும்.

### அரசின் அடக்கம்

மத்தியப் பாராளுமன்றம் சட்டங்களை இயற்றுகின்றது. நிருவாகத்துறை இச் சட்டங்களை நடைமுறைப்படுத்துகிறது. மத்திய நீதிமன்றங்கள் இச் சட்டங்களுக்கு விளக்கங்கள் கூறு கின்றன. சட்டம் இயற்றும் துறை, நிருவாகத்துறை நீதித்துறை ஆகியன மத்திய அரசில் அடங்கும். அதேபோல் மாநிலங்களின் சட்டம் இயற்றும் துறை, நிருவாகத்துறை, நீதித்துறை ஆகியன மாநில அரசில் அடங்கும். மாநகராட்சிகளும், நகராட்சிகளும், ஊராட்சி ஒன்றியங்களும், ஊராட்சிகளும் சட்டங்களை இயற்றி

நடைமுறைப்படுத்துகின்றன. இவைகளும் அரசினுள் அடங்கும். எனவே, சட்டங்கள் இயற்றி அவைகளை நடைமுறைப்படுத்திச் சட்டங்களுக்கு விளக்கம் கூறும் எல்லா நிறுவனங்களும் அரசில் அடங்கும்.

**அரசின் நிறுவனங்கள்**

ஒவ்வோர் அரசாங்கமும் மூன்று நிறுவனங்களையுடையது. சட்டம் இயற்றும் நிறுவனம், நிருவாக நிறுவனம், நீதிகூறும் நிறுவனம் என மூன்று வகைப்படும். சட்டம் இயற்றுதல் சட்ட சபைகளின் பணியாகும். அச் சட்டங்களைச் செயல்படுத்துதல் நிருவாக நிறுவனத்தின் பணியாகும். இச் சட்டங்களுக்கு விளக்கம் கூறுதலும், அவைக்ளில் சிக்கல் ஏற்படும்போது தீர்ப்புக் கூறுதலும் நீதி கூறும் நிறுவனத்தின் பணியாகும்.

அரசாங்க நிறுவனங்களாகிய இம் மூன்றும் தனித் தனியே பணியாற்றினும் இவைகளிடையே தொடர்பும் உள்ளன. இந்தியா, இங்கிலாந்துப் பாராளுமன்றங்கள் நிருவாகத்தில் பங்கு கொள்கின்றன. உண்மை நிருவாகத்தினராகிய அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் உறுப்பினர்களாவர். சட்டம் இயற்றும் நிறுவனமாகிய அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செனட்சபையும், இங்கிலாந்தின் பிரபுக்கள் சபையும் நீதிகூறும் பணியையும் செய்கின்றன. அவசரப் பிரகடனங்கள் வெளியிடுதல் மூலம் இந்திய நிருவாகத்துறை சட்டம் இயற்றுகின்றது. குற்றவாளிகளுக்கு மன்னிப்பு அளிப்பதன் மூலமும் நிருவாகத்தினர் நீதித்துறைப் பணிகளைச் செய்கின்றனர். நீதித்துறைச் சட்டங்களுக்கு விளக்கம் கூறும்போது புதிய சட்டங்களை இயற்றுகின்றது. மேலும், நிருவாக அலுவலர்களுக்கும் நீதித்துறை நீதிவழங்குகிறது. எனவே, அரசு நிறுவனங்களின் செயல்கள் பிரிக்கப்பட்டிருந்தாலும் நடைமுறையில் அவைகள் இணைந்தும் பணியாற்றுகின்றன.

**அரசின் வகைகள்**

மக்கள்தொகை, நிலப்பரப்பு ஆகியன போல அரசும் நாட்டின் ஓர் இன்றியமையாத கூறுபாடாகும் என்பதைப் பார்த்தோம். நாடாவதற்கு எப்படி மக்கள்தொகையின் அளவும் நிலப்பரப்பின் அளவும் கூறப்படவில்லையோ, அதுபோல அரசின் வகையும் வற்புறுத்தப்படவில்லை. ஏதாவது ஒருவகை அரசு அமைப்பு மட்டுமே வேண்டப்படுகிறது.

இங்கிலாந்து போன்று பரம்பரையாக வரும் முடியாட்சியாகவும் இருக்கலாம். ஹிட்லர், முசோலினி ஆட்சி அமைப்புகளைப்

போன்ற வல்லாட்சியாகவும் இருக்கலாம். இந்தியா, அமெரிக்கா போன்ற குடியாட்சியாகவும் இருக்கலாம். உயர்குடியினர் ஆட்சியாகவும் இருக்கலாம். நாடாவதற்கு அரசு முக்கியமே ஒழிய எந்த வகை அரசு என்பது முக்கியமல்ல.

அரசின் வகை அந்நாட்டு மக்களின் வாழ்க்கைத் தத்துவத் திற்கேற்ப அமைவதாகும். பொதுவுடைமைத் தத்துவத்தைப் பொருளாதாரத் தத்துவமாகவும் வாழ்க்கைத் தத்துவமாகவும் ஏற்றுக் கொண்ட ரஷ்யாவில் பொதுவுடைமை அரசு நிலவுகிறது. பழைமையை விரும்பும் இங்கிலாந்து மக்கள் அரசியலமைப்பிற்கு உட்பட்ட ஒரு முடியாட்சியைப் போற்றுகின்றனர். இனத்தால் வேறுபட்ட மக்கள் வாழும் அமெரிக்காவில் கூட்டாட்சி முறை யான குடியாட்சி நடைபெறுகின்றது. பிரான்சு நாட்டில் லூயி மன்னரின் வல்லாட்சியை வெறுத்த மக்கள் புரட்சி செய்து குடி யாட்சியை நிறுவினர். எனவே, அரசின் அமைப்பு மக்களின் விருப்பத்திற்கேற்ப அமையும்.

## இறைமை
## (Sovereignty)

### இறைமையின் இலக்கணம்

சட்டங்கள் இயற்றுவதும், அவைகளை நடைமுறைப் படுத்து வதும், அச்சட்டங்களுக்கு மக்களைக் கீழ்ப்படியச் செய்வதும் இறைமையின் அம்சங்களாகும். அரசின் இந்த ஏக வல்லமையே இறைமை எனப்படுகிறது. பிரான்சு நாட்டு அறிஞர் ஜீன் போடின் (Jean Bodin) இறைமைக்கு முதன்முதல் இலக்கணம் வகுத்தார். அவர் கூற்றுப்படி, குடிமக்கள் மீதும் சாமான்யர்மீதும் சட்டத்தால் கட்டுப்பாடின்றி அதிகாரம் செலுத்துவதே இறைமை ஆகும். ஹாப்ஸ் (Hobbes), லோக் (Locke), ரூஸோ (Rousseau) போன்ற வர்களும் இறைமைக்கு இலக்கணம் கூறியுள்ளனர். ஜான் ஆஸ்டின் (John Austin) இறைமை பற்றித் தெளிவான ஒரு கட்டுரை வரைந்துள்ளார். இவர் கூற்றுப்படி, பிறருக்குப் பணி யாத வல்லமையுடைய குறிப்பிட்ட ஒருவர் உத்தரவுகளைச் சட்டங்கள் ஆக்கிப் பெரும்பான்மை மக்களைப் பணியவைப்பதும், அவரது முழுமையானதும், வரையறையற்றதும், பிரிக்கமுடியாத துமான அதிகாரமே இறைமை ஆகும்.

### இறைமையின் அவசியம்

மக்கள்தொகை, ஆட்சிநிலம், அரசு ஆகியன போன்று இறைமையும் நாட்டின் முக்கியக் கூறுபாடாகும். நாட்டை மற்றக் குழுக்களிலிருந்தும் நிறுவனங்களிலிருந்தும் வேறுபடுத்தியும்

உயர்த்தியும் காட்டுவது இறைமையாகும். மூன்று அம்சங்கள் இருந்தாலும் இறைமை இல்லையேல் நாம் அதை நாடாக ஏற்றுக் கொள்வதில்லை. எடுத்துக்காட்டாக, தமிழ்நாட்டில் மக்கள் தொகையும், நிலப்பரப்பும், அரசும் இருக்கின்றன. இருப்பினும் இறைமை இன்மையால் தமிழ்நாட்டை நாம் நாடாகக் கொள் வதில்லை. இதன் மூலம் இறைமையின் அவசியத்தை உணரலாம்.

**இறைமையின் தன்மை**

இறைமை முழுமை உடையதாக இருக்க வேண்டும். உள்நாட் டாராலும் அயல்நாட்டாராலும் கட்டுப்படுத்தப்படாமல் இருக்க வேண்டும். குடிமைகள்மீதும், குடியுரிமை பெறுதார் (Subject) மீதும் செல்லுபடியாகக் கூடியதாகவும் இருக்கவேண்டும். இவையே இறைமையின் முழுமையாகும். இறைமை நாட்டின் நிலப்பரப்பு முழுவதிலும் பரந்திருக்கவேண்டும். அந் நிலப்பரப்பிற்குள் வாழும் மக்கள் அனைவரையும் விலக்கின்றி இறைமை கட்டுப்படுத்தவேண் டும். இறைமை பிரிபடக்கூடியதன்று. ஒரு நாட்டினுள் பிரிக்கப்பட்ட இறைமையுடைய மற்றொரு சமமான நிறுவனம் இருக்கக் கூடாது. இறைமை நிரந்தரமானதாக இருக்க வேண்டும். இது மாற்றக் கூடியதாகவோ அழித்துவிடக் கூடியதாகவோ இருக்காது. முழுமை, செல்லுபடியாதல், பிரியாமை, நிரந்தரம், மாறுமை ஆகியன இறைமையின் தன்மைகளாகும்.

**இறைமையின் வகைகள்**

**பெயரளவு இறைமை :** உண்மை இறைமை அரசனிடத்தில் இல்லாது வேறு ஓர் இடத்தில் இருக்கும்பொழுது அது பெயரளவு இறைமையாகும். எடுத்துக்காட்டாக, இங்கிலாந்து அரசியாருக்கு உண்மையான அதிகாரங்கள் எதுவும் இல்லை. எனவே, இவர் பெயரளவு இறைமை உடையவராக இருக்கிறார்.

**சட்டப்படியான இறைமை :** ஏ. சி. டைசியின் கருத்துப்படி, சட்டப்படியான இறைமை (Legal Sovereignty) அரசியல் இறைமைக்குள் (Political Sovereingty) அடங்கும். எனவே, அரசியல் இறைமை மக்களிடமே உண்டு. நேர்முகக் குடியாட்சி நடைபெறக்கூடிய சுவிட்ஸர்லாந்து நாட்டில் சட்டப்படி இறை மையும், அரசியல் இறைமையும் மக்களிடமே உள்ளன.

**மக்களின் இறைமை :** அரசின் இறுதியான இறைமை மக்களிடமே உள்ளது. மக்களின் தீர்ப்புப்படியே மன்னனும் சட்ட மன்றங்களும் இயங்க வேண்டும். எனவே, மக்களின் இறைமையே உண்மையான இறைமையாகும்.

**இறைமையின் பகுப்பு**

இறைமையை உள்இறைமை, வெளிஇறைமை என இரு பிரிவுகளாகப் பகுக்கலாம். உள்நாட்டிலுள்ள எல்லா மக்களும், அனைத்து ஸ்தாபனங்களும், குழுக்களும், கட்சிகளும் அரசின் அதிகாரத்திற்கு அடங்கியதாகும். அரசின் இவ்வல்லமை உள் இறைமை எனப்படுகிறது. உள்நாட்டில் அரசின் அதிகாரத்திற்கு மிகுதியான அதிகாரமுடைய மக்களோ, நிறுவனமோ ,குழுவோ, கட்சிகளோ இருக்கமுடியாது.

ஒரு நாடு மற்ற நாடுகளுக்குக் கட்டுப்பட்டதன்று. ஒரு நாட்டின் சட்ட திட்டங்கள் மற்ற நாடுகளைக் கட்டுப்படுத்தாது. இது வெளிஇறைமை எனப்படும்.

உள்இறைமை தன் நிலப்பரப்பிற்குள் இருக்கும் ஏக வல்லமையையும், வெளி இறைமை மற்ற நாடுகளுக்குக் கட்டுப்படாத தன்மையையும் குறிக்கும்.

நாடுகள் ஒவ்வொன்றும் மக்கள்தொகையைக் கொண்டதாகவும், குறிப்பிட்ட நிலப்பரப்பையுடையதாகவும், முறையாக நிறுவப்பட்ட அரசு உள்ளதாகவும், இறைமை கொண்டதாகவும் இருக்க வேண்டும். எந்த ஒரு கூறுபாடு இல்லையென்றாலும், அதை நாடாகக் கொள்ள முடியாது. அதேபோல நாட்டின் எந்த ஒரு தனிக் கூறுபாட்டையும் நாடெனக் கூறுவது தவறாகும்.

## முக்கிய வினாக்கள்

1. அரசு என்ற சொல்லைத் தெளிவுபடுத்தி அதன் ஆக்கக் கூறுகளைக் கூர்ந்தாய்க. (செ. ப. க. ஏப்ரல், 1972)

2. குறிப்பு வரைக.

(அ) நாட்டின் கூறுபாடுகள்

(ஆ) அரசு

(இ) இறைமை

(ஈ) குறைந்த மக்கள்தொகையின் நன்மைகள்.

(உ) விரிந்த ஆட்சிநிலத்தின் நன்மைகள்

## ஆ. முக்கியச் சில வேறுபாடுகள்
(Some Important Distinctions)

[**நாடும் அரசும் :** வேறுபாடுகள்

**நாடும் சமுதாயமும் :** வேறுபாடுகள்

**நாடும் சங்கமும் :** சங்கம் — இலக்கணம் — அரசும் சங்கமும்—வேறுபாடுகள்— வேறுபாட்டு அட்டவணை.

**நாடும், தேசமும், தேசிய இனமும்**

**தேசம் :** இலக்கணம்— அடிப்படைத் தேவைகள்— நாடும் தேசமும் - வேறுபாடுகள் — தேசிய நாடு — ஒரு தேசிய இனநாடு—பல தேசிய இன நாடு.

**தேசிய இனம் :** இலக்கணம்—தேசிய இனத்தின் அடிப்படைத் தேவைகள்—இனத்தால் ஒருமைப்பாடு—மொழி, மரபு, கலாச்சார ஒருமைப்பாடு—சமய ஒருமைப் பாடு — நில அமைப்பில் ஒருமைப்பாடு — வரலாற்றுப் பொது மரபு – பொது அரசாங்கம் — அரசியல் பொது வேட்கை—பொதுநலம்—தேசிய இனமும் நாடும் வேறு பாடுகள்—தேசிய இனமும் தேசமும் வேறுபாடுகள்.]

அரசியலில் நாடு, அரசு, கழகம், தேசிய இனம், தேசம் ஆகிய சொற்கள் தவருகப் பயன்படுத்தப்படுகின்றன. ஒன்றைக் குறிக்கும் பொருட்டு மற்ருென்று உபயோகிக்கப்படுகின்றது. அரசைக் குறிக்கும் பொருட்டு நாடு என்ற சொல் கையாளப் படுகின்றது. நாட்டு உதவித் தொழிற்சாலை என்ற வாக்கியத்தின் உண்மையான பொருள் அரசு உதவித் தொழிற்சாலையாகும். தேசங்களின் ஐக்கிய சங்கம் (United Nations Organisation) என்ற சொற்ருெடர் நாடுகளின் ஐக்கிய சங்கத்தைக் குறிக்கக் கையாளப்படுகிறது. எனவே, இக் குழப்பங்களைத் தவிர்ப்பதற்காக முக்கியச் சில வேறுபாடுகளை அறிதல் அவசியமாகும். மேலும், நாட்டிலிருந்து அரசும், நாட்டிலிருந்து சமுதாயமும் வேறுபடுத்தப் பட்டால்தான் வல்லாட்சியாளர்களையும், அவர்களது வல்லாட்சி களையும் தவிர்க்க முடியும்.

### நாடும் அரசும்
(State and Government)

நாடும் அரசும் ஒரே பொருள் கொண்டது போலவும், வேறு பாடுகள் இல்லாதது போலவும் கருதப்படுகின்றன. வழக்கில்

இவ்வேறுபாடுகள் வலியுறுத்தப்படாமல் நடைமுறையில் குழப்பத்தை ஏற்படுத்துகின்றன.

## நாடும் அரசும்—வேறுபாடுகள்

நாடு இன்றியே அரசு இருக்க முடியும். ஆனால், அரசு இல்லாமல் நாடு இருக்க முடியாது. ஆதிகாலத்தில் வாழ்ந்த நாடோடி சமுதாயங்கள் அரசாங்க அமைப்பை உடையனவாக இருந்தன. ஆனால், நிலப்பரப்பு இல்லாத காரணத்தால் அவைகள் நாடுகளாக மதிக்கப்படவில்லை. எனவே, நாடு இன்றியும் அரசு இருக்க முடியும். அரசு இல்லாமல் நாடு இயங்கமுடியாது.

அரசு என்பது நாட்டின் ஓர் உறுப்பாகும். மக்கள் தொகை, நிலப்பரப்பு, அரசு, இறைமை ஆகிய நான்கு உறுப்புகள் நாட்டிற்கு உண்டு. அரசு என்பது இந்நான்கு உறுப்புகளில் ஒன்றாகும். அரசிற்கெனச் சட்டசபைகள், நிருவாகத்துறை, நீதித்துறை, வாக்காளர் என நான்கு நிறுவனங்கள் உள்ளன.

அரசுக்குத் தன்னகத்தே அதிகாரம் கிடையாது. இது நாட்டின் பிரதிநிதியாகச் செயல் புரிகிறது. நாட்டிடமிருந்தே அதிகாரத்தைப் பெறுகிறது. அதிகாரத்தின் இருப்பிடமும் சக்தியின் தோற்றமும் நாடாகும். நாடு ஒரு கம்பெனி போலவும், அரசு அதன் இயக்குநர்கள் போலவும் செயல் புரிகின்றன.

அரசு பருப்பொருளாகவும், நாடு நுண்பொருளாகவும், அமைந்துள்ளன. நுண்பொருளாக இருப்பதால் நாடு தானாக இயங்க முடியாது. அரசின் உதவியுடன்தான் நாடு இயங்கமுடியும். கூட்டமைப்புகள் (Corporations) தானாக இயங்கமுடியாததால் இயக்குநர்கள் குழு கூட்டமைப்பிற்காகச் செயல்படுகிறது. அதே போல நாடு தானாக இயங்கும் சக்தியற்ற நுண்பொருள், ஆதலால், அரசு என்ற பருப்பொருளால் இயக்கப்படுகிறது.

நாடு என்பது விரிந்த பொருளையுடையது. மக்களையும், நிலப்பரப்பையும், அரசையும், இறைமையையும் தன்னகத்தே கொண்டது. ஆனால், அரசு நாட்டின் ஒரு பகுதியேயாகும். அரசின் தலைவரும், அதன் அலுவலர்களும் நாட்டின் பகுதியாகிய மக்கள் தொகையின் ஒரு பகுதியேயாவர்.

நாட்டிற்கு இறைமையுண்டு. ஆனால், அரசுக்கு இறைமையில்லை. நாட்டிடமிருந்தே அரசு இறைமையைப் பெறுகின்றது. நாட்டின் ஏவலாளியாக அரசு செயல்படுகிறது. அரசுக்கு அளிக்கப்

பட்ட அதிகாரத்தைக் குறைக்கவும், மாற்றவும், அதிகரிக்கவும் நாட்டால் இயலும்.

அரசு மாறும் தன்மையுடையது. ஆனால், நாடு மாருத் தன்மையுடையது. அரசு புரட்சியாலோ தேர்தலில் தோல்வி யடைதலாலோ மாற்றப்படலாம். ஆனால், நாடு மாருது. பிரான்சு நாட்டின் புரட்சிக்குப் பிறகு லூயி மன்னரின் அரசு மாற்றப்பட்டது. அதேபோல 1917ஆம்ஆண்டில் ரஷ்யப் புரட்சியின் காரணமாக ஜார் மன்னர்களின் அரசு நீக்கப்பட்டது. ஆனால், ரஷ்ய நாடு மாறவில்லை; நீங்கவில்லை. நாட்டின் தொடர்ச்சியையும் நிலைத்த தன்மையையும் குறிப்பதற்காக ஒரு மன்னர் இறந்தவுடன் 'மன்னர் இறந்துவிட்டார். மன்னர் நீடூழி வாழ்க' என்று இங்கிலாந்து மக்கள் கூறுவர்.

அரசு அடிக்கடி மாற்றங்களுக்கு உள்ளாகும். ஆளுங் கட்சிகள் மாறலாம். அரசு அமைப்பே கூட மாறலாம். ஆனால், நாடு மாருத்தன்மையையும் நிலையான தன்மையையும் உடையன வாகும்.

அரசு அமைப்புகள் பல வகைப்படும். வல்லரசாகவும், நல்ல குடியரசாகவும், முடியரசாகவும் அரசு இருக்கலாம். ஒற்றை ஆட்சி அமைப்புடையதாகவும், கூட்டாட்சி அமைப்புடையதாக வும் அரசு இருக்கலாம். இது ஜனாதிபதி முறையினதாகவும், பாராளுமன்ற முறையினதாகவும் இருக்கலாம். ஆனால், நாடு ஒரே வகையானது. உலகெங்கிலும் ஒரே தன்மையுடையது. அரசு நாட்டுக்கு நாடு காலத்திற்குக் காலம் மாறுபடும் தன்மையுடையது.

குடிமக்கள் தங்கள் விசுவாசத்தை நாட்டிடமே காட்டுகின் றனர். அடிக்கடி மாறக்கூடிய அரசிடம் தங்கள் பற்றைக் காட்டு வதில்லை. ஏனெனில், அரசிடம் விசுவாசமாக இருந்தால் அதை எதிர்ப்பதோ மாற்ற முயல்வதோ அராஜகம் ஆகிவிடும். எனவே, குடிமக்களின் விசுவாசம் நாட்டின்பாற்பட்டதாகும்.

இவ்விடத்தில் நாட்டின் அழியும் தன்மையையும் சுட்டிக் காட்ட வேண்டும். நாடு காலத்தால் அழியும் தன்மையுடைய தாகும். இறைமையை இழக்கும் போதும், மற்ருெரு நாட்டால் தோற்கடிக்கப்படும் போதும், நிலப்பரப்பு முழுவதும் இழந்த போதும் மக்கள்தொகை அழிக்கப்படும் போதும் நாடு அழிந்து விடுகிறது. இந்தியாவின் இறைமையை ஏற்ற சிக்கிம் தனி நாடு ஆகாது. ஏனெனில், அது தனது இறைமையை இழந்துவிட ஒப்புக்கொள்கிறது.

**நாடும் அரசும்**

கூட்டாட்சி நாடு, பொதுநல நாடு, நாட்டுப் பொதுவுடைமை என்ற சொற்களில் உள்ள நாடு என்ற சொற்கள் அரசு என சொல்லப்பட வேண்டும். நாட்டிற்கும் அரசிற்கும் உள்ள வேறு பாடு வலியுறுத்தப்படல் வேண்டும். இவ் வேறுபாட்டை அறியாத காரணத்தால் வல்லாட்சியாளர்களான ஸ்டூவர்டு மன்னர்களும், லூயி மன்னர்களும் தாங்கள் நாட்டின் பிரதிநிதிகள் என்பதை மறந்துவிட்டனர். 14ஆம் லூயி 'நானே நாடு' என்று கூறினர். ஸ்டூவர்டு மன்னர்களின் சர்வாதிகாரத்தை ஹாப்ஸ் போன்ற அரசியல் அறிஞர்களும் ஆதரித்தனர்.

மேலும், ஹிட்லர், முசோலினி போன்ற வல்லாட்சியாளர்கள் நாடு நிலையானது என்பதையும், தாங்கள் நிலையற்றவர்கள் என்பதையும் உணரவில்லை. தங்கள் அரசு மாற்றப்படக் கூடியது என்பதை மறந்துவிட்டனர். நாட்டுக்கு மட்டுமே இறைமை உண்டு. தங்களுக்கு இறைமை இல்லை என்பதை அறிந்து கொள்ளவில்லை. இவ் வல்லாட்சியாளர்களின் அதிகாரம் அனைத்தும் நாட்டிடமிருந்து பெறப்பட்டது என்பதை மறந்துவிட்டார்கள்.

எனவே, நாட்டிற்கும் அரசிற்கும் வேறுபாடு காட்டி ஆட்சி யாளர்களின் அதிகாரம் நாட்டிற்குக் கீழ்ப்பட்டதெனக் காட்டு வதன் மூலம் கொடுங்கோன்மையை நீக்கலாம். நாட்டிற்கும் அரசிற்கும் வேறுபாடு காண்பது இன்றியமையாதது எனத் தற்கால அரசியல் அறிஞர்கள் கருதுகின்றனர்.

## நாடும் சமுதாயமும்
## (State and Society)

நாடும் அரசும் ஒன்றுபோல் இருப்பினும் ஒன்றல்லவென்றும், வேறுபாடுகள் உடையனவென்றும் முன்பகுதியில் கண்டோம். அதேபோல நாடும் சமுதாயமும் பல விதங்களில் வேறுபட்டன வாகும். சமுதாயம் என்பது குழுக்களையும், ஸ்தாபனங்களையும், கழகங்களையும் கொண்டதாகும். மேக்ஐவரின் கருத்துப்படி, பழக்க வழக்கங்களும், நடைமுறைக் கோட்பாடுகளும், ஒருவரை யொருவர் சார்ந்திருக்கும் தன்மையும் உடைய சமுதாயம் தனது அங்கத்தினர்களின் நடத்தையையும் சுதந்திரத்தையும் தீர்மானிக் கின்றது. சமுதாயத்தின் அமைப்புச் சிக்கல் மிகுந்ததாகவும் மாறக்கூடியதாகவும் இருக்கிறது. நாடு சமுதாயத்தின் ஓர் அங்கம். இருப்பினும், நாடு சமுதாயத்திலிருந்து வேறுபட்டது. நாட்டிற்கும் சமுதாயத்திற்கும் உள்ள வேறுபாடுகளைக் காணலாம்.

**நாடும் சமுதாயமும்—வேறுபாடுகள்**

நாட்டைவிடச் சமுதாயம் பரந்த விரிந்த பொருள் உடையது. பழக்க வழக்கங்கள், மரபுகள், குடும்பம், ஜாதி, மதம், கல்வி, தொழில் ஆகிய அனைத்தும் சமுதாயத்தில் அடங்கும். ஆனால், சமுதாயத்தின் அரசியல் உறவு மட்டும் நாட்டைச் சார்ந்ததாகும்.

சமுதாயம் நாடு தோன்றுவதற்கு முன் தோன்றியதாகும். அரசியல் அமைப்பு இன்றி மனிதன் வாழ்ந்த காலத்திலேயே சமுதாயம் இருந்தது. ஆனால், அரசியல் நிறுவன அமைப்புத் தோன்றிய பிறகே நாடு தோன்றியது.

நாட்டிற்கு ஆட்சிநிலம் இன்றியமையாதது எனக் கண்டோம். ஆட்சிநிலம் இன்றி நாடு இருக்கமுடியாது. ஆனால், ஆட்சிநிலம் இன்றியே சமுதாயம் நிலவ முடியும். நாடோடிக் கூட்டங்கள் நிரந்தரமான ஒரு நிலப்பரப்பு இன்றியே சமுதாயமாக வாழ்ந்ததை வரலாறு காட்டும்.

நாடு நிறுவன அமைப்புடையதாகவும் விதிகளையுடையதாகவும் இருக்க வேண்டும். ஆனால், நிறுவன அமைப்பற்றதும், சட்ட திட்டங்கள் இல்லாததுமான சமுதாயம் இருந்ததைக் காணலாம். மேக்ஐவர் கூற்றுப்படி, வேட்டையாடுபவர்கள், மீன் பிடிப்பவர்கள், கிழங்கு தோண்டுபவர்கள், பழம் பறிப்பவர்கள், எஸ்க்கிமோக்கள் ஆகியவர்கள் சமுதாயமாக வாழ்ந்தனர். இவர்கள் அரசியல் நிறுவன அமைப்பு ஏற்படுத்திக்கொள்ளவில்லை. இருப்பினும், சமுதாயமாகக் கருதப்பட்டனர்[1].

சமுதாயம் மனிதனின் கூடிவாழும் இயல்பூக்கத்தால் (Gregarious instinct) தோன்றியதாகும்; இஃது இயற்கையானது. ஆனால், நாடு மனிதனால் ஏற்படுத்தப்பட்டது. அரசியல் உணர்வோடு நாடு தோற்றுவிக்கப்பட்டது. தொழிற்சங்கங்கள், மத ஸ்தாபனங்கள், பொருளாதார அமைப்புகள், பொழுதுபோக்கும் கழகங்கள் ஆகியன விருப்பத்தாலும் முயற்சியாலும் தோற்றுவிக்கப்படுவனபோல நாடும் மக்களின் விருப்பத்தாலும் முயற்சியாலும் தோற்றுவிக்கப்பட்டதாகும்.

1 R. M. Mac Iver: 'In the earliest phases, among hunters, fishers, foot-diggers and fruit-gatherers, there has been social groups which knew nothing or almost nothing of the state. To day, these remain simple peoples, such as certain groups of Eskimos, which have no recognizable political organisation.'

சமுதாய விதிகள் பின்பற்றப்படுவதற்கும், நாட்டின் சட்டங்கள் கடைப்பிடிக்கப்படுவதற்கும் வேறுபாடுகள் உள்ளன. மக்களின் நீதி உணர்வு, ஒத்துழைப்பு, கவர்ச்சி ஆகியன சமுதாயத்தின் விதிகளைச் செயல்படுத்துகின்றன. சமுதாய விதிகளில் நெகிழ்ச்சிக்கு இடம் உண்டு. ஆனால், நாட்டின் சட்டங்கள் நெகிழ்வற்றனவாகும். அரசின் மறவலியால் இச் சட்டங்கள் நடைமுறைப்படுத்தப்படுகின்றன. சட்டங்களைப் பிழைத்தோர் நாட்டால் தண்டிக்கப்படுகின்றனர். அற உணர்வு சமுதாயத்திற்கும், மறவலி நாட்டிற்கும் ஆதாரங்களாகும்.

சமுதாயத்தின் தோற்றம், நோக்கங்கள், பணிகள் ஆகியன நாட்டின் தோற்றம், நோக்கங்கள், பணிகள் ஆகியவற்றிலிருந்து மாறுபட்டனவாகும். மேலும், சமுதாயம் தனது குறிக்கோளை அடையும் வழியும் நாடு தனது குறிக்கோளை நிறைவேற்றும் முறையும் மாறுபட்டனவாகும்.

நாட்டிற்கும் சமுதாயத்திற்கும் வேறுபாடுகள் இருப்பினும், நாடும் சமுதாயமும் ஒன்றை மற்றொன்று சார்த்தனவாகும். இவ்விரண்டும் மக்களின் ஆளுமை வளர்ச்சிக்காகவும், நலத்திற்காகவும், அவர்களின் மகிழ்ச்சிக்காகவும் இணைந்து செயலாற்ற வேண்டும். மக்களின் நல்வாழ்விற்காக இயற்றப்படும் நாட்டின் சட்டங்களுக்குச் சமுதாயம் இணங்கிச்செல்ல வேண்டும். நாடும் தனது எல்லையை மீறிச் சமுதாயத்தின் தனி வாழ்க்கையிலும் உரிமையிலும் தலையிடக்கூடாது. எனவே, நாடும் சமுதாயமும் சார்ந்தும் இணங்கியும் செல்வதே நலம் பயக்கும்.

**நாடும் சமுதாயமும்**

நாடும் சமுதாயமும் வேறுபடுத்தப்பட வேண்டும். இவ்வேறுபாடு அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்ததாகும். நாடும் சமுதாயமும் வேறுபடுத்தப்படாவிட்டால், சமுதாயச் செயல்களிலும் நடவடிக்கைகளிலும் நாடு தலையிடும். மக்களின் சுதந்திரமும் உரிமைகளும் பறிபோகும். வல்லாட்சியாளர்களான ஹிட்லரும் முசோலினியும் சமுதாயத்திற்கும் நாட்டிற்குமுள்ள வேறுபாட்டை மதிக்கவில்லை. சமுதாய நடவடிக்கைகளில் தலையிட்டுத் தங்கள் வல்லாட்சியை நிறுவினர். மக்களின் உரிமைகளும் சுதந்திரமும் நசுக்கப்பட்டன.

அரிஸ்டாட்டில் போன்ற கிரேக்க அரசியல் தத்துவ ஞானிகளும் நாட்டையும் சமுதாயத்தையும் வேறுபடுத்தவில்லை. அரசியல் வாழ்வும் சமுதாய வாழ்வும் ஒன்றெனக் கருதினர்.

அவர்களுக்கு இருந்த சூழ்நிலையே இவ்விதக் கருத்திற்குக் காரணமாகும். கிரேக்க நகர நாடுகள் பரப்பில் சிறியனவாகவும், குறைந்த மக்கள்தொகையை உடையனவாகவும் இருந்தன. அவர்களது பிரச்சினைகள் எளிமையுடையன; சிக்கலற்றன. நாட்டு விதிகளை வகுப்பதில் சமுதாயத்தினர் அனைவரும் பங்கு கொண்டனர். அரசியல் விதிகளும் சமுதாய விதிகளும் ஒன்ருகவே இருந்தன. நாடும் சமுதாயமும் வேறுபடுத்தப்பட வேண்டிய அவசியம் கிரேக்கர்களுக்கு ஏற்படவில்லை.

தற்கால அரசியல் வல்லுனர்கள் நாட்டிற்கும் சமுதாயத்திற்குமுள்ள வேறுபாட்டை வலியுறுத்துகின்றனர். நாடு சமுதாயத்திலுள்ள பல ஸ்தாபனங்களில் ஒன்ருகும். இது முக்கியமான ஸ்தாபனமாகும். இருப்பினும், நாடும் சமுதாயமும் ஒன்றல்ல, வேறுபட்டனவாகும்.

## நாடும் சங்கமும்
## (State and Association)

சமுதாயத்தில் பல ஸ்தாபனங்கள் உண்டு என்றும், நாடு அவைகளில் ஒன்ருகும் என்றும் கண்டோம். சமுதாயம் தனி நபர்களின் தொகுப்பு என்பதைவிட ஸ்தாபனங்களின் தொகுப்பு, குழுக்களின் தொகுப்பு, சங்கங்களின் தொகுப்பு என்பதே மிகவும் பொருத்தமுடையதாகும். ஏனெனில், ஏதாவது ஓர் அடிப்படையில் அமைந்த ஏராளமான சங்கங்களும், குழுக்களும், ஸ்தாபனங்களும் சமுதாயத்தில் உள்ளன.

**சங்கம்-இலக்கணம்** (Definition of Association)

சங்கம் என்பது மக்கள் குழு. தங்கள் குறிக்கோள்களை நிறைவேற்றுவதற்காகச் சங்கங்கள் நிறுவப்படுகின்றன. இவைகள் நிறுவன அமைப்புடையனவாக இருக்கும். கோல் (Cole) என்பவர் இலக்கணப்படி, சங்கம் என்பது பொதுநோக்கங்களை நிறைவேற்றுவதற்காக ஏற்பட்ட நிறுவன அமைப்பு. நோக்கங்கள் ஒன்ருகவோ பலவாகவோ இருக்கலாம். செயல்களை நெறிமுறைப்படுத்த விதிகள் வகுக்கப்பட்டிருக்கும். நிறுவன அமைப்பும் விதிமுறைகளும் சங்கத்திற்கு வலியுறுத்தப்படுகின்றன. இவைகள் இல்லையேல் அது சங்கம் ஆகாது; மக்கள் கூட்டமாகும்.[2]

[2] Cole, 'Any group of persons pursuing a common purpose or system or aggregation of purposes by a course of co-operative action extending beyond a single act, and for this purposes agreeing together upon certain methods of procedure and laying down, in however rudinentary a form rules for common action.'

சங்கங்கள் மத அடிப்படையிலும், கலாச்சார அடிப்படையிலும், பொருளாதார அடிப்படையிலும், சமூக அடிப்படையிலும் தோன்றலாம். சமுதாயத்தில் மக்களின் தேவையை நிறைவேற்றிக்கொள்வதற்காக இவ்விதச் சங்கங்கள் தோற்றுவிக்கப் படுகின்றன. தொழிலாளர் சங்கங்கள், உற்பத்தியாளர் சங்கங்கள், நுகர்வோர் சங்கங்கள், அரசியல் நிறுவன அமைப்புகள், நாடக மன்றங்கள், இலக்கிய மன்றங்கள் எனப் பலவகையான சங்கங்களை நாம் காண்கின்றோம்.

நாடும் சங்கமும் ஸ்தாபன அமைப்புடையன; குறிக்கோள்கள் உடையன. விதிமுறைகளைக் கொண்டன. இருப்பினும் இவைகளிடையே வேறுபாடுகள் உண்டு என்பதை நாம் அறிய வேண்டும்.

**நாடும் சங்கமும்—வேறுபாடுகள்**

நாடு ஒரு நிரந்தர நிறுவனமாகும். ஆனால், சங்கம் தற்காலிகமானது. அரசு மாறினாலும், இறைமையின் இருப்பிடம் மாறினாலும் நாடு மாறுவது இல்லை. தங்கள் குறிக்கோள்கள் நிறைவேறியவுடன் சங்கங்கள் மறைகின்றன. உள்பூசல்களாலும் சங்கங்கள் கலைக்கப்படலாம்.

நாடு இறைமையுடையது. விதிகளை மீறுவோரைத் தன் மறவலியால் தண்டிக்கும் சக்தி பெற்றது. ஆனால், சங்கங்களுக்கு இறைமை கிடையாது. விதிகளை மீறும் அங்கத்தினரைத் தண்டிக்கும் மறவலி கிடையாது. பிறரைப் பணிய வைக்கும் ஆற்றல் அற்றது.

நாடு மற்றச் சங்கங்களின்மீது ஆதிக்கம் செலுத்தும். நாட்டின் கொள்கைக்கு மாறாகவும், பொது நலன்களுக்கு இடையூறாகவும் இருக்கும் சங்கங்களை நாட்டின் முகவரான அரசு கலைக்கலாம். சட்டப்படி தண்டிக்கலாம். நாட்டின் அதிகார வரம்பை மீறும் ஒரு சங்கம் இருக்க முடியாது. ஆனால், மற்றச் சங்கங்களைக் கட்டுப் படுத்தும் வலிமை சங்கத்திற்குக் கிடையாது.

நாட்டிற்கு ஆட்சிநிலம் முக்கியமானதாகும். நாட்டின் இறைமை அதன் ஆட்சிநிலத்திற்குள் மட்டுமே வியாபிக்கும். ஆனால், சங்கங்களுக்கு நிலப்பரப்பு வலியுறுத்தப்படுவதில்லை. செஞ்சிலுவைச் சங்கம், சாரணர் இயக்கம் போன்ற சங்கங்கள் உலகம் முழுவதும் பரவியிருக்கின்றன. நாட்டில் அந்நாட்டின் குடிமக்கள் மட்டுமே இருக்கின்றனர். ஆனால், சங்கங்களில் பல நாடுகளின் குடிமக்களும் அங்கம் வகிக்கின்றனர்.

நாட்டின் அங்கத்தினராக இருப்பது தவிர்க்க முடியாததாகும். ஒருவன் ஏதாவது ஒரு நாட்டின் குடிமகனாக இருந்தாக வேண்டும். ஆனால், சங்கத்தின் அங்கத்தினராவது கட்டாயமல்ல; தனிமனிதனின் விருப்பத்திற்குட்பட்டதாகும். விரும்பினால் அங்கத்தினராக இருக்கலாம். வெறுப்பு ஏற்படின் சங்கத்திலிருந்து விலகிக்கொள்ளலாம். விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் ஒரு நாட்டின் அங்கத்தினராக இருக்க வேண்டும்.

நாட்டின் நோக்கங்களும் பணிகளும் விரிந்தனவாகும். ஆனால், சங்கங்களுக்குக் குறிப்பிட்ட நோக்கங்களே உண்டு. குறிப்பிட்ட நோக்கங்கள் நிறைவேறியவுடன் சங்கங்கள் கலைக்கப்படலாம். ஆனால், நாட்டின் குறிக்கோள்களும் பணிகளும் நீண்டவை; நிரந்தரமானவை.

நாடே சங்கங்களை நிறுவலாம். குறிப்பிட்ட பணிகளை ஒப்படைக்கலாம். போக்குவரத்துக் கழகங்களும், பல்கலைக் கழகங்களும், மின்சார வாரியங்களும், குடிநீர் வாரியங்களும் நாட்டால் நிறுவப்பட்ட சங்கங்களாகும். இவைகளுக்கென நாடு விதிமுறைகளை வகுக்கிறது. இவைகளின் பணிகளையும் வரையறுக்கிறது.

**நாடும் சங்கமும் — வேறுபாட்டு அட்டவணை**

| சங்கம் | நாடு |
|---|---|
| 1. தற்காலிகமானது | 1. நிரந்தரமானது |
| 2. இறைமையற்றது | 2. இறைமையுடையது |
| 3. இதர சங்கங்களின் மீது ஆதிக்கம் இல்லை | 3. எல்லாச் சங்கங்களின் மீதும் ஆதிக்கம் உண்டு |
| 4. ஆட்சிநிலம் முக்கியமில்லை | 4. ஆட்சிநிலம் முக்கியம் |
| 5. உலகெங்கும் வியாபிக்கும் | 5. தன் நாட்டுக்குள் மட்டும் வியாபகம் |
| 6. அங்கத்தினராக இருப்பது விருப்பம் | 6. அங்கத்தினராக இருப்பது கட்டாயம் |
| 7. நோக்கங்களும் பணிகளும் குறிப்பிடப் படுகின்றன | 7. நோக்கங்களும் பணிகளும் விரிந்தன |

**நாடும் சங்கமும்**

நாடும் ஒரு நிறுவன அமைப்பாக இருப்பதால் மற்ற நிறுவன அமைப்புகளிலிருந்து வேறுபடுத்தப்படவேண்டும். நாட்டினும் மிஞ்சிய அதிகாரமுடைய ஒரு சங்கமோ, நிறுவன அமைப்போ நாட்டினுள் இருக்க முடியாது என்பதை அறிய வேண்டும். நாடு பற்றிய நமது அறிவு தெளிவுபட இவ்வேறுபாடு தெரிதல் அவசியமாகிறது.

## நாடு, தேசம், தேசியஇனம்
## (State, Nation, Nationality)

அரசியல் நூலில் நாடு, தேசம், தேசிய இனம் என்ற சொற்களுக்குத் தனித்தனிப் பொருளுண்டு. இச் சொற்கள் நடைமுறையில் ஒன்றுக்கொன்று மாற்றிப் பயன்படுத்தப்படுகின்றன. தேசம் (Nation) என்ற சொல் தேசிய இனம் (Nationality) என்ற சொல் பயன்படுத்தப்படவேண்டிய இடத்தில் கையாளப்படுகின்றது. அதேபோல் தேசம் என்ற சொல் நாடு என்ற சொல் பயன்படுத்தப்படவேண்டிய இடத்திலும் கையாளப்படுகிறது. இவ்விதம் ஒன்றுக்கொன்றைக் கையாளுவதால் பொருள் திரிபும் குழப்பங்களும் தோன்றுகின்றன. இருப்பினும், ஒன்று பிறிதொன்ருக மாறி நிற்கும் சூழ்நிலை உண்டு. நாடு, தேசம், தேசியஇனம் ஆகிய சொற்களின் பொருள்களைச் சரியாக அறியவேண்டியதும் அவசியம் ஆகின்றது.

## தேசம்
## (Nation)

**தேசம்–இலக்கணம்**

பொது மரபிலிருந்து தோன்றிய ஓர் இன மக்களின் நாட்டைக் குறிப்பது தேசமாகும். கால்வோ (Calvo) என்பவர் தமது 'சர்வ தேசச் சட்டம்' (International Law) என்ற நூலில் தேசத்திற்குப் பிறப்பின் அடிப்படையையும், மரபின் அவசியத்தையும், பொது மொழியையும் வலியுறுத்துகிருர். இன நாட்டிற்கு மரபின் முக்கியத்துவத்தை லீக்காக்கும் (Leacock) கூறுகிருர்.[3]

**தேசம்–அடிப்படைத் தேவைகள்**

தேச மக்கள் மரபாலும், மொழியாலும், கலாச்சாரத்தாலும் இணைந்திருக்க வேண்டும். இவர்களிடையே ரத்தபந்தம்

[3]Leacock, 'The term nation, though often loosely used is properly to be thought of having a racial or ethnographical significance.'

இருக்கும். இவர்கள் புவியியல் ஒருமைப்பாடும் சமய ஒருமைப்பாடும் உடையவர்களாவர். வரலாற்றுப் பொது மரபும், அரசியலில் பொது நலமும், பொதுவேட்கைகையும் இவர்கள் கொண்டிருக்க வேண்டும்.

தேசத்திற்குக் கூறப்பட்ட அடிப்படைத் தேவைகள் தற்காலத்தில் வலியுறுத்தப்படுவதில்லை. தற்காலத் தேசங்களில் கலப்பு இனங்களே இருக்கின்றன. குடியேற்றங்களாலும் கலப்புத் திருமணத்தாலும் இனத் தூய்மை மறைந்துவிட்டது. அமெரிக்க நாட்டிலும், ஸ்விட்சர்லாந்து நாட்டிலும், இந்திய நாட்டிலும் கலப்பு இனங்களை நாம் காண்கிறோம். இந் நாடுகளில் மொழியாலும் மரபாலும் வேறுபட்ட மக்கள் வாழ்கின்றனர். இருப்பினும், இவர்கள் ஒரு தேசத்தவர்களாகவும் நாட்டுப்பற்றுடையவர்களாகவும் வாழ்கின்றனர். பொது நலத்தில் அக்கரை உள்ளவர்களாகவும், இணைப்பிலும் ஒருமைப்பாட்டிலும் ஈடுபாடுடையவர்களாகவும் இருக்கின்றனர். எனவே, தேசம் ஏற்படுவதற்குத் தற்காலத்தில் பொது மொழியோ, பொது மரபோ, பொதுச் சமயமோ வலியுறுத்தப்படுவதில்லை.

ஆனால், மக்களிடையே மனஒற்றுமையும் ஆன்மநேய ஒருமைப்பாடும் வேண்டும். தாய்நாடு என்ற உணர்வும், தாய்நாட்டின் குடிமக்கள் என்ற உணர்வும் மக்களிடையே இருக்கவேண்டும். இதயத்தில் நாட்டுப்பற்றும், நாட்டு மக்கள் அனைவரும் உடன்பிறந்தவர்கள் என்ற எண்ணமும் இருந்தாலே அது தேசமாகிறது. தற்காலத்திய இக்கருத்தை பார்க்கர் (Barker) போன்ற அரசியலறிஞர்கள் எடுத்துக் கூறுகின்றனர்[4].

**நாடும் தேசமும்–வேறுபாடுகள்**

நாடும் தேசமும் ஒன்றல்ல. நிறுவன அமைப்புடன் ஒரு குறிப்பிட்ட ஆட்சிநிலத்தில் சட்டத்தின் கீழ் வாழும் மக்கள்

[4] Barker: 'A nation is a body of persons inhabiting a definite territory and thus united together by the primary fact of living together on common land. They are drawn from a number of races and they came from different breeds. But their wanderings brought them into this territory and they settled down there because it appealed to them to settle down there. While living together for a sufficiently long time, they developed two forms of mental sympathy. The first is a common capital of thoughts and feelings acquired and transmitted in the course of common history, a common capital or tradition, which includes as a rule of common language, a common religion (which may however, assume a number of different forms and a common culture variously expressed in art and architecture, in literature, in social habits and otherwise. The second is the common will to live together for the future freely and independently, thus, having common thoughts, feelings and aspirations and thereby exercising their right of political self determination.

நாடாவர். தேசத்திலிருக்கும் தேசியஇனத்தார் மனஇயல் அடிப் படையில் ஒருமைப்பாடு உடையவர்களாகி வாழ்பவர்களாகவோ, அல்லது எதிர்காலத்தில் இணைந்து வாழவிரும்புபவர்களாகவோ இருப்பர். நாட்டில் பல தேசிய இனத்தார் இருக்கலாம். ஆனால், தேசத்தில் ஒரே தேசிய இனத்தார் இருப்பர். ஒரு தேசிய இனத் தார் ஒரு நாடாக அமைந்தாலோ அல்லது ஒரு நாட்டில் ஒரு தேசிய இனத்தார் மட்டும் இருந்தாலோ அது தேசமாகிறது. முதல் உலகப் பெரும் போருக்குப் பிறகு தேசங்கள் பல தோன்றின. நாடு என்ற சொல்லும் தேசம் என்ற சொல்லும் ஒரு பொருள் உடையன போல் இணைந்தே கையாளப்படுகின்றன. ஐக்கிய தேசங்களின் ஸ்தாபனம் (United Nations Organisation) என்ற சொற்றொடர் ஐக்கிய நாடுகளின் ஸ்தாபனம் என்ற பொருளில் பயன்படுத்தப் படுகிறது. ஐக்கிய நாடுகளின் ஸ்தாபனத்தில் அங்கம் வகிப்பன இறைமையுடைய நாடுகளாகும்.

ஓர் அரசின் கீழ்ப் பல நாட்டினத்தார் வாழலாம். இவர்கள் ஓர் அரசின் கீழ் வாழ்வதால் மட்டும் அவ்வரசைச் தேசம் எனக் கூற முடியாது. முதல் உலகப் பெரும் போருக்கு முன் ஆஸ்த்திரிய நாட்டினத்தாரும், ஹங்கேரி நாட்டினத்தாரும் ஓர் அரசின் கீழ் இருந்தனர். ஆனால், ஒரு தேசமாக இருக்கவில்லை. பாகிஸ்தானும் இந்தியாவும் இணைந்தாலும் ஒரு நாடாக இருக்கலாம். ஆனால், ஒரு தேசமாக இருப்பதற்கில்லை. அதே போல ஒரு நாடாக இல்லா விட்டாலும் ஒரு தேசிய இனமாக இருக்கலாம். தமிழ் மக்கள் ஒரு நாடாக அமையவில்லை. இருப்பினும் இவர்கள் ஒரு தேசிய இன மாக உள்ளனர்.

**தேசிய நாடு** (Nation State)

அமெரிக்கக் குடியரசு தலைவர் உட்ரோ வில்சனின் நாட் டினத்தின் சுயநிர்ணயக் கோட்பாடு (Principle of National self determination) நாட்டினத்தார் தேசமாக அமைவதை ஆதரித் தது. இது தேசிய நாட்டைத் (Nation State) தோற்றுவித்தது. ஓர் இனம், ஒரு நாடு என்ற விதிமுறை தோன்றியது. இதன் காரணமாக ஒரு தேசிய இனநாடு சிறப்புடையதா, பல தேசிய இன நாடு சிறப்புடையதா என்ற பிரச்சினைகள் தோன்றின.

**ஒரு தேசிய இனநாடு** (Mono-National State)

ஒரு தேசிய இனநாட்டை மில் (Mill) போன்ற அரசியல் அறிஞர்கள் ஆதரிக்கின்றனர். ஒரு தேசிய இன நாட்டில் (Mono National State) மக்களிடையே ஒற்றுமையும் ஒருமைப்பாடும்

நிலவும். மக்கள் தங்கள் கருத்து வேறுபாடுகளை மறந்து பொதுநலத் திற்காக உழைப்பர். இவர்களிடையே பொறையுடைமையும் ஒத் துழைப்பும் இருக்கும்.

**பல தேசிய இனநாடு** (Poly National State)

பல தேசிய இனநாட்டை (Poly National State) பேராசிரியர் ஆக்ஷன் (Action) போன்ற அரசியல் அறிஞர்கள் ஆதரிக்கின் றனர். பல தேசிய இனம் ஒரு நாட்டின் கீழ் இருக்கும்போது ஆற்றல்மிக்க தேசிய இனத்தினரும், ஆற்றலற்ற தேசிய இனத் தாரும் இணைந்து வாழமுடிகிறது. திறமற்ற பிற்பட்ட தேசிய இனத்தார் திறமிக்க தேசிய இனத்தாரிடமிருந்து நற்பயன்கள் பல பெற முடிகிறது. பிற்பட்ட தேசிய இனத்தினரும் நாளடைவில் முன்னேற வழியேற்படும். மேலும், ஒரு தேசிய இனநாட்டில் மக்களின் உரிமைகளும் சுதந்திரமும் பறிபோகும் வாய்ப்புகள் ஏற்படும். ஒரு தேசிய இனநாடு மக்களின் சமுதாய வாழ்க்கை யிலும் தலையிட நேரிடும். ஒரு நாட்டில் பல தேசிய இனத்தார் வாழும்பொழுது நாடு தனது அரசியல் செயல்களுடன் அடங்கும். சமுதாய வாழ்க்கையில் தலையிட்டு, சுதந்திரங்களைப் பறிக்காது. கருத்து வெளியிடும் உரிமையும், சங்கங்கள் அமைக்கும் உரிமை யும், சட்டத்தின் ஆட்சியும் இருக்குமானல் பல தேசிய இன நாட்டிலும் வல்லாட்சியின்றிச் சுதந்திரமும் சமத்துவமும் நிலவும் வாய்ப்புத் தோன்றும். அமெரிக்கா, ரஷ்யா, இந்தியா போன்ற நாடுகளில் பல தேசிய இன நாடே நிறுவப்பட்டு நன்முறையில் செயல்படுவது பல தேசிய இனநாட்டின் சிறப்புக்குச் சான்று களாகும்.

## தேசிய இனம்

## (Nationality)

**தேசிய இனம் – இலக்கணம்**

நாட்டினம் என்ற சொல் எளிதில் இலக்கணம் காணக்கூடிய தாக இல்லை. இது பல கூறுபாடுகளின் ஒருங்கிணைப்பாகும். பிறப்பாலும், இனத்தாலும், மரபாலும், மொழியாலும் ஒன்றுபட்ட மக்கள் இனத்தைக் குறிப்பதே தேசிய இனமாகும். பேராசிரியர் பிரைஸ் (Bryce) இலக்கணப்படி மொழி, இலக்கியம், கருத்துகள், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றால் இணைக்கப்பட்ட மக்கள் தொகுப்பு தேசிய இனமாகும். இம் மக்கள் தொகுப்பு மற்ற

மக்கள் தொகுப்புகளிலிருந்து தனித்து நிற்கக் கூடியதாகும்.[5] தேசிய இனத்தைத் தெளிவாக உணரப் பின் வரும் அதன் அடிப் படைகளை அறிதல் அவசியமாகும்.

**தேசிய இனத்தின் அடிப்படைத் தேவைகள்**

1. இனத்தால் இணைப்பு (Unity of Race)
2. மொழியாலும், மரபாலும், கலாச்சாரத்தாலும் இணைப்பு (Unity of Language, Tradition and Culture)
3. சமயத்தால் ஒற்றுமை (Unity of Religion)
4. நில அமைப்பு ஒற்றுமை (Geographic Unity)
5. வரலாற்றுப் பொதுமரபு (Historical Common Tradition)
6. பொது அரசாங்கம் (Common Government)
7. அரசியல் பொது வேட்கை (Common Political Aspirations)
8. பொது நலம் (Common Interest)

**இனத்தால் ஒருமைப்பாடு**

ஓர் இனத்தைச் சார்ந்தவர்கள் எளிதில் ஒருங்கிணைய முடியும். இவர்களிடையே சகோதர உணர்வு எளிதில் தோன்றும். ஆரிய இனம், திராவிட இனம், ட்யூடான் இனம், செல்ட் இனம் ஆகிய இனங்கள் முற்காலத்தே இருந்தன. ஆனால், தற்காலத்தில் இவ் வினங்களிடையே இனத்தூய்மை கிடையாது. இனக் கலப்புகள் ஏற்பட்டுள்ளன. தனி இனம் மறைந்து கலப்பினம் தோன்றி யுள்ளது. இந்தியாவில் ஆரிய இனமும் திராவிட இனமும் கலந் துள்ளன. அமெரிக்கா, கனடா போன்ற நாடுகளிலும் இனக் கலவையையே காண்கிறோம். தனி இனம் இல்லை; தனி இனம் அவசியமும் இல்லை. தாங்கள் அனைவரும் தனி இனத்தைச் சார்ந்தவர்கள் என்ற எண்ணமும் நம்பிக்கையுமே இன ஒருமைப் பாட்டிற்குப் போதுமானதாகும்.

[5] Bryce : 'A nationality is a population held together by certain ties, as for example, language and literature, ideas, customs and traditions, in such a way as to feel itself a coherent unity distinct from other populations similarly held together by like ties of their own.'

'A nation is a nationality which has organised itself into a political body either independent or desiring to be independent.'

**மொழி, மரபு, கலாச்சார ஒருமைப்பாடு**

பொதுமொழி, பொதுமரபு, பொதுக் கலாச்சாரம் ஆகியன நாட்டினத்தின் உணர்வை ஏற்படுத்தும் என்பதில் ஐயமில்லை. மொழி மரபையும் கலாச்சாரத்தையும் வளர்க்கும் வலிமை மிக்கது. மொழியால் நமது கருத்துகளைப் பரிமாறிக்கொள்ள இயலும். நாட்டின் இலக்கியத்தையும் கலாச்சாரத்தையும் மொழி வழி அறியலாம். ராம்சேமூர்[6] (Ramsay Muir) கூற்றுப்படி, நாட்டினத்தை இணைப்பதிலும், இனநாட்டைத் தோற்றுவிப்பதிலும் மொழியின் பங்கு மகத்தானதாகும். பார்க்கர்(Barker)[7] கருத்துப்படி, இனநாட்டிற்கும் மொழிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. எண்ணங்களை வளர்ப்பதிலும், உணர்வுகளை வெளியிடுவதிலும் மொழி பயன்படுகிறது. எனவே, ஒரு பொது மொழி பேசும் மக்களிடையே இன உணர்வு தோன்றுவது இயல்பாகும்.

இருப்பினும் தேசிய இனத்தை ஏற்படுத்த மொழி இன்றியமையாதது அன்று. பல மொழி பேசும் இந்தியர்களும், சுவிஸ் மக்களும், ரஷ்ய மக்களும் தேசிய உணர்வுடன் வாழ்கின்றனர். மொழி வேறுபாடுகள் இவர்களின் ஒருமைப்பாட்டைக் குலைப்பதில்லை. எப்படி மொழி வேறுபாடுகள் தேசிய இனத்தையும், அவர்களின் ஒற்றுமையையும் கெடுப்பதில்லையோ அதேபோல மொழி ஒருமைப்பாடு மட்டும் ஒற்றுமையையும் தேசிய இனத்தையும் ஏற்படுத்துவதில்லை. பொது மொழியுடைய ஆங்கிலேயர்களும், ஐரிஸ் மக்களும், ஆஸ்திரிய நாட்டவரும், ஜெர்மானியரும் ஒருமைப்பாடும் இனஉணர்வும் உடையவர்களாக இல்லை. எனவே, தேசிய இனத்தை ஏற்படுத்துவதில் மொழி இடையூறாக இருப்பதில்லை. மொழியால் சிறுபான்மையினர் இணைந்து வாழ்வதை நாம் இந்தியாவில் காண்கிறோம்.

**சமய ஒருமைப்பாடு**

தேசியஇனத்தை உருவாக்குவதில் சமயம் முக்கியமான பங்கு கொள்கிறது. முற்காலத்தில் சமயமே வலிமைமிக்க இணைப்புச்

[6] Ramsay Muir: 'There is nothing that will give unity to divergent races is as the use of a common tongue and in very many cases unity of language and community of ideas which it brings, here proved the main binding force in nation.'

[7] Barker: 'There are the closest affinities between nation and language Language is not mere words. Each word is changed with associations that touch feelings and evoke thoughts. You cannot share their feelings and thoughts unless you can unlock their associations by having the key of language. You cannot enter the heart nor the mind of a nation unless you know its speech, Conversely, once you have learned that speech you find that with it and by it you imbibe a deep and pervasive spiritual force'.

சக்தியாக இருந்தது. தற்காலத்திலும் சமய ஒருமைப்பாடு இருப்பின் தேசமும் தேசிய இனமும் எளிதில் தோன்றும். மத வேறுபாடுள்ள மக்கள் தேசிய இனமாக அமைவது கடினமான தாகும். 1830ஆம் ஆண்டில் பெல்ஜியமும் ஹாலந்தும் சமய வேறு பாட்டின் காரணமாக ஒருங்கிணைய மறுத்தன. சமய அடிப்படை யிலேயே இந்தியா பிரிக்கப்பட்டு பாகிஸ்தான் தோன்றியது. இஃது இஸ்லாமியக் குடியரசு என அழைக்கப்படுகிறது. இஸ்லாமியக் குடியரசுகளில் இஸ்லாம் மதத்திற்கு முரணான சட்டங்களை இயற்று வது அரசியலமைப்பிற்கு முரணாகும்.

இருப்பினும், தற்காலத்தில் தேசிய இனத்தை ஏற்படுத்துவதில் சமயத்தின் ஆதிக்கம் குறைந்துகொண்டு வருகிறது. தேசிய இனத்தையும் அதன் ஒருமைப்பாட்டையும் ஏற்படுத்துவதற்கு சமயம் முக்கியமானது அல்ல என்று டாக்டர் கார்னர் (Dr. Garner) போன்ற அரசியலறிஞர்கள் கருதுகிறார்கள்[8]. சமயப் பொறை யுடைமை, சமயச் சார்பற்ற நாடுகளின் தோற்றம், சமயச் சுதந்திரம் ஆகியவற்றின் காரணத்தால் ஒருமைப்பாட்டை ஏற் படுத்துவதில் சமயத்திற்கு இருந்த முக்கியத்துவம் குறைந்து விட்டது. மேலும் தற்கால அரசுகளில் சமயம் அரசியலிலிருந்து பிரிக்கப்பட்டுள்ளது. சமய வேறுபாடு உடைய மக்கள் வாழும் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும், சுவிட்சர்லாந்து நாட்டிலும், கனடா நாட்டிலும், இந்தியாவிலும் ஒருமைப்பாட்டையும் தேசிய உணர்வையும் காண்கின்றோம். எனவே, தேசிய இனத்தைத் தோற்றுவிப்பதில் சமயத்தின் ஆதிக்கம் வலுவிழந்துள்ளது.

**நில அமைப்பில் ஒருமைப்பாடு**

தேசிய இனப்பற்றை உருவாக்குவதில் நில அமைப்பின் பங்கு முக்கியமானதாகும். பூகோள ரீதியில் நாட்டின் நிலப்பரப்புகள் அருகில் இணைந்திருக்குமானால் நாட்டிணைப்பை எளிதில் ஏற் படுத்தும். பழக்க வழக்கங்களும், மரபுகளும், பண்பாடுகளும், அரசியல் வேட்கைகளும், அனுபவங்களும் குடிமக்களிடையே ஒன்றுபட்டனவாகவும், பொதுத்தன்மையுடையனவாகவும் இருக் கும். இவைகள் மக்களை ஒருங்கிணைக்கும். பாகிஸ்தானும் வங்காள தேசமும் நில அமைப்பில் அருகில் இல்லாததால் பாகிஸ்தானி லிருந்து வங்காள தேசம் பிரிந்ததை நாம் அறியலாம். ராம்சேமூர்

[8] Dr. Garner: 'While Community of religion has in some cases been a powerful factor in the development of nationality and in the strengthening of the bonds of national unity and while in other cases the absence of it has constituted to the disruption of the state, it is no larger, thanks to the modern spirit of toleration, an essential or important element of determining nationality.'

(Ramsay Muir) என்பவரது கூற்றுப்படி, மிகச்சிறந்த தேசமும், தேசிய இனத்தினரும் நில அமைப்பில் ஒருமைப்பாட்டை உடையவர்களாக இருக்கின்றனர்.[9]

விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாக, போக்குவரத்துச் சாதனங்களும் செய்திச் சாதனங்களும் மிகவும் வளர்ந்துள்ளதால் நில அமைப்பின் ஆதிக்கம் குறைந்துள்ளது. உலக நாடுகளிடையே உள்ள இடைவெளிகள் குறுகியும் மறைந்தும் வருகின்றன; பரந்து விரிந்த கண்டங்களை நாடுகளாகக் கொண்ட தற்கால அரசுகள் ஒருமைப்பாட்டுடன் இருப்பதையும், திறமையான நிர்வாகத்தை நடத்துவதையும் காண்கிறோம்.

### வரலாற்றுப் பொது மரபு

வரலாற்றுப் பொது மரபு தேசிய இன உணர்வை ஏற்படுத்துவதில் இன்றியமையாதது என ராம்சேமூர் (Ramsay Muir) கூறுகிறார்.[10] ஒரு நாடு பெற்ற வெற்றிகளும், அஃது அடைந்த துன்பங்களும், நாட்டின் பெருமையும் அதன் சிறுமையும் வரலாற்றில் காணப்படுகின்றன. ஏற்பட்ட துன்பமும் இன்பமும் தம்முடையது என எண்ணும் போது நாட்டின் உணர்வு தோன்றி வளர்கிறது. நம் நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்ட மகாத்மாகாந்தி போன்ற தலைவர்களை எண்ணும்போதும், கட்டபொம்மன் போன்றவர்களின் கதைகளைக் கேட்கும்போதும் நாட்டுணர்வும், நாட்டினப் பற்றும் தோன்றுகிறது. இராஜ ராஜனின் ஆலயங்களைக் காணும் போதும், ஔவையார் பாடல்களைக் கேட்கும்போதும் தமிழர் என்ற நாட்டின உணர்வு ஒருமைப்பாடு அடைவதைக் காணலாம்.

### பொது அரசாங்கம்

ஓர் அரசாங்கத்தின் கீழ் வாழும் மக்கள் வேறுபாடுகள் உடையவர்களாயினும் நாளடைவில் அவர்களிடையே தேசிய உணர்வு தோன்றும். பல்வேறு தேசிய இன மக்களும் அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசாங்கத்தின் கீழ் வாழ்ந்தனர். இது பொது அரசாங்கமாகத் திகழ்ந்தது. பொது அரசாங்கத்தின் கீழ் வாழ்ந்த

[9] Ramsay Muir: 'The most clearly marked nations have commonly enjoyed a geographical unity, and have often used their nationhood in part of this fact.'

[10] Ramsay Miur: 'Common historical traditions embrace a memory of suffering endured and victories won in common, expressed in song and legend, in the dear names of great personalities that seem to embody in themselves the character and ideals of the nation, in the names also of sacred places where in the national memory is enshrined.'

பல்வேறுபட்ட மக்களிடையே நாட்டின உணர்வு தோன்றி வளர்ந்தது. ஆனால், இந்தியர்கள் ஆங்கிலேயப் பொது அரசாங்கத்தின் கீழ் வாழ்ந்தும் நாட்டின உணர்வு தோன்றவில்லை. நம் அரசாங்கம் என்ற பற்று ஏற்படவில்லை. ஏனெனில், ஆங்கிலேய அரசாங்கம் நாட்டினத்தினரின் நலனையே கருதியது. இந்திய மக்களின் நலனை நிராகரித்தது. ஆங்கிலேய அரசாங்கத்தின் மீது ஏற்பட்ட வெறுப்பு இந்தியத் தேசிய இனத்தைத் தோற்றுவித்து ஒருமைப்படுத்தியது. எனவே, பொது அரசாங்கம் பொறையுடைமையுடன் மக்கள் நலன் நாடும் அரசாங்கமாக இருந்தால் மக்களிடையே வேறுபாடுகள் இருப்பினும், இன உணர்வு தோன்றித் தேசிய இனமாக வளரும்.

## அரசியல் பொது வேட்கை

அரசியலில் பொது வேட்கையும் நாட்டு மக்களைத் தேசிய இனமாக்கும். மக்களிடையே வேறுபாடுகளிருப்பினும், அரசியலில் பொது நோக்கமும், கவர்ச்சியும், ஆர்வமும் இருக்குமானால் வேறுபாடுகள் மறைந்து ஒருமைப்பாடு தோன்றும். அமெரிக்க நாட்டில் பல்வேறு இனமக்கள் குடியேறியிருந்தனர். இவர்களுக்கு இருந்த சுதந்திர வேட்கையால் வேறுபாடுகளைக் கருதாது ஒன்றிணைந்து ஆங்கிலேயருடன் போரிட்டுச் சுதந்திரம் பெற்றனர். ஆங்கிலேயருக்கு எதிரான சுதந்திரப் போராட்டத்தில் வேறுபட்ட இனமுள்ள இந்திய மக்கள் ஒருங்கிணைந்து ஓரினமாகச் செயலாற்றினர். ஏனெனில், இந்தியாவின் சுதந்திரம்பொது அரசியல் வேட்கையாக அமைந்திருந்தது. எனவே, அரசியலில் பொதுவேட்கை மக்களை ஒருமைப்பாடு உடையவர்களாக்கித் தேசிய இனத்தைத் தோற்றுவித்து வலுப்படுத்தும்.

## பொது நலம்

மக்களின் பொதுநலத்தை உடைய பாதுகாப்பு நடவடிக்கைகளும், பொதுப்பொருளாதார நடவடிக்கைகளும் நாட்டுணர்ச்சியைத் தூண்டும். சீன ஆக்கிரமிப்பின் போதும், பாகிஸ்தான் ஆக்கிரமிப்பின் போதும், இந்திய மக்களிடம் நாட்டுணர்ச்சி மேலோங்கி இருந்ததை அறியலாம். ஏனெனில், இவ்வாக்கிரமிப்புகளை முறியடிக்க எடுத்துக் கொண்ட பாதுகாப்பு நடவடிக்கைகளில் பொது நலம் இணைந்திருந்தது. பொருளாதாரத்துறையில் கிடைத்த நலத்தின் காரணமாக ஸ்காட்லாந்து இங்கிலாந்துடன் இணைந்தது. பேராசிரியர் லஸ்கியின் (Laski) கருத்துப்படி, தேசிய இனம் ஆன்மீக அடிப்படையையும், பற்று அடிப்படையையும், மனஇயல்

அடிப்படையையும் கொண்டதாகும்[11]. எனவே, மேற்கண்ட தேசியஇனத்தின் அடிப்படைக் கூறுபாடுகள் இல்லாதிருப்பினும் வலிமையுள்ள பற்றும், ஆன்மீக ஒருமைப்பாடும் இருந்தால் வேறு பட்ட இனங்களும் தேசிய இனமாக அமைய முடியும்.

**தேசிய இனமும் நாடும் – வேறுபாடுகள்**

பேராசிரியர் சிம்மரன் (Zimmern) தேசியஇனத்திற்கும் நாட்டிற்கும் உள்ள வேறுபாட்டை வகைப்படுத்தியுள்ளார்.

தேசிய இனம் சுய நோக்குடையது. உளவியல் அடிப்படையில் அமைந்தது. அது மனத்தின் நிலையைக் காட்டும். ஆன்மீக உணர்வைக் கொண்டது. செயல், சிந்தனை, உணர்வு ஆகியவைகளின் அடிப்படையிலானது.

ஆனால், நாடு புற நோக்குடையது. அரசியல் அடிப்படையில் அமைந்தது. சட்டத்தால் நிறுவப்பட்டது. மறவலியை ஆதாரமாகக் கொண்டது. நாகரிக வாழ்க்கைக்கு நாடு தவிர்க்க இயலாத ஒன்றாகும்.

ஒரு நாட்டில் பல இனங்கள் இருக்கலாம். அமெரிக்க நாட்டில் நீக்ரோ இனத்தவரும், ஆங்கிலேயர்களும், ஜெர்மானியர்களும் உள்ளனர். அரசை அமைக்காமலும் தேசிய இனம் இருக்கலாம். யூதர்களுக்கு இஸ்ரேல் நாடு கிடைக்கும் வரையில் அவர்கள் நாட்டை அமைக்கவில்லை. நாடு ஒன்று அமைக்கப்படாவிடினும் யூதர்கள் தேசிய இனமாகவே கருதப்பட்டனர். ஓர் இனம் தனிஒரு நாட்டை நிறுவினால் அது தேசம் (Nation) ஆகும். தேசத்தில் ஒரே தேசிய இன மக்கள்( Nationality) இருப்பதால் சிறப்புடையதாகக் கருதப்படுகிறது.

**தேசிய இனமும் தேசமும்—வேறுபாடுகள்**

தேசிய இனமும் தேசமும் வேறுபடுத்தப்படவேண்டும். பொது மரபாலும் பொது மொழியாலும் இணைந்த மக்களை லீக்காக் (Leacock) இனநாட்டினர் என்று கூறுகிறார். ஆனால், தற்போது தேசம் என்பது அரசியல் தொடர்புடையதாக்கப்பட்டுள்ளது. சுயாட்சி அமைத்துள்ள தேசிய இனத்தார் தேசம் எனப்படுகின்றனர். தேசம் என்பது நாட்டினும் அதிகப் பொருள் செறிவுடையது.

பேராசிரியர் பிரைசின் (Bryce) கருத்துப்படி, கருத்தாலும், மொழியாலும், மரபாலும் இணைக்கப்பட்ட மக்கள் தேசிய இனத்

[11] Laski : 'Nationality is essentially spiritual in charecter, a sentiment, the will of the people to live together.'

தார் ஆவர். இத்தேசிய இனத்தார் சுதந்திரம் உள்ளதோ, அல்லது சுதந்திர வேட்கையுள்ளதோவான அரசியல் நிறுவன அமைப்பை ஏற்படுத்திக்கொண்டு வாழும்போது தேசமாகின்றனர்.

## முக்கிய வினாக்கள்

1. கீழ்க்கண்டவைகளிடையே வேறுபாடு காட்டி அவைகள் ஏன் வேறுபடுத்தப்பட வேண்டும் என்பதையும் கூறுக.

(அ) நாடும் அரசும்

(ஆ) நாடும் சமுதாயமும்

(இ) நாடும் சங்கமும்

(ஈ) நாடும் தேசமும்

(உ) நாடும் தேசிய இனமும்

(ஊ) தேசமும் தேசிய இனமும்

2. தேசிய இனத்தின் முக்கியக் கூறுபாடுகளைக் கூறி அவைகளின் இன்றியமையாமையை ஆய்க.

3. தேசிய இன நாடு நிறுவுவதில் உள்ள இடர்ப்பாடுகளைக் கூறி அவைகள் எவ்விதம் தவிர்க்கப்படுகின்றன என்பதையும் காட்டுக.

# 3. அரசியல் அமைப்புக்குட்பட்ட அரசின் தோற்றமும் வளர்ச்சியும்

## (Origin and Growth of the Constitutional State)

[கிரேக்க நாட்டில் அரசியல் முறைமைக்குட்படுகை — ரோமானிய அரசியலமைப்பு — இடைக்காலத்தில் அரசியல் முறைமைக்குட்படுகை— மறுமலர்ச்சி அரசு— இங்கிலாந்தில் அரசியல் முறைமைக்குட்படுகை — அமெரிக்க, பிரான்சு புரட்சிகளின் விளைவு — தேசிய உணர்ச்சியும் முற்போக்குச் சீர்திருத்தமும் — அரசியல் முறைமைக்குட்படுகையும் முதல் உலகப்போரும்—அரசியல் அமைப்பிற்குட்பட்ட அரசாங்கத்திற்கு எதிர்ப்பு— இரண்டாம் உலகப்போரின் விளைவுகள்.]

அரசியலமைப்புகள் பழமையும் புதுமையும் கலந்தனவாகும். பழமைக்கு எடுத்துக்காட்டுகளாகக் கிரேக்க ரோமானிய நாடுகளையும், புதுமைக்கு எடுத்துக்காட்டுகளாகத் தேசிய உணர்ச்சியையும், பிரதிநிதித்துவ மக்களாட்சியையும் கொண்டுள்ள தற்கால நாடுகளையும் கூறலாம். அரசியலமைப்புகளின் தோற்ற வரலாற்றையும், வளர்ச்சிப் படிகளையும் காணுதல் முக்கியமாகும்.

### கிரேக்க நாட்டில் அரசியல் முறைமைக்குட்படுகை

நாட்டுப்புற சூழ்நிலைகளில் இருந்து கிரேக்க நகர நாடுகள் தோன்றின. கிரேக்கக் குடும்பங்கள் கிராமங்களில் இருந்தன. அக்கிராமத்தார் அனைவரும் ஒரு தலைவனின் கீழ் வாழ்ந்தனர். விளைநிலங்கள் கிராம மக்களின் பொதுவுடைமையாகவே கருதப்பட்டன. அனைவரும் ஒரேவித வழிபாடு மேற்கொண்டனர். கிராமமே நகர நாட்டின் மூலமாய் அமைந்தது. நாட்டின் இலக்கணத்தைக் கூற வந்த அரிஸ்ட்டாட்டில் குடும்பங்களின் இணைப்பும், கிராமங்களின் இணைப்பும் நாடாகும் என்கிறார்.[1]

[1] C. F. Strong: 'The state to the Greek was his whole scheme of association, a city where all his needs, material and spiritual, were satisfied, so that when Aristotle, for example, used the term state he comprehended with in it all that we cannot by the terms state, society, economic organisation and even religion.'

கிராமங்கள் பாதுகாப்பை முன்னிட்டும், வாணிபம், பொருளா தார முன்னேற்றத்திற்காகவும், வலிமை மிக்க மன்னர்களின் வற் புறுத்தலாலும் ஒருங்கிணைந்து நகர நாடுகளாயின. குடும்பங் களின் தனி வழிபாடுகள் கைவிடப்பட்டு நகரப் பொது வழிபாடு ஏற்றுக் கொள்ளப்பட்டது. கிரேக்க நகர நாடுகள் பல தோன் றின. ஸ்பார்டா நகர நாடும், ஏதென்ஸ் நகர நாடும் குறிப்பிடத் தக்கனவாகும்.

ஸ்பார்டா (Sparta) நகர நாடு ஐந்து கிராமங்களைக் கொண்ட தாகும். ஸ்பார்டா அரசியலமைப்பில் அரசன், மூத்தோர் அவை (Council of Elders), மக்கள் அவை (Assembly of People) ஆகிய மூன்று நிறுவனங்கள் இருந்தன. சம அதிகாரம் படைத்த இரண்டு மன்னர்கள் இருந்தனர். ஒருவருக்கொருவர் தடையாக இருந்து அதிகாரச் சம நிலையைத் தோற்றுவித்தனர். அரசாங்கப் பணிகள், சமயச் சடங்குகள், போர் நடவடிக்கைகள், முறை செய்தல் ஆகியன மன்னர்களின் கடமைகளாக இருந்தன. இரண்டு மன்னர்களும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இருபத்தெட்டு அங்கத்தினர்களும் மூத்தோர் அவையில் அங்கம் வகித்தனர். மக்கள் சபையில் குடிமக்கள் அனைவரும் அங்கத்தினராய் இருந் தனர். சபைகள் அரசியல் விவகாரங்களைத் தீர்மானித்தன. ஐவரைக் கொண்ட குழுவால் நீதி, நிருவாகப் பணிகள் கண் காணிக்கப்பட்டன.

ஏதென்ஸ் (Athens) நகர நாட்டில் மேன்மக்கள் சபைக்கும், மக்கள் சபைக்கும் கட்டுப்பட்ட மன்னர் இருந்தார். மக்கள் சபை யில் தகுதி எய்திய அனைவரும் உறுப்பினர்களாக இருந்தனர். ஐந்நூறு பேர் கொண்ட சபையும் இருந்தது. இதன் அங்கத் தினர்கள் குடவோலை மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஏதென்ஸ் நகர நாடு முடியாட்சியிலிருந்து மேன்மக்கள் ஆட்சியையும், மேன்மக்கள் ஆட்சியிலிருந்து குடியாட்சியையும் பின்பற்றியது, அரசியல் வளர்ச்சியைக் காட்டுகிறது.

கிரேக்க நகர அரசுகளில் மூன்று முக்கியத் தன்மைகளைக் காணலாம். பரப்பளவில் மிகச் சிறியனவாகவும், சுதந்திரத்தை யும் மக்களாட்சியையும் விரும்பிப் போற்றியனவாகவும், குடி மக்கள் அனைவரும் அரசாங்கச் செயல்களில் ஈடுபடுமாறும் அமைந் திருந்தன. நகர அரசு தற்கால ஒரு மாவட்டத்தின் பரப்பளவே இருந்தது. அதன் மக்கள்தொகை ஒரு நகராட்சியின் மக்கள் தொகையினும் குறைவானதாகும். அரசியல் சுதந்திரமும், மக்க ளாட்சியும், நேரிடைக் குடியாட்சி முறையும் நகர அரசுகளில்

நிலவின. குடிமக்கள் அரசாங்க அலுவல்கள் அனைத்திலும் பங்கு கொண்டனர். கிரேக்கக் குடிமகன் ஆட்சிமன்ற உறுப்பினனாகவும், நீதிபதியாகவும், போர் வீரனாகவும் விளங்கினான்.

தற்காலத்தில் வெறுக்கப்படும் அடிமை முறை கிரேக்க நாட்டில் நிலவியது. அத்தியாவசியப் பண்டங்களை இவ்வடிமைகளே உற்பத்தி செய்தனர். இவர்கள் குடிமக்களாகக் கருதப்படவில்லை. அரசியல் பிரிவுணர்ச்சி நிலவியது. அரசாங்கம் சமூக வாழ்விலும், சமயத்துறையிலும், தனி மனித சுதந்திரத்திலும் தலையிட்டது. நகர அரசில் அரசாங்கத்திற்கும், அரசிற்கும், பொதுவாழ்விற்கும், தனிவாழ்விற்கும் வேறுபாடுகள் கிடையாது.

இனத்தாலும், சமயத்தாலும், மொழியாலும், ஒருமைப்பாடுடைய மக்கள் நகர அரசுகளில் வாழ்ந்தனர். நகர அரசுகள் சிறியனவாகவும், அரசாங்க நடவடிக்கைகளில் மக்கள் நேரடியாகப் பங்கு கொள்ளும் பாணியிலும் அமைந்தன. ஆனால், மாறுபடும் சூழ்நிலைக்கேற்ப மாற்றி அமைத்துக்கொள்ள இயலவில்லை. இது கிரேக்க அரசியலமைப்பின் பெருங் குறையாகும்.

### ரோமானிய அரசியலமைப்பு

ஆரம்பகாலத்தில் ரோம் ஒரு நகர அரசாகவே இருந்தது. இதில் குடியாட்சி நிறுவனங்கள் அமைந்திருந்தன. ரோம் பேரரசான பிறகும் இக்குடியாட்சி நிறுவனங்களின் அடையாளங்கள் அழியாமல் இருந்தன. பேராசிரியர் பிரைசின் கூற்றுப்படி, 'டைபர் நதிக்கரையில் அமைந்த குடியரசு, சரே அல்லது ரோட் தீவு இவற்றின் அளவேயுள்ள நாட்டுப்புற நிலப்பகுதி சூழ்ந்த ஒரு நகரம். அதன் வீழ்ச்சி வரையில் அப் பேரரசின் அமைப்பில் அச் சிறு குடியரசு தோன்றுவதற்குக் காரணமான நிறுவனங்களின் அடையாளங்கள் அழியாமல் இருந்தன.'[2]

ரோமானியக் குடியரசு அரசாங்கத்தில் இரு கான்சல்கள் ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஒருவரின் செயலை மற்றவர் தடுக்கலாம். சமநிலைத் தலையீடு (Checks and Balances) நடைமுறையில் இருந்தது. செனட் சட்டமியற்றும் அதிகாரங்களைக் கொண்டிருந்தது. மூன்று வகையான மக்கள் மன்றங்கள் இருந்தன. கான்சல்கள் முடியாட்சியையும், செனட் உயர் குடியாட்சியையும், மக்கள் மன்றங்கள் குடியாட்சியையும் பிரதிபலிப்

[2] Bryce: 'But if the Republic on the Tiber, a city with a rural territory round it no bigger than Surrey or Rhode Island grew a world Empire and the frame work of that Empire retained till its fall traces of theinstitutions under which the like Republic had arisen.'

பனவாக அமைந்தன. ரோமானிய அரசியலமைப்பு முடியரசு, உயர்குடியாட்சி, மக்களாட்சி ஆகிய மூன்றின் இயல்புகளும் ஒருங்கே இணைந்த ஒரு கூட்டு அமைப்பாக (Mixed Constitution) விளங்கியமை குறிப்பிடத்தக்கது.

ரோமில் குடியாட்சி மாற்றப்பட்டு ஜூலியஸ்சீசர் கி. மு. 48 முதல் வல்லாட்சியாளரானூர். ரோமானியப் பேரரசு தோன்றியது. அகஸ்டஸ், நீரோ, ஜெஸ்டீனியன் போன்ற பேரரசர்கள் பலர் தோன்றினூர்கள். ஜெஸ்டீனியனின் சட்டத் தொகுப்புகளான இன்ஸ்டிட்யூட் (Institute), டைஜெஸ்ட் (Digest) ஆகியவைகளில் பேரரசின் அதிகாரக் கோட்பாட்டைக் காணலாம். 'மக்களே உரிமைகளின் இருப்பிடம்; மக்களிடமிருந்தே மன்னர் உரிமைகளைப் பெற்றுள்ளார்; மக்களுக்காக மன்னர் செயல்படுகிருர்' ரோமனியச் சட்டத்தை (Roman Law) இப்பேரரசரே தொகுத்தார்.

ரோமானிய அரசியலமைப்பிலிருந்து தற்கால உலகம் பல பயன்களைப் பெற்றுள்ளது. நவீன காலச் சட்ட முறைகள் ரோமானியச் சட்ட முறைகளை அடிப்படையாகக் கொண்டனவாகும். ஐரோப்பாவின் சட்டத்துறையில் ரோமானியச் சட்டங்கள் மிகுந்த செல்வாக்குக் கொண்டுள்ளன. ஒற்றுமையுணர்ச்சியின் தோற்றத்திலும் ரோமானியச் செல்வாக்கைக் காணலாம். ரோமானியர்கள் ஒற்றுமையிலும் ஒழுக்கத்திலும் பற்றுடையவர்களாக இருந்தார்கள். இந்த ஒற்றுமைக் கருத்து சர்வதேசச் சங்கத்தையும், ஐக்கிய நாடுகளின் ஸ்தாபனத்தையும் தோற்றுவிக்க அடிப்படையாய் அமைந்தது. ரோமானியர்களின் சட்டமுறை இறைமைக் கருத்து (Legal Sovereignty) மக்களாட்சிக் கோட்பாட்டின் ஆதாரமாய் விளங்கியது. கலப்பு அமைப்புமுறை, சமநிலைத் தலையீட்டு முறை, இயற்கை நியதி (Natural Law) ஆகியனவும் ரோமானியர்களின் நிறுவனங்களே ஆகும். இவைகள் தற்கால அரசியலமைப்புகளில் ஆதிக்கம் கொண்டுள்ளதை நாம் காணலாம்.

### இடைக்காலத்தில் அரசியல் முறைமைக்கு உட்படுகை

இடைக்காலத்தில் புனித ரோமானியப் பேரரசு, நிலமானிய முறை, திருச்சபை ஆகியன செல்வாக்குப்பெற்று அரசியலமைப்புகளில் ஆதிக்கம் செலுத்தின. புனித ரோமானியப் பேரரசை மகா சார்லஸ் கிபி 800-ல் நிறுவினூர். பழைய ரோமானியப் பேரரசின் அரசியலமைப்பு முறை கைவிடப்பட்டுப் புதியதோர் முறை வகுக்கப்படும் முன் புனித ரோமானியப் பேரரசு சிதறுண்டது. மரபுரிமை காரணமாகப் பேரரசு கூறுபோடப்பட்டது; மேலும் நார்ஸ் இனத்தார் படையெடுப்புப் பேரரசைச் சீர்குலைத்தது.

மத்திய காலத்தில் நிலமானிய முறை ஐரோப்பா முழுவதிலும் பரவியிருந்தது. இம் முறை சமூக, அரசியல் முறையாக நிலவியது. ஓர் அரசில் உள்ள நிலங்கள் பிரிக்கப்பட்டு பிரபுக்களுக்கு அளிக்கப்பட்டிருந்தன. மக்கள் பிரபுக்களின் நிலப்பகுதிகளில் வாழ்ந்தனர். ஒவ்வொருவனும் ஒரு நிலப்பிரபுவின்கீழ் இருக்கவேவண்டுமென்பது பொதுக் கொள்கையாயிற்று. நிலப் பிரபுக்கள் அரசனினும் அதிகாரம் மிக்கவர்களாக விளங்கினர். மத்திய காலத்தில் நிலவிய குழப்ப நிலைக்கும், தற்காலத்திலிருக்கும் ஒழுங்கான அமைப்பிற்கும் இணைப்பாக நிலமானிய முறை விளங்கியது.

பிரபுக்களின் ஆதிக்கத்தை ஒடுக்கப் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. வலிமை மிக்க அரசர்கள் பிரபுக்களிடமிருந்த அதிகாரத்தைத் தாங்களே பெற முயன்றனர். இங்கிலாந்திலும் பிரான்சிலும் பிரபுக்களின் செல்வாக்கு மங்கியதால் நாட்டுணர்ச்சி, பிரதிநிதித்துவ மக்களாட்சிக் கோட்பாடுகள் தோன்றின. 1265-ல் முதல் பாராளுமன்றம் இங்கிலாந்தில் கூட்டப்பட்டது. பிரான்சில் 1302-ல் அத்தகையதோர் அவை தோன்றியது. இவைகள் பிரதிநிதித்துவ முறைக்கு அடிகோலின. இங்கிலாந்திற்கும் பிரான்சிற்கும் நடைபெற்ற நூற்றுண்டுப் போர் இவ்விரு நாடுகளிடையே நாட்டுணர்ச்சியைத் தோற்றுவித்தது. ஸ்பெயின் நாட்டில் முகமதிய மூர்களுக்கு எதிராக நடந்த போராட்டத்தில் தேசிய உணர்ச்சி உருவானது.

மத்தியகாலத்தின் பின்பகுதியில் அரசர்களுக்கும் போப்பாண்டவருக்கும் நடைபெற்ற போராட்டத்தில் போப்பாண்டவரின் செல்வாக்குக் குறைக்கப்பட்டது. திருச்சபையின் நிர்வாக நிறுவனமாகிய பொதுச்சங்கத்தில் பிரதிநிதித்துவ முறையும் தேசியப் பிரிவுகளும் திணிக்கப்பட்டன. திருச்சபையின் அரசாங்க அமைப்பு மாற்றியமைக்கப்பட்டது.

பதுவா மார்சிலியோ (Marciglio of Padua), ஒக்காம் வில்லியம் (William of Ockham), ஜான் கெர்சன் (John Gersen), குயூஸ் நிக்கோலாஸ் (Nicholas of Cues) ஆகியோர் இறைமை, நாட்டுணர்ச்சி, பிரதிநிதித்துவம் பற்றி ஆய்ந்து வருங்கால அரசியலமைப்பை முன்னறிவித்தனர்.

**மறுமலர்ச்சி அரசு**

15ஆம் நூற்றுண்டில் பழங்காலப் பண்பாடுகளும், கிரேக்க ரோமானியக் கலைகளும் இலக்கியங்களும் புத்துணர்ச்சி பெற்றன. இவைகள் பொதுவாக மறுமலர்ச்சி (Renaissance) எனப்படும்.

மத்திய காலத்தில் தோன்றி வளர்ந்து வந்த குடியாட்சி முறைகளும் நிறுவனங்களும் மறுமலர்ச்சியின் காரணமாகச் சீர்குலைக்கப்பட்டன. மறுமலர்ச்சிக்கால அரசியல் வல்லுனர்கள் பண்டைக்கால அரசியல் தத்துவத்தின் ஒரு பகுதியையே புரிந்துகொண்டனர். வெளியிறைமையை மட்டும் அறிந்துகொண்டு நாட்டின் பாதுகாப்பையும் அரசாங்கத்தின் வலிமையையும் போற்றினர்கள். ஆனல், கிரேக்க நாட்டில் நிலவிய சுயாட்சியையோ தனி மனிதனின் உரிமையையோ மறுமலர்ச்சிக்கால அரசியல் அறிஞர்கள் கருத்தில்கொண்டார்களில்லை. மேலும்அரசியலில் இவர்கள் கவனம் கொண்டார்களே ஒழிய அறநெறியில் அக்கறை காட்டவில்லை. இதன் விளைவாகச் சுயாட்சி நிறுவனங்கள் அழிக்கப்பட்டன. வல்லாட்சி வளர்ந்தது. அரசியலில் அறக்கொள்கைகள் கைவிடப்பட்டன. மறுமலர்ச்சியின் புரட்சிக் கொள்கையுடைய அரசியல் அறிஞரான மாக்கிவல்லியின் 'இளவரசன்' (Prince) என்ற நூலில் அறச்சார்பின்மையைக் காணலாம்.

16ஆம் நூற்ருண்டில் மதச் சீர்திருத்தங்கள் (Reformation) தோன்றின. மார்டின்லூதர் போப்பாட்சியைத் தாக்கினர். போப்ஆண்டவரின் செல்வாக்குக் குறைக்கப்பட்டது. இதன் விளைவாக மன்னர்களின் செல்வாக்கு உயர்ந்தது. மன்னர் அரசாங்கத்தின் தலைவராகவும், சமயத்தின் தலைவராகவும் மாறினர். அறிவுசான்ற வல்லாட்சி (Enlightened Despotism) என்ற முடியாட்சி முறை தோன்றியது. இங்கிலாந்தில் எட்டாம் ஹென்றி, முதலாம் எலிசபெத் போன்றவர்களும், பிரான்சில் பதினன்காம் லூயியும், ரஷ்யாவில் மகா பீட்டரும், பிரஷ்யாவில் மகா பிரடரிக்கும் வல்லாட்சியாளர்களாக அமைந்தனர்.

மறுமலர்ச்சி மதச் சீர்திருத்தம் ஆகியவைகளின் காரணமாக அரசியல் முறைமைக்குட்படுகை தாமதமாயிற்று. பல புரட்சிகள் நடைபெற வேண்டியிருந்தன.

## இங்கிலாந்தில் அரசியல் முறைமைக்கு உட்படுகை

மறுமலர்ச்சிக் காலத்திலும் மதச் சீர்திருத்த காலத்திலும் இங்கிலாந்தில் தோற்றுவிக்கப்பட்ட வல்லாட்சி நிலைபெறவில்லை. பாராளுமன்றத்தின் ஆதிக்கம் வளர்ந்துகொண்டிருந்தது. ட்யூடர் மன்னரான எட்டாம் ஹென்றியின் மதச்சீர்திருத்தப் பாராளுமன்றம் மன்னரின் வல்லாட்சியைப் பொறுத்துக்கொண்டு அடிமையாக இருந்தது. ஆனல், முதலாம் எலிசபெத் காலத்தில் வல்லாட்சிக்கு எதிராகப் பராளுமன்றம் முணுமுணுக்கத் தொடங்கியது. மெக்காலேயின் கூற்றுப்படி, 'எட்டாம் ஹென்றியின்

அடிமைத்தனமான பாராளுமன்றம் முதலாம் எலிசபெத் காலத்தில் முணுமுணுக்கும் பாராளுமன்றமாகவும், முதலாம் ஜேம்ஸ் காலத்தில் கலகம் செய்யும் பாராளுமன்றமாகவும், முதலாம் சார்லஸ் காலத்தில் புரட்சிகரப் பாராளுமன்றமாகவும் வளர்ந்தது.

டியூடர்களின் வல்லாட்சிக்குப் பிறகு ஸ்டூவர்டு மன்னர்கள் ஆட்சி தொடங்கியது. முதலாம் ஜேம்ஸ் காலத்திலும், முதலாம் சார்லஸ் காலத்திலும் பாராளுமன்றத்திற்கும் மன்னனுக்கும் இடையருத போராட்டம் நடைபெற்றது. 1628ஆம் ஆண்டில் உரிமை விண்ணப்பத்திற்கு (Petition of Right) மன்னரின் இசைவு பெறப்பட்டது. பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டு முதலாம் சார்லஸ் பதினேரு ஆண்டு வல்லாட்சி நடத்தினர். பாராளுமன்றத்திற்கும் மன்னருக்கும் இடையே உள்நாட்டுப்போர் மூண்டது. மன்னர் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். இங்கிலாந்தில் குடியாட்சி நிறுவப்பட்டது.

1660 ஆம் ஆண்டில் முடியாட்சி மீண்டும் நிறுவப்பட்டது. ஆனல், இரண்டாம் சார்லசும், இரண்டாம் ஜேம்சும் தம் அரசை நிலைநாட்ட முயன்றனர். ஆனல், 1688 ஆம் ஆண்டில் நடந்த மாண்புறு புரட்சியால் இரண்டாம் ஜேம்ஸ் பதவி இழந்தார். அரசாங்கத்தின் அதிகாரம் மன்னரிடமிருந்து பாராளுமன்றத்திற்கு மாற்றப்பட்டது. உரிமைகள் மசோதா (Bill of Rights), படைக்கலகச் சட்டம் (Mutiny Act) ஆகியன இயற்றப்பட்டன. சட்டத்தின் ஆட்சிக் கொள்கை நிலைபெற்றது.

18ஆம் நூற்றுண்டில் ஆங்கிலம் அறியாத ஹனேவரிய மன்னர்கள் பதவிக்கு வந்தனர். முதலாம் ஜார்ஜ் அமைச்சரவைக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்கவில்லை. அமைச்சர்களில் ஒருவர் தலைமை தாங்கித் தலைமை அமைச்சர் ஆனர். அமைச்சரவை பாராளுமன்றத்திற்கும் பொறுப்பாகியது. அமைச்சரவை முறை மேலும் வளர்ந்தது.

இங்கிலாந்தின் அரசியலமைப்பு வளர்ச்சி வழக்காறுகளை அடிப்படையாகக் கொண்டதாகும். ஆவணமற்ற அரசியலமைப்பாக இருப்பதால் மாறும் சூழ்நிலைகளுக்கேற்ப வளைந்து கொடுக்கும் தன்மையுடையதாகும்.

**அமெரிக்க, பிரான்சுப் புரட்சிகளின் செல்வாக்கு**

18ஆம் நூற்றுண்டில் தோன்றிய அமெரிக்க சுதந்திரப் போர் என்னும் அமெரிக்கப் புரட்சியும், பிரான்சின் புரட்சியும் அரசியலமைப்பு வளர்ச்சியில் செல்வாக்குக் கொண்டுள்ளன.

குடியேற்ற நாடுகளைப் பிரான்சிடமிருந்து காப்பதற்காக இங்கிலாந்து ஏழாண்டுப்போரில் (1756-1763) ஏராளமாகச் செலவிட்டது. இச்செலவுகளை ஈடுசெய்வதற்காகக் குடியேற்ற நாடுகளின் மீது வரிவிதித்தது. 'பிரதிநிதித்துவம் இல்லையேல் வரி இல்லை', என்ற குரல் எழுப்பி அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் இங்கிலாந்துடன் போரிட்டு (1775-1783) வெற்றி பெற்றன.

1789-ல் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்புச் செயல் முறைக்கு வந்தது. இவ்வரசியலமைப்பு 1776ஆம் ஆண்டில் அமெரிக்கர்களின் சுதந்திர அறிக்கையின் அடிப்படையில் தோற்றுவிக்கப்பட்டது. சுதந்திர அறிக்கையின்படி, எல்லா மக்களும் சமமாகப் படைக்கப்பட்டுள்ளனர்; உரிமைகள் இறைவனால் அளிக்கப்பட்டன; அரசாங்கம் மக்களின் உரிமைகளைக் காப்பதாகும். ஆளப்படுவோரின் இசைவின் பேரிலேயே அரசாங்கம் அமையவேண்டும்; இதை மாற்றியமைக்கும் உரிமை மக்களுக்கு உண்டு.

அமெரிக்காவில் இணைப்பின் அடிப்படையில் கூட்டாட்சி அரசாங்கமுறை தோற்றுவிக்கப்பட்டது. மாநிலங்களிலும் மத்தியக் கூட்டாட்சி அரசாங்கத்திலும் ஆவணமுறை அரசியலமைப்புகள் தோன்றின. உரிமைகள் அரசியலமைப்பில் இடம் பெற்றன. புதியதோர் அரசியல் சமுதாயம் தோற்றுவிக்கப்பட்டது.

1889ம் ஆண்டில் பிரான்சு மக்கள் முடியாட்சிக்கு எதிராகப் புரட்சி செய்தனர். இப்புரட்சி சமுதாய ஒப்பந்தக் கோட்பாட்டின் அடிப்படையில் தோன்றியது. இயற்கைநிலையில்(State of Nature) இருந்து ஒப்பந்தத்தின் வழி அரசு தோன்றுகிறது. ஒப்பந்தத்தின்படி மக்கள் தங்கள் உரிமைகள் சிலவற்றைக் கைவிடுகின்றனர். மக்கள் கைவிடாத உரிமைகளை அரசாங்கம் காக்க வேண்டும். இந்த ஒப்பந்தத்தை மீறி அரசாங்கம் மக்களின் அனைத்துரிமைகளையும் நசுக்கினால் அரசாங்கத்திற்கு எதிராக மக்கள் புரட்சி செய்யலாம். சமுதாய ஒப்பந்தக் கோட்பாடு (Social Contract Theory) பற்றித் தாமஸ் ஹாப்ஸ் (Thomas Hobbes), ஜான் லாக் (John Locke), ரூஸோ (Rousseau) போன்றவர்கள் விளக்கம் தந்துள்ளார்கள்.

மக்களின் இறைமை, அரசாங்கத்தில் ஆளப்படுவோரின் இசைவு, நேரிடைக் குடியாட்சிமுறை ஆகியனவற்றை ரூஸோ வலியுறுத்தி உள்ளார். ரூஸோவின் இக்கோட்பாடுகளை பிரான்சின் 1789ஆம் ஆண்டின் மனித உரிமைப் பிரகடனத்திலும், 1791ஆம் ஆண்டின் அரசியல்மைப்பிலும் காணலாம். சுதந்திரம்,

சமத்துவம், சகோதரத்துவம் என்ற கோட்பாடுகள் அரசியலமைப்பில் ஆதிக்கம் கொண்டன.

1791ஆம் ஆண்டின் அரசியலமைப்பு நீடிக்கவில்லை. நெப்போலியன் போனப்பார்ட் பேரரசைத் தோற்றுவித்தார். பிரான்சின் வெற்றிகளின் காரணமாகத் தேசியஉணர்வு தோன்றி வளர்ந்தது. பிரான்சால் வெல்லப்பட்ட நாடுகளிலும் தேசிய உணர்வு தோன்றியது. எனவே, சுதந்திரம், சமத்துவம், சகோரத்துவம் போன்ற அரசியல் கோட்பாடுகளும் நாட்டுணர்ச்சியும் தோன்றுவதற்குப் பிரான்சுப் புரட்சி காரணமாய் இருந்தது.

**தேசியஉணர்வும் முற்போக்குச் சீர்திருத்தமும்**

நெப்போலியனின் வீழ்ச்சிக்குக் காரணம் நாடுகளிடையே தேசிய உணர்வாகும். ஐக்கிய ஐரோப்பாவைத் தோற்றுவிக்க முயன்றபோது நெப்போலியன் தோல்வி கண்டார். இத் தோல்விக்கு அடிப்படையாய் அமைந்த தேசிய உணர்வை 1815ஆம் ஆண்டில் வியன்னு உடன்படிக்கையைச் செய்தவர்கள் கவனிக்கவில்லை. இவர்கள் பெரும்பாலும் அரச குடும்பத்தைச் சார்ந்தவர்களாகவும், உயர்குடியினராகவும் இருந்தனர். எனவே, புரட்சியால் வீழ்த்தப்பட்ட பழைய வல்லாட்சிகளை மீண்டும் பல நாடுகளில் தோற்றுவித்தனர். முடியாட்சிக்கு எதிரான புரட்சிகள் நடக்கும்போதெல்லாம் அவைகளை நசுக்க முற்பட்டனர். வல்லாட்சியாளர்களால் நசுக்கவியலாத் தொழிற்புரட்சி என்ற புதியதோர் ஆற்றல் தோன்றியது.

18ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் புதிய பொறிகள் கண்டு பிடிக்கப்பட்டுத் தொழில் உற்பத்தியில் இயந்திரசக்தி பயன்படுத் தப்பட்டது; உற்பத்தி பெருகியது; முதலாளிகள் என்னும் நடுத்தர வகுப்பார் தோன்றினர்; வேளாண்மை வகுப்பாரின் ஆதிக்கம் அழிந்தது. தொழில் துறையிலும் பொருளாதாரத்துறையிலும் ஏற்பட்ட இம்மாறுதல்கள் அரசியலமைப்பில் ஆதிக்கம் கொண்டன. புதிய நடுத்தர வகுப்பார் அரசியலில் உரிமை வேண்டினர். 1832ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் சீர்திருத்தச் சட்டம் இயற்றப்பட்டு உரிமைகளை வழங்கியது. தொழிற்புரட்சியால் புதிய நகரங்கள் தோன்றின. நகரப்பகுதிகளுக்குப் பாராளு மன்றத்தில் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது. வாக்குரிமை விரிவாக்கப்பட்டது. இதனுல் இங்கிலாந்தில் முன்பே நிலவிய அமைச்சரவை முறை மேலும் வலுப்பெற்றது, தொழில்துறை முன்னேற்றத்திற்காக இறக்குமதிப் பொருள்களின் மீது புதிய வரிகள் விதிக்கப்பட்டன. தேசியஉணர்ச்சி படிப்படியாக உறுதியடைந்தது.

தொழிலாளர் இயக்கங்கள் தோற்றுவிக்கப்பட்டு வாக்குரிமைச் சீர் திருத்தங்கள் வற்புறுத்தப்பட்டன. 1867, 1884ஆம் ஆண்டுகளில் வாடகை வீட்டில் குடியிருப்பவர்களுக்கும் பயிர்த்தொழிலாளர் களுக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது.

தொழிற்புரட்சியின் காரணமாக அரசியலமைப்பில் முற்போக் குச் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டு உரிமைகள் வழங்கப்பட்டன. காரல் மார்க்சும் (Karal Marx) பிரடரிக் ஏன்செல்சும் (Frederick Engles) தங்கள் பொதுவுடைமை அறிக்கை (Communist Manifesto) என்னும் நூலில் சமதர்மக்கொள்கையைக் கூறி ஞர்கள். புதியதோர் அரசியல் சமுதாயத்தை நிறுவ உலகத் தொழிலாளர்கள் ஒன்றுபட அறைகூவல் விடுத்தார்கள்.

## அரசியல் முறைமைக்குட்படுகையும் முதல் உலகப் போரும்

1914ஆம் ஆண்டில் முதல் உலகப் பெரும் போரின் ஆரம்ப காலத்தில் ரஷ்யாவைத் தவிர இதர ஐரோப்பிய நாடுகளில் ஏதா வது ஒரு விதத்தில் அரசியலமைப்பிற்குட்படுகை நடந்தேறியது. ஆனுல், பிரதிநிதித்துவ மக்களாட்சி முறையும் தேசியமும் வளர வில்லை. சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பு அளிக்கப்படவில்லை. ஜெர்மனியில் ஜெர்மானியர் அல்லாத டேனர்களும், போலந்தியர் களும் வாழ்ந்தனர். ஆஸ்திரியா - அங்கேரியில் ஜெர்மானியர், மேகியர், தென்ஸ்லாவுகள், பொகிமியர், போலந்தியர், ருமேனியர் போன்ற பல நாட்டினத்தார் வாழ்ந்தனர். ரஷ்யாவில் பின்கள், எஸ்டோனியர், லெட்டுகள், லித்வேனியர், போலந்தியர், ருமேனி யர் ஆகியோர் இருந்தனர். பிரான்சும் இத்தாலியும் தாம் இழந்த தம் நாடுகளைத் திரும்பப் பெறவேண்டியிருந்தது. துருக்கியின் செல்வாக்கு ஐரோப்பாவில் நிலவியதைப் பால்கன் மக்கள் விரும்பவில்லை.

தேசிய உணர்ச்சியும் தன்னுட்சி வேட்கையும் 1914ஆம் ஆண்டின் முதல் உலகப் பெரும்போருக்குக் காரணங்களாய் அமைந்தன. இதை உலகில் மக்களாட்சியைக் காப்பதற்காக நிகழ்ந்த போர் என உட்ரோவில்சன் கருதிஞர். எனவே, போரின் முடிவில் நடந்த சமாதான உடன்படிக்கைகள் தேசியத்தையும் மக்களாட்சியையும் மதித்தன. செக்கோஸ்லோவாக்கியா (Czec-hoslovakia), போலந்து (Poland), பின்லாந்து (Finland), எஸ்தோ னியா (Estonia), லாட்வியா (Latvia), லிதுவேனியா (Lith-uania) போன்ற இறைமை பெற்ற புது அரசுகள் தோற்றுவிக்கப் பட்டன. ஆவண அரசியலமைப்புகள் ஏற்படுத்தப்பட்டன. மக்கள்

இறைமையும் தேசிய உணர்ச்சியும் செல்வாக்குப் பெற்றன. வாக்குரிமை அனைவருக்கும் அளிக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டது. பாராளுமன்ற அரசாங்கம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. நாட்டுணர்ச்சி வென்றது. வல்லாட்சியும் முடியாட்சியும் அகற்றப்பட்டுக் குடியாட்சி நிறுவப்பட்டது.

அரசியல் முறைமைக்குட்படுகையின் வளர்ச்சியைச் சர்வதேசச் சங்கத் (League of Nations) தோற்றத்திலும் காணலாம். தன்னாட்சி பெற்ற நாடுகள் சங்கத்தில் உறுப்பினராயினர். சண்டையைத் தடுப்பதும், சமாதானத்தை நிலைநாட்டுவதும் சங்கத்தின் நோக்கங்களாயின.

**அரசியலமைப்பிற்குட்பட்ட அரசாங்கத்திற்கு எதிர்ப்பு**

முதல் உலகப்போரின் விளைவாக தேசியம் செழித்தோங்கியது. பாராளுமன்றமுறைக் குடியாட்சி (Parliamentary type of Republic) அரசியலமைப்புகள் தோற்றுவிக்கப்பட்டன. ஆனால், இவைகள் சாசன வடிவிலேயே நின்றுவிட்டன. எனவே, அரசியலமைப்பிற்கு முரணான செயல்கள் தோன்றி அவற்றைப் பயனற்றதாக்கி விட்டன. 1918ஆம் ஆண்டு முதல் 1939 வரை குடியாட்சிக்கு எதிரான செயல்கள் தோன்றி வளர்ந்தன. குடியாட்சியின் தோல்விக்கும் எதிர்ப்பு சக்திகளின் செல்வாக்கிற்கும் பல காரணங்கள் உண்டு. அரசாங்கப் பிரச்சினைகளையும், மக்களின் தேவைகளையும் குடியாட்சிஅரசு வெற்றிகரமாக எதிர்நோக்கவில்லை. தன்னாட்சியின் மீதிருந்த நம்பிக்கை சிதறுண்டது. ஐரோப்பிய நாடுகளில், குறிப்பாக ஜெர்மனியிலும் இத்தாலியிலும் குடியாட்சி நிறுவனங்கள் மரபுகளின் அடிப்படையில் அமையவில்லை. மேலும், ஹிட்லர் முசோலினி போன்றவர்கள் தனித்திறமையுடைய தலைவர்களாக விளங்கியதால் மக்கள் அவர்கள் வழி சென்றதில் வியப்பில்லை.

அரசியல் முறைமைக்குட்படுகையை முதன்முதலில் ரஷ்யர்களே கைவிட்டனர். 1917ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் நடைபெற்ற ரஷ்யப் புரட்சியின் விளைவாகப் பாராளுமன்றமும் அமைச்சரவையும் கொண்ட குடியாட்சி நிறுவப்பட்டது. ஆனால், நவம்பர்த் திங்களில் நடந்த போல்ஷ்விக் புரட்சியால் பாராளுமன்றம் அழிக்கப்பட்டுத் தொழிலாளரின் குடியரசு நிறுவப்பட்டது. 1923-ல் பல சிறிய அரசுகள் ஒன்றிணைந்து சோவியத் சமதர்மக் குடியரசு தோற்றுவிக்கப்பட்டது. பொதுவுடைமைக் கட்சி தவிர இதரக் கட்சிகள் அழிக்கப்பட்டு ஒரு கட்சி வல்லாட்சி தோன்றியது.

1922 அக்டோபர்த் திங்களில் முசோலினி தனிச்சிறப்பு அதிகாரங்களைப் பெற்று இத்தாலியின் தலைவரானார். தனது பாசிசக்

கட்சி தவிர இதரக் கட்சிகளையும் நிறுவனங்களையும் அழித்தார். பாசிஸ்டுப் பேரவை (Facist Grand Council) செல்வாக்கு உடையதாக விளங்கியது. கூட்டுக்கழக அரசாங்கம் (Corporate State) தோற்றுவிக்கப்பட்டது. பிரதிநிதிகளின் அவைக்குப் பதிலாக பாஸிஸ்டுகள் கூட்டுக்கழகங்களின் அவை (Chamber of Fascios and Corporations) தோற்றுவிக்கப்பட்டது. குடியாட்சி முறையும் நிறுவனங்களும் அழிக்கப்பட்டு ஒரு கட்சி முறையும் அதன் வல்லாட்சியும் நிறுவப்பட்டன.

1933ஆம் ஆண்டில் ஹிட்லர் ஜெர்மனியின் ஆட்சியைக் கைப்பற்றினர். அரசியலமைப்பின் போர்வையிலிருந்து கொண்டே வல்லாட்சி நிறுவப்பட்டது. தனக்கு அளிக்கப்பட்ட தலைமை அமைச்சர் (Chanceller) பதவியையும், தனக்குப் பாரா்ளுமன்றத்தில் (Reich Stag) இருந்த செல்வாக்கையும் பயன்படுத்தி நாஜிக் கட்சி தவிர அனைத்துக் கட்சிகளையும் அகற்றினர். தலைவர் ஹிண்டன் பர்க் இறந்தவுடன் தலைவர் பதவியையும், தலைமை அமைச்சர் பதவியையும் ஹிட்லர் தாமே மேற்கொண்டார். மக்களின் உரிமைகள் பறிக்கப்பட்டன. ஒரு கட்சியின் வல்லாட்சி ஜெர்மனியில் நிறுவப்பட்டது.

1939ஆம் ஆண்டில் ஸ்பெயின் நாட்டிலும் தளபதி பிராங்கோவால் வல்லாட்சி நிறுவப்பட்டது. இதற்கு ஹிட்லரும், முசோலினியும் மறைமுக ஆ த ர வு காட்டினர்கள். கெமால் பாசா துருக்கியில் வல்லாட்சியை நிறுவினர். வல்லாட்சியாளர்களின் வன்முறைத் தாக்குதலின் காரணமாக 1939ஆம் ஆண்டில் இரண்டாம் உலகப் பெரும் போர் தோன்றியது.

**இரண்டாம் உலகப் போரின் விளைவுகள்**

இரண்டாம் உலகப் போர் பல விளைவுகளைத் தோற்றுவித்தது. முதலாவதாக, உலக அதிகார மையங்கள் இடம்பெயர்ந்துள்ளன. ஐரோப்பாவிலிருந்து அமெரிக்க ஐக்கிய நாடுகளிடமும், ரஷ்யாவிடமும்சென்றுவிட்டன.இரண்டாவதாக, நாஜி, பாசிச ஆட்சிகள் அழிந்து பாராளுமன்ற மக்களாட்சி முறை மீண்டும் நிலைநாட்டப்பட்டது. மூன்ருவதாகக் கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் ரஷ்யாவின் செல்வாக்குப் பெருகிப் பொதுவுடைமைக் கொள்கையைப் பரப்புவதற்கு வாய்ப்பு ஏற்பட்டது. போலந்து, ருமேனியா, செக்கோஸ்லாவியா, அங்கேரி, பல்கேரியா ஆகிய நாடுகளில் சோவியத் ரஷ்யாவின் கட்சி முறையும் ஆட்சி முறையும் ஆதிக்கம் கொண்டன. நான்காவதாக, மேற்கு ஐரோப்பிய நாடுகளில் குடியாட்சி முறை அரசாங்கம் நிறுவப்பட்டது. நெதர்லாந்து, பெல்ஜியம், நார்வே, டென்மார்க், மேற்கு ஜெர்மனி, ஹாலந்து ஆகிய

நாடுகளில் இங்கிலாந்து, பிரான்சு, அமெரிக்கா ஆகிய நாடுகளின் செல்வாக்கு வளர்ந்தது. ஐந்தாவதாக, ஏகாதிபத்தியக்கொள்கையும் குடியேற்றக்கொள்கையும் கைவிடப்பட்டுக் குடியேற்ற நாடுகளுக்குத் தன்னுட்சி வழங்கப்பட்டது. ஆறுவதாக, தூரக்கிழக்கு நாடுகளான ஜப்பானில் அமெரிக்கச் செல்வாக்குடன் மக்களாட்சியும், சீனுவில் மாசேதுங்கின் தலைமையிலான சீன மக்கள் குடியரசும் தோன்றின. இறுதியாகப் போரினுல் ஏற்படும் பேரழிவைத் தடுக்க ஐக்கிய நாடுகளின் சங்கம் ஏற்படுத்தப்பட்டது. ஸ்ட்ராங் அவர்களின் கூற்றுப்படி, 'நாம் வாழும் இந்த அணுயுகத்தில் மூன்ருவது உலகப்போர் மூளுமாயின் அது நாகரிகமடைந்துள்ள நமது சமூகத்தைச் சிதைத்து அழித்தே விடும்.'[8]

பண்டைக் கிரேக்கர் காலத்திலிருந்து இந்நாள் வரையான அரசியலமைப்பிற்குட்பட்ட அரசின் தோற்றத்தையும், அவைகளுக்கு ஏற்பட்ட சோதனைகளையும், அவைகளின் வெற்றிகளையும் கண்டோம். மனித சுதந்திரத்தின் முக்கியத்தையும், போரின் பேராபத்தையும் வரலாறு காட்டுகிறது.

## முக்கிய வினுக்கள்

1. நகர அரசுகள் என்ருல் என்ன? கிரேக்க நகர அரசுகளின் சிறப்பியல்புகள் யாவை?
2. ரோமானியர்களை நாம் ஏன் நினைவு கொள்கிருேம்?
3. நிலமானிய முறையைப் பற்றிய குறிப்பொன்று வரைக
4. மறுமலர்ச்சியாலும், மதச் சீர்திருத்தத்தாலும் ஏற்பட்ட அரசியல் விளைவுகள் யாவை?
5. சமுதாய ஒப்பந்தக் கொள்கை — குறிப்பு வரைக.
6. அமெரிக்கப்புரட்சி, பிரெஞ்சுப்புரட்சி, தொழிற் புரட்சி ஆகியவைகள் அரசியல் அமைப்புக்கு உட்படலில் எவ்விதச் செல்வாக்குக் கொண்டுள்ளன?
7. இரண்டு உலகப் பெரும் போர்களின் விளைவுகள் யாவை?

[8] C. F. Strong: 'If the failure of the League of Nations proved costly, a like failure on the part of the United Nations would be fatal, for civilised society would surely not survive a third holocaust under the conditions of the nuclear age in which we live.

# 4. அரசியலமைப்பு

## (Constitution)

### அ. அரசியலமைப்புச் சட்டம்

### (Constitutional Law)

[சட்டம் : சட்டத்தின் இலக்கணம்— சட்டத்தின் தன்மை — சட்டத்தின் தோற்றுவாய் — சட்டத்தின் வகைகள்.

**அரசியலமைப்புச் சட்டம் :** அரசியலமைப்பின் அவசியம்—அரசியலமைப்பின் பொருள்—அரசியலமைப்பின் இலக்கணம்—அரசியலமைப்பு அடிப்படைச் சட்டமாகும் —அரசியலமைப்பின் சிறப்பியல்புகள்—அரசியலமைப்புத் தோன்றும் சூழ்நிலைகள்—அரசியல் அமைப்புக்குட்படுதல். **அரசியலமைப்புச் சட்டமும் இதரச் சட்டங்களும்**]

### சட்டம்

### (Law)

**சட்டத்தின் இலக்கணம்**

சட்டம் என்பது மனிதனின் நடத்தையை ஒழுங்குபடுத்துவதற்காக வகுக்கப்பட்ட விதிகளாகும். இவை அரசாங்கத்தால் நடைமுறைப்படுத்தப்படுகின்றன. சமுதாய நலனுக்கும், மனித வாழ்க்கைக்கும் சட்டங்கள் மிக முக்கியமாகும். இவைகளை மீறுபவர்களை அரசு தனது அதிகாரத்தினல் தண்டிக்கிறது.

பவுண்டு (Pound) இலக்கணப்படி, நீதி வழங்குவதில் நீதிமன்றங்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு நடைமுறைப்படுத்தப்படும் கோட்பாடுகளே சட்டமாகும்[1].

கிரீன் (Green) கூற்றுப்படி, அரசு நடைமுறைப்படுத்தும் உரிமைகளும் கடமைகளும் அடங்கிய தொகுப்பே சட்டமாகும்[2].

[1] Pound: 'The body of principles recognised or enforced by public and regular tribunals in the administration of justice.'

[2] Green: 'The system of rights and obligations which the state enforces.'

சாலமண்டு (Salmond) கருத்துப்படி, நீதி வழங்குவதில் அரசு ஏற்றுக்கொண்டு நடைமுறைப்படுத்தும் விதிகளே சட்டமாகும்[3].

ஜான் எர்ஸ்கின் (John Erskine) விளக்கப்படி, சட்டம் என்பது, குடிமக்களின் வாழ்க்கைக்காகவுள்ள பொது விதிகளாகும். இவைகளுக்கு மக்கள் பணிய வேண்டும். இவைகள் அரசனது ஆணைகளாகும்[4].

ஆஸ்டின் (Austin) கூற்றுப்படி, சட்டம் என்பது, அரசு தனது அதிகாரத்தினால் மக்களின் நடத்தையை ஒழுங்குபடுத்துவதற்காக வகுக்கும் விதிகளாகும்[5].

**சட்டத்தின் தன்மை**

சட்டத்தின் தன்மையைப் பற்றி மூன்று கருத்துகள் நிலவுகின்றன. மாக்யூவல்லி (Machiavelli), போடின் (Bodin), ஹாப்ஸ் (Hobbes), ஜான் ஆஸ்டின் (John Austin) ஆகியவர்கள் சட்டத்தின் தன்மையைப் பகுப்பாய்வு முறையில் (Analytical Method) கூறுகின்றனர். சட்டம் அரசனால் இயற்றப்பட்டு நடைமுறைப் படுத்தப்படுகிறது. சட்டத்தை நடைமுறைப்படுத்துவதில் அதிகாரத்திற்கு முக்கியப் பங்கு உண்டு.

சர் ஹென்றி மெயின் (Sir Henry Maine), சேவைங்னி (Savigny) ஆகியவர்கள் வரலாற்று முறையில் சட்டத்தின் தன்மையை விளக்குகின்றனர். சட்டம் வரலாற்றின் வழி படிப் படியாக வளர்ந்துள்ளதாகும். அரசனால் இயற்றப்படவில்லை. அரசனது ஆணைகளும் ஆகாது. மதம், அரசியல், பொருளாதாரச் செல்வாக்குகளினால் சட்டங்கள் தோன்றி வளர்ந்தனவாகும். இவைகளையே மன்னர்கள் நடைமுறைப்படுத்தினர்.

டூகிட் (Duguit), கிராப் (Krabbe), லாஸ்கி (Laski) ஆகியவர்கள் சமுதாய முறையில் சட்டத்தின் தன்மையை விளக்குகின்றனர். சமுதாயம் நல்லவை எனக் கருதியவைகளே சட்டங்களாகத் தோன்றின. மக்கள் சட்டத்தை ஏற்றுக்கொள்வதும், கடைப்பிடிப்பதும், சமுதாய நன்மைகளைக் கருதியே ஆகும். ஒருவருக்கு நன்மை பயப்பது மற்றவர்க்குத் தீமை ஆகலாம்.

[3] Salmond: 'The law may be defined as the body of principles recognised and applied by the state in the administration of justice. In other words, the law consists of the rules recognised and acted on by courts of justice.'

[4] John Erskine: 'The command of a sovereign, containing a common rule of life for his subjects and obliging them to obedience.'

[5] John Austin: 'A law is a command which oblige a person or persons to a course of conduct.'

இருப்பினும், பெரும்பான்மையினருக்கு நன்மை பயப்பதே சமுதாயத்தில் சட்டத்தின் நிலையை எய்துகிறது.

**சட்டத்தின் தோற்றுவாய்** (Source of Law)

பழக்கவழக்கங்கள் ஆரம்ப காலத்தில் சட்டங்களுக்குச் சமமான ஆற்றல் பெற்றிருந்தன. இவைகளே பிற்காலத்தில் சட்ட சபைகளால் நிறைவேற்றப்பட்டன. இங்கிலாந்தினுடைய பொதுச் சட்டம் (Common Law) பழக்க வழக்கங்களின் அடிப்படையில் எழுந்தனவாகும். ஆனால், அறிவிற்கு ஒவ்வாத பழக்கவழக்கங்கள் சட்டங்களாக ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.

சமயம் சட்டத்தின் தோற்றுவாயாக அமைந்திருந்தது. ஆரம்ப காலத்தில் அரசனும் மதத்தலைவனும் ஒருவனாகவே இருந்தான். எல்லாச் சடங்குகளும் சமயத்தால் அனுமதிக்கப் பட்டனவாகும். ரோமானியக் கிருத்துவச் சட்டங்களும்,[6] இந்துச் சட்டங்களும், முகமதியச் சட்டங்களும் சமயத்தின் அடிப்படையில் அமைந்துள்ளதைக் காணலாம்.

சட்டங்களுக்கு விளக்கவுரைகளைச் சட்ட நிபுணர்கள் கொடுத்துள்ளனர். இவைகளும் சட்டத்தின் தோற்றுவாயாக அமைகிறது. பிளேக் ஸ்டோன் (Black stone), கோக் (Coke), கிரேன்வில் ஆகியவர்களின் சட்ட விளக்கங்கள் இங்கிலாந்தின் நீதிமன்றங்களால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

நீதிபதிகளின் தீர்ப்புகளும் சட்டத்தின் மூலமாக அமைகின்றன. வழக்குகளுக்குத் தீர்ப்பு வழங்கும்போது நீதிபதிகள் சட்டத்திற்கு விளக்கம் கூறுகின்றனர். இவ்விளக்கங்கள் பின்னால் வரும் இம்மாதிரி வழக்குகளில் சட்டமாகக் கருதிப் பின்பற்றப் படுகின்றன.

நியாய உணர்வின் அடிப்படையில் நீதிபதிகள் சட்டங்களைச் செய்கின்றனர். நடைமுறையில் இருக்கும் சட்டத்தில் வழக்கைத் தீர்க்க வழியில்லாத போது, நீதிபதிகள் புதிய விதிகளை உருவாக்கி வழக்குகளைத் தீர்க்கின்றனர். இவ்விதிகளும் சட்டங்களாகவே கருதப்படுகின்றன. இங்கிலாந்தின் நிதித் தலைவர்கள் (Chanceller) இவ்விதச் சட்டங்களைத் தோற்றுவிக்கின்றனர்.

[6] Wilson: 'The early law of Rome was little more than a body of technical religious rules, a system of means for obtaining individual rights through the proper carrying out of certain religious formulas'.

சட்டங்களை இயற்றுதல் (Legislation) சட்டத்தின் ஒரு முக்கிய மூலமாகும். தற்காலத்தில் சட்டசபைகள் சட்டங்களை இயற்று கின்றன. பெரும்பான்மையான சட்டங்கள் இதன் வழியே தோன்றுகின்றன. இயற்றப்பட்ட சட்டங்கள் முக்கியத்துவம் அடைந்தவுடன், சட்டத்தின் மற்ற மூலங்களின் செல்வாக்குக் குறைந்துவிட்டது.

**சட்டத்தின் வகைகள்**

சாதாரணச் சட்டங்கள் சட்ட சபைகளால் இயற்றப்படு கின்றன. மக்களின் நடத்தையை ஒழுங்குபடுத்துகின்றன. மக்களின் நடத்தையை ஒழுங்குபடுத்துவதற்காகச் சட்டங்கள் ஏற் படுத்தப்படுகின்றன. இந்தியாவின் குற்றவியல்சட்டம், திருமணச் சட்டம், இந்திய வருமான வரிச்சட்டம், இந்தியப் பாதுகாப்புச் சட்டம், மதுவிலக்குச் சட்டம் ஆகியன சட்டமன்றங்களால் இயற்றப்பட்ட சாதாரணச் சட்டங்களாகும்.

ஆட்சித்துறைச் சட்டம் அரசாங்க அலுவலர் பற்றிய சட்ட மாகும். அலுவலர்களுக்கும், குடிமக்களுக்குமிடையே தோன்றும் விவகாரங்களில் அரசாங்க அலுவலர்கள் ஆட்சித்துறை நீதி மன்றத்தில் ஆட்சித்துறைச் சட்டத்தின் அடிப்படையில் விசா ரிக்கப்படுவார்கள். இவர்கள் சாதாரண நீதிமன்றங்களில் சாதா ரணச்சட்டத்தின் அடிப்படையில் விசாரிக்கப்படுவதில்லை. ஆட்சித்துறைச் சட்டம் பிரான்சு நாட்டில் பெருத்த ஆதிக்கம் உடையதாக உள்ளது. பொதுச்சட்டம், பழக்கங்கள், வழக்கங்கள், மரபுகள் எனப்படும் வழக்காறுகள் ஆகியவற்றின் அடிப் படையில் தோன்றியனவாகும். இங்கிலாந்து நாட்டில் வழக்காறு களின் அடிப்படையில் தோன்றிய பொதுச் சட்டங்கள் அதிகமாக நிலவுகின்றன.

பேராணைகளும் பிரகடனங்களும் நிர்வாகத் தலைவர்களால் இயற்றப்படும் சட்டங்களாகும். பாராளுமன்றத்தில் இயற்றப்பட்ட சட்டங்களுக்கு உள்ள வலிமை இப் பேராணைகளுக்கும் உண்டு. பாராளுமன்றம் நடைமுறையில் இல்லாத போதும் தேசத்தின் அவசர நெருக்கடி காலங்களிலும் இவ்வாணைகள் பிறப்பிக்கப்படு கின்றன. இந்தியாவில் பாராளுமன்றக் கூட்டம் நடைபெறாத போது, அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில், குடியரசு தலைவர் பிரகடனங்களையும் பேராணைகளையும் பிறப்பிப்பார்கள். ஆறு மாத காலத்திற்குள் பாராளுமன்றத்தால் ஏற்றுக்கொள் ளப்பட வேண்டும்.

சர்வதேசச் சட்டம் நாட்டிடைச் சட்டமாகும். பன்னாடுகளின் உரிமைகளையும் கடமைகளையும் இது கூறுகிறது. உடன்படிக்கை களின் அடிப்படையிலும், வழக்காறுகளின் அடிப்படையிலும்

நாட்டிடைச் சட்டம் தோன்றுகிறது. நாடுகளிடையே ஏற்படும் விவகாரங்கள் சர்வதேசச் சட்டத்தின் அடிப்படையில் தீர்க்கப் படுகின்றன.

உள்நாட்டுச் சட்டம் (National Law) எனப்படும் முனிசிபல் சட்டம் (Municipal Law) அரசாங்கத்தால் இயற்றப்பட்டனவாகும். நாட்டின் மக்களுக்குள் இருக்கும் உறவைத் தீர்மானிக்கிறது. அரசின் அதிகாரத்தால் நடைமுறைப்படுத்தப்படுகிறது. சர்வதேசச் சட்டத்தை நடைமுறைப்படுத்த இப்படிப்பட்டதோர் அதிகாரம் இருக்காது.

அரசியலமைப்புச் சட்டம் ஒரு நாட்டின் அடிப்படைச் சட்டமாகும். நாட்டு மக்களால் இயற்றப்பட்டு, விருப்பத்தோடு ஏற்றுக் கொள்ளப்பட்டதாகும். அரசியலமைப்புச் சட்டத்தின் இலக்கணம், அதன் உட்பொருள், அதன் தோற்றம், அதிகாரம் ஆகியவற்றை இப்பகுதியின் கீழ் விரிவாகவும் தெளிவாகவும் காணலாம்.

மேக் ஐவர் (Mac Iver) சட்டத்தின் வகைகளைத் 'தமது தற்கால அரசு' என்னும் நூலில் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தியுள்ளார்.



இச் சட்ட வகைகளில் தற்போது அரசியலமைப்புச் சட்டத்தைப் பற்றிய நுணுக்கங்களை விரிவாகக் காணலாம்.

## அரசியலமைப்புச் சட்டம்

### அரசியலமைப்பின் அவசியம்

அரசியலமைப்பு என்பது சட்டங்களின் தொகுப்பாகும். இந்த அரசியலமைப்பு ஒவ்வோர் அரசிற்கும் அவசியமாகும். எழுதப் பட்டதோ அல்லது எழுதப்படாததோ ஓர் அரசியலமைப்பு இறைமையுள்ள ஒவ்வொரு நாட்டிற்கும் உண்டு. அரசாங்கங்கள் சட்ட திட்டங்களுக்கும், விதிமுறைக்கும் உட்பட்டே நடைபெற வேண்டும் என்பதாலும், ஒரு தனி மனிதனின் அல்லது குழுவின் விருப்பு வெறுப்புகளுக்கேற்ப அரசாங்கம் நடைபெறக் கூடாது என்பதாலும் அரசியலமைப்புகள் அவசியமாகின்றன. வல்லாட்சி முறை அரசாங்கமாயினும், குடியாட்சி அரசாங்கமாயினும், அரசிய லமைப்புகள் அவசியம். எனவே, சர்வாதிகார நாடுகளுக்கும் அரசியலமைப்புகள் உண்டு அரசியலமைப்பு இல்லாத அரசுகள் இல்லையென்று கூறலாம். பேராசிரியர் ஜெல்லிநெக் (Jelli neck) அவர்களின் கருத்துப்படி, அரசியலமைப்பு இல்லாத ஓர் அரசு அரசாகாது. அஃது அரசியல் குழப்பமுடைய ஆட்சி குலைந்த நிலை யாகும்.[7]

### அரசியலமைப்பின் பொருள்

விதிகள், சட்ட திட்டங்கள் ஆகியவைகளின் தொகுப்பே அரசியலமைப்பு ஆகும். அரசின் அமைப்பு, அரசின் பல நிறு வனங்களின் செயல்வரம்புகள், அரசிற்கும் அரசின் அங்கங்களுக் கும், அவ்வரசின் கீழ் வாழும் குடிமக்களுக்கும் உள்ள தொடர்பு ஆகியன பற்றிய விதிமுறைகளைக் கொண்டதாக அரசியலமைப்பு விளங்கும். அரசின் அதிகாரங்களும் குடிமக்களின் உரிமைகளும், கடமைகளும் அரசியல் அமைப்பில் சொல்லப்பட்டிருக்கும். சி.எப். ஸ்ட்ராங் (C. F. Strong) அவர்களின் கூற்றுப்படி, அரசாங் கத்தின் அதிகாரங்களையும், ஆளப்படுவோரின் உரிமைகளையும், இரண்டின் தொடர்புகளையும் ஒழுங்குபடுத்துகின்ற கொள்கையின் தொகுப்பே அரசியலமைப்பு.[8]

[7] Jelli neck: 'A state without a constitution would not be a state, but a regime of anarchy.'

[8] C. F. Strong: 'A constitution may be said to be a collection of principles according to which the powers of the government, the rights of the governed and the relations between the two are adjusted.'

அரசியல் அமைப்பில் இருவகைச் சட்டங்கள் உள்ளன. ஒன்று, நீதிமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்படுவதும், மற்றொன்று, நீதிமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்படாததும் ஆகும். சட்டத்திற்குட்பட்ட முதல்வகை விதிகளையே நீதிமன்றங்கள் ஏற்றுச் செயல்படுத்துகின்றன. சட்டத்தில் இல்லாததும், வழக்காறுகளின் அடிப்படையில் அமைந்த இரண்டாம் வகை விதிமுறைகளை நீதிமன்றங்கள் ஏற்பதில்லை. ஆனால், இவ்விருவகை விதிமுறைகளையும் குறிப்பதற்குப் பொதுவாக அரசியலமைப்பு என்னும் சொல்லே பயன்படுத்தப்படுகிறது.

அரசியலமைப்புகள் சில சுருக்கமாக இருக்கும். சட்ட மன்றங்கள், செயலாட்சி, நீதித்துறை ஆகிய முக்கிய நிறுவனங்களை மட்டும் அரசியலமைப்பு குறிக்கும்; விரிவான நடைமுறைச் சட்டங்களைக் கூறாது. விரிவான நடைமுறைச் சட்டங்களைச் சட்டசபைகளே இயற்றிக் கொள்ள வகை செய்யப்பட்டிருக்கும். எடுத்துக்காட்டாக, தொகுதிகளைப் பிரித்தல், அரசாங்க நிறுவனங்களை அமைத்தல், அலுவலர்களின் பணிவிதிகளை வகுத்தல் ஆகியன. விரிவான எல்லா விதிமுறைகளையும், அரசியலமைப்பிலிருந்தே எதிர்பார்க்க முடியாது. சட்டசபைகளே விதிகளை வகுக்க வேண்டும். இதற்காகச் சட்டசபைகள் இயற்றும் சட்டங்களுக்கு அமைப்பியல் சட்டங்கள் (Organic Laws) என்று பெயர். அமைப்பியல் சட்டங்கள் அரசியலமைப்பின் பகுதிகளாக இல்லாவிடினும், அரசியலமைப்பில் தோற்றுவிக்கப்பட்ட நிறுவனங்களின் அலுவல்களையும் அதிகாரங்களையும் வரையறுக்கும். எனவே, அரசியலமைப்பில் காணப்படாத சட்டவிதிகளும், பழக்க வழக்கங்களும், அமைப்பியல் சட்டங்களும், நீதிமன்றத் தீர்ப்புகளும் உண்டு. இவைகள் அரசியலமைப்பில் இடம் பெறுவிடினும், அரசியலமைப்போடு தொடர்புடையனவாகும்.

அரசியலமைப்புச் சட்டத்தை விரிந்த பொருள் கொண்டு பார்த்தால், இயற்றப்பட்ட அரசியலமைப்பு, ஆவணத்தில் உள்ள நெறிமுறைகள், இதர அரசாங்க நடைமுறைச் சட்டங்கள், சட்டங்களாக நடைமுறையிலுள்ள பழக்க வழக்கங்கள், மரபுகள் ஆகிய அனைத்து விதிமுறைகளும் அடங்கும். அரசியலமைப்பைக் குறுகிய பொருள் கொண்டு பார்த்தால், அரசியலமைப்பு என்று எழுதப்பட்ட ஓர் ஆவணத்தில் உள்ள விதிமுறைகள் மட்டுமே அரசியல் அமைப்பில் அடங்கும்.

**அரசியலமைப்பின் இலக்கணம்**

ஜேம்ஸ் மேக் இன்டாஸ் (James Mc Intosh) இலக்கணப்படி, அரசியலமைப்பு என்பது எழுதப்பட்டதோ அல்லது எழுதப்

படாததோ அடிப்படைச் சட்டங்களாகும். இவைகள் ஆளு வோரின் உரிமைகளையும், ஆளப்படுவோர்க்குள்ள சலுகைகளையும் நெறிமுறைப்படுத்துகின்றன.[9]

கார்லியின் (Corley) இலக்கணப்படி, அரசியலமைப்பு என்பது, அரசின் அடிப்படைச் சட்டமாகும். அரசாங்க அமைப்பின் விதி களையும், இறைமை அதிகாரத்தின் பகுப்புகளையும், இவ்வதிகாரங் களையுடைய நபர்களையும், இவ்வதிகாரங்களைச் செலுத்தும் முறை களையும் நெறிமுறைப்படுத்துவது அரசியலமைப்பாகும்.[10]

ஜேம்ஸ் பிரைஸ் (James Bryce) கூற்றுப்படி, அரசியலமைப் பென்பது சட்டத்தினுல் சட்டம் வழியாக நிறுவப்பட்ட ஓர் அரசியல் சமுதாயத்தின் அமைப்பு; அதாவது, சட்டமானது தெரிந்த அலுவல்களையும், தெளிவான உரிமைகளையும் உடைய நிலையான நிறுவனங்களை நிறுவியுள்ள ஓர் அரசியல் சமூக அமைப்பு.[11]

கில்கிரைஸ்ட் (Gilchrist) விளக்கத்தின்படி, ஓர் அரசின் அரசியலமைப்பு என்பது எழுதப்பட்டதோ அல்லது எழுதப் படாததோ ஆன சட்டதிட்டங்களின் தொகுப்பாகும். இஃது அர சாங்கத்தின் அதிகாரங்களைச் செலுத்துவதற்கான பொது விதி களையும் தீர்மானிக்கிறது. அரசியலமைப்பு என்பது அரசின் அடிப்படைச் சட்டமாகும். இஃது அரசின் அதிகாரப் பங்கீட்டை ஒழுங்குபடுத்தி, அரசாங்கத்தின் அமைப்பையும் தீர்மானிக் கிறது.[12]

புருஸ்டர் (Brewster) வாக்குப்படி, ஓர் அரசியலமைப்பு என்பது ஒரு நாட்டின் அடிப்படைச் சட்டமாகும். அரசாங்கத்தின் அமைப்பையும், முறைகளையும் கூறுகின்றது. இதன் அதிகாரத் திற்கும் செயல்களுக்கும் இலக்கணம் வகுக்கிறது. எவ்விதம்

[9] James Mc Intosh : 'A constitution is the body of those written or un written fundamental laws which regulate the most important rights of the higher magistrates and the most essential privilâges of the subjects.'

[10] Corley : 'A constitutlon is the fundamental law of the state, containing the principles upon which government is founded regulating the division of the sovereign powers and directing to what persons each of these powers is to be confined and the manner in which it is to be exercised'.

[11] James Bryce : 'A constitution is a frame of political society, organised through and by law, that is to say one in which law has established perma-nent institutions with recognised functions and definite rights.'

[12] Gilchrist: 'The constitution of a state is that body of rules and laws written or unwritten which determines the organisation of the government and the general principles on which these powers are to be exercised.'

அரசியலமைப்பு மாற்றங்கள் செய்யலாம் என்பதையும் காட்டுகிறது.[18]

அரசியல் வல்லுனர்களின் இலக்கணங்களிலிருந்து அரசியலமைப்பைப் பற்றித் தெளிவாக அறியலாம். அரசாங்கத்தின் அடிப்படை அமைப்பை வகுத்து, அதன் அதிகாரங்களையும் அலுவல்களையும் வரையறுத்து, மக்களாட்சியில் குடிகளின் உரிமைகளைக் காப்பதே அரசியலமைப்பாகும்.

அரசியல் அமைப்பிற்கான இலக்கணங்களைத் தொகுத்து அதன் கூறுகள் பற்றிக் கீழ்க்காணும் சுருக்கத்தைக் கூறலாம். (1) அரசியலமைப்பு என்பது சட்டங்களின் தொகுப்பாகும். சாதாரணச் சட்டங்களிலிருந்து வேறுபட்டது. மேலாண்மையுடையது. (2) எழுதப்பட்டதாகவோ அல்லது எழுதப்படாததாகவோ இருக்கலாம். பழக்க வழக்கங்கள், மரபுகள் ஆகியனவும் அடங்கியிருக்கலாம். (3) அரசாங்கத்தின் முக்கிய அங்கங்களின் அமைப்பு; இவ்வங்கங்களிடையே அதிகாரப் பகுப்பு, அரசியலமைப்பை மாற்றும் முறை, அரசாங்கத்திற்கும் குடிமக்களுக்கும் இடையே உள்ள தொடர்பு ஆகியன பற்றித் தீர்மானிக்கும் விதி முறைகளைக் கொண்டிருக்கும். (4) இது விரும்பித் தோற்றுவிக்கப்பட்டதாகவோ அல்லது படிப்படியாக வளர்ந்ததாகவோ இருக்கலாம்.

### அரசியலமைப்பு அடிப்படைச் சட்டமாகும்

அரசியலமைப்பே நாட்டின் தலையாய சட்டமாகக் கருதப்படுகிறது. மற்ற எல்லாச் சட்டங்களையும்விட மேலாண்மையுடையதாக உள்ளது. அரசியற்புணயவையின் கருத்து அரசியலமைப்பில் தென்படுகிறது. இது மக்களின் கருத்தாகவும், அரசாங்கத்தின் குறிக்கோளாகவும் அமைகிறது. ஒவ்வோர் அரசியலமைப்பும் ஒவ்வொரு வாழ்க்கைத் தத்துவத்தையும், பொருளாதாரத் தத்துவத்தையும் ஏற்படுத்த விரும்பும் சமுதாய அமைப்பையும் காட்டுகிறது. அரசின் கீழ் அமைக்கப்படும் அரசியல் நிறுவனங்களையும் குறிப்பிடுகிறது. சட்ட ஆக்க முறைகளையும், செயலாட்சி வகைகளையும், நீதித்துறை அமைப்பையும் சொல்லுகிறது. எனவே, ஒரு நாட்டின் அரசியலமைப்புச் சட்டம் அவ்வரசின்

[18] Brewster : 'A constitution is the basic law of a state which outlines the frame work and procedures of government, defines its powers and functions provides how constitutional changes may be made and in a democracy usually guarantees the citizens certain protections against arbitrary governmental action.'

சட்டங்களுக்கெல்லாம் சட்டமாக விளங்கி அடிப்படைச் சட்டமாக அமைகிறது. அரசியலமைப்பிற்குக் குறிப்பிட்ட இன்ன முறை அரசாங்க அமைப்பு இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை.

**அரசியலமைப்பின் சிறப்பியல்புகள்**

ஒரு சிறந்த அரசியலமைப்பு, திட்டவட்டமானதாகவும், சுருக்கமானதாகவும், விளக்கமுடையதாகவும், நிலைத்த தன்மையுடையதாகவும், நெகிழும் தன்மையுடையதாகவும் இருக்க வேண்டும்.

அரசியலமைப்புகள் அறுதியிட்டுக் கூறுவனவாக இருக்க வேண்டும். விதிகள் சந்தேகத்திற்கப்பாற்பட்டு அமைக்கப்பட்டிருக்கவேண்டும். அரசியலமைப்பில் ஐயந்திரிபுகள் தோன்றினால் விளக்கத்திற்கு நீதிமன்றங்களை அணுகவேண்டிவரும். நீதிமன்றங்கள் அளிக்கும் உரை விளக்கங்கள் ஒன்றிற்கொன்று முரண்பட்டனவாக அடிக்கடி அமைகின்றன. எழுதிய அரசியலமைப்பு எழுதா அரசியலமைப்பைவிடத் திட்டவட்டமுடையதாக இருக்கிறது. மேலும், வழக்கங்களின் அடிப்படையிலும் வழக்காறுகளின் அடிப்படையிலும் அமைந்த அரசியலமைப்பைவிட எழுதப்பட்ட அரசியலமைப்புத் திட்பமுடையது.

அரசியலமைப்புச் சுருக்கமானதாக அமைய வேண்டும். அவசியமற்ற விவரங்களைக் கொண்டிருக்கக் கூடாது. விரிவான செய்திகள் கூறப்பட்டிருந்தால் சட்டமன்றங்களுக்கு வேலையில்லாமல் போய்விடும். அரசாங்கத்தின் மீது இருக்கும் நம்பிக்கையும் குறைந்துவிடும். அரசியல், பொருளாதார, சமுதாய மாற்றங்கள் நடைபெற்றுக் கொண்டேயிருப்பதால், விரிந்த அரசியலமைப்புகள் துரிதமாக வழக்கொழிந்த அரசியலமைப்பாகிவிடும்.

நல்ல அரசியலமைப்பு விளக்கமுடையதாக இருக்கவேண்டும். அரசாங்கத்தின் அத்தியாவசியமான கூறுபாடுகளும், அதன் முக்கிய அடிப்படை நோக்கங்களும் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். அரசாங்கத்தின் பணிகளும் அமைப்பும், அதன் நிறுவனங்களின் அதிகார வரம்புகளும், அரசியலமைப்பில் விளக்கமாகக் காட்டப்பட்டிருக்க வேண்டும்.

அரசியலமைப்பின் பிறிதோர் சிறப்பியல்பு அதன் நிலைத்த தன்மையாகும். அடிக்கடி மாறக்கூடிய அரசியலமைப்பு மூல முதற்காரணத்தை இழந்துவிடும். மேலும், அரசியல்வாதிகளின் கைப்பாவையாகிவிடும். மக்களின் உரிமைகள் பறிபோகும்

வாய்ப்பு ஏற்படும். இத்தீங்குகளைத் தவிர்க்க அரசியலமைப்பு நிலைத்த தன்மையுடையதாக அமைய வேண்டும்.

நெகிழும் தன்மையும் அரசியலமைப்பின் நற்பண்பாகும். கால மாற்றங்களும், முன்னேற்றங்களும் தொடர்ந்து ஏற்படுகின்றன. இம் மாற்றங்களுக்கேற்ப அரசியலமைப்பு மாறுபட வேண்டும்; முன்னேற வேண்டும். நாடுகள் முன்னேறும்போது, அவைகளின் அரசியலமைப்பும் முன்னேற வேண்டும். சூழ்நிலைக்கேற்ப வளைந்து கொடுத்து, முறியாது வாழ வேண்டும். காலத்திற்கேற்ப வளையாத அரசியலமைப்பு, புரட்சியால் முறியடிக்கப்படும். எனவே, அரசியலமைப்பு மிக நெகிழாத் தன்மையுடையதாகவோ அல்லது மிகவும் நெகிழும் தன்மையுடையதாகவோ இருக்கக்கூடாது.

**அரசியலமைப்புத் தோன்றும் சூழ்நிலைகள்**

அரசியலமைப்புகளை ஐந்து வழிகளில் அடையலாம். அரசாங்கங்களைக் கட்டுப்படுத்துவதாலும், புதிய அரசின் தோற்றத்தாலும், பழைய அரசுகள் மாற்றப்படுவதாலும் அரசியலமைப்புகள் தோன்றலாம்.

**வல்லாட்சியாளர்கள் அளித்தல் :** வல்லாட்சியாளர்கள் தங்கள் விருப்பம் போல் ஆட்சியை நடத்துவார்கள். இவர்களது ஆட்சியில் முறையான அரசியலமைப்புகளும், விதிகளும் இல்லாதிருக்கும். இவர்களது வாய்ச்சொல்லே சட்டங்களாகும். இவ் வல்லாட்சியைப் பொறுத்துக்கொள்ள இயலாத மக்கள் அரசனைக் கட்டுப்படுத்தி அரசியலமைப்பைப் பெறுவர். அரசாங்கக் கருவூலம் காலியான நிலையிலும், மேலும் வரி வசூல் செய்ய இயலாத நிலையிலும், கொடுங்கோலர்கள் அரசியலமைப்பை மக்களுக்கு வழங்குவர். அயல்நாட்டுடன் நடைபெற்ற சண்டையில் தோல்வியுற்ற மன்னன், மக்களின் ஆதரவைப் பெற, விதிகளின் கட்டுப்பாட்டிற்குள் ஆட்சி செய்ய இணங்கி அரசியலமைப்பை வழங்குவதுண்டு. வழங்கிய இவ்வரசியல் அமைப்புகளின் படியும் விதிகளின்படியும் புதிய அரசாங்க நிறுவனங்கள் அமைத்து அரசியலமைப்பிற்குட்பட்ட மன்னனை ஆட்சி செய்ய வல்லாட்சியாளர் இணங்குவர். மன்னனுக்கும், மக்களுக்கும் ஏற்படும் புதிய ஒப்பந்தங்களின்படி இவ்வரசியல் அமைப்புத் தோன்றும்.

ஓர் அரசில் மக்கள் தாங்களே அரசியல்மைப்பை இயற்றித் தங்களுக்குத் தாங்களே அளித்துக்கொள்வதன் மூலமும், அரசியலமைப்புகள் தோன்றுகின்றன. புதியதாகத் தோற்றுவிக்கப்பட்ட அரசுகள் இவ்விதமாக அரசியலமைப்புகளைத் தோற்றுவிக்கின்றன

அரசியலமைப்பை வகுக்க மக்கள் தங்கள் பிரதிநிதிகள் அடங்கிய அரசியல் நிர்ணய சபையை (Constituent Assembly) நிறுவுகின்றனர். இச் சபை இந்தப் புதிய அரசிற்கு வேண்டிய அரசியலமைப்பை வகுக்கும். இவ்வரசியலமைப்பு நாட்டின் உன்னதச் சட்டமாக ஏற்றுக்கொள்ளப்படும். இவ்விதமாகவும் அரசியலமைப்புகள் தோன்றுகின்றன.

அரசியல் அமைப்புகள் படிப்படியாக வளர்ந்து உருவாவதும் உண்டு. நாட்டின் பழக்க வழக்கங்கள், மரபுகள் ஆகியன சட்டங்கள் போல நீண்ட காலமாகப் பின்பற்றப்படும். இந்த வழக்கங்களும், வழக்காறுகளும் அரசியலமைப்பின் பகுதிகளாக அமைந்துவிடும். இந்த வழித் தோற்றத்திற்குச் சிறந்த எடுத்துக் காட்டாக இங்கிலாந்தின் அரசியலமைப்பைக் கூறலாம்.

அரசியலமைப்புகள் புரட்சியின் விளைவாகவும் தோன்றும். வல்லாட்சியைப் பொறுக்காத மக்கள் புரட்சியில் ஈடுபட்டு அரசாங்கத்தை வீழ்த்தித் தங்களுக்கென ஓர் அரசியலமைப்பைப் படைத்துக்கொள்வர். பிரான்சு நாட்டின் புரட்சிக்குப் பிறகு தோன்றிய அரசியலமைப்புகளும், 1918ஆம் ஆண்டில் சோவியத் ரஷ்யாவில் தோன்றிய அரசியலமைப்பும் இவ்வகைத் தோற்றத்திற்கு எடுத்துக்காட்டுகளாகும். லூயி மன்னர்களின் கொடுங்கோல் ஆட்சியையும், சார் மன்னர்களின் வல்லாட்சியையும் புரட்சியின் மூலம் வீழ்த்திய பிரான்சு நாட்டு மக்களும், ரஷ்ய மக்களும் தங்களுக்கென அரசியலமைப்புகளை வகுத்துக்கொண்டனர்.

அரசியலமைப்புகள் மேலாண்மை அரசாங்கங்களாலும் அளிக்கப்படலாம். தனது ஆட்சியின் கீழ் இருந்த நாடுகளுக்கு விடுதலை அளித்து மேலாண்மை அரசாங்கங்கள் அரசியல் அமைப்புகளை வழங்குவதுண்டு. ஆங்கிலேய அரசாங்கம் தனது ஆட்சியின் கீழ் இருந்த நாடுகளுக்கு விடுதலை அளித்து அவைகளுக்கு அரசியல் அமைப்பை வழங்கியுள்ளது. இங்கிலாந்துப் பாராளுமன்றம் 1867 ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டத்தை (British North America Act of 1867) இயற்றி, கனடாநாட்டிற்கு அரசியலமைப்பை வழங்கியது. டொமினியன் நிலையுள்ள நாடுகளுக்கு இங்கிலாந்துப் பாராளுமன்றமே அரசியலமைப்புகளை அளித்தது. அவ்வப்போது இயற்றப்பட்ட இந்திய அரசாங்கச் சட்டங்களும், மேலாண்மை அரசாங்கம் வழங்கிய அரசியலமைப்புச் சட்டமாகும். எனவே, இவ்வைந்து முறைகளும் அரசியலமைப்பை அடையும் வழிகளாகவும், அரசியலமைப்புத் தோன்றும் வழிகளாகவும் அமைகின்றன.

**அரசியல் அமைப்புக்குட்படுதல்**

நெறிமுறைகள் இல்லாவிடில் வல்லாட்சி நடைபெறுகிறது. மக்களின் உரிமைகளும் சுதந்திரமும் நசுக்கப்பட்டுத் தனி ஒரு மனிதனின் விருப்பத்திற்கேற்ப ஆட்சி நடைபெறும். இதற்கு மாருக அரசியலமைப்பு வகுக்கப்பட்டு, இதில் காணும் விதிமுறைகளுக்கேற்ப அரசாங்கம் கட்டுப்பாடுகளுக்குட்பட்டு நடைபெறுமானல், அஃது அரசியல் அமைப்புக்கு உட்படுதல் ஆகும். அரசியல் முறைமைக்குட்பட்ட அரசாங்கத்தில் சட்டத்தின் ஆட்சி இருக்குமே தவிர, தனி நபரின் ஆட்சி இருக்காது. மக்களின் உரிமைகள் அரசியலமைப்புச் சட்டத்தால் பாதுகாக்கப்படும். அரசாங்கத்தின் அதிகாரம் சட்டத்தால் வரையறுக்கப்படும். சி. எப். ஸ்ட்ராங் கூற்றுப்படி, அரசியலமைப்பு வல்லாட்சியைக் கட்டுப்படுத்தி, மக்களின் உரிமைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது. அரசியலமைப்பிற்கு அரிஸ்டாட்டில் அளித்த விளக்கம் என சேபைன் (Sabine) கூறுவதாவது :

1. பொதுநலத்தைக் காக்கும் ஆட்சியே அரசியலமைப்பாகும். இது தனி மனித வல்லாட்சியிலிருந்தும், குழுவினர் வல்லாட்சியிலிருந்தும் வேறுபட்டதாகும்.

2. அரசாங்கம் பொது விதிகளின் அடிப்படையில் நடைபெற வேண்டுமே ஒழிய வல்லாட்சியினரின் ஆணைகளின் அடிப்படையில் நடை பெறக்கூடாது.

3. அரசியல் அமைப்பிற்குட்பட்ட அரசாங்கம் என்பது, மக்களின் விருப்பத்தின் அடிப்படையில் நடைபெறவேண்டுமே ஒழிய மறநெறியின் அடிப்படையில் நடைபெறக் கூடாது[14].

எனவே, அரசாங்கத்தின் அதிகாரம் வரையறுக்கப்படுதல், மக்களின் உரிமைகள் பாதுகாக்கப்படுதல், சட்டத்தின்படி ஆட்சி அமைத்தல் ஆகியன அரசியல் முறைமைக்குட்படுகையின் உடன்பாட்டு இலக்கணமாகும். வல்லாட்சியை நீக்குதல், தனி மனித ஆட்சியைச் சட்டத்தின் ஆட்சியால் ஒடுக்குதல், பொது நெறிமுறைகளை அமைத்துத் தனி மனித ஆணையை விலக்குதல், மக்களின்

[14] Sabine . 'Constitutional rule as Aristotle understands the expression has three main elements. First, it is rule in the public or general interest as distinguished from a factional or tyrannous rule in the interest of a single class or individual. Second, it is lawful rule in the sense that government is carried on by general regulations and not by arbitrary decrees and also in the vague sense that the government does not flout standing customs and conventions of the constitution. Third, constitutional government means the government of willing subjects as distinguished from a despotism that is supported merely by force.'

உரிமைகள் நசுக்கப்படுவதைச் சட்டத்தால் தடுத்தல், ஆகியன அரசியல் முறைமைக்குட்படுகையின் எதிர்மறை இலக்கணமாகும்.

இங்கிலாந்தில் அரசியலமைப்பிற்குட்படுகை படிப்படியாக நடந்தனவாகும். இங்கிலாந்தின் அரசியலமைப்பு இயற்றப்பட்ட தல்ல. இது பரிணும வளர்ச்சியுடையதென்றும், தற்செயலாகத் தோன்றியதென்றும் கருதப்படுகிறது. இருப்பினும் 1649ஆம் ஆண்டில் ஆலிவர்கிராம்வெல் அரசாங்கத்தின் சாதனம் (Instrument of Government) என்ற பெயரில் அரசியலமைப்பை வகுத்தார். ஆனல், முடியாட்சி மீட்கப்பட்டவுடன் இந்த அரசியலமைப்பு கைவிடப்பட்டது. உரிமைகள் மசோதா, அரசுரிமைச் சட்டம், பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டங்கள் ஆகியன அரசியலமைப்பிற்கான கோட்பாடுகள் அடங்கியனவாக உள்ளன. இங்கிலாந்தின் அரசியலமைப்பில் பழக்கங்களும், வழக்கங்களும், வழக்காறுகளும் பெரும் செல்வாக்கைப் பெற்றுள்ளன. அமெரிக்கா முதன் முறையாக எழுதப்பட்ட அரசியலமைப்பினை உருவாக்கியது. அமெரிக்கா தனது சுதந்திரப் போரில் வெற்றி பெற்றது. எனவே, அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் ஒன்றிணைந்து, தங்களுக்கென ஓர் அரசியல் அமைப்பை வகுத்துக்கொண்டனர். இதன் வழி அமெரிக்கா எழுதப்பட்ட அரசியல் அமைப்பிற்குட்பட்டது.

இந்தியாவிற்கு 1947ஆம் ஆண்டு, ஆகஸ்டுத் திங்கள் 15ஆம் நாள் சுதந்திரம் கிடைத்தது. இந்தியா தனக்கென ஓர் அரசியலமைப்பை வகுக்க, டாக்டர். ராஜேந்திரப் பிரசாத்தின் தலைமையில் அரசியல் நிர்ணய சபையை நிறுவியது. இந்த அரசியலமைப்பு இந்தியக் குடியரசைத் தோற்றுவித்து இந்தியாவை அரசியலமைப்பிற்குட்படுத்தியது.

## அரசியல் அமைப்புச் சட்டங்களும், இதரச் சட்டங்களும்

அரசியலமைப்புச் சட்டம் நாட்டில் உயர்ந்த சட்டமாகக் கருதப்படுகிறது. மற்றச் சட்டங்களின் மீது மேலாண்மையுடையது. இது மக்களால் தோற்றுவிக்கப்பட்டது. மக்களின் இறைமையே அரசியலமைப்புச் சட்டத்தைத் தோற்றுவித்தது. மக்களால் அமைக்கப்பட்ட அரசியல் நிர்ணயசபை அரசியலமைப்பைப் புனைந்து மக்களின் ஒப்புதலைப் பெற்றுள்ளது. அரசியலமைப்புச் சட்டம் சட்டங்களுக்கெல்லாம் சட்டமாகும். இதரச் சட்டங்களின் மூலமாகவும் தோற்றுவாயாகவும் விளங்குகிறது. எனவே, அரசியலமைப்புச் சட்டத்தை மாற்றவோ திருந்தவோ கடினமான முறை வகுக்கப்பட்டுள்ளது. புனிதமாகக் கருதப்படுகிறது.

சட்டசபைகளால் இயற்றப்படும் சாதாரணச் சில சட்டங்கள் அரசியலமைப்புச் சட்டத்திற்கு அடங்கியதாகும். இச்சட்டங்களைத் தோற்றுவிக்கும் சட்டமன்றங்களே அரசியலமைப்புச் சட்டத்தால் ஏற்படுத்தப்பட்டனவாகும். மேலும், சட்டமன்றங்கள் அரசியலமைப்புச் சட்டங்களுக்கு முரணான ஒரு சட்டத்தை இயற்ற முடியாது. சட்டசபையால் இயற்றப்பட்ட சட்டங்களை எளிதில் நீக்கவும், மாற்றவும், திருத்தவும் இயலும். சாதாரணச் சட்டங்கள் மக்களின் பிரதிநிதிகளால் தோற்றுவிக்கப்பட்டனவாகும். எனவே, சாலை விதிகள், சினிமாக் கொட்டகையில் புகைத்தல் தடுப்புவிதி போன்ற சாதாரணச் சட்டங்களை மீறினாலும், மக்களால் தோற்றுவிக்கப்பட்ட அரசியலமைப்புச் சட்டத்தை மீறக்கூடாது. குடியரசு தலைவரும், ஆளுநர்களும் சட்டத்திற்குச் சமமான பிரகடனங்களையும், பேராணைகளையும் பிறப்பிக்கிறார்கள் என்றால் அஃது அரசியலமைப்புச் சட்டத்தால் அளிக்கப்பட்ட சிறப்பு அதிகாரங்களாகும். எனவேதான் அரசியலமைப்புச் சட்டத்தைச் சட்டங்களின் மூலம், அதிகாரத்தின் இருப்பிடம், சட்டங்களுக்கெல்லாம் சட்டம் என்று கூறுகிறோம். சில வேளைகளில் சட்டமன்றத்தின் சட்டங்கள் மக்களின் உரிமைகளைப் பறிப்பதாக அமையும். ஆனால், அரசியலமைப்புச் சட்டம் உரிமைகளின் பாதுகாவலனாக அமைந்துள்ளது. சாதாரணச் சட்டத்தைப் பேணுவது அரசாங்கமாகவும், அரசியலமைப்புச் சட்டத்தைப் பேணுவது நீதிமன்றங்களாகவும் அமைந்துள்ளன.

சர்வதேசச் சட்டம் நாடுகளிடையே ஏற்பட்ட உடன்பாட்டின் காரணமாகத் தோன்றியதாகும். எனவே, சர்வதேசச் சட்டம், அரசியலமைப்புச் சட்டத்திற்கு ஏற்புடையதாக அமையும். இரண்டினும் அரசியலமைப்புச் சட்டமே செல்வாக்குடையது. உள்நாட்டுச் சட்டங்களுக்கும், சர்வதேசச் சட்டங்களுக்கும் உயர்ந்ததாய், மேலாண்மையுடையதாய் அரசியலமைப்புச் சட்டம் விளங்குகிறது.

அரசியலமைப்புச் சட்டத்தின் இலக்கணம், தன்மை, அரசியலமைப்பிற்குட்படுகை, அரசியலமைப்புச் சட்டத்திற்கும் இதரச் சட்டங்களுக்கும் உள்ள வேறுபாடு ஆகியன கண்டோம். அடுத்து வரும் பிரிவுகளில் அரசியலமைப்பின் மூலக்கூறுகளையும் அதிகாரத்தையும் காணலாம்.

## முக்கிய விஞக்கள்

1. அரசியலமைப்புச் சட்டத்தை இதரச் சட்டங்களிலிருந்து வேறுபடுத்துக.
2. ஒரு நல்ல அரசியலமைப்புச் சட்டத்தின் சிறப்பியல்புகள் யாவை?
3. குறிப்பு வரைக:
   (அ) சட்டத்தின் வகைகள்
   (ஆ) சட்டத்தின் தோற்றுவாய்
   (இ) அரசியல் அமைப்புக்குட்படுதல்
4. அரசியல் சட்டம் என்பதை விளக்கி, அது பிற சட்டங்களிலிருந்து எவ்வாறு வேறுபடுகிறது எனக் காட்டுக. (செ. ப. க.செப்டம்பர் 1975.)

## ஆ. அரசியல் அமைப்பின் மூலக்கூறுகள்
## (Contents of the Constitutions)

[**மூலக்கூறுகள் - பொதுக்கருத்து:** மூலக்கூறு பற்றிப் பொது விதி இயலாது—ஒன்றிய அரசு அமைப்பின் மூலக் கூறு — கூட்டாட்சி அரசு அமைப்பின் மூலக்கூறு — அரசியலமைப்பின் முகப்பு — அடிப்படை உரிமைகளும் கட்டுப்பாடுகளும் — அரசாங்க அமைப்பு — அரசிய லமைப்புத் திருத்த முறை.

**சில நாடுகளின் அரசியலமைப்பின் மூலக்கூறு:** இந்திய அரசியலமைப்பின் மூலக்கூறு—சுவிட்ஸர்லாந்துஅரசிய லமைப்பின் மூலக்கூறு—பிரான்சின் புது அரசியலமைப் பின் மூலக்கூறு—ஜப்பான் அரசியலமைப்பின் மூலக்கூறு.]

### மூலக்கூறுகள் - பொதுக்கருத்து

**மூலக்கூறுகள் பற்றிப் பொதுவிதி இயலாது**

அரசியல் அமைப்பின் மூலக்கூறுகள் (Contents of the Constitution) பற்றியோ, உட்பகுதிகள் பற்றியோ, அரசியல் அமைப்பின் அடக்கம் பற்றியோ பொதுவிதி வகுக்க இயலாது. ஏனெனில், அரசியலமைப்பை உருவாக்குபவர்களும், உருவாக்கும் சூழ்நிலைகளும், அரசியல் நோக்கங்களும், குறிக்கோள்களும், ஒவ்வோர் அரசியல் அமைப்பிற்கும் மாறுபடும். எனவே, ஓர் அர சியல் அமைப்பில் என்னென்ன அடங்கியிருக்கும், என்னென்ன அடங்கியிருக்க வேண்டும் என்று திட்டமாகக் கூறமுடியாது. சில அரசியல் அமைப்புகள் மிக விரிவுடையனவாகவும், சில அரசியல் அமைப்புகள் மிகச் சுருக்கமானதாகவும் இருக்கும். எடுத்துக்காட் டாக, இந்திய அரசியலமைப்பு இருநூறு அல்லது முந்நூறு பக்கங் களில் மிக விரிவாக எழுதப்பட்டிருக்கும். நார்வே போன்ற நாடு களின் அரசியல் அமைப்புகள் சில பக்கங்களில் எழுதப்பட்டிருக் கும். சில அரசியல் அமைப்பில் சட்ட நுணுக்கங்கள் கொடுக்கப்பட் டிருக்கும். சில அரசியல் அமைப்புகளில் பரந்த எல்லைக்கோடுகள் மட்டும் காணப்படும். சில அரசியல் அமைப்புகளில் சந்தே கத்திற்கும், யூகிப்பிற்கும் இடம் இல்லாத அளவு விரிவாகவும், தெளிவாகவும் விதிகள் எழுதப்பட்டிருக்கும். இவ்வரசியல் அமைப் பிற்கு நீதிமன்றங்கள் யூகித்து விளக்கங்கள் அளிக்க இயலாது. சில அரசியல் அமைப்புகளுக்கு நீதிமன்றங்களின் விருப்பத்திற் கேற்ப விளக்கங்கள் அளிக்க வகை இருக்கும். சில அரசியல் அமைப்புகளில் அரசின் முக்கிய நோக்கங்களையும், நிறுவனங்களை

யும் மட்டும் குறிப்பிட்டு இந்நோக்கங்களை நிறைவேற்றுவதற்கான சட்டங்களையும், அரசாங்க நிறுவனங்கள் பற்றிய விதி முறைகளை யும் செய்வதற்குச் சட்டசபைகளுக்கு வாய்ப்பு அளிக்கப்பட்டிருக் கும். சில அரசியல் அமைப்புகள் நோக்கங்களின் விவரங்களையும் அரசாங்க நிறுவனங்களின் விவரங்களான அமைப்பு, அவைகளின் அதிகாரங்கள் ஆகியவற்றையும் விரிவாகக் குறிப்பிட்டிருக்கும். எனவே, அரசியலமைப்புகளின் மூலக்கூறுகள் குறித்துப் பொது விதி காண்பது இயலாத ஒன்றாகும்.

### ஒன்றிய அரசியல் அமைப்பின் மூலக்கூறுகள்

ஒன்றிய அரசின் அரசியலமைப்புச் சுருக்கமானதாக அமையும். ஏனெனில், ஒன்றிய அரசில் அதிகாரப் பிரிவினையோ அதிகாரப் பகிர்வோ கிடையாது. சிக்கலற்றதாகவும் எளிமை யுடையதாகவும் இருக்கும். அரசாங்கத்தின் முப்பெரும் நிறுவனங் களாகிய சட்டத்துறை, நிருவாகத்துறை, நீதித்துறை ஆகியவற் றின் நுணக்கமான விதிகள் வகுக்கப்பட வேண்டியதில்லை. இவை களின் அமைப்பு, அதிகாரங்கள் பற்றிய பரந்த எல்லைக்கோடே பொதுவானதாக அமையும். ஒன்றிய அரசாகிய இங்கிலாந்து எழுதப்படாததும் ஆவணமற்றதுமான அரசியலமைப்மை வைத்துக் கொண்டே அரசாங்கத்தை இயக்குகிறது என்றால், அரசியல் அமைப்பை ஆவணமுறைப்படுத்தினாலும்கூட விரிந்த பெரியதோர் அரசியலமைப்புத் தேவைப்படாது என்பதை நாம் உணரலாம். எனவே, ஒன்றிய அரசின் அரசியலமைப்பு சுருக்கமானதாகவும் விரிவான உட்பொருள் இல்லாததுமாக விளங்கும். ஒன்றிய அரசியலமைப்பில் சட்டமன்றம், நிருவாகத் துறை, நீதித்துறை ஆகியவற்றின் அமைப்புகளைப் பொதுவாக வரைந்து, ஒவ்வொன்றிற்கும் உள்ள தொடர்புகளையும், அவற்றிற் கும் குடிமக்களுக்கும் உள்ள தொடர்புகளையும் சுருங்கக் கூறி யிருக்கும்.

### கூட்டாட்சி அரசு அமைப்பின் மூலக்கூறுகள்

கூட்டாட்சி அரசியல் அமைப்புகளின் மூலக்கூறுகள் சில சிறப்பியல்புகள் கொண்டவை. இறைமையுடைய பல சிறு அரசு களிடையே தோன்றிய ஒப்பந்தத்தின் விளைவாகத் தோன்றியதே கூட்டாட்சி ஆகும். எனவே, இவ்வொப்பந்தங்கள் தெளிவாகக் குறிக்கப்பட வேண்டும். அரசியல் அமைப்பு மேம்பாடுடைய ஒரு புனித ஆவணமாகும். எளிதில் மாற்றப்பட இயலாத ஒன்றா கவும் விளங்க வேண்டும். கூட்டாட்சி அரசியல் அமைப்பில் பல தரப்பட்ட நுணக்கமான விவரங்கள் இணைக்கப்பட்டிருக்க வேண்டும்.

கூட்டாட்சி அமைப்பில் மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கத்திற்கும் இடையே அதிகாரப் பகிர்வு செய்யப்பட்டிருக்கும். இந்த அதிகாரப் பகிர்வு முறை அரசியலமைப்பில் தெளிவாகக் குறிக்கப்பட வேண்டும். ஏனெனில், மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கங்களும் தங்கள் அதிகாரத்தைப் பெறுவது அரசியலமைப்பிடமிருந்தே ஆகும். ஒவ்வொன்றிற்கும் அளிக்கப்பட்ட இவ்வதிகாரங்கள் எளிதில் கூட்டப்படவோ குறைக்கப்படவோ இயலாது. இவ்வதிகாரங்களை மத்தியக் கூட்டாட்சிப் பாராளுமன்றமோ மாநிலச் சட்டமன்றங்களோ மாற்றக் கூடாது. இதற்கு அரசியல் அமைப்பில் வகை செய்யப்பட்டிருக்க வேண்டும். அதிகாரங்களைப் பகிர்வு செய்வதில் மாநிலங்களுக்கு அதிகாரங்கள் ஒதுக்கப்பட்டு, எஞ்சிய அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்திற்கு ஒதுக்கப்பட்டிருக்கலாம். அல்லது கூட்டாட்சியின் மத்திய அரசாங்கத்திற்கு அதிகாரங்கள் ஒதுக்கப்பட்டு, எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களுக்கு விடப்பட்டிருக்கலாம். அல்லது அதிகாரப்பகிர்வில் இந்தியாவிலுள்ள முறை போல ஒருங்கிணைவுப் பட்டியல் (Concurrent List) முறை பின்பற்றப்படலாம். இதில் கூட்டாட்சியின் மத்திய அரசாங்கத்திற்கென அதிகாரங்கள் அட்டவணைப்படுத்தப்பட்டிருக்கும். அதே போல மாநிலங்களுக்கென அதிகாரங்கள் பட்டியலிடப்பட்டிருக்கும். இவைகளில் கூறப்படாத அதிகாரங்கள் ஒருங்கிணைவுப் பட்டியலில் இடப்பட்டு மாநிலங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்கும் பொதுவாக அமையும். ஒருங்கிணைவுப்பட்டியல் அதிகாரங்களைச் செலுத்துவதில் மாநிலச் சட்டங்களுக்கும் மத்திய அரசாங்கச் சட்டங்களுக்கும் இடையே முரண்பாடு தோன்றினல் மத்திய அரசாங்கத்தின் சட்டங்களே செல்லுபடியாகும். இதற்கான நுணக்கமானதும் விரிவானதுமான விவரங்கள் அரசியலமைப்பில் உள்ளடங்கியிருக்கும். மத்திய மாநில அரசாங்கங்களிடையே முரண்பாடுகள் தோன்றும்போது அவைகள் தீர்க்கப்பட வேண்டிய முறைகளும் கூறப்பட்டிருக்கும்.

அமெரிக்க அரசியலமைப்பு அதிகாரப்பிரிவினையைக் கொண்டுள்ளது. அரசாங்கத்தின் முப்பெரும் பிரிவுகளான சட்டத்துறை, நிர்வாகத்துறை, நீதித்துறை ஆகியவைகளின் அமைப்புக் கூறப்பட்டிருக்கும். இவைகளின் அதிகாரங்கள் அரசியல் அமைப்பில் வரையறுக்கப்பட்டிருக்கும். இவைகள் தங்கள் அதிகார வரம்பை மீறும்போது அது தடுக்கப்படுவதற்கான வழிகள் சொல்லப்பட்டிருக்கும். குடியரசு தலைவரின் மறுப்பாணை அதிகாரமும் (Veto Power), நீதிமன்றங்கள் பாராளுமன்றச் சட்டங்களை அரசியலமைப்பிற்கு முரண் எனக் கூறிச் செல்லுபடியற்றதாக்கும் அதிகாரங்களும் சொல்லப்பட்டிருக்கும். அதிகாரக்குவிப்பை அடிப்படையாகக்

கொண்ட அரசியலமைப்பில் இவ்விவரங்கள் மூலக்கூறுகளாக அமைந்திருக்க வேண்டியதில்லை.

அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று எண்ணும் போது அதற்கேற்ப அரசியலமைப்பில் விவரங்கள் விரிவாகவும் தெளிவாகவும் குறிக்கப்பட்டிருக்க வேண்டும். ஒன்றிய அரசாயினும் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த விரும்பினுல் அரசாங்கத்தின் அமைப்பு அவைகளின் அதிகாரங்கள் ஆகியன விரிவாகக் கூறப்படவேண்டும். எனவே, அரசியலமைப்பு வடிப்பவர்களின் நோக்கமும், மக்களின் விருப்பமும், நாட்டின் தேவையும், அரசியல் தத்துவமும், வாழ்க்கைத் தத்துவமும் அரசியலமைப்பில் பிரதிபலிப்பதை நாம் காண்கிறோம். எடுத்துக்காட்டாக, சோவியத் ரஷ்யாவின் பொருளாதாரத் தத்துவமும், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பொருளாதாரத் தத்துவங்களும் மாறுபடுகின்றன. சோவியத் ரஷ்யா பொதுவுடைமைக் கோட்பாட்டையும், அமெரிக்க ஐக்கிய நாடுகள் முதலாளித்துவக் கோட்பாட்டையும் பொருளியல் தத்துவங்களாகக் கொண்டுள்ளன. அரசியல் அமைப்புகள் இத் தத்துவங்களுக்கேற்ப மூலக்கூறுகள் கொண்டதாக அமைகின்றன.

### அரசியல் அமைப்பின் முகப்பு

அரசியல் அமைப்புகளின் முகப்பும் (Preamble of Constitution) அரசியலமைப்பின் மூலக்கூருகவே கொள்ளப்படுகின்றது. சில அரசியலமைப்புகள் முகப்பையுடையனவாகவும், வேறுசில அரசியல் அமைப்புகள் முகப்பற்றனவாகவும் உள்ளன. அரசியலமைப்பின் முகப்பு அரசியலமைப்பு முழுவதையும் சுருங்கக் கூறுவதாகவும், அரசின் நோக்கத்தையும், அடைய வேண்டிய குறிக்கோளையும் கொண்டதாகவும் அமைகின்றது. இந்திய அரசியல் அமைப்பில் முகப்பு இந்த அரசின் நோக்கத்தையும் குறிக்கோளையும் கூறுவதை நாம் கீழே காணலாம்.

இந்திய மக்களாகிய நாம் இந்தியாவை இறைமை அதிகாரமுடைய மக்களாட்சிக் குடியரசாக நிறுவ உளமார உறுதி கூறுகிறோம்.

நாட்டின் குடிகளுக்கெல்லாம் சமூகப் பொருளாதார அரசியல் நீதியையும், பேச்சு, சிந்தனை, கோட்பாடு, சமயம், வழிபாடு ஆகியவற்றில் முழு உரிமையையும்,

வாழ்க்கை நிலையிலும் வாய்ப்புகளிலும் சமத்துவத்தையும் பெற்றுத்தர விழைவதுடன்,

அவர்களிடையே சகோதரப் பண்பை வளர்த்து, தனி மனித னது உயர்தகுதியையும், நாட்டின் ஒற்றுமையையும் நிலைநாட்டுவ தாக உறுதி கூறுகின்றோம்.

1949ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 26ஆம் நாளாகிய இன்று நமது அரசியல் நிர்ணயசபையில் இந்த அரசியலமைப்பை ஏற்றுச் சட்டமாக இயற்றுகிறோம்.[1]

நீதி, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியன நமது அரசியலமைப்பின் அடிப்படைக் கோட்பாடுகளாகும் என்பதை இம்முகப்பிலிருந்து அறியலாம். அரசியலமைப்பின் முகப்புகளும் மூலக்கூறுகளைக் காட்டுவனவாக அமைகின்றன.

**அடிப்படை உரிமைகளும் கட்டுப்பாடுகளும் :**

அடிப்படையுரிமைகளும் அவைகளின் மீதுள்ள கட்டுப்பாடு களும் அரசியலமைப்பின் உட்பகுதியாகச் சில அரசியல் அமைப்பு களில் விளங்குகின்றன. பிரான்சு நாட்டின் புரட்சியின் பலனாகத் தோன்றிய மனித உரிமைப் பிரகடனங்கள் அடிப்படை உரிமை களுக்கு ஆதாரங்களாக அமைகின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியல் அமைப்பில் அடிப்படையுரிமைகள் சேர்க்கப் பட்டுள்ளன. இந்திய அரசியலமைப்பிலும் அடிப்படை உரிமைகள் சேர்க்கப்பட்டுள்ளன. சமத்துவத்திற்கான உரிமை, சுதந்திரத்திற் கான உரிமை, சுரண்டப்படாமலிருப்பதற்கான உரிமை, சமஉரிமை, கல்வி கலாச்சார உரிமைகள், சொத்துரிமைகள், அரசியலமைப்பின் படி பரிகாரம் தேடும் உரிமை என உரிமைகள் இந்திய அரசிய லமைப்பின் உட்பகுதியாக விளங்குகின்றன. மேலும் பேச்சு, எழுத்துச் சுதந்திரம், ஆயுதமின்றி அமைதியாகக்கூடும் சுதந்திரம், சங்கங்கள் அமைக்கும் சுதந்திரம், இந்திய நிலப்பரப்பிற்குள் எங்கு வேண்டுமானாலும் செல்லும் சுதந்திரம், சொத்துகளை வாங்கவோ, வைத்திருக்கவோ, விற்கவோ உள்ள சுதந்திரம், எத்தொழிலையும்

[1] Preamble of the Constitution of India :
'WE THE PEOPLE OF INDIA, having solemnly resolved to Constitute India into a SOVEREIGN DEMOCRATIC REPUBLIC and to secure to all its citizens:
JUSTICE, social, economic and political;
LIBERTY of thought, expression, belief, faith and worship;
EQUALITY of status and of opportunity; and to promote among them all
FRATERNITY assuring the dignity of the individual and the unity of the Nation;
IN OUR CONSTITUENT ASSEMBLY this 26th day of November, 1949, do
HEREBY ADOPT, ENACT AND TO GIVE TO OURSELVES THIS CONSTITUTION.'

செய்யும் சுதந்திரம் எனச் சுதந்திரங்களும் இந்திய அரசியலமைப்பில் அடங்கியுள்ளன. அடிப்படையுரிமைகளை அரசியல் அமைப்பில் சேர்ப்பதன் மூலம் அவைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கப்படுகின்றது.

ஆனால், இவ்வுரிமைகளைக் கட்டுப்படுத்தவும் அரசியல் அமைப்பிலேயே வகைசெய்யப்பட்டுள்ளது. பேச்சுரிமை, பத்திரிக்கையுரிமை, ஊர்வல உரிமை ஆர்ப்பாட்ட உரிமை ஆகியன கட்டுப்படுத்தப்படாவிடினும், இவைகள் அளவிற்கு மீறிச் செல்லும்போது தீங்குகள் விளையும். எனவே, இவ்வுரிமைகளைக் கட்டுப்படுத்தவேண்டியுள்ளது. மேலும், அயல்நாட்டு ஆக்கிரமிப்பின்போதும், உள்நாட்டுக் குழப்பங்களின்போதும் இந்த அடிப்படை உரிமைகள் மீது கட்டுப்பாடு விதிக்க வேண்டி உள்ளது. இக் கட்டுப்பாடுகளும் அரசியல் அமைப்பில் சொல்லப்பட்டுள்ளன. ஆனாலும், இக் கட்டுப்பாடுகளின் அளவும் காலமும் வரையறுக்கப்பட்டுள்ளன. இவ்வரையறையில்லாவிடில் அடிப்படை உரிமைகளின் மீதான கட்டுப்பாடுகள் அதிகரித்து உரிமைகளே அழிக்கப்படும் நிலையும் ஏற்படலாம். எனவே, இவைகளுக்கான விதிமுறை அரசியலமைப்பில் தெளிவுபடக் கூறப்படவேண்டும்.

### அரசாங்க அமைப்பு

அரசாங்க அமைப்புப்பற்றிய செய்தியும் அரசியல் அமைப்பில் அடங்கும். மத்திய அரசாங்கத்தின் சட்டமன்றம், நிருவாகத் துறை, நீதித்துறை ஆகியவைகளின் அமைப்பும் அதிகாரங்களும் சொல்லப்பட்டிருக்கும். அதே போல மாநில அரசாங்கங்களின் அமைப்பும் அதிகாரங்களும் குறிப்பிடப்பட்டிருக்கும். சட்டம் இயற்றுவதில், நிருவாகத்தில், நீதி பகர்வதில் மத்திய மாநில அரசாங்கங்களிடையே உள்ள தொடர்பும் அரசியலமைப்பின் அடக்கமாக அமையும். இவ்விரு அரசாங்கங்களிடையே உள்ள நிதித்துறை உறவுகளும் பொருளாதார உறவுகளும் குறிப்பிடப்பட்டிருக்கும்.

### அரசியலமைப்பைத் திருத்தும் முறை

ஒன்றிய அரசியலமைப்பாயின் பொதுவாக அரசியல் அமைப்பைத் திருத்துவதற்கோர் தனிமுறை இருக்காது. சாதாரணச் சட்டத்தைத் திருத்துவது போல் திருத்தலாம். இருப்பினும், ஒன்றிய அரசியலமைப்பு நெகிழ்வற்றதாயின் அதைத் திருத்துவதற்கான தனி முறைகள் குறிப்பிடப்பட்டிருக்கும். ஆனால், கூட்டாட்சி அமைப்பாயின் அரசியலமைப்பைத் திருத்துவதற்கென்று தனிமுறை வகுக்கப்பட்டிருக்கும். அரசியல் அமைப்பு மூலமுதற் காரணமுடையதாலும், உரிமைகளின் தோற்றுவாயாக இருப்ப

தாலும், அதிகாரங்களின் பிறப்பிடமாக விளங்குவதாலும், அதை மத்திய அரசாங்கமோ மாநில அரசாங்கமோ தனித்துத் திருத்த இயலாது. திருத்துவதற்கெனத் தனி முறை வகுக்கப்பட்டிருக் கும். இம்முறை அரசியலமைப்பின் மூலக்கூருக விளங்கும்.

எடுத்துக்காட்டாக, அமெரிக்க அரசியலமைப்பைத் திருத்து வதற்கென அவ்வரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள முறைகளைக் காணலாம். அரசியலமைப்புத் திருத்தப் பிரேரணை கூட்டாட்சி அரசாங்கத்தின் பாராளுமன்றத்தின் இரு அவைகளிலும் மொத்த உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கினரால் ஏற்றுக்கொள்ளப் பட வேண்டும். பாராளுமன்றம் ஏற்றுக்கொண்ட அரசியல் திருத் தம் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மொத்த மாநிலங்களில் நான்கில் மூன்று பகுதியினரால் ஒப்புதல் செய்யப்படவேண்டும். அப்போதுதான் அரசியலமைப்புத் திருத்தம் நிறைவேறும். அல்லது அரசியலமைப்புத்திருத்தம் கோரி மூன்றில் இரண்டு பங்கு மாநிலங்கள் விண்ணப்பித்தால் மத்தியப் பாராளு மன்றம் ஒரு சிறப்புக் கூட்டத்தைக் கூட்டும். அச் சிறப்புக் கூட்டம் ஏற்ற அரசியலமைப்புத் திருத்தத்தை நான்கில் மூன்று பகுதி மாநிலங்களின் சிறப்புக் கூட்டங்களும் ஏற்க வேண்டும். அப்போதுதான் அமெரிக்கக் கூட்டாட்சியின் அரசியலமைப்புத் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டதாகக் கருதப்படும். மாநிலங் களின் எல்லையைத் திருத்தி மாற்றவேண்டுமென்ருல் சம்பந்தப் பட்ட மாநிலங்களின் சட்டமன்றங்கள் ஏற்க வேண்டும். மேலும், மத்தியப் பாராளுமன்றமும் ஒப்புதல் அளிக்கவேண்டும். அரசிய லமைப்புத் திருத்தத்திற்கான இம்முறை அரசியலமைப்பில் கூறப் பட்டு அதன் உட்பகுதியாக அமைகின்றது.

இங்கிலாந்து நாட்டில் அரசியலமைப்புத் திருத்தம் சாதாரணச் சட்டம்போல நடைபெறும். மக்களவையில் பெரும்பான்மையின ரால் ஏற்றுக்கொள்ளப்பட்டதும், உயர்குடியினர் அவைக்குச் சட்ட முன்வடிவம் அனுப்பப்படும். அவர்களிலும் சாதாரணப் பெரும் பான்மையினர் ஏற்றதும் சட்டமுன்வடிவம் அரசியார் அவர்களின், ஒப்புதலுக்கு அனுப்பப்படும். அரசியார் ஒப்புதல் அளிப்பின், அந்த அரசியல் அமைப்புத் திருத்தச் சட்டமுன்வடிவம் சட்ட மாகும்.

இந்திய அரசியலமைப்பிலும் அரசியலமைப்புத் திருத்தத் திற்கான தனிமுறை வகுக்கப்பட்டுள்ளது. இவைகளைப் பிறிதோர் பகுதியில் விரிவாகக் காணலாம். எனவே, அரசியலமைப்புத் திருத்த முறையும் அரசியலமைப்பின் உட்பகுதியாக விளங்கும்.

## சில நாடுகளின் அரசியலமைப்பின் மூலக்கூறுகள்

### இந்திய அரசியலமைப்பின் மூலக்கூறுகள்

அரசியலமைப்புகளின் உட்பகுதி, உட்பொருள், உள்ளடக்கம் ஆகியனவற்றைக் காண இந்திய அரசியலமைப்பின் மூலக்கூறு களைக் காணல் பருப்பொருள் எடுத்துக்காட்டாக அமையும்.

இந்திய அரசியலமைப்பு முகப்புடன் தொடங்குகிறது. முதல் பகுதியில் யூனியனின் இலக்கணமும், அதில் அடங்கியுள்ள ஆட்சி நிலங்களும் சொல்லப்பட்டிருக்கிறது. பகுதி இரண்டில் குடியுரிமை கூறப்படுகிறது.

பகுதி மூன்று அடிப்படையுரிமைகளையுடையதாக உள்ளது. இதில் சமத்துவ உரிமை, சுதந்திர வாழ்வு பெறும் உரிமை, சுரண் டலுக்கு எதிரான பாதுகாப்பு உரிமை, விரும்பிய சமயத்தைப் பின்பற்றும் உரிமை, பண்பாடு மற்றும் கல்வி கற்பதில் உரிமைகள், சொத்துரிமை, அரசியல் அமைப்பிற்குட்பட்டுப் பரிகாரம் தேடும் உரிமை ஆகிய ஆதார உரிமைகள் பேசப்படுகின்றன. பகுதி நான்கு அரசின் நெறிமுறைக் கோட்பாடுகளைக் கூறுகின்றது.

இந்திய அரசியலமைப்பின் பகுதி ஐந்து, மத்திய அரசாங் கத்தைப் பற்றிய அமைப்பையும் அதிகாரங்களையும் கூறுகின்றது. மத்திய நிருவாகத்துறை, குடியரசு தலைவர், உபதலைவர், அமைச் சரவை, மத்திய அரசாங்கத் தலைமை வழக்கறிஞர் ஆகியோர் பற்றிப் பகுதி ஐந்தின் பிரிவு ஒன்று கூறுகின்றது.

பாராளுமன்ற அலுவல்களின் நடைமுறை, உறுப்பினர் களின் தகுதிகள், பாராளுமன்ற உறுப்பினர்களுக்கு அளிக்கப்பட் டுள்ள அதிகாரங்களும், சலுகைகளும், பாதுகாப்புகளும், சட்டம் இயற்றுவதற்கான நடைமுறை, பணநிதி மசோதாக்கள் சட்டமா கும் நடைமுறை, பொது விதிமுறைகள் ஆகியன பற்றிப் பகுதி ஐந் தின் பிரிவு இரண்டில் காணலாம். இந்தியக் குடியரசுதலைவரின் சட்டம் இயற்றும் அதிகாரங்களைப் பற்றிப் பகுதி ஐந்தின் பிரிவு மூன்றில் குறிப்பிடப்படுகிறது.

மத்திய நீதித்துறை, இந்தியாவின் தலைமை நீதிமன்றத்தின் பணிகள், அரசியலமைப்பிற்கு விளக்கம், நீதிபதிகளின் நியமன மும், தகுதிகளும், நீதிபதிகளின் பதவிக்காலமும் பதவியிலிருந்து நீக்கப்படும் முறையும், தலைமை நீதிமன்றத்தின் அதிகாரங்கள், தலைமை நீதிமன்றத்தின் நடைமுறை பற்றிய விதிகள் ஆகியன

பற்றிப் பகுதி ஐந்தின் பிரிவு நான்கில் சொல்லப்படுகின்றது. இந்தியாவின் தலைமைக் கணக்காயர் பற்றிப் பகுதி ஐந்தின் பிரிவு ஐந்தில் கூறுகின்றது.

இந்திய அரசியலமைப்பின் பகுதி ஆறில் மாநிலங்கள் பற்றிய அமைப்பும், அலுவலர்களும் அவர்களது அதிகாரங்களும், அரசாங்க நடைமுறைகளும் கூறப்படுகின்றன. மாநிலத்தின் இலக்கணம் பகுதி ஆறின் பிரிவு ஒன்றில் கூறப்படுகின்றது. மாநில நிருவாகம், ஆளுநர், அமைச்சரவை, மாநில அரசாங்கத் தலைமை வழக்கறிஞர் ஆகியோர் பற்றிப் பகுதி ஆறின் பிரிவு இரண்டில் காணலாம்.

மாநிலச் சட்டமன்றங்களின் அமைப்பு, மாநிலச் சட்டமன்ற அலுவலர்கள், அரசாங்க அலுவல்களின் நடைமுறை, அங்கத்தினர்களின் தகுதிகள், மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரங்களும், சலுகைகளும், பாதுகாப்புகளும், சட்டம் இயற்றுவதற்கான நடைமுறை, நிதி சட்டமுன்படிவம் சட்டமாகும் நடைமுறை பொது விதிகள் பற்றிய அரசியல் அமைப்பின் பகுதி ஆறின் பிரிவு மூன்றில் அடங்கும். ஆளுநரின் சட்டம் இயற்றும் அதிகாரம் பகுதி ஆறின் பிரிவு நான்கிலும், மாநில நீதித்துறையும், மாநிலங்களின் உயர்நீதிமன்றங்களும் பகுதி ஆறின் பிரிவு ஐந்திலும், கீழ் நீதிமன்றங்கள் பகுதி ஆறின் பிரிவு ஆறிலும் அரசியலமைப்பின் மூலக்கூருக உள்ளன.

மத்திய அரசாங்கத்தின் ஆளுகையிலுள்ள நிலப்பகுதிகள் பகுதி எட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன. அரசியலமைப்பின் பகுதிகள் ஏழும் ஒன்பதும் ரத்து செய்யப்பட்டுள்ளன. அட்டவணைப் பகுதிகளும், பிற்பட்ட நிலப்பகுதிகளும் பகுதி பத்தில் சொல்லப் பட்டுள்ளன.

மத்திய மாநில அரசாங்கங்களுக்கு இடையே உள்ள உறவுகள் அரசியலமைப்பின் பகுதி பதினொன்றில் கூறப்படுகிறது. சட்டத்துறையிலுள்ள உறவும், சட்டம் இயற்றலில் அதிகாரப் பகிர்வும் பகுதி பதினொன்றின் பிரிவு ஒன்றில் உள்ளன. நிருவாக உறவுகளும், தண்ணீர் சம்பந்தமான தகராறுகளும், மாநிலங்களிடையே ஒத்துழைப்பும் பகுதி பதினொன்றின் பிரிவு இரண்டில் அடங்கியுள்ளன.

நிதி, சொத்து, ஒப்பந்தங்கள், வழக்குகள் ஆகியன பற்றி அரசியலமைப்பின் பகுதி பன்னிரண்டு கூறுகின்றது. நிதியும், நிதி சம்பந்தமான பொது விதிகளும் இப்பகுதியின் பிரிவு ஒன்றில்

உள்ளன. கடன்பெறுதல் பற்றியன இப்பகுதியின் பிரிவு இரண்டில் உள்ளன. சொத்துகள், ஒப்பந்தங்கள், உரிமைகள், பொறுப்புகள், கடமைகள், வழக்குகள் ஆகியனபற்றி இப்பகுதியின் பிரிவு மூன்று சொல்கின்றது.

தொழில், வாணிபம், இந்திய மாநிலங்களுக்கிடையே தொடர்பு ஆகியன இந்திய அரசியல் அமைப்பின் பகுதி பதின்மூன்றிலும், மத்திய மாநில அரசாங்கப் பணிகளும், அரசாங்கப் பணிகளுக்கான தேர்வாணைக் குழுக்களும் பற்றிப் பகுதி பதினான்கிலும், தேர்தல்கள் பற்றிப் பகுதி பதினைந்திலும், சில வகுப்பாளர்களுக்கான சிறப்புச் சலுகைகள் பற்றிப் பகுதி பதினாறிலும் காணலாம்.

இந்திய அரசியலமைப்பின் பகுதி பதினேழு ஆட்சிமொழி பற்றிக் கூறுகின்றது. மத்திய அரசாங்கத்தின் ஆட்சிமொழி, பிரதேசமொழிகள், தலைமை நீதிமன்றம், உயர்நீதிமன்றங்கள் ஆகியவற்றின் ஆட்சிமொழி, தனி நெறிமுறைகள் ஆகியன பற்றியும் இப்பகுதியில் சொல்லப்படுகின்றன. இப்பகுதியில் நான்கு பிரிவுகள் உள்ளன.

அரசியலமைப்பின் பதினெட்டாவது பகுதி நெருக்கடிநிலைகள் பற்றியும், பத்தொன்பதாவது பகுதி பலபொருள் பற்றியும், இருபதாவது பகுதி அரசியலமைப்புத் திருத்தம் பற்றியும், இருபத்தொன்றாவது பகுதி தற்காலிக மாற்றுமுறைகள் பற்றியும், இருபத்திரண்டாவது பகுதி தலைப்புச் சுருக்கம், நடைமுறைக்கு வருதல், ரத்து செய்தல் பற்றியும் கூறுகின்றன.

இந்திய அரசியலமைப்பின் இணைப்பில் ஒன்பது அட்டவணைகள் அடங்கியுள்ளன. முதலாவது அட்டவணையில் மாநிலங்களின் பெயரும், மத்திய அரசாங்கத்தின் நேரடி ஆட்சியிலுள்ள நிலப்பரப்புகளின் பெயர்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இரண்டாவது அட்டவணையில் குடியரசு தலைவர், மாநில ஆளுநர் ஆகியவர்களுக்கான ஏற்பாடுகளும், மத்தியப் பாராளுமன்றத்தின் அலுவலர்கள், மாநிலச்சட்டமன்றங்களின் அலுவலர்கள் ஆகியவர்களுக்கான ஏற்பாடுகளும், தலைமை நீதிமன்ற உயர்நீதிமன்ற நீதிபதிகளுக்கான ஏற்பாடுகளும், இந்தியத் தலைமைக் கணக்காயருக்கான ஏற்பாடுகளும் மூலக்கூறுகளாக உள்ளன. மூன்றுவது அட்டவணையில் பதவியேற்பு உறுதிமொழிப்படிவங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. நான்காவது அட்டவணையில் மாநிலங்களுக்கு மேலவையில் இடஒதுக்கீடுகள் சொல்லப்பட்டுள்ளன. ஐந்தாவது அட்டவணையில் அட்டவணைப்பகுதிகள், அட்டவணை இனங்கள்

ஆகியவைகளின் நிருவாக ஏற்பாடுகள் பற்றிக் கூறப்பட்டுள்ளன. ஆறுவது அட்டவணையில் அஸ்ஸாமிலுள்ள பிற்பட்ட பகுதிகளின் நிருவாகத்திற்கான ஏற்பாடுகள் உள்ளன. ஏழாவது அட்டவணை யில் மத்திய அரசாங்கத்தின் அதிகாரப் பட்டியல், மாநில அரசாங் கங்களின் அதிகாரப்பட்டியல், மத்திய மாநில அரசாங்கங்களுக் கான பொதுப்பட்டியல் ஆகியன இடம் பெறுகின்றன. எட்டாவது அட்டவணையில் பதினுன்கு மொழிகளின் பட்டியல் உள்ளது. ஒன்பதாவது அட்டவணையில் சட்டங்கள், விதிகள் சிலவற்றின் செல்லுபடித்தன்மைகள் கூறப்பட்டுள்ளன.

இந்திய அரசியலமைப்பில் இருபத்திரண்டு பகுதிகளும் (Parts), 395 அரசியலமைப்பு விதிகளும் (Articles of Constitution), ஒன்பது அட்டவணைகளும் (Schedules) உள்ளன.

இந்திய அரசியலமைப்பின் பரந்த எல்லைக்கோடுகளிலிருந்து சாதாரணமாக ஒவ்வோர் அரசியலமைப்புகளிலும் என்னென்ன ஏற்பாடுகள் இருக்கும் என்பதையும், மூலக்கூறுகள் என்னென்ன இருக்கலாம் என்பதையும் அறியலாம்.

### சுவிட்ஸர்லாந்து அரசியலமைப்பின் மூலக்கூறுகள்

சுவிட்ஸர்லாந்து அரசியலமைப்பில் மூன்று அத்தியாயங்களும் (Chapters) 123 அரசியலமைப்பு விதிகளும் உள்ளன. முதல் அத் தியாயத்தில் கூட்டாட்சி அலுவலர்கள் பற்றியும், மூன்ருவது அத்தியாயத்தில் கூட்டாட்சி அரசியலமைப்பு மாற்றம் (Revision) பற்றியும் கூறப்படுகின்றன. மேலும் அரசியலமைப்பு ஒரு முகப் புடன் ஆரம்பிக்கிறது.

இறைவனது பெயரால் கூட்டாட்சி அமைப்பதாகவும், ஒற் றுமை, வலிமை, மதிப்பு இவைகளைக் காப்பதாகவும், இணைப் பரசை வலுப்படுத்திக் கூட்டரசை நிறுவுவதாகவும் அரசியல் அமைப்பின் முகப்புக் கூறுகின்றது.

முதலாவது அத்தியாயம் மக்களின் அடிப்படை உரிமைகளை யும், கோட்டங்களின் (Contons) சுதந்திரத்தையும் வலியுறுத்து கிறது. கோட்டங்களிடையே உள்ள உறவுகள் பற்றியும், கூட் டாட்சி அரசாங்கத்திற்கும் கோட்டங்களுக்கும் உள்ள உறவுகள் பற்றியும் கூறுகின்றது. முதலாவது அத்தியாயத்தில் எழுபது அரசியலமைப்பு விதிகள் உள்ளன.

இரண்டாவது அத்தியாயத்தில் நாற்பத்தெட்டு அரசிய லமைப்பு விதிகள் உள்ளன. கூட்டாட்சி அரசாங்கத்தின் இரு

சபைகளான தேசிய சபை, மாநிலங்களின் சபை ஆகியன பற்றியும், கூட்டாட்சியின் தலைவர், உபதலைவர் பற்றியும், கூட்டாட்சி நீதிமன்றம் பற்றியும், கூட்டாட்சி நீதி விசாரணை மன்றம் பற்றியும், கூட்டாட்சியின் நிருவாக நடவடிக்கைகள் பற்றியும் இவ்வத்தியாயத்தில் காணலாம்.

மூன்றுவது அத்தியாயம் அரசியலமைப்புத் திருத்தத்திற்கான வழிமுறைகளை வகுத்துள்ளது. இவ்வத்தியாயத்தில் தபால்துறை, சுங்கத்துறை, இராணுவச்செலவுகள், கூட்டாட்சிச் சட்டங்கள் ஆகியன பற்றிய இடைக்கால ஏற்பாடுகள் (Transiretory Provisions) பற்றியும் காணலாம். இவ்வத்தியாயத்தில் ஏழு அரசியலமைப்பு விதிகள் உள்ளன.

**பிரான்சின் புது அரசியலமைப்பின் மூலக்கூறுகள்**

பிரான்சின் அரசியலமைப்பில் ஒரு முகப்பும், பதினைந்து தலைப்புகளும் (Title), 92 அரசியலமைப்பு விதிகளும் உள்ளன.

பிரான்சின் அரசியலமைப்பு முகப்பு 1789ஆம் ஆண்டின் அவர்களது மனித உரிமைப் பிரகடனத்தைப் பெருமையுடன் கூறி, அதை நிலைநாட்டவும் பின்பற்றவும் உறுதியெடுத்துக்கொள்கின்றது.

இறைமை, குடியரசு தலைவர், அரசாங்கம், பாராளுமன்றம், பாராளுமன்றத்திற்கும் அரசாங்கத்திற்கும் உள்ள தொடர்பு உடன்படிக்கைகளும், சர்வதேச உடன்பாடுகளும், அரசியலமைப்பு சபை (Constitutional Council) நீதித்துறை அலுவலர், உயர்நீதிமன்றம், பொருளாதார சமுதாய சபை, நிலப்பகுதிகள், சமுதாயம், இணைப்பு ஒப்பந்தம், அரசியலமைப்புத் திருத்தம், தற்காலிக ஏற்பாடுகள் பற்றிய விதிமுறைகள் பிரான்சு நாட்டின் அரசியலமைப்பின் மூலக்கூறுகளாக விளங்குகின்றன.

**ஜப்பான் அரசியலமைப்பின் மூலக்கூறுகள்**

ஜப்பான் அரசியலமைப்பு ஒரு முகப்புடன் தொடங்குகிறது. 108 அரசியலமைப்பு விதிகள் பதினோர் அத்தியாயங்களில் அடக்கப்பட்டுள்ளன. ஜப்பான் அரசியலமைப்பின் பரந்த எல்லைக் கோடுகளைக் கண்டு அதன் மூலக்கூறுகளை அறியலாம்.

அரசர், போரைத் துறத்தல், மக்களின் உரிமைகளும் கடமைகளும், 'டையட்' என்னும் பாராளுமன்றம், அமைச்சரவை, நீதித்துறை, நிதி, ஸ்தல சுய ஆட்சி, அரசியலமைப்புத் திருத்தங்கள்,

அரசியலமைப்புச் சட்டத்தின் மேலாண்மை, துணை ஏற்பாடுகள்-பற்றியவைகளை ஜப்பானின் அரசியலமைப்புக் கூறுகிறது. இவைகள் அரசியலமைப்பின் மூலக்கூருக அமைந்துள்ளன.

பொதுவாகக் காணுமிடத்து, அரசியலமைப்பில் அரசாங்க நிறுவனங்கள், அவைகளின் அமைப்புகள், அவைகளின் அதிகாரங்கள், மக்களின் உரிமைகள், அரசியலமைப்புத்திருத்த முறை ஆகியன அடங்கும்.

## முக்கிய வினுக்கள்

1. ஒன்றிய அரசு அமைப்பின் மூலக்கூறுகளுக்கும், கூட்டாட்சி அரசு அமைப்பின் மூலக்கூறுகளுக்கும் வேறுபாடு காண்க.
2. ஏதாவது ஓர் அரசின் அரசியலமைப்பின் மூலக்கூறுகளைக் கூறி வாதிடுக.
3. அரசியலமைப்புச் சட்டம் என்ற சொற்றொடரை விளக்கி அதன் மூலக்கூற்றை வாதிட்டுக் காண்க. (செ. ப. க. ஏப்ரல் 1973)

## இ. அரசியலமைப்பின் ஆற்றலதிகாரம்
## (Sanction of the Constitution)

[சட்டத்தின் ஆற்றலதிகாரம்

**அரசியலமைப்பின் ஆற்றல்:** அரசாங்கத்தின் ஆற்றல் — அரசியலமைப்பின் ஆற்றல் — அரசியல் நிர்ணய சபை—அரசியலமைப்புகளின் முகப்பு—அரசியலமைப்பின் மேலாண்மை — ஆற்றலின் பயன்கள்.]

### சட்டத்தின் ஆற்றலதிகாரம்

சட்டம் மதிக்கப்படுவதற்கும், அது பின்பற்றப்படுவதற்கும் உள்ள காரணங்களே சட்டத்தின் ஆற்றலதிகாரம் எனப்படும். சட்டம் சட்டமாகக் கடைப்பிடிக்கப்படுவதற்குக் காரணங்கள் உள்ளன.

சமய நம்பிக்கையால் மக்கள் சட்டத்திற்குப் பணிகின்றனர். இவ்விடத்துச்சமய நம்பிக்கை சட்டத்தின் ஆற்றலாக அமைகிறது. சட்டம் நீதியின் அடிப்படையில் தோன்றியதால் சட்டத்தைப் புறக்கணிப்பது நீதியையும் தர்மத்தையும் புறக்கணிப்பதாகும். இவைகளைப் புறக்கணிக்கும்போது தெய்வ நிந்தனைக்கு ஆளாக வேண்டுமென்ற அச்சம் தோன்றுகிறது. தீங்குகளும் தெய்வத் தால் தண்டனையும் நீதியின்பாற்பட்ட சட்டத்தைப் பிழைத் தோர்க்கு வந்தடையும். இந்தச் சமய நம்பிக்கைகள் மக்களைச் சட்டத்திற்குப் பணியச் செய்கிறது. இதனால் சட்டம் தனது ஆற்றலைப் பெறுகிறது.

நீதி உணர்வு தனிமனிதனின் உட்கிடக்கையாகும். ஒவ் வோர் உண்மைக் குடிமகனும் சட்டத்தைக் கடைப்பிடிக்க வேண் டிய கடப்பாடு உடையவனாகிறான். மக்களுக்குள்ள இந்த நீதி யுணர்வே சட்டத்தின் ஆற்றலாக அமைகிறது. சாக்ரடீஸ் தமது நீதி உணர்வின் காரணமாகச் சிறையிலிருந்து தப்பிச் செல்ல நண் பர்கள் வழி வகுத்தும் செல்ல மறுத்துவிட்டார். ஆனால், இந்த நீதியுணர்வு ஒருசிலரிடமேதான் காணப்படுகிறது. எனவே, சட்டத்திற்குச் சட்டப்படியான ஆற்றல் தேவைப்படுகிறது.

சட்டரீதியான ஆற்றல் சட்டத்திற்கு உண்டு. இந்த ஆற்ற லினால் உரிமை வழக்குகளில் சட்டம் உரிமையை மீட்டு அளிக் கிறது. குற்றவழக்குகளில் குற்றவாளியைத் தண்டிக்கிறது. எனவே, உரிமையியல் சட்டமும் குற்றவியல் சட்டமும் மதிக்கப் பட்டு மக்களால் பின்பற்றப்படுகின்றன.

அரசாங்கத்தின் வலிமையும் தண்டனையும் சட்டத்திற்கு அதி காரத்தையும், மதிப்பையும், ஆற்றலையும் அளித்து மக்களைப் பணிய வைக்கிறது என ஜான் ஆஸ்டின் கூறுகிறார். அரசாங்கத்தின் சட்டங்களுக்குப் பணியாவிடில் தண்டனையும் துன்பமும் கிடைக் கும். சாலமன் கூற்றுப்படியும், சட்டம் சட்டமாக நடைமுறைப் படுத்தப் படுவதற்கு அரசின் வலிமையும் தண்டனையும் அவசிய மாகும்.

அரசின் சட்டங்கள் மதிக்கப்படுவதற்குச் சட்டங்களுக்கு அதிகாரமும் ஆற்றலும் வேண்டும். இச் சட்டங்களை இயற்றி நடைமுறைப்படுத்தும் அரசாங்கத்திற்கு ஆற்றல் வேண்டும். இவ்வரசாங்கத்தைத் தோற்றுவித்த அரசியலமைப்பிற்கு ஆற்றல் வேண்டும். இவ்வதிகாரங்கள் எவ்விதம் எங்கிருந்து கிடைக் கின்றன என்பது பற்றித் தொடர்ந்து காண்போம்.

## அரசியலமைப்பின் ஆற்றல்

அரசியலமைப்பிற்கு அரசாங்கம் கட்டுப்படுகிறது. அரசாங்கம் என்று சொல்லும்போது அதன் முப்பெரும் உறுப்புகளான சட்டத் துறை, நிருவாகத்துறை, நீதித்துறை ஆகியனவும் அடங்கும். சட்ட மன்றங்களும், செயலாட்சியினரும், நீதிமன்றங்களும் அரசியலமைப்பிற்கு அடங்கியே ஒழுகுகின்றன. அரசியலமைப்பிற்கு முரணுகச் செல்லத் துணிவதில்லை. அரசியலமைப்பிற்குக் கட்டுப் படும் அரசாங்கத்திற்கும், அதன் விதிகளுக்கும் மக்கள் கட்டுப் படுகின்றனர். சட்டமன்றங்களின் சட்டங்களுக்குப் பணிகின் றனர். நீதித்துறை வழங்கும் தீர்ப்புகளுக்கு மதிப்பளிக்கின்றனர். எனவே, மக்கள் அரசாங்கத்திற்கு அடங்கியே நடக்கின்றனர். அரசாங்கம் அரசியலமைப்பிற்கு அடங்கிச் செயலாற்றுகிறது.

மக்கள் ஏன் அரசாங்கத்திற்குக் கட்டுப்படுகின்றனர். ஏன் அடங்கி நடக்கின்றனர்? அரசாங்கம் ஏன் அரசியலமைப்பைப் பின்பற்றுகிறது? அதன் விதிகளுக்கு ஏன் அடங்கி நடக்கிறது? மக்கள் பணிந்து நடக்கும் இந்த அரசாங்கத்தின் அதிகாரமும், ஆற்றலும் எங்கிருந்து வந்தது என்ற வினக்களைத் தோற்றுவித்து விடைகாணுதல் அவசியமாகிறது.

### அரசாங்கத்தின் ஆற்றல்

சட்டங்கள் இயற்றும் ஆற்றலும், அவைகளைச் செயல்படுத்தும் அதிகாரமும், அச்சட்டங்களுக்கு விளக்கம் கூறும் சக்தியும், அர சிற்கு உண்டு. இதனுல்தான் மக்கள் அரசாங்கத்தின் சட்டங்களை ஏற்கின்றனர். நீதிமன்றங்களின் தீர்ப்பை ஏற்கின்றனர். சட்டங் களுக்கும், தீர்ப்புகளுக்கும் பணிந்து நடக்கின்றனர். இந்த அதி காரத்தையும், ஆற்றலையும் அரசாங்கம் அரசியலமைப்பிலிருந்து பெற்றுள்ளது. எனவேதான், அரசாங்கம் தனது எஜமானராகிய அரசியலமைப்பிற்குப் பணிவதும், தனது குடிமக்களைப் பணிய வைப்பதுமாக இருக்கிறது. எனவே, அரசாங்கத்தின் ஆற்ற லுக்கும் அதிகாரத்திற்கும் மூலமும் தோற்றுவாயும் அரசிய லமைப்பாகும்.

### அரசியலமைப்பின் ஆற்றல்

அரசியலமைப்பு அரசாங்கத்தை அடக்கி ஆள்கிறது. அதன் வழியாக மக்களையும் பணியவைக்கிறது. அரசாங்கத்தைக் கட்டுப் படுத்தும் இந்த ஆற்றலை அரசியலமைப்பு எப்படிப் பெற்றது? இந்த அதிகாரத்தை அரசியலமைப்பிற்கு யார் அளித்தது? மக்க ளிடமிருந்து பெற்றது எனலாம். மக்களின் இறைமையே அரசிய லமைப்பை மேம்பாடு உடையதாக்கியது.

**அரசியல் நிர்ணயசபை**

அரசியலமைப்பைப் புனைந்த அரசியல் நிர்ணய சபை மக்களால் நிறுவப்பட்டது. மக்களின் பிரதிநிதிகள் அரசியலமைப்பை வகுத்தார்கள். எனவே, அரசியலமைப்பு மக்களின் ஒப்புதலின் விளைவாக உருவாக்கப்பட்டு, மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகும். மக்கள் தங்கள் இறைமை அதிகாரத்தைப் பயன்படுத்தி அரசியலமைப்பைத் தோற்றுவித்தனர். அரசியல் நிர்ணயசபைக் கோட்பாட்டின்படி மக்களின் அனுமதி பெருதவர் எவ்வளவு திறமையுடையவராயினும் அரசியலமைப்பை நிறுவக் கூடாது. அரசியலமைப்பை ஏற்படுத்துவதில் மக்களின் சுயேச்சையான ஒப்புதல் மிக அவசியமாகக் கருதப்படுகிறது.

**அரசியலமைப்புகளின் முகப்பு**

மக்களின் இறைமை ஆற்றலால் தோற்றுவிக்கப்பட்டதே அரசியலமைப்பு என்பதும், மக்களின் ஒப்புதலின் பேரில் இது தோற்றுவிக்கப்பட்டதையும், அரசியலமைப்புகளின் முகப்புகளிலிருந்து காணலாம்.

இந்திய அரசியலமைப்பின் முகப்பு கூறுவதாவது: 'இந்திய மக்களாகிய நாம் இந்தியாவை இறைமை அதிகாரமுள்ள மக்களாட்சிக் குடியரசாக நிறுவ உளமார உறுதி கூறுகிறேம் ...... 1949ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 26ஆம் நாளாகிய இன்று நமது அரசியல் நிர்ணய சபையில் இந்த அரசியலமைப்பை ஏற்றுச் சட்டமாக இயற்றுகிறேம்.' இவ்வாசகத்திலிருந்து அரசியலமைப்பை ஏற்படுத்தியதும் ஏற்றதும் மக்களேயாவர்.

பிலடெல்பியாவில் கூடிய அரசியல் நிர்ணய சபை 1789ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் பதினேழாம் நாள் அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கென்று ஓர் அரசியலமைப்பை வகுத்தது. மக்களின் இறைமையை இவ்வரசியலமைப்பின் முகப்புக் கூறுகிறது. 'ஐக்கிய நாடுகளின் மக்களாகிய நாம்... அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு இந்த அரசியலமைப்பை விதித்து நிறுவுகிறேம்.'[1] மக்களின் அரசியலமைப்பு மக்களால் மக்களுக்காக ஆக்கப்பட்டதாகும்.

[1]Preamble of the Constitution of America: 'We the people of the United States in order to form a mere perfect establish justice, insure domestic tranquillity, provide for the common defence, promote the general welfare and secure the blessings of liberty to ourselves and our posterity, do ordain and establish this constitution for the United States of America.'

ஜப்பான் நாட்டின் அரசியலமைப்பில் முகப்புக் கூறுவதாவது, 'ஜப்பானின் மக்களாகிய நாம் முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நமது தேசிய சபையின் வழியாக..... இறைமை மக்களிடையே இருக்கிறது என்பதைப் பிரகடனப்படுத்தி இந்த அரசியலமைப்பை உறுதியாக நிலைநாட்டுகிறோம்.'[2] இறைமை மக்களிடம் உள்ளது என்பதும் அரசியலமைப்பிற்கு ஆற்றல் அளிப்பது மக்களே என்பதும் இவற்றினின்றும் தெளிவாகத் தெரிகின்றது.

அரசியலமைப்புப் பிறரால் அளிக்கப்படுவது ஏற்புடையதாகாது. காமன் வெல்த் (Common Wealth) நாடுகளுக்கு இங்கிலாந்துப் பாராளுமன்றம் அரசியலமைப்புகளை இயற்றியது. கனடா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து ஆகிய நாடுகளின் அரசியலமைப்புகள் ஆங்கிலேயப் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்டனவாகும்.

அரசியலமைப்புகளை அந் நாட்டு மக்களோ, அவர்களது பிரதிநிதிகள் அடங்கிய அரசியல் நிர்ணய சபையோ உருவாக்க வேண்டும். அப்போதுதான் மக்களின் இறைமையின் வழியாக அரசியலமைப்புத் தோன்றியதாகக் கருதப்படும். அரசியலமைப்பின் மேலாண்மையும் போற்றப்படும். காமன் வெல்த்தின் உறுப்பினராயிருந்த அயர்லாந்து தனக்கு ஆங்கிலேயர்கள் அரசியலமைப்பை அளிப்பதை விரும்பவில்லை. 1937ஆம் ஆண்டு அயர் மக்கள் தங்கள் அரசியலமைப்பை வகுத்துக் கொண்டனர். அவர்களது அரசியலமைப்புக் கூறுவதாவது: 'அயர் மக்களாகிய நாம் ...... இந்த அரசியலமைப்பை ஏற்று நிறைவேற்றி நமக்கு நாமே அளிக்கிறோம்.' மக்களின் இறைமை இங்கு வலியுறுத்தப்படுகின்றது.

இந்தியாவின் சுதந்திரச் சட்டத்தை ஆங்கிலேயப் பாராளுமன்றம் இயற்றியது. இந்தச் சட்டத்தின் அடிப்படையிலேயே இந்திய அரசியல் நிர்ணய சபை தோன்றியது. இஃது அரசியலமைப்பை வகுத்தது. இருப்பினும் இந்திய அரசியலமைப்பை உருவாக்கியதும், ஏற்றுக்கொண்டு சட்டமாக்கியதும் இந்திய மக்களேயாவர். இந்தியா பொதுநலக் கூட்டில் உறுப்பினராக இருந்தாலும், இறைமை இந்திய அரசிடமும், அதன் மக்களிடமுமே உண்டு என்பதை இங்குக் கூறவேண்டும்.

[2] Preamble of the Constitution of Japan: 'We, the Japanese people, acting through our duly elected representatives in the National Diet, determined that we shall secure for ourselves and our posterity the fruits of peaceful co-operation with all nations and the blessings of liberty throughout this land resolved that never again shall we be visited with horrors of war through the action of government, do proclaim that sovereign power resides with the people and do firmly establish this Constitution.'

**அரசியலமைப்பின் மேலாண்மை**

அரசியலமைப்பு மக்களால் தோற்றுவிக்கப்படுகிறது. எனவே, அரசாங்கமும் அதன் உறுப்புகளும் அரசியலமைப்பிற் குட்பட்டே செயல்பட வேண்டும். அரசியலமைப்பு மேலாண்மை யுடையது. இது நாட்டின் உயர்ந்த சட்டமாகவும், மூலமுதல் தன்மையுடையதாகவும் விளங்குகிறது. மக்களிடமிருந்து ஆற் றலைப் பெற்ற அரசியலமைப்பே அரசாங்கத்திற்கு அதிகாரத்தை யும், ஆற்றலையும் வழங்குகிறது. கூட்டாட்சி நாடுகளில் இக்கோட் பாடு நன்கு வலியுறுத்தப்படுகிறது. மத்திய அரசாங்கம் மாநிலங் களுக்கு அதிகாரம் அளிப்பதில்லை. மேலும், மத்திய அரசாங்கத் திற்கே சுயமாக ஆற்றல் கிடையாது. மாநில அரசாங்கங்களும் மத்தியக் கூட்டாட்சி அரசாங்கமும் தங்கள் அதிகாரங்களையும் ஆற்றலையும் அரசியலமைப்பிடமிருந்தே பெறுகின்றன.

மேலும், மக்களின் அதிகாரத்தைப் பெற்ற அரசியலமைப்பை மத்திய அரசாங்கம் தனியாகவோ மாநில அரசாங்கங்கள் தனி யாகவோ திருத்த முடியாது. இவைகளுக்கு அரசியலமைப்பைத் திருத்தும் ஆற்றலும் இல்லை. மக்களின் இறைமை ஆற்றலே அரசியலமைப்பைத் திருத்தமுடியும்; மாற்ற முடியும்.

மேலும், அரசாங்கத்தைக் காட்டிலும், அதன் உறுப்புகளைக் காட்டிலும் அரசியலமைப்பு முன் தோன்றியதாகும்; காலத்தால் முந்தியதாகும். எனவே, அரசாங்கத்தினும் மேலாண்மையுடைய தாகும். சட்டமன்றத்தின் சட்டங்களைவிட அரசியலமைப்புச் சட்டம் போற்றிப் பேணத்தக்கதாகும். சட்டமன்றத்தின் சட்டம் மக்களின் பிரதிநிதிகளிடமிருந்து தோன்றுகிறது. ஆனல், அரசிய லமைப்புச் சட்டம் மக்களிடமிருந்தே தோன்றியதாகும். அமெரிக்க அரசியல் வல்லுனர் அலெக்ஸாண்டர் ஹாமில்டன் கருத்துப்படி, ‘சட்டத்தைவிட அரசியலமைப்பு முதன்மையானது. மக்களது கருத்து அவர்களுடைய பிரதிநிதிகள் கருத்தைவிட முதன்மை வாய்ந்தது.’ எனவே, சட்டசபைகள் இயற்றிய சட்டத்தை, எடுத்துக்காட்டாகச் சுகாதார விதிகளை மீறினுலும் அரசியலமைப்புச் சட்டத்தை மீறக் கூடாது. அரசாங்கத்தின் எல்லா நிறுவனங்களும் ஏற்படுத்தப்படும் எல்லா நெறிமுறைகளும் அரசியலமைப்பிற்கு ஏற்புடையதாக இருக்க வேண்டும்.

**ஆற்றலின் பயன்கள்**

சட்டங்களுக்கும், அரசாங்கத்திற்கும், அரசியலமைப்பிற்கும் ஆற்றலும் அதிகாரமும் இருப்பதனுல் அமைதியையும், ஒழுங்கை யும் காக்க முடிகிறது. தனி மனித நலனைப் பேண இயலுகிறது.

சுதந்திரம் பாதுகாக்கப்படுகிறது. சட்டத்தின் முன் சமத்துவம் நிலைநாட்டப்படுகிறது. அரசின் பணிகள் தடையின்றி நிறை வேற்றப்படுகின்றன. வல்லாட்சி தடுக்கப்படுகிறது.

## முக்கிய வினாக்கள்

1. சட்டங்கள் ஏன் மதிக்கப்படுகின்றன?
2. அரசியலமைப்பின் பின் இருக்கும் அதிகாரத்தையும் ஆற்றலையும் விவரிக்கவும்.
3. குறிப்பு வரைக :
   (அ) அரசியலமைப்பின் மேலாண்மை.
   (ஆ) அரசியல் நிர்ணய சபை.
   (இ) ஆற்றலின் பயன்கள்.

# 5. அரசியலமைப்பின் தன்மை

## (Nature of Constitution)

### அ. எழுதிய, எழுதா அரசியலமைப்புகள்

### (Written and Unwritten Constitution)

[எழுதிய அரசியலமைப்பின் தன்மைகள்

எழுதா அரசியலமைப்பின் தன்மைகள்

**எழுதிய அரசியலமைப்பிற்கும் எழுதா அரசியலமைப் பிற்கும் உள்ள வேறுபாடுகள் :** வேறுபாடுகள் — வேறு பாடுகளின் அட்டவணை — தவறான பாகுபாடு.

**எழுதிய அரசியலமைப்பின் சிறப்புகளும் குறைகளும் :** எழுதிய அரசியலமைப்பின் சிறப்புகள் தெளிவும் திட்டவட்டமுமானது — உறுதித்தன்மையுடையது — மேன்மையுடையது— அடிப்படை உரிமைகளுக்குப் பாது காப்பு — அலுவல்கள் அறுதியிடப்பட்டுள்ளன — தனி மனித சுதந்திரம் காக்கப்படுகிறது— கூட்டரசிற்கு மிக ஏற்புடையது — வரலாற்றுச் சிறப்பு—எழுதிய அரசிய லமைப்பின் குறைகள் : நெகிழாத் தன்மை — தெளி வின்மையும் முரண்பாடுகளும்.

**எழுதா அரசியலமைப்பின் சிறப்புகளும் குறைகளும்:** எழுதா அரசியலமைப்பின் சிறப்புகள்—நெகிழும் தன்மை —வளரும் தன்மையது—பழமையுடன் இணைப்பு.

**எழுதா அரசியலமைப்பின் குறைகள் :** நிலையற்ற தன்மை — நீதிமன்றத்தை மிகுதியாகச் சார்தல்—வல் லாட்சிக்கு வழிகோலும்—அதிகார வரையறையின்மை —கூட்டாட்சிக்கு ஏற்புடையதன்று—அரசியல் விழிப்பு அதிகம் தேவை — காலத்தால் வழக்கொழிதல்.]

அரசியலமைப்புகள் பல அடிப்படைகளில் பாகுபாடு செய்யப் படுகின்றன. அவைகளில் எழுதிய அரசியலமைப்பு, எழுதா அரசிய

லமைப்பு என்ற பாகுபாடும் ஒன்ருகும். இவ்விதம் எழுதிய அரசியலமைப்பு என்றும், எழுதா அரசியலமைப் | என்றும் பாகுபடுத்துவதால் அரசியலமைப்பை நாம் எளிதில் விளங்கிக் கொள்கிருேம். இருப்பினும், அரசியலமைப்பை இம்முறையில் பகுப்பது விஞ்ஞான ரீதியானது அல்ல எனப்படுகிறது. ஏனெனில், எழுதிய அரசியலமைப்பில் எழுதப்படாத கூறுபாடுகள் இருப்பதையும், எழுதா அரசியலமைப்பில் எழுதப்பட்ட கூறுபாடுகள் இருப்பதையும் நாம் காண்கிருேம்.

## எழுதிய அரசியலமைப்பின் தன்மைகள்

எழுதிய அரசியலமைப்பானது (Written Constitution) இயற்றப்பட்ட அரசியலமைப்பு (Enacted Constitution) என்றும், ஆவண அரசியலமைப்பு (Documentary Type) என்றும் பெயர் பெறும். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு எழுதிய அரசியலமைப்பிற்கோர் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

எழுதிய அரசியலமைப்பு ஆவண வடிவில் உள்ளது. அரசியலமைப்பு ஓர் ஆவணத்தில் அமையலாம், அல்லது பல ஆவணங்களில் அடங்கியிருக்கலாம். எடுத்துக்காட்டாக, இந்திய அரசியலமைப்பும் அமெரிக்க அரசியலமைப்பும் ஓர் ஆவணத்தில் அடங்குகின்றன. ஆனுல், பிரான்ஸ் நாட்டின் மூன்ருவது குடியரசின் அரசியலமைப்பு மூன்று ஆவணங்களாக உள்ளது. இம்மூன்று ஆவணங்களும் முறையே 1875ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 24ஆம் தேதியும், 26ஆம் தேதியும், ஜூலை மாதம் 26ஆம் தேதியும் உருவாக்கப்பட்டன.

எழுதப்பட்ட அரசியலமைப்புத் திட்டமிட்டுச் செய்யப்பட்டதாகும். சட்டமன்றமோ (Legislative Assembly) அரசியல் நிர்ணய சபையோ (Constituent Assembly) எழுதப்பட்ட அரசியலமைப்பை ஏற்படுத்தியிருக்கும். இந்திய அரசியலமைப்பை இந்திய அரசியலமைப்பு நிர்ணய சபை வகுத்தது. இந்திய அரசியலமைப்பின் முகப்பில் இச்செய்தியைக் காணலாம். அமெரிக்க அரசியலமைப்பை ஜார்ஜ் வாஷிங்டன் தலைமையிலான ஒரு குழு வகுத்தது. பிலடெல்பியா மாநாட்டில் அமெரிக்க அரசியலமைப்பு ஏற்றுக் கொள்ளப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டது.

எழுதிய அரசியலமைப்புகள் பொதுவாக ஒரு குறிப்பிட்ட நாளில் அமுல்செய்யப்படும். வரலாற்றின் அந்தக் குறிப்பிட்ட தேதியிலிருந்து அரசியலமைப்பு நடைமுறைப்படுத்தப்படும். எடுத்துக்காட்டாக, இந்திய அரசியலமைப்பு 1949ஆம் ஆண்டு

நவம்பர் மாதம் 26ஆம் தேதி உருவாக்கப்பட்டு, 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் தேதியிலிருந்து நடைமுறைப்படுத்தப்பட்டது. அதே போல அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு 1787ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17ஆம் நாள் தோற்றுவிக்கப்பட்டது. ஆனல், எழுதிய அரசியலமைப்புகள் பல தேதிகளில் உருவாக்கப்பட்டதாகவும் இருக்கலாம். எடுத்துக்காட்டாக, பிரான்ஸ் நாட்டின் மூன்ருவது குடியரசின் அரசியலமைப்பு மூன்று மாறுபட்ட தேதிகளில் உருவாக்கப்பட்ட சட்டமாக அமைகிறது.

எழுதிய அரசியலமைப்புகள் நாட்டின் உன்னதச் சட்டமாகவும், புனிதத் தன்மை பொருந்தியதாகவும் மதிக்கப்படுகின்றன. எனவே, எழுதிய அரசியலமைப்பிற்கு முரணுக எந்தச் சட்டமும் இயற்றப்படலாம். மேலும், முரணுகவுள்ள சட்டங்கள் அனைத்தும் எந்த அளவிற்கு அரசியலமைப்பிலிருந்து முரணுக இருக்கிறதோ அந்த அளவிற்குச் செல்லுபடி அற்றதாகும்.

எழுதப்பட்ட அரசியலமைப்புகளின் பாதுகாவலனுக நீதிமன்றங்கள் செயலாற்றுகின்றன. சட்டமன்றங்களால் இயற்றப்படும் ஏதாவது சட்டம் அரசியலமைப்பிற்கு முரணுக இருப்பின் நீதிமன்றங்கள் அச்சட்டத்தை அரசியலமைப்பிற்கு முரணனது எனக் கூறிச் செல்லுபடியற்றதாக்கும். நீதிமன்றங்களுக்கு இருக்கும் இவ்வதிகாரம் நீதிப்புனராய்வு (Judicial Review) எனப்படும். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நீதிமன்றங்களுக்கும், இந்திய நீதிமன்றங்களுக்கும் இந்த நீதிமன்றப் புனராய்வு அதிகாரங்கள் உண்டு. ஆனல் எழுதிய அரசியலமைப்பை உடைய சோவியத் குடியரசு, சுவிட்சர்லாந்து, பிரான்சு ஆகிய நாடுகளில் சட்டமன்றங்கள் இயற்றும் சட்டங்கள் அரசியலமைப்புக்கு உட்பட்டனவா அல்லது சட்டமன்றங்கள் தங்கள் வரையறையைக்கடந்துள்ளனவா என்று காணும் அதிகாரம் நீதிமன்றங்களுக்கு அளிக்கப்படவில்லை.

எழுதிய அரசியலமைப்புகள் நாட்டின் தலையாய சட்டமாகக் கருதப்படுவதால், அவைகளைத் திருத்துவதற்கும் மாற்றுவதற்கும் தனிமுறை வகுக்கப்பட்டு உள்ளது. சாதாரணச் சட்டத்தைத் திருத்துவது போலவோ, மாற்றுவது போலவோ, நீக்குவது போலவோ, அரசியலமைப்புச் சட்டத்தைத் திருத்தவோ, மாற்றவோ, நீக்கவோ முடியாது. எனவே, எழுதிய அரசியலமைப்பு நெகிழா அரசியலமைப்பு எனப்படும்.

எழுதப்பட்ட அரசியலமைப்பு மூன்று விதங்களில் திருத்தப்படுகிறது.

1. **வழக்கங்கள் :** வழக்கங்களின் அடிப்படையில் அமெரிக்க அரசியலமைப்பு மாற்றங்களை அடைந்து வருகிறது. குடியரசு தலைவர் மறைமுகத் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்படுவதே எழுதப் பட்ட சட்டமாகும். அரசியலமைப்பை உருவாக்கியவர்களது இவ் விருப்பம் தோல்வியடைந்தது. குடியரசு தலைவரைத் தேர்ந் தெடுக்க மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் கட்சி அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவர்களது தேர்தல் முடிந்தவுடனேயே, குடியரசுத் தலைவரின் தேர்தலுக்குப் பிரதிநிதிகள் வாக்களிக்கும் முன்பே, எக்கட்சியின் வேட்பாளர் குடியரசு தலைவர் என்பது தெரிந்துவிடும். பிரதிநிதிகள் வாக்க ளிப்பது வெற்று நடைமுறையாகிறது. குடியரசு தலைவர் யாரென மக்களால் அறிவிக்கப்பட்ட ஒருவருக்கே பிரதிநிதிகள் வாக்களிக் கின்றனர். எனவே, குடியரசு தலைவரின் தேர்தல் மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் நேர்முகத் தேர்தலுக்குச் சமமாகிறது. மேலும், குடியரசு தலைவர் பதவிக்கு இருமுறை போட்டி யிடுவது மரபாக இருந்தது. குடியரசு தலைவர் ரூஸ்வெல்ட் நான்கு முறை போட்டியிட்டு மரபை முறித்தார். ஆனால், இருபத்திரண்டாவது அரசியலமைப்புத் திருத்தப்படி பழைய மரபு சட்டமாக்கப்பட்டுக் குடியரசு தலைவர் பதவிக்கு இரு முறை போட்டியிடுவது நிர்ணயிக்கப்பட்டது. மேலும், அரசிய லமைப்பில் அமைச்சர் குழு முறை இல்லாதிருந்தும் மரபு காரண மாக அமைச்சர் குழு முறை அமெரிக்க அரசியலில் தோன்றி யுள்ளது. எனவே, மரபுகளின் வாயிலாகவும் அரசியலமைப்பின் மூலக்கூறுகள் திருத்தம் பெறலாம்.

2. **நீதித் துறையின் சட்ட விளக்கம் :** நீதித்துறை சட்டத் திற்கு அளிக்கும் விளக்கத்தின் காரணமாகவும் அரசிய லமைப்புகள் மாற்றமடைகின்றன. அரசியலமைப்பில் எழும் ஐயப் பாடுகளுக்கு நீதித்துறை கொடுக்கும் விளக்கமே நடைமுறைப் படுத்தப்படும். நீதித்துறை அளிக்கும் விளக்கம் அரசிய லமைப்பை மாற்றக்கூடியதாகவும் அமைகிறது.

3. **அரசியலமைப்புத் திருத்தம்:** அரசியலமைப்பை, அதைத் திருத்துவதற்கென வகுக்கப்பட்ட தனிமுறையில் திருத்துவதும் ஒரு முறையாகும். இந்திய அரசியலமைப்பும் அமெரிக்க அரசிய லமைப்பும் இம் முறையில் பல முறை திருத்தப்பட்டுள்ளன.

எழுதிய அரசியலமைப்புள்ள நாடுகளில் அரசியலமைப்புச் சட்டத்திற்கும் சாதாரணச் சட்டங்களுக்கும் வேறுபாடுகள் வகுக் கப்பட்டுள்ளன. அரசியலமைப்புச் சட்டங்கள் உயர்ந்ததாகவும், இறைமையுடைய நாட்டின் ஆணையாகவும் கருதப்படுகிறது.

ஆனால், சாதாரணச் சட்டங்கள் இறைமையற்ற அரசின் ஆணையாகக் கருதப்படுகிறது. எனவே, சாதாரணச் சட்டங்கள் அரசியலமைப்புச் சட்டத்திற்குத் தாழ்ந்ததாக எண்ணப்படுகின்றன.

எழுதிய அரசியலமைப்புகள் சமீப காலத் தோற்றமுடையதும், வரலாற்றில் பிந்தியதும் ஆகும்.

முதன்முதலில் எழுதிய அரசியலமைப்புகள் அமெரிக்காவில் தோன்றின. 1789ஆம் ஆண்டு புரட்சிக்குப் பிறகு 1791ஆம் ஆண்டில் பிரான்சு தனக்கென ஓர் அரசியலமைப்பை எழுதிக் கொண்டது. இதன் பிறகு ஐரோப்பிய நாடுகள் பலவும், ஆசிய நாடுகள் பலவும் எழுதிய அரசியலமைப்புகளை ஏற்படுத்திக் கொண்டன.

எனவே, எழுதிய அரசியலமைப்புகளில் அரசாங்கத்தின் அமைப்பும், அரசாங்கத்தின் கோட்பாடுகளும், அதன் உறுப்புகளின் அதிகாரங்களும், குடிமக்களின் உரிமைகளும், ஒழுங்குடையதாகவும் திட்டவட்டமுடையதாகவும் எழுதப்பட்டிருக்கும்.

பேராசிரியர் பிரைசின் கருத்துப்படி, ஆவண வடிவு அரசியலமைப்பு அல்லது எழுதப்பட்ட அரசியலமைப்பு நான்கு வழிகளில் தோன்றலாம்.

1. தங்கள் குடிமக்களுக்கு அந்நாட்டின் மன்னரே அரசியலமைப்பை வழங்கலாம். பிரான்சு நாட்டின் 18ஆம் லூயி மன்னர் தம் குடிமக்களுக்கு 1814ஆம் ஆண்டில் அரசியலமைப்பை வழங்கினர். இதே போல 1830ஆம் ஆண்டில் லூயிஸ் பிலிப் மன்னரும் அரசியலமைப்பை வழங்கினர்.

2. நடைமுறையில் இருக்கும் அரசாங்கத்தைப் புரட்சியால் தகர்த்து விட்டு மக்கள் புதியதோர் அரசாங்கத்தை நிறுவித் தங்களுக்கோர் அரசியலமைப்பை வகுத்துக்கொள்வதுண்டு. இங்கிலாந்துடன் போரிட்டுச் சுதந்திரம் பெற்ற அமெரிக்க மக்கள் தங்கள் அரசியலமைப்பை வகுத்துக்கொண்டனர். அதே போல பிரான்சு மக்கள் தங்கள் மன்னருக்கு எதிராகப் புரட்சி செய்து தங்கள் அரசியலமைப்பை வகுத்துக்கொண்டனர்.

3. புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட தேசங்கள் தங்கள் அரசியலமைப்புகளை ஏற்படுத்திக்கொள்வதுமுண்டு. முதலாம் உலகப் பெரும்போருக்குப் பிறகு புதிய தேசங்களாகத் தோன்றிய போலந்தும், செக்கோஸ்லாவியாவும் எழுதிய அரசியலமைப்பைத் தோற்றுவித்தன.

4. அரசுகள் ஒன்றுசேர்ந்து புதிய அரசைத் தோற்றுவிக்கும் போதும் எழுதிய அரசியலமைப்புத் தோன்றும். தங்கள் இணைப்பை உறுதியாக்குவதற்காக வடஅமெரிக்க அரசுகள் ஒன்று சேர்ந்து கூட்டரசு அமைத்து 1789-ல் புதியதோர் எழுதிய அரசிய லமைப்பை ஏற்படுத்திக்கொண்டன.

எழுதிய அரசியலமைப்பு முப்பகுதிகளைக் கொண்டிருக்கும். இவைகளை ஒவ்வோர் எழுதிய அரசியலமைப்புகளிலும் காணலாம்.

1. **சுதந்திரத்தின் அமைப்பு :** முதல் பகுதியில் குடிமக்களின் உரிமைகளும், சுதந்திரமும் சொல்லப்பட்டிருக்கும். இஃது அரசிய லமைப்பின் சுதந்திரம் பற்றிய பகுதியாகும்.

2. **அரசாங்க அமைப்பு:** இரண்டாவது பகுதியில் அரசாங்கத் தின் அமைப்பும், அரசாங்க நிறுவனங்களின் அமைப்பும், நிறுவ னங்களிடையேயுள்ள உறவுகளும் சொல்லப்பட்டிருக்கும். இஃது அரசியலமைப்பின் அரசாங்க அமைப்பாகும்.

3. **இறைமையின் அமைப்பு :** மூன்றாவது பகுதியில் அரசிய லமைப்புத் திருத்துமுறை கூறப்பட்டிருக்கும். அரசியலமைப்புத் திருத்தும் அதிகாரமுடையவரிடமே இறைமையுண்டு. இஃது அரசியலமைபப்பின் இறைமையமைப்பாகும்.

எழுதிய ஆவண அரசியலமைப்பின் தோற்றம் மக்களின் அரசியல் விழிப்பையும் உணர்வையும் காட்டும். எழுதப்படாத அரசாங்க முறையில் குறைகாணும் மக்கள் தங்கள் அரசிய லமைப்பை ஆவண அரசியலமைப்பாக மாற்ற முற்படுகின்றனர். பிரைசின் கருத்துப்படி நான்கு காரணங்களால் மக்கள் எழுதா அரசியலமைப்பிலிருந்து எழுதிய அரசியலமைப்பிற்குச் செல்லு கின்றனர்.

1. மக்கள் தங்கள் உரிமைகள் பறிபோகின்றபோது தங்கள் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த எழுதிய அரசியலமைப்பை நாடுவர்.

2. திட்டமான எழுதிய அரசியலமைப்பை வகுத்து எதிர் வரும் வல்லாட்சியைத் தடுக்க மக்கள் எண்ணலாம், அல்லது மக்களை மகிழ்விக்க மன்னனே எழுதிய அரசியலமைப்பை நல்கலாம்.

3. மக்கள் புதியதொரு சமுதாய அமைப்பை ஏற்படுத்த எண்ணலாம். இவ்வெண்ணத்தை நிறைவேற்றும் வகையில் தெளிவானதும் திட்டமுடையதுமானதோர் எழுதிய அரசியலமைப்பை வகுக்கலாம்.

4. தனித்து வாழ்ந்த பல சமுதாயங்கள் ஒன்றிணைந்து வாழ எண்ணும்போதும் உரிமைகளும் நலன்களும் உடையதோர் எழுதிய அரசியலமைப்பை உருவாக்குவர். இவ்விதங்களில் எழுதா அரசியலமைப்பிலிருந்து எழுதியதோர் ஆவண அரசியலமைப்புத் தோன்றலாம்.

## எழுதா அரசியலமைப்பின் தன்மைகள்

எழுதா அரசியலமைப்பானது படிப்படியாக வளர்ந்த அரசியலமைப்பு என்றும் (Cumulative or Evolved Constitution), ஆவணமற்ற (Non Documentary) அரசியலமைப்பு என்றும் பெயர் பெறும். இங்கிலாந்து நாட்டின் அரசியலமைப்பு எழுதா அரசியலமைப்பிற்கோர் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

அரசாங்கத்தின் அமைப்பும், நெறிமுறைக் கோட்பாடுகளும், அரசாங்கத்தின் உறுப்புகளின் அதிகாரங்களும், குடிமக்களின் உரிமைகளும், அரசாங்கத்தின் உறுப்புகளிடையே உள்ள உறவுமுறைகளும் எழுதா அரசியல் அமைப்பில் ஆவண வடிவில் எழுதப்படுவதில்லை.

நாட்டின் பழக்கவழக்கங்கள், மரபுகள், நீதிமன்றங்களின் தீர்ப்புகள், முன்முடிவுகள் (Precedents), இயற்றப்பட்ட சட்டங்கள் (Statute Law) ஆகியவற்றின் தொகுப்பாகத் தோன்றியதே எழுதா அரசியலமைப்பாகும். இங்கிலாந்து அரசியலமைப்பு இவ்விதத் தொகுப்பாகும். இந்தத் தொகுப்பின் அடக்கமாவது:

1. **நீதிமன்றத் தீர்ப்புகள் :** இந்நீதிமன்றத் தீர்ப்புகளில் பல உரிமைகளும் சுதந்திரங்களும் அடங்கியுள்ளன. இவைகள் காலத்தால் மிகவும் பழமையானவையாகும்.

2. **சட்டநீதிகள்:** பல இயற்றப்பட்ட சட்டங்களும், அவைகளில் காணும் நீதிகளும் அரசியலமைப்பில் அடங்கும். அரசுரிமை நிர்ணயச் சட்டம் (Act of Settlement), வாக்குரிமைச் சட்டம் (Franchise Act), 1911ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்டம் (Parliament Act), 1947ஆம் ஆண்டின் மன்னர் நடைமுறைகள் சட்டம் (Crown Proceedings Act) ஆகியன பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டங்களாகும்.

**3. வழக்கங்களும் வழக்காறுகளும்:** இங்கிலாந்து அரசியல் அமைப்பில் பெரும்பகுதி வழக்கங்களும் வழக்காறுகளும் ஆகும். மரபுகளின் அடிப்படையிலேயே அமைச்சரவை பற்றிய விதிகள் தோன்றின. பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியின் தலைவர் தலைமை அமைச்சராவார். தலைமை அமைச்சரும், மற்ற அமைச்சர்களும் பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் ஆவர். அமைச்சரவை பாராளுமன்றத்திற்குக் கூட்டுப் பொறுப்புடையது ஆகும். பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கும் வரைதான் அமைச்சரவை பதவியிலிருக்க முடியும். மேலும், பாராளுமன்ற நடைமுறைகளும் வழக்காறுகளின் அடிப்படையில் தோன்றியவை. அமைச்சரவைக் கூட்டங்களுக்குத் தலைமை அமைச்சரே தலைமை தாங்குவார். இரண்டாவது சபையாகிய மேன்மக்கள் சபை நீதிமன்றமாகச் செயல்படும்போது சட்டப் பிரபுக்கள் மட்டுமே அதில் கலந்துகொள்வார்கள். இவ்விதிகள் அனைத்தும் மரபுகளால் எழுந்தவை.

எழுதா அரசியலமைப்புப் படிப்படியான (Evolutionary) தோற்றமாகும். டார்வின் பரிணாமக் கோட்பாட்டுக்கேற்ப இது வளர்ச்சியின் விளைவாகும்.[1] சமுதாய மாறுதல்களுக்கேற்பவும் தேவைகளுக்கேற்பவும் வளர்ந்த நெறிமுறைகளைக் கொண்டதாகும். சி.எப். ஸ்ட்ராங்கின் கூற்றுப்படி, எழுதிய சட்டங்களின் அடிப்படையில் அமையாது பழக்கவழக்கங்களின் அடிப்படையில் வளர்ந்துள்ள அரசியலமைப்பு எழுதா அரசியலமைப்பு என அழைக்கப்படும்.[2]

எழுதா அரசியலமைப்பு வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட நாளிலோ குறிப்பிட்ட அரசியல் நிர்ணய சபையாலோ எழுதப் பட்டதன்று.

எழுதா அரசியலமைப்பில் அரசியலமைப்புச் சட்டத்தின் திருத்தத்திற்கும் சாதாரணச் சட்டத்தை திருத்துவதற்கும், இயற்றுவதற்கும் வேறுபாடுகள் இல்லை. அரசியலமைப்புச் சட்டத்திற்கும் சாதாரணச் சட்டத்திற்கும் வித்தியாசம் கிடையாது. மேலும், அரசியலமைப்பை மாற்றுவதற்கோர் தனி முறை கிடையாது. எனவே, எழுதா அரசியலமைப்பு நெகிழும் அரசியலமைப்பு எனப்படும்.

[1] Lord Brongham : 'Constitutions must grow if they are of any value: they have roots, they ripen, they endure.' 'Living political constitution must be Darwinian in structure and in practice.'

[2] C. F. Strong : 'A constitution generally called unwritten is one which has grown up on the basis of custom rather than of written law.' -Wilson;

எழுதா அரசியலமைப்புப் பழங்கால முறையாகும். அமெரிக்க நாடுகளின் அரசியலமைப்புத் தோன்றுவதற்கு முன் அரசியலமைப்புகள் எழுதப்படாதனவாகவும், நெகிழ்வுடையனவாகவும் இருந்தன. எனவே, முற்கால அரசியலமைப்புகள் அனைத்தும் எழுதப்படாதனவாகவே இருந்தன.

## எழுதிய அரசியலமைப்பிற்கும் எழுதா அரசியலமைப்பிற்கும் உள்ள வேறுபாடுகள்

**வேறுபாடுகள்**

எழுதிய அரசியலமைப்பு ஆவண வடிவானது. ஆனால், எழுதா அரசியலமைப்பு ஆவணமற்றதாகும். (Non Documentary) அமெரிக்க அரசியலமைப்பு, இந்திய அரசியலமைப்பு ஆகியன ஆவண வடிவில் உள்ளன. ஆனால், இங்கிலாந்து அரசியலமைப்பு ஓர் ஆவணமாக இல்லை.

எழுதிய அரசியலமைப்பு விருப்பத்துடனும் முயற்சியுடனும் இயற்றப்பட்டதாகும். இஃது ஒரு குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட மன்றத்தால் இயற்றப்படுகிறது. எடுத்துக்காட்டாக, இந்திய மக்ளின் விருப்பத்தாலும் முயற்சியாலும் 1949ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 26ஆம் நாள் இந்திய அரசியலமைப்பு இந்திய அரசியல் நிர்ணய சபையால் இயற்றப்பட்டதாகும். ஆனால், எழுதா அரசியலமைப்பு வரலாற்றின் வளர்ச்சியாகும்.

எழுதப்பட்ட அரசியல் அமைப்பு நாட்டின் தலையாய சட்டமாகவும், மூலமுதல்தன்மை வாய்ந்ததாகவும், எளிதில் மாற்ற இயலாததாகவும், மாற்றப்படுவதற்கோர் தனிமுறை கொண்டதாகவும், நெகிழ்வற்றதாகவும், சாதாரணச் சட்டத்திலிருந்து வேறுபட்டதாகவும் இருக்கும். எடுத்துக்காட்டாக, அமெரிக்க அரசியலமைப்பு இத்தன்மைகளைக் கொண்டதாகும். ஆனால், எழுதா அரசியலமைப்புச் சாதாரணச் சட்டத்திற்கு ஒப்பாகும். சாதாரணச் சட்டத்தை மாற்றும் முறையிலேயே அரசியலமைப்புச் சட்டத்தையும் மாற்றலாம். நெகிழ்வுடையதாகும். எடுத்துக்காட்டாக, இங்கிலாந்து நாட்டில் அரசியலமைப்புச் சட்டத்திற்கும் சாதாரணச் சட்டத்திற்கும் வேறுபாடு கிடையாது. மாற்றும் முறையும் திருத்தும் முறையும் இரண்டிற்கும் ஒன்றேயாகும்.

எழுதிய அரசியலமைப்புகள் சமீப காலத்தில் தோன்றியனவாகும். எடுத்துக்காட்டாக, அமெரிக்க அரசியலமைப்பே முதலில் தோன்றிய எழுதிய அரசியலமைப்பாகும். இது 1789ஆம் ஆண்டு

தோன்றியது. ஆனால், எழுதா அரசியலமைப்பு மிகப் பழமையான தாகும். நெறிமுறைகள் திட்டமற்றதாகும். வளைந்து கொடுக்கக் கூடியதாகவும் இருக்கும். எடுத்துக்காட்டாக, இங்கிலாந்து அரசியலமைப்பு மிகப் பழமையானதும் நெகிழ்வுடையதுமாகும்.

## வேறுபாடுகள்–அட்டவணை

| எழுதிய அரசியலமைப்பு | எழுதா அரசியலமைப்பு |
|---|---|
| 1. சிறந்த எடுத்துக்காட்டு அமெரிக்கஅரசியலமைப்பு | இங்கிலாந்து அரசியலமைப்பு |
| 2. ஆவண வடிவமானது | ஆவணமற்றது |
| 3. விருப்பத்தின் விளைவு | தானாகவளர்ந்தது |
| 4. முயற்சியின் விளைவு | தேவைக்கேற்ற வளர்ச்சி |
| 5. இயற்றப்பட்டது | படிப்படியான வளர்ச்சி |
| 6. குறிப்பிட்ட நாளில் குறிப் பிட்ட மன்றத்தில் தோன் றியது | கால ஓட்டத்தில் பிறந்தது |
| 7. நாட்டின் தலையாய சட்டம் | சாதாரணச் சட்டம் |
| 8. புனிதமானது | புனிதமற்றது |
| 9. எளிதில் மாற்ற முடியாதது | எளிதில் மாற்றக் கூடியது |
| 10. மாற்றத் தனி முறை உண்டு | சாதாரண முறையில் மாற்ற லாம் |
| 11. நெகிழ்வற்றது | நெகிழ்வுடையது |

பேராசிரியர் சி. எப். ஸ்ட்ராங் அவர்களின் கூற்றுப்படி, எழுதிய, எழுதா அரசியலமைப்பு என்பது ஒரு தவறான பாகு பாடாகும். பேரறிஞர் கார்னர் கருத்துப்படி, எழுதிய அரசிய லமைப்பு என்பதில் பெரும்பான்மை நெறிமுறைகள் எழுதப்பட் டுள்ளன. ஆனால், நெறிமுறைகள் அனைத்தும் விடாது எழுதப்பட வில்லை. சில எழுதப்படா வழக்காறுகளும் உள்ளன. அதே போல எழுதா அரசியலமைப்பில் பெரும்பான்மை நெறிமுறைகள் எழுதப்படவில்லை. ஆனால், நெறிமுறைகள் அனைத்தும் எழுதப் படாமலும் இல்லை. சில நெறிமுறைகள் எழுதப்பட்டு ஆவண வடிவில் உள்ளன.

## எழுதிய அரசியலமைப்பின் சிறப்புகளும் குறைகளும்

### எழுதிய அரசியலமைப்பின் சிறப்புகள் தெளிவும் திட்டவட்டமுமானது

எழுதிய அரசியலமைப்புத் தெளிவானது; திட்டவட்டமானது; ஐயப்பாட்டிற்கு இடமில்லாதது. வேண்டும்போது அரசியலமைப்பின் எண்ணிட்ட அத்தியாயங்களையும் விதிகளையும் எடுத்துக் காட்டமுடியும். அரசாங்கத்தின் செயல்கள் ஒவ்வொன்றும் அரசியலமைப்பிற்குட்பட்டதாவென்பதைச் சரிபார்க்க இயலும்.

### உறுதித்தன்மையுடையது

அரசியலமைப்பு எழுதப்பட்டுள்ளதாலும் ஆவணத்தில் இருப்பதாலும் உறுதித்தன்மையுடையது. எளிதில் மாற்ற இயலாது; சாதாரணச் சட்டத்தைப் போல் அடிக்கடி மாறுதல்களுக்குட்படாது.

### மேன்மையுடையது

எழுதப்பட்டிருப்பதாலும், புனிதமானதாகக் கருதப்படுவதாலும் எளிதில் மாறுத்தன்மையுடையதாலும் சாதாரணச் சட்டத்தைவிட மேன்மையும் உயர்வும் வாய்ந்ததாகும்.

### அடிப்படை உரிமைகளுக்குப் பாதுகாப்பு

எழுதப்பட்ட அரசியலமைப்பில் குடிமக்களின் அடிப்படை உரிமைகள் எண்ணிட்டுக் கூறப்பட்டுள்ளன. அடிப்படை உரிமைகளுக்குப் பாதுகாப்பு உண்டு. இவ்வுரிமைகளுக்கு எதிராக எச்சட்டமும் இயற்ற முடியாது. அப்படி இயற்றப்படுமானால் அது செல்லத்தக்கதல்ல. இந்திய அரசியலமைப்பில் மூன்றாவது பகுதி அடிப்படை உரிமைகளை எடுத்துக்கூறி, அவற்றிற்கும் பாதுகாப்பு அளிக்கிறது. அமெரிக்க அரசியலமைப்பில் உரிமைப் பிரகடனம் இணைக்கப்பட்டு, மக்களின் அடிப்படை உரிமைகள் பாதுகாக்கப் படுகின்றன.

### அலுவல்கள் அறுதியிடப்பட்டுள்ளன

அரசாங்கத்தின் நிறுவனங்களும், அவைகளின் அலுவல்களும் அறுதியிட்டுக் கூறப்பட்டுள்ளன. ஒன்றின் அதிகார வரம்பில் மற்றொன்றின் தலையீடு தவிர்க்கப்படுகின்றது. எனவே, அதிகாரப்பிரிவினை நன்கு செயல்பட அரசியலமைப்பு எழுதப்பட்டிருக்க வேண்டும். அதிகாரம் தவறான வழியில் கையாளப்படுவது தடை செய்யப்படுகிறது.

**தனி மனித சுதந்திரம் காக்கப்படுகிறது**

தனியாள் சுதந்திரங்கள் எழுதப்பட்ட அரசியலமைப்பில் குறிக்கப்பட்டுள்ளன. இச்சுதந்திரங்களின் பாதுகாவலனாக நீதி மன்றங்கள் செயல்படுகின்றன. எனவே, தனி மனித சுதந்திரம் காக்கப்படுகிறது.

**கூட்டரசிற்கு மிக ஏற்புடையது**

கூட்டாட்சி நாட்டில் மாநிலங்களுக்கும் கூட்டரசுக்கும் அதி காரங்கள் பிரிக்கப்பட வேண்டும். இவ்வதிகாரங்கள் பிரிக்கப் பட்டு எழுதப்பட்டிருக்கவேண்டும். அப்பொழுதுதான் மாநிலங் களின் உரிமைகள் பாதுகாக்கப்படும். எனவே, கூட்டாட்சி நாட் டிற்கு எழுதப்பட்ட அரசியலமைப்பே மிகப் பொருத்தமானதாகும்.

**வரலாற்றுச் சிறப்பு**

எழுதிய அரசியலமைப்பு வரலாற்றுச் சிறப்புடையது. ஆரம் பத்தில் எழுதா அரசியலமைப்புடைய நாடுகள் எழுதிய அரசிய லமைப்புகளை மேற்கொண்டன. ஆனால், எழுதிய அரசியலமைப்பு களை மேற்கொண்ட எந்த நாடும் மீண்டும் எழுதா அரசியலமைப் பிற்குச் சென்றதாக வரலாறு இல்லை. எனவே, எழுதிய அரசிய லமைப்புச் சிறப்புடையது என வரலாறு சான்று பகர்கிறது.

**எழுதிய அரசியலமைப்பின் குறைகள்: நெகிழாத் தன்மை**

எழுதிய அரசியலமைப்பின் பெருங்குறை அதன் நெகிழாத் தன்மையாகும். அரசியலமைப்பு ஒரு குறிப்பிட்ட காலத்தில் எழுதப்பட்டதாகும். மேலும், எழுதிய அரசியலமைப்பை மாற்று வதும் கடினம். மாற்றுவதற்கோர் தனிமுறை வகுக்கப்பட்டி ருக்கும். ஆனால் சமுதாயம் மாறிக்கொண்டே செல்லும் தன்மை யுடையது. மேலும் அவ்வப்போது நாட்டில் நெருக்கடி காலங் களும் தோன்றும். இந்தச் சமுதாய மாற்றத்திற்கேற்பவும், நெருக்கடி நிலைகளுக்கேற்பவும் எழுதிய அரசியலமைப்புநெகிழ்ந்து கொடுக்காது. உடனடித் தேவைக்கேற்ப எழுதிய அரசிய லமைப்பை மாற்றுவதும் கடினம். பேராசிரியர் கெட்டல் கூறுவது போல் உறுதித்தன்மை எழுதிய அரசியலமைப்பின் சிறப்பாயின், நெகிழாத்தன்மை இதன் குறையாகும். மெக்காலேயின் கருத்துப் படி, எழுதிய அரசியலமைப்பின் நெகிழாத்தன்மை புரட்சிகளுக்கு வித்திடும். ஏனெனில், நாடுகள் முன்னேற்றப் பாதையை நோக்கி நகரும்போது அரசியலமைப்புப் பின்தங்கி நிற்கும்.

### தெளிவின்மையும் முரண்பாடுகளும்

எழுதிய அரசியலமைப்பிலும் தெளிவின்மையும் முரண்பாடுகளும் தோன்றும். அரசியலமைப்பை உருவாக்கிய பெரியோர்களின் உண்மைக் கருத்து விளங்காதிருக்கலாம். மேலும், அரசியலமைப்பின் விதிகளிலே முரண்பாடுகளும் தோன்றலாம். தெளிவின்மையும் முரண்பாடுகளும் தோன்றும்போது அரசியலமைப்பை உருவாக்கியவரை நாட இயலாது. தெளிவு பெறவும், முரண்பாடுகளுக்குத் தீர்வு காணவும் நீதிமன்றங்களை அணுக வேண்டும். எழுதப்பட்ட அரசியலமைப்பு நடைமுறையிலிருக்கும் நாடுகளில் இது பொருள் குறித்து நீதிமன்றங்களில் வழக்குகள் தோன்றுகின்றன.

## எழுதா அரசியலமைப்பின் சிறப்புகளும் குறைகளும்

### எழுதா அரசியலமைப்பின் சிறப்புகள்: நெகிழும் தன்மை

நெகிழும் அரசியலமைப்பு சமுதாய, பொருளாதார அரசியல் மாற்றங்களுக்கேற்ப நெகிழ்ந்து கொடுக்கும் தன்மையுடையது. சாதாரணச் சட்டத்தைப் போல அரசியல் அமைப்புச் சட்டத்தை எளிதில் மாற்றலாம். அரசியலமைப்புச் சட்டத்தை மாற்றத் தனி முறை கிடையாது. இந்தக் காரணத்தால் நெகிழும் அரசியலமைப்புள்ள நாடுகளில் புரட்சிகளுக்கும் அரசியற்குழப்பங்களுக்கும் இடம் இருக்காது.

### வளரும் தன்மையது

எழுதா அரசியலமைப்பில் காலத்திற்கேற்ற புதிய கருத்துகளை எளிதில் இணைக்கலாம். எழுதப்பட்டிருந்தால் புதிய கருத்துகளின் இணைப்பு அரசியலமைப்புத் திருத்தத்தால்தான் செய்ய இயலும். எழுதா அரசியலமைப்பாயின் புதிய கருத்து உடனடியாக நடைமுறைப்படுத்தப்பட்டு எளிதில் வழக்கமாக்கப்படும். இதனுல் பல புதிய பழக்கங்களும் மரபுகளும் தோன்றும் வாய்ப்பும், அதனுல் அரசியலமைப்பு விரிந்து வளரும் வாய்ப்பும் உண்டு.

### பழமையுடன் இணைப்பு

எழுதப்பெரு அரசியலமைப்புப் படிப்படியான வளர்ச்சியுடையது. எனவே, இது பழமையுடன் நெருங்கிய இணைப்புடையதாக இருக்கும். வழி வழி வரும் மரபுகளின் அடிப்படையில் தோன்றியதாகும். இங்கிலாந்து அரசியலமைப்பில் பண்டைக்கால அடிப்படையைக் காணலாம்.

### எழுதா அரசியலமைப்பின் குறைகள்: நிலையற்ற தன்மை

பழக்கங்கள், மரபுகள், நீதிமன்றத் தீர்ப்புகள் ஆகியவை களின் அடிப்படையில் எழுதாத அரசியலமைப்பு அமைந்திருப்ப தாலும், அரசியலமைப்புச் சட்டத்திற்கும் சாதாரணச் சட்டத்திற் கும் வேறுபாடு இல்லையாதலாலும், அடிக்கடி அரசியலமைப்புச் சட்டம் மாற்றத்திற்குள்ளாவதாலும் எழுதா அரசியலமைப்பில் நிலை யற்ற தன்மையைக் காணலாம்.

### நீதிமன்றத்தை மிகுதியாகச் சார்தல்

எழுதா அரசியலமைப்பில் அரசியல் நெறிகள் தெளிவாகவும் திட்டவட்டமாகவும் இல்லை. எந்த ஓர் ஐயப்பாடு தோன்றும் போதும் சட்டங்களில் தெளிவு பெறுவதற்கும் நீதி மன்றங்களை மிகுதியாகச் சார்ந்திருக்க வேண்டும். எனவே, ஜே. ஏ. ஜேன்ச னின் கூற்றுப்படி, எழுதா அரசியலமைப்பு நீதிமன்றங்களின் கைப் பாவையாகும்.

### வல்லாட்சிக்கு வழிகோலும்

எழுதப்பெறு அரசியலமைப்பில் குடிமக்களின் அடிப்படை உரிமைகளும் சுதந்திரங்களும் வகைப்படுத்திக் கூறப்படவில்லை. அதிகாரத்தை விரும்பும் அரசாங்கம் மக்களின் அடிப்படை உரிமை களையும், தனி மனித சுதந்திரத்தையும் பறிக்க எத்தனிக்கும். அதற்கேற்ப அரசியலமைப்பினை எளிதில் மாற்றிக்கொள்ளவும் முடியும். எனவே, குடிமக்களின் உரிமைகள் நசுக்கப்பட்டு வல் லாட்சி ஏற்படும்.

### அதிகார வரையறையின்மை

அரசாங்க நிறுவனங்களாகிய பாராளுமன்றம், செயலாட்சி நீதிமன்றங்கள் ஆகியவற்றின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டி ருக்காது. எனவே, தனக்குள்ள அதிகார வரம்பை ஒவ்வொரு நிறுவனமும் மீறும் வாய்ப்பு ஏற்படும். அரசாங்க அங்கங்களி டையே பூசல்களும் பிணக்கும் தோன்றும். இஃது இனிமையான அமைதியான ஆட்சிக்குப் பங்கம் விளைவிக்கும்.

### கூட்டாட்சிக்கு ஏற்புடையதன்று

கூட்டாட்சி அரசாங்கத்திற்கும், அதன் உறுப்புகளுக்கும் இடையேயுள்ள அதிகாரங்கள் பகுக்கப்பட்டிருப்பதால்தான் கூட் டாட்சி முறையாக நடைபெறுகிறது. இந்த அதிகாரப்பகுப்பு எழுத்து மூலமாக ஆவணவடிவில் இருக்கவேண்டும். அப்போ

துதான் இடையிடையே வரும் சிக்கல்களைத் தீர்க்க இயலும். எனவே, எழுதா அரசியலமைப்புக் கூட்டாட்சிக்கு ஏற்புடைய தன்று.

**அரசியல் விழிப்பு அதிகம் தேவை**

எழுதா அரசியல் அமைப்பில் மக்களுக்கு அதிக அரசியல் விழிப்புத் தேவைப்படுகிறது. அரசாங்கத்தின் ஒவ்வோர் ஆக்கிரமிப்பையும் அவ்வப்போது கவனத்துடன் கவனித்து எதிர்த்துப் போராடிக்கொண்டே யிருக்கவேண்டும். இஃது அமைதியான அரசியல் சூழ்நிலையை உருவாக்காது.

**காலத்தால் வழக்கொழிதல்**

எழுதா அரசியலமைப்புக் காலத்தால் வழக்கொழிந்ததெனக் கூறலாம். ஆரம்ப காலத்தில் பல அரசுகள் எழுதா அரசியலமைப்பை உடையனவாக இருந்தன. இதன் விளைவாக மக்கள் வல்லாட்சியை அனுபவித்தனர். வல்லாட்சியை முறியடித்துக் குடியாட்சி ஏற்படுத்தும்போது எழுதிய அரசியலமைப்பைத் தோற்றுவித்தனர். எழுதா அரசியலமைப்பிலிருந்து வந்த எந்த அரசும் மீண்டும் திரும்பவில்லை. எனவே, உலக நாடுகள் எழுதிய அரசியலமைப்பையே விரும்புகின்றனவென்பதும், எழுதா அரசியலமைப்புக் காலத்தால் வழக்கொழிந்ததெனவும் அறியலாம். இவ்வுலகில் இங்கிலாந்து நாடு ஒன்றுமட்டும் எழுதா அரசியலமைப்பைப் பின்பற்றுகிறது.

எழுதிய, எழுதா அரசியலமைப்புகளின் அல்லது ஆவண, ஆவண முறை யல்லாத அரசியலமைப்புகளின் அல்லது இயற்றப் பட்ட வளர்ந்த அரசியலமைப்புகளின் தன்மை, இவைகளிடையே யுள்ள வேறுபாடுகள், இவைகளின் நிறைகள், குறைகள் ஆகியன வற்றைக் கண்டோம். அரசியலமைப்புகளைப் பிரித்தறிய இப் பாகுபாடு மட்டும் போதாதெனினும், தெளிவு அறிய இதுவும் தேவைப்படுகின்றது.

## முக்கிய வினாக்கள்

1. எழுதிய, எழுதா அரசியலமைப்புகளின் தன்மைகள் யாவை?
2. எழுதிய மற்றும் எழுதப்படா அரசியலமைப்புகளை வேறு படுத்தி அவற்றின் நன்மை தீமைகளை தாரதம்மியப் படுத்துக. [செ. ப. க. செப்டம்பர் 1975]

3. குறிப்பு வரைக :

(அ) எழுதிய அரசியலமைப்பு

(ஆ) எழுதா அரசியலமைப்பு

## ஆ. நெகிழா, நெகிழும் அரசியலமைப்புகள்

(Rigid and Flexible Constitution)

[**நெகிழா அரசியலமைப்பு—தன்மைகள்**

**நெகிழும் அரசியலமைப்பு—தன்மைகள்**

**நெகிழும் நெகிழா அரசியலமைப்பு** : வேறுபாடுகள்—வேறுபாட்டு அட்டவணை.

**நெகிழா அரசியலமைப்பின் நிறைகளும் குறைகளும் :** நெகிழா அரசியலமைப்பின் நிறைகள் : உறுதியானது—அடிப்படை உரிமைகளுக்குப் பாதுகாப்பு—சிறுபான்மையோரின் உரிமைகளுக்குப் பாதுகாப்பு — சட்டமன்றத்தின் வரம்பு மீறல் தடுக்கப்படுகிறது — கூட்டாட்சி நாடுகளுக்குப் பொருத்தமானது—நெகிழா அரசியலமைப்பின் குறைகள் : நெகிழாத் தன்மையும் ஏற்காத் தன்மையும்—பிற்போக்கானது—நீதித்துறைக்கு அதிக முக்கியத்துவம்.

**நெகிழும் அரசியலமைப்பின் நிறைகளும் குறைகளும் :** நெகிழும் அரசியலமைப்பின் நிறைகள் — தேவைக்கேற்ப மாறும் — புரட்சிகளைத் தவிர்க்கும் — வளரும் தன்மை உடையது — நெகிழும் அரசியலமைப்பின் குறைகள்—உறுதியற்ற தன்மை—உரிமைகளுக்குப் பாதுகாப்பில்லை — குடியாட்சிக்கு ஏற்றதல்ல—கூட்டாட்சிக்கு ஏற்றதல்ல — வல்லாட்சிக்கு வழிகோலும் — அரசியல் விழிப்பு அதிகம் தேவை—காலத்தால் வழக்கொழிதல்.

**நெகிழா அரசியலமைப்பு—எடுத்துக்காட்டு :** அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு—ஜெர்மானியக் குடியாட்சி அரசியலமைப்பு—பிரஞ்சின் அரசியலமைப்பு—இத்தாலி, தென்னாப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, சுவிட்ஸர்லாந்து அரசியலமைப்புகள்.

**நெகிழும் அரசியலமைப்பு—எடுத்துக்காட்டு :** இங்கிலாந்து அரசியலமைப்பு—நியூசிலாந்து ஆகிய நாடுகளின் அரசியலமைப்புகள்.]

எழுதிய, எழுதா என்று பகுப்பதற்குப் பதிலாக அரசியலமைப்புகளை பிரைஸ் நெகிழா அரசியலமைப்பு (Rigid Constitution) என்றும், நெகிழும் அரசியலமைப்பு (Flexible Constitution) என்றும் பகுத்துள்ளார்.[1]

பேராசிரியர் பிரைசின்இந்தப் பகுப்பு அரசியலமைப்புச் சட்டங்களைத் திருத்தும் முறையிலிருந்து தோன்றியதாகும். அரசியலமைப்புச் சட்டத்தைத் திருத்தத் தனிமுறையும் சாதாரணச் சட்டத்தைத் திருத்தவோ நீக்கவோ பிறிதோர் முறையும் இருக்குமானால், அந்த அரசியலமைப்பு நெகிழா அரசியலமைப்பு எனப்படும். அரசியலமைப்புச் சட்டத்தைத்திருத்துவதற்கும் சாதாரணச் சட்டத்தைத் திருத்துவதற்கும் நீக்குவதற்கும் ஒரே முறை பின்பற்றப்படுமானால், அந்த அரசியலமைப்பு நெகிழும் அரசியலமைப்பு என்று கூறப்படும். இந்தப் பகுப்பு அறிவியல் முறையானது என்றும், அரசியலமைப்பின் சிறப்புத் தன்மையின் அடிப்படையானது என்றும், ஆராய்ச்சியின் பாற்பட்ட தென்றும் பிரைஸ் கருதுகிறார்.

## நெகிழா அரசியலமைப்பு— தன்மைகள்

நெகிழா அரசியலமைப்பில் அரசியலமைப்புச் சட்டம் சாதாரணச் சட்டத்தைவிட உயர்ந்ததாகக் கருதப்படுகிறது. எனவே, அரசியலமைப்புச் சட்டத்திற்கும் சாதாரணச் சட்டத்திற்கும் வேறுபாடு காட்டப்படுகிறது. அரசியலமைப்புச் சட்டத்தைத் திருத்துவதற்குத் தனிச் சிறப்பு முறை வகுக்கப்பட்டுள்ளது. இம்முறை சாதாரணச் சட்டத்தைத் திருத்தும் முறைக்கும், நீக்கும் முறைக்கும் மாறுபட்டதாகும். அரசியலமைப்புச் சட்டம் இறைமையுடைய அரசின் ஆணையாகவும், சாதாரணச்சட்டம் அரசாங்கத்தின் சட்டமாகவும் எண்ணப்படுகிறது. அரசியலமைப்பை வளைக்கும் போது வளைந்து கொடுக்காது முறிந்துவிடும் தன்மையது. அரசியலமைப்பைத் திருத்துவதற்குச் சிறப்பானதும் கடினமானதும் ஆனதொரு முறை கூறப்பட்டுள்ளது. இதனால் அரசியலமைப்பின்மீது சட்டசபைகளின் ஆக்கிரமிப்புத் தடுக்கப்படுகிறது. அரசியலமைப்பிற்கு முரணான சாதாரணச் சட்டம் செல்லுபடியாகாது. சாதாரணச் சட்டம் அரசியலமைப்புச்சட்டத்திற்கு முரணானது என்பதையோ, செல்லுபடியாகாது என்பதையோ கூறும் அதிகாரம் சட்டசபைகளுக்குக் கொடுக்கப்படவில்லை. ஏனெனில், சட்டசபைகளின் ஆக்கிரமிப்பைத் தடுப்பதே இத்தனிமுறையின் நோக்கமாகும்.

[1] Bryce : 'The real basis of classifying Constitutions lies in the procedure of constitutional amendment and distinction between constitutional law and ordinary law.'

எனவே, சாதாரண ஒரு சட்டம் அரசியலமைப்பிற்கு முரணானது என்பதையும், அது செல்லத்தக்கதல்ல என்பதையும் கூறும் அதிகாரம் அரசியலமைப்பின்படி நீதிமன்றங்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. நீதிமன்றங்கள் அரசியலமைப்பின் பாதுகாவலனாகப் பணியாற்றுகிறது. இதற்காக நீதிமன்றங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம் நீதிப்புனராய்வு (Judicial Review) எனப்படுகிறது. நெகிழா அரசியலமைப்புடைய நாடுகளில் தலைமை நீதிமன்றம் அவசியமாகிறது. அமெரிக்காவில் கூட்டாட்சி நீதிமன்றம் இவ்வதிகாரங்களை உடையதாக இருக்கிறது.

கெட்டில் கூற்றுப்படி, 'அரசியலமைப்புச் சட்டத்தின் தோற்றுவாய் (Source) சாதாரணச் சட்டத்தின் தோற்றுவாயிலிருந்து மாறுபட்டதாகும்.'

நெகிழா அரசியலமைப்பு இரு வகைகளில் தோன்றலாம். ஒன்று, அரசியல் நிர்ணய சபை அரசியலமைப்பை ஏற்படுத்தலாம். இரண்டாவது, மேலாண்மையுள்ள அரசாங்கம் தனக்குக் கீழ் உள்ள அரசாங்கத்திற்கு நெகிழா அரசியலமைப்பை வழங்கலாம்.

1. **அரசியல் நிர்ணய சபை அரசியலமைப்பை ஏற்படுத்தல்:** அரசியல் நிர்ணய சபை பிரதிநிதிகளைக் கொண்ட சபையாகும். இஃது அரசியலமைப்பு வகுப்பதற்காகவே ஏற்படுத்தப்பட்டதாகும். அமெரிக்க அரசியலமைப்பை வகுக்க அரசியல் நிர்ணய சபை பிலடெல்பியாவில் கூடி அமெரிக்காவிற்கென ஓர் அரசியலமைப்பை வகுத்தது. நெகிழா அரசியலமைப்பை அரசியல் நிர்ணய சபைகள் ஏற்படுத்தலாம்.

2. **மேலாண்மை உரிமையுடைய அரசு அரசியலமைப்பை வழங்குதல்:** ஓர் அரசிற்கு மேலாண்மை உரிமையுடைய அரசும் தனக்குக் கீழ்ப்பட்ட அரசிற்கு நெகிழாஅரசியலமைப்பை வழங்கலாம். கனடாவும் இந்தியாவும் இங்கிலாந்தின் ஆதிக்கத்திலிருந்தன. இவைகள் சுதந்திரம் பெற்றும் குடியேற்ற உரிமை நாட்டுத் தகுதியுள்ள(Dominion Status)நாடுகளாகவே இருந்தன. டொமினியன் அந்தஸ்துள்ள நாடுகள் இங்கிலாந்து அரசியைப் பெயரளவுத் தலைவியாக ஏற்பர். டொமினியன் அந்தஸ்துள்ள நாடுகளுக்கு மேலாண்மை உரிமையுடைய அரசாக இருந்த இங்கிலாந்து அரசு அவ்வப்போது நெகிழா அரசியலமைப்பை வழங்கியது.

நெகிழா அரசியலமைப்பின் தன்மையும் அளவும் நாட்டிற்கு நாடு வேறுபடும். எடுத்துக்காட்டாக ரஷ்ய நாட்டின் அரசியலமைப்பைத் திருத்துவதற்குப் பாராளுமன்றத்தின் ஒவ்வோர்

அவையிலும் மூன்றில் இரண்டு பகுதிப் பெரும்பான்மை வாக்குகள் தேவைப்படும். இதனுடைய நெகிழாத் தன்மையின் அளவு குறைவெனலாம். அமெரிக்க அரசியலமைப்பின் நெகிழாத் தன்மையின் அளவு ரஷ்ய அரசியலமைப்பின் நெகிழாத் தன்மை யின் அளவைவிட அதிகமாகும். ஸ்விஸ் நாட்டில் அரசிய லமைப்புத் திருத்தத்தில் சட்டமன்றங்களில் பெரும்பான்மை வாக்கைத் தவிரக் குடியொப்பத்திற்கும், மக்களின் தொடக்க வுரிமைக்கும் இடமிருக்கிறது. மேலும், கூட்டாட்சிப் பகுதிகளும் அரசியலமைப்புத் திருத்தத்திற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும். அரசியலமைப்பு மேலும் நெகிழாத்தன்மையுடையதாக இருக் கிறது. இவ்வாறு அரசியலமைப்பின் நெகிழாத்தன்மையின் அளவு நாட்டிற்கு நாடு மாறுபடக் கூடியது.

அரசியலமைப்புத் திருத்த முறைகள் நான்கு வகைப்பட்டன வாக இருக்கின்றன. மாறுகின்ற சூழ்நிலைகளுக்கு ஏற்ப நெகிழா அரசியலமைப்புகளும் திருத்தப்பட வேண்டியிருக்கும்.

**1. சட்டசபைகளால் திருத்தம் :** நெகிழா அரசிய லமைப்பைச் சட்டசபைகளும் திருத்தலாம். ஆனால், சட்டசபைகள் செய்யும் இந்த அரசியலமைப்புத் திருத்தம் சாதாரணச் சட்டத்தை ஏற்படுத்துவதிலிருந்தும், திருத்துவதிலிருந்தும் மாறு பட்டிருக்கும். இந்தியக் கூட்டாட்சி, பிரஞ்சுக் குடியரசு, சோவி யத்துக் குடியரசு, தென்னுப்பிரிக்கா ஒன்றிணைப்பு ஆகிய அரசு களின் அரசியலமைப்புகள் இம் முறையில் திருத்தப்படுகின்றன.

**2. குடியொப்ப முறை :** அரசியலமைப்புத் திருத்தத் தீர்மா னங்கள் மக்களால் குடியொப்ப முறையில் (Referendum) ஏற்றுக் கொள்ளப்பட்டால் திருத்தம் நடைமுறைக்கு வரும். இம் முறை ஆஸ்திரேலியாவிலும், சுவிட்சர்லாந்திலும் நடைமுறையி லிருக்கிறது.

**3. கூட்டரசின் உறுப்புகள் ஏற்றல் :** கூட்டரசிலுள்ள உறுப்புகளில் ஒரு குறிப்பிட்ட பகுதியினர் ஏற்றால்தான் அரசிய லமைப்புத் திருத்தத் தீர்மானம் நடைமுறைக்கு வரும். அமெரிக்கப் பாராளுமன்றம் மூன்றில் இரண்டு பங்குப் பெரும்பான்மையில் அர சியலமைப்புத் திருத்தத்தை நிறைவேற்றினாலும், அமெரிக்கக் கூட்டரசின் உறுப்புகளுள் நான்கில் மூன்று பங்கினர் ஏற்க வேண்டும். அதே போல ஆஸ்திரேலியாவிலும், சுவிட்சர்லாந் திலும் கூட்டரசின் உறுப்பினர்களில் பெரும்பான்மையினர் திருத் தத்தை ஏற்கவேண்டும். அப்போதுதான் திருத்தம் நடை முறைக்கு வரும்.

**4. சிறப்புக் கூட்டத்தின் மூலம் ஏற்றல் :** அரசியலமைப்பைத் திருத்துவதற்கு எனச் சிறப்புக்கூட்டம் (Special Convention) கூட்டப்படுகிறது. இக்கூட்டம் அரசியலமைப்புத் திருத்தத்தைச் செய்யும். இம்முறை அமெரிக்காவின் சில மாநிலங்களிலும் இலத்தீன் அமெரிக்கக் குடியரசு நாடுகளிலும் பின்பற்றப்படுகின்றது.

நெகிழாத் தன்மையுடைய அரசியலமைப்புகள் திருத்தப்படுவது கடினமாகும். இருப்பினும், எல்லா நெகிழா அரசியலமைப்புகளும் திருத்தப்படுவதற்குக் கடினமானவைகள் அல்ல. அரசியலமைப்பின் திருத்தத்தில் நெகிழும் தன்மையும், நெகிழாத்தன்மையும் அதனிடம் மக்கள் கொண்டுள்ள விருப்பு வெறுப்பைப் பொறுத்து அமையும். அரசியலமைப்பு மக்களின் விருப்பத்திற்கு மாறாகத் திணிக்கப்பட்டிருந்தால், நெகிழா அரசியலமைப்பாயினும் நெகிழும் தன்மையுடையது போல் மாற்றப்படும். எனவே, அரசியலமைப்பின் நெகிழும், நெகிழாத் தன்மை மக்களின் மன நிறைவைப் பொறுத்திருக்கிறது.

நெகிழா அரசியலமைப்பு எழுதப்பட்ட அரசியலமைப்பாக இருக்கவேண்டும். எழுதப்பட்ட அரசியலமைப்பில்தான் அரசியலமைப்புத் திருத்தத்திற்கான தனிமுறை குறிக்கப்பட்டிருக்கும். இருப்பினும், எழுதப்பட்ட அரசியலமைப்புகள் அனைத்தும் நெகிழா அரசியலமைப்பெனக் கூறமுடியாது. எடுத்துக்காட்டாக, இரண்டாம் உலகப் பெரும் போருக்கு முன் இத்தாலியின் அரசியலமைப்பு எழுதப்பட்டதாகவும், ஆவண வடிவினதாகவும் இருந்தது. இருப்பினும் நெகிழும் தன்மையுடைய அரசியலமைப்பாகவே இருந்தது. நியூசிலாந்தின் அரசியலமைப்பும் எழுதப்பட்டதாயினும் நெகிழ்வுடையதாகும்.

## நெகிழும் அரசியலமைப்பு—தன்மைகள்

நெகிழும் அரசியலமைப்பு முறை பழங்கால அரசியலமைப்பு முறையாகும். நெகிழாத் தன்மையுடைய அமெரிக்க அரசியலமைப்பு 1789ஆம் ஆண்டு தோன்றுவதற்கு முன் அரசியலமைப்புகள் எழுதப்படாதவையாகவும், ஆவணமற்றவையாகவும், நெகிழும் தன்மையுடையவையாகவும் இருந்தன. நெகிழாத்தன்மையுடைய அரசியலமைப்புச் சமீப காலத்தின் தோற்றமே யாகும். தற்காலத்தில் எழுதியதும் நெகிழாததுமான அரசியலமைப்புகளே அதிகமாக உள்ளன. இங்கிலாந்து அரசியலமைப்பு ஒன்று மட்டும்தான் எழுதப்பெறாத, நெகிழும் தன்மையுடைய அரசியலமைப்பாக இருக்கிறது.

நெகிழும் அரசியலமைப்பைச் சாதாரண முறையில் எளிதில் மாற்றலாம். இதில் அரசியலமைப்புச் சட்டத்திற்கும், சாதாரணச் சட்டத்திற்கும் வேறுபாடு கிடையாது. அரசியலமைப்புச் சட்டத்தின் தோற்றுவாயும், சாதாரணச் சட்டத்தின் தோற்றுவாயும் ஒன்றே யாகும். அரசியலமைப்புச் சட்டம் சாதாரணச் சட்டத்தைப்போல் திருத்தப்பட்டாலும், மாற்றப்பட்டாலும், நீக்கப்பட்டாலும் அந்த அரசியலமைப்பு நெகிழ்வுடையதாகும். அரசியலமைப்பை உருவாக்கும் மன்றமும், சாதாரணச்சட்டத்தை இயற்றும் மன்றமும் ஒன்றே யாகும். சாதாரணச் சட்டத்தை ஏற்படுத்தும் பாராளுமன்றமே அரசியலமைப்பை ஏற்படுத்தும் அரசியல் நிர்ணயசபையாகவும் திகழும். சாதாரணச் சட்டத்தை எளிய பெரும்பான்மையினர் இயற்றுவது போல அரசியலமைப்புச் சட்டத்தையும் தோற்றுவிக்கலாம். பாராளுமன்றத்தால் இயற்றப்படும் எச் சட்டமும் அரசியலமைப்பிற்கு முரணான சட்டமாகாது. எந்த நீதிமன்றமும் பாராளுமன்றம் இயற்றிய சட்டத்தை அரசியலமைப்பிற்கு முரணானது எனக் கூற முடியாது.

நெகிழும் அரசியல் அமைப்பில் பாராளுமன்றத்தின் இறைமை வெளிப்படுகிறது. இங்கிலாந்துப் பாராளுமன்றம் பூரண வல்லமையுடைய நிறுவனமாகும். பாராளுமன்றத்தின் இறைமையை டைசி (Dicey) கீழ்க்காணும் வகையில் தெளிவுபடுத்துகிறார்.

1. பாராளுமன்றம் இயற்ற முடியாத எந்தச் சட்டமும் இல்லை.
2. பாராளுமன்றம் நீக்க முடியாத எந்தச் சட்டமும் இல்லை.
3. இங்கிலாந்து அரசியலமைப்பில் அடிப்படைச் சட்டம் எனப்படும் அரசியலமைப்புச் சட்டத்திற்கும், சாதாரணச் சட்டத்திற்கும் வேறுபாடு இல்லை.

காட்டு விலங்கிற்குப் பயிற்சியளிக்க ஏற்படுத்தும் சட்டமும், பிரபுக்கள் சபையின் அதிகாரத்தைக் குறைக்க உருவாக்கப்படும் சட்டமும் ஒரே விதத்தில் பாராளுமன்றத்தால் இயற்றப்படுகின்றன. இச்சட்ட முன்படிவங்கள் இருசபைகளிலும் மும்முறை வாசிக்கப்பட்டுச் சாதாரணப் பெரும்பான்மையால் நிறைவேற்றப்பட்டு அரசியாரின் ஒப்புதல் பெற்றவுடன் சட்டமாகும்.

## நெகிழும், நெகிழா அரசியலமைப்பு வேறுபாடுகள்

நெகிழும், நெகிழா அரசியலமைப்புகளிடையே உள்ள வேறுபாடுகள் தெளிவானவை. நெகிழும் அரசியலமைப்பும் நெகிழா அரசியலமைப்பும் மிகுந்த வேறுபாடுகளை உடையன.

**வேறுபாடுகள்**

நெகிழும் அரசியலமைப்பை எளிதில் மாற்றலாம். ஆனால், நெகிழா அரசியலமைப்பை எளிதில் மாற்ற முடியாது. இதை மாற்றுவதற்கொரு தனி முறை வகுக்கப்பட்டுள்ளது. மாற்றுவதும் கடினமாகும்.

நெகிழும் அரசியலமைப்பு மிகப் பழைமையானது. ஆதிகாலத்தில் தோன்றியது. முதன்முதலில் தோன்றியது. ஆனால், நெகிழா அரசியலமைப்புச் சமீபத் தோற்றமுடையது.

நெகிழும் அரசியலமைப்பில் சாதாரணச் சட்டத்திற்கும், அரசியலமைப்புச் சட்டத்திற்கும் வேறுபாடு கிடையாது. ஆனால், நெகிழா அரசியலமைப்பில் சாதாரணச் சட்டத்திற்கும், அரசியலமைப்புச் சட்டத்திற்கும் வேறுபாடு உண்டு. அரசியலமைப்புச் சட்டம் புனிதமானதாகவும், நாட்டின் தலையாய சட்டமாகவும், அடிப்படைச் சட்டமாகவும் கருதப்படும்.

நெகிழும் அரசியலமைப்புக் காலமாறுபடுகளுக்கு ஏற்பப் புதியனவற்றை எளிதில் ஏற்றுக்கொள்ளும் தன்மையுடையது. காலத்திற்கேற்ப மாறி வளைந்துகொடுக்கும் திறம்பட்டது. ஆனால், நெகிழா அரசியலமைப்புக் காலமாறுபாடுகளுக்கேற்ப வளைந்து கொடுக்காது.

நெகிழும் அரசியலமைப்புச் சாதாரண நிலையிலும், நெகிழா அரசியலமைப்பு உயர்ந்த நிலையிலும் வைத்து எண்ணப்படுகின்றன.

நெகிழும் அரசியலமைப்பு, பொதுவாக எழுதப்படாததாகவும், நெகிழா அரசியலமைப்பு எழுதப்பட்டதாகவும் இருக்கும். ஆனால், இதற்கு விதிவிலக்குகளும் உள்ளன. நியூசிலாந்து அரசியலமைப்பும், 1922ஆம் ஆண்டிற்கு முன்னைய இத்தாலிய அரசியலமைப்பும் விதிவிலக்குகளாகும்.

நெகிழும் அரசியலமைப்பில் அரசியல் சட்டத்திற்கு முரணானது என்றும், ஒரு சட்டம் செல்லத்தக்கது அல்லவென்றும் கூறும் அதிகாரம் நீதிமன்றங்களுக்குக் கிடையாது. ஆனால், நெகிழா அரசியலமைப்பில் ஒரு சட்டத்தை அரசியலமைப்பிற்கு முரணானது என்று கூறிச் செயலற்றதாக்கும் அதிகாரம் நீதிமன்றங்களுக்கு உண்டு.

நெகிழும் அரசியலமைப்பில் பாராளுமன்றம் சகல ஆற்றல் வாய்ந்ததாகவும், இறைமையுடையதாகவும் கருதப்படுகிறது.

ஆனால், நெகிழா அரசியலமைப்பில் பாராளுமன்றத்திற்கு இறைமை கிடையாது. அரசியல் நிர்ணய சபைக்கே இறைமை உண்டு.

நெகிழும் அரசியலமைப்பில் பாராளுமன்றம் மிக முக்கிய மானது. ஆனால், நெகிழா அரசியலமைப்பில் நீதிமன்றம் மிக முக்கியமானதும் அவசியமானதும் ஆகும்.

நெகிழும் அரசியலமைப்புக் கூட்டாட்சிக்கு ஏற்றதல்ல. ஏனெனில், கூட்டரசின் அரசியலமைப்பு நெகிழக் கூடியதாக இருந்தால், கூட்டரசின் உறுப்புகளின் உரிமைகள் பாதிக்கப் படும். எனவே, கூட்டரசிற்கு நெகிழா அரசியலமைப்பே மிகப் பொருத்தமானதாகும்.

**வேறுபாட்டு அட்டவணை**

| | நெகிழும் அரசியலமைப்பு | நெகிழா அரசியலமைப்பு |
|---|---|---|
| 1. | எளிதில் மாற்றலாம் | எளிதில் மாற்ற இயலாது |
| 2. | சாதாரண முறையில் மாற்றலாம் | தனி முறையில்தான் மாற்றலாம் |
| 3. | பழைமையானது | புதுமையானது |
| 4. | சாதாரணச் சட்டத்திலிருந்து வேறுபட்டதன்று | வேறுபட்டது; உன்னதமானது; புனிதமானது; அடிப்படையானது |
| 5. | வளையும் | முறியும். |
| 6. | பொதுவாக எழுதப்படாதது | எழுதப்பட்டது |
| 7. | பாராளுமன்றம் இயற்றுவது. | அரசியல் நிர்ணயசபை |
| 8. | நீதிப் புனராய்வுக்கு ஆட்படாதது. | நீதிப்புனராய்வுக்கு ஆட்பட்டது |
| 9. | கூட்டரசிற்கு ஏற்றதல்ல. | கூட்டரசிற்கு ஏற்றது. |

## நெகிழா அரசியலமைப்பின் நிறைகளும், குறைகளும்

**நெகிழா அரசியலமைப்பின் நிறைகள்-உறுதியானது**

நெகிழா அரசியலமைப்பு எழுதப்பட்டதாகவே இருக்கும். அரசியலமைப்பில் கூறப்பட்ட செய்திகள் தெளிவுடையன

உறுதியுடையனவாகவும் இருக்கும். உரிமைகளைப்பற்றிய விதி முறைகளும், அதிகாரங்கள்பற்றிய நெறிமுறைகளும் உறுதி யுடையன.

**அடிப்படை உரிமைகளுக்குப் பாதுகாப்பு**

அரசியலமைப்பில் மக்களின் அடிப்படை உரிமைகளைக் கூறும் பகுதி உண்டு. சட்டத்திற்குமுன் சமத்துவம், பேச்சுரிமை, சொத்துரிமைகள், கல்வி கலாச்சார உரிமைகள், சமய உரிமைகள் என அடிப்படை உரிமைகள் எழுதப்பட்டுள்ளன.

அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள மக்களின் உரிமைகளை நிருவாகத்துறை பறிக்க முடியாது. தங்கள் உரிமைகள் பாதிக்கப் படும்போது நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தும் மக்கள் காக்கலாம்.

**சிறுபான்மையோரின் உரிமைகளுக்குப் பாதுகாப்பு**

நெகிழா அரசியலமைப்புச் சிறுபான்மையோர்களுக்கும் அவர் களது உரிமைகளுக்கும் பாதுகாப்பு அளிக்கிறது. இனத்தாலும், சமயத்தாலும், மொழியாலும் சிறுபான்மையினர் உள்ளனர். இவர் களது உரிமைகள் எழுதப்பட்ட நெகிழா அரசியலமைப்பில் கூறப் பட்டுள்ளன. இவர்களுக்குக் கல்வி, கலாச்சார, மத உரிமைகள் உண்டு. இவ்வுரிமைகளுக்கு இடையூறு ஏற்படும் போது நீதிமன்ற வாயிலாகச் சிறுபான்மையினர் தங்கள் உரிமைகளை நிலை நாட்டலாம்.

**சட்டமன்றத்தின் வரம்பு மீறல் தடுக்கப்படுகிறது**

அரசியலமைப்பால் தோற்றுவிக்கப்பட்ட சட்டமன்றங்களின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. சட்டமன்றங்கள் இவ் வதிகார வரம்பை மீறும்போது நீதிமன்றத்தால் தடுக்கப்படுகின் றன. மேலும், அடிப்படையுரிமைகளைப் பாதிக்கும் எந்தச் சட்டத் தையும் இயற்ற முடியாது. அடிப்படை உரிமைகளைப் பாதிக்கக் கூடிய சட்டங்கள் அரசியலமைப்பிற்கு முரணானவை எனவும், செல்லத்தக்கவை அல்லவெனவும் நீதிமன்றங்கள் தீர்ப் பளிக்கும். அரசியலமைப்பின் வரம்பை மீறிச் சட்டங்கள் இயற்ற முடியாது.

**கூட்டாட்சி நாடுகளுக்குப் பொருத்தமானது**

நெகிழா அரசியலமைப்புக் கூட்டாட்சி நாடுகளுக்கு மிகவும் பொருத்தமானது ஆகும். கூட்டாட்சியில் நடுவு அரசாங்கத்திற் கும், அதன் உறுப்புகளுக்கும் இடையே உடன்பாடுகளும் அதிகாரப்

பங்கீடுகளும் உண்டு. இவ்வுடன்பாடுகளும் அதிகாரப் பங்கீடு களும் நெகிழா அரசியலமைப்பில் தெளிவாக எழுதப்பட்டுள்ளன. நடுவரசோ அல்லது மாநில அரசோ உடன்பாட்டை மீறும்போது எளிதாகச் சுட்டிக்காட்டமுடியும். எனவே, நெகிழா அரசிய லமைப்புக் கூட்டாட்சி நாடுகளுக்கு மிக அவசியமானது ஆகும்.

### நெகிழா அரசியலமைப்பின் குறைகள் – நெகிழாத் தன்மையும் ஏற்காத் தன்மையும்

நெகிழா அரசியலமைப்பின் தன்மை வளைந்து கொடுக்காத ஒன்றாகும். புதியனவற்றை ஏற்காத தன்மையும் அதனிடம் உண்டு. இவைகள் தேசிய நலனுக்குப் பாதகமாக அமையும். அரசியல், பொருளாதார, சமூக முன்னேற்றங்களுக்கும், மாறுபாடு களுக்கும் ஏற்ப நெகிழ்ந்து கொடுக்கக்கூடியதாக அரசியலமைப்பு இருக்க வேண்டும். நாடு முன்னேற்றப்பாதையில் செல்லும்போது நெகிழா அரசியலமைப்பு நகராமல் இருக்கும். நெகிழா அரசிய லமைப்புக் குழந்தையின் வளர்ச்சியைக் கருத்திற் கொள்ளாது தைக்கப்பட்ட சட்டைக்கு ஒப்பாகும். இது புரட்சிகளுக்கு வழி கோலும். இப்புரட்சிகள் பழைய முறையை அடியோடு அகற்றிப் புதிய அரசியல், பொருளாதார, சமூக அமைப்புகளை நிறுவின. எளிதில் திருத்தங்கள் செய்ய முடியாதது, நெகிழா அரசிய லமைப்பின் முக்கியக் குறைபாடாகும்.

### பிற்போக்கானது

நெகிழா அரசியலமைப்பு நீண்ட காலங்களுக்கு முன் இயற்றப் பட்டதாக இருக்கலாம். இயற்றப்படும்போது எதிர்காலத்தில் வரும் முன்னேற்றங்களையும் மாறுதல்களையும் எதிர்நோக்கி அரசிய லமைப்புகளைப் புனைவது இயலாது. வளர்ச்சிகளுக்கும், மாற்றங் களுக்கும் வகை செய்யாது. பிற்போக்குடனும், பழமையில் தோய்ந்ததாகவும் நெகிழா அரசியலமைப்பு இருக்கும்.

### நீதித்துறைக்கு அதிக முக்கியத்துவம்

நெகிழா அரசியலமைப்பில் நீதித்துறைக்கு அதிக அதிகாரமும் முக்கியத்துவமும் கொடுக்கப்பட்டுள்ளன. சட்டமன்றங்களின் நடவடிக்கைகளையோ, நிருவாகத்துறையின் நடவடிக்கைகளையோ அரசியலமைப்பிற்கு முரணானது என்று நீதிமன்றங்கள் கூறிச் செய லற்றதாக்கலாம். நீதிபதிகள் சட்டத்தின் வாக்கியங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கிறார்களே தவிர, சட்டங்களின் நோக்கத் தையும், காலத்தின் உயிர்ப்பையும், மாறுபாட்டையும் கவனிப்பது இல்லை.

## நெகிழும் அரசியலமைப்பின் நிறைகளும் குறைகளும்

### நெகிழும் அரசியலமைப்பின் நிறைகள் - தேவைக்கேற்ப மாறும்

நெகிழும் அரசியலமைப்பைத் தேவைக்கேற்ப மாற்றிக்கொள்ள லாம். இது நெகிழும் அரசியலமைப்பின் பெரும் சிறப்பாகும். அரசியலமைப்புச் சட்டத்தைச் சாதாரணச் சட்டத்தை மாற்றுவது போல மாற்றி அமைத்துக் கொள்ளலாம். எனவே, காலமாறுபாடு களுக்கும், அவ்வப்போது தோன்றும் புதிய சூழ்நிலைகளுக்கும், தேவைகளுக்கும் ஏற்ப அரசியலமைப்பில் திருத்தங்கள் செய்து மாற்றி அமைத்துக் கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, இரண் டாவது உலகப் பெரும் போர் நடைபெறும்போது இங்கிலாந்தின் தேர்தல் ஒத்திவைக்கப்பட்டுப் பாராளுமன்றத்தின் ஆயுள் நீடிக்கப் பட்டது. தலைமை அமைச்சர் சேம்பர்லின் பதவித்துறவு மேற் கொண்டவுடன் சர்ச்சில் தலைமை அமைச்சரானார். போர்க்கால நெருக்கடி நிலைகளுக்கு ஏற்ப இங்கிலாந்து அரசியலமைப்பு வளைந்து கொடுத்தது. ஆனால், அதே நேரத்தில் நெகிழாத் தன்மையுடைய அரசியலமைப்பாக இருந்ததால், போர் நெருக்கடி காலத்திலும் அமெரிக்கா தனது குடியரசு தலைவர் தேர்தலை நடத்த வேண்டிய தாயிற்று. பேராசிரியர் பிரைசின் கூற்றுப்படி, நெருக்கடி காலங் களின் அவசர நிலைமைக்கேற்ப நெகிழும் அரசியலமைப்பு வளைந்து கொடுக்கின்றது. ஆனால், முறிவது இல்லை. அந் நெருக்கடி தீர்ந்தவுடன் பழைய நிலையை எய்துகின்றது. ஊர்தியொன்று செல்வதற்காக மரக்கிளை ஒதுக்கப்பட்டு, அது சென்றவுடன் ஒதுக்கப்பட்ட மரக்கிளை மீண்டும் அதே முன்நிலையை அடைவது போல நெகிழும் தன்மையுடைய அரசியலமைப்பு இருக்கிறது.

### புரட்சிகளைத் தவிர்க்கும்

நெகிழும் அரசியலமைப்பு அரசியல் தேவைக்கேற்ப மாறி அரசியற் குழப்பங்களையும், புரட்சிகளையும் தவிர்க்கும். வளைந்து கொடுத்து முறிந்துவிடாமல் நிற்கும். நெகிழா அரசியலமைப்பில் மக்கள் கொதித்தெழுந்து புரட்சிகளில் ஈடுபட்டு அரசியலமைப்பை முறிக்க முற்படுவர். அரசியலமைப்பின் அடிப்படைத் தன்மை களைக்கூட எளிதில் மாற்றி, நெகிழும் அரசியலமைப்புப் புரட்சி களைத் தவிர்க்கும். புரட்சிகள் தோன்றுவதற்கு முன்பே அரசிய லமைப்பில் தக்க திருத்தங்களைச் செய்துவிடலாம்.

### வளரும்தன்மையுடையது

மக்களின் கருத்துகளுக்கேற்பவும், விருப்பங்களுக்கேற்பவும் நெகிழும் அரசியலமைப்பு வளைந்து கொடுக்கும். புதுக் கருத்து

களுக்கும், தேவைகளுக்கும் எளிதில் இடமளித்து வளர்ச்சியடையும். சமுதாயத்தோடும் காலத்தோடும் இணைந்து வளரும் தன்மையுடையதாக நெகிழும் அரசியலமைப்பு இருக்கும்.

## நெகிழும் அரசியலமைப்பின் குறைகள்—உறுதியற்ற தன்மை

நெகிழும் அரசியலமைப்பு நெகிழும் தன்மையுடையதாகவும், உறுதியற்ற தன்மையினதாகவும், நிலையற்ற தன்மையினதாகவும் இருக்கும். நெகிழும் அரசியலமைப்பை எளிதில் மாற்ற இயலும். ஆதலால், அரசியல்வாதிகளின் விருப்பு வெறுப்புகளுக்கேற்ப அரசியலமைப்பு மாற்றத்திற்குள்ளாகும். நெருக்கடிக்கும் தேவைக்கும் ஏற்ப மாறுதலடையாமல் மக்களின் மனவெழுச்சிக்கேற்ப அரசியலமைப்பு எளிதில் மாறுதலடையும்.

## உரிமைகளுக்குப் பாதுகாப்பில்லை

மக்களின் உரிமைகளுக்கும் சுதந்திரத்திற்கும் நெகிழும் அரசியலமைப்பில் பாதுகாப்பில்லை. அரசியலமைப்பை எளிதில் மாற்றி மக்களின் உரிமைகளைப் பறிக்கலாம். மக்களின் உரிமைகள்மீது சட்டமன்றங்களின் ஆக்கிரமிப்பும் தலையீடும் நெகிழும் அரசியலமைப்பில் அதிகமாகும்.

## குடியாட்சிக்கு ஏற்றதல்ல

நெகிழும் அரசியலமைப்பு நீதிபதிகளின் கைப்பாவையாகும். இதில் அரசாங்க அலுவலர்களின் ஆதிக்கம் மேலோங்கி நிற்கும். இதனால் குடியாட்சி நாடுகளுக்கு ஏற்றதல்லவென்றும், பொது மக்களுக்கு நல்லதல்லவென்றும் கருதப்படுகிறது. பழக்க வழக்கங்களின் அடிப்படையில் இருக்கும் நெகிழும் அரசியலமைப்புப் பொதுமக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக அமைவதில்லை. ஏனெனில், பழக்கவழக்கங்களையும் மரபுகளையும் செல்வாக்குள்ளவர்களே தோற்றுவித்தனர். எனவே, இவர்களுக்குச் சாதகமாக இருக்குமே தவிர நெகிழும் அரசியலமைப்புக் குடியாட்சிக்கு ஏற்றதாக இருக்காது.

## கூட்டாட்சிக்கு ஏற்றதல்ல

கூட்டாட்சியில் கூட்டரசின் அதிகாரங்களும், உறுப்பு அரசுகளின் அதிகாரங்களும் நன்கு வரையறுக்கப்பட்டு நெகிழாத் தன்மையுடையதாக இருக்க வேண்டும். அப்போதுதான் உறுப்பு அரசுகளின் சுதந்திரம் பாதுகாக்கப்படும். அரசியலமைப்பு எளிதில் மாற்றக்கூடியதாக இருக்கக் கூடாது. அரசியலமைப்புத் திருத்தத்திற்குத் தனிமுறை இருப்பதோடு உறுப்பின் அரசுகளின் ஒப்பு

தலும் பெற வேண்டும். எனவே, நெகிழ்வுடைய அரசியலமைப்புக் கூட்டாட்சி நாடுகளுக்குப் பொருத்தமற்றதாகும்.

**வல்லாட்சிக்கு வழிகோலும்**

நெகிழும் அரசியலமைப்பு வல்லாட்சிக்கு வழிகோலும். சட்ட மன்றங்களும், நிருவாகத்துறையும் அடிக்கடி தங்களுக்குச் சாதக மாக அரசியலமைப்புகளைத் திருத்தும். தங்கள் அதிகாரத்தை அதிகரித்துக்கொள்ளும். மக்களின் உரிமைகளையும், சுதந் திரத்தையும் படிப்படியாகப் பறிக்கும். இதன் விளைவாக வல் லாட்சி தோன்றும். அரசியலமைப்பே அகற்றப்படும். தன் வசதிக்கேற்ப அரசியலமைப்பை எளிய முறையில் திருத்தி முசோலினி இத்தாலிய நாட்டில் வல்லாட்சியை நிறுவினர்.

**அரசியல் விழிப்பு அதிகம் தேவை**

நெகிழும் அரசியலமைப்பை எளிதில் திருத்தி மக்களின் உரிமைகளை நிருவாகத்துறையும் சட்டமன்றங்களும் பறிக்கலாம். எனவே, சட்டமன்றத்தின் ஆக்கிரமிப்பிற்கும், நிருவாகத்துறை யின் ஆக்கிரமிப்பிற்கும் மக்கள் எதிர்த்துப் போராட வேண்டும். மக்கள் கற்றவர்களாகவும் நுண்ணறிவுடையவர்களாகவும் அரசியல் விழிப்பு அதிகம் உள்ளவர்களாகவும் இருக்க வேண்டும். நெகிழும் அரசியலமைப்பு முறை பொதுமக்களுக்கு ஏற்றதல்ல. இவர்கள் எளிதில் ஏமாற்றப்படுவர்.

**காலம் உருவாக்கிய தோல்வி**

தற்காலத்தில் உலக நாடுகளிடையே நெகிழும் அரசிய லமைப்பைவிட நெகிழா அரசியலமைப்பே ஆதிக்கம் பெற்றுள்ளது. அமெரிக்க அரசியலமைப்பு நெகிழாத் தன்மையுடையதாயின், ஸ்விட்சர்லாந்து அரசியலமைப்பு அதனினும் அதிக நெகிழாத் தன்மையுடையது. எனவே, மக்களின் விருப்பம் நெகிழாத் தன்மையுடைய அரசியலமைப்பிற்கே ஆகும். எனவே, நெகிழும் அரசியலமைப்பிற்குக் காலம் தோல்வியை ஏற்படுத்தியுள்ளது. உலக நாடுகளில் இங்கிலாந்து மட்டுமே மிக நெகிழும் அரசிய லமைப்பை உடையதாக இருக்கிறது.

முதன்முதல் நெகிழா அரசியலமைப்பு அமெரிக்க மக்களால் போற்றப்பட்டது. அதன் பிறகு பல நாடுகள் நெகிழா அரசிய லமைப்பையே பின்பற்றின. நெகிழா அரசியலமைப்பே கீழ்க் காணும் காரணங்களால் ஆதரிக்கப்படுகின்றன.

1. மக்கள் தங்கள் உரிமைகளுக்குப் பாதுகாப்பைத் தேடுவதுடன் அரசாங்கத்தின் அதிகாரத்தையும் கட்டுப்படுத்த விரும்புகின்றனர்.

2. எழுதப்பட்டதும் நெகிழ்வற்றதுமான அரசியலமைப்புக் குடியாட்சிக்கு மிக ஏற்றதாக உள்ளது.

3. பழைய அரசியலமைப்பை நீக்கிவிட்டுப் புதிய அரசியலமைப்புகளைத் தோற்றுவிக்கும்போது திட்டமானதும் தெளிவுடையதுமான எழுதப்பட்டதும் நெகிழாத் தன்மையுடையதுமான அரசியலமைப்புகளையே ஏற்படுத்துகின்றனர்.

4. தற்காலத்தில் கூட்டரசுமுறை அரசாங்கமே பேராதரவு பெற்று வருகிறது. இக்கூட்டரசுமுறை அரசாங்கத்திற்கு எழுதப்பட்டதும், நெகிழாத்தன்மையுடையதுமான அரசியலமைப்பு அவசியமாகிறது.

எழுதப்பட்டதும், நெகிழாத் தன்மையுடையதுமான அரசியலமைப்புகளே தற்கால முறையாகும்; என்றாலும், அரசியலமைப்புத் திருத்தத்தில் ஒரு நடுநிலையான முறை கையாளப்படுகிறது. நாட்டின் வளர்ச்சியையும் தேவைகளையும் கருத்தில் ஏற்காத மிக நெகிழாத்தன்மையுடைய அரசியலமைப்புகளோ, அல்லது மக்களின் உரிமைகளைப் பலியாக்கும் மிக நெகிழ்வுடைய அரசியலமைப்புகளோ விரும்பப்படுவதில்லை.

## நெகிழா அரசியலமைப்பு—எடுத்துக்காட்டு

### அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு உலகிலுள்ள அரசியலமைப்புகளில் மிகவும் நெகிழாத் தன்மையுடையதாகும். கூட்டாட்சி அரசியலமைப்பாகவும், ஆவண முறையை ஏற்றுள்ளதாகவும், அரசியலமைப்புத் திருத்தங்களுக்குத் தனி முறை கொண்டதாகவும் அமைந்துள்ளது.

அரசியலமைப்புத் திருத்தத்திற்குக் கூறப்பட்டுள்ள கடினமான தனி முறை காரணமாக 187 ஆண்டுகளில் 25 அரசியலமைப்புத்திருத்தங்களே நிறைவேறியுள்ளன. அமெரிக்கப் பாராளுமன்றம் தனித்து அரசியலமைப்பைத் திருத்த முடியாது. மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கங்களும் இணைந்தே அரசியலமைப்பைத் திருத்த இயலும். மாநிலங்களின் உரிமைகளைக் காப்பதும், மக்களின் பாதுகாப்பையும் நலத்தையும் பேணுவதும் அரசிய

லமைப்பின் முக்கிய நோக்கங்களாகும். எனவே, மத்திய மாநில அரசாங்கங்கள் இணைந்தே திருத்தத்தைச் செய்ய இயலும்.

பாராளுமன்றத்தில் மொத்த உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கினர் அரசியலமைப்புத் திருத்தத்தை ஏற்று, மாநிலங்களில் நான்கில் மூன்று பங்கினரும் ஏற்க வேண்டும். பதின்மூன்று மாநிலங்களாய் இருந்த பொழுதே அரசியலமைப்பைத் திருத்துவது கடினமாக அமைந்தது. ஏனெனில், பத்து மாநிலங்கள் திருத்தத்தை ஏற்க வேண்டும். ஆனால், தற்போது ஐம்பது மாநிலங்கள் இருப்பதால் அரசியலமைப்பைத் திருத்துவதற்கு முப்பத்தெட்டு மாநிலங்களுக்கு மேல் திருத்தத்திற்கு இசைவு அளிக்க வேண்டும். எனவே, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு மிக நெகிழ்வற்றதாகி விட்டது.

### ஜெர்மானியக் குடியரசின் அரசியலமைப்பு

இரண்டாம் உலகப் பெரும் போருக்குப்பின் 1949ஆம் ஆண்டி லிருந்து மேற்கு ஜெர்மனியின் கூட்டாட்சி அரசியலமைப்பு நடை முறையிலிருக்கிறது. அரசியலமைப்புத் திருத்தத்திற்குத் தனி முறை வகுக்கப்பட்டுள்ளது. பாராளுமன்றத்தின் இரு அவை களிலும் மூன்றில் இரண்டு பங்குப் பெரும்பான்மை வலியுறுத்தப் படுகிறது. மேலும், மாநிலங்களின் இசைவும் அரசியலமைப்பின் சில பகுதிகளைத் திருத்த அவசியமாகிறது. எனவே, ஜெர்மானிய அரசியலமைப்பும் நெகிழாத் தன்மையுடையது.

### பிரெஞ்சு அரசியலமைப்பு

1958ஆம் ஆண்டிலிருந்து பிரெஞ்சின் ஐந்தாவது குடியரசின் அரசியலமைப்பு நடைமுறையிலுள்ளது. அரசியலமைப்புத் திருத்தத்தைக் குடியரசு தலைவரோ அல்லது பாராளுமன்ற உறுப்பினர்களோ கொண்டுவரலாம். திருத்தத்தை முன்மொழியும் உரிமை நிருவாகத்துறைக்கும் சட்டமன்றங்களுக்கும் உண்டு. அரசியலமைப்புத் திருத்தம் பரராளுமன்றத்தின் இரு சபை களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட பிறகு குடியொப்பத்திற்கு விடப்படும். பாராளுமன்றத்தின் இரு அவைகளின் கூட்டுக் கூட் டத்தில் குடியரசு தலைவர் திருத்தத்தை முன்மொழிந்தாலும், இத் திருத்தத்தைப் பாராளுமன்றத்தில் ஐந்தில் மூன்று பகுதி யினர் ஏற்றாலும் திருத்தம் குடியொப்பத்திற்கு அனுப்பப்பட வேண்டியதில்லை. தாக்குதல் காலங்களில் எத்திருத்தமும் கொண்டு வர இயலாது. அதேபோல் குடியாட்சி முறை அரசாங்கத்தை மாற்றவும் திருத்தவும் அனுமதிக்கப்படுவதில்லை. சாதாரணச் சட்ட ஆக்கமுறையிலிருந்து அரசியலமைப்புத் திருத்தமுறை

வேறுபட்டிருப்பதாலும் கடினமாக இருப்பதாலும் பிரான்சு நாட்டின் அரசியலமைப்பின் நெகிழாத்தன்மையைக் காண்கிறோம்.

**இத்தாலி, தென்னாப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, ஸ்விட்சர்லாந்து ஆகிய நாடுகளின் அரசியலமைப்புகள்**

இந்நாடுகளின் அரசியலமைப்புகளும் நெகிழாத்தன்மை உடையனவாகும். அரசியலமைப்பைத் திருத்துவதற்குக் கடினமான முறையும், சாதாரணச் சட்ட ஆக்க முறையிலிருந்து அரசியலமைப்பைத் திருத்துவதற்கு வேறுபட்ட தனிமுறையும், குடியொப்பத்திற்கான ஏற்பாடும், மாநிலங்களின் ஒப்புதல்களும் கூறப்பட்டிருப்பதால் இவைகள் நெகிழா அரசியலமைப்புகளாகும். அரசியலமைப்புகளின் மாற்றம் என்ற தலைப்பில் இந் நாடுகளின் அரசியலமைப்புத் திருத்தத்திற்கான முறைகள் சொல்லப்பட்டுள்ளன.

## நெகிழும் அரசியலமைப்பு—எடுத்துக்காட்டு

**இங்கிலாந்து அரசியலமைப்பு**

இங்கிலாந்தின் அரசியலமைப்பு ஒரு குறுப்பிட்ட நாளில் குறிப்பிட்ட அவையால் ஏற்படுத்தப்பட்டதன்று. இது நீண்டகால வளர்ச்சியின் விளைவாகும். வழக்கங்களும் வழக்காறுகளுமே அரசியலமைப்பின் அடிப்படைகளாகும். இருப்பினும், இவ்வழக்காறுகளும் காலத்தால் கைவிடப்படுகின்றன; அழிகின்றன. எனவே, முழுமையான வழக்காறுகளின் பட்டியலையும் நாம் காண இயலாது. இவைகள் மாறும் தன்மையன; காலத்திற்கேற்ப வளைந்து கொடுக்கும் தன்மையன. எனவே, நெகிழும் தன்மையுடையனவாகும்.

பாராளுமன்றம் எந்த வழக்காற்றையும் சட்டத்தையும் மாற்ற இயலும். நீதிமன்றங்கள் இவற்றை வினவ இயலாது. 1949ஆம் ஆண்டில் பாராளுமன்றம் இரும்பு-எஃகுத் தொழிற்சாலையைத் தேசிய உடைமையாக்கியது. 1951ஆம் ஆண்டில் இச் சட்டத்தை நீக்கிவிட்டது. 1911ஆம் ஆண்டுச் சட்டப்படி பராளுமன்றம் ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு கலைக்கப்பட வேண்டும். ஆனால், 1915ஆம் ஆண்டில் கலைக்கப்பட வேண்டிய பாராளுமன்றம் தானே ஒரு சட்டத்தை இயற்றித் தனது ஆயுட்காலத்தை மேலும் ஓராண்டு நீடித்தது. இதேபோல் 1940ஆம் ஆண்டிலும் கலைக்கப்பட வேண்டிய பாராளுமன்றம் தனது ஆயுட்காலத்தை நீடித்தது. பாராளுமன்றச் சாதாரணச் சட்டத்தின் நடைமுறையிலேயே சட்டத்தை ஆக்கலாம்; அழிக்கலாம்; மாற்றலாம். பாராளு

மன்றத்தின் இறைமையும் மேலாண்மையையும் கட்டுப்படுத்த இயலாதன.

இங்கிலாந்து அரசியலமைப்பில் ஆவணமுறை இல்லை; திருத்தத்திற்குத் தனிமுறை கூறப்படவில்லை. சாதாரண முறையில் எச்சட்டத்தையும் மாற்றலாம்; நீக்கலாம். பாராளுமன்றம் மேலாண்மையுடையது. நீதிமன்றங்களுக்குப் புனராய்வு அதிகாரம் கிடையாது. வழக்காறுகளே சட்டத்தின் அடிப்படைகளாகவும், எழுதப்படாத சட்டங்களாகவும் மதிக்கப்படுகின்றன. இவைகள் அரசியலமைப்பின் நெகிழும் தன்மைக்குச் சான்றுகளாகும்.

**நியூசிலாந்து அரசியலமைப்பு**

நெகிழும் அரசியலமைப்பிற்கு நியூசிலாந்து ஒரு புது மாதிரியான எடுத்துக்காட்டாகும். இஃது இங்கிலாந்து அரசியலமைப்பிலிருந்து இருவிதங்களில் மாறுபட்டுள்ளது. ஒன்று, நியூசிலாந்தில் ஆவண முறை அரசியலமைப்பு உண்டு. இரண்டு, அரசியலமைப்புத் திருத்தத்திற்குத் தனி முறை கூறப்பட்டுள்ளது. இருப்பினும், இது நெகிழும் அரசியலமைப்பாகக் கருதப்படுவதற்குக் காரணம் நியூசிலாந்தின் பாராளுமன்றத்தின் மேலாண்மை ஆகும்.

நியூசிலாந்து இங்கிலாந்திடமிருந்து சுதந்திரம் பெற்ற நாடுகளுள் ஒன்றாகும். இஃது ஆரம்ப காலத்தில் கூட்டாட்சி அரசியலமைப்பை ஏற்படுத்தியது. ஆனால், மாநில அரசாங்கங்களை அழித்துவிட்டு, 1876ஆம் ஆண்டில் ஒருமுக அரசாக மாறியது. நியூசிலாந்தின் சட்டமன்றமாகிய பொது அவை எந்தச் சட்டத்தையும் சாதாரண முறையில் திருத்தலாம், மாற்றலாம், ஏற்படுத்தலாம். சாதாரணச் சட்ட ஆக்க முறையில் 1876ஆம் ஆண்டில் மாநில அரசாங்கங்கள் நீக்கப்பட்டன. 1951-ல் மேலவை அழிக்கப்பட்டது. இச்செயல்கள் நெகிழும் அரசியலமைப்பின் தன்மைகளைக் காட்டுகின்றன.

1956ஆம் ஆண்டின் நியூசிலாந்தின் தேர்தல் சட்டம் அரசியலமைப்பை ஓரளவு நெகிழ்வற்றதாக்கியது. அரசியலமைப்பின் குறிப்பிட்ட பகுதிகளை மாற்றப் பிரதிநிதிகள் அவையில் 75 விழுக்காடு பெரும்பான்மையோ அல்லது குடியொப்பமோ வலியுறுத்தப்படுகிறது. இந்தச் சட்டத்தையும் பாராளுமன்றமே மாற்ற இயலும். தனிநிறுவனமோ அல்லது அமைப்போ அவசியமில்லை. பாராளுமன்றத்தின் இறைமையும் மேலாண்மையும் அழிந்துவிடாமல் நெகிழும் அரசியலமைப்பாக நியூசிலாந்தின் அரசியலமைப்புத் திகழ்கிறது.

## முக்கிய வினுக்கள்

1. நெகிழும், நெகிழா அரசியலமைப்புகளை வேறுபடுத்துக. இவ்வாறு வேறுபடுத்திக் காண்பது நடைமுறையில் பயனுள்ளதா? (செ. ப. க. செப்டம்பர், 1973)

2. நெகிழா, நெகிழும் அரசியலமைப்புகளை வேறுபடுத்திக் காட்டுக. நீவிர் படித்துள்ள ஏதாவது ஓர் அரசிய லமைப்பிலிருந்து நுமது விடைக்குத் தகுந்த மேற்கோள் காட்டுக. (செ. ப. க. ப. மு. செப்டம்பர், 1973)

3. அரசியலமைப்புகள் நெகிழாதவை, நெகிழ்பவை என்று பிரிக்கப்படுவதெப்படி? எடுத்துக்காட்டுகள் தருக. (ம. ப. க. ஏப்ரல், 1969)

4. நெகிழும் அரசியலமைப்பு, நெகிழா அரசியலமைப்பு இவற்றிற்கிடையேயுள்ள வேறுபாடுகளைச் சுட்டிக்காட்டிச் சான்றுதந்து விளக்குக. (செ. ப. க. செப்டம்பர், 1969).

5. நெகிழும், நெகிழா அரசியலமைப்புகளில் நிறை குறைகள் யாவை?

6. நெகிழும், நெகிழா அரசியலமைப்புகளின் தன்மைகள் யாவை?

# 6. அரசியலமைப்புகளின் வளர்ச்சி
(Growth of Constitutions)

## அ. அரசியல் அமைப்புகளின் மாற்றம்
(Changes in Constitutions)

[**மாற்றத்தின் அவசியம்:** அரசியலமைப்பின் தோற்றக்கால ஆதிக்கம் — வளர்ச்சியின் அவசியம் — வளர்ச்சியும் மாற்றமும்.

**சட்டத்திற்கு ஆட்படாத சூழ்நிலையான வளர்ச்சியும் மாற்றமும்:** மத்திய அரசாங்கத்தில் அதிகாரக் குவிப்பு— போர்க்காலம் — பொருளாதார நெருக்கடி — வாணிக வளர்ச்சி—நன்னல அரசு — கட்சி முறை — தேர்தல் முறை—அறிவியல் வளர்ச்சி—பொதுத்துறை அலுவல்— மக்கள் மனப்பான்மை—மக்களின் அறியாமை.

### சட்டரீதியான வளர்ச்சியும் மாற்றமும்

**அரசியலமைப்புத் திருத்தம்:** அரசியலமைப்புத் திருத்தத்தில் கவனம் பெற வேண்டியன — அரசியலமைப்புத் திருத்தத்தில் சில நிலைகள்—அரசியலமைப்புத் திருத்த முறைகள்—அரசியலமைப்பு சட்டசபையால் திருத்தப்படல் — இந்தியாவில் அரசியலமைப்புத் திருத்தம்—தென்னுப்பிரிக்காவில் அரசியலமைப்புத்திருத்தம்— ஸ்வீடனில் அரசியலமைப்புத் திருத்தம் — அரசியலமைப்புக் குடியொப்ப மூலம் திருத்தப்படல்—ஸ்விட்ஸர்லாந்தில் அரசியலமைப்புத் திருத்தம்—கட்டாய வாக்கெடுப்பும் குடியொப்பமும்—மக்கள் துவக்க மூலம் திருத்தல்—ஆஸ்திரேலியாவில் அரசியலமைப்புத் திருத்தம்— இத்தாலியில் அரசியலமைப்புத் திருத்தம்—அயர்லாந்தில் அரசியலமைப்புத் திருத்தம்—கூட்டாட்சி நாடுகளில் அரசியலமைப்புத் திருத்தம்—அரசியலமைப்புச் சிறப்புக் குழுவால் திருத்தப்படல் — அரசியலமைப்புத் திருத்தத்தின் நற்பயன்களும் குறைகளும்—நற்

பயன்கள்—கால மாற்றம்—திருத்தத்திற்கான தனி முறைகளின் அவசியம்—மக்களின் இறைமை காக்கப்படுகிறது—மாநிலங்களின் உரிமைகள் காக்கப்படுகின்றன—புரட்சியைத் தடுத்தல்—குறைகள் : சிக்கலான முறை—தேவைக்கு ஏற்றதல்ல—கடின முறை—விதிகளின் விரிவாக்கம்.

**நீதிமன்ற விளக்கம் :** இயற்றப்பட்ட சட்டத்தின் குறைகள்—விளக்கம் அளிக்க நீதிமன்றங்களுக்கு அதிகாரம் — நீதிமன்ற விளக்கத்தால் சட்டங்களில் மாற்றம்—விளக்கத்தால் அரசியலமைப்பில் மாறுதல்—அமெரிக்க அரசியலமைப்பு—அரசியலமைப்பின் முன்னுரை—ஆயுதம் தாங்கிய படை—செய்திப் போக்குவரத்துச் சாதனம் — நீதிப்புனராய்வு—மேரிலாந்துக்கு எதிராக மக்குலோக் தொடுத்த வழக்கு—வாணிபத்திற்கு விளக்கம்—உள்ளடங்கு அதிகாரக் கோட்பாடு—நீதிமன்றத்தின் அதிகாரவாற்றல்—இந்திய அரசியலமைப்பு—சென்னை அரசாங்கத்திற்கு எதிராக A. K. கோபாலன் தொடுத்த வழக்கு—சென்னை அரசாங்கத்திற்கு எதிராக வெங்கட்ராமன் தொடுத்த வழக்கு—அரசுடைமை ஆக்கிய வழக்கு—ஆஸ்திரேலிய அரசியலமைப்பு மாற்றம்—நீதிமன்ற விளக்கத்தின் நிறைகளும் குறைகளும்—நிறைகள் –வளர்ச்சியும்மாற்றமும்—மத்திய அரசின் அதிகார வளர்ச்சி—உரிமைகளின் பாதுகாப்பு—உள்ளடங்கு அதிகாரக் கோட்பாடு — குறைகள் — அதிகாரக் குவிப்பு—மாநிலங்களின் உரிமைப் பாதிப்பு—விளக்கத்தில் கருத்து மாறுபாடு.

**வழக்கமும் வழக்காறும் :** வழக்கமும் வழக்காறும் — அரசியலமைப்புகளில் வழக்கமும் வழக்காறும் — வழக்கம் வழக்காறுகளின் செல்வாக்கு.

**சட்டமன்றச் சாதாரணச் சட்டங்கள் :** அரசியலமைப்பில் பரந்த எல்லைக் கோடுகள்—சட்டமன்றத்தின் பங்கும் பணியும்.

**செயல்துறையின் நடவடிக்கைகள்.**]

ஒவ்வொரு நாட்டின் அரசியலமைப்பும் வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட காலத்தில் உருவாக்கப்பட்டது. அரசியலமைப்புத் தோற்றுவிக்கப்பட்ட காலத்தில் நிலவிய கருத்துகளும், கோட்பாடுகளும் அரசியலமைப்பில் பிரதிபலிக்கும். அக்காலத்தே இருந்த சமூக, அரசியல், பொருளாதாரக் கோட்பாடுகளுக்கேற்ப

அரசியலமைப்பு அமைந்திருக்கும். பேராசிரியர் வியர் (Wheare) அவர்களின் கூற்றுப்படி, தோற்றுவிக்கப்பட்ட காலத்தில் நிலவிய அரசியல், பொருளாதார, சமூக சக்திகளுக்கு இணைப்புடைய தாகவும், அச்சக்திகளின் விளைவாகவும் அரசியலமைப்பு வடிவெடுக்கும்.'[1]

## மாற்றத்தின் அவசியம்

### அரசியலமைப்பின் தோற்றக்கால ஆதிக்கம்

எழுதப்பட்ட அரசியலமைப்புகளையும், அவற்றினுள் காணப்படும் அரசியல், பொருளாதார, சமூகக் கோட்பாடுகளையும் உற்று நோக்கினால் பேராசிரியர் வியர் அவர்களின் கூற்று மெய்ப்பிக்கப்படும். இரண்டாம் உலகப்போரில் தோற்கடிக்கப்பட்டுப் பெரிதும் நாசமடைந்த ஜப்பான் தனது அரசியலமைப்பை வகுக்கும்போது போரின் மீதான வெறுப்பைக் காட்டியுள்ளது. மற்ற நாடுகளோடு ஒத்துழைப்பது, வருங்காலச் சமுதாயத்திற்கு அமைதியின் பலனை அளிப்பது, மீண்டும் போரின் கொடுமையை அடையாதிருப்பது, எக்காலத்தும் அமைதியையே விரும்புவது என்பன போன்ற கோட்பாடுகள் அவ்வரசியலமைப்பில் அடங்கியுள்ளன.[2] பிரஞ்சு நாட்டு அரசியலமைப்பில் புரட்சியும், அதன் விளைவாகத் தோன்றிய மனித உரிமைப் பிரகடனமும் நினைவுபடுத்தப்படுகின்றன. 1789ஆம் ஆண்டின் மனித உரிமைப் பிரகடனமான சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியனவற்றைப் போற்றியும், கடல் கடந்து பரப்பியும் வாழ்வோம் என அரசியலமைப்புக் கூறுகிறது.[3] சோவியத் ரஷ்யாவின் அரசியலமைப்பு காரல் மார்க்சின் பொருளாதாரக் கோட்பாடாகிய பொதுவுடைமைக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு எழுந்துள்ளது. இதற்கு மாறாக அமெரிக்கா தனிமனித உடைமையையும், பொருளாதாரச் சுதந்திரத்தையும் வலியுறுத்தி அரசியலமைப்பை வகுத்துள்ளது. மதச்சுதந்

[1]Wheare : 'A Constitution is indeed a resultant of a parallelagram of forces- political, economic and social, which operate at the time of adoption.'

[2]Constitution of Japan : 'We, the Japanese people, desire place for all time and are deeply conscious of the high ideals controlling human relationship and we have determined to preserve our security and existence trusting in the justice and faith of the peace- loving peoples of the world.'

[3]Constitution of France : 'The French people hereby solemnly proclaims its attachment to the Rights of Man and the Principles of national sovereignty as defined by the Declaration of 1789... The Republic hereby offers to the Overseas Territories that express the desire to adhere to them, new institutions based on the common ideal of liberty, equality and fraternity.'

திரமும் அடிமை ஒழிப்பும் பேசப்படுகின்றன.[4] நீண்டகாலம் ஆங்கில ஆட்சியிலிருந்த இந்தியா தனது அரசியலமைப்பில் மக்களின் அடிப்படை உரிமைகளையும், அரசின் நெறிமுறைக் கோட்பாடுகளையும் கூறுகிறது; தீண்டாமையைச் சட்ட விரோத மாக்குகிறது; பெண்களுக்குச் சம உரிமை அளிக்கிறது. டென் மார்க்கின் அரசியலமைப்பில் சொத்துரிமை வலியுறுத்தப்படு கின்றது. எனவே, அரசியலமைப்புகள் உருவாகும் போது அக் காலத்தே நிலவும் சமய, அரசியல், பொருளாதார, சமுதாயக் கோட்பாடுகள் அவற்றில் ஆதிக்கம் கொள்கின்றன.

### அரசியலமைப்பு வளர்ச்சியின் அவசியம்

அரசியலமைப்பு எழுதப்பட்டுத் தோன்றிய காலத்தில் நிலவிய சூழ்நிலை அரசியலமைப்பின்மீது ஆதிக்கம் கொண்ட தைக் கண்டோம். ஆனால், அதே சூழ்நிலை தொடர்ந்து நீடிப்ப தில்லை. காலம் மாறிக்கொண்டே செல்லும்போது அதற்கேற்ப அரசியல், பொருளாதார, சமூகச் சூழ்நிலைகளும் மாறுகின்றன. எனவே, அரசியலமைப்புகளும் அதற்கேற்ற மாற்றங்களை அடைய வேண்டும். குடியரசு தலைவர் உட்ரோ வில்சனின் கருத்துப்படி, 'உயிருள்ள அரசியலமைப்புகள் தங்கள் அமைப்பிலும், நடை முறையிலும் டார்வின் கோட்பாட்டைக் கொண்டதாக இருக்க வேண்டும்.' அரசியலமைப்புக் காலத்திற்குப் பிற்பட்டதாக இல்லாமல் காலத்தோடு வளர வேண்டும். சூழ்நிலைக்கேற்பத் தன்னை மாற்றி அமைத்துக்கொண்டு உயிருடையதாக இருக்க வேண்டும். சமுதாயம் ஒரே நிலைத்த தன்மையுடையதன்று; மாறும் தன்மையுடையது. எனவே, அரசியலமைப்புகளும் மாறும் தன்மை உடையனவாகவும், வளரும் தன்மையுடையன வாகவும் சூழ்நிலைக்கும் காலத்திற்கும் ஏற்ப அனுசரணை உடையன வாகவும் இருப்பது அவசியமாகிறது.

### அரசியலமைப்பின் வளர்ச்சியும் மாற்றமும்

அரசியலமைப்பு இரு முறைகளில் வளர்ந்து மாற்றம் பெறலாம். ஒன்று சட்ட முறையான வளர்ச்சியும் மாற்றமும் (Formal Growth and Change), மற்றொன்று சட்டத்திற்கு ஆட்படாத வளர்ச்சியும் மாற்றமும் (Informal Growth and Change); அதாவது, சூழ்நிலை யாலான வளர்ச்சியும் மாற்றமும் ஆகும். அரசியலமைப்பில் முதல் வகை வளர்ச்சியும் மாற்றங்களும் சட்டப்படியான அரசிய

[4] V. Karpinsky: 'The Constitution concisely sets forth the fundamental principles of the new socialist system of society and of the new Soviet structure of our multi-national state. Ours is the first country in the history of mankind to have established such a system, such a structure of society.'

லமைப்புத் திருத்தத்தாலும், அரசியலமைப்பிற்கு நீதிமன்றங்கள் அளிக்கும் விளக்கத்தாலும், பழக்கவழக்கங்களாலும், வழக்காறு களாலும் ஏற்படுத்தப்படுகின்றன. இரண்டாவது வகை மாற்றம் சூழ்நிலையால் ஏற்படுத்தப்படுகின்றது. சட்டத்தின் வாசகம் எவ் விதத்திலும் மாற்றப்படாமல் அரசியலமைப்பின் உட்பொருளும் இயல்பும் மாற்றப்படுகின்றன.

## சட்டத்திற்கு ஆட்படாத வளர்ச்சியும் மாற்றமும் (Informal Growth and Change)

அரசியலமைப்புச் சட்ட முறையில் மாறுதலடையாமல் சூழ் நிலையின் காரணமாக நடைமுறையில் மாறுதல் பெறுகிறது. சட்டத்தின் வாசகங்கள் மாற்றப்படுவதில்லை. ஆனால், அரசிய லமைப்புச் சட்டத்தின் உயிர்ப்பும், உட்பொருளும், இயல்பும், மாறுதலும் வளர்ச்சியும் அடைகின்றன. இவ்வகையில் தோன் றும் சில மாறுதல்களைக் காணலாம்.

### மத்திய அரசாங்கத்தில் அதிகாரக் குவிப்பு

அரசியலமைப்பில் மத்திய அரசாங்கத்திற்கெனச் சில குறிப் பிட்ட அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. அதே போல மாநில அரசாங்கங்களுக்கும் குறிப்பிட்ட அதிகாரங்கள் கொடுக்கப்பட் டுள்ளன. அரசியலமைப்பின்படி அவரவர் அதிகார வரையறைக் குள் அவரவர் செயல்படவேண்டும். ஆனால், நடைமுறையில் காணும்போது மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் பெருகிக் கொண்டே சென்று அதிகாரக் குவிப்பு ஏற்பட்டுள்ளது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இந்நிலையைக் காணலாம். இவ்வதிகாரக் குவிப்பிற்குப் பல காரணங்கள் உண்டு.

### போர்க்காலம்

போர்க்காலத்தில் அதிகாரம் மத்திய அரசாங்கத்திடம் குவிகின்றது. ஒருமுக அரசாங்கமாக இருந்தாலும், கூட்டாட்சி அரசாங்கமாக இருந்தாலும் போர்நடவடிக்கைகளுக்காக மத்திய அரசாங்கம் அதிகமான அதிகாரங்களை எடுத்துக்கொள்கிறது. மாநில அரசாங்கங்களுக்கென ஒதுக்கப்பட்ட அதிகாரங்களையும், பணிகளையும் மத்திய அரசாங்கம் எடுத்து நடைமுறைப்படுத்து கிறது. மத்திய அரசாங்கத்தின் பொறுப்புகளும் அதிகரிக்கின்றன. மாநிலங்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டியதும், நாட்டைப் பேராபத்திலிருந்து பாதுகாக்க வேண்டியதும் மத்திய அரசாங் கத்தின் பொறுப்புகளாகின்றன. மாநிலங்களும் தங்கள் பாது காப்பின் அவசியத்தையும் அவசரத்தையும் கருதி மத்திய அர

சாங்கத்தின் இந்த அதிகாரக் குவிப்பைக் குறை கூறுவ தில்லை. நாட்டின் பொதுப் பாதுகாப்பையும் பொது நலனையும் மத்திய அரசாங்கம் பேணுவதால் இந்த அதிகாரக் குவிப்பு அவசியமாகிறது.

**பொருளாதார நெருக்கடி**

பொருளாதார நெருக்கடி காரணமாகவும் மத்தியில் அதிகாரக் குவிப்பு ஏற்படுகிறது. வாணிப மந்தம், பணவீக்கம், வேலை யின்மை, வறட்சி, பஞ்சம் ஆகிய பொருளாதாரச் சிக்கல் ஏற்படும் காலங்களில் மத்திய அரசாங்கம் தலையிட்டு நிலையைச் சீராக்க வேண்டியுள்ளது. மத்திய அரசாங்கத்திற்கு அதிக வருமானம் உள்ளதால் இவ்விதப் பொருளாதார நெருக்கடிகளுக்கு உதவ முடியும். வரிவிதிக்கவும் வருமானத்தை அதிகரிக்கவும் மத்திய அரசாங்கத்திற்கு அதிக வாய்ப்புகள் உள்ளன. வேலைவாய்ப்பு களை அதிகரித்தும் பஞ்ச நிவாரண வேலைகளை மேற்கொண்டும் மத்திய அரசாங்கம் செயல்படலாம். பொருளாதார நெருக்கடி யால் துன்பமுறும் மாநிலங்களுக்கு மத்திய அரசாங்கம் உதவி அளிக்க முடியும். ஒரு மாநிலத்திலிருக்கும் உபரிப் பொருள்களை மற்ற மாநிலங்களுக்கு வழங்க மத்திய அரசாங்கம் ஏற்பாடுகள் செய்யும். மேலும், ரூபாய் நோட்டுகள் அச்சிடுவதும், அயல் நாட்டுச் செலாவணியைக் கண்காணிப்பதும் மத்திய அரசாங் கத்திடம் இருப்பதால் பொருளாதாரச் சிக்கலுக்கேற்ற நடவடிக் கைகளை மேற்கொள்ள முடியும். எனவே, பொருளாதார நெருக் கடிகளும் மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்களையும், நடவடிக் கைகளையும் அதிகரிக்கின்றன.

**வணிக வளர்ச்சி**

வணிக வளர்ச்சியின் காரணமாகவும் மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் கணிசமாக அதிகரித்துள்ளது. 1789ஆம் ஆண்டில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு ஏற்படுத்தப்பட்ட நேரத்தில் மாநிலங்களிடையே நடைபெறும் வணிகத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் கூட்டாட்சிப் பாராளுமன்றத்திற்கு அளிக்கப்பட்டது. அதே போலக் கனடா நாட்டின் அரசிய லமைப்பும், ஆஸ்திரேலியா நாட்டின் அரசியலமைப்பும் மத்தியப் பாராளுமன்றத்திற்கு அதிகாரத்தை வழங்கியது. அரசியலமைப் பின் ஆரம்ப காலத்தில் மாநிலங்களிடையே மிகக் குறைவான வணிகமே நடைபெற்றது. அப்போது அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் ஊர்ப்புறச் சூழ்நிலையும், பயிர்த்தொழிலும் இருந்ததால் மாநிலங்களிடையே இருந்த வணிகம் மிகக் குறைவாக இருந்தது. எனவே, மத்திய மாநிலங்

களிடையே அதிகாரச் சமநிலையை ஏற்படுத்த இவ்வதிகாரத்தை மாநிலங்கள் வைத்துக் கொள்ளாமல் மத்திய அரசாங்கத்திற்கு அளித்தன. இதற்கான ஏற்பாடுகள் அரசியலமைப்பில் செய்யப் பட்டன. ஆனால், தற்காலத்தில் தொழில்வளர்ச்சியின் காரண மாகவும் தொழிற்புரட்சியின் காரணமாகவும் மாநிலங்களிடையே வாணிகம் பெருகியுள்ளது. இதன் விளைவாக மாநிலங்களிடையே உள்ள வாணிபத்தைக் கட்டுப்படுத்தும் மத்தியப் பாராளுமன்றத் தின் அதிகாரமும் அதிகரித்துள்ளது. அரசியலமைப்புத் தோற்றக் காலத்தில் நிலவிய அதிகாரச் சமநிலை இன்று நிலவுவதில்லை. மாநில அரசாங்கத்தின் அதிகாரத்தைவிட மத்திய அரசாங் கத்தின் அதிகாரம் அதிகரித்துள்ளது.

**நன்னல அரசு**

நன்னல அரசின் (Welfare State) தோற்றத்தாலும் மத்திய அரசாங்கத்திடம் அதிகாரக் குவிப்பு ஏற்பட்டுள்ளது. அரசிய லமைப்பின் தொடக்க காலத்தில் மத்திய அரசாங்கத்திற்கு ஒதுக் கப்படாத பணிகள் பலவற்றை மத்திய அரசாங்கம் மேற்கொள் கிறது. இதற்கு அரசின் சமூகசேவைக் கோட்பாடும் பொது நல அரசு கோட்பாடும் காரணங்களாகும். மக்கட்கு வேலை யில்லாக் காலங்களிலும், வயோதிகக் காலங்களிலும், உடல் ஊன முற்ற காலங்களிலும் மத்திய அரசாங்கம் உதவிகள் பல செய் கிறது. மேலும் நோயாளிகளுக்கான மருத்துவமனைகளும், பொதுச் சுகாதாரமும் அரசின் எல்லைக்குள் வந்துள்ளன. சமூக நல வாழ்வுகளுக்கான கல்வித் துறையிலும் மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் அதிகரித்துள்ளது. மாநிலங்கள் இச் சமூக நலத் திட்டங்களுக்குச் செலவிட இயலாது. நிதிவளம் மிக்க மத்திய அரசாங்கம் இத்திட்டங்களை நிறைவேற்றுகிறது; அல்லது இவை களை நிறைவேற்றுவதில் மாநிலங்களுக்கு உதவி செய்கிறது. இதன் காரணமாக மத்திய அரசாங்கத்தின் அதிகாரமும் செல் வாக்கும் ஓங்கியுள்ளன.

**கட்சி முறை**

கட்சி முறையும் அதிகாரக் குவிப்பிற்கு வழிவகை செய்துள்ளது. ஒருகட்சி முறையுடைய ரஷ்யா, யூகோஸ் லாவியா, சைனா ஆகிய நாடுகளில் கம்யூனிஸ்ட் கட்சி செல்வாக் குடையதாக இருக்கிறது. நிருவாகத்தின் தலைவர் கட்சியில் செல்வாக்குள்ளவராகவே இருப்பார். எனவே, மத்திய அரசாங் கத்தின் அதிகாரமும் செல்வாக்கும் அதிகரிப்பதில் இடையூறு தோன்றுது. இருகட்சி முறையுள்ள அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளிலும் அரசியல் கட்சிகளின் காரணமாக மத்திய

அரசாங்கத்தின் செல்வாக்கும், குறிப்பாக நிருவாகத் துறையின் செல்வாக்கும் அதிகரித்துள்ளது. அமெரிக்கப் பாராளுமன்றத்திலும் நிருவாகத்துறையிலும் ஒரே கட்சி பெரும்பான்மை பெற்றிருந்தால் அரசாங்கத்தின் இவ்விரு துறைகளிடையே உள்ள இடைவெளி நீங்கி மத்திய நிருவாகத்துறையின் அதிகாரமும் செல்வாக்கும் அதிகரிக்கும். இங்கிலாந்தில் பாராளுமன்றமும் நிருவாகத் துறையினரும் ஒரே கட்சியிலிருந்து வருவதால் நிருவாகத்துறையின் செல்வாக்கு ஓங்குவது எளிதாகிறது. பாராளுமன்றத் தீர்மானங்கள் நிருவாகத் துறையின் ஆலோசனையின் பேரிலேயே ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. மேலும், உண்மை நிருவாகத்துறையின் தலைவரான தலைமை அமைச்சர் பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியின் தலைவராக விளங்குகிறார். எனவே, இவர் பாராளுமன்ற நடவடிக்கைகளின்மீது ஆதிக்கம் செலுத்தி நிருவாகத் துறையை அதிகாரம் உள்ளதாகச் செய்கிறார். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பாராளுமன்றத்தின் பெரும்பான்மையினர் ஓர் அரசியல்கட்சியைச் சார்ந்தவராகவும், குடியரசு தலைவர் பிறிதோர் கட்சியைச் சார்ந்தவராகவும் இருந்தால் இவர்களிடையே மோதல்களும் பூசல்களும் தோன்றும். அப்போது நிருவாகத்துறையின் செல்வாக்குக் குறைக்கப்படும். பல கட்சிகளிருக்கும் பிரஞ்சு நாட்டின் நிலையையும் கவனித்தல் நன்று. பிரஞ்சின் அரசாங்கம் எப்போதும் பல கட்சிகளின் கூட்டு அரசாங்கமாகவே அமைகின்றது. இவர்கள் கட்சி மாறும்போது அமைச்சரவை வீழ்ச்சியடைகிறது. நிரந்தரமில்லா அமைச்சரவையை பிரஞ்சில் நாம் காணலாம். ஒவ்வோர் அமைச்சரவையும் மிகக் குறுகிய காலமே ஆட்சியை நடத்துகிறது. ஒரு வருடத்தில் நான்கு மாதங்கள் அமைச்சரவை ஆட்சியும் மீதமுள்ள எட்டு மாதங்கள் பாராளுமன்றத்தின் ஆட்சியுமே பிரான்சின் மூன்றுவது குடியரசில் நிலவியது. எனவே, டிகால் அரசியலமைப்பில் சீர்திருத்தங்கள் செய்து மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தையும், நிருவாகத் துறையின் செல்வாக்கையும் அதிகரித்தார். ஒருகட்சி முறை, இருகட்சி முறை, பலகட்சி முறை ஆகியவற்றில் இருகட்சி முறையில் நிருவாகத்துறையின் செல்வாக்கையும், மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தையும் எளிதில் அதிகரிக்க முடியும். பேராசிரியர் வியரின் (Wheare) கருத்துப்படி, அரசியலமைப்பு ஓர் எலும்புக்கூடு. அரசியல் கட்சிகளே அரசியலமைப்பின் தசையாகவும், இரத்தமாகவும் விளங்குகின்றன.

### தேர்தல் முறை

தேர்தல் முறையின் காரணமாகவும் மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் சட்டத்திற்கு ஆட்படாத விதத்தில் அதிகரித்துள்ளது.

வாக்காளர்களின் தகுதிகள், வாக்களிக்கும் முறை, உறுப்பினர் களுக்கு இடம் ஒதுக்கீட்டுமுறை ஆகியன கட்சிகளின் பலத் தைத் தீர்மானிக்கின்றன. கட்சிகளின் பலம் அரசாங்கத்தையும், நிருவாகத்துறையையும் தீர்மானிக்கிறது. இவைகள் பற்றிய விதிகளைச் சட்டமன்றங்களே இயற்றுகின்றன. சுவிட்சர்லாந்து நாட்டில் வாக்காளர்கள்பற்றிய விதிகளும், தொகுதிகள்பற்றிய விதிகளும் அரசியலமைப்பிலேயே அடங்கியுள்ளன. மத்திய நிருவாகத்துறையின் பலம் தங்கள் வாக்காளர்களைப் பொறுத்தும், தங்கள் கட்சியைப் பொறுத்தும் அமைகின்றது.

### அறிவியல் வளர்ச்சி

அறிவியல் வளர்ச்சியும் மத்திய அரசாங்கத்தின் அதி காரத்தையும், ஆதிக்கத்தையும் வளர்த்துள்ளது. தற்காலத்தில் வளர்ந்துள்ள போக்குவரத்துச் சாதனங்களும், தபால்தந்தி, தொலைபேசி போன்ற செய்தியனுப்பும் சாதனங்களும் அதிகாரக் குவிப்பிற்குச் சாதகமாக உள்ளன. நாட்டின் எந்த மூலையிலிருந்தும் செய்திகளை அனுப்பவும், உடனே பெறவும் அறிவியல் வளர்ச்சி யால் வசதிகள் தோன்றியுள்ளன. வானொலியின் வளர்ச்சியும், தொலைக்காட்சியின் முன்னேற்றமும் அதிகாரக் குவிப்பிற்கும், செல்வாக்கை அதிகப்படுத்தவும், மக்களின் ஆதரவைத் தேடவும் மத்திய நிருவாகத்துறைக்கு உறுதுணையாக இருக்கின்றன. மேலும், தற்காலத்தில் தோன்றியுள்ள நவீனப் போர்ஆயுதங்களும், அவைகள் மத்திய நிருவாகத்துறையின் கட்டுப்பாட்டிலிருப்பதும், மத்திய அரசாங்கத்திற்கும் நிருவாகத்துறைக்கும் மதிப்பையும் செல்வாக்கையும் ஏற்படுத்தியுள்ளன என்பதில் ஐயமில்லை.

### பொதுத்துறை அலுவல்

அரசாங்க ஊழியர்களும், அவர்களின் திறமையும் நிருவாகத் துறையின் செல்வாக்கிற்குத் துணைசெய்கின்றன. நிருவாகத் துறையின் தலைவர் எல்லா அரசாங்க விவகாரங்களையும் கண் காணிக்க இயலாது. திறமையுள்ள அரசாங்க அலுவலர்கள் இருப்பின் நிருவாகம் திறம்பட நடைபெறும். நிருவாகத் துறையின் ஆதிக்கத்தை நிலைநாட்டுபவர்கள் அரசாங்க அலுவலர் களே ஆவர். தற்காலத்தில் அரசாங்க ஊழியர்களுக்குச் சிறந்த பாதுகாப்பு அளிக்கப்பட்டு உள்ளது. மேலும், அரசாங்க அலுவலர் களைத் தேர்வாணைக்குழு திறமையின் அடிப்படையில் தேர்ந்தெடுக் கிறது. திறமை மிக்க அரசாங்க அலுவல் நிருவாகத்துறையை வலிமையுள்ளதாக்குகிறது.

**மக்கள் மனப்பான்மை**

மக்களின் மனப்போக்கும் அரசியலமைப்பின் மாற்றத்தில் முக்கிய இடம்பெறுகிறது. சட்ட முறையுள்ள மாற்றத்திற்கும் (Formal Amendment), சட்டத்திற்கு ஆட்படா மாற்றத்திற்கும் (Informal Amendment) மக்களின் மனப்பான்மை முக்கியமான தாகும். அரசியலமைப்பை மேலாண்மையுடையதாகவும் தலை யாய சட்டமாகவும் மக்கள் மதித்தால் அரசியலமைப்பின் மாற்றத்தை விரும்பமாட்டார்கள். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மக்களும் சுவிட்ஸர்லாந்து மக்களும் எளிதில் அரசியலமைப்பை மாற்றுவதை விரும்புவதில்லை. ஆனால், அரசியலமைப்பை ஓர் ஆவணமாக (Document) மட்டும் கருதினால் அதை அடிக்கடி மாற்றுவார்கள். கடினமான மாற்று முறையையுடைய அரசிய லமைப்பாயினும், அதை எளிதில் மாற்றும் வழியை மக்கள் காண் பார்கள். அரசியலமைப்பை மதிப்பதைவிட அரசாங்கத்தைப் பெரிதும் மதிப்பார்கள். ருமேனியா, பல்கேரியா, செக்கோஸ்லோ வாகியா, ஹங்கேரி போன்ற நாடுகளில் அரசியலமைப்பிற்கு இருக்கும் மரியாதையைவிட அரசாங்கத்திடமே மக்களுக்கு மரி யாதையும் மதிப்பும் அதிகம். இங்கு ஆட்சியாளர்களின் ஆதிக்கம் அரசியலமைப்பின் ஆதிக்கத்தைவிட அதிகமாக இருக்கிறது. எனவே, இந்நாடுகளின் அரசியலமைப்புகள் மிகச் சாதாரணமாக எளிதில் மாற்றப்படுகின்றன. இத்தாலி, பிரான்சு போன்ற நாடு களில் அரசியலமைப்பை மாற்ற வேண்டும் என்பாரும், அரசிய லமைப்பைப் புனிதமாகக் கருதுவாரும் உள்ளனர். இவ்விரு குழுக்களும் ஒன்றுக்கொன்று எதிராகச் செயல்படுவதால் அரசிய லமைப்பு எளிதில் மாற்றப்படுவதில்லை. எனவே, அரசியலமைப்பின் மீதான மக்கள் மனப்பான்மை நாட்டிற்கு நாடு மாறுபடுகிறது. அரசியலமைப்பின்மீது அமெரிக்கர் பற்றுடையவர்களாகவும், ருமேனியர் பற்றற்றவர்களாகவும், இத்தாலியில் சிலர் பற்றுடைய வர்களாகவும், சிலர் பற்றற்றவர்களாகவும் இருப்பதை நாம் காண் கிறோம்.

**மக்களின் அறியாமை**

மக்களின் அறியாமையும், அரசியல் அறிவின்மையும் அரசிய லமைப்பின் மாற்றங்களுக்குத் துணைநிற்கின்றன. அரசியலில் நாட்டமற்றவர்களாகவும், அரசியல் அறியாமை உடையவர்களாக வும் மக்கள் இருப்பின், ஒருசில ஆதிக்கக் குழுக்கள் இவற்றைப் பயன்படுத்திக்கொண்டு அரசியலமைப்பைத் தங்கள் நலத்திற் காக எளிதில் மாற்றிக்கொள்ளும். தென் அமெரிக்கக் குடியரசு நாடுகளில் இவ்வித அரசியலமைப்பு மாறுதல்கள் அடிக்கடி

தோன்றுகின்றன. ஒருகட்சி முறையுள்ள நாடுகளிலும் அரசியல் அமைப்பின் முக்கியத்துவத்தைவிடக் கட்சியின் முக்கியத்துவமே மேலோங்கியிருக்கும். சோவியத் ரஷ்யாவில் கம்யூனிஸ்ட் கட்சி யின் விருப்பத்திற்கு ஏற்ப அரசியலமைப்பு மாற்றப்படும். எனவே, கட்சியின் ஆதிக்கமும், மக்களின் அறியாமையும், அக்கறை யின்மையும் அரசியலமைப்புச் சட்டத்தைச் சட்டத்திற்கு ஆட் படாத முறையில் மாற்றுகின்றன.

சட்டரீதியில் அல்லாமலும், சூழ்நிலையின் காரணமாகவும் அரசியலமைப்பு மாறுகின்றது எனக் கண்டோம். இம் மாற் றங்கள் சட்ட முறையான அரசியலமைப்பு மாற்றங்களைத் தோற்றுவிக்கும் ஆற்றல்களும் உடையன. சூழ்நிலையால் அரசிய லமைப்புகள் மாறியதை ஏற்று நீதிமன்றங்களும் அரசியமைப்பிற்கு விளக்கம் அளிக்கலாம். சூழ்நிலையால் அரசியலமைப்பில் ஏற்பட்ட மாற்றங்கள் நாளடைவில் பழக்கவழக்கங்களின் இடத்தையும், மரபுகளின் இடத்தையும் அடைந்துவிடுகின்றன. சூழ்நிலையால் ஏற்பட்ட மாற்றங்களை ஏற்றுச் சட்டரீதியான அரசியலமைப்பு மாற்றங்களும் ஏற்படலாம். மேலும், சூழ்நிலையால் ஏற்பட்ட மாற்றங்களைச் சட்டமன்றங்கள் ஏற்றுச் சட்டமாக்கலாம். இச் சட்டங்கள் அரசியலமைப்பின் துணைச்சட்டங்களாக அமையும். எனவே, சூழ்நிலையால் அரசியலமைப்பில் ஏற்பட்ட மாற்றங்கள் சட்டரீதியான மாற்றங்களாக மாறுவது உண்டு. இவைகளுக்கான சில எடுத்துக்காட்டுக்களைக் காண்போம்.

சூழ்நிலையின் காரணமாகச் சட்டத்திற்கு ஆட்படாதவகையில் மாற்றம் அமெரிக்க ஐக்கியநாடுகளின் குடியரசு தலைவர் தேர்தலில் ஏற்பட்டுள்ளது. 1930ஆம் ஆண்டில் கனடாவில் ஏற்பட்ட பொரு ளாதார மந்தத்தின் காரணமாகக் கனடாவின் அரசியலமைப்பு மாற்றப்பட்டது. வேலையில்லாக் காலங்களில் மக்களின் துயர் துடைக்கச் சட்டமியற்றும் அதிகாரம் பாராளுமன்றத்திற்கு அளிக் கப்பட்டது. மக்களின் நலம் நாடும் அரசில் மத்திய அரசாங்கத்தின் செலவு மேலிடும். இதற்கான வருவாய் வழியை மத்திய அரசாங் கத்திற்கு அதிகப்படுத்தி சுவிட்சர்லாந்தில் அரசியலமைப்புத் திருத்தம் மேற்கொள்ளப்பட்டது. குடியரசு தலைவர் பதவிக்கு இரு முறையே போட்டியிடுவது சூழ்நிலைமாற்றமாக (Informal Amendment) இருந்து, அமெரிக்காவில் அது சட்டப்படியான மாற்றமாகி விட்டது (Formal Amendment).

சட்டத்திற்கு ஆட்படாத சூழ்நிலையாலான அரசியலமைப்பு மாற்றங்களைக் கண்டோம். இனிச் சட்டரீதியான அரசியலமைப்பு மாற்றங்களைக் காண்போம்.

## சட்டரீதியான வளர்ச்சியும் மாற்றமும்
## (Formal Growth and Change)

அரசியலமைப்புகள் முறையான வளர்ச்சியும் மாற்றங்களும் அடையலாம். சட்டரீதியான மாற்றங்களும் அவசியத்தின் அடிப்படையிலேயே தோன்றுகின்றன. சட்டரீதியான முறையில் அடையும் மாற்ற வகைகளாவன: (1) அரசியலமைப்பு முறையிலான அரசியலமைப்புத் திருத்தம்; (2) அரசியலமைப்பு விதிகளுக்கு நீதிமன்றம் உரை விளக்கம் தருதல்; (3) வழக்கங்களும் வழக்காறுகளும்; (4) சாதாரணச் சட்டங்களைச் சார்ந்து வளருதல்; (5) நிருவாகத்துறையின் செயல்கள் மூலம் ஏற்படும் வளர்ச்சியும் மாற்றமும். அரசியலமைப்புகள் சமுதாயத்தின் தேவைகளுக்கு ஏற்ப வளர்ந்து மாற்றங்கள் பெறுகின்றன. சமூக சக்திகளே அரசியலமைப்புகளை மாற்றும் சக்தியுடையனவாகும். பேராசிரியர் வியர் கருத்துப்படி, சமுதாயத்தின் அமைப்பிற்கேற்ப அரசியலமைப்புகள் அமையும். சமுதாயம் விரும்பும் அரசாங்கத்தை அஃது ஏற்படுத்த வேண்டும். எனவே, அரசியலமைப்புக் காலத்திற்கேற்ப மாறும் தன்மையுடையதாக இருக்க வேண்டும்.

## அரசியலமைப்புத் திருத்தம்
## (Constitutional Amendment)

அரசியலமைப்புத் திருத்தத்திற்கான வழிவகைகள் அரசியல் அமைப்பிலேயே கூறப்பட்டிருக்கும். அரசியலமைப்பை உருவாக்கிய அரசியல் நிர்ணய சபை எதிர்காலத்தில் நிகழக்கூடிய அனைத்துத் தேவைகளையும் எதிர்நோக்கி அரசியலமைப்புகளை வகுக்க இயலாது. எனவே, அவசியத்திற்கேற்ப அரசியலமைப்புகளை மாற்றுவதற்கு அரசியலமைப்புகளிலேயே வழிமுறைகள் சொல்லப்பட்டிருக்கும். இருப்பினும், அரசியலமைப்பின் சில முக்கியப் பகுதிகள் எளிதில் மாற்றமடையா வண்ணம் அமைக்கப்பட்டிருக்கும். இப்பகுதிகள் அரசியலமைப்பு நிலைத்திருப்பதற்கும், மக்களின் உரிமைகளைக் காப்பதற்கும் இன்றியமையாதனவாக இருக்கும். எனவே, சில முக்கியப் பகுதிகளுக்கு மாற்றத்தைத் தவிர்த்துப் மற்றப் பகுதிகள் மாற்றத்திற்கு உட்படச் சில முறைகள் குறிப்பிடப்பட்டிருக்கும். அரசியலமைப்பின் திருத்தத்திற்கான இம்முறைகள் அரசியலமைப்புத் தேவைகளுக்கேற்ப வளரவும் மாறவும் வசதியாக இருக்கும். இதனால் அரசியலமைப்பு உடைந்துவிடாமலிருக்கவும், புரட்சிகள் தோன்றி அரசியலமைப்பு

அழியாதிருக்கவும் முடியும்.[6] அமைதியான முறையில் அரசியலமைப்புத் திருத்தங்களுக்கு அரசியலமைப்பிலேயே வழிவகை வகுத்தல் இன்றியமையாததாகும்.

ஒன்றிய அரசில் அரசியல் அமைப்பு எளிதில் மாற்றப் படலாம். ஆனால், கூட்டாட்சி அரசின் அரசியலமைப்புகள் எளிதில் மாற்றமுடியாதனவாக அமைந்திருக்கும். எட்மண்ட் பர்க் போன்ற அரசியல் வல்லுநர்களின் கருத்துப்படி, புனிதத் தன்மை யான அரசியலமைப்புகள் எளிதில் மாற்றப்படக்கூடா. தீவிர வாதிகளோ புரட்சியாளர்களோ எளிதில் அரசியலமைப்பைத் திருத்தக்கூடாது. எட்மண்ட் பர்க்கின் இதே கருத்தை அமெரிக்கா வின் கூட்டாட்சி வாதியான அலெக்சாண்டர் ஹாமில்டனும் கூறுகிறார். ஆனால், மாநிலங்களின் சுயேச்சைவாதியான தாமஸ் ஜெபர்சன் அரசியலமைப்பு என்பது மாற்றப்படக்கூடியதாக இருக்கவேண்டும் எனக் கூறுகிறார்.

### அரசியலமைப்புத் திருத்தத்தில் கவனம் பெற வேண்டியன

அரசியலமைப்பு மிகப்புனிதமானது என்பதும், திருத்தப்படவே கூடாது என்பதும் ஒரு சாராரின் தீவிர வாதமாகும். அதே போல் அரசியலமைப்பு நினைத்தால் மாற்றப்படலாம்; இஃது ஓர் எழுதப் பட்ட ஏடு; இதற்குப் புனிதத் தன்மை கிடையாது என்பது மற்றொரு சாராரின் தீவிர வாதமாகும். ஆனால், இவைகளுக் கிடையே ஒரு நடுநிலைமையோடு நோக்கும்போது அரசிய லமைப்பு மாற்றப்படுவதில் சில குறிக்கோள்கள் கடைப்பிடிக்கப் படுகின்றன. அரசியலமைப்புத் திருத்தப்படுமுன் மக்களது கருத்தை அறிய வேண்டும். அரசியலமைப்புத் திருத்தத்திற்கு மக்கள் தங்கள் சாதகமான கருத்தைத் தெரிவித்தால் அது திருத் தப்படலாம். கூட்டாட்சி முறையுள்ள நாடுகளில் அரசிய லமைப்பின் திருத்தம் மாநிலங்களையும் பாதிக்கக்கூடியதாக இருக்கும். கூட்டாட்சி அரசியலமைப்பே மத்திய மாநிலங்களின் ஒப்பந்தத்தால் தோன்றியதாகும். எனவே, அரசியலமைப்புத் திருத்தத்தில் கூட்டாட்சியின் மாநிலங்களுக்குப் பங்கிருக்க வேண்டும். மத்திய அரசாங்கம் தனியாகவோ, மாநில அரசாங் கங்கள் தனியாகவோ அரசியலமைப்புகளைத் திருத்துவதற்கு இயலாதிருக்க வேண்டும். மேலும் மொழியால், இனத்தால், சமயத்தால் சிறுபான்மையினரது நலன்கள் அரசியலமைப்புத் திருத்தத்தால் பாதிக்கப்படாதவாறு பாதுகாக்கப்பட வேண்டும்.

[6] Macaulay: 'The greatest cause of revolution is that while nations move onward, Constitutions stand still.'

## அரசியலமைப்பைத் திருத்துவதில் சில நிலைகள்

அரசியலமைப்புத் திருத்தத்தில் சில நிலைகள் பின்பற்றப்பட வேண்டும். முதலாவதாக அரசியலமைப்புத் திருத்தத்தின் துவக்கத்தை அரசாங்கமோ, சட்டமன்றங்களோ, வாக்காளர் களோ ஆரம்பிக்கலாம். ஒப்புதல் அளித்தல் அரசியலமைப்புத் திருத்தத்தின் இரண்டாவது நிலையாகும். அரசியலமைப்புத் திருத்தம் மாநிலங்களாலும் இறைமையுடைய மக்களாலும் ஒப்பு தல் அளிக்கப்பட வேண்டும்.

## அரசியலமைப்புத் திருத்த முறைகள்

அரசியலமைப்புகள் காலத்திற்கும் தேவைக்கும் ஏற்பத் திருத்தப்படவேண்டியது அவசியமெனக் கண்டோம். அரசிய லமைப்பைத் திருத்துவதற்கு நான்கு முறைகள் பின்பற்றப் படுகின்றன :

1. அரசியலமைப்புகள் சட்டசபைகளால் மாற்றப்படல்; ஆனால், சட்டசபைகள் அரசியலமைப்பை மாற்றும்போது சட்ட சபையில் குறிப்பிட்ட விழுக்காடு உறுப்பினர்கள் அமர்ந்திருக்க வேண்டும்; குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய உறுப்பினர்கள் மாற்றத்தை ஏற்கவேண்டும் என்பன போன்ற நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

2. மக்கள் ஒப்புதல் மூலம் அரசியலமைப்பைத் திருத்துதல்.

3. கூட்டாட்சி உறுப்பினர்களான மாநிலங்களில் பெரும் பகுதியினரால் அரசியலமைப்புத் திருத்தப்படல்.

4. அரசியலமைப்புத் திருத்தத்திற்கெனத் தனி அவை அமைத்து அரசியலமைப்புத் திருத்தப்படல்.

இம்முறையில் ஓர் அரசியலமைப்புத் திருத்தப்படலாம். இம் முறைகளைத் தனித்தனியாக விவரமாகக் காணலாம்.

## அரசியலமைப்பு சட்டசபையால் திருத்தப்படல்

சில நிபந்தனைகட்குட்பட்டு அரசியலமைப்பு சட்டசபைகளால் திருத்தப்படலாம். சட்டசபைகள் அரசியலமைப்பைத் திருத்தும் போது குறிப்பிட்ட பெரும்பான்மை வலியுறுத்தப்படுகிறது. இந்தப் பெரும்பான்மை சாதாரணச் சட்டங்களுக்கு வலியுறுத்தப்படுவ தில்லை. இம்முறை பின்காணும் அரசியலமைப்புகளில் கடைப் பிடிக்கப்படுகிறது.

## இந்தியாவில் அரசியலமைப்புத் திருத்தம்

இந்தியாவில் அரசியலமைப்புத் திருத்தப்படும் முறையைக் காணலாம். இந்திய அரசியலமைப்பு விதிகள் திருத்தப்பட லோக் சபையிலோ அல்லது ராஜ்ய சபையிலோ சட்டமுன்படிவம் கொண்டுவரப்படலாம். ஒவ்வொரு சபையின் மொத்த அங்கத்தினர்களில் பெரும்பான்மையினரும் பாராளுமன்றத்தில் அமர்ந்து வாக்களிக்கும் அங்கத்தினர்களில் மூன்றில் இரண்டு பகுதியினரும் அரசியலமைப்புத் திருத்தச் சட்ட முன்படிவத்தை ஆதரித்து வாக்களிக்க வேண்டும். அரசியலமைப்பில் கண்டுள்ள மத்திய அரசாங்கத்தின் அதிகாரப் பட்டியலையோ அல்லது ஒருங்கிணைப்புப் பட்டியலையோ மாற்றவேண்டுமென்றாலும், பாராளுமன்றத்திற்கு ஒவ்வொரு மாநிலமும் அனுப்பும் பிரதிநிதிகளின் எண்ணிக்கையை மாற்ற வேண்டுமென்றாலும், தலைமை நீதிமன்றம், உயர்நீதிமன்றங்களின் அதிகாரத்தை மாற்றவேண்டுமென்றாலும் தனிமுறைகள் கூறப்பட்டுள்ளன. இம் மாற்றங்களுக்காகப் பாராளுமன்றத்தில் ஒப்புதல் அளிக்கப்பட்ட சட்டமுன்படிவம் இந்தியாவின் மொத்த மாநிலங்களில் பாதியின் சட்டசபைகளால் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும். இவ்வாறு ஏற்றுக்கொள்ளப்பட்ட சட்டமுன்படிவம் குடியரசு தலைவரின் ஒப்புதலுடன் அரசியலமைப்புத் திருத்தச் சட்டமாகும். சோவியத் ரஷ்யாவின் அரசியலமைப்புத் திருத்தத்தைச் சோவியத் ரஷ்யாவின் நாடாளுமன்றத்தின் இரு சபைகளிலும் மூன்றில் இரண்டு பகுதியினர் ஏற்கவேண்டும்.

## தென்னாப்பிரிக்காவில் அரசியலமைப்புத் திருத்தம்

சட்டமன்றங்களால் செய்யப்படும் அரசியலமைப்புத் திருத்தங்கள் இரு சபையின் இணைந்த கூட்டப் பெரும்பான்மையால் ஏற்றுக்கொள்ளப்படும் முறை தென்னாப்பிரிக்கா அரசியலமைப்பில் காணலாம். இங்குத் தனிப் பெரும்பான்மை வலியுறுத்தப்படுவதில்லை.

## சுவீடனில் அரசியலமைப்புத் திருத்தம்

சுவீடன் நாட்டில் அரசியலமைப்புத் திருத்த மசோதாக்கள் குறித்துப் பாராளுமன்றங்கள் கலைக்கப்பட்டுப் புதுத் தேர்தல்கள் நடத்தப்பெறுவதுண்டு. புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றத்தின் மூன்றில் இரண்டு பகுதிப் பெரும்பான்மையால் அரசியலமைப்புத் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும். இம்முறை நார்வே நாட்டிலும் பின்பற்றப்படுகிறது.

### அரசியலமைப்பு குடியொப்பம் மூலம் திருத்தப்படல் — சுவிட்ஸர் லாந்தில் அரசியலமைப்பு



சுவிட்ஸர்லாந்து, ஆஸ்திரேலியா, பிரான்சு, இத்தாலி போன்ற நாடுகளில் குடியொப்பம் மூலமும், மக்கள் வாக்கெடுப்பு மூலமும் அரசியலமைப்புகள் திருத்தப்படுகின்றன. நெப்போலியன், முசோலினி, ஹிட்லர் போன்றவர்கள் இம் முறை மூலம் மக்களின் கருத்தையும் ஆதரவையும் அறிந்து தங்கள் அதிகாரத்தை நிலைநாட்டினார்கள்.

சுவிட்ஸர்லாந்து நாட்டில் தேசிய சபை, மாநிலங்களின் சபை என இரு சபைகள் உள்ளன. இங்கு அரசியலமைப்புத் திருத்தங்கள் மக்களின் வாக்கெடுப்பிற்கு விடப்பட்டுத் தீர்மானிக்கப் படுகின்றன. இவ்விதம் அரசியலமைப்பைத் திருத்துவதில் கட்டாய வாக்கெடுப்பு முறையும், குடியொப்ப முறையும், மக்கள் விருப்பத் துவக்கமும் நடைமுறையில் உள்ளன.

### கட்டாய வாக்கெடுப்பும் குடியொப்பமும்

அரசியலமைப்புத் திருத்தச் சட்டமுன்படிவத்தைச் சுவிட்ஸர் லாந்தின் தேசிய சபையும் மாநிலங்களின் சபையும் ஏற்கவேண்டும். இப்படி இரு சபைகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட அரசியலமைப்புத் திருத்தச் சட்டமுன்படிவம் மக்களின் வாக்கெடுப்பிற்கும் (Plebiscite), குடியொப்பத்திற்கும் (Referendum) விடப்படும். ஸ்விஸ் நாட்டின் பெரும்பான்மைக் கோட்டங்களிலுள்ள பெரும்பான்மை மக்கள் சட்டமன்றங்கள் ஏற்ற அரசியலமைப்புத் திருத்தத்திற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும். அப்போதுதான் அரசியலமைப்புத் திருத்த மசோதா நடைமுறைக்கு வரும்.

சட்டமன்றங்களின் இரு அவைகளில் ஓர் அவை அரசியலமைப்புத் திருத்தத்தை ஏற்று, மற்றோர் அவை திருத்தத்தை ஏற்காமல் இருப்பதும் உண்டு. இப்படிச் சட்டமன்றங்களின் ஓர் அவை திருத்தத்தை ஏற்காவிடில் அரசியலமைப்புத் திருத்தம் மக்களின் வாக்கெடுப்பிற்கும், குடியொப்பத்திற்கும் விடப்படும். பெரும்பான்மையான கோட்டங்களின் பெரும்பான்மை மக்கள் இவ்வரசியலமைப்புத் திருத்தத்திற்கு ஆதரவு தெரிவித்தால் சட்டமன்றங்கள் கலைக்கப்பட்டுச் சட்டமன்றங்களுக்கான புதிய தேர்தல்கள் நடைபெறும். புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றங்கள் அரசியலமைப்புத் திருத்தத்தை ஏற்றுக்கொண்டால் மீண்டும் இத் திருத்த மசோதா மக்களின்முன் வைக்கப்படும். பெரும்பான்மைக் கோட்டங்களின் பெரும்பான்மை மக்கள் இந்த

அரசியலமைப்புத் திருத்தத்திற்கு ஆதரவாக இருந்து வாக்களித்தால் அரசியலமைப்புத் திருத்தம் நடைமுறைக்கு வரும்.

**மக்கள் துவக்கம் மூலம் திருத்துதல்**

மக்கள் துவக்கத்தின் (Initiative) மூலம் அரசியலமைப்பைச் சுவிட்ஸர்லாந்து நாட்டில் திருத்தலாம். அரசியலமைப்புத் திருத்தம் சட்டசபைகளில் தோன்ற வேண்டும் என்பதில்லை. மக்களிடமிருந்தே தோன்றலாம். 50,000 ஸ்விஸ் வாக்காளர்கள் அரசியலமைப்பை முழுமையாகத் திருத்த விரும்பி விண்ணப்பிக்கலாம். இவ்விருப்பத்தைச் சட்டமன்றம் ஏற்காதபொழுது பொது மக்களின் வாக்கெடுப்பிற்கு விடப்படும். மக்கள் அரசியலமைப்பின் முழுமையான திருத்தத்திற்கு ஆதரவு அளித்தால் சட்ட மன்றங்கள் கலைக்கப்பட்டுப் புதுத் தேர்தல்கள் நடைபெறும். புதியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றங்கள் மக்களின் விருப்பத்தை நடைமுறைப்படுத்தும்.

50,000 சுவிஸ் வாக்காளர்கள் தீட்டப்பெற்ற துவக்கத்தையோ (Formulated Initiative) அல்லது தீட்டப் பெருத (Unformulated) துவக்கத்தையோ சட்டமன்றத்திற்கு அனுப்பி அரசியலமைப்புத் திருத்தம் கோரலாம்.

தீட்டப்பெருத துவக்கத்தைச் சட்டமன்றங்கள் ஏற்ருல், சட்டமன்றங்களே திருத்தத்திற்கான சட்டமுன்படிவத்தை உருவாக்கி மக்கள் கருத்தைப் பெறும். மக்களும் மாநிலங்களும் ஏற்பின் திருத்தம் நடைமுறைக்கு வரும்.

தீட்டப்பெருத துவக்கத்தைச் சட்டமன்றங்கள் ஏற்க மறுத்தால் அது மக்களின் கருத்தறிய விடப்படும். மக்களின் ஆதரவு இருப்பின் சட்டமன்றம் அரசியலமைப்புத் திருத்த முன்படிவம் தயாரிக்கும். இதையும் மக்கள் ஏற்பின் திருத்தம் நடைமுறைப்படும்.

அரசியலமைப்பின் தீட்டப்பெற்ற துவக்கம் விண்ணப்பமாகச் சட்டமன்றங்களுக்கு அனுப்பப்படும். சட்டமன்றங்கள் ஏற்ருல் அது மக்களின் வாக்கெடுப்பிற்கு விடப்படும். மக்கள் ஆதரவு காட்டினுல் திருத்தம் நிறைவேறும். அரசியலமைப்பின் தீட்டப்பெற்ற துவக்கத்தைச் சட்டமன்றங்களின் ஒரு பிரிவு மட்டும் ஏற்றுக்கொண்டு மற்ருெரு பிரிவு ஏற்க மறுத்தால் மக்களின் வாக்கெடுப்பிற்கு அனுப்பப்படும். இரு அவைகளும் திருத்தத்தை ஏற்காவிடிலும் மக்களின்முன் வைக்கப்படும். இந் நிலையில் அரசியலமைப்புத் திருத்தத்திற்கு எதிராக வாக்களிக்கும்படி சட்ட

மன்றங்கள் மக்களுக்கு வேண்டுகோள் விடுக்கும். இறுதியில் மக்களின் தீர்ப்புப்படி சிக்கல் முடிவு செய்யப்படும்.

சுவிட்ஸர்லாந்து நாட்டில் அரசியலமைப்புத் திருத்தத்தில் சட்டமன்றங்களும், பொதுமக்களும் பங்கு கொள்கின்றனர். இருப்பினும், பொதுமக்களின் முடிவே இறுதியானதாகத் தீர்மானிக்கப்படும்.

**ஆஸ்திரேலியாவில் அரசியலமைப்புத் திருத்தம்**

ஆஸ்திரேலியா ஒரு கூட்டாட்சி அரசியலமைப்புடையது. பிரிட்டிஷ் பொதுநலஅரசு நாடுகளில் மிகவும் நெகிழாத் தன்மையான அரசியலமைப்புடையது. இந்நாட்டின் அரசியலமைப்பின் 128ஆம் விதியில் அரசியலமைப்புத் திருத்தம் பற்றிய முறை கூறப்படுகின்றது.

அரசியலமைப்புத் திருத்தத்திற்காகக் கொண்டுவரப்படும் சட்டமுன்படிவம் கூட்டாட்சிப் பாராளுமன்றத்தில் முழுப் பெரும்பான்மையினரால் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும். பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் நிறைவேறிய சட்டமுன்படிவம் மாநிலங்களுக்கு அனுப்பப்படும். மாநிலங்களில் கீழ்சபையின் வாக்காளர்கள் சட்டமுன்படிவத்திற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும். வாக்கிடுபவர்களில் பெரும்பான்மையினர் திருத்தத்தை ஏற்று இரண்டு மாதங்களுக்கு மேலும் ஆறு மாதங்களுக்குள்ளும் மாநிலங்களின் மக்கள் ஒப்புதலுக்குச் சட்டமுன்படிவம் அனுப்பப்படவேண்டும். மக்கள் ஏற்ற சட்டமுன்படிவத்தைப் பெரும்பான்மை மாநிலங்களும் ஏற்கவேண்டும். அதன் பிறகு அரசியாரின் சம்மதத்தின் பேரில் சட்டமுன்படிவம் சட்டமாகும். எனவே, பாராளுமன்ற ஒப்புதல், மாநிலங்களின் கீழவை வாக்காளர்களின் சம்மதம், மாநிலங்களின் சம்மதம், அரசியாரின் சம்மதம் ஆகிய சம்மதங்களும் ஒப்புதல்களும் பெற்ற பின்னரே அரசியலமைப்புத்திருத்தம் நிறைவேறிச் சட்டமாகும்.

கூட்டாட்சிப் பாராளுமன்றத்தின் இரு சபைகளில் ஒரு சபை அரசியலமைப்புத்திருத்தச் சட்டமுன்படிவத்தை ஏற்கமறுக்கலாம். திருத்தத்தைக் கொண்டுவந்த சபை மூன்று மாதங்கள்வரை மற்றச் சபையின் ஒப்புதலுக்காகக் காத்திருக்க வேண்டும். மூன்று மாதங்களுக்குப் பிறகும் மறு சபையின் ஒப்புதல் கிடைக்கா விட்டால் சட்டமுன்படிவத்தைத் தோற்றுவித்த சபை மறுபடியும் திருத்தத்தை நிறைவேற்றிக் கவர்னர் ஜெனரலுக்கு அனுப்பும். கவர்னர் ஜெனரல் அச்சட்டமுன்படிவத்தை மாநிலங்களுக்கு அனுப்பி மாநில வாக்காளர்களின் தீர்ப்புக்குச் சட்டமுன்படிவத்தை விடலாம்.

மாநிலத்தின் பிரதிநிதிகளின் எண்ணிக்கையை மாற்றுவதற்கான சட்டமுன்படிவம், மாநில எல்லையை மாற்றுவற்தகான சட்டமுன்படிவம், மாநில உரிமையைப் பாதிக்கும் சட்டமுன்படிவம் ஆகியன பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்படுதலோடு சம்பந்தப்பட்ட மாநிலங்களாலும் ஏற்கப்பட வேண்டும். அப்போதுதான் அரசியலமைப்புத் திருத்தச் சட்டமுன்படிவம் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும்.

எனவே, மிக நெகிழாத் தன்மையதாக இருப்பதுடன் மக்கள் வாக்கெடுப்பிற்கும் ஆஸ்திரேலியா நாட்டின் அரசியலமைப்பு வழிவகை செய்துள்ளது.

## இத்தாலியின் அரசியலமைப்புத் திருத்தம்

இத்தாலிய நாட்டில் அரசியலமைப்புத் திருத்தம் இத்தாலியப் பாராளுமன்றத்தின் அவைகளால் (Chamber) இருமுறை முழுமையான பெரும்பான்மையினரால் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும். முதன் முறையாக ஏற்பதற்கும், இரண்டாவது முறையாக ஏற்பதற்கும் இடையே மூன்று மாத காலமாவது இருக்க வேண்டும். இந்த மூன்று மாத காலத்தில் பாராளுமன்ற அவைகளில் ஏதாவது ஒன்றில் ஐந்தில் ஒரு பகுதியினராவது, அல்லது 5,00,000 வாக்காளர்களாவது இந்த அரசியலமைப்புத் திருத்தச் சட்டமுன்படிவத்தைக் குடியொப்பத்திற்கு விடும்படி கோரினுல் திருத்த முன்படிவம் மக்கள் வாக்கெடுப்பிற்கு விடப்படும். ஆனுல், பாராளுமன்றத்தில் திருத்த முன்படிவத்தின் மீது இரண்டாவது வாக்கெடுப்பின் போது மூன்றில் இரண்டு பங்குப் பெரும்பான்மையினர் திருத்தத்தை ஆதரித்து வாக்களித்தால் சட்டமுன்படிவத்தைக் குடியொப்பத்திற்கு அனுப்ப வேண்டியதில்லை. சட்டமுன்படிவம் நிறைவேறியதாகக் கருதப்படும்.

## அயர்லாந்தின் அரசியலமைப்புத் திருத்தம்

அயர்லாந்தின் பாராளுமன்றத்தின் கீழ்சபையாகிய தெயில் எரியன் என்னும் சபையில் திருத்த மசோதாக் கொண்டுவரப்பட வேண்டும். பிறகு தெயில் எரியன் (Dail Eireann), செனட் எரியன் (Seanad Eireann) ஆகிய இரு சபைகளும் அரசியலமைப்புத் திருத்த முன்படிவத்தை ஏற்க வேண்டும். இதன் பிறகு திருத்த முன்படிவம் குடியொப்பத்திற்கு வைக்கப்படும். குடிமக்களில் பெரும்பான்மையோர் அரசியலமைப்புத் திருத்த முன்படிவத்தை ஆதரித்து வாக்களித்தால் அரசியலமைப்புத் திருத்தம் நடைமுறைக்கு வரும். அரசியலமைப்புத் திருத்தம் குடியொப்பம் மூலமும் மக்கள் வாக்கெடுப்பு மூலமும் சுவிட்ஸர்லாந்து, ஆஸ்திரே

லியா, இத்தாலி, அயர்லாந்து ஆகிய நாடுகளில் நடைபெறுவதைக் கண்டோம்.

**கூட்டாட்சி நாடுகளில் அரசியலமைப்புத் திருத்தம்**

கூட்டாட்சி நாடுகளில் அரசியலமைப்பில் அரசியலமைப்பைத் திருத்தும் அதிகாரம் மத்திய அரசாங்கத்திற்கு மட்டுமோ அல்லது மாநில அல்லது உறுப்பின அரசாங்கங்களுக்கு மட்டுமோ கிடையாது. மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கங்களும் இணைந்தே அரசியலமைப்பைத் திருத்த வேண்டும். கூட்டாட்சி முறைக்கு எடுத்துக்காட்டான அமெரிக்க ஐக்கியநாட்டின் அரசியலமைப்புத் திருத்த முறையைக் கண்டால் திருத்தத்தில் மாநிலங்களின் பங்கை அறியலாம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் காங்கிரஸ் எனப்படும் பாராளுமன்றம், பிரதிநிதிகள் சபை, செனட் சபை என இரு சபைகளையுடையது. அரசியலமைப்புத் திருத்தம் இரு சபைகளாலும் மொத்த உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கினர் வாக்களித்து முதலில் நிறைவேற்றப்படவேண்டும். இப்படிப் பாராளுமன்றத்தின் இரு சபைகளாலும் நிறைவேற்றப்பட்ட திருத்த முன்படிவம் மாநிலங்களின் ஒப்புதலுக்காக அனுப்பப்படும். மாநிலங்களின் நான்கில் மூன்று பங்கினர் அரசியலமைப்புத்திருத்தச் சட்டமுன்படிவத்தை ஏற்க வேண்டும். அப்போது தான் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டதாகக் கருதப்படும்.

அமெரிக்கப் பாராளுமன்றம் தனது மூன்றில் இரண்டு பங்குப் பெரும்பான்மையினரால் அரசியலமைப்புத் திருத்தத்தை முன்மொழியலாம். இதை நான்கில் மூன்று பங்கு மாநிலங்களால் நிறுவப்பட்ட அவைக் கூட்டம் ஏற்ருல், அந்த அரசியலமைப்புத் திருத்தம் நடைமுறைக்குக் கொண்டுவரப்படலாம்.

மாநில அரசுகளில் மூன்றில் இரு பங்கினரது சட்டமன்றங்களின் விண்ணப்பத்தின் பேரில் அரசியலமைப்புத் திருத்த அவை ஒன்று கூட்டப்படலாம். அவை (Convention) அரசியலமைப்புத் திருத்தங்களை முன்மொழியலாம். இவ்வாறு முன்மொழிந்த திருத்தங்களை நான்கில் மூன்று பகுதி மாநிலங்களின் சட்டமன்றங்கள் ஏற்றுக் கொண்டு ஒப்புதல் அளித்தால் அரசியலமைப்புத் திருத்தம் நிறைவேறும்.

அமெரிக்க ஐக்கியநாடுகளின் மொத்த மாநிலங்களில் மூன்றில் இரு பங்கு மாநிலங்களின் சட்டமன்றங்களின் விண்ணப்பத்தின்

பேரில் ஓரவையை (Convention) அமைக்கலாம். இந்த அவை அரசியலமைப்புத் திருத்தங்களை முன்மொழியலாம். நான்கில் மூன்று பங்கு மாநிலங்களால் கூட்டப்பட்ட அவை இவ்வரசியல் அமைப்புத் திருத்தங்களை ஏற்குமானால் அந்தத் திருத்தங்கள் நடைமுறைக்குக் கொண்டுவரப்படும்.

சுவிட்ஸர்லாந்து, ஆஸ்திரேலியா ஆகிய கூட்டாட்சி நாடுகளிலும், அரசியலமைப்புத் திருத்தத்தில் மாநிலங்களின் பங்கு பற்றியும், மக்களின் பங்கு பற்றியும் முன்பு பார்த்தோம்.

இவ்விதமாக அரசியலமைப்புத் திருத்தத்தில் கூட்டாட்சியின் மாநிலங்கள் பங்கு பெறுகின்றன. அவைகளே திருத்தங்களை முன்மொழிந்தும் நிறைவேற்றுகின்றன.

**அரசியலமைப்பு சிறப்புக் குழுவால் திருத்தப்படல்**

சிறப்புக் குழுக்கள் அரசியலமைப்பைத் திருத்துவதற்கென்றே அமைக்கப்படுகின்றன. தற்காலிகச் சிறப்புக் குழுக்களை அமைத்து அதன் வழி அரசியலமைப்புத் திருத்தத்தைச் சில நாடுகள் மேற்கொள்கின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மாநிலங்கள் சில தங்கள் அரசியலமைப்புகளைத் திருத்துவதற்காகத் தாற்காலிகச் சிறப்புக் குழுக்களை நியமிக்கின்றன. சட்டமன்றத்தின் இரு சபைகளின் கூட்டுக் கூட்டத்திலும் சட்டமன்றங்களால் அரசியலமைப்பை எளிய முறையில் திருத்த முடியாதபோது இவ்விதத் தாற்காலிகக் குழுக்கள் நியமிக்கப்படுகின்றன. இக் குழுக்கள் அரசியலமைப்பைத் திருத்தும் தனது பணி முடிந்தவுடன் இத் தாற்காலிகச் சிறப்புக் குழுக்கள் கலைக்கப்பட்டுவிடும்.

அரசியலமைப்புத் திருத்தங்கள் அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள முறைப்படி திருத்தப்படுவதைக் கண்டோம். அரசியலமைப்புகள் திருத்தப்படாமலும் இருக்கக்கூடாது. அடிக்கடி திருத்தப்படவும் கூடாது. எழுதப்பட்ட அரசியலமைப்புகளுக்கும் கூட்டாட்சி அரசியலமைப்புகளுக்கும் அரசியலமைப்புத் திருத்தப்படுவதற்கான தனி முறைகள் அரசியலமைப்பிலேயே சொல்லப்பட்டிருக்கும். ஒன்றிய அரசின் அரசியலமைப்புகளும், எழுதப்படா அரசியலமைப்புடைய அரசுகளின் அரசியலமைப்புகளும் எளிதில் திருத்தப்படக் கூடியனவாக இருக்கும்.

**அரசியலமைப்புத் திருத்தத்தின் நற்பயன்களும் குறைகளும்-நற்பயன்கள்**

**காலமாற்றம் :** அரசியலமைப்பு உருவாக்கப்பட்ட காலத்திற்கும் தற்காலத்திற்கும் இடையே ஏராளமான மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன. அரசியல், பொருளாதார, சமூக மாற்றங்களுக்கேற்ப அரசியலமைப்பும் மாற வேண்டியதும் திருத்தப்பட வேண்டியதும் அவசியமாகும். தாமஸ் ஜெபர்சன் கருத்துப்படி, அரசியலமைப்புக் காலத்திற்கேற்ப மாறக்கூடியதாக இருக்க வேண்டும். அரசியலமைப்புத் திருத்தங்கள் காலத்திற்கேற்ற மாறுதலை அரசியல் அமைப்பில் ஏற்படுத்துவதற்குத் துணைபுரிகின்றன.

**திருத்தத்திற்கான தனி முறைகளின் அவசியம்**

அரசியலமைப்பின் திருத்தத்திற்கான தனிமுறைகளை அரசியலமைப்புகளில் காண்கிறோம். இத்தனிமுறைகளின் காரணமாக அரசியலமைப்புகள் எளிதில் திருத்த முடியாவண்ணம் அமைந்திருக்கின்றன. தங்கள் சுயநலத்திற்காக அரசியலமைப்புகளை அடிக்கடி திருத்தி வல்லாட்சியை ஏற்படுத்துவதிலிருந்து அரசியலமைப்பைக் காப்பதற்காக இத்தனிமுறைகள் வகுக்கப்பட்டுள்ளன. இத்தாலிய அரசியலமைப்பு எளிதில் திருத்தக்கூடியதாக இருந்ததால் முசோலினி தனது வல்லாட்சியை எளிதில் அமைத்தார். இக்குறையைத் திருத்தத்திற்கான தனிமுறைகள் நீக்குகின்றன.

**மக்களின் இறைமை காக்கப்படுகிறது**

அரசியலமைப்புத் திருத்தத்திற்கெனத் தனிமுறைகளில் மக்கள் வாக்கெடுப்பு, குடியொப்பம், மக்கள் துவக்கம் ஆகியவைகளுக்கு இடம் அளிக்கப்பட்டிருப்பதை நாம் காண்கிறோம். இம்முறைகளில் மக்களின் இறைமை மதிக்கப்படுவதை அறியலாம். அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் மக்கள். எனவே, அதைத் திருத்துவதிலும் அவர்களுக்குப் பங்கு இருக்க வேண்டும். இக்கோட்பாட்டைச் சட்டமுறையுள்ள அரசியலமைப்புத் திருத்தம் (Formal Amendment) நன்கு மதிக்கிறது.

**மாநிலங்களின் உரிமைகள் காக்கப்படுகின்றன**

சட்டரீதியான அரசியலமைப்புத் திருத்தத்தில் மாநிலங்களுக்குப் பங்களிக்கப்படுகிறது. இம்மாநிலங்கள் தங்கள் இறைமையை இழந்து அரசியலமைப்பை ஏற்றன. எனவே,

அரசியலமைப்பை மாற்றுவதிலும், திருத்துவதிலும் மாநிலங்களின் உரிமைகள் மதிக்கப்படவேண்டும். அரசியலமைப்புத் திருத்தங்களுக்கு மாநிலங்களின் ஒப்புதல் பெறவேண்டியுள்ளதை நாம் கண்டோம். மாநிலங்களின் ஒப்புதலின்றித் திருத்தம் நிறைவேறுது. எனவே, அரசியலமைப்புத்திருத்தத்தில் மாநிலங்களுக்கு உரிய பங்கு அளிக்கப்பட்டு உரிமைகள் காக்கப்படுகின்றன.

### புரட்சியைத் தவிர்த்தல்

அரசியலமைப்பு வளைந்து கொடுத்துப் புரட்சியைத் தவிர்க்கிறது. புரட்சி தோன்றும்போலிருந்தால், தான் திருந்தி புரட்சி தோன்ருவண்ணம் தடுக்கிறது.

### குறைகள்

**சிக்கலானமுறை :** சட்டவகையான அரசியலமைப்புத் திருத்த முறை கடினமானதாகவும் சிக்கலுடையதாகவும் இருக்கின்றன. பாராளுமன்றத்தில் முன்மொழியப்படுதல், மாநிலங்களால் ஏற்றுக் கொள்ளப்படல், மக்களால் ஒப்புதல் அளிக்கப்படல் ஆகிய திருத்த முறைகள் மிகவும் சிக்கல்கள் நிறைந்தனவாக உள்ளன.

### தேவைக்கேற்றதல்ல

நெருக்கடி காலங்களிலும், அவசர மாறுதல்கள் தேவைப்படும்போதும் அரசியலமைப்பில் சொல்லப்பட்ட தனி முறையிலும், சட்டரீதியான முறையிலும் அரசியலமைப்பைத் திருத்துவது கடினமாக உள்ளது. எனவே,சட்ட முறையான அரசியலமைப்புத் திருத்தம் தேவைக்கு ஏற்றதாக இல்லை.

### கடினமுறை

ஒன்றிய அரசியலமைப்பில் தனி முறைகள் கிடையா. ஆனல், அரசியலமைப்புத் திருத்தத்திற்குத் தனிமுறைகள் விதிக்கப்பட்டிருக்கும்போது அரசியலமைப்பைத் திருத்துவதும் தனி முறைகளைப் பின்பற்றுவதும் கடினமானவைகளாகும்.

### விதிகளின் விரிவாக்கம்

அரசியலமைப்பில் மனித உரிமைகள், மாநில உரிமைகள் ஆகிய பகுதிகளைத் திருத்தவே தனிமுறைகள் கூறப்பட்டுள்ளன. ஏனெனில், இவ்வுரிமைகள் பாதுகாக்கப்படவேண்டிய உரிமைகளாகும். இவ்வுரிமைகளின் பாதுகாப்பிற்காக விதிக்கப்பட்ட தனிமுறைத் திருத்தம் விரிவாக்கமடைந்து அரசியலமைப்பின் எல்லா விதிகளுக்கும் பகுதிகளுக்கும் பயன்படுத்தப்படுகின்றது.

திருத்தத்திற்குத் தனிமுறை வகுத்ததனுல் இத்தீங்கு விளைந்த தாகும்.

## நீதிமன்ற விளக்கம்
## (Judicial Interpretation)

அரசியலமைப்புகள் சட்டரீதியான வளர்ச்சியும் மாற்றமும் பெறுகின்றன என்றும், அவைகளில் அரசியலமைப்புத் திருத்தம் ஒன்றென்றும் பார்த்தோம். தற்போது அரசியலமைப்பின் சட்ட ஒழுங்குவகையான வளர்ச்சிக்கும், மாற்றத்திற்கும் இரண்டாவது ஏதுவான நீதிமன்ற விளக்கத்தைப் பற்றிக் காண்போம்.

### இயற்றப்பட்ட சட்டத்தின் குறைகள்

நீதிமன்ற விளக்கம் என்பது நீதிமன்றங்கள் சட்டத்திற் களிக்கும் விளக்கங்களாகும். எவ்வளவு கவனத்துடன் சட்டங் களைத் தயாரித்தாலும் அவைகளில் சொல் தெளிவின்மை தோன்று கிறது. ஒரு சொல் என்ன பொருளைக் கொண்டது என்பது ஐயத் திற்குள்ளாகிறது. எனவே, சாதாரணச் சட்டங்களிலும், அரசிய லமைப்புச்சட்டங்களிலும் சொல் தெளிவின்மையும், பொருள் மயக்க மும் ஏற்படுகின்றன. சட்டங்களில் வாக்கியங்கள் விளக்கமற்றனவா கவும், பல பொருளைக் கொடுப்பனவாகவும் இருக்கும். மேலும், சட் டங்கள் எழுதப்படுகிற மொழியின் தன்மைக்கேற்பவும் ஐயங்கள் தோன்றும். சில மொழிகளில் ஒரு சொல்லுக்குப் பல பொருள்கள் இருப்பதைக் காண்கிறேம். சட்ட வாக்கியங்கள் எழுதப்பட்ட விதமும் குழப்பத்தை ஏற்படுத்தும் நிலையில் இருக்கும்.

அரசியலமைப்புச் சட்டத்தில் சொல், வாக்கியம், பொருள், மொழி, எழுதியமுறை ஆகியவைகள் தெளிவில்லாதும், மயக்கம் உடையனவாகவும், ஐயத்திற்கு இடமளிப்பனவாகவும் அமைந்து விடும். எனவே,சட்டத்தின் உண்மைப்பொருள் என்னவென்பதை அறியவேண்டும். மேலும், சட்டத்தை வகுத்தவர்கள் என்ன பொருளுடன் உருவாக்கி இருப்பார்கள் என்பதும் தெரியவேண்டும். மேலும், குறிப்பிட்ட ஒரு விவரம் சட்டங்களில் சொல்லப்படாமலும் இருக்கலாம். இதற்கு என்ன செய்வது? விளக்கத்திற்கு நீதி மன்றங்களை அணுகவேண்டும்.

### விளக்கம் அளிக்க நீதிமன்றங்களுக்கு அதிகாரம்

அரசியலமைப்புச் சட்டத்திலே சொல் தெளிவற்றிருப்பதற் காகவும், வாக்கியம் விளங்காமல் இருப்பதற்காகவும், பொருள் மயக்கம் தென்படுவதற்காகவும் விளக்கம் பெற அரசியலமைப்பை

உருவாக்கிய அரசியல் நிர்ணய சபையிடம் செல்லமுடியாது. அர சியலமைப்பை உருவாக்கிய அந்தக் குறிப்பிட்ட அரசியல் நிர்ணய சபை மறைந்துவிட்டது என்பதற்காக மட்டுமல்ல, அதே நிர்ணய சபையை இப்போது கூட்டியிருந்தாலும், அவர்களிடம் சென்று தெளிவுபெறுவதில்லை. நேற்றுச் சட்டசபையால் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தில் ஐயம் தோன்றினலும், இவ்வையத்தைத் தீர்க்கச் சட்டசபையிடம் செல்வதில்லை. ஐயத்தைத் தீர்க்கவும் விளக்கவும் தெளிவுரை அளிக்கவும் சட்டமன்றங்களுக்கோ நிர்ணய சபைக்கோ அதிகாரம் இல்லை. எனவே, நீதிமன்றங்களே தெளி வுரையும் விளக்கமும் அளிக்கவேண்டும்.

மேலும், ஒரு வழக்கு நீதிமன்றத்திற்கு வரும்போது அவ் வழக்கைத் தீர்க்க அரசியலமைப்புச் சட்டத்தில் இடமில்லாமல் இருக்கலாம். அச் சட்டத்தில் விதியும் விதிமுறையும் இல்லை யென்பதற்காக அவ்வழக்கிற்கு நீதிமன்றம் தீர்ப்புக் கூருமல் இருக்க முடியாது. நீதிபதி தமது சட்ட அறிவினலும் நியாய உணர்வினலும் தீர்ப்பளிக்கிருர்.

### நீதிமன்ற விளக்கத்தால் சட்டங்களில் மாற்றம்

வழக்குகள் தங்கள் முன் வரும்போது நீதிபதிகள் சட்டங் களுக்கு விளக்கம் அளிக்கின்றனர். வழக்குகள் தனி மனிதராலும் கொண்டுவரப்படலாம்; அரசாங்கத்தாலும் கொண்டுவரப்பட லாம். தனி மனிதன் அரசாங்கத்தின் மீது வழக்குத் தொடரும் போதும், மாநில அரசாங்கம் மத்திய அரசாங்கத்தின் மீது வழக்குத் தொடரும்போதும், ஒரு மாநில அரசாங்கம் மற்ருெரு மாநிலத்தின் மீது வழக்குத் தொடரும் போதும் அரசியலமைப்புச் சம்பந்தமான வழக்குகள் நீதிமன்றங்களின் முன் தோன்று கின்றன.

வழக்குகளுக்குத் தீர்ப்பளிக்கும்போது சட்டத்தின் சொற் களுக்கு நீதிமன்றங்கள் உரை வழங்குகின்றன. அங்ஙனம் உரை வழங்கும் போது சட்டத்தில் காணும் சொற்களுக்குப் பொருளைக் குறைத்தோ கூட்டியோ கூறும் அதிகாரம் நீதிமன்றங்களுக்கு உண்டு. நீதிமன்றங்கள் சட்டத்தின் விதிகளை மாற்றுவதோ நீக்குவதோ இல்லை. ஆனல், சட்டங்களுக்கு விளக்கம் அளிக் கின்றன. முன் அளிக்கப்பட்ட விளக்கங்களைப் பின்பற்றியோ, மாற்றியோ, நீக்கியோ நீதிமன்றங்கள் புது விளக்கங்கள் அளிக்க லாம். இப்படிப் புது விளக்கம் அளிக்கும் நீதிமன்றங்கள் சட்டத் தைப் புது விளக்கங்களால் வளர்க்கின்றன. பழைய பொருளைக்

கைவிட்டுப் புதுப்பொருள் காணும்போது நீதிமன்றங்கள் சட்டத்தை மாற்றுகின்றன.

### விளக்கத்தால் அரசியலமைப்பில் மாறுதல்

ஒவ்வொரு நாட்டின் அரசியலமைப்பிலும் வளர்ச்சியும் மாற்றமும் நீதி மன்றங்கள் அரசியலமைப்பிற்கு அளிக்கும் விளக்கத்தால் தோன்றுகின்றன.

### அமெரிக்க அரசியலமைப்பு

அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பில் நீதிமன்றங்கள் அரசியலமைப்பிற்கு அளித்த உரைவிளக்கத்தின் காரணமாக ஏற்பட்ட மாறுதல்களைக் காண்போம். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றம் அமெரிக்க அரசியலமைப்பிற்கு அவ்வப்போது தன்முன் வழக்குகள் வரும்போதெல்லாம் உரைவிளக்கம் அளித்து அரசியலமைப்பில் மாறுதல்கள் செய்து அரசியலமைப்பை வளர்த்துள்ளது. நீதிபதிகள் கூறுவதே அரசியலமைப்பு என்ற நிலைமை ஏற்பட்டுள்ளது. இதற்குச் சில எடுத்துக்காட்டுகளைக் காணலாம்.

### அரசியலமைப்பின் முன்னுரை

அரசியலமைப்பின் முன்னுரை (Preamble) அரசியலமைப்பின் பகுதியல்லவென்றும், இது எந்தவித அதிகாரத்தையும் வழங்குவதில்லை என்றும், இஃது அரசியலமைப்பின் நோக்கங்களையே கூறுகிறது என்றும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றம் தனது அரசியலமைப்பின் முன்னுரையைப்பற்றிக் கூறியுள்ளது. தலைமை நீதிமன்றம் இவ்விளக்கம் கூறுவதற்கு முன் முன்னுரை அரசியலமைப்பின் பகுதியாகக் கருதப்பட்டிருக்கலாம், அல்லது அரசியலமைப்பின் பகுதியா அல்லவா என்ற ஐயப்பாடு இருந்திருக்கலாம். அரசியலமைப்பின் பகுதியல்ல என்று நீதிமன்றம் தீர்ப்பளித்து முன்னுரையைப் பற்றிய புதிய கருத்தையும் மாற்றத்தையும் தோற்றுவித்துள்ளது.

### ஆயுதம் தாங்கிய படை

அரசியலமைப்பில் மத்திய அரசாங்கத்திற்கு ஆயுதம் தாங்கிய படையை வைத்துக்கொள்ள அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. ஆயுதம் தாங்கிய படை (Armed Force) என்ற சொல் தரைப்படையை மட்டும் குறிப்பதாகக் கருதப்பட்டது. ஆனால், தலைமை நீதிமன்றம் இச்சொல்லுக்கு விரிவான பொருள் தந்து தரைப்

படை, விமானப்படை, கடற்படை என அனைத்துப் படைகளையும் ஆயுதம் தாங்கிய படையென்ற சொல்லில் அடக்கியுள்ளது.

**செய்திப் போக்குவரத்துச் சாதனம்**

செய்திப் போக்குவரத்துச் சாதனம் (Means of Communication and Transport) என்ற சொல்லிற்கு விரிந்த பொருளை அளித்துத் தலைமை நீதிமன்றம் விளக்கம் கூறியது. தண்டவாள வழி, தரைவழி, கடல்வழி, ஆகாயவழி, தந்தி, தொலைபேசி, தொலைப்படக்காட்சி ஆகிய அனைத்து மார்க்கங்களும் செய்திப் போக்குவரத்துச் சாதனம் என்ற சொற்றொடரில் அடங்குவதாக நீதிமன்றம் விளக்கம் கூறியுள்ளது.

**நீதிப்புனராய்வு** (Judicial Review)

அரசியலமைப்பிற்கு முரணான மத்திய மாநிலச் சட்டங்கள் செயல்படுத்தப்படாமல் நிறுத்தலாம். அரசியலமைப்பின் விதிகளுக்கு ஏற்ப ஒரு சட்டம் உள்ளதா அல்லது அரசியலமைப்பிற்கு முரணாக உள்ளதா எனச் சீர்த்தூக்கி ஆய்வு செய்யும் அதிகாரமும் அங்ஙனம் முரணுடைய சட்டத்தைத் தடைசெய்யும் அதிகாரமும் தலைமை நீதிமன்றத்திற்கு உண்டு.

**மேரிலாந்துக்கு எதிராக மக்குலோக் தொடுத்த வழக்கு (Mc Cullooh vs. Maryland)**

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பாராளுமன்றமாகிய காங்கிரஸ் தனது சட்டத்தின் மூலம் பாங்குகளைத் துவக்கும் அதிகாரத்தை மத்திய அரசாங்கத்திற்கு வழங்கியது. கூட்டாட்சி அரசாங்கம் பல மாநிலங்களில் பாங்குகளைத் துவக்கியது. மேரிலாந்து (Maryland) மாநிலம் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்து மத்திய அரசாங்கப் பாங்குக் கணக்கராகிய மக்குலோக் (Mc Cullooh) மீது வழக்குத் தொடர்ந்தது. மாநில நீதிமன்றம் மேரிலாந்திற்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தது. இந்த வழக்கு மேல்முறையீட்டில் தலைமை நீதிமன்றத்திற்கு வந்தது. தலைமை நீதிமன்றம் மத்திய அரசாங்கத்திற்குச் சாதகமான தீர்ப்பை வழங்கியது. மத்திய அரசாங்கம் பாங்குகள் துவங்க அரசியலமைப்பில் இடமில்லையாயினும் சட்டப்படி வரி வசூல் செய்யவும், கடன் வசூலிக்கவும் அதிகாரமுள்ள மத்திய அரசாங்கம் உள்ளடங்கு அதிகாரங்களின்படி (Implied Powers) வங்கியைத் துவக்கலாம் எனத் தலைமை நீதிமன்றம் தீர்ப்பளித்தது. இத்தீர்ப்பின் மூலம் அரசியலமைப்பு வளர்ந்

துள்ளதையும் மாற்றம் அடைந்துள்ளதையும் தெளிவாக அறியலாம்.

**வாணிபத்திற்கு விளக்கம்**

வாணிபம் என்ற சொல்லுக்கு நூற்றுக்கணக்கான பொருளைத் தலைமை நீதிமன்றம் அளித்துள்ளது. இதன் மூலம் மாநிலங்களிடையே நிலவும் வாணிபத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தை மத்திய அரசிற்கு வழங்கியுள்ளது. மத்திய அரசாங்கத்தின் செல்வாக்குத் தலைமை நீதிமன்றத் தீர்ப்பால் உயர்ந்துள்ளது.

**உள்ளடங்கு அதிகாரக் கோட்பாடு** (Doctrine of Implied Powers)

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கூட்டாட்சி அரசாங்கத்திற்கு அரசியலமைப்பின்படி வழங்கப்பட்டுள்ள அதிகாரங்கள் பதினெட்டே ஆகும். ஆனால், தற்போது அரசாங்கத்தின் அதிகாரம் நீதிமன்றத் தீர்ப்பாலும், அதன் விளைவாக அரசியல் அமைப்பு வளர்ந்ததாலும், மாறியதாலும் மிக அதிகரித்துள்ளது. மத்திய அரசாங்கத்திற்கு ஆரம்பத்தில் கொடுக்கப்பட்ட 18 அதிகாரங்களுள் மறைந்து நிற்கும் அதிகாரங்கள் பல உண்டு எனத் தலைமை நீதிமன்றம் தீர்ப்பளித்தது. இதன் விளைவாக வரிவிதித்தல், போர், வாணிபம் ஆகிய துறையில் மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் வளர்ந்துள்ளது. அதிகாரிகளைப் பதவியிலிருந்து நீக்குவதில் குடியரசு தலைவர் செனட் சபையின் அனுமதி பெற வேண்டும். அங்ஙனமின்றி அஞ்சல் தலைமை அதிகாரியான மையர்ஸை வில்சன் பதவியிலிருந்து நீக்கினர். இதைத் தொடர்ந்து உருவான வழக்கில் பொதிந்துள்ள அதிகாரக் கோட்பாட்டின் மூலம் அதிகாரிகளை நீக்குவதற்குக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் உண்டு எனத் தலைமை நீதிமன்றம் தீர்ப்பளித்தது.

**நீதிமன்றத்தின் அதிகாரவாற்றல்**

அமெரிக்கத் தலைமை நீதிமன்றம் அதிகாரவாற்றலுடையதாகும். லஸ்கியின் கருத்துப்படி, அமெரிக்காவின் தலைமை நீதிமன்றம் சட்டம் இயற்றும் இரு அவைகளைவிட வலிமை மிக்கதாக இருக்கிறது. இதை மூன்றுவது அவையெனக் கூறலாம். தலைமை நீதிபதி ஹீக்ஸ் (Hughes) கூற்றுப்படி, 'நாம் அரசியலமைப்பிற்குட்பட்டு அதன் கீழ் இயங்குகிறோம். ஆனால், நீதிபதிகள் அஃது என்னவென்று கூறுகிறார்களோ அதுதான் அரசியலமைப்பாகும்'.[6]

[6] Hughes : 'We are under the Constitution, but the constitution is what the Judges say it is.'

நீதிபதி ஸ்பிராங்க் ஃபர்ட்டர் (Frank Furter) கருத்துப்படி, 'தலைமை நீதிமன்றம்தான் அரசியலமைப்பு' ஆகும்.[7] தியோடர் ரூஸ்வெல்ட் அவர்களின் ஆய்வுப்படி 'நீதிபதிகள் பெரும்பாலும் சட்டம் இயற்றுபவர்களாக இருக்கிறார்கள். ஏனெனில், இறுதி முடிவெடுப்பது அவர்களேயாகும்.

எனவே, நீதிபதிகளும் நீதிமன்றங்களும் சட்டரீதியான முறையில் அரசியலமைப்பிற்கு விளக்கம் அளிப்பதன் மூலம் அரசியலமைப்பை மாற்றியுள்ளார்கள் என்பதை அமெரிக்க ஐக்கிய நாடுகளிலிருந்து நாம் அறிகிறோம்.

**இந்திய அரசியலமைப்பு**

இந்தியாவின் தலைமை நீதிமன்றத்திற்கு அமெரிக்கத் தலைமை நீதிமன்றத்தளவு சட்டத்திற்கு விளக்கம் கூறும் அதிகாரமோ, மறு ஆய்வு அதிகாரமோ இல்லை என்று கூற இயலாது. அமெரிக்கத் தலைமை நீதிமன்றத்தின் அதிகாரம் அரசியலமைப்பில் குறிப்பிடப் படவில்லை. இந்தியாவின் தலைமை நீதிமன்றத்தின் நீதிமன்ற மறுஆய்வு அதிகாரம் இந்திய அரசியலமைப்பால் வழங்கப் பட்டுள்ளது.

இந்தியாவின் தலைமை நீதிமன்றமும், மாநில உயர்நீதி மன்றங்களும் அரசியலமைப்புச் சட்டத்திற்கு விளக்கம் அளிக்கின்றன. அரசியலமைப்புச் சட்டத்திற்கு முரணான சட்டங்களை நீதிமன்றங்கள் செல்லாது என உறுதி செய்கின்றன.

**சென்னை அரசாங்கத்திற்கு எதிராக ஏ. கே. கோபாலன் தொடுத்த வழக்கு**

சென்னை அரசாங்கத்திற்கு எதிராக ஏ. கே. கோபாலன் வழக்குத் தொடுத்தார். இவ்வழக்கில் தடுப்புக்காவல் சட்டத்தின் பதினென்காம் பிரிவை அரசியலமைப்பிற்கு முரணெனத் தலைமை நீதிமன்றம் கூறியுள்ளது. இதன்வழி தலைமை நீதிமன்றம் அரசியலமைப்பின் மேம்பாட்டைக் காத்து நின்று அரசியலமைப்பிற்கு விளக்கம் அளித்துள்ளது.

**சென்னை அரசாங்கத்திற்கு எதிராக வெங்கட்ராமன் தொடுத்த வழக்கு**

ஜாதிமத அடிப்படையில் அரசாங்க நியமனங்களைச் சென்னை அரசாங்கம் செய்ததை எதிர்த்து வெங்கட்ராமன் தொடர்ந்த

[7] Frank Furter: 'Supreme Court is the Constitution.'

வழக்கில் அரசாங்க நியமன ஆணை அரசியலமைப்பின் 16ஆம் விதிக்கு முரணானது என்று தலைமை நீதிமன்றம் தீர்ப்பளித்தது.

**அரசுடைமையாக்கிய வழக்கு**

வங்கிகளை மத்திய அரசாங்கம் அரசுடைமையாக்கியது அரசியலமைப்பின் சொத்துரிமை விதிக்கு முரணானது எனக் கூறித் தலைமை நீதிமன்றம் மத்திய அரசாங்கச் சட்டத்தைச் செயலற்றதாக்கியது. ஆனால், அரசியலமைப்புத் திருத்தத்தின் மூலம் மத்திய அரசாங்கம் அச்சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வந்தது.

**ஆஸ்திரேலிய அரசியலமைப்புமாற்றம்**

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றத்தைப் போலவே அரசியலமைப்பிற்கு விளக்கம் கொடுக்கும் அதிகாரத்தை ஆஸ்திரேலியாவின் உயர் நீதிமன்றம் பெற்றுள்ளது. அரசியலமைப்பிற்கு முரணான சட்டம் இயற்றப்படுமானால் அது அரசியலமைப்பிற்கு முரணானது என்று கூறும் அதிகாரமும், அது செல்லத்தக்கதல்ல என்று கூறும் நீதிப் புனராய்வு அதிகாரமும் ஆஸ்திரேலிய உயர்நீதிமன்றத்திற்கு உண்டு. அரசியலமைப்புச் சட்டத்திற்கு விளக்கம் கூறுதல் மூலம் அரசியலமைப்பு வளர்ச்சியும் மாற்றமும் பெற்றுள்ளது.

நீதிமன்றங்கள் அரசியலமைப்புகளுக்கு அளிக்கும் விளக்கத்தின் வாயிலாக அரசியலமைப்பில் வளர்ச்சியும் மாற்றமும் சட்டரீதியாக ஏற்படுகின்றன என்பதைக் கண்டோம்.

**நீதிமன்ற விளக்கத்தின் நிறைகளும் குறைகளும்-வளர்ச்சியும் மாற்றமும்**

நீதிமன்ற விளக்கத்தினால் பல்வேறு நாட்டு அரசியலமைப்புகளில் வளர்ச்சியும், விரும்பத்தக்க மாற்றங்களும் ஏற்பட்டுள்ளன. அமெரிக்காவின் தலைமை நீதிமன்றம் வாணிபம் என்னும் சொல்லுக்கு நூற்றுக்கணக்கான விளக்கமளித்து அரசியலமைப்பை வளர்த்துள்ளது. அரசியலமைப்புத் தோற்றுவித்த காலத்தில் இருந்ததைவிடத் தெளிவுடையதாகவும், மாற்றம் அடைந்ததாகவும் உள்ளது. ஆயுதம் தாங்கிய படையென்ற சொல்லுக்கும், போக்குவரத்துச்சாதனம் என்ற சொல்லுக்கும் இன்னும் பல நூற்றுக்கணக்கான சொற்களுக்கும் வாக்கியங்களுக்கும் விரிந்த தெளிவான விளக்கம் பெற்றுள்ளதைக் கண்டோம். அரசியலமைப்பின் இவ்வளர்ச்சிகள் விரும்பத்தக்க மாற்றங்களாக உள்ளன.

**மத்திய அரசின் அதிகார வளர்ச்சி**

நீதிமன்றத்தின் விளக்கத்தினால் 18 வகை அதிகாரங்களை மட்டும் உடைய அமெரிக்க மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் விரிந்து வளர்ச்சியடைந்துள்ளது. மாநிலங்களின் வாணிபத்தைக் கட்டுப்படுத்தி ஒழுங்குசெய்தல், வரிவிதித்தல், பொருளாதார நடவடிக்கைகள், வேலையில்லாக் காலத்திலும், நோய்வாய்ப்பட்ட காலத்திலும் உதவிகள், போக்குவரத்துச் சாதனங்களின் மீதான கட்டுப்பாடு ஆகிய துறைகளில் மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் வளர்ந்துள்ளது. இவ்வளர்ச்சிகளுக்கெல்லாம் காரணம் அரசியலமைப்பிற்கு நீதிமன்றம் அளித்த விளக்கமேயாகும்.

**உரிமைகளின் பாதுகாப்பு**

தலைமை நீதிமன்றம் அரசியலமைப்புச் சட்டத்திற்கு விளக்கம் கொடுக்கும் வகையில் மக்களின் அடிப்படை உரிமைகளையும் காத்துள்ளது. இந்தியாவின் தலைமை நீதிமன்றம் அடிப்படை உரிமைகளைப் பறிக்கும் மாநிலச் சட்டமாயினும், மத்திய அரசாங்கச் சட்டமாயினும் அதை அரசியலமைப்பிற்கு முரணானது என்று கூறி மக்களின் அடிப்படை உரிமைகளைக் காத்துள்ளது. நீக்ரோக் குழந்தைகளும் வெள்ளையர் குழந்தைகளும் பள்ளியில் பிரித்துவைப்பதைத் தலைமை நீதிமன்றம் அமெரிக்காவில் தடுத்துள்ளது. அரசியலமைப்புச் சட்டத்திற்கு விளக்கம் அளிப்பதன் மூலம் பல அடிப்படை உரிமைகள் காக்கப்பட்டுள்ளன.

**உள்ளடங்கு அதிகாரக் கோட்பாடு**

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றம் அளித்த உள்ளடங்கு அதிகாரக் கோட்பாடு உலக நாடுகள் பலவற்றிலும் பின்பற்றப்படுகின்றன. அரசியலமைப்பில் ஒவ்வொரு விதியையும் எழுதப்பட வேண்டிய அவசியமில்லையென்றும், அதில் கூறப்பட்ட சுருக்கமான கருத்தை விரிவுபடுத்திப் பொருள் கொள்ளவேண்டுமென்றும் நீதிமன்றம் கருதுகிறது. குடியரசு தலைவரின் ஒரு குறிப்பிட்ட அதிகாரம் அரசியலமைப்பில் குறிக்கப்படவில்லையாயினும், குறிக்கப்பட்டுள்ள மற்ற அதிகாரத்தில் இது பொதிந்துள்ளது என நீதிமன்றங்கள் பல வழக்குகளில் எடுத்துக்காட்டியுள்ளன. இவ்வெடுத்துக்காட்டுகளை முன்பகுதியில் கூறியுள்ளோம்.

**குறைகள்**

**அதிகாரக் குவிப்பு:** தலைமை நீதிமன்றங்கள் அரசியலமைப்புச் சட்டத்திற்கு விளக்கம் அளித்ததன் காரணமாக மத்திய

அரசாங்கத்தின் அதிகாரம் வளர்ந்து அதிகாரக் குவிப்பு மத்தியில் தோன்றியுள்ளது. மேலும், பாராளுமன்றத்திற்குச் சமமாகக் கருதப்பட்ட அமெரிக்க நிருவாகத்துறை தற்போது பாராளுமன்றத்தைவிடச் செல்வாக்குடையதாக இருக்கிறது. அதிகாரச் சமநிலைக் கோட்பாடு செயல்படுவதில்லை.

### மாநிலங்களின் உரிமைப் பாதிப்பு

தலைமை நீதிமன்றம் அரசியலமைப்புச் சட்டத்திற்கு விரிவான விளக்கம் அளித்ததால் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மாநிலங்களின் உரிமைகள் பாதிக்கப்பட்டுள்ளன. மத்திய அரசாங்கம் மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்ட அதிகாரங்களில் தலையிடுகிறது. மாநிலங்களின் வாணிப உரிமையிலும், பொருளாதார நடவடிக்கையிலும், சமுதாய நடவடிக்கைகளிலும் மத்திய அரசாங்கத்தின் தலையீடு அதிகரித்துள்ளது. மாநில உரிமைகளைக் கட்டுப்படுத்துகிறது. மத்திய அரசாங்கத்தின் இச்செயல்கள் அரசியலமைப்பை உருவாக்கியவர்களின் விருப்பத்திற்கும் கருத்திற்கும் மாறுபட்டதாகும். அரசியலமைப்பின் தந்தையர் மாநிலங்களின் உரிமைகளைப் பாதுகாக்க வேண்டுமென்றும், மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றும் விழைந்தார்கள். இவர்கள் தோற்றுவித்த அரசியலமைப்பில் காணும் அதிகாரப் பங்கீட்டு முறை செயல்படுவதில்லை. மத்திய, மாநில அரசுகளிடையே எதிர்பார்த்த அதிகாரச் சமநிலை செயலற்றதாகிவிட்டது. இவைகள் நீதிமன்றத்தின் சட்ட விளக்கத்தால் தோன்றிய தீங்காகும்.

### விளக்கத்தில் கருத்துமாறுபாடு

அரசியலமைப்பிற்கு கொடுக்கப்படும் விளக்கத்தில் கருத்து மாறுபாடு இருக்கக் காண்கிறோம். நீதிபதிகளுள் கருத்து வேறுபாடுகள் தோன்றுகின்றன. ஒன்பது நீதிபதிகளில் ஐவர் கொடுக்கும் கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டு நால்வரின் கருத்து ஒதுக்கப்படுகிறது. மேலும், ஒரு முறை அளித்த விளக்கத்திற்கும் மறுமுறை அளிக்கப்படும் விளக்கத்திற்கும் முரண்பாடுகளைக் காணலாம். ஒரு நீதிபதி அளிக்கும் விளக்கத்திற்கும், மற்றொரு நீதிபதி அளிக்கும் விளக்கத்திற்கும் மாறுபாடுகள் உள்ளன. எனவே, சட்டம் நீதிபதிகளின் மனப்பான்மைக்கும், கொள்கைக்கும் ஏற்ப மாறுபடுவதாகத் தோன்றுகிறது. இவ்வித மாறுபாடு சட்டத்தின் நேர்மையைக் குறைத்து விடுகிறது. சட்டத்தின் அடிப்படையில் கூறப்படும் சட்டத்திற்கான விளக்கம் கருத்து ஒற்றுமையில்லாது வேறுபட்டிருப்பது ஒரு பெருங்குறையாகும்.

நீதிமன்ற விளக்கத்தினுல் தோன்றும் பயன்களையும், குறைகளையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது பயன்களே அதிகம். அமெரிக்கத் தலைமை நீதிமன்றம் அரசியலமைப்பிற்கு அளித்த விளக்கத்தின் காரணமாக அரசியலமைப்பு வளர்ந்துள்ளதோடு விரும்பத்தக்க விதத்தில் மாற்றம் அடைந்துள்ளது.

## வழக்கமும் வழக்காறும்
## (Usage and Convention)

அரசியலமைப்புத் திருத்தமும் நீதிமன்ற விளக்கமும் அரசியலமைப்பைச் சட்டரீதியில் மாற்றுவதையும் வளர்ப்பதையும் முன் பகுதிகளில் பார்த்தோம். வழக்கமும் வழக்காறும் அரசியலமைப்பை மாற்றுவதில் உள்ள மூன்ருவது வகைச் சாதனமாகும்.

### வழக்கமும் வழக்காறும் (Custom and Convention)

தனி மனிதனுக்குப் பழக்கமும் (Habit), சமுதாயத்திற்கு வழக்கமும் (Custom), நாட்டிற்கு வழக்காறும் (Convention) முக்கியத்துவம் உடையன. ஹாலண்டு (Holland) கூற்றின்படி, 'ஒருவன் பொதுவழி ஒன்றில் செல்லுதல் அவனுக்குப் பழக்கமாறது. பலரால் பின்பற்றப்படும்போது அவ்வழி வழக்கமாக அமைகிறும். வழக்கம் நிலைத்து நின்று அரசியலமைப்பை மாற்றும் வல்லமைபெறும்போது வழக்காருகிறது.'[8] பேராசிரியர் வியர் (Wheare) கூற்ருவது: 'வழக்காறு என்பது அரசியலமைப்பு வகுப்பவர்களால் பின்பற்றப்படவேண்டிய விதியாகும். வழக்கம் என்பது நடைமுறையிலிருக்கும் சாதாரணப் பழக்கமேயாகும்'[9] இது அரசியலமைப்பில் செல்வாக்குக் கொள்வதில்லை. ஆனுல், வழக்கம் நாளடைவில் வழக்காருக மாறி அரசியலமைப்பில் செல்வாக்குக் கொள்ளலாம்.

சாலமண்ட் (Salmond) இலக்கணமாவது: 'மக்களுக்கு உகந்ததாக, நியாயமானதாக, நீண்ட நாள் சமூகத்தில் நிலவி வரும்

[8] Holland : 'The best illustration of the formation of such habitual courses of action is the mode in which a path is formed across a common. One man crosses the common in the direction which is suggested either by the purpose he has in view, or by mere accident . If others follow in the same track, which they are likely to do after it has once been trodden, a path is made.'

[9] Wheare : 'By Convention is meant a binding rule, a rule of behaviour accepted as Obligatory by those concerned in the working of the Constitution; by usage is meant no more than a usual practice. Clearly a usage might become a convention.'

பழக்கத்தை வழக்கமாக மனிதன் வாழ்வில் ஏற்றுக் கொள்கிருன்[10].

புருஸ்டர் (Brewster) கருத்தாவது: 'நடைமுறை வழக்கம் எழுதப்படாத அரசியலமைப்பின் வடிவத்தையும் கூறுகளையும் தீர்மானிக்கிறது. எழுதப்பட்ட அரசியலமைப்பையும் மாற்று வதோடு சக்தியற்றதாக்குகிறது.'[11]

பழக்கத்தின் முதிர்ச்சி வழக்கமாவதும், வழக்கத்தின்முதிர்ச்சி வழக்காருவதும் கண்டோம். பழக்கம் தனிமனிதனின் அளவில் உள்ளது. வழக்கம் சமுதாயத்தின் நிலேயில் உள்ளது. வழக்காறு அரசியல் நிலேயை எய்துகிறது. வழக்கமே நாளடைவில் வழக் காருகி அரசியலமைப்பில் ஆதிக்கம் கொள்ளுகிறது.

### அரசியலமைப்புகளில் வழக்கமும் வழக்காறும்

வழக்கமும் வழக்காறுகளும் எல்லா நாடுகளிலும் உள்ளன. குறிப்பாகப் பழமையான நாடுகளில் அதிகம் காணலாம். புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட அரசியலமைப்புகளில் அதிகமாக வழக்கமும் வழக்காறும் தென்படுவதில்லே. இங்கிலாந்தின் அரசியலமைப்பில் வழக்கமும் வழக்காறும் மிகுந்த செல்வாக்கையுடையன. அமெரிக்க அரசியலமைப்பிலும் வழக்காறுகளின் ஆதிக்கத்தைக் காணலாம். பிரான்சு நாட்டின் அரசியலமைப்பிலும் வழக்காறு களுக்கு இடமுண்டு. இந்திய அரசியலமைப்புச் சமீப காலத்தில் தோன்றியதால் வழக்கத்திற்கும் வழக்காறுகளுக்கும் அதிகமான இடம் ஏற்படவில்லே.

### வழக்கம், வழக்காறுகளின் செல்வாக்கு

வழக்கமும் வழக்காறுகளும் அரசியலமைப்பில் செல்வாக்குப் பெற்று அரசியலமைப்பை மாற்றுகின்றன. அரசியலமைப்பில் உள்ள வாசகங்களேச் செயலற்றதாக்கி வழக்கமும் வழக்காறு களும் தாங்கள் ஆட்சி கொள்கின்றன. அமெரிக்கா போன்ற எழுதப்பட்ட அரசியலமைப்புகளிலேயே இவைகளே நாம் காண லாம். இங்கிலாந்து போன்ற நாடுகளின் எழுதப்படா அரசிய

[10] Salmond: 'Custom is the embodiment of those principles which have commended themselves to the national conscience as principles of truth, justice and public utility.'

[11] Brewster: 'Where a Constitution is primarily unwritten, customary practices play a noticeably large part in shaping its form and content; but even where it is in so called written form, the practices which arise in the application of its provisions materially alter and, in some instances, even annul them.'

லமைப்பு வழக்காறுகளின் அடிப்படையிலேயே அமைந்துள்ளது. எனவே, அரசியலமைப்பின் வாசகத்தையே பயனற்றதாக்கிப் புதிய மாற்றத்தை ஏற்படுத்தும் திறன் வழக்கத்திற்கும் வழக்காறு களுக்கும் உண்டு.

வழக்கமும் வழக்காறுகளும் பற்றிய விரிவான ஆய்வையும் அடுத்து வரும் பகுதியில் காணலாம்.

## சட்டமன்றச் சாதாரணச் சட்டங்கள்
## (Ordinary Statutes of Legislature)

அரசியலமைப்புத் திருத்தம், நீதிமன்ற விளக்கம், வழக்கமும் வழக்காறும் ஆகியன அரசியலமைப்பை வளர்க்கின்றனவென்றும், மாற்றுகின்றனவென்றும் பார்த்தோம். அதே போலச் சட்ட மன்றங்களின் சாதாரணச் சட்டங்களும் அரசியலமைப்பை விரி வடையச் செய்துள்ளன, மாற்றியுள்ளன, வளர்த்துள்ளன என்பதை இப்பகுதியில் காணலாம்.

### அரசியலமைப்பில் பரந்த எல்லைக்கோடுகள்

அரசியலமைப்புகளை வகுக்கும்போது அரசாங்கம், அவை களின் நிறுவனங்கள், மத்திய மாநில உறவுகள், குடியுரிமைகள் ஆகியன பற்றிய பரந்த எல்லைக்கோடுகளையே காட்டமுடிகிறது. நடைமுறையில் தேவைப்படும் எல்லா விவரங்களையும் எல்லா நிறுவனங்களையும்பற்றி அரசியலமைப்பில் கூற இயலாது. எடுத்துக் காட்டாக, அமெரிக்க அரசியலமைப்பின் மூன்றாவது விதியில் நீதி மன்றங்கள் பற்றி மிகச் சுருக்கமாகவே கூறப்பட்டுள்ளது. 'அமெ ரிக்க ஐக்கிய நாடுகளின் நீதித்துறை அதிகாரம் ஒரு தலைமை நீதி மன்றத்திடமும், பாராளுமன்றம் அவ்வப்போது நிறுவும் கீழ் நீதிமன்றங்களிடமும் அமையும்.' அமெரிக்க அரசியலமைப்பின் மூன்றாவது விதியின் பிரிவு நீதிமன்றங்கள் பற்றிய மிகப் பரந்த எல்லைக் கோட்டையே வகுத்துள்ளது. நீதிமன்றங்களின் அமைப்புகள் பற்றியோ நீதிபதிகளின் ஊதியம் பற்றியோ, கீழ் நீதிமன்றங்களின் அமைப்புகள் பற்றியோ, எண்ணிக்கைகள் பற்றியோ கூறவில்லை. அதே போல இந்திய அரசியலமைப்பின் மக்களின் பிரதிநிதித்துவ முறைகள் பற்றிய விரிவான விதிகள் இல்லை.

### சட்டமன்றத்தின் பங்கும் பணியும்

அரசியலமைப்பில் காட்டப்பட்டுள்ள எல்லைக்கோடுகளை நிரப்புவதும், எலும்புக்கூட்டிற்குத் தசை அளிப்பதும் சட்டமன்றங்

களின் பணியாகும். எனவே, அரசியலமைப்பை வளர்ப்பதில் சட்டமன்றங்கள் பெரும் பங்கு கொண்டுள்ளன. அமெரிக்கப் பாராளுமன்றம் சட்டங்களியற்றிக் கீழ் நீதிமன்றங்களை நிறுவி யுள்ளது. தலைமை நீதிமன்றங்களின் அமைப்பு, நீதிபதிகளின் ஊதியம், நீதிமுறை ஆகியன பற்றிய விரிவான சட்டங்களைப் பாராளுமன்றமே இயற்றியது. 1789ஆம் ஆண்டில் நீதித்துறைச் சட்டத்தை (Judiciary Act) காங்கிரஸ் இயற்றியது. பாராளு மன்றத்தின் இந்தச் சாதாரணச் சட்டங்கள் அரசியலமைப்பை வளர்ப்பதாகவும், சுருங்கக்கூறின் அரசியலமைப்பின் பகுதியாகவும் அமைந்துவிடுகிறது. பர்கூசன், மேக்ஹென்றி (Fergusen and Mc Henry) ஆகியவர்களின் கூற்றின்படி, 'காங்கிரஸ் கூறுவதும் அரசியலமைப்பின் பகுதியாகிறது. எளிய பொதுவான சொற் றொடர்களுக்குச் சாதாரணச் சட்டங்கள் மூலம் எதிர்பாராத பொருளை அளித்து விரிவாக்குகிறது.' பாராளுமன்றச் சட்டங்கள் அரசியலமைப்பை வளர்ப்பதாகவும், விரிவடையச் செய்வதாகவும் அமைகின்றன. அமெரிக்கப் பாராளுமன்றம் நீதித்துறைச் சட்டங்களை இயற்றி அரசியலமைப்பை விரிவடையச் செய்தது போல இந்தியப்பாராளுமன்றம் மக்கள் பிரதிநிதித்துவச் சட்டங்கள் (People's Representation Acts) பல இயற்றி அரசியலமைப்பை வளர்ச்சியடையச் செய்துள்ளது.

விரிந்த கோட்பாடுகளைக் கொண்ட அரசியலமைப்பை நடை முறைக்குக் கொண்டுவரச் சட்டசபைகளின் சாதாரணச் சட் டங்கள் அவசியமாகின்றன. இச்சாதாரணச் சட்டங்கள் அரசியலமைப்பில் விடப்பட்ட விவரங்களைப் பூர்த்தி செய்து அரசியலமைப்பை வளர்க்கின்றன.

## செயல்துறையின் நடவடிக்கைகள்
## (Executive Actions)

அரசியலமைப்புத் திருத்தம், நீதிமன்ற விளக்கம், வழக்கமும் வழக்காறும், சட்டமன்றச் சாதாரணச் சட்டங்கள் ஆகியவற்றைப் போன்றே செயல்துறையின் நடவடிக்கைகள் அரசியலமைப்பை மாற்றுவனவாகவும், விரிவடையச் செய்வனவாகவும், வளர்ப்பன வாகவும் அமைந்துள்ளன.

அமெரிக்கக் குடியரசு தலைவர்கள் பலர் அரசியலமைப்பிற்கு விளக்கமும் பொருளும் கூறியுள்ளனர். ஆபிரஹாம்லிங்கன் அரசியலமைப்பிற்கு இவ்வித விளக்கம் கூறியுள்ளார். அடிமைப் பிரச்சினையில் தென்மாநிலங்கள் கூட்டாட்சியிலிருந்து பிரிந்தன.

ஆனால், அரசியலமைப்பின்படி பிரியும் உரிமை இல்லையென லிங்கன் அரசியலமைப்பிற்கு விளக்கம் கூறியுள்ளார். தென் மாநிலங்கள் பிரிந்து செல்வது படை பலத்தால் தடுக்கப்பட்டது.

பிராங்ளின் ரூஸ்வெல்ட் (Franklin Roosevelt) குடியரசு தலைவரின் அதிகாரத்தை வலியுறுத்திக் கூறி அரசியலமைப்பிற்கு விளக்கம் அளித்துள்ளார். அதிகாரிகளை நீக்குவதில் பாராளு மன்றம் தலையிடமுடியாதெனக் கூறியுள்ளார். மேலும், நெருக்கடி காலங்களில் அரசாங்கம் பொருளாதாரத் துறையில் தலையிடுவது அரசியல் அமைப்பிற்குட்பட்டதே என விளக்கம் கூறினர். பொருளாதார நெருக்கடி நிலையில் குடியரசு தலைவரின் அதிகாரத்தை விரிவுபடுத்திக்கொண்டார்.

வில்சன் (Wilson) முதலாம் உலகப் பெரும் போரின்போது பாராளுமன்றத்தின் ஒப்புதலின்றிப் பல நிருவாக ஸ்தாபனங்களை ஏற்படுத்தினர். மேலும், செனட் சபையின் ஒப்புதலின்றி அயல் நாடுகளுடன் பல நிருவாக ஒப்பந்தங்களைச் செய்துகொண்டார். இவ்வொப்பந்தங்களின் விளைவாக அரசியலமைப்பு வளர்ச்சியும் மாற்றமும் அடைந்தது.

சட்டத்துறையும் நீதித்துறையும் அரசியல் அமைப்பை மாற்றுவது போலவும், வளர்ப்பது போலவும் செயல்துறையும் தனது பங்கை ஆற்றியுள்ளது. அயல்நாட்டு ஒப்பந்தங்களின் மூலமும் பிரகடனங்கள் வழியும் அரசியலமைப்பிற்கு விளக்கம் அளிக்கும் முறையிலும் செயல்துறை அரசியலமைப்பில் மாறுதல்களைச் செய்துள்ளது.

அரசியலமைப்புத் திருத்தம், நீதிமன்ற விளக்கம், வழக்கமும் வழாகாறும், சட்டமன்றச் சாதாரணச் சட்டங்கள், செயல் துறையின் நடவடிக்கைகள் ஆகியனவற்றல் அரசியலமைப்புகள் மாற்றங்களும் வளர்ச்சியும் பெற்றுள்ளன. வளரும் சமுதாயத்திற்கு அரசியலமைப்பில் மாற்றங்களும் வளர்ச்சிகளும் தேவைப் படுகின்றன.

## முக்கிய வினக்கள்

1. சட்டத்திற்கு ஆட்படாத (Informal) அரசியலமைப்பு மாற்றங்களைக் கூறுக.
2. அரசியலமைப்பை மாற்றுவதில் கீழ்க்காணும் ஏதுக்களின் பங்கினை ஆய்க.

(அ) வழக்கமும் வழக்காறும்
(ஆ) சட்டமன்றச் சாதாரணச் சட்டங்கள்
(இ) செயல்துறையின் நடவடிக்கைகள்

3. குறிப்பு வரைக:
(அ) குடியொப்பம்
(ஆ) மக்கள் வாக்கெடுப்பு
(இ) மக்கள் துவக்கம்
(ஈ) சிறப்புக் கூட்டம்
(உ) நீதிப்புனராய்வு
(ஊ) செயல்துறைப் பிரகடனம்
(எ) கூட்டாட்சி உறுப்பு

4. இந்திய அமெரிக்க அரசியலமைப்புச் சாசனங்களைத் திருத்தும் முறைகளை ஆராய்க. (செ. ப. க. ஏப்ரல், 1969)

5. அரசியலமைப்புச் சட்டங்கள் எவ்வாறு திருத்தப்படுகின்றன? நெகிழும் அரசியலமைப்புச் சட்டத்தின் நன்மைகள் யாவை? (செ. ப. க. ஏப்ரல், 1972)

6. சட்ட ஒழுங்கு வகையில் அரசியல் சட்டத்தைத்திருத்தும் முறையின் மேன்மையையும் குறைபாட்டினையும் பற்றி வாதிடுக. (செ. ப. க. ஏப்ரல், 1973)

7. நீதிமன்றப் புனராய்வின் மூலம் அரசியலமைப்புச் சட்டத்தை மாற்றும் முறையில் உள்ள மதிப்பையும் குறைபாடுகளையும் ஆராய்க. (செ. ப. க. செப்டம்பர், 1973)

8. இந்திய அரசியலமைப்புச் சட்டம் எம்முறையில் திருத்தப்படுகிறது? (செ. ப. க. ப. மு. செப்டம்பர், 1973)

9. அரசியல் சட்டத்திருத்தம் என்றால் நீவிர் அறிவதென்ன? எவ்வாறு அரசியல் சட்டங்கள் திருத்தப்படுகின்றன எனக் காட்டுக. (செ. ப. க. செப்டம்பர், 1975)

## ஆ. வழக்கமும் வழக்காறும்
## (Usage and Convention)

[வழக்காற்றின் கூறுகள் : வழக்கமும் வழக்காறும்—சட்டமும் வழக்காறும்—வழக்காறுகளின் ஆற்றலதிகாரம்.

**அரசியலமைப்புகளில் காணும் முக்கிய வழக்காறுகள்:** இங்கிலாந்தின் முக்கிய வழக்காறுகள் — அமெரிக்க ஐக்கிய நாடுகளில் வழக்காறுகள் — இந்தியாவில் வழக்கங்களும் வழக்காறுகளும்.

**வழக்காறுகளின் முக்கியத்துவமும் பயன்களும்:** அரசியலமைப்பின் விதிகள் மாற்றப்படுதல் — வழக்காறுகள் அரசியலமைப்பை முறிக்காமல் வளைக்கின்றன— அதிகார மாற்றங்கள் — சமூக நடைமுறை — இடைவெளி பூர்த்திசெய்தல்.]

அரசியலமைப்பை மாற்றும் சக்தி வாய்ந்த ஏதுக்களை முன் பகுதியில் பார்த்தோம். அவைகளுள் வழக்கமும் வழக்காறுகளும் அரசியலமைப்பின் வாசகங்களைச் செயலற்றதாக்கித் தாங்கள் செல்வாக்குப் பெறுவதை அறிந்தோம். இவைகள் எழுதப்படாத இங்கிலாந்தின் அரசியலமைப்பில் மிகுந்த செல்வாக்குக் கொண்டிருப்பதையும், எழுதப்பட்ட அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பிலும் செல்வாக்குப் பெற்றிருப்பதையும் காணலாம். வழக்கங்களும் வழக்காறுகளும் எழுதப்படாத அரசியலமைப்பிலும் எழுதப்பட்ட அரசியலமைப்பிலும் ஆதிக்கங்கொள்கின்றன. இவைகளைப் பற்றி வரும் பகுதிகளில் விரிவாகக் காணலாம்.

## வழக்காற்றின் கூறுகள்

### வழக்கமும் வழக்காறும்

தனி மனிதனுக்குப் பழக்கம் (Habit) அமைவது போல ஒரு நாட்டிற்கு வழக்கம் (Usage) அமைகிறது. தொடர்ந்து பின்பற்றப் படுவதன் காரணமாகத் தனி மனிதனுக்குப் பழக்கமும், நாடுகளுக்கு வழக்கமும் தோன்றுகின்றன. வழக்கம் நீண்டகாலம் நிலைத்திருந்து அரசியலமைப்பை மாற்றும் அளவிற்குச் செல்வாக்குப் பெற்றிருந்தால் அது வழக்காறு (Convention) ஆகிறது. பழக்கங்கள், வழக்கங்கள், நடைமுறை முறைமைகள், நடைமுறை நீதிக்கோட்பாடுகள் ஆகியன வழக்காறுகளின் அடிப்படைகள் ஆகும்.

மில் (Mill) அவர்களின் இலக்கணப்படி, 'வழக்காறுகள் என்பன அரசியலமைப்பின் எழுதப்படாத கோட்பாடுகளாகும்.[12] ஆன்சன் (Anson) கருத்துப்படி, 'வழக்காறு என்பது அரசியலமைப்பிலுள்ள வழக்கமாகும்.'[13] ஐவர்ஜென்னிங்ஸ் (Ivor Jen-

[12] Mill : 'Conventions are unwritten maxims of the Constitution.'

[13] William Anson : 'Conventions are customs of the Constitution.'

nings) கூற்றின்படி அரசியலமைப்பு மனிதர்களால் செயல்படுத்தப் படுகிறது. இதைச் செயல்படுத்த ஒத்துழைப்பு அவசியம்.[14] இந்த ஒத்துழைப்பை நல்கும் விதிகளே அரசியலமைப்பின் வழக்காறு களாகும். முன்னேற்றத்திற்கான மாறுபாடுகள் நிகழ்ந்து கொண்டே இருக்கின்றன. ஆனால், அரசியலமைப்புச் சட்டம் நிலைத்ததாகவும், மாறாத் தன்மையுடையதாகவும் அமைகிறது. வழக்காறுகள் வாழ்வில் தோன்றும் மாறுபாடுகளை அனுசரித்து அமைகின்றன. முன்னேற்றங்களுக்கு ஏற்ப மாறி அமைகிறது. எனவே, அரசியலமைப்பின் வழக்காறுகள் எலும்புக்கூடான சட்டத்திற்குச் சதை போல் அமைகின்றன.

நெகிழா அரசியலமைப்புச் சட்டங்கள் உடனடித் தேவை களுக்கேற்ப நெகிழ்ந்துகொடுத்து அமைவதில்லை. மாறும் சூழ் நிலைகளுக்கு ஏற்ப வழக்காறுகள் அரசாங்க இயந்திரத்தை நெகிழ் வுடையதாக அமைத்து நன்முறையில் இயக்கும் சாதனமாக இருக்கின்றன.

### சட்டமும் வழக்காறும்

சட்டத்திற்கும் வழக்காறுகளுக்கும் வேறுபாடுகள் உண்டு. சட்டம் சட்டமன்றங்களால் இயற்றப்படுகிறது. வழக்காறு நீண்ட காலமாக வழக்கத்திலிருந்து பின்பற்றப்படுகிறது. சட்டத்தை உடனடியாகத் தோற்றுவிக்கவும், மாற்றவும், அழிக்கவும் இயலும். சட்டமன்றங்களின் விருப்பத்திற்குட்பட்டு இவைகள் நடைபெறும். ஆனால், வழக்காறுகளை உடனடியாகத் தோற்றுவிக்கவும், மாற்ற வும், அழிக்கவும் இயலாது. மேலும், சட்டங்களை நீதிமன்றங்கள் ஏற்கின்றன. ஆனால், வழக்கங்களையோ வழக்காறுகளையோ, நீதி மன்றங்கள் ஏற்றுச் செயல்படுத்துவதில்லை. ஆனால், வழக்காறுகள் சட்டமாக இயற்றப்படலாம். சட்டம் நிலையுடையன. வழக் காறுகள் மாறிக்கொண்டேயிருக்கும் தன்மையன.

பொதுச்சட்டத்திற்கும் (Common Law) வழக்காற்றுக்கும் வேறுபாடுகள் உள்ளன. பொதுச்சட்டத்தை நீதிமன்றங்கள் ஏற் றுச் செயல்படுத்துகின்றன. ஆனால் வழக்காறுகளை ஏற்றுச் செயல் படுத்துவதில்லை. பொதுச்சட்டம் நீதிமன்றத் தீர்ப்புகளினால் தோன்றியதாகும். வழக்காறுகள் நாட்டில் நிலவும் வழக்கங்களின் அடிப்படையில் தோன்றியனவாகும். பொதுசட்டமும் வழக்காறு களும் சட்டமன்றத்தின் வழித் தோன்றியனவல்ல.

[14] Ivor Jennings : 'The Constitutions must be worked by men and a spirit of co-operation is necessary to work it.'

**வழக்காறுகளின் ஆற்றலதிகாரம்**

வழக்காறுகள் ஏன் மதிக்கப்படுகின்றன? வழக்காறுகளுக்கான ஆற்றலதிகாரங்கள் (Sanctions behind the Conventions) எவை எவை என்பதைக் காண வேண்டும். பாராளுமன்றத்தின் நம்பிக்கையை இழந்த அமைச்சரவை தொடர்ந்து நீடிப்பது அரசியலமைப்பிற்கு முரணானது ஆகும். ஆனால், இதற்காக எந்த நீதிமன்றத்திலும் வழக்காட முடியாது. பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட சட்ட முன்படிவம் ஒன்றிற்கு அரசியார் ஒப்புதல் அளிக்க மறுத்தால் அது மரபிற்கு முரணானது. ஆனல், சட்டத்திற்கு முரணானது அல்ல. இதே போலப் பாராளுமன்றம் ஓராண்டிற்கு மேல் கூட்டப்படாமலிருந்தாலும் நீதிமன்றங்கள் தலையிடாது. நீதிமன்றங்களுக்குச் செல்ல முடியாது. இவை மரபுகளுக்கு முரணாக இருந்தாலும் சட்டங்களுக்கு முரணானவையல்ல.

வழக்காறுகள் அறநெறியை ஒட்டி அமைந்துள்ளதாலும், வழக்காறுகளை மக்கள் போற்றிப் பாதுகாப்பதாலும், இவைகள் சட்டங்களைப் போலவே மதிக்கப்படுகின்றன. தலைமை அமைச்சரோ, மற்ற அமைச்சர்களோ பொதுமக்களின் ஆதரவு பெற்றுள்ள வழக்காறுகளைப் புறக்கணித்தால் பொதுமக்களின் கருத்து அமைச்சர்களுக்கு எதிராக உருவாகும். அடுத்து வரும் தேர்தலில் மக்களை அணுகும்போது மரபைப் புறக்கணித்ததன் பயனை அடைவார்கள்.

பேராசிரியர் டெய்சி(Dicey) தமது 'அரசியலமைப்புச் சட்டத்திற்கு ஓர் அறிமுகம்' என்னும் நூலில் வழக்காறுகள் ஏன் மதிக்கப்படுகின்றன என்பதற்கும், ஏன் பின்பற்றப்படுகின்றன என்பதற்கும் விளக்கம் கூறியுள்ளார். ஓராண்டிற்கு ஒரு முறையாவது பாராளுமன்றம் கூட்டப்படவேண்டுமென்பது மரபாகும். ஆனல், பாராளுமன்றம் கூட்டப்படாவிடில் சட்டப்படியான நேர்முக நடவடிக்கை ஏதும் எடுக்க இயலாது. ஆனல், மறைமுகமான விளைவுகள் தோன்றும். பாராளுமன்றம் கூட்டப்படாவிட்டால் வரி விதிக்க இயலாது. ராணுவச் சட்டம் இயற்ற முடியாது. வரி வசூல் செய்வதும், ராணுவத்திற்குச் செலவிடுவதும் சட்ட விரோதமான செயல்களாகிவிடும். அரசாங்கம் வரி வசூல் செய்தால் குடிமக்கள் நீதிமன்றங்களில் வழக்குத் தொடரலாம். பாராளுமன்றம் கூட்டப்படாமல் மரபை மீறியதன் விளைவு மறைமுகமாகச் சட்டத்தை மீறியதாக மாறுகிறது. எனவே, வழக்காறுகள் நன்கு மதிக்கப்பட்டுப் பின்பற்றப்படுகின்றன.[15]

[15] A. V. Dicey: 'Conventions are rules for determining the mode in which the discretionary powers of the Crown ought to be exercised'

ஆட்சியில் அமைந்துள்ள அரசியல் கட்சி மக்கள் மதிக்கும் வழக்காறுகளை மதிக்காவிடில் பொதுமக்களின் நம்பிக்கையை இழக்க நேரிடும். மக்களின் நம்பிக்கையை இழந்த எந்த அரசாங்கமும் அமைதியாகவும், திறமையாகவும், மக்களின் ஒத்துழைப் போடும் நடைபெறுது. எனவே, வழக்காறுகள் மதிக்கப்படுகின்றன; பின்பற்றப்படுகின்றன.

டெய்சியின் (A. V. Dicey) கூற்றுப்படி, வழக்காறுகள் பின்பற்றப்படுவதற்குப் பல காரணங்கள் உள்ளன.

1. அரசியலமைப்பை ஒட்டி அரசாங்கத்தை நடத்த வேண்டுமென்ற விருப்பம்.

2. அரசாங்கத்தை இயங்கும் நிலையில் வைத்திருக்க வேண்டுமென்ற எண்ணம்.

3. பொதுமக்களின் நம்பிக்கையை இழக்கக் கூடாது என்ற அச்சமும் விழிப்பும்.

4. அரசாங்க அதிகாரத்தை ஆளும் கட்சி தொடர்ந்து தன் வசம் வைத்திருக்க வேண்டுமென்ற ஆவல்.

இவைகளே வழக்காறுகளுக்கு ஆற்றலதிகாரங்களாகவும், வழக்காறுகள் பின்பற்றப்படுவதற்குக் காரணங்களாகவும் அமைகின்றன.

## அரசியலமைப்புகளில் காணும் முக்கிய வழக்காறுகள்

### இங்கிலாந்தின் முக்கிய வழக்காறுகள்

பாராளுமன்றத்தில் பெரும்பான்மையுடைய கட்சியினர் ஆட்சியை அமைப்பார்கள். பெரும்பான்மைக் கட்சியின் தலைவரைத் தலைமையமைச்சராக அரசியார் நியமிப்பார். இதர அமைச்சர்களை தலைமையமைச்சர் தேர்ந்து எடுப்பார். அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதில் தலைமை அமைச்சருக்குப் பூரண சுதந்திரம் உண்டு.

பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் நிறைவேறிய சட்ட முன்படிவங்களுக்கு அரசியார் ஒப்புதல் அளிக்க வேண்டும்.

பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்கு உரியவர்களாக இருக்கும் வரையில்தான் அமைச்சரவை பதவியிலிருக்கலாம். பாராளு

மன்றத்தின் நம்பிக்கையை இழந்தால் அமைச்சரவை தனது பதவியைத் துறக்க வேண்டும்.

அமைச்சரவை பாராளுமன்றத்திற்குக் கூட்டுப் பொறுப்பு உடையது. ஓர் அமைச்சர் நம்பிக்கையை இழந்தாலும் அமைச்சரவை முழுவதும் பதவித்துறவு கொள்ளவேண்டும். மார்லிப் பிரபுவின் (Lord Morley) கூற்றுப்படி, பாராளுமன்றத்தின் முன்பும், அரசியின் முன்பும் அமைச்சரவை ஒரு தனி மனிதன் போலவே கருதப்படும்.

பாராளுமன்றம் ஆண்டிற்கு ஒரு முறையாவது கூட்டப்பட வேண்டும். பாராளுமன்றம் ஓராண்டிற்கு மேல் கூட்டப்படாமலிருக்கக் கூடாது.

சட்ட முன்படிவங்கள் பாராளுமன்றத்தின் சபைகளில் மும்முறை வாசிக்கப்பட வேண்டும். அதன் பிறகே அவைகள் நிறைவேற்றப்பட்டு அரசியாரின் ஒப்புதலுக்கு அனுப்பப்படும்.

இங்கிலாந்தில் குழு நியமனத்திற்கான அனைத்து விதிகளும் வழக்காறுகளின் வழித் தோன்றியனவாகும்.

மக்கள்மன்ற அவைத்தலைவர் ஆரம்பத்தில் ஓர் அரசியல் கட்சியைச் சார்ந்தவராக இருந்தாலும் தலைவராகப் பதவி ஏற்றவுடன் கட்சி சார்பின்றி நடுநிலையாளராக வேண்டும். பாராளுமன்றத்திற்கான பொதுத்தேர்தலில் இவர் போட்டியிடாமலேயே மறு முறை தேர்ந்தெடுக்கப்படுவார். எத்தனை முறை வேண்டுமானாலும் அவைத்தலைவராகப் பதவி வகிக்கலாம்.

இங்கிலாந்தில் அரசியலமைப்பு எழுதப்படாமல் இருப்பதால் வழக்கங்களுக்கும் வழக்காறுகளுக்கும் ஏராளமான வாய்ப்புகள் அளிக்கப்பட்டுள்ளன.

### அமெரிக்க ஐக்கிய நாடுகளில் வழக்காறுகள்

எழுதப்பட்ட அரசியலமைப்பினை உடைய அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் வழக்காறுகள் தோன்றியுள்ளன. நீண்ட காலங்களுக்கு முன் தோன்றிய பழமையான அரசுகளில் வழக்காறுகள் தோன்றுதல் இயல்பேயாகும். இவ்வழக்காறுகள் அரசியலமைப்பின் வாசகத்தைப் பயனற்றதாக்கிவிட்டுச் செல்வாக்குப் பெற்று அரசியலமைப்பை மாற்றியுள்ளன என்று வியர் (Wheare) கருது

கிருர்.[16] அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நிலவும் அரசியலமைப்பின் வழக்காறுகளேக் காணலாம்.

முன்பே கூறியபடி அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசு தலேவர் மறைமுகமாகத் தேர்வாளர் குழுவால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் பிரதிநிதிகளின் சபைக்கும் செனட்சபைக்கும் தேர்ந்தெடுக்கப்பட்ட அளவு அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு தேர்வாளர் குழுவிற்கு அனுப்பப்பட வேண்டும். இஃது அமெரிக்காவின் குடியரசு தலேவரையும் உபதலேவரையும் தேர்ந்தெடுக்கும். தேர்வாளர் குழுவும், மறைமுகத் தேர்தல் முறையும் அரசியலமைப்பின் பயனற்ற வாசகமாகிவிட்டன. ஏனெனில், தேர்வாளர் குழு குடியரசு தலேவரைத் தேர்ந்தெடுக்க வாக்களிப்பது தெரிந்த முடிவிற்கு வாக்களிப்பதாக அமைகிறது.

அமெரிக்க அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் அரசியல் கட்சிகள் விரும்பத்தகாதவை என ஒதுக்கினர். ஆனுல், நடைமுறையில் அரசியல் கட்சிகள் தோன்றின. அலெக்ஸாண்டர் ஹேமில்டன் (Alexander Hamilton) கூட்டாட்சி அரசாங்கத்தை ஆதரிப்பவராகவும், தாமஸ் ஜெபர்சன் (Thomas Jufferson) மாநில சுயாட்சியை ஆதரிப்பவராகவும், அமைந்து இருஅரசியற் பிரிவுகளே தோற்றுவித்தனர். வழக்காறு காரணமாக இன்று அமெரிக்க அரசியலில் கட்சிகள் தவிர்க்க முடியாத நிலேயை அடைந்து விட்டன.

முன்பே கூறியபடி அமெரிக்க அரசியலமைப்பில் அமைச்சர் குழுமுறை கூறப்படவில்லே. ஜார்ஜ்வாஷிங்டன் அரசாங்க விவகாரங்களில் தமக்கு ஆலோசனே கூறுவதற்காக ஒரு குழுவை நியமித்துக்கொண்டார். அவருக்குப் பின் வந்த குடியரசு தலேவர்களும் வாஷிங்டன் முறையைப் பின்பற்றினுர்கள். இந்த வழக்கம் நாளடைவில் வழக்காருக மாறி இன்று அமைச்சரவை அமெரிக்க அரசியலில் தவிர்க்க முடியாத ஒன்ருகிவிட்டது.

ஜார்ஜ்வாஷிங்டன் குடியரசு தலேவராக இருந்த காலத்தில் குடியரசு தலேவர் பதவிக்கு ஒருவர் எத்தனே முறை வேண்டுமானுலும் போட்டியிடலாம். அரசியலமைப்பில் இதற்கு வரையறை விதிக்கப்படவில்லே. ஆனுல், வாஷிங்டன் இரு முறைக்கு மேல்

[16] Wheare : 'By usage and convention, the law of a constitution strictly so called, is supplemented by a whole collection of rules which, though not part of the law, are accepted as binding and which regulate political institutions in a country and clearly form a part of the system of government.'

குடியரசு தலைவர் பதவிக்குப் போட்டியிட மறுத்துவிட்டார். இவருக்குப் பின்வந்த குடியரசு தலைவர்களும் பதவிக்கு இரு முறைக்கு மேல் போட்டியிடாது ஒரு மரபைத் தோற்றுவித்தனர். ஆனால், ரூஸ்வெல்ட் (Roosevelt) இரண்டாம் உலகப் பெரும் போரின்போது இம்மரபை முறித்தெறிந்து குடியரசு தலைவர் பதவிக்கு நான்கு முறை போட்டியிட்டு வெற்றி பெற்றார். இவருக்குப் பின் யாரும் இருமுறைக்கு மேல் போட்டியிடுவதைத் தவிர்த்து ஜார்ஜ்வாஷிங்டன் தோற்றுவித்த வழக்காறு 1951ஆம் ஆண்டில் இருபத்தி இரண்டாவது அரசியலமைப்புத் திருத்தத்தின்படி சட்டமாக்கப்பட்டது.

குடியரசு தலைவர் பதவி எதிர்பாராதவிதமாகக் காலியானால் உபதலைவர் குடியரசு தலைவர் பதவியை அடைவது வழக்காறாக இருந்தது. இந்த வழக்காறு அமெரிக்க அரசியலமைப்பின் இருபத்தைந்தாவது திருத்தத்தின்படி சட்டமாக்கப்பட்டது. தலைவர் ஜான்கென்னடி கொலைசெய்யப்பட்டவுடன் உப தலைவர் லிண்டன் ஜான்ஸன் தலைவரானார். குடியரசு தலைவர் நிக்ஸன் பதவித்துறவு மேற்கொண்டவுடன் உபதலைவர் போர்டு குடியரசு தலைவர் ஆனார்.

சட்டமன்றக் குழு முறை பற்றியும், பிரதிநிதிகள் சபையின் உறுப்பினர்களின் பிறப்பிடமும் இருப்பிடமும் பற்றியும், குழுத் தலைவர்களின் முன்னுரிமை பற்றியும் வழக்கங்கள் பின்பற்றப்பட்டு வழக்காறுகள் தோன்றியுள்ளன. எனவே, எழுதப்பட்ட அரசிய லமைப்புடைய அமெரிக்காவிலும் வழக்காறுகள் எழுதப்படாத அரசியலமைப்புடைய இங்கிலாந்தைப் போன்றே ஏராளமாகத் தோன்றியுள்ளன.

**இந்தியாவில் வழக்கங்களும் வழக்காறுகளும்**

வழக்கங்களும் வழக்காறுகளும் பொதுவாக நீண்ட காலமாக நடைமுறையிலிருக்கும் அரசியலமைப்புகளில்தான் அதிகமாக இருக்கும். புதிதாக அமைக்கப்பட்ட அரசியலமைப்புகளில் வழக்கங்களும் வழக்காறுகளும் தோன்றுவதற்கு நாளாகும். மேலும், பழமையைப் போற்றிப் பின்பற்றும் நாடுகளில் வழக்கங்களும் வழக்காறுகளும் தொடர்ந்து மதிக்கப்படும். புதுமையை விரும்பும் நாடுகளில் வழக்கங்களும் வழக்காறுகளும் புரட்சியால் அழிக்கப் பட்டுப் புதிய நிறுவனங்களே தோன்றும்.

பழமையை மதிக்கும் பண்பாடு இந்தியாவிலிருந்தாலும் பின்பற்றப்படும்படியான மரபுகள் இந்தியாவில் தோற்றுவிக்கப்

படவில்லை. ஏனெனில், இந்தியா அயலாரின் ஆட்சியில் நெடுங் காலம் இருந்தது. மேலும், இந்திய அரசியலமைப்புச் சமீப காலத்தில் தோன்றியதாகும்.

இருப்பினும், இந்திய அரசியலமைப்பிலும் சில மரபுகள் பின் பற்றப்படுகின்றன. நமது அரசியலமைப்பின்படி அமைச்சர்களின் ஆலோசனையின் பேரில் குடியரசு தலைவர் செயலாற்ற வேண்டும். ஆனால், அமைச்சர்களின் ஆலோசனைக்குப் புறம்பாகச் செயலாற்று வதை அரசியலமைப்புத் தடுப்பதில்லை. இந்தியாவின் நிர்வாக அதிகாரங்கள் அனைத்தும் குடியரசு தலைவரிடமேயுள்ளன. இருந் தாலும் அமைச்சர்களின் ஆலோசனையைப் பின்பற்றுவது இந்திய அரசியலமைப்பிலும் வழக்காறுகிவிட்டது.

பாராளுமன்றத்தின் நம்பிக்கையை இழந்த அமைச்சரவை பதவியைத் துறக்க வேண்டுமெனும் இங்கிலாந்துப் பாராளு மன்றத்தின் மரபை நாமும் பின்பற்றுகிறோம். ஒரு குடியரசு தலைவர் இரு முறைக்குமேல் பதவிக்குப் போட்டியிடாதது மரபாக அமைந்துவருகிறது. இந்தியாவில் நல்ல மரபுகள் தோன்று வதற்கும், அவைகள் நிரந்தரமாக அரசியலமைப்பில் இடம் பெறு வதற்கும் எதிர்காலமே சான்று பகரும்.

## வழக்காறுகளின் முக்கியத்துவமும் பயன்களும்

வழக்கங்களும் வழக்காறுகளும் பெரும் பயன்களை உடையன வாக இருக்கின்றன. (1) வழக்காறுகளின் காரணமாக அரசிய லமைப்பின் விதிகள் செயலற்றதாக்கப்படுகின்றன. இவ்விதி களின் இடத்தில் வழக்காறுகள் கையாளப்படுகின்றன. (2) வழக் காறுகளின் காரணமாக அரசியலமைப்பு முறியாமல் புதிய மாறுதல் களுக்கேற்ப வளைந்து கொடுத்து மாறுகிறது. (3) வழக்காறுகளின் காரணமாக அரசியலமைப்பில் கூறப்பட்ட அதிகாரங்கள் ஒருவரிட மிருந்து மற்றவருக்கு மாற்றப்படுகிறது. (4) வழக்காறுகளின் காரணமாக அரசியலமைப்புகள் நன்முறையில் செயல்படுகின்றன. (5) வழக்காறுகள் அரசியலமைப்பின் இடைவெளிகளை நிரப்புவன வாக அமைகின்றன.

### அரசியலமைப்பின் விதிகள் மாற்றப்படுதல்

வழக்காறுகளின் காரணமாக அரசியலமைப்பின் விதிகள் மாற்றப்பட்டுச் செயலற்றதாக்கப்படுகின்றன. அரசியலமைப்பின் விதிகளில் நிருவாகத் தலைவர்களுக்குத் தன்யுக்தி அதிகாரங்கள் (Discretionary Powers) வழங்கப்பட்டுள்ளன. ஆனால், இவர்கள்

தன்யுக்தி அதிகாரங்களைப் பயன்படுத்தாமல் வழக்காறுகளையே பின்பற்றுகின்றனர். இங்கிலாந்து அரசியார் அமைச்சர்களை நியமிப்பதில் தன் விருப்பு வெறுப்புகளுக்கு இடங்கொடாமல் பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியின் தலைவரைத் தலைமை அமைச்சராக நியமித்து, இவரது ஆலோசனையின் பேரில் மற்ற அமைச்சர்களையும் நியமிக்கிருர். இந்தியா, பிரான்சு, கனடா ஆகிய நாடுகளின் நிருவாகத் தலைவர்கள் பாராளுமன்றம் நிறை வேற்றிய சட்டங்களை மறுப்பாணை அதிகாரத்தைப் பயன்படுத்தி ஏற்க மறுக்கலாம். ஆனால், வழக்காறுகளின் காரணமாக நிருவாகத் தலைவர்கள் இதைச் செய்வதில்லை. இந்த மறுப்பாணை அதிகாரம் வழக்கொழிந்துவிட்டன. இவற்றின் இடத்தில் வழக் காறுகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. குடியரசு தலைவர் பதவிக்கு இருமுறை மட்டுமே போட்டியிடும் வழக்கம் தலைவர் ஜார்ஜ் வாஷிங்டனால் ஏற்படுத்தப்பட்டது. இவ்வழக்கம் வழக்காருகிப் பின் 1951-ல் சட்டமாக்கப்பட்டதை நாம் அறிவோம்.

### வழக்காறுகள் அரசியலமைப்பை முறிக்காமல் வளர்க்கின்றன

மாறுபாடுகள் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. ஆனால், அரசியலமைப்புச் சட்டங்கள் மாறுவதில்லை. இதனால் அரசிய லமைப்பு முறிந்துவிட நேரிடும். இந்தப் பேராபத்து வழக்காறு களால் தடுக்கப்படுகிறது. மாறும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப வழக் காறுகள் தோன்றிப் பின்பற்றப்படுகின்றன. உலகெங்கிலும் குடியாட்சி நிலவும் இக்காலத்தில் இங்கிலாந்தில் முடியாட்சி நிலவுகிறதென்ருலும், அந்த அரசியலமைப்பு முறிவுபடாமல் இருக் கிறதென்ருலும் அவைகளுக்கு வழக்காறுகள்தாம் காரணமாகும். குடியாட்சிகளின் தேவைகளுக்கு ஏற்ப முடியாட்சி நிறுவனங்கள் வழக்காறுகளின் காரணமாக வளர்ந்துகொடுத்துள்ளன. மக்களின் இறைமை முடியாட்சியிலும் மதிக்கப்படுகிறது.

### அதிகார மாற்றங்கள்

அரசியலமைப்பின் அதிகாரங்கள் வழக்காறுகளின் காரணமாக ஒரு நிறுவனத்திடமிருந்து மற்றொரு நிறுவனத்திற்கு மாற்றப்படுகிறது. அமெரிக்கக் குடியரசுதலைவர் மாநிலங்களின் உயர் அலுவலர்களை நியமிக்கும் அதிகாரமுடையவர். இருப்பினும் தம் கட்சியைச் சார்ந்த சம்பந்தப்பட்ட மாநில செனட் பிரதிநிதி களைக் கலந்தாலோசிக்கிருர். அமைச்சர்களை நியமிக்கும் அதிகாரம் இங்கிலாந்து அரசியாரிடமிருந்தாலும் தலைமை அமைச்சரின் ஆலோசனையின்படிதான் அமைச்சர்கள் நியமிக்கப்படுகின்றனர். தேர்வாளர்குழு அமெரிக்கக் குடியரசு தலைவரைத் தேர்ந் தெடுப்பினும் அரசியல் கட்சிகளின் ஆதிக்கம் நிலவுகிறது.

**சமூக நடைமுறை**

தங்குதடையின்றி ஆட்சி சுமுகமாக நடைபெற வழக்காறுகள் பெரும் பயனுடையனவாக அமைந்துள்ளன. பாராளுமன்ற முறை அரசில் பாராளுமன்றத்திற்கும், நிருவாகத்திற்கும் இணைப்புச் சங்கிலியாக அமைச்சரவை அமைந்துள்ளது. இந்த அமைப்பே வழக்காற்றின் விளைவாகும். அமைச்சரவை முறையில் நிருவாகத் திற்கும் பாராளுமன்றத்திற்கும் இடையே முரண்பாடுகள் தோன்றுவது தடுக்கப்படுவது மட்டுமல்லாமல் இணக்கமும் தோற்று விக்கப்பட்டுள்ளது. இதேபோல வழக்காறுகள் டொமினியன் அரசுகளுக்கும் பொதுநல அரசிற்கும் இடையே சுமுகமான உறவை ஏற்படுத்தி உள்ளன. பொதுநல அரசில் உறுப்பினராக இருப்பதால் டொமினியன்கள் தங்கள் சுயேச்சையை இழந்து விடுவதில்லை. அதே நேரத்தில் பொதுக்கூட்டினால் விளையும் நற்பயன்களையும் அனுபவிக்கின்றனர்.

**இடைவெளியைப் பூர்த்திசெய்தல்**

அரசியலமைப்பில் சொல்லப்படா விதிகளை வழக்காறுகள் வகுக்கின்றன. அரசியலமைப்பில் அமைச்சரவைபற்றிக் குறிப் பிடப்பட்டிருந்தாலும் மாநிலங்களுக்கு அளிக்கப்பட வேண்டிய பிரதிநிதித்துவம் பற்றிக் கூறப்படாமல் உள்ளது. ஆஸ்திரேலி யாவில் கூட்டாட்சி அமைச்சரவையில் ஆறு மாநிலங்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்படுகின்றன. சுவிட்ஸர்லாந்தின் அமைச்சரவையில் ஐந்து உறுப்பினர்கள் ஜெர்மன் மொழி பேசும் மாநிலங்களிலிருந்து எடுக்கப்படுகின்றனர். இந்தியாவின் அமைச் சரவையிலும், மாநிலங்களுக்கும் சிறுபான்மையினருக்கும் பிரதி நிதித்துவம் அளிக்கும் மரபு தோன்றியுள்ளது. இதேபோல சபாநாயகரைப் பற்றி அரசியலமைப்புகள் குறிப்பிட்டாலும் அவரது தேர்தல் முறையும் அதிகாரங்களும் அரசியலமைப்பில் கூறப்படாத நிலைஆணைகளால் (Standing Order) தீர்மானிக்கப் படுகின்றன. இந்நிலைஆணைகள் அரசியலமைப்பில் காணப்படும் இடைவெளிகளை நிரப்புவனவாகவும், மதிக்கப்படும் வழக்காறு களாகவும் அமைகின்றன. ஒரு முறை ஃபிரஞ்சு மொழி பேசுபவர் கனடா பாராளுமன்றத்தின் சபாநாயகராக இருந்தால் அடுத்து வரும் முறையில் ஆங்கிலம் பேசுபவருக்கு இப்பதவி அளிக்கப்படு கிறது. அமெரிக்காவின் பிரதிநிதிகள் சபையின் சபாநாயகர் பெரும்பான்மைக் கட்சியின் தலைவராகச் செயலாற்றிச் சட்டமுன் படிவங்களை வகுப்பதிலும், முன்மொழிவதிலும் பெரும் பங்கு கொள் கிறார். இவைகள் அரசியலமைப்பில் கூறப்படாதனவாகவும், வழக்காறுகளின் வழியாகத் தோன்றியனவாகவும் இருக்கின்றன.

வழக்காறுகள் சிறுபான்மையினரது உரிமைகளைக் காப்பன வாக அமைகின்றன. பாராளுமன்றத்தின் இருஅவைகளிடையே நிலவ வேண்டிய உறவு முறையை வகுக்கின்றன. பாராளுமன்றத் திற்கும் நிருவாகத்திற்குமுள்ள தொடர்பைச் சீர்படுத்துகின்றன. அரசியல் கட்சிகளுக்கும் அரசாங்க நிறுவனங்களுக்குமிடையே இணக்கமான ஒரு முறையைத் தோற்றுவிக்கின்றன. தேவை களுக்கேற்ப அரசியலமைப்புகளை நெகிழும் தன்மையுடையன வாக்கி மாறும் சூழ்நிலைகளுக்குப் பொருத்தமடையச் செய்கின்றன. எனவே, ஒவ்வொரு நாட்டிலும் அரசியலமைப்பில் நல்ல வழக் காறுகள் தோற்றுவிக்கப்பட்டு அவைகள் எழுதப்படாத சட்டங்கள் போலப் பின்பற்றப்படுகின்றன.

## முக்கிய வினாக்கள்

1. ஓர் அரசியலமைப்பைச் செயலாக்கும்போது அரசியல் மரபுகளும் வழக்கங்களும் முக்கியமாகப் பயன்படுத்தப் படுவதை ஆராய்ந்துரைக்கவும். (ம. ப. க. ஏப்ரல், 1969)
2. ஒரு நாட்டின் அரசியலமைப்பென்றால் என்ன? அரசியல் மரபுகளும் வழக்கங்களும் அரசியல் சட்டத்தின் வளர்ச் சிக்கு எவ்வாறு உதவுகின்றனவென்பதை விளக்கவும். (ம. ப. க. ஏப்ரல், 1970)
3. மரபுகள், வழக்கங்கள் என்பவை யாவை? அவைகள் அரசியலமைப்பில் எந்த அளவிற்கு இடம் பெற்றுள்ளன? (செ. ப. க. ஏப்ரல், 1970)
4. அரசியல் சட்ட மரபுகள் — குறிப்பு வரைக. (செ. ப.க. ஏப்ரல், 1973)
5. வழக்காறுகளின் முக்கியத்துவமும் பயன்களும் யாவை? எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.
6. இங்கிலாந்து, அமெரிக்கா, இந்தியா ஆகிய அரசுகளின் அமைப்பில் காணப்படும் வழக்காறுகளைக் கூறி விளக்குக.

# 7. அரசியலமைப்புகளின் பாகுபாடு
(Classification of Constitutions)

## அ. பண்டையப் பாகுபாடு
(Classical Classification)

[அரசாங்கத்தின் பாகுபாடு.

**அரிஸ்ட்டாட்டிலின் பாகுபாடு :** பாகுபாட்டுக் கோட்பாடு — பாகுபாடுகள் — பாகுபாட்டு அட்டவணை — அரிஸ்ட்டாட்டிலின் புரட்சிச் சுழல் — அரிஸ்ட்டாட்டில் பாகுபாட்டின் நிறைகள் — அரிஸ்ட்டாட்டில் பாகுபாட்டின் குறைகள்.

**வேறு சில வழக்கொழிந்த பாகுபாடுகள் :** போலிபியஸ் பாகுபாடு — ஹாப்ஸ் பாகுபாடு — லாக் பாகுபாடு — மாண்டஸ்க்யூ பாகுபாடு — ரூஸோ பாகுபாடு — கான்ட் பாகுபாடு — பிளன்ட்ஷிலி பாகுபாடு — வான்மோல் பாகுபாடு — பாகுபாட்டின் குறைகள்.]

அரசியலமைப்புகளைப் பாகுபாடு செய்வதால் பல்வேறு விதமான அரசியலமைப்புகளையும், அவைகளிடையே நிலவும் வேற்றுமைகளையும் அறியலாம். அரசாங்கங்களின் ஒற்றுமை அமைப்பு, அவைகளின் நிறுவனங்கள், அவ்வரசாங்கமும் நிறுவனமும் செயலாற்றிய விதங்கள் ஆகியவற்றையும், அரசியலமைப்புகளைப் பகுப்பதிலிருந்து நாம் அறிய ஏதுவாகும். மேலும், அரசாங்கங்களின் அடிப்படைகளாக அமைந்திருந்த அரசியல் சமுதாயக் கோட்பாடுகளையும் நாம் உணர முடியும். எனவே, அரசியலமைப்புகளைப் பாகுபடுத்தி அறிவதில் மிகுந்த பயன் காணப்படுகிறது.

### அரசாங்கத்தின் பாகுபாடு

அரசியலமைப்புகளைப் பாகுபடுத்தி அறிதல் என்பது அரசாங்கத்தையும், அதன் நிறுவனங்களையும், அவைகளின் அமைப்புகளையும், செயல்முறைகளையும் பாகுபடுத்தி அறிதலாகும்.

நாட்டைப் பாகுபடுத்தி வகைப்படுத்தல் அன்று என்பதை நன்கு உணர வேண்டும். நாடு என்ற ஸ்தாபனம் உலகம் முழுவதிலும் ஒரே மாதிரியாக இருக்கக் கூடியதாகும். வேறுபாடுகள் உடையதோ அல்லது வேறுபடுத்தக்கூடியதோ அல்ல. நாடு என்று கூறும் போது அதற்கு ஆட்சிநிலம், மக்கள்தொகை, அரசாங்கம், இறைமை என்ற நான்கு கூறுபாடுகள் உண்டு. இந்த நான்கு கூறுபாடுகள் உலகில் நிலவும் எல்லா நாடுகளிலும் உண்டு. எனவே, உலகெங்கிலும் ஒரு தன்மையானதும், ஒருமைப்பாடுடையதுமான நாடுகளிடையே வேறுபாடு காண முயல்வது தவருன முயற்சியாகும். சில அரசியல் வல்லுனர்களும் நாட்டிற்கும் அரசாங்கத்திற்கும் வேறுபாடு காணுது அரசாங்கங்களை வேறுபடுத்திப் பகுத்தலுக்குப் பதிலாக நாடுகளைப் பகுக்க முயல்கின்றனர்.

அரசுகள் வேறுபாடு உடையன. பகுக்கப்படக் கூடியன. அரசியலமைப்புகளிலே வேறுபாடுகளும், அரசு நிறுவனங்களிடையே வேறுபாடுகளும், நிருவாகமுறைகளில் வேறுபாடுகளும், அரசின் அடிப்படைக் கொள்கைகளில் வேறுபாடுகளும் உண்டு. மேலும், அரசுகள் காலத்திற்குக் காலமும், இடத்திற்கு இடமும் வேறுபடும். ஆனல், நாடு எக்காலத்தும் எவ்விடத்தும் ஒரே தன்மையானது.

சில வேளைகளில் நாடு அதன் ஆட்சிநிலங்களின் அடிப்படையிலும், மக்கள்தொகையின் அடிப்படையிலும் பகுக்கப்படுகின்றது. நாடுகளிடையே ஆட்சிநிலத்தின் அடிப்படையில் வேறுபாடுகள் இருக்கின்றன. சில நாடுகள் பரந்த விரிந்த ஆட்சிநிலத்தை உடையனவாகவும், சில நாடுகள் குறைந்த ஆட்சிநிலத்தை உடையனவாகவும் இருக்கலாம். அதே போல மக்கள்தொகையிலும் நாடுகளிடையே வேறுபாடுகளிருக்கலாம். சில நாடுகள் நிறைந்த மக்கள்தொகையை உடையனவாகவும், சில நாடுகள் நடுத்தர அளவு மக்கள்தொகையை உடையனவாகவும், சில குறைந்த மக்கள்தொகையை உடையனவாகவும் இருக்கலாம். ஆனல், ஆட்சிநிலத்தின் அடிப்படையிலோ மக்கள்தொகையின் அடிப்படையிலோ நாடு பகுக்கப்படக் கூடாது. உலகநாடு, தேசியநாடு, நகரநாடு என்ற பகுப்புகள் ஆட்சிநிலத்தின் அடிப்படையில் செய்யப்படுவனவாகும். ஆனல், ஆட்சிநிலத்தின் அளவோ, மக்கள்தொகையின் அளவோ நாட்டின் தன்மையை மாற்ருது. எனவே, எந்த அடிப்படையிலும் நாட்டைப் பகுப்பது விரும்பத்தகாததும், இயலாததும் ஆகும்.

பேராசிரியர் கார்னர் கருத்துப்படி, 'பாகுபாட்டை இறுதிப் படுத்திக் கூறின், அரசாங்கங்களின் பாகுபாடு தவிர நாட்டின் பாகுபாடுகள் கிடையா. முறையாகப் பகுத்து 'அரசாங்கப் பகுப்பு' என அட்டை ஒட்ட வேண்டுமென அறிவியல் முறை அறிவுறுத்து கிறது.'[1]

## அரிஸ்ட்டாட்டிலின் பாகுபாடு

அரிஸ்ட்டாட்டிலின் அரசியலமைப்புப் பகுப்பு பழமையானதும் வழக்கொழிந்ததும் ஆகும். இருப்பினும், இவரது அரசியலமைப்பு களின் பாகுபாடு பிளேட்டோவின் பாகுபாட்டைவிடச் சிறந்தது. பிளேட்டோ தமது முதல் நூலில் ஒரு விதமாகவும், இரண்டாவது நூலில் பிறிதொரு விதமாகவும் பாகுபாடு செய்துள்ளார். எனவே, அரிஸ்ட்டாட்டில் செய்துள்ள அரசியலமைப்பின் பாகுபாடே இத் துறையில் முதல் முயற்சி எனலாம்.

### பாகுபாட்டுக் கோட்பாடு

அரிஸ்ட்டாட்டில் அரசியலமைப்புகளைப் பாகுபாடு செய்வதில் இரு கொள்கைகளைக் கையாண்டுள்ளார். இக்கொள்கைகளின் அடிப்படையில் அரசியலமைப்புகளை நல்லவையாகிய உண்மை யுடையன என்றும், தீயவையான தவறானவை என்றும் பிரித்துள் ளார். அவர் கையாண்ட கொள்கையானது (1) ஆளுநர்களின் எண்ணிக்கையும், அவர்களது சமுதாய நிலையும் யாவை? அதாவது நாட்டின் இறைமை எத்துணை மனிதர்களிடம் அடங்கியிருக்கிறது? (2) அரசாங்கத்தின் நோக்கமும் குறிக்கோளும் (ends) யாவை? அதாவது, அரசாங்கத்தின் நோக்கமும் குறிக்கோளும் மக்களின் நலம் நாடுதலாயின், அவ்வரசுகள் நல்லவை எனப்படும் உண்மை யானவையாகும். குறிக்கோளும் நோக்கமும் ஆளுநரின் தன் னலத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பின், அவை தீயவை எனப்படும் தவறானவையாகும்.

### பாகுபாடுகள்

அரிஸ்ட்டாட்டில், அரசாங்கமும் அரசின் இறைமையும் ஒரு வரிடம் அடங்கியிருந்தால் அதை ஒருவராட்சி எனவும், சிலரிடம் அடங்கியிருந்தால் அதைச் சிலராட்சி எனவும், இறைமை பல

[1]J. W. Garner: 'In the last analysis a classification is nothing more than a classification of governments and not of states... consistency and scientific logic therefore require that such classification be placed in their proper category and labelled as classifications of 'government' and not of 'states'.

ரிடம் அடங்கியிருந்தால் அதைப் பலராட்சி எனவும் பாகுபடுத்தியுள்ளார்.

ஒருவராட்சி நல்ல ஆட்சியாயின் அதை முடியரசு எனப்படும் முடியாட்சியென்றும், தீய ஆட்சியாயின் அதைக் கொடுங்கோன்மை எனப்படும் வல்லாட்சியென்றும் குறிப்பிடுகின்றார்.

சிலராட்சி நல்ல ஆட்சியாயின் அதை உயர்குடி ஆட்சி என்றும், இது தீய ஆட்சியாயின் சிறு குழுவாட்சியென்றும் குறிப்பிடுகிறார்.

பலராட்சி நல்ல ஆட்சியாயின் அதைப் பாலிட்டியென்றும், இப் பலராட்சி தீய ஆட்சியாயின் அதை மக்களாட்சியென்றும் குறிப்பிட்டுள்ளார். மக்களின் பெரும்பான்மையோரிடத்து ஆட்சி அதிகாரம் அமைந்து அது நல்லாட்சியாக இருப்பின் அவ்வாட்சி பாலிட்டி என அரிஸ்ட்டாட்டில் கூறுகிறார்.

**பாகுபாட்டு அட்டவணை**

அரிஸ்ட்டாட்டிலின் அரசியலமைப்புப் பாகுபாட்டைக் கீழ்க் காணும் பட்டியலில் சுருங்கக் கூறலாம்.

| அரசியலமைப்பு வகை | நல்ல உண்மையான முறை | தீய தவறான முறை |
|---|---|---|
| ஒருவராட்சி | முடியரசு (Monarchy) | கொடுங்கோன்மை (Tyranny) |
| சிலராட்சி | உயர்குடியாட்சி (Aristocracy) | சிறுகுழுவாட்சி (Oligarchy) |
| பலராட்சி | பாலிட்டி (Polity) | மக்களாட்சி (Democracy) |

அரிஸ்ட்டாட்டில் தமது அரசியலமைப்புப் பாகுபாடு முழுமையானது எனக் கருதினர். ஏனெனில், அவர் 158 அரசியலமைப்புகளைக் கற்றுத் தேர்ந்து இப்பாகுபாட்டை வகுத்தவராவார். மேலும், அவர் காலமும், அவர் வாழ்ந்த நகர அரசுகளும் அரிஸ்ட்டாட்டிலுக்கு இந்த முடிவைத் தோற்றுவித்தன.

ஒருவரால் ஆளப்படுவதும் அவரது ஆட்சி மக்களின் நலத்தைக் கருத்திற் கொண்டால் அது நல்லாட்சி யாகும். ஒருவராட்சி நன்னல ஆட்சியாக இருப்பின் அது முடியாட்சியாகும். முடி

யாட்சியை மிகச் சிறந்த ஆட்சியென அரிஸ்ட்டாட்டில் கருதுகிறுர். மேலும், பலரால் ஆளப்படுவதும் மிகச் சீர்கேடாக உள்ளதுமான ஆட்சிக்கு மக்களாட்சியென்று பெயரிட்டுள்ளார்.

**அரிஸ்ட்டாட்டிலின் புரட்சிச்சுழல்** (Cycle of Revolutions)

அரசாங்கங்கள் மாறுதல்களை அடையும். தீயதிலிருந்து நல்லதிற்கும், நல்லதிலிருந்து தீயதிற்கும் மாறிக் கொண்டே செல்லும் என்பதை அரிஸ்ட்டாட்டில் குறிப்பிடுகிறுர். ஒருவரது ஆட்சி நல்லாட்சியாகவும், மக்களின் நலம் நாடும் ஆட்சியாகவும் அமைந்து முடியரசு (Monarchy, Royalty) இருக்கும். இவ்வொருவர் சுயநலமற்றவராகவும், நல்ல குணமும் பண்பும் உடையவராகவும் இருப்பார். இப்பண்புடையார் உலகில் மிகக் குறைந்தவராயிருப்பார். இப்பண்பாளர்களின் மறைவுக்குப் பின் அதே போல பண்பாளரும், சுயநலமற்றவரும், மக்கள் நலம் நாடுபவரும் தோன்றுதலரிது. எனவே, முடியாட்சி சுயநலக்காரனிடமும் பண்பற்றவனிடமும் சென்று வல்லாட்சியாக (Tyranny or Despotism) மாறும். அதிகாரத்தால் இவ்வல்லாட்சி நிலைநிறுத்தப்படும். இக்கொடுங்கோலன் மக்களைத் துன்புறுத்துவான். மக்களின் நலங் கருதாமல் சுயநலத்தையே பெரிதும் கருதுவான். இக்கொடுங்கோன்மையின் காரணமாகப் புரட்சி தோன்றி வல்லாட்சியாளன் வீழ்த்தப்படுவான். இக்கொடுங்கோலன் நேர்மையான சிலரால் நீக்கப்பட்டு வல்லாட்சிக்கு முடிவு கட்டப்படும். இங்கு நல்லாட்சியான முடியாட்சியையும், இம்முடியாட்சி நாளடைவில் தீயாட்சியான வல்லாட்சியானதையும், இவ்வல்லாட்சி நீக்கப்பட்டதையும் காணலாம்.

வல்லாட்சியை நீக்கிய உயர்குடிமக்கள் தங்கள் உயர்குடியாட்சியை (Aristocracy) நிறுவுவர். இவர்கள் மக்களின் நலத்தில் ஆர்வமுள்ளவர்களாகவும், சுயநலமற்றவர்களாகவும் இருப்பர். நாளடைவில் உயர்குடி மக்களும் சுயநலம் கொண்டு மக்களின் நலத்தில் நாட்டம் செலுத்தாது சீர்குலைவர். இவர்களது ஆட்சி அதிகாரத்தாலும் வன்முறையாலும் நடைபெறும். ஆட்சியில் முறைகேடுகளும் ஊழல்களும் மலிந்துவிடும். இந்நிலையில் இவர்களது ஆட்சி சிறுகுழுவாட்சி (Oligarchy) வடிவெடுக்கும். இச்சிறுகுழுவாட்சியின் கொடுமைகளைத் தாங்கவொண்ணு மக்கள் புரட்சி செய்து சிறுகுழுவாட்சியை வீழ்த்திப் பலராட்சியாகிய பாலிட்டியை (Polity) நிறுவுவர். இங்கு நல்லாட்சியான உயர்குடியாட்சி

தீயாட்சியாக மாறிச் சிறுகுழுவாட்சியானதையும், இச் சிறுகுழு வாட்சி மக்களால் நீக்கப்பட்டதையும் அரிஸ்ட்டாட்டில் கூறுகிருர்.

சிறு குழுவாட்சி நீக்கப்பட்டுப் பாலிட்டி ஆகிய பலராட்சி நல்லாட்சியாக அமைக்கப்படும். நாளடைவில் பாலிட்டியாகிய பலராட்சியிலும் வரையறையில்லாச் சுதந்திரமும், அதன் விளை வாகக் குழப்பங்களும் மலிந்துவிடும். மக்களின் நலம் புறக்கணிக்கப் பட்டு நல்லாட்சியான பாலிட்டி தீயாட்சியான குடியாட்சியாக (Democracy) மாறும். இந்நிலையில் சீரிய ஒழுக்கமுள்ள பண்பாளன் ஒருவன் குடியாட்சியை அழித்து ஒருவராட்சியும் நல்லாட்சியுமான முடியாட்சியை நிறுவுவான். இங்குப் பலராட்சியும் நல் லாட்சியுமான பாலிட்டி தீயாட்சியான மக்களாட்சியானதையும், அது நல்லொருவனல் வீழ்த்தப்பட்டு முடியாட்சியானதையும் அரிஸ்டாட்டில் காட்டுகிருர்.

ஒருவராட்சி, சிலராட்சி, பலராட்சி ஒருவராட்சியென மாறு வதையும், முடியாட்சி, வல்லாட்சி, உயர்குடியாட்சி, சிறு குழுவாட்சி, பாலிட்டி, மக்களாட்சி, முடியாட்சியென மாறுவதை யும், நல்லாட்சி தீயாட்சியாவதையும், தீயாட்சி நீக்கப்பட்டு நல் லாட்சி நிறுவப்படுவதையும் அரிஸ்ட்டாட்டில் புரட்சிச் சகடச் சுழற்சி ஆகுமெனக் கருதுகிருர்.

**அரிஸ்டாட்டில் பாகுபாட்டின் நிறைகள்**

அரிஸ்ட்டாட்டில் கூறும் புரட்சியின் சுழற்சியை உலக வரலாறு மெய்ப்பிக்கிறது. அரசாங்கங்கள் தோன்றுவதையும், அவைகள் வீழ்த்தப்படுவதையும் காண்கிறேம். வல்லாட்சிகள் புரட்சியால் நீக்கப்படுவதையும் அறியலாம். அரிஸ்ட்டாட்டில் கூறும் முறை யிலே சுழற்சி இல்லாவிடினும் பிறிதோர் முறையில் சுழற்சி யிருப் பதைக் காணலாம்.

அரிஸ்ட்டாட்டிலின் அரசியலமைப்புப் பாகுபாடு அரசிய லமைப்புகளையும் அரசாங்கங்களையும் பகுப்பதற்கு முறையோடு எடுத்துக்கொண்ட ஆரம்ப கால முயற்சியாகும்.

சி. எப். ஸ்ட்ராங் அவர்களின் கருத்துப்படி, அரிஸ்டாட்டிலின் அரசியலமைப்புப் பகுப்பிலிருந்து நாம் கற்கவேண்டியது நிறைய வுள்ளன. அரசினைப் பாதுகாப்பது குடிமக்களின் நோக்கமாக அமைய வேண்டும். அரசியலமைப்பைப் பாதுகாக்க மக்கள் எதையும் துறக்கத் தயாராக இருக்க வேண்டும். அரசியலமைப் பிற்குப் புறம்பாகச் செய்யப்படும் எச்செயலையும் அனுமதிக்கக்

கூடாது. எக்காலத்தையும்விட இக்காலத்தில் இவைகளை யுணர்வது மிகவும் அவசியமாகிறது.[2]

பலராட்சியாகவும் இருக்கக்கூடிய நல்லாட்சியாகவும் அமைகிற பாலிட்டி என்ற அரசாங்க முறையை அரிஸ்டாட்டில் பொன்னுன இடைநிலையாகக் (Golden Mean) கருதுகிருர். அரசாங்கத்தின் உறுதித் தன்மையையும் நடுத்தர வகுப்பாரின் ஆட்சியின் அவசியத்தையும் பாலிட்டி காட்டுகிறது.

**அரிஸ்டாட்டில் பாகுபாட்டின் குறைகள்**

அரிஸ்டாட்டிலின் அரசியலமைப்புப் பாகுபாடு தற்காலத்திற்குப் பொருத்தமற்றதாக உள்ளது. நல்லாட்சிக்கு அவர் பயன்படுத்திய முடியாட்சி என்ற சொல்லைத் தற்கால நல்லாட்சியாகிய குடியாட்சிக்குப் பயன்படுத்த இயலாது.

தாம் கூறும் அரசியலமைப்புப் பாகுபாடு முழுமையுடையதென அரிஸ்டாட்டில் கருதினுர். ஆனல், தற்கால அரசாங்க முறைகளான ஒன்றிய ஆட்சி, கூட்டாட்சி, பாராளுமன்ற முறையாட்சி, தலைவர் முறையாட்சி என்பனவற்றைக் கூறவில்லை.

அரசையும் அரசாங்கத்தையும் அரிஸ்டாட்டில் வேறுபடுத்த விரும்பவில்லை. இவ்வேறுபாடு தற்காலத்தில் வலியுறுத்தப்படுகிறது. வல்லாட்சியை நீக்குவதற்கும், வல்லாட்சி ஏற்படாவண்ணம் தடுப்பதற்கும் அரசும் அரசாங்கமும் முறையாக வேறுபடுத்தப்பட வேண்டும். அரசாங்கத்தின் இறைமை அதிகாரம் அரசிடமிருந்து பெறப்பட்டதென ஆட்சியாளர் உணர வேண்டும்.

விரிந்து பரந்துள்ள தற்கால அரசுகளுக்கு ஏற்றதோர் அரசியலமைப்பை அரிஸ்டாட்டில் கூறவில்லை. மதத்தாலும், மொழியாலும், இனத்தாலும் வேறுபட்ட மக்கள் வாழும் நாட்டிற்கு ஏற்றதோர் அரசியலமைப்பு அரிஸ்டாட்டிலின் கவனத்தை ஈர்க்கவில்லை.

[2] C. F. Strong : 'It cannot be denied that we have much to learn from this part of Aristotle's teaching. For example, he pointed out with great emphasis that, since the object of all the citizens of a state must necessarily be the safety of thier association, everything must be sacrificed to the maintenance of the constitution which is the basis of that safety, and that any action on the part of any citizen outside the bounds of the constitution should not for a moment be tolerated an argument which has even greater force in a modern democracy than it had in Aristotle's ancient polity.'

தற்கால அரசாங்கங்களில் மக்கள் நேரடியாகப் பங்கு கொள்ள இயலாது. கிரேக்க நகர அரசுகளின் அரசாங்கங்களில் மக்கள் பங்கு கொண்ட விதத்தில் விரிந்து பரந்த ஆட்சி நிலத்தைக் கொண்ட தற்கால நாடுகளின் அரசாங்கத்தில் பங்கு கொள்ள முடியாது. இதை அரிஸ்ட்டாட்டில் கருத்தில் கொள்ளவில்லை

குடியாட்சியின் சிறப்பை அரிஸ்ட்டாட்டில் உணரவில்லை. தற்காலத்தில் மக்களாட்சி சிறந்ததோர் அரசாங்க அமைப்பாகக் கருதப்படுகிறது. ஆனால், அரிஸ்ட்டாட்டில் மக்களாட்சியின் மதிப்பைக் குறைவுபடுத்திக் கூறியுள்ளார்.

இங்கிலாந்தில் நிலவுவது போன்ற முடிசால் குடியரசு அமைப்புகளைப் பற்றி அரிஸ்ட்டாட்டில் கருதினரில்லை. அரசியலமைப்பிற்குட்பட்டதோர் முடியாட்சி இங்கு நிலவுகிறது. இங்கிலாந்து குடியாட்சியின் சிறப்புகளையும் முடியாட்சியின் கூறுபாடுகளையும் கொண்டதோர் முடிசால் குடியரசு அமைப்பாக விளங்குகிறது.

தற்காலத்தில் வல்லாட்சியாகவும், அதே நேரத்தில் மக்களின் பிரதிநிதிகளால் நடத்தப்படுவதுமான கொள்கையாட்சி (Ideacracy) அல்லது சமயச் சார்பு ஆட்சி (Theocracy) போன்றவற்றை அரிஸ்ட்டாட்டில் காணவில்லை.

அரிஸ்ட்டாட்டிலின் அரசாங்கப் பகுப்பு அறமுறை அடிப்படையிலும், அரசாங்கத்தின் தராதரத்தின் அடிப்படையிலும் அமைந்திருக்கிறது. இம்முறையில் தற்கால அரசாங்க அமைப்புகளைப் பாகுபாடு செய்ய இயலாது.

பொதுவாகக் கூறுமிடத்து, அரிஸ்ட்டாட்டிலின் அரசியலமைப்புப் பகுப்புகள் தற்காலத்திற்கு ஒவ்வாதனவாகவும், வழக்கொழிந்தனவாகவும் உள்ளன.

## வேறு சில வழக்கொழிந்த பாகுபாடுகள்

அரிஸ்ட்டாட்டில் வாழ்ந்த காலத்திற்கும் தற்காலத்திற்குமிடையில் தோன்றிய சில அரசியல் வல்லுனர்களின் அரசியலமைப்புப் பாகுபாடுகளை அறிதல் மேலும் பயனுடையதாகும்.

**போலிபியஸ் பாகுபாடு** (Polybius's Classification)

கி.மு. இரண்டாம் நூற்றுண்டில் ரோம் நாட்டில் வாழ்ந்த கிரேக்க அரசியல் வல்லுனர் போலிபியஸ் (Polybius) அரிஸ்ட்டாட்டிலின் அடிப்படையில் அரசாங்கங்களைப் பகுத்துள்ளார்.

இவரது பாகுபாட்டிலும் அறநெறிச்சாரமே அடிப்படையாக அமைந்துள்ளது. ஓர் அரசியலமைப்பை மற்ருேர் அரசியலமைப் பிலிருந்து பகுப்பதில் அரசாங்கத்தின் தராதரத்தையே பெரி தெனக் கருதுகிருர்.

**முடியாட்சியும் வல்லாட்சியும்:** மக்கள் விரும்பி ஏற்றுக் கொள்ளும் ஒருவராட்சி முடியாட்சியாகும். நீதியின் அடிப்படை யில் மக்கள் அரசனுக்கு அடங்கி நடக்கவேண்டுமே ஒழிய, அதிகாரத்தின் அடிப்படையிலோ, அச்சுறுத்தலின் அடிப்படை யிலோ மக்கள் அடங்கி நடக்கக் கூடாது. அதிகாரம், அச் சுறுத்தல் ஆகியவைகளின் காரணமாக மக்கள் பணிந்து நடப்பார் களாயின், அது வல்லாட்சியேயாகும்.

**உயர்குடியாட்சியும் சிறுகுழுவாட்சியும்:** திறமையின் அடிப் படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட நீதியும் நேர்மையும் உடைய உயர்குடி மக்கள் ஆட்சி செய்யின் அது உயர்குடியாட்சியாகும். நீதியும் நேர்மையும் நீங்கினுல் அவ்வாட்சி சிறு குழுவினர் ஆட்சி யாகும்.

**குடியாட்சியும் பாமரக் கும்பலாட்சியும்:** இறைவனின் பெய ரால் மரபுகளுக்கும், பழக்கங்களுக்கும், சட்டதிட்டங்களுக்கும் பணிந்து நடத்தப்படும் ஆட்சியே குடியாட்சியாகும். இவ்வற நெறிகளைக் கடைப்பிடிக்காத ஆட்சி பாமரக் கும்பலாட்சியெனப் படும்.

**ஹாப்ஸ் பாகுபாடு** (Hobbe'ss Classification)

17ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த ஆங்கிலேய அரசியல் வல்லுனர் ஹாப்ஸ் (Hobbes) இறைமை அதிகாரம் அடங்கி யிருப்பதை அடிப்படையாகக் கொண்டு அரசியலமைப்புகளைப் பாகுபாடு செய்துள்ளார். அரிஸ்ட்டாட்டில், போலிபியஸ் ஆகியவர் களின் அறநெறி அடிப்படைகளைக் கையாளவில்லை.

பொதுநல உரிமைக்குழு (Common wealth) அரசின் இறைமை ஒருவரிடம் இருக்குமானுல் அவ்வரசாங்கம் முடியாட்சியெனப்படும். உயர்குடி மக்களிடம் இறைமை இருக்குமானுல் அது உயர்குடி யாட்சியாகும். அரசின் இறைமை மக்கள் அனைவரும் அடங்கிய அவையில் இருக்குமானுல் அது குடியாட்சியாகும். மேலும், முடியாட்சியை விரும்பாதவர்களும் வெறுப்பவர்களும் அதை வல்லாட்சியென்றும், உயர்குடியாட்சியை வெறுப்பவர்கள் அதைச் சிறுகுழுவாட்சியென்றும், குடியாட்சியை ஏற்காதவர்கள் அதை நிலை குலைந்த ஆட்சி (Anarchy) என்றும் கருதுகிருர்கள். ஹாப்ஸ்

தமது அரசாங்கப் பாகுபாட்டில் நல்ல அரசாங்கம், தீய அரசாங்கம் என்றே, உண்மையான அரசாங்கம் அல்லது தவறான அரசாங்கம் என்றே பிரித்து அரசாங்கத்தின் தராதரத்தை மதித்தாரில்லை.

### லாக் பாகுபாடு (Locke's Classification)

17ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த ஆங்கிலேய அரசியல் வல்லுனர் லாக் (Locke) சட்டமியற்றும் அதிகாரம் அடங்கியிருப்பதை அடிப் படையாகக் கொண்டு அரசாங்கத்தைப் பாகுபாடு செய்துள்ளார்.

சட்டமியற்றும் அதிகாரம் பொதுநல உரிமைக் குழுவின் பெரும்பான்மையான மக்களிடமிருக்கும், இம்மக்கள் நியமித்த அலுவலர்கள் சட்டங்களை நடைமுறைப்படுத்துவர். இத்தகைய அரசாங்கம் முழுமையான மக்களாட்சியாகும். இவ்வாட்சியில் சட்டமியற்றும் அதிகாரம் மக்களில் பெரும்பான்மையினரிடம் இருக்கும். பொதுநல உரிமைக்குழுவின் மக்கள் சட்டமியற்றும் அதிகாரத்தைத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிலரிடமோ அல்லது இவர்களின் வாரிசுகளிடமோ ஒப்படைத்தால் அது சிறுகுழுவாட்சி யாகும். இவ்வாட்சியில் சட்டம் இயற்றும் அதிகாரம் சிலரிட மிருக்கும். இந்தச் சட்டமியற்றும் அதிகாரத்தைத் தேர்ந்தெடுக்கப் பட்ட ஒருவரிடமோ அல்லது பரம்பரையாக வரும் ஒருவரிடமோ ஒப்படைத்தால் அது முடியாட்சி ஆகும். இவ்வாட்சியில் சட்டம் இயற்றும் அதிகாரம் ஒருவரிடமிருக்கும். லாக் குடியாட்சி, சிறுகுழுவாட்சி, முடியாட்சி எனச் சட்டம் இயற்றும் அதிகாரத்தை அடிப்படையாகக் கொண்டு அரசாங்கத்தைப் பகுத்துள்ளார்.

### மாண்டஸ்க்யூ பாகுபாடு (Montesquieu's Classification)

18ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த ஃபிரான்சு நாட்டு அறிஞர் மாண் டஸ்க்யூ (Montesquieu) அரசாங்கத்தை மக்களாட்சி, முடியாட்சி, வல்லாட்சி என வகுத்துள்ளார். மக்கள் அனைவரிடமோ, மக்களில் ஒரு பகுதியினரிடமோ இறைமை அதிகாரம் இருப்பின் அது ஜனநாயகம் என்றும், மக்களாட்சி என்றும், உயர்குடியாட்சி என்றும் அழைக்கப்படும். ஜனநாயகத்தில் குடிமக்கள் பண்பாளர் களாக இருப்பர். மக்களாட்சியில் மக்கள் நாட்டுப்பற்று உடைய வர்களாயும், சமத்துவத்தைப் போற்றுபவர்களாகவும் இருப்பர். உயர்குடியாட்சியில் ஆளுநர்கள் மக்களிடம் அனுதாபத்துடன் இருப்பர். மக்களிடையே சமத்துவத்தைப் பேணுவர். உயர்குடி யாட்சி, மக்களாட்சி, ஜனநாயகம் ஆகிய மூன்றையும் மக்களாட்சி நிலையிலேயே மாண்டஸ்க்யூ கருதுகிறார். ஆனால், உயர்குடியாட்சி, மக்களாட்சி, ஜனநாயகம் ஆகிய ஒவ்வொன்றையும் ஒரு கோட் பாட்டின் அடிப்படையிலேயே அமைத்துள்ளார்.

முடியாட்சியில் மன்னரின் மாண்பும், மக்களுக்கு அவர் மீதுள்ள நம்பிக்கையும் முக்கியமாகும். மக்களாட்சியின் பண்பும் முடியாட்சியின் மாண்பும் இல்லாத அரசாங்கம் வல்லாட்சியாகும். வல்லாட்சியில் மக்கள் நசுக்கப்பட்டும் அச்சுறுத்தப்பட்டும் வாழ்வர்.

**ரூஸோ பாகுபாடு** (Rousseau's Classification)

18ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த பிரான்சு நாட்டின் அரசியல் வல்லுனர் ரூஸோ (Rousseau) நேரடிக் குடியாட்சியின் ஆதர வாளர் ஆவார். முடியரசு, உயர்குடியரசு, குடியரசு என முப்பிரிவு களாக அரசாங்கத்தைப் பகுத்துள்ளார். மேலும், இயற்கை யானது, தேர்ந்தெடுக்கப்பட்டது, வழிவழி வருவது என மூன்று பிரிவுகளாக உயர்குடியினரைப் பிரித்துள்ளார். இவைகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட உயர்குடியரசு சிறப்புடையதென்றும், பரம் பரையாக வழிவழி வருவது குறைமிக்கதென்றும் குறிப்பிட் டுள்ளார்.

**கான்ட் பாகுபாடு** (Kant's Classification)

ஜெர்மானிய அரசியலறிஞர் கான்ட் (Kant) அரசாங்கங்களைக் குடியாட்சி, வல்லாட்சி என இருவகைப்படுத்தியுள்ளார். ரூஸோ வின் மூன்று வகை அரசாங்கங்களுக்கு இணையாக மூன்று வகை அரசுகளைக் கான்ட் குறிப்பிட்டார். ஆனுல், தமது பாகுபாட்டில் இரண்டு வகை அரசாங்க அமைப்புகளோடு நிறுத்திக் கொண்டார்.[3]

**பிளன்ட்ஷ்லி பாகுபாடு** (Bluntschli's Classification)

19ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த ஜெர்மானியத் தத்துவ அறிஞர் பிளன்ட்ஷ்லி (Bluntschli) அரசாங்க அமைப்புகளை நான்காகப் பகுத்துள்ளார். முடியாட்சி, உயர்குடியாட்சி, குடியாட்சி, சமயச் சார்புடையாட்சி என நான்காகும். மற்றவர்களின் பாகுபாட்டில் காணப்படாத சமயச் சார்புடையாட்சியை பிளன்ட்ஷ்லி தமது பாகுபாட்டில் சேர்த்துள்ளார். சமயச் சார்புடையாட்சியை நல் லாட்சியென்றும், உண்மையான ஆட்சியென்றும் இவர் கருதுகிருர். இவ்வாட்சி இறைவனது ஆட்சியென்றும், இறைவனது பிரதிநிதி யின் ஆட்சி என்றும், மனித இயல்பிற்கு அப்பாற்பட்டாரின் ஆட்சி

[3] C. F. Storng: 'Kant saw three kinds of states corresponding to Rousseau's three forms of government, but only two forms of government-republican and despotic. But the term Republic in the modern world helps us no more than the term Monarchy to understand the form of the state'.

யென்றும் கூறப்படுகிறது.[4] இவ்வாட்சியில் இறைவனது தன்மையைக் காணலாம். இவ்வாட்சி தீய ஆட்சியாக மாறும்போதும் தவருன முறையில் செல்லும்போதும் உருவ வழிபாட்டு ஆட்சி (Idolocracy) எனப் பெயர் பெறும்.

பிளன்ட்ஷ்லியின் பாகுபாடு அரசியலோடு சமயத்தை இணைக்கிறது. தற்காலத்தில் சமயச் சார்பற்ற அரசே பாராட்டப்படுவதொன்ருகும். அரசியல் சமயத்திலிருந்து பிரிக்கப்பட்டு உள்ளது. எனவே, இவரது பாகுபாடு தற்காலத்தில் ஏற்புடையதாக இல்லை. யூதர்களின் அரசாங்கக் கோட்பாடும், முகமதியர்களது அரசியல் கோட்பாடும் பிளன்ட்ஷ்லியின் பாகுபாட்டின் அடிப்படையில் அமைந்திருந்தன.

### வான் மோல் பாகுபாடு (Von-Mohl's Classification)

19ஆம் நூற்ருண்டின் ஜெர்மானிய அரசியலறிஞர் வான் மோல் (Von-Mohl) அரசியலமைப்புகளை வரலாற்றின் அடிப்படையில் பாகுபாடு செய்துள்ளார். தந்தை வழி அரசாங்கம், சமயச் சார்புள்ள அரசாங்கம், வல்லாட்சி அரசாங்கம், பழமை (Classic) முறை அரசாங்கம், நிலமானிய முறை அரசாங்கம், அரசியலமைப்புடைய அரசாங்கம் எனப் பகுத்துள்ளார். செவ்வியற்காலப் (Classical Age) பழைய முறை அரசாங்கத்தை முடியாட்சியென்றும், உயர் குடியாட்சியென்றும், மக்களாட்சியென்றும், மேலும் பிரித்துள்ளார். இவரது பாகுபாடு ஒரு குறிப்பிட்ட கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்தது அல்ல. மேலும், இவரது பாகுபாடுகளில் அரசையும், அரசாங்கத்தையும் வேறுபடுத்தவில்லை. மேலும், தற்கால அரசியலமைப்புகளை இவரது பாகுபாட்டினுள் பொருத்த இயலாது.

### பாகுபாடுகளின் குறைகள்

மேலே கூறப்பட்ட அரசியலமைப்புப் பாகுபாடுகள் அனைத்தும் அந்தந்தக் காலங்களின் அரசியல் நிலைகளைக் காட்டுகின்றன. ஆனுல், இவைகள் தற்காலத்தில் நிலவும் அரசாங்க அமைப்புகளுக்கு ஏற்புடையனவாக இல்லை. எடுத்துக்காட்டாக, அரிஸ்டாட்டில் கூறிய அரசாங்கப் பாகுபாட்டில் அமெரிக்க அரசியலமைப்பிற்கு இடமில்லை. இங்கு நிலவும் கூட்டாட்சி முறையும், பாராளுமன்ற முறையல்லாத நிருவாக (Non-Parliamentary Exe-

[4] C. F. Strong: 'The modern German writer, Bluntschli attempts to extend Aristotle's triple division by adding to it a fourth type of state which he called Ideocracy or Theocracy, in which the supreme ruler is conceived to be God or some super-human spirit or idea.'

cutive) முறையும் இப்பாகுபாடுகளில் இடம் பெறுவதில்லை. அதே போல ஆஸ்திரேலியாவில் நிலவும் கூட்டாட்சி முறையும், பாராளு மன்ற நிருவாக முறையும் பழைய பாகுபாடுகளில் பொருத்த முடியாது. மேலும், ஸ்விட்ஸர்லாந்தில் கூட்டாட்சி முறையே நிலவினாலும் அமெரிக்கக் கூட்டாட்சியின் நிருவாக முறையி லிருந்தும், ஆஸ்திரேலியக் கூட்டாட்சியின் நிருவாக முறையி லிருந்தும் வேறுபட்டதாகவுள்ளது. அமெரிக்கா, ஆஸ்திரேலியா, ஸ்விட்ஸர்லாந்து ஆகிய மூன்று நாடுகளிலும் கூட்டாட்சி அமைப்பே அரசாங்கத்தில் நிலவினாலும், நிருவாகத் துறையில் ஒவ் வொன்றும் வேறுபடுகின்றன. இதே போல இங்கிலாந்தில் ஒன்றிய ஆட்சியும், பாராளுமன்ற முறை அரசாங்கமும் நிலவுகின்றன. தற்கால அரசியலமைப்புகளின் இந்த நிலைகளை நோக்கினால் பழங்காலப் பகுப்பு முறைகளின் பொருத்தமின்மையை நன்கு உணரலாம். எனவே, தற்கால அரசியலமைப்புகளின் நிலைக் கேற்றதோர் புது வழி காணவேண்டியுள்ளது.

## முக்கிய வினாக்கள்

1. அரிஸ்ட்டாட்டிலின் அரசியலமைப்புப் பாகுபாட்டைக் கூறி, நிறை குறைகளை ஆய்க.
2. அரசியலமைப்புகளை அரிஸ்ட்டாட்டில் எவ்வாறு வகைப் படுத்திக் கூறியுள்ளார் என்பதைத் தேர்வு செய்க. (செ.ப.க. ஏப்ரல், 1972)
3. குறிப்பு வரைக:
   (அ) போலிபியஸ் பாகுபாடு
   (ஆ) ஹாப்ஸ் பாகுபாடு
   (இ) லாக் பாகுபாடு
   (ஈ) மாண்டஸ்க்யூ பாகுபாடு
   (உ) ரூஸோ பாகுபாடு
   (ஊ) பிளன்ட்ஷ்லி பாகுபாடு
   (எ) வான் மோல் பாகுபாடு
4. அரசியலமைப்புகளின் வழக்கொழிந்த பாகுபாடுகளைக் கூறி, அவற்றின் நிறை குறைகளை ஆய்க.
5. ஹாப்ஸ், லாக், மாண்டஸ்க்யூ, ரூஸோ ஆகியவர்களின் அரசியலமைப்புப் பாகுபாட்டை அரிஸ்டாட்டிலின் அர சியலமைப்புப் பாகுபாட்டுடன் ஒப்பிடுக.

6. பிளன்ட்ஷ்லியின் அரசியலமைப்புப் பாகுபாட்டைக் கூறி, அது தற்காலத்திற்கு ஏன் ஏற்புடையதல்ல என்பதைக் காட்டுக.

7. கிரேக்க அரசியல் வல்லுனர்களின் அரசியலமைப்புப் பாகு பாடுகளை விளக்குக. அரசியலமைப்புப் பாகுபாட்டிற்கு அவர்களாற்றிய தொண்டினை மதிப்பிடுக.

## ஆ. தற்காலப் பாகுபாடு
(Modern Classification)

[**தற்காலப் பாகுபாடுகள் :** கார்ட்டர் பாகுபாடு—புரூஸ் டர் பாகுபாடு—மில்லர் பாகுபாடு—சால்டா பாகுபாடு—மேக்ஐவர் பாகுபாடு—மாரியட் பாகுபாடு—லீக்காக் பாகு பாடு—ஸ்ட்ராங் பாகுபாடு.

**பாகுபாட்டின் அடிப்படைகள் :** 1. அரசியலமைப்பைப் பயன்படுத்தும் அரசின் தன்மை. 2. அரசியலமைப்பின் தன்மை—(அ) எழுதிய அல்லது எழுதா அரசியலமைப்பு — (ஆ) நெகிழும் அல்லது நெகிழா அரசியலமைப்பு— 3. சட்டமன்றத்தின் தன்மை— (அ) தேர்தல்முறை (i) வாக்குரிமை வகை. (ii) தேர்தல் தொகுதி வகை—(ஆ) மேலவையின் வகைகள்—(இ) நேர்முக மக்களாட்சித் தடைகள்—4. நிருவாகத் துறையின் தன்மை—5. நீதித் துறையின் தன்மை— பாகுபாடுகளைப் பொருத்துதல்—பாகுபாடுகளின் தன்மை.]

அரிஸ்ட்டாட்டிலின் அரசியலமைப்புப் பாகுபாடுகளையும், இதர வழக்கொழிந்த சில அரசியலமைப்புப் பாகுபாடுகளையும் முன் பகுதியில் கண்டோம். இப் பண்டைய அரசியலமைப்புப் பாகு பாடுகள் தற்கால நிலைக்குப் பொருந்தாதனவாக உள்ளன. எனவே, அரசியலமைப்புகளின் தற்காலப் பாகுபாடுகளையும், அவைகள் எந்த அடிப்படையில் பகுக்கப்படுகின்றன என்பதையும் இப்பிரிவில் காணலாம்.

## தற்காலப் பாகுபாடுகள்

### கார்ட்டர் பாகுபாடு

கார்ட்டர் (Carter) தமது அரசியலமைப்புப் பாகுபாடுகளில் தற்காலத்தில் நிலவும் அரசாங்க முறைகளை எடுத்தாண்டுள்ளார்.

பொதுவுடைமைக் கட்சியோ, அல்லது பாசிசக் கட்சியோ அமைத்துள்ள ஒருகட்சி வல்லாட்சி என்றும், பாராளுமன்ற முறை ஆட்சி என்றும், தலைவர்முறை ஆட்சி என்றும் அரசாங்கங்களைப் பாகுபாடு செய்துள்ளார்.

**புரூஸ்டர் பாகுபாடு**

புரூஸ்டர் (Brewster) தமது பாகுபாட்டில் மூன்று அடிப் படைகளைக் கையாண்டுள்ளார். முதலாவதாக ஆட்சியின் அடிப்படையில் வல்லாட்சி, உயர்குடியாட்சி, குடியாட்சியென்றும், இரண்டாவதாக நிருவாகத்துறைத் தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கண்காணிக்கும் முறையை அடிப்படையாகக் கொண்டு பாராளு மன்ற முறை அரசாங்கம், தலைவர் முறை அரசாங்கம் என்றும், மூன்றாவதாக நாட்டின் ஆட்சிநிலைப் பகிர்வை அடிப்படையாகக் கொண்டு ஒன்றிய ஆட்சி, கூட்டாட்சி என்றும் பாகுபாடு செய் துள்ளார்.

**மில்லர் பாகுபாடு**

மில்லர் (Miller) தமது 'அரசியலின் தன்மை' (The Nature of Politics) என்ற நூலில் தற்கால அரசாங்க அமைப்புகளை எடுத்துக் காட்டியுள்ளார். முறையாக நிறுவப்பட்ட பாராளுமன்ற முறை அரசாங்கம் என்றும்; ஆசியா, ஆப்பிரிக்கா ஆகிய நாடுகளில் தோன்றிய புதிய அரசுகள் கையாளும் பரிசோதனைப் பாராளுமன்ற முறை அரசாங்கம் என்றும்; இராணுவ முறை அரசாங்கம் என்றும்; சமயம் அரசாங்கத்தில் தலையிடாததும், ஆனால், சமய ஆதிக்கம் நிலவுவதுமான பகுதிச் சமயச் சார்புடைய அரசாங்க முறை என்றும்; குடியேற்ற முறை அரசாங்கம் என்றும்; பொதுவுடைமை அரசாங்கம் என்றும் அரசாங்க முறைகளை மில்லர் பாகுபாடு செய்துள்ளார்.

**சால்டா பாகுபாடு**

சால்டா (Saltau) அரசாங்க அமைப்புகளை நான்காகப் பாகு பாடு செய்துள்ளார். முதலாவது பாராளுமன்ற முறை அரசாங்கம் ஆகும். இரண்டாவது நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பாராளுமன்றத்திலிருந்து சுதந்திரமாகச் செயல்படும் அமெரிக் காவில் உள்ளது போன்ற செயல்துறை அரசாங்க முறையாகும். மூன்றாவது வல்லாட்சி முறையாகும். நான்காவது வரையறை யில்லா அதிகாரமுடைய அரசாங்கமாகும்.

**மேக் ஐவர் பாகுபாடு**

மேக் ஐவர் (Mac-Iver) கூற்றுப்படி, அரசாங்க முறைகள் மாறிக்கொண்டே செல்லக் கூடியன. முடிவில்லா மாற்றங்கள்

நிகழ்ந்துகொண்டேயிருக்கின்றன. எனவே, அவ்வப்போது நிலவும் அரசாங்க அமைப்புகளுக்கேற்ப அரசியலமைப்புகளைப் பாகுபடுத்திக் கொள்ள வேண்டும்.

அரசியலமைப்புகளின் அடிப்படையில் சிறு குழுவாட்சி, நிலமானியமுறை அரசாங்கம், முதலாளித்துவ அரசாங்கம், பொதுவுடைமை அரசாங்கம் என அரசாங்கங்கள் பகுக்கப்படுகின்றன.

மக்களின் இனஅடிப்படையிலும் பாகுபாடு செய்யப்படுகின்றன. பிற்பட்ட பகுதிகளின் அரசாங்கம், நகர (Polis) அரசாங்கம், தேசிய அரசாங்கம், பல இனநாட்டார் அரசாங்கம் என அரசாங்கங்கள் மக்களின் இன அடிப்படையில் வகுக்கப்படுகின்றன.

இறைமை அதிகாரத்தின் இருப்பிடத்தின் அடிப்படையில் பாகுபாடுகள் செய்யப்படுகின்றன. ஒன்றிய அரசாங்கம், பேரரசு, குடியேற்றஅரசு, கூட்டாட்சி அரசாங்கம் என அரசாங்கங்கள் பிரிக்கப்படுகின்றன.

மேக்ஐவரின் அரசாங்கப் பாகுபாடுகளைக் கீழ்க்காணும் அவரது அட்டவணை நன்கு தெளிவுபடுத்தும்.

**அரசாங்க அமைப்புகள்**

| அரசியலமைப்பு அடிப்படை | பொருளாதார அடிப்படை | இன அடிப்படை | இறைமை அடிப்படை |
|---|---|---|---|
| சிறுகுழுவாட்சி வல்லாட்சி | ஆதிகால அரசாங்கம் | பிற்பட்ட இன அரசாங்கம் | ஒன்றிய அரசாங்கம் |
| சமயச்சார்புள்ள ஆட்சி | நிலமானிய முறை அரசாங்கம் | நகர அரசாங்கம் | பேரரசு, குடியேற்ற அரசு |
| மக்களாட்சி | முதலாளித்துவ அரசாங்கம் | தேசிய அரசாங்கம் | கூட்டாட்சி அரசாங்கம் |
| வரையறைக் குட்பட்ட முடியாட்சி | | | |
| குடியரசு | பொதுவுடைமை அரசாங்கம் | பல இனநாட்டு அரசாங்கம் | |

**மாரியட் பாகுபாடு**

சர் மாரியட் (Sir Marriot) சமீப கால அரசியலறிஞர் ஆவார். இவரது அரசியலமைப்புப் பாகுபாடுகள் தற்காலத்திற்கு மிகவும் பொருந்துவனவாக அமைந்துள்ளன. இவர் மூன்று அடிப்படைகளில் அரசாங்கங்களைப் பாகுபாடு செய்கிறார். முதலாவதாக அரசின் இறைமை அதிகாரத்தின் இருப்பிடத்தை அடிப்படையாகக்கொண்டு ஒருமுக அரசாங்கமென்றும், கூட்டாட்சி அரசாங்கமென்றும் பாகுபடுத்தியுள்ளார். ஒருமுக அரசாங்கத்தில் அதிகாரம் குவிக்கப்பட்டு மத்திய அரசாங்கத்திடம் இறைமை அதிகாரம் அனைத்தும் அடங்கியிருக்கின்றன. மாநில அரசாங்கங்களுக்கு இறைமை கிடையாது. இவைகள் மத்திய அரசாங்கத்திடமிருந்து மாற்றப்பட்ட அதிகாரங்களையே பெற்றுள்ளன. மத்திய அரசாங்கம் தான் விரும்பும்போது இவ்வதிகாரங்களைத் திரும்பப் பெறலாம். கூட்டாட்சி அரசாங்க அமைப்பில் மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் இடையே அதிகாரப் பகிர்வுண்டு. மாநில அரசாங்கங்கள் தங்கள் அதிகாரத்தை மத்திய அரசாங்கத்திடமிருந்து பெறுவதில்லை. இவைகள் அரசியலமைப்பிலிருந்து தங்கள் அதிகாரங்களைப் பெறுகின்றன. மேலும், மத்திய அரசாங்கத்தின் அதிகாரமும் அரசியலமைப்பிடமிருந்து பெற்றனவேயாகும். இவைகள் தங்கள் துறையில் சுதந்திரமாகப் பணியாற்றுகின்றன.

இரண்டாவதாக, அரசியலமைப்பின் தன்மையைப் பொறுத்து நெகிழும் அரசியலமைப்பு என்றும், நெகிழா அரசியலமைப்பு என்றும் மாரியட் பிரித்துள்ளார். சாதாரணச் சட்டத்தைப் போல அரசியலமைப்புச் சட்டங்களும் மாற்றப்படக் கூடியனவாக இருந்தால் நெகிழும் அரசியலமைப்பு என்றும், அரசியலமைப்பைத் திருத்தத் தனி முறை வகுக்கப்பட்டிருந்தால் நெகிழா அரசியலமைப்பென்றும் பாகுபடும்.

மூன்றாவதாக, சட்டத்துறைக்கும் செயல்துறைக்கும் உள்ள உறவுகளின் அடிப்படையில் அரசியலமைப்புகளையும், அரசாங்கத்தையும் பாகுபாடு செய்கிறார். செயல்துறையின் அதிகாரம் சட்ட மன்றங்களின் அதிகாரத்தைவிட ஓங்கியிருந்தால், அது வல்லாட்சியாகும். எடுத்துக்காட்டாக, பிரான்சு நாட்டில் லூயி மன்னர்களின் அரசாங்க அமைப்பைக் கூறலாம். செயல்துறையின் அதிகாரம் சட்டமன்றங்களின் அதிகாரத்திற்குச் சமமாக இருந்து இவ்விரு உறுப்புகளிடையே ஒற்றுமை நிலவினால் அது தலைவர் முறை அரசாங்கமாகும். எடுத்துக்காட்டாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசாங்க முறையைக் கூறலாம். செயலாட்சியின் அதிகாரம் சட்டமன்றங்களின் அதிகாரத்திற்கு அடங்கியிருந்தால்

அது பாராளுமன்ற முறை அரசாங்கம் அல்லது அமைச்சரவை அரசாங்கம் அல்லது பொறுப்புள்ள அரசாங்கம் எனப்படும். எடுத்துக்காட்டாக, இங்கிலாந்தின் அரசாங்க முறையைக் கூறலாம்.

**லீக்காக் பாகுபாடு**

பேரறிஞர் ஸ்டீபன் லீக்காக் (Dr. Stephen Leacock) அரசாங்கத்தின் பாகுபாடுகள் சர் மாரியட்டின் பாகுபாடுகளுக்கு ஒத்தனவாக உள்ளன. லீக்காக் தற்காலத்தில் காணப்படும் அரசாங்க முறைகளை மட்டும் கூறியுள்ளார். பக்கம் 211-ல் காணும் அரசாங்கப் பாகுபாடுகளின் அட்டவணை அவரது பாகுபாட்டை நன்கு காட்டக் கூடியதாக உள்ளது.

லீக்காக் தமது பாகுபாட்டில் வல்லாட்சியையும் மக்களாட்சியையும் பெரும் பகுதிகளாகக் கொண்டுள்ளார். வல்லாட்சியில் அரசாங்கத்தின் இறைமை அதிகாரம் ஒரு தனி நபரிடம் இருப்பதோடு, அவர் மக்களின் நலம் கருதாது சுயநலத்திற்காக அரசாளுவார். மக்களாட்சியில் அரசின் இறைமை அதிகாரம் மக்களிடமோ அல்லது அவர்களில் பெரும்பான்மையினரிடமோ அடங்கி இருக்கும்.

வல்லாட்சியை வரையறையில்லா அதிகாரமுடைய முடியாட்சியென்றும், சர்வாதிகார ஆட்சியென்றும் மேலும் பாகுபடுத்தியுள்ளார். இவ்வல்லாட்சிக்கு எடுத்துக்காட்டாக ரஷ்யாவில் நிலவிய சார் மன்னர்களது ஆட்சியைக் குறிப்பிடலாம்.

மக்களாட்சியை அதிகார வரையறைக்குட்பட்ட முடியாட்சியென்றும், குடியாட்சியென்றும் பகுத்துள்ளார். அரசியலமைப்பால் கட்டுப்படுத்தப்பட்டு அதிகார வரையறைக்குட்பட்ட முடியாட்சிக்கு எடுத்துக்காட்டாக இங்கிலாந்து அரசாங்கத்தைக் கூறலாம். குடியாட்சிக்கு எடுத்துக்காட்டாக அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசாங்கத்தையும், இந்திய அரசாங்கத்தையும் காட்டலாம். வரையறைக்குட்பட்ட முடியாட்சியின் தலைவர் அரசனுவர். ஆனால், இவரது அதிகாரம் அரசியலமைப்பால் கட்டுப்படுத்தப்பட்டதாகும். குடியாட்சி அரசாங்கத்தின் தலைவர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு ஒரு குறிப்பிட்ட காலம் பதவி வகிப்பார்.

வரையறுக்கப்பட்ட முடியாட்சியும் குடியாட்சியும் முறையே ஒன்றிய ஆட்சியென்றும், கூட்டாட்சி என்றும் பிரிக்கப்பட்டுள்ளன. ஒன்றிய ஆட்சியில் மத்திய அரசாங்கத்திடம் அதிகாரக் குவிப்பும், கூட்டாட்சியில் மத்திய மாநில அரசாங்கங்களிடையே அதிகாரப் பகிர்வும் இருக்கும். ஒன்றிய ஆட்சியும் கூட்டாட்சியும் முறையே


தற்கால அரசாங்கங்கள்
வல்லாட்சி
(சார் மன்னராட்சி)
மக்களாட்சி
வரையறையில்லா
முடியாட்சி
சர்வாதிகார
ஆட்சி
வரையறைக்குட்பட்ட
முடியாட்சி (இங்கிலாந்து)
குடியாட்சி
(இந்தியா, அமெரிக்கா)
ஒன்றியவாட்சி
(இங்கிலாந்து)
கூட்டாட்சி
ஒன்றிய ஆட்சி
கூட்டாட்சி
பாராளுமன்ற
முறை அரசாங்கம்
பாராளுமன்ற
முறையல்லாத
அரசாங்கம்
பாராளுமன்ற
முறை அரசாங்கம்
பாராளுமன்ற
முறையல்லாத
அரசாங்கம்
பாராளுமன்றமுறை
அரசாங்கம் (பிரான்சு)
பாராளுமன்றமுறை
அல்லாத அரசாங்கம்
(தென்னமெரிக்கக்குடியரசு)
பாராளுமன்ற
முறை அரசாங்கம்
(இந்தியா)
குடியரசு
தலைவர் முறை
அரசு (அமெரிக்கா)

பாராளுமன்ற முறை அரசாங்கம் என்றும், பாராளுமன்ற முறையல்லா அரசாங்கம் என்றும், தலைவர் முறை அரசாங்கம் என்றும் பிரிக்கப்பட்டுள்ளன. பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் செயல்துறை பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையதாகும். பாராளுமன்ற முறையல்லா அரசாங்கத்திலும், தலைவர் முறை அரசாங்கத்திலும் செயல்துறை பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையது அல்ல. இத்தலைவர்கள் நேரிடையாக மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

ஸ்ட்ராங் பாகுபாடு

சி.எப். ஸ்ட்ராங் அவர்கள் மேரியட், பிரைஸ், ஜெங்ஸ் ஆகியவர்களின் பகுப்பின் அடிப்படையில் அரசியலமைப்புப் பாகுபாடுகளைச் செய்வதற்கோர் அடிப்படையை வகுத்துள்ளார். இவ்வடிப்படையை ஆதாரமாகக் கொண்டு அரசியலமைப்புகளின் பாகுபாட்டைக் காட்டக் கீழ்க்காணும் ஓர் அட்டவணையைத் தற்கால 'அரசியலமைப்புகள்' என்னும் தமது நூலில் பக்கம் 77-ல் கொடுத்துள்ளார்.

**அரசியலமைப்பிற்குட்பட்ட அரசுகளின் பாகுபாடு**

| பிரிவின் அடிப்படை | முதல் வகை | இரண்டாம் வகை |
|---|---|---|
| 1. அரசியலமைப்பு உடைய அரசின் தன்மை | ஒன்றிய அரசு | கூட்டாட்சி அல்லது அரைக்கூட்டாட்சி |
| 2. அரசியலமைப்பின் தன்மை | நெகிழும் தன்மையுடையது. (எழுதப்பட்டதாய் இருக்கத் தேவையில்லை) | நெகிழாத் தன்மையுடையது. (முழுவதும் எழுதப்பட்டதாய் இருக்கத் தேவையில்லை) |
| 3. சட்டமன்றத்தின் தன்மை | (i) அ. வயதுவந்தோர் வாக்குரிமை | வயது வந்தோர்க்கு வரம்பிற்குட்பட்ட வாக்குரிமை. |
| | ஆ. ஓர் உறுப்பினர் தொகுதி | பல உறுப்பினர் தொகுதி. |
| | (ii) தேர்ந்தெடுக்கப்படாத மேலவை | முழுவதும் அல்லது ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்ட மேலவை. |
| | (iii) நேர்முக மக்களாட்சித் தடைகள் (Checks) உண்டு | அத்தடைகள் இல்லை. |
| 4. நிர்வாகத்துறையின் தன்மை | பாராளுமன்றச் சார்புடையது. | பாராளுமன்றச் சார்பற்றது அல்லது உறுதியுடையது. |
| 5. நீதித்துறையின் தன்மை | பொது நீதி அரசுகளில் சட்ட ஆட்சிக்குட்பட்டது. | தனிச் சிறப்புரிமை அரசுகளில் ஆட்சித்துறைச் சட்டத்திற்கு உட்பட்டது. |

## பாகுபாட்டின் அடிப்படைகள்

தற்கால அரசியலமைப்பிற்குட்பட்ட அரசுகளைப் பகுப்பதற்கு ஐந்து அடிப்படைகள் கையாளப்படுகின்றன.

அவையாவன :

1. அரசியலமைப்பைப் பயன்படுத்தும் அரசின் தன்மை
2. அரசியலமைப்பின் தன்மை
3. சட்டமன்றத்தின் தன்மை
4. நிருவாகத்துறையின் தன்மை
5. நீதித்துறையின் தன்மை

### 1. அரசியலமைப்பைப் பயன்படுத்தும் அரசின் தன்மை

அரசுகள் அரசியலமைப்பின் அடிப்படையில ஒன்றிய அரசென்றும், கூட்டரசென்றும் பிரிக்கப்படுகின்றன. ஒன்றிய அரசில் இறைமை அனைத்தும் மத்திய அரசாங்கத்திடம் உள்ளது. அரசியல்மைப்பின்படி மத்திய அரசாங்கமும் பாராளுமன்றமுமே மேலாண்மையுடையன. பேராசிரியர் டெய்சி (Dicey) என்பவரின் இலக்கணப்படி, ஒன்றியஆட்சி என்பது ஒரு மத்திய அரசாங்கம் தலைமையான சட்டஆக்க அதிகாரத்தை வழக்கமாகச்செலுத்துதல் ஆகும்.[5] எனவே, நாட்டின் பகுதிகளுக்கோ, வட்டாரங்களுக்கோ மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தை வரையறுக்க இயலாது. மத்திய அரசாங்கம் தனது விருப்பப்படி நிருவாகம் செய்யும். மேலும், மாநிலங்களுக்கோ, நாட்டின் பகுதிகளுக்கோ, வட்டாரங் களுக்கோ மத்திய அரசாங்கம் சில அதிகாரங்களை (Delegation of Powers) வழங்கலாம். இவ்வதிகாரங்கள் மத்திய அரசாங்கம் தனது விருப்பத்தால் ஒப்படைத்தனவாகும். அரசியலமைப்பால் வட்டாரங்களுக்கு அளிக்கப்பட்டனஅல்ல. எனவே, மத்திய அர சாங்கம் தான் விரும்பிய போது இவ்வதிகாரங்களைத்திரும்ப எடுத் துக் கொள்வதுடன் அவ்வட்டாரங்களையும் மாற்றி அமைக்கலாம். எனவே, இவ்வட்டாரங்கள் இயற்றுவது சட்டங்கள் அல்ல வென்றும், துணைச்சட்டங்களே (By Laws) ஆகும் என்றும் சி. எப். ஸ்ட்ராங் கூறுகிறார்.[6] ஒன்றிய அரசிற்கு எடுத்துக்காட்டாக

[5] Dicey : 'Univarianism is the habitual exercise of supreme legislative authority by one central power.'

[6] C. F. Strong : 'Where, as in the case of the United Kingdom, local government is strong, there is still no restriction upon the central power, which can override the Local Authorities; for since, in modern times, the central authority has granted whatever powers are passed by them, it can equally modify or withdraw those powers. Local Authorities in Britain are, in fact, not law-making but by-law-making bodies.'

இங்கிலாந்து, பிரான்சு, பெல்ஜியம் ஆகிய நாடுகளைக் குறிப்பிடலாம். இங்கிலாந்து நாட்டில் வட்டாரங்களுக்கு மற்ற ஒன்றிய அரசுகளில் உள்ளதைவிட அதிக அதிகாரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வட்டார அரசாங்கங்கள் வலிமையுடையனவாக உள்ளன. இருப்பினும், மத்திய அரசாங்கம் விரும்பினால் இவ்வதிகாரங்களைத் திரும்பப் பெறலாம்.

இறைமையுடைய சில அரசுகள் தங்கள் விருப்பத்தாலும், இன ஒருமைப்பாட்டாலும் இணைந்து கூட்டாட்சி அரசைத் தோற்றுவிக்கின்றன. பேராசிரியர் டெய்சியின் இலக்கணப்படி, 'நாட்டின் ஒற்றுமையையும் அதிகாரத்தையும் மாநில உரிமைகளோடு இணைக்கும் ஓர் அரசியல் ஏற்பாடே கூட்டரசு நாடு (Federal State) ஆகும்.'[7] கூட்டரசு நாட்டின் முக்கியமான கூறுபாடு அதிகாரப்பங்கீடாகும் (Division of Powers). இதன் அடிப்படையில்கூட்டாட்சி ஒன்றிய ஆட்சியிலிருந்து முற்றிலும் மாறுபடுகிறது. கூட்டரசில் மத்திய அரசிற்கும், மாநில அரசுகளுக்கும் அதிகாரங்கள் பங்கிடப்பட்டு இவ்வதிகாரங்கள் அரசியலமைப்பில் குறிக்கப்படுகின்றன. எனவே, மத்திய அரசும், மாநில அரசுகளும் தங்கள் அதிகாரங்களை அரசியலமைப்பிடமிருந்தே பெறுகின்றன. ஒன்றிய ஆட்சியில் இருப்பது போல் மாநில அரசின் அதிகாரங்கள் மத்திய அரசால் அதிகார ஒப்படைப்பு மூலம் வழங்கப்பட்டன அல்ல. எனவே, கூட்டரசு நாடுகளில் அரசியலமைப்பு மேலாண்மையுடையதாக உள்ளது. அரசியலமைப்பை மத்திய அரசு தானாகவோ அல்லது மாநில அரசுகள் தாங்களாகவோ மாற்றிக் கொள்ள இயலாது. அரசியலமைப்பை மாற்றவும் திருத்தவும் தனி முறைகள் வகுக்கப்பட்டுள்ளன. கூட்டரசு நாட்டின் மத்திய அரசு, மாநில அரசுகள் ஆகிய இவைகளிடையே முரண்பாடுகள் தோன்றும் வாய்ப்புகள் கூட்டாட்சி முறையில் நிறைய உண்டு. எனவே, முரண்பாடுகள் ஏற்படின் அவைகளைத் தீர்ப்பதற்கு ஒரு தலைமை நீதிமன்றம் கூட்டரசு நாடுகளுக்கு அவசியமாகும். எனவே, கூட்டாட்சிக்கு ஒற்றை ஆட்சிக்கு இல்லாத மூன்று சிறப்பியல்புகள் உண்டு. அவையாவன :

(1) அரசியலமைப்பின் மேம்பாடு (Supremacy of the Constitution). (2) கூட்டாட்சிக்கும் அதன் உறுப்புகளுக்கும் இடையேயுள்ள அதிகாரப் பங்கீடு (Distribution of Powers). (3) கூட்டரசுக்கும் மாநில அரசுகளுக்கும் இடையே ஏற்படும் முரண்பாடுகளையும் பிணக்குகளையும் தீர்ப்பதற்கு ஒரு தலைமை

[7] Dicey : 'A federal state is a political contrivance intended to reconcile national unity and power with the maintenance of state rights.'

நீதிமன்றம் (Supreme Court). கூட்டரசு நாடுகளுக்கு எடுத்துக் காட்டாக அமெரிக்க ஐக்கிய நாடுகள், சுவிட்ஸர்லாந்து, ஆஸ்திரேலியா, கனடா, சோவியத் ரஷ்யா ஆகிய நாடுகளைக் குறிப்பிடலாம். கூட்டாட்சிக்குக் கூறப்பட்ட பண்புகள் எல்லாக் கூட்டாட்சிக்கும் பொருந்துமெனக் கூற இயலாது. ஏனெனில், சில நாடுகள் அரைக்கூட்டாட்சி (Quasi Federal) நாடுகளாக இருக்கலாம். அவைகளில் கூட்டாட்சிக்குக் கூறப்பட்ட சில பண்புகள் இல்லாதிருக்கலாம்.

நாடுகளை ஒன்றிய அரசுகள் என்றும், கூட்டாட்சி நாடுகள் என்றும் பிரிப்பதில் கையாண்டுள்ள அடிப்படை வலுவுள்ளதாகும். எல்லா அரசுகளும் இவ்விருவகைகளில் ஏதாவது ஒரு வகையைச் சார்ந்ததாகவே இருக்கும்.

## 2. அரசியலமைப்பின் தன்மை

**(அ) எழுதிய அல்லது எழுதா அரசியலமைப்பு :** அரசியலமைப்பின் தன்மையில் எழுதிய அரசியலமைப்பென்றும், எழுதா அரசியலமைப்பென்றும் பாகுபாடு செய்யலாம் என்பதைக் கண்டோம். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு எழுதிய அரசியலமைப்பிற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். எழுதா அரசியலமைப்பிற்கு இங்கிலாந்து அரசியலமைப்புச் சான்றாகும். C. F. ஸ்ட்ராங் அவர்களின் கூற்றுப்படி எழுதிய, எழுதா அரசியலமைப்பெனப் பாகுபாடு செய்வது ஒரு தவறான பாகுபாடாகும். இஃது அறிவியல் முறையில் அமைவதில்லை.

**(ஆ) நெகிழும் அல்லது நெகிழா அரசியலமைப்பு :** அரசியலமைப்புகளை நெகிழும் தன்மையதா அல்லது நெகிழாத் தன்மையதா என்ற அடிப்படையில் பகுப்பது முறையானதும் உண்மையானதுமான பாகுபாடெனக் கண்டோம். இஃது இயற்கையோடு இயைந்த உண்மைப் பாகுபாடாகும். அரசியலமைப்புச் சட்டத்திருத்த முறையிலிருந்து ஓர் அரசியலமைப்பை நெகிழும் அரசியலமைப்பா அல்லது நெகிழா அரசியலமைப்பா என்பதைத் தீர்மானிக்கிறோம். நெகிழும் அல்லது நெகிழா அரசியலமைப்புகளைப் பாகுபாடு செய்யும்போது சில தவறுகள் நேராவண்ணம் நாம் காத்துக்கொள்ள வேண்டும். ஆவணமுறை அரசியலமைப்பு அல்லது ஆவண முறையல்லா அரசியலமைப்பு என்ற பாகுபாடும், நெகிழும் அல்லது நெகிழா அரசியலமைப்பு என்ற பாகுபாடும் ஒன்றே என்று எண்ணுவது தவறாகும். ஆவண முறையல்லா அரசியலமைப்புகள் நெகிழும் தன்மையுடையன வென்பது உண்மை. ஆனால், ஆவண முறை அரசியலமைப்புகள்

எல்லாம் நெகிழாத்தன்மையுடையன என்ற முடிவுக்கு வருதல் தவறுகும்.

### 3. சட்டமன்றத்தின் தன்மை

சட்டமன்றத்தின் தன்மையின் அடிப்படையில் அரசியலமைப்புகள் பாகுபாடுகள் செய்யப்படுகின்றன. ஆனல், ஓரவைச் சட்ட மன்றம் அல்லது ஈரவைச் சட்டமன்றம் என்ற அடிப்படையில் அரசியலமைப்புகளைப் பகுப்பது பயன்தராப் பாகுபாடாகும். அரசியலமைப்புகளைப் பாகுபாடு செய்வதில் கீழவைக்கான உறுப்பினர்கள் எங்ஙனம் தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள் என்ற அடிப்படை கையாளப்படுகிறது. கீழவையின் உறுப்பினர்களின் தேர்தல் முறையிலுள்ள வாக்குரிமை வகை, தேர்தல் தொகுதி வகை என்னும் இரு அடிப்படைகளில் அரசியலமைப்புகளைப் பாகுபாடு செய்யலாம். மேலும், மேலவை அல்லது இரண்டாம் அவையின் இயல்பின் அடிப்படையிலும் அரசியலமைப்புகளைப் பகுக்கலாம்.

(அ) **தேர்தல் முறை :** (i) **வாக்குரிமை வகை:** வாக்குரிமை அளிப்பதில் இருவகைகள் பின்பற்றப்படுகின்றன. முதலாவது வயது வந்தோர் வாக்குரிமை (Adult Suffrage) அளிக்கும் அரசாங்கங்களாகும். இரண்டாவது வயது வந்தோருக்கு வரம்பிற்குட்பட்ட வாக்குரிமை (Qualified Adult Suffrage) அளிக்கும் அரசாங்கங்களாகும். வாக்குரிமை அளிப்பதில் நான்கு நிலைகளை நாம் அறியலாம். முதலாவதாக, வரம்பிற்குட்பட்ட ஆடவர் வாக்குரிமை (Qualified Manhood Suffrage); இரண்டாவதாக, வயது வந்தோர் ஆடவர் வாக்குரிமை (Adult Manhood Suffrage); முன்ருவதாக, வரம்பிற்குட்பட்ட வயது வந்தோர் வாக்குரிமை (Qualified Adult Suffrage); இறுதியாக வயது வந்தோர் வாக்குரிமை (Adult Suffrage) எனப்படும்.

(ii) **தேர்தல் தொகுதிவகை :** தேர்தல் தொகுதிகளின் அடிப்படையிலும் அரசியலமைப்பிற்குட்பட்ட நாடுகளைப் பாகுபாடு செய்யலாம். தேர்தல் தொகுதியிலிருந்து ஒருவர் தேர்ந்தெடுக்கப்படும் (Single Member Constituency) நாடுகள் என்றும், தேர்தல் தொகுதியிலிருந்து பலர் தேர்ந்தெடுக்கப்படும் (Multi Member Constituency) அரசியலமைப்பை உடைய நாடுகள் என்றும் தேர்தல் தொகுதிகளின் அடிப்படையில் அரசியலமைப்பிற்குட்பட்ட நாடுகளைப் பாகுபாடு செய்யலாம். ஆனல், ஆஸ்திரேலியக் காமன்வெல்த்தில் கீழவைத் தேர்தல்களுக்கு

ஓர் உறுப்பினர் தொகுதியும், மேலவைத் தேர்தலுக்குப் பல உறுப்பினர் தொகுதியும் பயன்படுத்தப்படுகின்றன.

**(ஆ) மேலவையின் வகைகள் :** மேலவையின் வகைகளுக் கேற்பவும் அரசியலமைப்புகளை இ ர ண் ட ா க ப் பிரிக்கலாம். மேலவைகளைத் தேர்ந்தெடுக்கப்பட்ட மேலவை என்றும், தேர்ந் தெடுக்கப்படாத மேலவை என்றும் இருவகைப்படுத்தலாம். எனவே, தேர்ந்தெடுக்கப்பட்ட மேலவையை உடைய அரசுகள் என்றும், தேர்ந்தெடுக்கப்படாத மேலவையை உடைய அரசுகள் என்றும் இரு பாகுபாடுகள் செய்யலாம். இவ்விரு பாகுபாடு களுக்கு இடைப்பட்ட நிலையிலும் சில மேலவைகள் உள்ளன. இவைகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும், நியமிக்கப் பட்ட உறுப்பினர்களும் உள்ளனர்.

**(இ) நேர்முக மக்களாட்சித் தடைகள் :** நேர்முக மக்களாட்சித் தடைகளின் (Direct Democratic Checks) அடிப்படையிலும் அரசியலமைப்புகள் பிரிக்கப்படுகின்றன. நேர்முக மக்களாட்சித் தடைகள் உள்ள அரசியலமைப்புகள் என்றும், நேர்முக மக்க ளாட்சித் தடைகள் இல்லா அரசியலமைப்புகள் என்றும் அரசியலமைப்புகளை இரண்டாகப் பாகுபாடு செய்யலாம். குடி யொப்பமும், பொதுமக்கள் வாக்கெடுப்பும், தொடக்கவுரிமையும், மீட்புரிமையும் ஆகிய நேர்முக மக்களாட்சித் தடைகளைப் பின் பகுதிகளில் விரிவாகக் காணலாம்.

## 4. நிருவாகத் துறையின் தன்மைகள்

சட்டமன்றங்கள் இயற்றிய சட்டங்களைச் செயல்படுத்துதல், அல்லது நிருவாகம் செய்தல் நிருவாகத் துறையின் அலுவல்கள் ஆகும். பொதுவாக நிருவாகத்துறை கட்டுப்படுத்தப்படுகிறது. இது யாருக்காவது ஒருவருக்குப் பொறுப்புள்ளதாக அமைகிறது. பொதுமக்களுக்குப் பொறுப்புடையது என்பது பொதுப்படையான உண்மை. ஆனால், அரசியலமைப்பின்படி நிருவாகம் பாராளு மன்றத்திற்குப் பொறுப்புடையதாக இருந்தால் அதைப் பாராளு மன்றச் சார்புள்ள நிருவாகத்துறை (Parliamentary Executive) எனலாம். நிருவாகத்துறை அல்லது செயல்துறை மக்களுக்குப் பொறுப்புடையதாக இருந்தால் பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகம் (Non-Parliamentary Executive) எனலாம். பாராளுமன்றச் செயல் துறைக்கு இங்கிலாந்தும், பாராளுமன்ற முறையல்லாத் தலைவர் முறைச் செயல்துறைக்கு அமெரிக்க ஐக்கிய நாடுகளும் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். இவைகளைப் பின்பகுதிகளில் விரிவாகக் காணலாம்.

## 5. நீதித்துறையின் தன்மை

அரசாங்கத்தின் முப்பெரும் துறைகளில் ஒன்ருன நீதித் துறையின் அடிப்படையிலும் அரசியலமைப்புகளைப் பாகுபாடு செய்யலாம். இப் பாகுபாட்டிற்கு நீதித்துறைக்கும் நிருவாகத் துறைக்கும் உள்ள உறவும் தொடர்பும் எடுத்துக்கொள்ளப்படு கின்றன. இத் தொடர்பின் அடிப்படையில் சட்டத்தின் ஆட்சிக்கு (Rule of Law) உட்பட்ட நாடு அல்லது பொதுச் சட்ட நாடுகள் (Common Law States) என்றும், ஆட்சித்துறைச் சட்டத்திற்கு (Droit Administrative) உட்பட்ட நாடுகள் அல்லது தனிச் சிறப் புரிமை நாடுகள் (Prerogative States) என்றும் இரு வகைகளாகப் பாகுபாடு செய்யலாம். சட்டத்தின் ஆட்சிக்கு இங்கிலாந்தும், ஆட்சித்துறைச் சட்டத்திற்கு ஃபிரெஞ்சும் சிறந்த எடுத்துக்காட்டு களாகும். இவைகளைப் பின்பகுதிகளில் விரிவாகக் காண்போம்.

### பாகுபாடுகளைப் பொருத்துதல்

அரசியலமைப்புப் பாகுபாடுகளின் அடிப்படையில் நாடுகளைப் பட்டியலிட்டுப் பொதுப் பாகுபாடு செய்தலைவிட நாடுகளைத் தனி யாகப் பாகுபாடு செய்வதே மிகவும் பொருத்தமுடையதாகும். அமெரிக்கப் பேராசிரியர் வில்லோபியின் (Willoughby) கருத்துப் படி, நாடுகளை அவற்றின் அரசாங்க அமைப்பின் தனித்தன்மைக் கேற்பத் தனியே பகுப்பதுதான் அவற்றைப் பாகுபடுத்தும் ஒரே வழியாகும்[8].

அரசுகளை மூன்று நான்கு தலைப்புகளில் பகுப்பது இன்றைய நிலையில் இயலாது. சையாமிலிருந்து சுவீடன் வரை பல வகை முடியாட்சிகள் நிலவுகின்றன. கூட்டரசு, ஒன்றிய அரசு, தலைவர் முறை, பாராளுமன்றச் சார்புள்ள அரசு, வல்லாட்சி, மக்களாட்சி என எண்ணற்ற வகை அரசுகளும் குடியரசுகளும் நிலவுகின்றன என்று மன்றோ (Munro) கூறுகிருர்[9].

### பாகுபாடுகளின் தன்மை

உலகம் மாறுதல் அடைதல் போல அரசியலமைப்புகளும் மாறிக்கொண்டே வருகின்றன. அரசாங்கத்தின் நோக்கங்களும் பணிகளும் மாறுவதற்கேற்ப அரசியலமைப்புகளும் மாறுபடு

[8] Willoughby: 'The only manner in which states may be differentiated is according to the structural peculiarities of their governmental organisation.'

[9] Munro: 'The task of arranging governments of today under three or four headings is an impossible one. These are all kinds of monarchies, from Siam to Sweden. These are republics in endless differentiation, federal and unitary, presidential and parliamentary, autocratic and popular.'

கின்றன. மேக்ஐவரின் (Mac Iver) கருத்துப்படி, வரையில்லா அரசியல் மாறுபாடுகள் நிகழ்கின்றன. அரசாங்கத்தின் அமைப்பும் ஏதாவது ஒரு திசையில் மாற்றம் அடைந்துகொண்டே இருக்கிறது. எனவே, எந்த ஓர் அரசியலமைப்புப் பாகுபாடும் முழுமையானதென்றோ, எக்காலத்திற்கும் பொருத்தமுடையதென்றோ கருத முடியாது.[10]

## முக்கிய வினாக்கள்

1. அரசியலமைப்புகளை வகைப்படுத்தும் முறையினை ஆராய்க. (செ. ப. க. ஏப்ரல், 1973)
2. லீக்காக் பாகுபாட்டிற்கும் ஸ்ட்ராங் பாகுபாட்டிற்கும் உள்ள வேறுபாடுகளைக் கூறுக.
3. அரசியலமைப்புகளை எவ்வடிப்படைகளில் பாகுபாடு செய்யலாம்?
4. குறிப்பு வரைக:
   (அ) மேக்ஐவர் பாகுபாடு
   (ஆ) மாரியட் பாகுபாடு
   (இ) எப்பாகுபாடும் நிரந்தரமல்ல

[10] Mac Iver : 'It is necessary to observe that in the endless processes of political change any form of government, as it exists at a particular moment, is likely exhibit features characteristic of different types, while it is moving in one direction or another.'

# 8. ஒன்றிய, கூட்டரசு நாடும் நேசக்குழுவும்
(Unitary and Federal States and Confederation)

## அ. ஒன்றிய நாடு
(Unitary States)

[ஒன்றிய அரசு

**ஒன்றிய அரசின் கூறுபாடுகள் :** மத்தியப் பாராளு மன்றத்தின் மேலாண்மை—இறைமையுடைய துணை நிறு வனங்கள் இல்லாமை—அதிகாரக் குவிப்பு — தனி ஓர் அரசாங்கம்—எழுதப்பட்ட அல்லது எழுதப்படாத அரசி யலமைப்பு—நெகிழ்வுடைய அல்லது நெகிழ்வற்ற அரசிய லமைப்பு — தனிச்சிறப்பு நீதிமன்றமில்லை — அதிகாரப் பங்கீடு இல்லை—ஒருமைப்பாடும் ஒற்றுமையும்—ஒரு குடி யுரிமை.

**ஒன்றிய அரசின் சிறப்புகளும் குறைகளும் :** ஒன்றிய அரசின் சிறப்புகள் : எளிமையானது—ஒற்றுமையும், ஒருமைப்பாடும், திறமையுமுடையது — நாட்டு நலனுக்கு முக்கியத்துவம் — ஒரு சீரான தன்மை — சிக்கனயானது—வளைந்துகொடுத்தல் — சிறிய நாடு களுக்கு மிக ஏற்றது. ஒன்றிய அரசின் குறைகள் : பெரிய நாடுகளுக்குப் பொருந்தாது—வட்டார நலன் புறக் கணிக்கப்படுகிறது—மத்திய அரசின் சுமை அதிகம்— வல்லாட்சிக்கு வழிகோலும்.

**ஒன்றிய அரசிற்கு எடுத்துக்காட்டுகள் :** இங்கி லாந்து, நியூசிலாந்து, அயர்லாந்து, தென்னுப்பிரிக்கா, பிரான்சு, இத்தாலி.]

### ஒன்றிய நாடு (Unitary State)

அரசியலமைப்பின் தன்மையைக்கொண்டு எழுதிய, எழுதா அரசியலமைப்புகள் என்றும், ஆவண, ஆவண முறையில்லா அர சியலமைப்புகளென்றும் படித்தோம். அரசியலமைப்பை மாற்றும்

முறையை அடிப்படையாக வைத்து எளிதில் மாற்றக்கூடியதை நெகிழும் அரசியலமைப்பென்றும், எளிதில் மாற்ற இயலாததை நெகிழா அரசியலமைப்பென்றும் பிரித்தோம். இனி மத்திய அரசாங்கத்திற்கும், மாநில அரசாங்கங்களுக்கும் இடையே நிலவும் உறவுகளின் அடிப்படையில் ஒன்றிய நாடு என்றும், கூட்டரசுநாடு என்றும் பிரித்துப் படிப்போம்.

## ஒன்றிய அரசு

ஒன்றிய அரசில் இறைமை பிரிக்கப்படாமல் இருக்கும். இவ்விறைமை மத்திய அரசாங்கத்திடம் இருக்கும். இறைமை யுடைய ஒரே நிறுவனம் மத்திய அரசாங்கம் ஆகும். சட்டம் இயற்றும் மேலாண்மை மத்திய அரசிடமிருக்கும். அரசிய லமைப்பின்படி மத்திய அரசாங்கத்தின் சட்டம் மட்டுமே மேலாண்மையுடையதாகக் கருதப்படும். மத்திய அரசிற்கு மிக்கதும் ஒப்பானதுமோர் மற்ற நிறுவனம் ஒன்றிய அரசில் கிடையாது.

ஒன்றிய அரசைத் தெளிவாக அறிவதற்காகச் சில அரசிய லறிஞர்கள் கூறும் இலக்கணங்களைக் காண்போம்.

சி.எப். ஸ்ட்ராங்கின் கூற்றுப்படி,[1] ஒரு மத்திய அரசாங்கத்தின் ஆளுகையில் ஓர் அரசு அமையுமெனில் அது ஒன்றிய அரசு எனப்படும். எல்லா அதிகாரங்களையும் ஒரே அரசாங்கம் தன் விருப் பத்திற்கேற்பச் செலுத்தும். இந்த மத்திய அதிகாரம் அந்த அரசின் நிலப்பரப்பெங்கிலும் தங்குதடையின்றிச் செல்லுபடி யாகும். மத்திய அரசாங்கம் மாநிலங்களுக்கு அளிக்கும் அதிகாரத்தை எந்தச் சட்டத்தாலும் தடுக்க முடியாது.

பேராசிரியர் கார்னர் கருத்துப்படி, அரசாங்கத்தின் முழு அதி காரமும் ஒரு மத்திய நிறுவனத்திடமோ நிறுவனங்களிடமோ அர சியலமைப்பால் கொடுக்கப்பட்டிருக்கும். இந்த ஒரு மத்திய நிறு வனத்திடமிருந்தோ நிறுவனங்களிடமிருந்தோ உள்ளாட்சி நிறு வனம் தனது அதிகாரத்தைப் பெறும். மேலும், இந்த உள்ளாட்சி நிறுவனம் மத்திய நிறுவனத்தால் நிலவவிடப்பட்டுள்ளது. இம் முறை அரசாங்கம் ஒன்றிய அரசு எனப்படும்[2].

[1] C. F. Strong: 'A Unitary State is one in which we find the habitual exercise of supreme legislative authority by one Central power.'

[2] J. W. Garner: 'Where the whole power of government is confered by the constitution upon a single central organ or organs from which the local governments derive whatever authority or autonomy they may possess, and indeed their very existence, we have a system of Unitary Government.'

பேராசிரியர் வில்லோபியின் இலக்கணப்படி, ஒன்றிய அரசாங்கத்தில் அரசாங்கத்தின் அதிகாரம் அனைத்தும் ஒரு தனி மத்திய அரசாங்கத்திடம் அடங்கியுள்ளது[3]. அந்த அரசாங்கம் சிறந்ததெனத் தான் கருதும் வகையில் அதிகாரத்தை மாநிலங்களுக்குப் பகிர்ந்து கொடுக்கும் சுதந்திரம் உண்டு.

ஃபைனர் விளக்கப்படி, ஒன்றிய அரசாங்கம் என்பதில் எல்லா ஆதிக்கங்களும் அதிகாரங்களும் ஒரு தனி மையத்தில் அடங்கியிருக்கும். இந்தத் தனி மையத்தின் நபர்கள் நிலப்பரப்பு முழுவதிலும் ஆதிக்கமுள்ளவர்களாவர்[4].

நிருவாக வசதிக்காக மத்திய அரசாங்கம் தனது சட்டத் துறை, செயல்துறை, நீதித்துறை அதிகாரங்களை மாநில அரசாங்கங்களுக்கோ அல்லது மற்ற உள்ளாட்சி நிறுவனங்களுக்கோ கொடுக்கலாம். மத்திய அரசாங்கம் தனது அதிகாரங்களை இப்படிக் கொடுப்பது தன் வசதியின் காரணமாகவும், விருப்பத்தின் காரணமாகவும் கொடுப்பதாகும். அரசியலமைப்பின்படி அவசியமாகக் கொடுக்கப்படவேண்டியதாகாது. மத்திய அரசாங்கம் தன் விருப்பப்படி மாநில அரசாங்கங்களுக்கும் உள்ளாட்சி நிறுவனங்களுக்கும் கொடுத்த அதிகாரத்தைத் தான் விரும்பும் போது திரும்பப் பெறலாம். மேலும், மாநில அரசாங்கத்தையும் உள்ளாட்சி நிறுவனங்களையும் அழித்துவிட்டு மத்திய அரசாங்கமே இப்பகுதிகளை நேரடியாக ஆட்சி செய்யலாம்.

பிரிட்டன், பிரான்சு, ஹாலந்து, பெல்ஜியம், இத்தாலி ஆகியன ஒன்றிய நாடுகளாகும். இவைகளின் மத்திய அரசாங்கம் தனக்குக் கீழுள்ள மாநில அரசாங்கங்களுக்கு அதிகாரங்களைக் கொடுத்துள்ளன. மத்திய அரசாங்கம் அளித்துள்ள அதிகாரத்தை மட்டும் இம்மாநிலங்கள் செலுத்தும். தான் அளித்த அதிகாரங்களை இம் மாநிலங்களிடமிருந்து மத்திய அரசாங்கம் எப்போது வேண்டுமானாலும் திரும்ப எடுத்துக்கொள்ளலாம். ஆனால், அதே நேரத்தில் அமெரிக்காவிலுள்ள டெக்ஸாஸ் மாநிலம் செலுத்தும் அதிகாரங்களை அமெரிக்க மத்திய அரசாங்கம் எடுத்துக்கொள்ள முடியாது. ஏனெனில், கூட்டாட்சியின் உறுப்புகளாகிய மாநிலங்கள் தங்கள் அதிகாரத்தை அரசியலமைப்பின் வாயிலாகப்

[3] W. F. Willoughby: 'All the powers of government are concentrated in the hands of a single set of authorities. All the organs of government constitute integral parts of one piece of administrative mechanism.'

[4] Finer: 'Unitary type of government is one in which all authority and power are lodged in a single centre whose agents are omnipotent over the whole area.'

பெற்றுள்ளன. மத்திய அரசாங்கத்தின் விருப்பத்தால் மாநிலங்களுக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்கள் அல்லவாகும்.

## ஒன்றிய அரசின் கூறுபாடுகள்

ஒன்றிய அரசின் இன்றியமையாத பண்புகளாக சி. எப். ஸ்ட்ராங் இரு கூறுபாடுகளைக் கூறுகிருர். அவையாவன: (1) மத்தியப் பாராளுமன்றத்தின் மேலாண்மை. (2) இறைமையுடைய துணை நிறுவனங்கள் இல்லாமை.

### மத்தியப் பாராளுமன்றத்தின் மேலாண்மை

மத்தியப் பாராளுமன்றத்தின் சட்டம் அந்த அரசின் நிலப்பரப்பு முழுவதும் செல்லத்தக்கது ஆகும். நிருவாக வசதிக்காகச் சட்டம் இயற்றும் அதிகாரங்கள் மாநிலங்களுக்கும் உள்ளாட்சித் துறைகளுக்கும் கொடுக்கப்பட்டிருக்கலாம். ஒரு பொருள்பற்றி மத்தியப் பாராளுமன்றமும், மாநில சபைகளும் (French Departments), உள்ளாட்சி சபைகளும் (British Country Councils) சட்டம் இயற்றலாம். மாநில சபைகள் இயற்றிய சட்டங்களும், உள்ளாட்சி நிறுவனங்கள் இயற்றிய சட்டங்களும் மத்தியப் பாராளுமன்றத்தின் சட்டங்களுக்கு முரணுக இல்லாதவரை செல்லுபடியாகும். மாநிலங்களின் சட்டங்களும் உள்ளாட்சித்துறையின் சட்டங்களும் மத்தியப் பாராளுமன்றத்தின் சட்டத்திற்கு முரணுக இருந்தால் மாநிலச் சட்டங்களும் உள்ளாட்சித் துறையின் சட்டங்களும் செல்லாது. மத்தியப் பாராளுமன்றத்தின் சட்டமே செல்லுபடியாகும். இதுவே மேலாண்மையுடையதாக இருக்கும்.

நெகிழா அரசியலமைப்புடைய சில ஒன்றிய அரசுகளும் உண்டு. இவ்வரசுகளின் மத்தியப் பாராளுமன்றம் சில சட்டங்களை இயற்றும்போது அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள தனிமுறையைப் பின்பற்றியேதான் சட்டம் இயற்ற வேண்டும். ஒன்றிய அரசின் பாராளுமன்றத்திற்கு விதிக்கப்பட்ட இந்தத் தனி முறை கூட்டாட்சி அரசின் பாராளுமன்றத்திற்கு விதிக்கப்பட்ட தனி முறையைவிட எளிமையானது. கூட்டாட்சி அரசில் மத்தியப் பாராளுமன்றத்தின் சட்டம் இயற்றும் அதிகாரமும் மாநிலச் சட்ட சபைகளின் சட்டமியற்றும் அதிகாரங்களும் வரையறுக்கப்பட்டுள்ளன. இந்த வரையறைகளுக்குள் மாநிலச் சட்டசபைகள் சுதந்திரமாக மத்தியப்பாராளுமன்றத்தின் தலையீடும் மேலாண்மையும் இன்றிச் சட்டம் இயற்றலாம். ஆனால், ஒன்றிய அரசில் மத்திய அரசாங்கத்தின் பாராளுமன்றச் சட்டம் மேலாண்மையுடையதாக இருக்கும்.

## இறைமையுடைய துணை நிறுவனங்கள் இல்லாமை

ஒன்றிய அரசில் இறைமையுடைய இணை நிறுவனங்களோ துணை நிறுவனங்களோ கிடையா. மத்திய அரசாங்கம் ஆட்சித் துறை வசதிக்காக நிலப்பரப்பைப் பிரித்து நிறுவனங்களைத் தோற்றுவித்திருக்கும். அந்நிறுவனங்களுக்கு இறைமை அதிகாரம் கிடையாது. அவைகளை மாற்றவோ நீக்கவோ மத்திய அரசாங் கத்திற்கு அதிகாரம் உண்டு. எடுத்துக்காட்டாக, இங்கிலாந்தி லுள்ள இலண்டன் மாவட்ட அவை (London Country Council) மத்திய அரசாங்கத்தால் தோற்றுவிக்கப்பட்டதாகும். இதற்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் இங்கிலாந்துப் பாராளுமன்றத் தால் கொடுக்கப்பட்டனவே யொழிய இங்கிலாந்து அரசிய லமைப்பால் கொடுக்கப்பட்டனவல்ல. எனவே, பாராளுமன்றம் நினைத்தால் லண்டன் மாவட்ட அவையை எந்த நேரத்திலும் கலைக்கலாம்; நீக்கலாம்; அடியோடு அழிக்கலாம். இவ்வவை இறைமையற்றதும், மத்தியப் பாராளுமன்றத்திற்குச் சமமற்றது மாகும். எனவே, பாராளுமன்றத்தால் வழங்கப்பட்ட அதிகாரங் களை அது மீண்டும் எடுத்துக்கொள்ளலாம். ஆனால், கூட்டாட்சி அரசில் உள்ள மாநிலங்களின் அதிகாரத்தைக் கூட்டாட்சிப் பாராளுமன்றம் கூட்டவோ குறைக்கவோ முடியாது. ஏனெனில், இம் மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் அரசிய லமைப்பால் கொடுக்கப்பட்டனவாகும். மத்திய அரசாங்கத்தால் கொடுக்கப்பட்டனவல்ல. மாநில அதிகாரங்களைக் கூட்டவோ குறைக்கவோ அரசியலமைப்புத் திருத்தத்தாலேயே முடியும்.

ஒன்றிய அரசிலும் மத்திய அரசிற்குக் கட்டுப்பட்ட நிறுவனங்கள் பல உண்டு. அவைகளுக்கு அதிகாரங்களும் உண்டு. ஆனால், இந் நிறுவனங்களின் அதிகாரங்கள், அதிகாரப் பங்கீட்டு (Division of Powers) முறையில் கிடைக்கப்பட்ட அதிகாரங்கள் அல்ல. மத்திய அரசாங்கம் அளித்த அதிகாரங்களாகும். இவ் வதிகாரங்கள் உரிமையோடு பெற்றன அல்ல. ஆனால், கூட்டாட்சி அரசில் மாநில நிறுவனங்கள் பெற்றுள்ள அதிகாரப் பங்கீட்டின் விளைவு ஆகும். உரிமையோடு பெறப்பட்டனவும் ஆகும்.

ஒன்றிய அரசாங்கத்திற்குக் கீழ்க்காணும் சில கூறுபாடுகளும் உண்டு. இக் கூறுபாடுகள் சி. எப். ஸ்ட்ராங் கூறியுள்ள மத்தியப் பாராளுமன்றத்தின் மேலாண்மை, இறைமையுடைய துணை நிறுவனங்கள் இல்லாமை என்ற இன்றியமையாக் கூறுபாடு களுடன் கூடுதல் கூறுபாடுகளும் தன்மைகளும் ஆகும்.

### அதிகாரக் குவிப்பு

ஒன்றிய அரசில் மத்திய அரசாங்கத்திடம் அதிகாரம் குவிந்துள்ளது. மத்திய அரசே இறைமை உடையதாகவும் வல்லமை உடையதாகவும் இருக்கும். வசதிக்காக ஏற்படுத்தப்பட்ட நிலப் பிரிவுகளுக்கோ நிறுவனங்களுக்கோ தனித்தகுதி கிடையாது. மத்திய அரசாங்கத்திற்குக் கீழ்ப்பட்ட நிறுவனங்களாகவே செயல்படும். சுயாட்சியும் சுதந்திரமும் எந்த நேரத்திலும் அகற்றப்படும்.

### தனி ஓர் அரசாங்கம்

ஒன்றிய அரசில் தனி ஓர் அரசாங்கமே உண்டு. வலிமை மிக்க ஒரே பாராளுமன்றம், செயல்துறை, நீதிமன்றம் மட்டும் உண்டு. இங்கிலாந்தில் ஒரே பாராளுமன்றமும் அமைச்சரவையோடுள்ள அரசியார் நிருவாகத் துறையாகவும், பிரபுக்களவை நீதிமன்றமாகவும் உள்ளன.

### எழுதப்பட்ட அல்லது எழுதப்படாத அரசியலமைப்பு

ஒன்றிய அரசின் அரசியலமைப்பு எழுதப்படாததாக இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. இங்கிலாந்து ஒன்றிய அரசிற்கு எழுதப்படாத அரசியலமைப்புண்டு. ஆனால், இத்தாலி, ஜப்பான், பெல்ஜியம், பிரான்சு போன்ற ஒன்றிய அரசுகளுக்கு எழுதப்பட்ட அரசியலமைப்புகள் உண்டு. எனவே, ஒன்றிய அரசிற்கு அரசியலமைப்புகள் எழுதப்பட்டதாகவோ அல்லது எழுதப்படாததாகவோ இருக்கலாம்.

### நெகிழ்வுடைய அல்லது நெகிழ்வற்ற அரசியலமைப்பு

ஒன்றிய அரசின் அரசியலமைப்புப் பொதுவாக நெகிழ்வுடைய அரசியலமைப்பாகவே இருக்கும். இங்கிலாந்தின் அரசியலமைப்பு நெகிழ்வுடையதாகும். சாதாரணச் சட்டத்திற்கும் அரசியமைப்புச் சட்டத்திற்கும் வேறுபாடு கிடையாது. சாதாரணச் சட்டத்தைத் திருத்துவது போலவே அரசியலமைப்புச் சட்டத்தையும் திருத்தலாம். ஆனால், ஒன்றிய அரசு நெகிழ்வற்ற அரசியலமைப்பை உடையதாகவும் இருக்கலாம்.

### தனிச்சிறப்பு நீதிமன்றம் இல்லை

ஒன்றிய அரசாகிய இங்கிலாந்து நீதிமன்றங்களுக்குப் புனராய்வு அதிகாரம் (Judicial Review) கிடையாது. கூட்டாட்சி அரசில் இருப்பதுபோல் மத்திய மாநில உரிமைப் பிரச்சினைகளும் இங்கு எழுவதற்கில்லை. எனவே, தனிச்சிறப்பு நீதிமன்றங்கள் ஒன்றிய அரசில் இல்லை.

**அதிகாரப்பங்கீடு இல்லை**

கூட்டரசில் காணப்படும் அதிகாரப் பங்கீடு (Division of-Powers) ஒன்றிய அரசில்இல்லை. ஒன்றிய அரசில் மாநிலங்களுக்கென்த் தனி உரிமைகளோ அதிகாரங்களோ கிடையா. எனவே, அதிகாரப் பங்கீட்டிற்கு ஒன்றிய அரசில் அவசியமில்லை.

**ஒருமைப்பாடும் ஒற்றுமையும்**

ஒன்றிய அரசில் ஒருமைப்பாடும் ஒற்றுமையும் (Unity) மிக அவசியமாகும். பேராசிரியர் டைசியின் கருத்துப்படி, ஒன்றிய அரசின் நிறுவனங்கள் பிரிக்கவொண்ணு இணைப்புடைய பகுதிகளாகும். (Integral parts). இவைகளிடையே நிலவும் ஒருமைப்பாடும் ஒற்றுமையும் ஒன்றிய அரசின் கூறுபாடாகும்.

**ஒரு குடியுரிமை**

ஒன்றிய அரசில் ஒரு குடியுரிமையே உண்டு. கூட்டரசில் உள்ளது போன்ற இரண்டு குடியுரிமைகள் கிடையா. அமெரிக்க மாநிலமான வர்ஜினியாவில் குடியிருக்கும் ஒருவனுக்கு இரு குடியுரிமைகள் உண்டு. வர்ஜினியா மாநிலத்தின் குடிமகன் என்றும், அமெரிக்காவின் குடிமகன் என்றும் இரு குடியுரிமைகள் உள்ளன. ஆனுல், ஒற்றை அரசின் எந்தப்பகுதியில் வாழ்ந்தாலும் அந்த நாட்டின் குடிமகனுவான். இங்கிலாந்தின் எந்தப் பகுதியில் ஒருவன் வாழ்ந்தாலும் இங்கிலாந்துக் குடிமகன் என்ற ஒரு குடியுரிமைதான் உண்டு.

## ஒன்றிய அரசின் சிறப்புகளும் குறைகளும்

**ஒன்றிய அரசின் சிறப்புகள் : எளிமையானது**

ஒன்றிய அரசு எளிமையானது; சிக்கலற்றது. மத்திய அரசிற்கும் மாநில அரசுகளுக்கும் உள்ள முரண்பாடுகளும் சிக்கல்களும் கூட்டரசில் அதிகம் உண்டு. ஒன்றிய அரசில் மாநிலங்களின் பிரச்சினைகளுக்கு இடமில்லை. எனவே, ஒன்றிய அரசு சிக்கலற்றதாகவும் எளிமையுடையதாகவுமிருக்கும்.

**ஒற்றுமையும் ஒருமைப்பாடும்**

ஒன்றிய அரசில் ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் காணலாம். குடிமக்கள் ஓர் அரசாங்கத்தின் கீழ் வாழ்கின்றனர். அந்த ஓர் அரசாங்கத்திற்கே பற்றுடையவர்களாக இருப்பார்கள். கூட்டாட்சியில் மாநிலப் பற்றும் மத்திய அரசாங்கத்தின் மீதான பற்றும் உண்டு. இவைகளிடையே முரண்பாடுகள் தோன்றும்.

பிளவு மனப்பான்மை தோன்றும். இவைகளுக்கு ஒன்றிய அரசில் இடமில்லை

**திறமையுடையது**

ஒன்றிய அரசு திறமையுடையது ஆகும். ஏனெனில், நாடு முழுவதும் ஒரே விதமான சட்டமும் நிருவாகமும் இருக்கின்றன. அயல்நாட்டுக் கொள்கையிலும் தேசியப் பாதுகாப்பிலும் ஒரு முகமாகச் சட்டத்தை அமுல்படுத்தலாம். நெருக்கடி காலங் களில் ஒன்றிய அரசு திறமையுடன் பணியாற்றும்.

**நாட்டு நலனுக்கு முக்கியத்துவம்**

வட்டார நலனைவிட நாட்டு நலனே முக்கியத்துவம் பெறு கிறது. தேசிய நலனுக்கு எதிராக வட்டார நலன் அமையாது. கூட்டரசில் தேசிய நலனைவிட மாநில நலன் மிகுதியும் கவனம் பெறும். மாநில, வட்டார நலன்களுக்கும் நாட்டு நலனுக்கும் முரண்பாடுகள் தோன்றிக்கொண்டேயிருக்கும்.

**ஒரு சீரான தன்மை**

நாடு முழுவதற்கும் ஒரே பாராளுமன்றம் சட்டம் இயற்றுவ தாலும், ஒரே செயல்துறை இருப்பதாலும், ஒரு தலையாய நீதி மன்றம் இருப்பதாலும், சட்டத்திலும், நிருவாகத்திலும், நீதி நிருவாகத்திலும் நாடு முழுவதும் ஒரு சீரான (Uniformity) தன்மையைக் காணலாம். சட்டங்கள், கொள்கைகள், ஆட்சி முறைகள் ஆகியவற்றில் உறுதிப்பாடும் ஒருங்கமைப்பும் தென் படும்.

**சிக்கனமானது**

ஒன்றிய அரசில் செலவுச் சிக்கனத்தைக் காணலாம். அரசாங்க நிறுவனங்கள் மத்திய அரசிற்கு மட்டுமே உண்டு. ஒரு நாட்டிற்கு ஒரு மத்திய அரசாங்கமும் அதற்குரிய நிறுவனங்களும் தான் ஒன்றிய அரசில் உள்ளன. ஆனால், கூட்டரசில் மத்திய அரசாங்கமும், அதற்குரிய நிறுவனங்களும், அதேபோல மாநில அரசாங்கங்களும், அதற்குரிய நிறுவனங்களும் உண்டு. ஒரே அலுவல்கள் இருபடிகளில் செய்யப்படுகின்றன. மிகுந்த செலவு ஏற்படும். ஆனால், ஒன்றிய அரசில் செலவுச் சிக்கனம் உண்டு.

**வளைந்துகொடுத்தல்**

ஒன்றிய அரசு வளைந்து கொடுக்கும் தன்மையது. நெருக்கடி காலங்களில் உடைபடாமல் வளைந்து கொடுக்கும். விரைவில்

சட்டங்களை இயற்றி நடைமுறைப்படுத்தும். கூட்டரசு போல் மாநிலங்களைக் கலந்தாலோசிக்க வேண்டியதில்லை. எனவே, சந்தர்ப்பங்களுக்கேற்ப வளைந்து கொடுக்குந் தன்மையும் நெகிழும் தன்மையும் உடையது.

**சிறிய நாடுகளுக்கு மிக ஏற்றது**

ஒன்றிய அரசு சிறிய நாடுகளுக்கு மிகவும் ஏற்றது. புவியியல் ரீதியில் ஒருமைப்பாடு உடைய நாடுகளுக்கும், மதத்தாலும், மொழியாலும், இனத்தாலும் ஒருமைப்பாடுடைய நாடுகளுக்கும் மிகவும் ஏற்றதோர் அரசாங்க முறையாகும்.

**ஒன்றிய அரசின் குறைகள்: பெரிய நாடுகளுக்குப் பொருந்தாது**

பல்வேறுபட்ட இனம், மதம், மொழி ஆகியன பின்பற்றும் மக்களுடைய நாட்டிற்கும், பெரிய பரப்பளவுள்ள நாட்டிற்கும் ஒன்றியஅரசு பொருத்தமற்றதாக இருக்கும். ஒன்றிய அரசில் தேசியநலன் மட்டும் கவனிக்கப்படுவதால் சிறுபான்மையினரது நலன்கள் புறக்கணிக்கப்படுவதற்கான வாய்ப்புகள் உண்டு. மேலும் பரந்த நாட்டின் நிருவாகம் மையத்தில் குவிக்கப்படுமானால் திறமை குன்றும். அதிகாரம் பரவலாக்கப்பட வேண்டும். இந்தியா, அமெரிக்கா, ஸ்விட்ஸர்லாந்து போன்ற நாடுகளில் இனத்தாலும், மதத்தாலும், மொழியாலும் வேறுபட்ட மக்கள் வாழ்கின்றனர். எனவே, இந்நாடுகளில் ஒன்றிய அரசை நிறுவுவது மிகக் கடினம் ஆகும்.

**வட்டார நலன் புறக்கணிக்கப்படுகிறது**

மத்திய அரசிடம் அதிகாரமனைத்தும் ஒன்றிய அரசில் குவிந்திருக்கிறது. இது நாட்டுநலனை மட்டும் கவனிக்கிறதேயொழிய வட்டார நலனைக் கவனிப்பதில்லை. நாட்டின் பல பகுதிகளின் தேவையை மத்திய அரசு கவனிக்க இயலுவதில்லை. மேலும், அதிகாரக்குவிப்பின் காரணமாக மாநிலங்களுக்கும் உள்ளாட்சித் துறைகளுக்கும் அதிகாரம் வழங்குவதில்லை. எனவே, மாநில மக்களும் வட்டார மக்களும் ஆட்சிப்பொறுப்பில் பங்கு பெறும் வாய்ப்பினை இழக்கின்றனர். பொதுவாழ்வில் அவர்களுக்கு ஆர்வம் குன்றிவிடுகிறது. உள்ளாட்சியின் உயர்நிலை பழுதடைகிறது. இஃது ஒன்றிய அரசின் பெருங்குறையெனப் பேராசிரியர் கார்னர் கூறுகிறார்.[5] மேலும் வட்டாரத்தேவைகள் அங்கு வாழும்

[5] Dr. Garner : 'It tends to repress local initiative, discourages rather than timulates interest in public affairs, impairs the vitality of the local governments and facilitates the development of a centralized bureaucracy.'

மக்களுக்கே நன்கு தெரியும். அவர்களிடம் அதிகாரமும் பொறுப்பும் கொடுத்தால்தான் தங்கள் தேவையைப் பூர்த்திசெய்து கொள்வர். ஒன்றிய அரசு இதற்கு வழிகோலுவதில்லை.

**மத்திய அரசின் சுமை அதிகரிக்கிறது**

ஒன்றிய அரசில் அதிகாரப் பங்கீடு கிடையாது. மாநிலங்களுக்கோ, உள்ளாட்சித் துறைகளுக்கோ பொறுப்புகளோ, அதிகாரமோ கிடையா. நாட்டின் எல்லா அலுவல்களையும் மத்திய அரசாங்கமே கவனிக்கிறது. மத்திய அரசாங்கம் நாடு முழுவதற்கும் வேண்டிய சட்டங்களை இயற்ற வேண்டும். நாடு முழுவதையும் நிருவாகம் செய்ய வேண்டும். தற்காலத்தில் மக்கள் நலம் நாடும் அரசில் (Welfare State) அரசாங்கத்தின் பணிகள் அதிகரித்துக்கொண்டே செல்கின்றன. மேலும், சமுதாய, பொருளாதார, அரசியல் வளர்ச்சிகளுக்கேற்பப் பல புதிய சட்டங்கள் இயற்றப்பட வேண்டும். பல புதிய நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட வேண்டும். இத்துணைச் செயல்களையும் ஒன்றிய அரசில் மத்திய அரசாங்கமே செய்ய வேண்டும். மத்திய அரசாங்கத்தின் சுமை அதிகரிக்கிறது. இதன் காரணமாக மத்திய அரசாங்கம் திறம்படச் செயல்பட முடிவதில்லை. அரசாங்கச் செயல்கள் திறம்படச் செய்யப்பட வேண்டுமென்றால் தொழில் பகுப்பு அவசியம். இத் தொழிற் பகுப்பு இல்லாததால், எல்லா அலுவல்களையும் மத்திய அரசாங்கமே கவனிக்க வேண்டியுள்ளது.

**வல்லாட்சிக்கு வழிகோலும்**

ஒன்றிய அரசில் அதிகாரம் அனைத்தும் மத்திய அரசாங்கத்திடம் குவிந்துள்ளது. அதிகாரக் குவிப்பு எப்போதும் வல்லாட்சிக்குக் கொண்டு செல்லும். அதிகாரம் மனிதனைக் கெடுக்கும். அதிகாரமுடையவன் மேலும் அதிகாரம் பெறவும், இறுதியில் வல்லாட்சியை அமைக்கவும் முற்படுவான். இத்தாலிய நாட்டில் படிப்படியாக அதிகாரத்தைப் பெற்று முசோலினி வல்லாட்சியை நிறுவியதை வரலாறு காட்டும். பேராசிரியர் கார்னர் கருத்துப்படி, ஒன்றிய அரசு அதிகார வர்க்கத்தின் ஆதிக்கத்தை மத்திய அரசாங்கத்தில் தோற்றுவிக்கும்

## ஒன்றிய அரசிற்கு எடுத்துக்காட்டுகள்

**இங்கிலாந்து**

ஒன்றிய அரசிற்கு இங்கிலாந்து ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். இங்கிலாந்தின் வரலாற்றில் ஒவ்வொரு நிலையிலும்

ஒன்றிய தன்மை வளர்ந்ததை நாம் காணலாம். பண்டைக் காலத்தில் டியூட்டானியர்கள் படையெடுத்துப் பல சிறு அரசுகளைத் தோற்றுவித்தனர். இச் சிறு அரசுகள் பெரிய அரசுகளோடு இணைந்து ஏழு குடியரசுகள் தோன்றின. ஒன்றுபடுதலின் வழியாக இவ்வேழு அரசுகளும் மூன்று அரசுகளாகச் சுருங்கியன. வெஸக்ஸ் அரசு வலிமை மிக்கதாகி மற்ற அரசுகளை ஒருங்கிணைத்தது. இக்காலத்தில் டேனர்கள் இங்கிலாந்தின் மீது படையெடுத்தனர். இவர்களும் இணைப்பில் கலந்தனர்.

நார்மானியர்களின் படையெடுப்பினுல் ஆங்கிலேய முடியரசுகளின் ஒன்றிய தன்மை மேலும் ஓங்கியது. இங்கிலாந்து, வேல்ஸ், ஸ்காட்லாந்து ஆகியன ஐக்கியப்பட்டன. வேல்ஸை முதலாம் எட்வர்டு வென்று 1283-ல் இங்கிலாந்துடன் இணைத்தார். 1603-ல் டியூடர்களின் ஆட்சி மறைந்து ஸ்டுவர்டு மன்னர்களின் ஆட்சி தொடங்கியது. இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் 1707-ல் இயற்றப் பட்ட சட்டத்தின்படி (Act of Union) இணைந்தன. 1283-ல் வேல்ஸும், 1707-ல் ஸ்காட்லாந்தும் இங்கிலாந்தோடு இணைந்தன. 1800-ல் இயற்றப்பட்ட ஐக்கியச் சட்டத்தின் விளைவாக அயர்லாந்தும் இங்கிலாந்தோடு இணைந்தது. இவ்விணைப்புகளின் காரணமாக ஒன்றிய அரசு தோன்றியது. இணைந்த அரசுகள் எதுவும் தங்கள் இறைமையை வைத்துக்கொள்ளவில்லை.

1922-ல் அயர்லாந்து சுதந்திர நாடாக்கப்பட்டது. 1937-ல் அயர்லாந்து குடியரசு நாடானது. ஆயினும், ஒன்றிய அரசின் நிலப்பரப்புக் குறைந்ததேயொழிய ஒன்றிய தன்மை மாறவில்லை. அயர்லாந்து நீங்கலாக உள்ள கிரேட் பிரிட்டனும், வட அயர் லாந்தும் ஐக்கிய அரசு (United Kingdom) எனப்படும். ஒன்றிய அரசாக உள்ளது.

இங்கிலாந்து பல குடியேற்ற நாடுகளை ஏற்படுத்திப் பேரரசாகியது. பேரரசிலுள்ள நாடுகளுக்குச் சுதந்திரமும் வழங்கப்பட்டது. பொது நல அரசு ஏற்படுத்தப்பட்டது. இப்பேரரசு முறையிலும் காமன்வெல்த் முறையிலும் கூட்டாட்சித் தன்மையைக் காண முடிவதில்லை. ஒன்றிய ஆட்சியின் தன்மைகளே காணக் கிடக்கின்றன. கனடா, ஆஸ்திரேலியா, தென்னுப்பிரிக்கா ஆகிய நாடுகளுக்குப் பாராளுமன்றச் சட்டங்கள் வாயிலாகத் தன்னுட்சி உரிமை நிலை (Dominion Status) வழங்கப்பட்டது. சுயேச்சை பெற்ற நாடுகள் பொதுநல அரசின் உறுப்பினர்களாக இருக்கின்றன. இந்நாடுகளின் தலைமை அமைச்சர்கள் பொதுநல அரசின் கூட்டங்களில் கலந்துகொள்கின்றனர். கனடா, ஆஸ்திரேலியா

போன்ற நாடுகள் சுயேச்சையுடையவையாக இருந்தாலும் இங்கிலாந்து அரசியைப் பெயரளவில் தலைவியாக ஏற்றுக்கொள்கின்றன. 'மாட்சிமை தங்கிய அரசியாரின் கனடா அரசாங்கம்' என்றும், 'மாட்சிமை தங்கிய அரசியாரின் ஐக்கிய அரசு' என்றும் வழங்கப்படுகிறது.

பண்டைக் காலத்திலிருந்து தற்காலம் வரை இங்கிலாந்தின் அரசியல் அமைப்பு ஒன்றிய தன்மையுடையதாகவேயிருந்து வந்திருக்கிறது.

**நியூசிலாந்து**

நியூசிலாந்து இங்கிலாந்தின் குடியேற்றநாடாக இருந்தது. இங்கிலாந்துப் பாராளுமன்றத்தால் நியூசிலாந்திற்குச் சுயேச்சை வழங்கப்பட்டது. 1853-ல் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றம் நியூசிலாந்தில் ஏற்படுத்தப்பட்டது. 1856-ல் பொறுப்புள்ள அமைச்சரவை நிறுவப்பட்டது. இவ்விரண்டும் ஆங்கிலேயப் பேரரசுப் பாராளுமன்றத்தின் இரு சட்டங்களால் ஏற்படுத்தப்பட்டன. மாநிலங்கள் ஒவ்வொன்றிலும் சட்டமன்றங்கள் இருந்தன. இவைகள் அதிகாரம் படைத்தவையாக இருந்தன. 1876ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி மாநிலங்கள் நீக்கப்பட்டு நியூசிலாந்து ஒன்றிய அரசாக்கப்பட்டது. இறைமை முழுவதும் மத்திய அரசாங்கத்திடமேயுள்ளது.

**அயர்லாந்து**

அயர்லாந்து தீவகம் பூகோளரீதியில் ஒருமைப்பாடு உடையதாயினும், அரசியல் ரீதியில் இரண்டாகப் பிரிந்துள்ளது. கத்தோலிக்கர்களுடைய அயர்லாந்து முழுச்சுதந்திரம் உடைய நாடாக விளங்குகிறது. பிராட்டஸ்டண்டுகளையுடைய வட அயர்லாந்து தனது உள்ளாட்சியை நிறுவிக்கொண்டு இங்கிலாந்துடன் இணைந்து அதன் பாராளுமன்றத்திற்கு உறுப்பினர்களை அனுப்பிக்கொண்டிருக்கிறது. அயர் எனப்படும் உரிமை பெற்ற நாடான அயர்லாந்து 1937ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள் 29ஆம் நாள் புதிய அரசியலமைப்பை ஏற்படுத்திக்கொண்டது. இதன்படி கவர்னர் ஜெனரல் நீக்கப்பட்டு நாட்டின் தலைவர் நியமிக்கப்பட்டார். குடியேற்ற உரிமை நாடு என்ற முறையில் இங்கிலாந்தின் மன்னரை அயர்லாந்து தங்கள் தலைவராக ஏற்றுக்கொண்டது. நாளடைவில் அயர்லாந்து குடியாட்சியை நிறுவிக்கொண்டது. இரண்டாம் உலகப் போரில் அயர்லாந்து நடுநிலை வகித்தது. இங்கிலாந்திற்கு எவ்விதத்திலும் உதவவில்லை. 1948ஆம் ஆண்டு அக்டோபரில்

பிரிட்டிஷ் காமன்வெல்த்திலிருந்து அயர்லாந்து விலகிச் சுதந்திர அயர் குடியரசை நிறுவியது. அரசியலமைப்பின்படி அயர்லாந்து ஒன்றிய அரசாக அமைந்துள்ளது.

**தென்னுப்பிரிக்கா**

தென்னுப்பிரிக்காவில் ஒரு புது விதமான ஒன்றிய ஆட்சி நிலவுகிறது. 1910ஆம் ஆண்டில் நன்னம்பிக்கை முனை, நேட்டால், டிரேன்ஸ்வால், ஆரஞ்சு சுதந்திர நாடு ஆகியன இணைந்து ஒரு ஐக்கியம் தோன்றியது. இவைகள் ஒவ்வொன்றிலும் ஒரு மாநிலச் சட்டமன்றம் உண்டு. மாநிலச் சட்டங்கள் மத்தியப் பாராளுமன்றத்தின் சட்டத்திற்கு முரணாக இருக்கக்கூடாது. தென்னுப்பிரிக்க அரசியலமைப்பு கூட்டரசாகவுமில்லாமல், அரைக் கூட்டரசாகவும் இல்லாமல் ஒன்றிய அரசாக இருக்கிறது. மாநிலங்கள் மத்திய செனட் சபைக்கு அங்கத்தினர்களை அனுப்புகின்றன. ஆனால், இச்சபைக்கு அமெரிக்க செனட் சபையின் அதிகாரம் இல்லை.

குடியேற்ற உரிமை நாடுகளான கனடா, ஆஸ்திரேலியா, நியூசிலாந்து ஆகிய நாடுகளில் இல்லாத பிரச்சினைகள் தென்னுப்பிரிக்காவில் உள்ளன. முந்திய ஜெர்மானியக் குடியேற்ற நாடாகிய தென்மேற்கு ஆப்பிரிக்காவைத் தென்னுப்பிரிக்கா இணைத்துக் கொண்டது. இந்த இணைப்பைச் சர்வதேச நீதிமன்றம் ஏற்கவில்லை. தென்மேற்கு ஆப்பிரிக்காவின் பிரச்சினையில் பொறுப்பாண்மைத் திட்டத்திற்கு எதிராகத் தென்னுப்பிரிக்கா நடந்து கொண்டது.

தென்னுப்பிரிக்க ஐக்கிய அரசாங்கம் மிகச் சிக்கலான இனப் பிரிவினைக் கொள்கையைப் பின்பற்றுகிறது. இந்தக் கொள்கை உலக மக்களிடையே வெறுப்பை ஏற்படுத்தியுள்ளது. பிரிட்டிஷ் காமன்வெல்த் உறுப்பினர்களிடையேயும் வெறுப்பைத் தோற்றுவித்துள்ளது. எனவே, தென்னுப்பிரிக்கா பிரிட்டிஷ் பொதுநல அரசிலிருந்து 1961-ல் விலகித் தற்போது சுதந்திரக் குடியரசாக இருக்கிறது. முடியரசும் தலைமை ஆளுநரும் நீக்கப்பட்டுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். ஐக்கியம் என்ற சொல் நீக்கப்பட்டுக் குடியரசு என்ற சொல் வழங்கப்படுகிறது. மத்திய அரசாங்கத்தில் அதிகாரக்குவிப்பு இருப்பதையும், ஒன்றிய அரசாக விளங்குவதையும் நாம் காணலாம்.

**பிரான்ஸ்**

ஆரம்ப காலத்திலிருந்து தற்காலம்வரை பிரான்ஸில் இணைப்பும் ஒன்றியத் தன்மையும் நீங்காது நிலவுகிறது. பிரெஞ்சுப் புரட்சிக்கு

முன் பிரான்சு நாடு லூயி மன்னர்களின் ஆட்சியில் ஒன்றிய அரசின் தன்மையுடையதாக இருந்தது. 1789-ல் பிரெஞ்சுப் புரட்சியின் மூலம் லூயி மன்னர்களின் முடியாட்சி வீழ்த்தப்பட்டு, 1791-ல் புதிய அரசியலமைப்பு நிறுவப்பட்டது. பேரரசின் தோற்றத்தால் இந்த முதல் அரசியலமைப்பு அழிந்தது. 1830-ல் இரண்டாம் அரசியலமைப்புத் தோற்றுவிக்கப்பட்டது. பின்னர் ஏற்பட்ட பேரரசின் தோற்றத்தால் இதுவும் நீக்கப்பட்டது. 1875-ல் மூன்ருவது அரசியலமைப்புத் தோற்றுவிக்கப்பட்டு, அது 1940 வரை நீடித்தது. இந்த அரசியலமைப்பில் ஒன்றியத்தன்மையும் அதிகாரக்குவிப்பும் நிலவின. மாநில அரசாங்கங்கள் மத்திய அரசாங்கத்தின் விருப்பப்படி நீக்கக்கூடியனவாக இருந்தன. மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்திற்குட்பட்டே மாநில அரசாங்கங்கள் நடைபெற்றன. மத்திய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட மாநிலத் தலைவர் இருந்தார்.

1946 அக்டோபரில் நான்காம் குடியரசு ஏற்படுத்தப்பட்டது. இதன்படி மாநிலங்களான டிபார்ட்மெண்டுகளுக்கு அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. இருப்பினும், பிரான்ஸ் அரசின் ஒன்றியத் தன்மை குறையவில்லை. 1958 செப்டம்பர்த் திங்களில் குடியொப்பத்தின் மூலம் ஐந்தாவது குடியரசு நிறுவப்பட்டது. பிரான்சுத் தலைவர் டிகால் பிரான்சின் தேசிய ஒற்றுமைக்காக ஒன்றிய ஆட்சியை வலியுறுத்தினர். பிரான்சு நாடு ஆரம்பத்திலிருந்து தற்காலம் வரை ஒற்றுமையையும், ஒரே வகை அதிகாரங்களையும் பெற்றுத் திகழ்ந்துகொண்டிருக்கிறது.

### இத்தாலி

விக்டர் இமானுவேல் தலைமையில் கவூர், கரிபால்டி ஆகியவர்களின் ஒத்துழைப்பால் 1871-ல் இத்தாலி ஐக்கியம் உற்றது. லம்பார்டி, வெனிஸ்ஸியா, சிஸ்லி சார்டீனியா, பிடிமாண்ட், போப்பாண்டவரின் நிலப்பகுதிகள் ஆகிய அனைத்தும் இணைக்கப்பட்டன. ஆனால், இந்த இணைப்பு அமெரிக்கக் கூட்டரசு முறையில் அமைக்கப்படவில்லை. இவ்விணைப்புகளிடையே ஒன்றியத் தன்மை நிலவியது. முசோலினியின் காலத்தில் திட்டவட்டமான ஒன்றியத் தன்மையுடைய வல்லாட்சி நிறுவப்பட்டது. இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு 1948-ல் ஏற்பட்ட புதிய அரசியலமைப்பில் வல்லாட்சியும் முடியாட்சியும் நீக்கப்பட்டுக் குடியாட்சி அமைக்கப்பட்டது. இந்தப் புதிய அரசியலமைப்பின்படி மாநிலங்களுக்குச் சுயாட்சி அளிக்கப்பட்டது. மாநிலங்களுக்குச் சட்டமன்றங்களும் உண்டு. ஆனால், இம் மாநிலங்களின் அதிகாரங்களும் அலுவல்களும் பிரிட்டனின் வட்டார அரசாங்கத்திற்குரிய அதிகாரங்

களையும் அலுவல்களையும்விடக் குறைவாகவேயுள்ளன. சி. எப். ஸ்ட்ராங்கின் கூற்றுப்படி[6] 'புதிய குடியரசில் பரம்பரை மன்னருக்குப் பதிலாகத் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் எண்பது ஆண்டுகளாக மரபாயுள்ள அரசியல் ஒற்றுமை குலைக்கப்படவில்லை.'

இங்கிலாந்து, நியூசிலாந்து அயர்லாந்து, தென்னுப்பிரிக்கா, பிரான்சு, இத்தாலி ஆகிய நாடுகளில் ஒன்றிய அரசு அமைப்பு நிலவுவதைக் கண்டோம். ஒன்றிய அரசிற்கு இங்கிலாந்து மிகச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

## முக்கிய விஞக்கள்

1. ஒன்றிய அரசின் முக்கியக் கூறுபாடுகள் யாவை?
2. ஒன்றிய அரசின் சிறப்புகளையும் குறைகளையும் கூறுக.
3. இங்கிலாந்து அரசின் ஒன்றியத் தன்மையைக் காட்டுக.
4. குறிப்பெழுதுக:
   (அ) நியூசிலாந்து ஒன்றிய அரசு
   (ஆ) அயர்லாந்து ஒன்றிய அரசு
   (இ) தென்னுப்பிரிக்கா ஒன்றிய அரசு
   (ஈ) பிரான்சின் ஒன்றிய அரசு
   (உ) இத்தாலியின் ஒன்றிய அரசு

## ஆ. கூட்டரசு நாடு
## (Federal State)

[**இணைப்புகளின் வகைகள்:** அமைப்புடைய கூட்டும் அமைப்பில்லாக் கூட்டும்—தனி நபர் கூட்டும் உண்மைக் கூட்டும் — பன்னுட்டு ஒப்பந்தங்கள் — கூட்டாட்சியும் நேசக்குழுவும்.

**கூட்டரசு இலக்கணம்**

**கூட்டாட்சி தோன்றும் முறைகள்:** தனி அரசுகள் ஒன்று சேருதல்—ஒன்றிய அரசு கூட்டரசாதல்.

[6] C. F. Strong : 'It is true to say that the constitution of the new Republic while it changes the titular headship of the state from an hereditary monarchy to an elective presidency, does not fundamentally disturb the eighty year-old tradition of political unity in Italy.'

**கூட்டாட்சியின் முன் தேவைகள்:** ஐக்கியமடைய நாடுகளிடை ஏற்படும் விழைவு—வட்டாரங்களிடையே ஏற்படும் சுதந்திர விழைவு ஒருங்கிணைதலன்றி ஒன்றுகும் விழைவல்ல—விழைவன்று—ஓரின உணர்வு— திறமையான தலைமை—நில அமைப்பில் அண்மை—நிறுவனங்களிடையே காணும் ஒற்றுமை—வல்லாட்சி நிறுவனங்கள் கூட்டரசுக்கு முரண்பட்டவை — பகுதிகளுக்குச் சம தகுதி—சிறந்த அரசியலறிவு—போதுமான பொருளாதார வளம்.

**கூட்டாட்சியின் இன்றியமையாக் கூறுகள்:** அதிகாரப் பங்கீடு — எழுதிய அரசியலமைப்பு—அரசியலமைப்பின் மீயுயர்வு—நெகிழா அரசியலமைப்பு—தலைமை நீதிமன்றம்—சட்டமன்றத்தின் மேலவை—இரட்டை ஆட்சியும் இரட்டைக் குடியுரிமையும்.

**கூட்டாட்சியின் பிரச்சினைகள்:** அதிகாரப் பங்கீட்டு முறை—சிறு நாடுகளுக்குப் பாதுகாப்பு—மத்திய மாநில உறவுகள்—மாநிலங்களிடையே உறவு — அரசியலமைப்புத் திருத்தம்—பிரிவினை.

**கூட்டாட்சியின் நிறைகளும் குறைகளும் :** கூட்டாட்சியின் நிறைகள்— சிறு அரசுகளுக்குக் சிறந்த மாற்று முறை—ஒற்றுமை வேற்றுமைகளிடையே சமநிலை—வல்லாட்சியைத் தடுக்கிறது—அரசியலறிவு வளம் பெறும்—பெரிய நாடுகளுக்கு ஏற்றது—அலுவலகப் பாகுபாடு—வட்டார நலன் பேணப்படுகிறது—கூட்டாட்சியின் குறைகள் :- எளிமையின்மை—அதிகச் செலவினங்கள்—பூசல்களுக்கு இடம்—அயல்நாட்டுக் கொள்கையில் முரண்பாடு—தேசப்பற்றுப் பிளவு—வளையா அரசியலமைப்பு—சட்டப்பிணக்கு—வட்டார நலனுக்கு முக்கியத்துவம்—பழமையை விரும்பும் நீதிமன்றம்.

**ஒன்றிய அரசிற்கும் கூட்டாட்சி அரசிற்கும் வேறுபாடுகள் :** அதிகாரக் குவிப்பும் பங்கீடும்—ஒருமை, பன்மை அரசாங்கங்கள்—எழுதா, எழுதிய அரசியலமைப்பு — நெகிழ்வுடைய, நெகிழ்வற்ற அரசியலமைப்பு—நீதிமன்றம் — ஒற்றையாட்சி, இரட்டையாட்சி—அதிகார ஒருதலையும் சமநிலையும்—ஒரு சீரான சட்டம் பலவகைச் சட்டம்—வேறுபாடுகள் குறைதல்.

**கூட்டாட்சி அரசிற்கு எடுத்துக்காட்டுகள் :** அமெரிக்க ஐக்கிய நாடுகள்—ஸ்சுவிஸ் நேசக் குழு—ஆஸ்தி

ரேலியக் காமன் வெல்த்—கனடாவின் தன்னுட்சி—ஜெர் மானியக் கூட்டாட்சி — சோவியத் ரஷ்யாவில் கூட் டாட்சி—யூகோஸ்லாவியக் கூட்டாட்சி—லத்தீன் அமெ ரிக்காவில் கூட்டாட்சி அரசியலமைப்புகள் — இந்திய அரசியலமைப்பு.]

அரசுகளிடையே ஏற்படக்கூடிய இணைப்புகளையும் கூட்டு களையும் அறிதல் கூட்டாட்சி (Federation) பற்றியும், நேசக்குழு (Confederation) பற்றியும் தெளிவாகத் தெரிய வகை செய்யும். உலக அரசுகளிடையே கூட்டு, சங்கம், ஒன்றியம் ஆகியன தோன்றலாம். இவைகளின் தோற்றம் ஒரு நோக்கத்தை அடிப் படையாகக் கொண்டு அமையும்.

## இணைப்புகளின் வகைகள்

ஜெல்லிநெக் என்பவர் அரசுகளிடையே ஏற்படக்கூடிய கூட்டை அமைப்புடைய கூட்டு என்றும், அமைப்பில்லாக் கூட் டென்றும் வகுத்துள்ளார். கார்னர் என்பவர் தனி நபர் கூட்டு என்றும், உண்மைக் கூட்டு என்றும் பிரித்துள்ளார். சர்வதேச ஒப்பந்தங்களும் ஒருவகைக் கூட்டேயாகும். கூட்டாட்சியும் கூட்டமைப்பும் அரசுகளின் கூட்டு வகையில் சேரும்.

### அமைப்புடைய கூட்டும் அமைப்பில்லாக் கூட்டும்

அமைப்புடைய, அமைப்பில்லாக் கூட்டுகள் (Organised and Unorganised) என்னும் பகுப்பு மிகப் பொதுவான பகுப்பாகும். ஒப்பந்தங்களும் உடன்பாடுகளும் உள்ள கூட்டு அமைப்புடைய கூட்டு எனப்படும். ஒப்பந்தங்களோ, உடன்பாடுகளோ இல் லாத கூட்டும் திட்டமிட்டிருந்த கூட்டும் அமைப்பில்லாக் கூட்டு எனப்படும்.

### தனி நபர்க் கூட்டும் உண்மைக் கூட்டும்

தனி நபர்க் கூட்டு (Personal Union) முடியாட்சி அரசுகளி டையே தோன்றும். இரு அரசுகள் ஒரு மன்னனின் ஆட்சியிலி ருந்தாலும், அவ்விரு அரசுகளும் கூட்டாக இணைந்தாலும் இது தனி நபர்க் கூட்டு எனப்படும்.[7] ஆங்கிலேய மன்னர் ஆட்சியின் கீழ் இருந்த இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் 1603ஆம் ஆண்டில்

[7] J.W. Garner: 'A personal union exists where two or more states, invariably monarchies, have the same physical persons as their king or chief of state.' (Page 245. Political Science and Government)

இணைந்து ஒரு கூட்டை ஏற்படுத்தின. இதே போல 1714ஆம் ஆண்டில் இங்கிலாந்தும் ஹனேவரும் கூட்டில் சேர்ந்தன. தனி நபர் கூட்டில் சேரும் நாடுகள் சுதந்திரமாகத் தங்கள் அமைப்பு களின்படியே இருக்கலாம். இதில் பொது ஆட்சியாளராக மன்னர் விளங்குவார்.

உண்மைக் கூட்டு என்பது தனிநபர் கூட்டைவிட அதிக இணைப்புடையது. இதிலும் பொது ஆட்சியாளர் இருப்பர். இருப் பினும் ஒப்பந்தத்தின் அடிப்படையிலும் அமைப்பின் அடிப்படை யிலும் கூட்டுத் தோன்றுகிறது. 1867ஆம் ஆண்டில் ஆஸ்திரியா வும் ஹங்கேரியும் கூட்டுச் சேர்ந்தன. இவைகள் தனித்தனியே சுதந்திரமாக இயங்கின. தங்கள் சட்டதிட்டங்களேயே பின் பற்றின. இருப்பினும், பொதுநல அடிப்படையிலும் சர்வதேச ரீதியிலும் உண்மைக் கூட்டுத் தோன்றுகிறது. இந்த உண்மைக் கூட்டு நீண்டகாலம் நிலைப்பதில்லை. இஃது ஒன்றிய ஆட்சியாகவோ அல்லது கூட்டாட்சியாகவோ மாறி மலர்கிறது.

### பன்னாட்டு ஒப்பந்தங்கள்

பன்னாட்டு ஒப்பந்தங்களும் ஒரு வகைக் கூட்டே ஆகும். ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட அரசுகள் தங்கள் பொது விரோதியைத் தாக்குவதற்காக ஒப்பந்தங்களைச் செய்து கொள்ளு கின்றன. ஒப்பந்த அரசுகள் இறைமையையும் சுதந்திரத்தையும் இழப்பதில்லை. எனவே, விரும்பினல் கூட்டில் இருக்கலாம். அல்லது கூட்டிலிருந்து விலகலாம். உலகப் பெரும் போர்களின் போது தோன்றிய நேச நாடுகளின் கூட்டும், அச்சு நாடுகளின் கூட்டும் பன்னாட்டு ஒப்பந்தங்களுக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

### கூட்டாட்சியும் நேசக்குழுவும்

கூட்டாட்சியும் நேசக்குழுவும் முக்கியமான கூட்டுகளாகும். இவைகளும் சங்கங்கள், கூட்டுகள், கூட்டங்கள், ஒப்பந்தங்கள் ஆகியவற்றின் வகையைச் சார்ந்தனவேயாகும். தங்களிடையே யுள்ள இணைப்பின் அளவையும் தன்மையையும் பொறுத்துக் கூட்டுகளின் தராதரம் அமைகின்றன. இவைகள் பற்றிப் பின்வரும் பகுதியில் தெளிவாகக் காண்போம்.

## கூட்டரசு இலக்கணம்

ஒப்பந்தம், உடன்படிக்கை ஆகியவைகளின் அடிப்படையில் பல சிறிய அரசுகள் ஒன்றுசேர்ந்து உருவாக்கும் புதிய அரசே கூட்டரசு எனப்படும். சிறிய அரசுகள் தங்கள் தனித் தன்மையை

இழந்துவிடுவதில்லை. நன்மையைக் கருதித் தங்கள் இறைமையை விட்டுக்கொடுக்கின்றன. கூட்டரசில் மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கங்களும் அரசியலமைப்பிடமிருந்து தங்கள் அதிகாரங்களைப் பெறுகின்றன. கூட்டரசில் உள்ள மாநிலங்களின் அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்தால் வழங்கப்பட்டனவல்ல. எனவே, மாநில அரசாங்கங்களின் உரிமைகளைக் கூட்டவோ குறைக்கவோ மத்திய அரசாங்கத்தால் இயலாது. கூட்டரசில் மத்திய அரசாங்கம் அல்லது கூட்டாட்சி அரசாங்கம் என்றும் மாநில அரசாங்கம் (States Cantons Provinces) என்றும் இரு அரசாங்கங்கள் உண்டு. இவைகளிடையே அதிகாரப் பங்கீடு செய்யப்பட்டிருக்கும்.

கூட்டரசிற்கு அரசியலறிஞர் கூறும் இலக்கணங்களைக் காண்பின் கூட்டரசின் தன்மை மேலும் தெளிவுபடும்.

பேராசிரியர் டைசியின் இலக்கணப்படி, கூட்டரசு என்பது நாட்டின் ஒருமைப்பாட்டையும் மாநிலங்களின் உரிமைகளையும் இணைக்கச் செய்யும் ஓர் அரசியல் ஏற்பாடாகும்.[8]

டாக்டர் கார்னர் கூற்றுப்படி, கூட்டாட்சி அரசாங்கம் ஒருமுக ஆட்சி அரசாங்கத்திலிருந்து வேறுபடுத்தப்படுகிறது. கூட்டாட்சி அரசைத் தோற்றுவித்துள்ள தனி மாநிலங்களுக்கும் அல்லது நிலப்பிரிவுகளுக்கும் மத்திய அரசாங்கத்திற்குமிடையே அரசாங்கத்தின் அதிகாரம் பிரிக்கப்பட்டு அரசியலமைப்பால் பகிர்ந்தளிக்கப்படுகிறது. மாநில அரசாங்கங்கள் மத்திய அரசாங்கத்தால் தோற்றுவிக்கப்பட்டன அல்ல. இவைகளின் சுயாட்சியை மத்திய அரசாங்கம் , தீர்மானிப்பதில்லை. ஆனால், கூட்டரசின் அரசியலமைப்புத் தீர்மானிக்கிறது.[9]

அலெக்ஸாண்டர் ஹாமில்டன் கருத்துப்படி, பல அரசுகள் ஒன்றுசேர்ந்து புதிய அரசை ஏற்படுத்தும் முறையே கூட்டாட்சியாகும்.

[8] A. V. Dicey : 'A federal state is a political contrivance intended to reconcile national unity and power, with the maintenance of state rights.' (Page 143, Law of the Constitution)

[9] Dr. Garner : 'Federal government is Contradistinguished from unitary government is a system in which the totality of government power is divided and distributed by the national constitution or the organic act of Parliament creating in between central government and the governments of the individual states or other territorial sub divisions of which the federation is composed. These latter governments are something more than parts or agents of the central organisation, their sphese of autonomy is determined not by the government but by the general constitution of the federation'. (Political Science and Government.)

ஜே. எஸ். மில் அவர்களின் விளக்கப்படி, முழுமையான கூட்டரசில் ஒவ்வொரு குடிமகனும் தன் மாநில அரசாங்கத்திற்கும் மத்திய அரசாங்கத்திற்கும் ஆக இரண்டு அரசாங்கங்களுக்குப் பணிவுள்ளவனுக இருக்கிருன்[10].

## கூட்டாட்சி தோன்றும் முறைகள்

கூட்டாட்சி இருமுறைகளில் தோன்றுகின்றது. தனி அரசுகள் ஒன்றுசேர்ந்து ஒரு மைய அரசை நிறுவுதல் ஒரு முறையாகும். இங்குத் தனி அரசுகள் மையத்தை நோக்கிச் செல்கின்றன. இரண்டாவது முறையில் மத்திய அரசிலிருந்து மாநிலங்கள் பிரிக்கப்பட்டு அரசியலமைப்பின் அடிப்படையில் அதிகாரம் வழங்கப்படுகின்றன. இம்முறையிலும் கூட்டாட்சி தோற்றுவிக்கப் படுகிறது.

### தனி அரசுகள் ஒன்றுசேருதல்

இறைமையும் சுதந்திரமும் உடைய அரசுகள் பல பொது நலன் கருதிக் கூட்டாக இணையலாம். இப்படிக் கூட்டாக இணைவதால் அயல்நாடுகளின் ஆக்கிரமிப்பிலிருந்து பாதுகாத்துக் கொள்வதோடு, அயல்நாடுகளின் ஆக்கிரமிப்பை இணைந்து எதிர்க்கவும் முடியும். மேலும் தனிச் சிறு அரசு தனது பொருளாதாரத் தேவைகளையும் நிறைவு செய்துகொள்ள இயலாது. மற்ற அரசுகளோடு இணைந்திருந்தால் சிறிய அரசு தனது தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள இயலும். இக்காரணங்கள் கருதி அரசுகள் மையத்தினை நோக்கி வந்து (Centripetal Forces) ஒன்றிணையும்.

மையத்தை நோக்கி வந்து ஒன்றிணைந்த அரசுகளுக்கு எடுத்துக்காட்டுகள் காணலாம். பழைய கிரேக்க அரசுகள் ஒன்றிணைந்து கூட்டரசை நிறுவித் தங்கள் எதிரிகளைத் தோற்கடித்தன. அமெரிக்காவில் நிறுவப்பட்ட பதின்மூன்று குடியேற்ற அரசுகள் தங்கள் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காக ஒன்றிணைந்து அமெரிக்க ஐக்கிய நாடுகள் என்னும் புதியதோர் கூட்டாட்சி அரசைத் தோற்றுவித்தன. ஆஸ்திரேலியா நாட்டிலிருந்த ஆறு குடியேற்ற அரசுகள் ஒன்றுசேர்ந்து 1901ஆம் ஆண்டில் ஆஸ்

[10] J.S. Mill: 'Under the more perfect mode of federation, where every citizen of each particular state owes obedience to two governments - that of his own state and that of the Federation - it is evidently necessary not only that the constitutional limits of the authority of each should be precisely and clearly defined, but that the power to decide between them in any case of dispute should not reside in either of the governments or in any functionary subject to it, but in an umpire independent of both - supreme court.' (Representative Government.)

திரேலியக் கூட்டாட்சி அரசை நிறுவி ஜப்பானிடமிருந்து வந்த ஆபத்தைத் தவிர்த்தன.

ஒருங்கிணைய விரும்பிய தனியரசுகள் தங்களுக்குள் உடன்படிக்கைகளையும் ஒப்பந்தங்களையும் செய்து கொள்கின்றன. மத்திய அரசாங்கம் ஒன்றைத் தோற்றுவிக்கின்றது. இந்த மத்திய அரசாங்கத்திற்குத் தங்கள் இறைமையை விட்டுக்கொடுக்கின்றன. நாடு முழுவதற்குமான தேசிய முக்கியத்துவமுள்ள செயல்களையும் அதிகாரங்களையும் மத்திய அரசாங்கத்திடம் ஒப்படைக்கின்றன. நாட்டின் பாதுகாப்பு, ராணுவம், அயல்நாட்டுத் தொடர்பு போன்ற அதிகாரங்கள் கூட்டாட்சி அரசிடம் விடப்படுகின்றன. மாநில நலனும் வட்டார நலனும் அடங்கியுள்ள அதிகாரங்களை மாநிலங்களே வைத்துக்கொள்கின்றன. மத்திய மாநில அரசுகளின் அதிகாரங்களை அரசியலமைப்புப் பாதுகாக்கிறது. அரசாங்கங்கள் அதிகாரங்களை மாற்ற இயலாது. அரசியலமைப்புத் திருத்தத்தாலேயே மாற்ற இயலும். சிறிய அரசின் கூட்டால் புதிய அரசு தோற்றுவிக்கப்படுகிறது. சிறிய அரசுகளின் இறைமை இதனால் அழிக்கப்படுகிறது. அதன் மக்கள் மத்திய அரசிற்கும் மாநில அரசிற்கும் பற்றுள்ளவர்களாகின்றனர்.

**ஒன்றிய அரசு கூட்டரசாதல்**

பரந்த நிலப்பரப்புடைய ஒன்றிய அரசு வேற்றுமையின் அடிப்படையில் ஒற்றுமையை ஏற்படுத்தக் கருதி மாநிலங்களுக்கு அரசியலமைப்பு வழியான உரிமைகளும் அதிகாரங்களும் வழங்கலாம். முக்கியத்துவம் வாய்ந்த அதிகாரங்களைத் தன்னகத்தே வைத்துக்கொண்டு இதர அதிகாரங்களை மாநில அரசுகளுக்கு அளிக்கலாம். மாநிலங்கள் சுயேச்சையாக அரசியலமைப்பின்படி தமக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களைச் செலுத்தலாம். எடுத்துக்காட்டாக, 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் இந்தியாவைக் கூட்டாட்சி அரசாக அமைக்க விழைந்தது.

எனவே, தனியரசுகள் ஒன்று சேருதல் மூலமும், ஒன்றிய அரசு பிரிதல் மூலமும் கூட்டாட்சி அரசு தோன்றலாம்.

## கூட்டாட்சியின் முன் தேவைகள்

கூட்டரசில் மத்திய அரசாங்கமும், சுயாட்சி உடைய மாநில அரசாங்கங்களும் உள்ளன. இவ்விரு அதிகாரங்களும் ஒற்றுமையுடனும் முரண்பாடுகள் இன்றியும் செயல்படவேண்டும். தங்களுக்கு அளிக்கப்பட்ட அதிகார வரம்பிற்குள் விருப்பத்தோடு

இயங்க வேண்டும். இதற்காகக் கூட்டரசு அமைக்கப்படுவதற்கு முன்பே கூட்டரசிற்குச் சாதகமான சில சூழ்நிலைகளும் நிபந்தனைகளும் கூறப்படுகின்றன. இந்தச் சூழ்நிலைகளும் நிபந்தனைகளும் அனைத்தும் இருக்குமானால் நிரந்தரமாக நீடிக்கும் ஒரு கூட்டரசினை ஏற்படுத்த முடியும். ஆனால், இந்த நிபந்தனைகள் அனைத்தும் இருப்பது நடைமுறையில் இயலாததாகும். இருப்பினும் கீழ்க் காணும் கூறுபாடுகளில் பெரும்பான்மைக் கூறுபாடுகளாயினும் இருந்தால் நல்லதோர் கூட்டரசை நிறுவ முடியும்.

**ஐக்கியமடைய நாடுகளிடையே ஏற்படும் விழைவு** (Desire for Union)

பேராசிரியர் டைசியின் கருத்துப்படி கூட்டுச் சேர வேண்டுமென்ற உண்மையான ஐக்கிய விழைவு வேண்டும். தங்கள் இறைமையை விட்டுக்கொடுக்கவும் இணையவும் விருப்பம் இருக்க வேண்டும். நல்ல பிரதிபலன் வலுவாக இருக்குமானால் இவ் விருப்பம் தோன்றும். இவ்விருப்பம் பூரணமாக இல்லையெனில் கூட்டாட்சியில் சேர்ந்த அரசுகள் ஒற்றுமையாக இருக்க இயலாது. தனியாகச் சுயேச்சை அரசாக இருந்த ஓர் அரசு தன் இறைமையை விடவேண்டுமென்றால் அரசியலில் ஒருமைப்பாட்டுணர்ச்சி அவசியம். இன்பத்திலும் இடையூறிலும் பங்கேற்கும் மனப்பான்மையும் வேண்டும்.

**வட்டாரங்களிடையே ஏற்படும் சுதந்திர விழைவு** (Desire for Local Independence)

ஐக்கிய விழைவு மிக அதிகமானால் அஃது ஒன்றிய ஆட்சியில் கொண்டு செலுத்திவிடும். மாநிலங்களின் தனித்தன்மை அழிந்துவிடும். எனவே, கூட்டாட்சி அமைப்பதற்கு ஐக்கியத்திற்கு எவ்வளவு விழைவும் விருப்பமும் உண்டோ அந்த அளவு விழைவும் விருப்பமும் வட்டார மாநில சுதந்திரத்திற்கும், சுயாட்சிக்கும் தனித்தன்மையைக் கடைப்பிடிக்கவும் இருக்க வேண்டும். அப்போதுதான் அது முறையான கூட்டாட்சியாகும்.

**ஒருங்கிணைதலன்றி ஒன்றுகும் விழைவல்ல** (Desire for Union Not Unity)

கூட்டரசில் சேரும் நாடுகள் ஒன்றுசேர்ந்து கூட்டரசை ஏற்படுத்த விழைவுடையனவாக இருக்கவேண்டுமே யொழிய ஒன்று சேர்த்து ஒன்றிய அரசை ஏற்படுத்த விழைவுடையனவாக இருக்கக் கூடாது. கூட்டாட்சி அரசில் சேரவும் ஒத்துழைக்கவும் விருப்பம் இருப்பதோடு தங்கள் தனித்தன்மையைக் காக்கவும்

பேணவும் ஆர்வமுள்ளனவாக இருக்க வேண்டும். ஒன்றி இருக்க வேண்டுமென்றும், ஒன்றாக இருப்பதில்லையென்றும் பேராசிரியர் வியர் கூட்டாட்சி அரசிற்கு இலக்கணம் கூறியுள்ளார்.[11] கூட்டாட்சி அரசில் சேர்ந்தாலும் சுயேச்சையுடையதோர் தங்கள் மாநிலப் பகுதி அரசாங்கத்தையும் நிறுவ விருப்பமுடையவர்களாக வேண்டும். இதன் மூலம் தங்கள் இனம், மொழி, மரபு ஆகியவை களையும் காக்க ஆர்வம் வேண்டும். டைசியின் கூற்றுப்படி, கூட்டாட்சி அரசு என்பது மத்திய அரசாங்கங்களுக்கும் மாநில உரிமை களுக்கும் சமரசம் காணும் ஏற்பாடேயாகும்.

### ஓரின உணர்வு (Feeling of Homogenity)

கூட்டாட்சி அரசைத் தோற்றுவிக்கும் அரசுகளிடையேயும், அதன் மக்களிடையேயும் இன உணர்வு இருக்க வேண்டும். அரசியல் நிறுவனங்களிலும் அரசியல் ஆர்வங்களிலும் ஒத்துணர்வு கூட்டரசின் உறுப்பின் மக்களிடம் இருக்க வேண்டும். மதத்தாலும், மரபாலும், மொழியாலும் தங்களிடையே நிலவும் வேறுபாடுகளைப் பெரிதெனக் கருதாது மறந்து இனவுணர்வு உள்ளவர்களாக வாழ வேண்டும். தங்களுக்குள்ள ஆபத்துகளும், அண்டை நாட்டினர் ஆக்கிரமிப்பும் வலுவடையும்போது இந்த ஒத்துணர்வு மிகுதியாக நிலவும். அதே போல ஸ்விட்ஸர்லாந்தின் எல்லைகளில் ஆபத்து நிலவியபோதும் அண்டை நாடுகளின் ஆக்கிரமிப்பும் அச்சுறுத்தலும் நிறைந்திருந்த போதும் அம்மக்களிடையே ஒருமைப்பாடு மேம்பட்டது. அவர்கள் தங்களிடையே நிலவிய மத வேறுபாடு, மொழி வேறுபாடு ஆகியவற்றைப் பெரிதெனக் கருதாது செயல்பட்டனர். ஆபத்து அதிகமாகும்போது ஒருமைப்பாடும் அதிகமாகும். கனடா நாட்டிலும் தென்னாப்பிரிக்காவிலும் மத வேறுபாடுகளும், இன வேறுபாடுகளும், மொழி வேறுபாடுகளும் பின்னிலை அடைந்து ஒருமைப்பாடும் ஒத்துணர்வும் ஓங்கியது. எனவே, இனவுணர்வு கூட்டாட்சி அரசை நிறுவுவதற்கு முக்கிய முன்கூறுபாடாகும்.

### திறமையான தலைமை (Able Leadership)

கூட்டரசுகளை நன்கு நடத்தவும், மக்களிடையே ஐக்கியத்திற்கு விருப்பம் ஏற்படுத்தவும் மதம், மொழி, இனம், மரபு இவைகளால் ஏற்படும் வேறுபாடுகளைத் தடுக்கவும் நல்ல திறமை மிக்க தலைவர்கள் அவசியமாகின்றனர். ஜான் மேக்டனால்டு (John Macdonald), அலெக்ஸாண்டர் கால்ட் (Alexander Galt), ஜார்ஜ் இட்டினி

[11] K. C. Wheare: 'Must desire to be united but not to be unitary.' (Page 36, Federal Governments)

(George Etienne) போன்ற திறமை மிக்க தலைவர்கள் கனடா கூட்டரசில் மக்களிடை ஐக்கியத்தை ஏற்படுத்தினர்கள். அர சாங்கத்தை செந்நெறியில் கொண்டுசென்றனர்கள். அமெரிக்க நாட்டில் மொழி, இனம், மதம், அரசியல் நிறுவனங்கள் ஆகிய அடிப்படையில் ஏராளமான வேறுபாடுகள் நிலவின. நேசக்குழு (Confederation) ஏற்படுத்தலாமேயொழியக் கூட்டாட்சி(Federation) ஏற்படுத்த முடியாத சூழ்நிலையிருந்தது. ஆனால், ஜார்ஜ் வாஷிங்டன் (George Washington), அலெக்ஸாண்டர் ஹேமெல்டன் (Alexander Hamilton), மாடிசன் (Madison), பென்ஜமின் பிராங்க்ளின் (Benjamin Franklin), ஜேம்ஸ் வில்சன் (James Wilson) போன்ற அரும்பெருந் தலைவர்களின் தலைமையின் காரணமாக அமெரிக்காவில் கூட்டரசை நிறுவமுடிந்தது. மேலும், கூட்டரசில் மக்கள் தியாக மனப்பான்மையை உடையவர் களாகவும் இருக்க வேண்டும்.

மத வேறுபாட்டைப் பெரிதெனக் கருதாது இருந்திருந்தாலும், ஜின்னு (Jinnah) போன்ற தலைவர்கள் ஒத்துழைத்திருந்தாலும் இந்திய நாடு பாரதம், பாகிஸ்தான் எனப் பிளவுபட்டிருக்காது. பாகிஸ்தானை உள்ளடக்கியதோர் இந்தியக் கூட்டாட்சி ஏற்பட்டிருக்கும். எனவே, தலைவர்களின் தன்மைக்கேற்ப கூட்டாட்சி ஏற்படுவதும், அதில் ஒருமைப்பாடு ஏற்படுவதும் அமைகிறது என்று பேராசிரியர் வியர் (Wheare) கூறுகிருர்[12].

**நில அமைப்பில் அண்மை** (Geographical Contiguity)

கூட்டாட்சியை அமைக்க விரும்பும் அரசுகள் நில அமைப்பில் அருகில் இருக்க வேண்டும். அப்போது கூட்டாட்சியை எளிதில் நிறுவலாம். கூட்டாட்சி அரசின் உறுப்பு நாடுகள் பெரிய நிலப் பகுதியாகவோ கடலாலோ பிரிக்கப்பட்டிருக்கக் கூடாது. அப்படி பிரிக்கப்பட்டிருந்தால் பிரிக்கப்பட்டுள்ள பகுதி கவனம் பெறுது. பிரிக்கப்பட்டுள்ள மக்களுக்கு இனவுணர்வும் ஒருமைப்பாடும் ஏற்படாது. மேலும், நாட்டின் பாதுகாப்பிற்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் இந்தப் பிரிவு தடையாக இருக்கும். கூட்டாட்சி முறை அரசாங்கத்தில் மாநில அரசாங்கங்கள் தங்கள் அரசாங் கத்தை நடத்துவதுடன் கூட்டாட்சி அரசாங்கத்திலும் பங்கு கொள்ள வேண்டும். எனவே, கூட்டாட்சி அரசமைப்பில் மாநிலங்கள் அருகில் இருப்பது ஆர்வத்தில் ஒருமைப்பாட்டையும்,

[12] K.C. Wheare: 'This factor or leadership, of skill in negotiation and propaganda, can make all the difference between stagnation and an inactive desire for union.' (Page 40, Federal Government.)

ஐக்கியத்தில் ஆர்வத்தையும் ஏற்படுத்தும். பேராசிரியர் கில் கிறைஸ்டு கூற்றுப்படி,[13] நில அமைப்பில் அதிகமான இடைவெளி யிருப்பின் கவனமின்மையும் ஒற்றுமையின்மையும் மத்திய மாநில அரசாங்கங்களிடையே ஏற்பட்டுவிடும். மக்கள் வெவ்வேறு பகுதி களில் தொலைவில் வாழ்ந்துவந்தால் அவர்களிடையே ஒற்றுமை குன்றிவிடும். பொதுப் பாதுகாப்பு, பொதுப் பொருளாதார முன் னேற்றம் பாதிக்கப்படும்.

அமெரிக்கா, இந்தியா, சுவிட்ஸர்லாந்து, கனடா, ஆஸ்திரே லியா ஆகிய நாடுகளில் மாநிலங்கள் நில அமைப்பில் அருகில் இருக்கின்றன. எனவே, இந்நாடுகளின் கூட்டாட்சி எளிதில் நிறுவப்பட்டுத் திறம்படச் செயல்பட ஏதுவாயிற்று. அமெரிக்கா வின் மாநிலங்களான அலாஸ்காவும், ஹவாய்த் தீவுகளும் நில அமைப்பில் தூரத்திலிருக்கின்றன. ஆனால், அமெரிக்காவின் அரசியல் முன்னேற்றமும் ராணுவ வலிமையும் இதனால் ஏற்படும் குறையை நீக்குகின்றன.

பாகிஸ்தானின் நிலப்பகுதி பிரிக்கப்பட்டிருந்தது. கிழக்குப் பாகிஸ்தான், மேற்குப் பாகிஸ்தானிலிருந்து நெடுந் தொலைவிலிருந் தது. இவ்விரு பகுதிகளுக்கிடையே இந்திய நிலப்பகுதி யிருந்தது. இதன் காரணமாகக் கூட்டாட்சியரசு பாகிஸ்தானுக்கு ஏற்றதாக இல்லாதிருந்தது. மேலும், நில அமைப்பில் நெடுந்தூரத்திலிருந்த கிழக்குப் பாகிஸ்தான் மத்திய அரசாங்கத்தால் நன்கு கவனம் பெறவில்லை. கிழக்குப் பாகிஸ்தானின் பாதுகாப்பு ஏற்பாடுகளும் பொருளாதார முன்னேற்றங்களும் கவனம் பெறவில்லை. கிழக்குப் பாகிஸ்தான் மக்களிடம் வெறுப்புணர்ச்சி தோன்றியது. எனவே, பாகிஸ்தானுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து, சுதந்திரம் பெற்று, வங்காள தேசம் என்னும் தனியரசாகத் திகழுகிறது. நில அமைப் பில் மாநிலங்கள் அடுத்திருக்க வேண்டியதன் அவசியத்திற்கு, பாகிஸ்தானுக்கு ஏற்பட்ட கிழக்குப் பாகிஸ்தானின் இழப்பே சிறந்த எடுத்துக்காட்டாகும்.

### நிறுவனங்களுக்கிடையே காணும் ஒற்றுமை (Similarity of Institutions)

கூட்டரசை உருவாக்கும் நிலப்பகுதிகளிடையே, அரசுகளி டையே, மாநிலங்களிடையே, உறுப்புகளிடையே சமுதாய நிறுவ

[13] Gilchrist: 'Distance leads to carelessness or callousness on the part of both central and local governments. National Unity is difficult to attain where the people are too far apart.'

னங்களிலும், அரசியல் நிறுவனங்களிலும் ஒருமைத் தன்மை இருப்பின் அவைகள் இணைந்து செயலாற்ற விருப்பங் கொள்ளும். பேராசிரியர் வியர் இக்கருத்தைப் பெரிதும் வலியுறுத்துகிறார்.[14] எனவே, அரசியலறிஞர்கள் கூட்டாட்சி அரசாங்கத்தின் அமைப்பைப் போலவே மாநில அரசாங்கங்களின் அமைப்பும் இருக்க வேண்டுமென்று வலியுறுத்துகின்றனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளும், சுவிட்ஸர்லாந்தும், மத்திய அரசாங்கம் குடியாட்சி அமைப்பையுடையதால் மாநில அரசாங்கங்களும் குடியாட்சி அமைப்புடன் இருக்க வேண்டுமென விரும்பியுள்ளன.

இந்தியா, கனடா, ஆஸ்திரேலியா, ஆகிய கூட்டாட்சிகளில் மத்திய அரசாங்கம் பாராளுமன்ற முறையைப் பின்பற்றுகின்றன. எனவே, மாநிலங்களும் தங்கள் அரசாங்கங்களைப் பாராளுமன்ற முறையில் அமைத்துள்ளன. ஆகவே, கூட்டாட்சி உறுப்புகளிடையே நிறுவனங்களில் ஒருமைப்பாடு கூட்டாட்சியைத் தோற்றுவிக்க ஊக்கமளிக்கும்.

1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம் இந்திய மாநிலங்கள், மன்னர்களின் நாடுகள் ஆகியவைகளிடையே கூட்டை அமைத்து இந்தியக் கூட்டாட்சியை ஏற்படுத்த முனைந்தது. இந்திய மாநிலங்களின் அரசாங்க அமைப்பு சுயாட்சி முறையில் அமைந்திருந்தன. மன்னர் நாடுகளில் முடியாட்சி நிலவின. மத்திய அரசாங்கத்திற்குப் பிரதிநிதிகளை அனுப்பும்போது சுயாட்சி மாநிலங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை அனுப்பின. மன்னர் நாடுகள் நியமிக்கப்பட்ட உறுப்பினர்களை அனுப்பின. இவர்கள் மக்களால்தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளல்லர். இவ்விருவகை அரசாங்க நிறுவனங்களை இணைத்துக் கூட்டாட்சியை அமைப்பது கடினமாக இருந்தது. எனவே, கூட்டாட்சியை அமைக்கும்போது மாநிலங்களிடையே ஒரே விதமான அரசியல் நிறுவனங்கள் இருக்க வேண்டியது அவசியமாகும்.

1950ஆம் ஆண்டில் இந்தியக்குடியரசு ஏற்படுத்தப்பட்டபோது மாநிலங்களில் ஒரேவிதமான அரசியல் நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டன. அப்போதுதான் மாநிலங்களின் ஒன்றியம் (Union of States) இந்தியாவில் ஏற்படுத்த முடிந்தது.

[14] K. C. Wheare: "The desire for union has practically never been aroused unless similarity of political institutions was present actually or potentially among those who envisaged the union." (Federal Governments)

எப்படிக் கூட்டாட்சி உறுப்புகளில் அரசியல் நிறுவனங்களின் ஒருமைத் தன்மை அவசியமோ அதேபோலச் சமுதாய நிறுவனங்களிலும் ஒருமைத்தன்மையிருந்தால் உறுப்புகளிடையே கூட்டு எளிதில் ஏற்படும். ஆனால், பல வேறுபட்ட இனத்தாரும், மதத்தாரும், மொழியாரும் வாழும் நாட்டில் சமுதாய நிறுவனங்களில் ஒருமைப்பாடு காண்பது அரிது. எனவே, கூட்டாட்சியில் வேறுபாடுகளுக்கும் இடமளிக்க வேண்டும் என்பது ஏற்றுக் கொள்ளப்பட்டது.

### வல்லாட்சி நிறுவனங்கள் கூட்டரசுக்கு முரண்பட்டவை

அரசியல் நிறுவனங்களிலும் சமுதாய நிறுவனங்களிலும் ஒற்றுமை கூட்டாட்சி உறுப்புகளிடையே இருக்கவேண்டும் என்பதைக் கண்டோம். ஆனால், கூட்டாட்சியின் உறுப்பினர்களான மாநிலங்களிடையே நிறுவனம் இருக்கக்கூடாது. வல்லாட்சி நிறுவனங்கள் நாளடைவில் வல்லாட்சியைத் தோற்றுவிக்கவே முயலும் என வியர் கூறுகிறார்.[15] எனவே உறுப்பு மாநிலங்களில் குடியாட்சி, மக்களாட்சி வகையில் ஏதாவது ஒன்று நடைமுறையிலிருக்க வேண்டும். சுதந்திரமான தேர்தல்கள் நடைபெற்று மக்கள் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். எதிர்க்கட்சிகளுக்கு இடமிருக்க வேண்டும். வல்லாட்சியில் எதிர்க்கட்சிகளுக்கு இடமிருக்காது. சுதந்திரமான தேர்தல்களுக்கு இடமிருக்காது. வல்லாட்சியாளர்களால் நியமிக்கப்பட்டவர்களே பிரதிநிதிகளாகக் கூட்டாட்சி அரசாங்கத்திற்கு வருவர். இவ்வல்லாட்சி முறைகள் அனைத்தும் கூட்டாட்சிமுறைக் கோட்பாடுகளுக்கு எதிரானதாகும். எனவே, கூட்டாட்சியில் சேர விரும்பும் உறுப்பு அரசாங்கம் வல்லாட்சியுடையதாக இருக்கக்கூடாது.

### பகுதிகளுக்குச் சமத்தகுதி

கூட்டாட்சியை ஏற்படுத்தியுள்ள பகுதிகள் பரப்பளவிலும் மக்கள் தொகையிலும் சமமாக இருத்தல் கூட்டாட்சிக்கு நல்லதாகும். முடிந்த அளவு இச்சமநிலை நிலவ வேண்டும். இந்தச் சமநிலைஇல்லாவிடில் பல தீங்குகள் தோன்றும். கூட்டாட்சி அரசாங்கத்தில் சமப் பங்காளிகளாக இருக்கமாட்டார்கள். மிகுந்த நிலப் பரப்பும், அதிக மக்கள் தொகையும், நிறைந்த வளமுமுள்ள மாநிலம் மற்ற மாநிலங்களின்மீது ஆதிக்கம் செலுத்தும். சிறிய பரப்

[15] Wheare: "Autocracy or dictatorship, either in the general government or in the regional government, seems certain, sooner or later to destroy that equality of status and that independence which these governments must enjoy, each in its other sphere, if federal government is to exist at all"

பளவும் குறைந்த மக்கள் தொகையும் உடைய, வளம் குறைந் மாநிலங்கள் ஒதுங்கி நிற்கவேண்டியிருக்கும். இம்மாநிலங்களுக்குப் பெரிய மாநிலங்களின் மீது நம்பிக்கை இழந்து ஐயப்பாடு தோன் றும். ஜான் ஸ்டூவர்டு மில் (John Stuart Mill) அவர்களின் கருத் துப்படி, கூட்டாட்சியில் எந்த ஒரு மாநிலமும் மற்ற எல்லா மாநிலங்களின் சக்தியைவிட அதிகம் உடையதாக இருக்கக் கூடாது.[16] வியர் (Wheare) அவர்களின் கூற்றுப்படி, கூட்டாட்சி யை வகுப்பவர்கள் ஏதாவது ஒரு முறைச் சமத்துவத்தை ஏற் படுத்த வேண்டும். ஒரு நிலப்பகுதி மற்றதன் மீது ஆதிக்கம் செலுத்தக்கூடாது. எந்தவொரு உறுப்பும் மிகப் பெரியதாகவோ மிகச் சிறியதாகவோ இருக்கக்கூடாது என்பது முக்கியமாகும்.[17] 1871ஆம் ஆண்டின் ஜெர்மனியக் கூட்டரசில் பிரசியா நிலப்பரப்பி லும் மக்கள்தொகையிலும் பெரிய பகுதியாகவிருந்து, மற்ற உறுப்பி னர்களின் மீது மிகுந்த ஆதிக்கம் செலுத்தியது. ரஷ்யக் கூட் டாட்சியில் ரஷ்யக் குடியரசு மிகப்பெரியதாகும். இது மற்ற மாநிலங்களின் மீது ஆக்கம் செலுத்துவதோடு மத்திய அரசாங் கத்திலும் இதன் ஆதிக்கம் மிகுதியாகும். எனவே, கூட்டாட்சி உறுப்புகள் முடிந்த அளவு சமநிலையுள்ளதாக இருக்கவேண்டும்.

### சிறந்த அரசியலறிவு

கூட்டாட்சியை ஏற்படுத்தக் கருதும் அரசியல்வாதிகள் தேர்ந்த அரசியல் அறிவு படைத்தவர்களாக இருக்கவேண்டும். இவர்கள் மக்களாட்சியிலும் சுதந்திரமான தேர்தலிலும் நம்பிக்கை யுடையவர்களாகத் திகழவேண்டும். மக்களும் தியாக உணர் வுடையவர்களாகவும், விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையும், பொறையுடைமையும் உடையவர்களாகவும் இருத்தல் வேண்டும்' தங்கள் உரிமைகளைப் பேணுகிறவர்களாகவும், கடமைகளையாற்று பவர்களாகவும் இருக்கவேண்டும்.

[16] John Stuart Mill: 'There should not be any one state so much more powerful than the rest as to be capable of vying in strength with many of them combined. If there be such a one, and only one, it will insist on being master of the joint deliberations; if there be two, they will be irresistible when they agree and whenever they differ everything will be decided by a struggle for ascendancy between the rivals.' (Page 367. Representative Government.)

[17] K. C. Wheare. 'There must be some sort of reasonable balance which will ensure that all the units can maintain their independence within the sphere allowed to them and that no one can dominate the others. It must be the task of those who frame and work a federal government to see that no unit shall be too large, and, equality important, none too small.' (Page 53. Federal Government.)

**போதுமான பொருளாதார வளம்**

கூட்டாட்சி அமைக்கவிருக்கும் அரசுகளுக்குப் போதுமான பொருளாதார வளம் (Adquate Economic Resources) இருக்க வேண்டும். சுதந்திரமான மத்திய அரசாங்கத்தைத் திறம்பட நடத்தவும், அதே நேரத்தில் சுயேச்சையான மாநில அரசாங்கத்தை நடத்தவும் தேவையான பொருளாதார வளம் அவசியமாகும். மாநிலங்களுக்குப் போதுமான பொருளாதார வசதியில்லாவிடில் மத்திய அரசிற்கும் செலவிடமுடியாமல், தங்கள் அரசாங்கத்திற்கும் செலவிட முடியாமல் கூட்டாட்சி முறையைப் பயனற்றதாக்குவர். கூட்டாட்சி முறை அரசில் இரு அரசாங்க முறையுள்ளதால் செலவு அதிகம். இதை ஏற்கும் வசதிகள் கூட்டாட்சியின் உறுப்புகளுக்கு அவசியமாகும்.

## கூட்டாட்சியின் இன்றியமையாக் கூறுகள்

கூட்டாட்சி அரசிற்கு முக்கியக் கூறுகள் உண்டு. முழுவளர்ச்சி பெற்றுள்ள கூட்டாட்சிக்குக் கீழ்க்காணும் முக்கியக் கூறுகள் (Essential features) அவசியமாகும். இக்கூறுகள் கூட்டாட்சியை ஒன்றிய ஆட்சியிலிருந்து வேறுபடுத்துகின்றன.

**அதிகாரப் பங்கீடு** (Division of Powers)

கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்கள் மத்திய மாநில அரசாங்கங்களிடையே மூவகையாகப் பங்கிடப்படுகின்றன. ஒன்று கூட்டாட்சியின் மத்திய அரசாங்கத்திற்கென்று அதிகாரங்களை ஒதுக்கிவிட்டு எஞ்சிய அதிகாரங்களை (Residuary powers) மாநில அல்லது கூட்டாட்சி உறுப்பு அரசாங்கங்களுக்கு ஒதுக்குவது. இம்முறை அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் சுவிட்ஸர்லாந்திலும் நிலவுகின்றன. இம்முறையைப் பின்பற்றும் கூட்டாட்சியில் உள்ள மாநிலங்கள் கூட்டாட்சி ஏற்படுவதற்கு முன் சுதந்திரமான இறைமையுடைய அரசுகளாக இருந்தன. அவைகள் கூட்டாட்சியை யேற்றுக்கொண்டு தங்களிடம் உள்ள குறிப்பிட்ட அதிகாரங்களை மத்திய அரசாங்கத்திற்கு அளித்துள்ளன. எஞ்சிய அதிகாரங்களைத் தாங்களே வைத்துள்ள இம்முறையில் கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. கூட்டாட்சி அரசாங்கம் மாநிலங்களுக்கு எதிராக அதிகாரம் செலுத்துவது தடுக்கப்படுகிறது. இம்முறையில் மாநிலங்களின் சுயேச்சை அதிகமாக வலியுறுத்தப்படுகிறது. மாநிலங்கள் தங்கள் தனித்தன்மையை இழப்பதில்லை. கூட்டரசு தோற்றுவிக்கப்பட்டாலும் மாநிலங்களின் உரிமைகளும் காக்கப்படுகின்றன.

மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் இடையேயுள்ள அதிகாரப் பங்கீட்டில் இரண்டாவது முறையும் உண்டு. மாநில அரசாங்கங்களுக்கு முதலில் அதிகாரங்கள் ஒதுக்கப்படுகின்றன. எஞ்சிய அதிகாரங்களை மத்திய அரசாங்கமாகிய கூட்டாட்சி அரசாங்கம் எடுத்துக்கொள்கிறது. இவ்வித அதிகாரப் பங்கீட்டு முறை கனடா நாட்டில் நிலவுகிறது. இங்கு மாநிலங்களின் அதிகாரம் வரையறுக்கப்பட்டு மத்திய அரசாங்கம் வலிமை மிக்கதாக ஆக்கப்படுகிறது. மாநிலங்களின் அதிகாரம் குறைக்கப்படுகிறது. கனடா அரசியலமைப்பு மத்திய அரசாங்கத்தை வலுவுபடுத்தியதற்குக் காரணங்கள் அன்று கனடாவில் நிலவிய சூழ்நிலையே யாகும். கனடாவில் ஆங்கிலேயர்களுக்கும் ஃபிரஞ்சுக்காரர்களுக்கும் இனச்சண்டை நடைபெற்றுக் கொண்டேயிருந்தது. ஒன்றிய அரசு கனடாவில் வெற்றிபெருமல் தோல்வி அடைந்தது. மேலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் கனடாவின் உறவு முறை திருப்திகரமாக இல்லை. மேலும் அமெரிக்கச் சுதந்திரப் போருக்குப் பிறகு அமெரிக்க நேசக்குழு அழிந்தது. கனடாவிற்கு இருந்த இந்தச் சூழ்நிலைகளைக் கருத்தில் கொண்டு அதிக அதிகாரமுடைய மத்திய அரசாகவும், ஆனல் ஒன்றிய அரசாக அல்லாமல் கூட்டரசாகவும் கனடாவின் அரசியலமைப்பு வகுக்கப்பட்டது.

மூன்ருவது முறை ஒருங்கிணைவுப் பட்டியலைக் (Concurrent List) கொண்டதாகும். இந்திய அரசாங்கத்தின் மத்திய மாநிலங்களுக்கு இடையிலான அதிகாரப் பங்கீட்டை அறிய வேண்டும். அதிகாரங்களை மத்திய மாநில அரசாங்கங்களிடையே பங்கிட்டு மூன்று பட்டியல்கள் உள்ளன. ஒன்று மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்களின் பட்டியல் (Union List); இரண்டு மாநில அரசாங்கங்களின் அதிகாரங்களின் பட்டியல் (State List); மூன்று மத்திய மாநில அரசாங்கங்களுக்குப் பொதுவான அதிகாரங்களின் பட்டியல். இதை ஒருங்கிணைவுப்பட்டியல் (Concurrent List) எனக்கூறுவர். மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்களின் பட்டியலில் வரும் அதிகாரங்கள் குறித்து மத்திய அரசாங்கம் மட்டுமே சட்டங்கள் இயற்றி அதிகாரத்தைச் செலுத்தலாம். மாநில அரசாங்கங்களுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரப் பட்டியலின் அதிகாரங்களை மாநில அரசாங்கங்கள் சட்டங்கள் இயற்றிச் செலுத்தலாம். மத்திய மாநில அரசாங்கங்களுக்குப் பொதுவான அதிகாரப் பட்டியலில் உள்ள அதிகாரங்கள் சம்பந்தமாக மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கமும் சட்டங்கள் இயற்றி அதிகாரங்களைச் செலுத்தலாம். ஆனல் இந்த மத்திய மாநில அரசாங்கச் சட்டங்களுக்கிடையே முரண்பாடுகள் தோன்றினல் மத்திய அரசாங்கத்தின் சட்டமே செல்லுபடியாகும். மத்திய

அரசாங்கச் சட்டத்தோடுள்ள முரண்பாட்டளவிற்கு மாநில அரசாங்கச் சட்டங்கள் செல்லுபடியாகா. மேலும் மாநிலப் பட்டியலில் உள்ள அதிகாரங்கள் பற்றியும் மத்திய அரசாங்கம் சட்டம் இயற்றுவதற்கு வகை செய்யப்பட்டுள்ளது. நாட்டின் நெருக்கடிக் காலங்களில் மத்தியப் பாராளுமன்றம் மாநிலப்பட்டியல் அதிகாரங்கள் சம்பந்தமாகவும் நாடு முழுவதற்குமோ அல்லது நாட்டின் ஒரு பகுதிக்கோ சட்டமியற்றலாம். சுருங்கக் கூறின் மத்தியப் பாராளுமன்றம் எத்தலைப்புப் பற்றியும் சட்டங்களியற்றும் அதிகாரம் பெற்றுள்ளது. டாக்டர் அம்பேத்கார் கூற்றுப்படி, இந்தியா பூரணக் கூட்டரசு அல்ல. கூட்டரசுக் கோட்பாடுகள் ஒன்றிய அரசுக்கேற்ப மாற்றியமைக்கப்பட்டுள்ளன.[18] இதற்கேற்ப இந்தியாவில் அதிகாரப் பங்கீட்டு முறையும் முழுக்கூட்டரசு முறையிலிருந்து மாறுபட்டுள்ளது.

அதிகாரப் பங்கீட்டு முறையில் தற்காலக் கொள்கையானது மத்திய மாநில அரசாங்கங்களின் அதிகாரங்களை ஒருங்கிணைப்புப் பட்டியலில் (Concurrent List) வைப்பதாகும். மத்திய அரசாங்கமும் இவ்வதிகாரங்கள் பற்றிச் சட்டங்கள் இயற்றலாம். மாநில அரசாங்கங்களும் இவ்வதிகாரங்கள் பற்றிச் சட்டங்கள் இயற்றலாம். இவ்விரு சட்டங்களிடையே முரண்பாடுகள் தோன்றினால் மத்திய அரசாங்கத்தின் சட்டமே செல்லுபடியாகும். உள்ள முரண்பாட்டின் அளவுக்கு மாநில அரசாங்கச் சட்டம் செல்லுபடியாகாது. ஒருங்கிணைவுப் பட்டியல் முறை கூட்டாட்சி அரசுகளுக்கும் நன்கு பொருந்தும். பேராசிரியர் வியர் இந்த ஒருங்கிணைவுப் பட்டியல் முறையைப் பாராட்டுகிறார்.[19]

அமெரிக்கத்தலைமை நீதிமன்றத்தின் தலைமைநீதிபதி மார்ஷல் அளித்த உள்ளடங்குக் கோட்பாடு (Doctrine of Implied Powers) அதிகாரப் பங்கீட்டில் மாற்றங்களை ஏற்படுத்தியுள்ளது. மத்திய அரசின் எல்லா அதிகாரங்களும் அதிகாரப் பங்கீட்டுப் பட்டியலில் சொல்லப்பட வேண்டியதில்லை. பட்டியலில் சொல்லப்பட்ட அதிகாரத்திலிருந்தே மேலும் புதிய அதிகாரங்களை யூகித்து உணரலாம் என்று தலைமை நீதிபதி மார்ஷல் (Chief Justice Marshall) தமது உள்ளடங்கு அதிகாரக் கோட்பாட்டில் கூறுகிறார்.

[18] Dr. Ambedkar: 'The Constitution has not been set in a tight-mould of federalism. The federal principle has, indeed, been so much modified by unitary elements in the form of control by the Central Government over the state governments."

[19] Professor H. C. Wheare: 'It is better always, if possible to admit concurrent jurisdiction, if only perhaps as transitional measure. In most cases it will be unavoidable. But what is likely to work best is a short exclusive list and a rather longer concurrent list.' (page 83, Federal Government).

அமெரிக்க அரசியலமைப்பில் மத்திய அரசாங்கத்திற்கு உள்ள அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. ஆனால், மத்திய அரசாங்கத்திற்கெனச் சொல்லப்படாத அதிகாரங்களின் மீதும் அமெரிக்கப் பாராளுமன்றம் சட்டமியற்றும் வகையில் உள்ளடங்கு அதிகாரக் கோட்பாடு உள்ளது. இந்தக் கோட்பாடு தற்காலத்தில் மத்திய அரசாங்கங்களால் பின்பற்றப்பட்டு அதிகாரங்கள் அதிகப் படுத்தப் பட்டுள்ளன. அதிகாரப் பங்கீட்டின் வழி அமெரிக்க மத்திய அரசு ஆரம்பத்தில் பெற்றது 18 அதிகாரங்களே ஆகும். ஆனால், அதிகாரப்பங்கீட்டுப் பட்டியல் திருத்தப்படாமலும் மாற்றப் படாமலும் உள்ளடங்கு அதிகாரக் கோட்பாட்டின் வழி இன்று மத்திய அரசின் அதிகாரங்கள் வரிவிதிப்பு, வாணிபம், போர், போக்குவரத்து ஆகிய துறைகளில் குறிப்பாக வளர்ந்துள்ளன. பங்கீட்டுப் பட்டியலில் இல்லாத இவ்வதிகார உள்ளடங்கு அதிகாரக் கோட்பாட்டின் மூலம் ஏற்பட்டதாகும். ஆரம்பத்தில் இவ்வதிகாரங்கள் மாநிலங்களுக்கு உரியதாயினும் தற்போது மத்திய அரசின் அதிகாரங்களாக விளங்குகின்றன. மத்திய, மாநில அரசுகளிடையே உள்ள அதிகாரப் பங்கீட்டுப் பட்டியல் திருத்தப்படாமல் மத்திய அரசின் அதிகாரம் அதிகரித்தும், மாநில அரசுகளின் அதிகாரம் குறைந்தும் பட்டியல் மாற்றம் பெற்றுள்ளது.

எனவே, மத்திய, மாநில அரசாங்கங்களிடையே அதிகாரப் பங்கீட்டில் உள்ளடங்கு அதிகாரக் கோட்பாடு பெருத்த ஆதிக்கம் செலுத்துகிறது. கூட்டாட்சியில் மத்திய மாநில அரசாங்கங்களிடையேயுள்ள அதிகாரப் பங்கீட்டின் காரணமாக எழுதப்பட்ட அரசியலமைப்பும் நெகிழா அரசியலமைப்பும் தலைமை நீதிமன்றமும் கூட்டரசிற்கு இன்றியமையாதன ஆகிவிடுகின்றன.

### எழுதிய அரசியலமைப்பு (Written Constitution)

கூட்டாட்சி அமைப்பில் மத்திய மாநில அரசாங்கங்களிடையே உடன்படிக்கை, ஒப்பந்தம் ஆகியவற்றின் மூலம் உறவுகளும் அதிகார வரம்புகளும் வரையறுக்கப்பட்டுள்ளன. மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கமும் தங்கள் அதிகார வரம்பிற்குள் சுயேச்சையாகச் செயல்படலாம். மத்திய மாநில அரசாங்கங்களிடையே ஏற்பட்டுள்ள இந்த உடன்பாடுகளும் அதிகார வரம்புகளும் எழுத்து வடிவில் அரசியலமைப்பாக இருக்க வேண்டும். அப்போதுதான் மத்திய அரசாங்கமோ மாநில அரசாங்கமோ தனது அதிகார எல்லையை மீறும் போது சுட்டிக் காட்டமுடியும். எனவே, கூட்டாட்சி அமைப்பில் எழுதப்பட்டதோர் அரசியலமைப்பு அவசியமாகிறது.

**அரசியலமைப்பின் மீயுயர்வு** (Supremacy of Constitution)

கூட்டாட்சி அமைப்பில் அரசியலமைப்பு மீயுயர்வு உடையதாகக் கருதப்படுகிறது. மத்திய அரசாங்கம் தனது அதிகார எல்லைக்குள் செயல்படுகிறது. மாநில அரசாங்கமும் தனது எல்லைக்குள் செயல்படுகிறது. இரண்டும் கூட்டுறவுடன் செயல்படவேண்டும். மத்திய மாநில அரசாங்கங்களில் எது உயர்ந்தது, எது தாழ்ந்தது என்பதற்கில்லை. இரண்டும் தங்கள் அதிகாரங்களை அரசியலமைப்பிடமிருந்தே பெறுகின்றன. இவ்விரு அரசாங்கங்களுக்கும் அரசியலமைப்பே மீயுயர்வுடையது. டைட்சியின் கருத்துப்படி, கூட்டாட்சி அரசுகளின் அரசியலமைப்புக் கூட்டாட்சியின் மத்திய மாநில அரசாங்கங்களின் உரிமைகளையும் கடமைகளையும் வகுக்கிறது. அரசியலமைப்பானது மூலமுதல் தன்மையுடையதாகவும், தலையாய சட்டமாகவும், மீயுயர்வுடையதாகவும் கூட்டாட்சியில் கருதப்படுகிறது.

**நெகிழா அரசியலமைப்பு** (Rigid Constitution)

கூட்டாட்சி அரசியலமைப்பு மீயுயர்வுடையதென்றால் அதன் வடிவங்கள் எளிதில் மாற்றப்படக்கூடியதாக இருக்கக்கூடாது. மத்தியச் சட்டமன்றங்களோ மாநிலச் சட்டமன்றங்களோ சாதாரணச் சட்டத்தை இயற்றுவது போலும், மாற்றுவது போலும் அரசியலமைப்புச் சட்டத்தை மாற்றக்கூடாது. அப்போதுதான் மத்திய மாநில அரசாங்கங்களிடையே உள்ள அதிகாரச் சமநிலையைக் காக்க இயலும். ஒன்றன் அதிகாரத்தையும் சமத் தகுதியையும் மற்றது மதிக்கும். அரசியலமைப்பு எளிதாக மாற்றப்படலாகாது. மாநில அரசாங்கங்களின் ஒப்புதலின்றி மத்திய அரசாங்கம் அரசியலமைப்பை மாற்றலாகாது. மத்திய அரசாங்கத்தின் ஒப்புதலின்றி மாநில அரசாங்கங்கள் அரசியலமைப்பை மாற்ற இயலாதிருக்க வேண்டும். மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கங்களும் தங்கள் அதிகார வரம்பை அதிகரித்துக்கொள்ளுதலாகாது. ஒன்றன் அதிகார வரம்பில் மற்றொன்று தலையிடக்கூடாது. ஆகவே, கூட்டாட்சி அரசியலமைப்பைத் திருத்துவதில் தனிமுறையும், திருத்தத்தில் மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கங்களும் பங்கு கொள்ள வழிவகையும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. அரசியலமைப்பைத் திருத்தச் சாதாரணச் சட்டமுறையிலிருந்து மாறுபட்டதோர் தனிமுறை அமைக்கப்பட்டிருக்கும்போது அது நெகிழா அரசியலமைப்பு என்பதை நாம் முன்பே கண்டோம்.

டைய்சியின் கூற்றுப்படி, கூட்டாட்சி அரசியலமைப்பு அசைக்க இயலாததாகவும், மாற்றஇயலாததாகவும் இருக்கவேண்டும். சாதாரணச் சட்டமன்றங்களுக்கு அப்பாற்பட்டதோர்

அமைப்பிற்கே அரசியலமைப்பை மாற்றும் அதிகாரம் இருக்க வேண்டும். இம்முறை மாநில அரசியலமைப்பாயினும் மத்திய அரசியலமைப்பாயினும் பொருந்தும்.[20] பேராசிரியர் வியர் கருத்துப்படி, மத்திய மாநில அரசாங்கங்களின் தகுதியையும் அதிகாரங்களையும் வரையறை செய்யும் அரசியலமைப்பானது மத்திய அரசாங்கத்தால் மட்டுமோ அல்லது மாநில அரசாங்கத்தால் மட்டுமோ திருத்தப்படக் கூடியதாக இருக்கக் கூடாது.[21]

**தலைமை நீதிமன்றம்**

கூட்டாட்சியில் மத்திய மாநில அரசாங்கங்களிடையே முரண்பாடுகள் தோன்றும். ஒன்றன் அதிகாரத்தினுள் மற்றொன்று தலையிடலாம். இந்தப் பூசல்களைத் தீர்ப்பதற்காக நடுநிலையான தலைமை நீதிமன்றம் (Supreme Court) தேவைப்படுகிறது. இந்தத் தலைமை நீதிமன்றம் மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் இடையே தோன்றும். அதிகார வரம்பு பற்றிய பிணக்குகளையும், மாநில அரசாங்கங்களிடையே தோன்றும் அதிகார வரம்புபற்றிய பூசல்களையும் தீர்த்துவைக்கும். மேலும் மத்திய மாநில அரசாங்கங்கள் தங்கள் அதிகார வரம்பிற்குள் செயல்படுவதையும் தலைமை நீதிமன்றம் கண்காணிக்கிறது. ஒன்றன் மீது ஒன்று ஆதிக்கம் கொள்ளாமல் இருப்பதையும் வலியுறுத்துகிறது. அதிகாரச் சமநிலையைத் தலைமை நீதிமன்றம் கண்காணிக்கிறது. மத்திய மாநில அரசாங்கங்கள் இயற்றும் சட்டங்கள் அரசியலமைப்பிற்கு முரணாகச் செல்லாமல் பாதுகாக்கிறது. அப்படி ஏதாவது சட்டம் அரசியலமைப்பிற்குப் புறம்பாக இருந்தால் அவற்றை அரசியலமைப்பிற்குப் புறம்பானவை என்று கூறி அச்சட்டத்தைச் செயலற்றதாக்கும். எனவே, தலைமை நீதிமன்றம் அரசியலமைப்பின் மீயுயர்வைக் காத்து நிற்கும் காவலனாகும். மேலும் அரசியலமைப்பில் தோன்றும் ஐயப்பாடுகளுக்கு விளக்கம் கூறுவது மத்திய அரசாங்கத்திடமோ, மாநில அரசாங்கங்களிடமோ விடமுடியாத ஒன்றாகும். அப்படி விளக்கம் கூறும்பொறுப்பை இவ்வரசாங்கங்களிடம் ஒப்படைத்தால் தங்களுக்குச் சாதகமான விளக்கத்தை அரசியலமைப்பிற்கு அளிப்பர். எனவே நடுநிலையான தலைமை நீதிமன்றம் கூட்டாட்சி அரசுகளுக்கு அவசியமாகிறது.

[20] Dicey· 'The law of the constitution must either be immutable, or else capable of being changed only by some authority above and beyond the ordinary legislative bodies whether federal or state legislatives, existing under the constitution.' (Law of the Constitution)

[21] Wheare: 'It is essential for a federal government that the power of amending the constitution so for atleast as concerns those provisions of the constitutions which regulate the status and powers of the general and regional governments, should not be confined exclusively either to the general government or to the regional government,'

பேராசிரியர் மில் அவர்களின் கூற்றுப்படி, மத்திய மாநில அரசாங்கங்களிடையே ஏற்படும் பிணக்குகளின் தீர்ப்பை அவ்வரசாங்கங்களிடம் விடக்கூடாது. இவ்வரசாங்களின் அதிகாரத்திற்கும் ஆதிக்கத்திற்கும் கட்டுப்படாத நடுநிலையாளரிடம் தீர்ப்புக் கூறும் அதிகாரத்தை ஒப்படைக்க வேண்டும். அந்த நடுநிலையாளராகத் தலைமை நீதிமன்றம் செயல்படவேண்டும்.[22]

**சட்டமன்றத்தின் மேலவை**

கூட்டாட்சி அரசுகளின் சட்டமன்றங்களில் இரு அவைகள் பொதுவாகக் காணப்படுகின்றன. மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு சபையும், மாநிலங்களின் பிரதிநிதிகளைக்கொண்ட மற்றொரு சபையும் உண்டு. பிரதிநிதிகளின் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களின் எண்ணிக்கை மக்கள்தொகையின் அடிப்படையில் அமையும். எனவே, அதிக மக்கள்தொகையுள்ள மாநிலத்திலிருந்து அதிகப் பிரதிநிதிகளும் குறைவான மக்கள்தொகையுள்ள மாநிலங்களிலிருந்து குறைவான பிரதிநிதிகளும் கீழ்அவையில் உறுப்பினர்களாக இருப்பர். இம்முறையில் பெரிய மாநிலங்கள் சிறிய மாநிலங்களைப் புறக்கணிக்கும் வாய்ப்புள்ளது. எனவே, கூட்டாட்சி அரசுகளில் மேல்அவை ஏற்படுத்தப்பட்டு மாநிலங்களுக்குச் சமமான பிரதிநிதித்துவம் வழங்கப்படுகிறது. அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஒவ்வொரு மாநிலமும் இரண்டு உறுப்பினர்களை மேல் சபைக்கு அனுப்புகிறது. ஆனால், கீழ்சபைக்கு மாநிலங்கள் அனுப்பும் உறுப்பினர்களின் எண்ணிக்கை அம்மாநிலங்களின் மக்கள்தொகைக்கு ஏற்ப அமையும். ஆஸ்திரேலியா, ரஷ்யா, சுவிட்ஸர்லாந்து போன்ற நாடுகளில் மேல்சபையில் மாநிலங்களுக்குச் சமமான பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டுள்ளது. இந்தியாவில் மேல் சபையில் மாநிலங்களுக்குச் சமமான பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை.

**இரட்டை ஆட்சியும் இரட்டைக் குடியுரிமையும்**

கூட்டாட்சி அரசுகளில் இரட்டை ஆட்சியும் (Dual Government) இரட்டைக் குடியுரிமையும் (Dual Citizenship) இருப்பது கூட்டாட்சியின் ஒரு கூறுபாடாகும். மத்தியில் ஒரு கூட்டாட்சி

[22] J. S. Mill: 'it is evidently necessary not only that the constitutional limits of authority of each (central and regional governments alike) should be precisely and clearly defined, but the power to decide between them in any case of dispute should not reside in either of the governments, or in any functionary subject to it, but in an umpire independent of both. There must be a Supreme Court of justice, and a system of co-ordinate courts in every state of the union, before when such questions shall be carried and whose judgement on them in the last stage or appeal, shall be final.'

அரசாங்கமும் மாநிலங்களில் சுயாட்சி அரசாங்கமும் கூட்டாட்சியில் நிலவுகின்றன. அதே போல் ஒரு மாநிலத்தில் வாழுபவர் அந்த மாநிலத்தின் குடிமக்களாகவும் மத்தியக் கூட்டாட்சியின் குடிமக்களாகவும் இருந்து இரட்டைக் குடியுரிமையினராக விளங்குகின்றனர்.

இந்தியா அரைகுறைக் கூட்டாட்சி (Quasi Federal) அமைப்புடைய நாடாகும். பேராசிரியர் வியர் கூற்றுப்படி, ஒன்றிய அரசுக்கூறுகளையுடைய கூட்டரசு நாடு என்பதைவிடக் கூட்டரசுக் கூறுகளை உடைய ஒன்றியநாடு என இந்தியாவைக் கருதலாம்.[28] ஒன்றிய அரசின் கூறுகளே மிகுந்துள்ள இந்தியக் கூட்டரசில் இரட்டை ஆட்சியும் இரட்டைக் குடியுரிமையும் காணலரிது. மத்திய அரசிற்குட்பட்ட மாநில அரசுகளும் இந்தியக் குடிமகன் என்ற ஒற்றைக் குடியுரிமையுமே இங்குள்ளன.

## கூட்டாட்சியின் பிரச்சினைகள்

ஒன்றிய அரசில் இல்லாததும் கூட்டாட்சியின் எதிர்நோக்கக் கூடியதுமான சில பிரச்சினைகளைக் காண்போம். இப் பிரச்சினைகளை வெற்றிகரமாக எதிர்நோக்கினுல்தான் கூட்டாட்சி நன்கு நடைபெறும்.

### அதிகாரப் பங்கீட்டு முறை

கூட்டாட்சி முறையில் மத்திய மாநிலங்களிடையே ஒரு திருப்திகரமான அதிகாரப் பங்கீடு செய்யப்பட வேண்டியுள்ளது. இதற்காக மும்முறைகள் பின்பற்றப்படுகின்றன. அமெரிக்காவில் பட்டியல் படுத்தப்பட்ட அதிகாரங்கள் (Enumerated Powers) மத்திய அரசாங்கத்திற்கும் எஞ்சிய அதிகாரங்கள் (Residuary Powers) மாநிலங்களுக்கும் அளிக்கப்பட்டுள்ளன. கனடா நாட்டில் சில குறிப்பிட்ட அதிகாரங்கள் மாநில அரசாங்கங்களுக்கும் எஞ்சிய அதிகாரங்கள் மத்தியஅரசாங்கத்திற்கும் விடப்பட்டுள்ளன. இந்தியாவில் ஒரு பகுதி அதிகாரம் மத்திய அரசாங்கத்திற்கும் மறுெரு பகுதி அதிகாரம் மாநிலங்களுக்கும், மற்றுமொரு பகுதி மத்திய மாநிலங்களுக்குப் பொதுவாக ஒருங்கிணைவுப் பட்டியலிலும் உள்ளன. எஞ்சிய அதிகாரங்கள் மத்திய அரசையே சாரும். அதிகாரப் பங்கீடுகூட்டாட்சி அரசுகளிடையே மாறுபட்டிருக்கிறது. இந்த அதி

[28] Prof. Wheare: 'Constitution of India established indeed a system of government which is atmost quasi federal, almost devolutionary in character a unitary state with subsidiary federal features rather than federal state with unitary features.'

காரப் பங்கீடு திருப்திகரமான முறையில் செய்யப்படாவிடில் கூட்டாட்சி சுமுகமாக நடைபெருது.

### சிறிய நாடுகளுக்குப் பாதுகாப்பு

கூட்டாட்சியின் அங்க நாடுகள் அனைத்தும் ஒரே தன்மையன வாக இருப்பது இயலாத காரியமாகும். கூட்டாட்சியின் பெரிய நாடுகள் சிறிய நாடுகளின் மீது ஆதிக்கம் கொள்ளாத முறையில் கூட்டாட்சி அமைப்பு இருக்கவேண்டும். இது இரு முறைகளில் நிறைவு பெறுகிறது. கூட்டாட்சி அரசாங்கத்தின் மேல்சபை யில் மாநிலங்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படுகிறது. அரசியலமைப்புத் திருத்தத்தில் மாநிலங்கள் சமத் தகுதியுடை யனவாக விளங்குகின்றன. இவ்விரு முறைகளும் அமெரிக்கக் கூட்டாட்சி அரசியலமைப்பில் காணக்கிடக்கின்றன.

### மத்திய மாநில உறவுகள்

அவரவர் அதிகார வரம்பிற்குள் மத்திய அரசாங்கமும் மாநில அரசாங்கமும் சுதந்திரமாகச் செயல்படக் கூட்டாட்சியில் வழி வகுக்கப்படவேண்டும். மத்திய அரசாங்கத்தின் தலையீடு இன்றி மாநில அரசாங்கங்கள் தங்கள் அதிகாரங்களைச் செயல்படுத்த இயலவேண்டும். இம்முறையில் திருப்திகரமானதோர் மத்திய மாநில உறவைக் கூட்டாட்சியில் அமைக்க முடியும். ஆனல், நடைமுறையில் மத்திய அரசாங்கத்தின் செல்வாக்கு வலுவடைந் துள்ளதைக் காணலாம்.

### மாநிலங்களிடையே உறவு

கூட்டாட்சியில் இருக்கும் மாநிலங்கள் யாவும் ஒன்றுக் கொன்று சுதந்திரமானவை. இவைகளிடையே சுமுகமான உறவு ஏற்படுவதற்காக அரசியலமைப்பில் ஏற்பாடுகள் செய்யப்படவேண் டும். ஒரு மாநிலத்தின் ஆவணங்களும், குடிமக்களும், நீதித்துறை நடவடிக்கைகளும் மற்ற மாநிலங்களால் மதிக்கப்பட அரசிய லமைப்பு வகைசெய்ய வேண்டும். மாநிலங்களிடையே குடிமக்கள் செல்லவும், பத்திரிக்கைகள் பிரசுரிக்கவும் உரிமைகள் வழங்கப்பட வேண்டும்.

### அரசியலமைப்புத் திருத்தம்

அரசியலமைப்புத் திருத்தத்திலும் விரும்பத்தக்கதோர் முறை கூட்டாட்சியில் வகுக்கப்பட வேண்டும். அரசியலமைப்பு மீயுயர்வு உடையதாக்கப்பட வேண்டும். மத்திய அரசாங்கமோ அல்லது மாநில அரசாங்கம் மட்டுமோ அரசியலமைப்பைத் திருத்தும்

உரிமை பெற்றிருக்கக் கூடாது. அரசியலமைப்புத் திருத்தத்தில் மாநிலங்களுக்கும் பங்கு இருக்கவேண்டும். மேலும் பெரிய மாநிலங்கள் சிறிய மாநிலங்களின் மீது ஆதிக்கம் செலுத்துவதும் தடுக்கப்படவேண்டும். இதற்கான வழிவகை கூட்டாட்சியில் செய்யப்பட்டிருக்க வேண்டும்.

**பிரிவினை**

கூட்டாட்சியின் உறுப்புகள் கூட்டாட்சி அமைப்பிலிருந்து பிரிந்து செல்லும் உரிமை பிரச்சினைக்குரியதாக உள்ளது. அமெரிக்க ஐக்கிய நாட்டில் கூட்டாட்சியிலிருந்து பிரிந்து செல்லும் உரிமை உறுப்புகளுக்குக் கிடையாதென்பது உள்நாட்டுப் போரினுல் நிலை நாட்டப்பட்டது. ரஷியக் கூட்டாட்சி அரசியலமைப்பில் அங்க நாடுகளுக்கு இப்பிரிந்து செல்லும் உரிமை அளிக்கப்பட்டுள்ளது. எனினும், இது நடைமுறைப்படுத்தக் கூடியதன்று. பிரிந்துசென்று கூட்டாட்சி அமைவதற்கு முன் உள்ள இறைமை பெற வேண்டுமானுல் அரசியலமைப்பில் திருத்தம் கொண்டுவர வேண்டும். ஏனெனில், அரசியலமைப்பைத் திருத்தும் நிறுவனமே பிரிவினையை அனுமதிக்கும் இறைமையுடையதாகும்.

கூட்டாட்சி அமைப்பில் இப்பிரச்சினைகளுக்குத் திருப்திகரமான வழிவகை செய்யப்பட்டால்தான் கூட்டாட்சி சுமுகமாகவும் வெற்றிகரமாகவும் நடைபெறும். கூட்டாட்சியை எதிர்நோக்கியுள்ள இப்பிரச்சினைகளை ஒவ்வோர் அரசும் ஒவ்வொரு முறையில் அணுகுகின்றது.

## கூட்டாட்சியின் நிறைகளும் குறைகளும்

**கூட்டாட்சியின் நிறைகள்**

உலகில் கூட்டாட்சி நாடுகளின் எண்ணிக்கை உயர்ந்து செல்வதும், உலக அரசுகள் அனைத்தையும் இணைத்து ஓர் உலகக் கூட்டாட்சி நிறுவவேண்டுமென அரசியல் அறிஞர்கள் எண்ணுவதும், கூட்டாட்சிக் கோட்பாடு வலுப்பெற்று வருகிறதென்பதைப் புலப்படுத்தி நிற்கின்றன. கூட்டாட்சிக்குக் கீழ்க்காணும் சிறப்புகளும் நிறைகளும் கூறப்படுகின்றன.

**சிறு அரசுகளுக்குச் சிறந்த மாற்று முறை**

தற்காலத்தில் சிறிய அரசுகளுக்கு உள்ள ஆபத்து நன்கு தெளிவாகும். பெரிய மீன்கள் சிறிய மீன்களை விழுங்குவது போலப் பெரிய அரசுகள் சிறிய அரசுகளை விழுங்குகின்றன. எனவே, சிறிய அரசுகளின் தனித்தன்மையும் சுயேச்சையும் காக்கப்பட

வேண்டும். அதே நேரத்தில் அவைகளுக்குப் பாதுகாப்பும் இருக்கவேண்டும். இந்தச் சாதனையைக் கூட்டாட்சி சாதிக்கிறது. கூட்டாட்சி அமைப்பில் மாநிலங்கள் தங்கள் தனித்தன்மையை யும் சுயாட்சியையும் இழப்பதில்லை. அதே நேரத்தில் கூட்டாட்சி அமைப்பில் அவைகளது பாதுகாப்பும் உறுதிப்படுத்தப்படுகிறது. எனவே, கூட்டாட்சி முறை சிறு அரசுகளுக்கு மிகுந்த பலன் அளிக்கிறது.

## ஒற்றுமை வேற்றுமைகளிடையே சமநிலை

மாநிலங்கள் தனித்து இருந்து தங்கள் தனித்தன்மையைப் பேணினால் மாநிலங்களிடையே பிளவு மனப்பான்மை தோன்றும். மாநிலங்கள் ஒன்றுகூடி ஒருமுகமாக இருந்தால் அதிகாரக் குவிப் புத் தோன்றும். பிரிவு மனப்பான்மைக்கும் ஒருமுகக் குவிப்பிற்கும் இடையிலான ஒரு சமநிலையைக் கூட்டாட்சி உருவாக்குகிறது. கூட்டாட்சியில் ஒற்றுமையும் வேற்றுமையும் இணைந்து செயல்படு கின்றன. மாநிலங்களில் சுயாட்சியும் மத்தியில் கூட்டாட்சியும் நிலவுகிறது. நாட்டு முக்கியத்துவமுடைய பணிகள் மத்திய அர சாங்கத்திடமும், வட்டார முக்கியத்துவமுள்ள பணிகள் மாநில அரசாங்கங்களிடமும் விடப்பட்டுள்ளன. கூட்டாட்சியில் பகுப் பிற்கும் குவிப்பிற்கும் இடைப்பட்டதோர் பொன்னான சமநிலை ஏற்படுத்தப்பட்டுள்ளது.

## வல்லாட்சியைத் தடுக்கிறது

கூட்டாட்சி முறை வல்லாட்சியைத் தடுக்கிறது. மக்களின் சுதந்திரத்தைப் பாதுகாக்கிறது. மத்திய அரசாங்கம் வல்லாட்சிப் பாதையிற் செல்லாதவாறு மாநிலங்கள் தடுக்கின்றன. மாநிலங் களின் சுயாட்சி அரசியலமைப்பால் பாதுகாக்கப்படுவதால் மத்தி யில் வல்லாட்சி தோன்றுவதற்கு வழியில்லை. மேலும் அரசிய லமைப்பால் மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் வரையறுக்கப்பட் டுள்ளது. அதிகாரத்தைத் தவறான பாதையில் செலுத்துவதற்கும் அதிகாரக் குவிப்பிற்கும் கூட்டாட்சி முறையில் இயலாது. கூட் டாட்சியில் அதிகாரங்கள் பலவகையாகப் பிரிக்கப்பட்டிருப்பதால் வல்லாட்சி தடுக்கப்படுகிறது.

## அரசியல் அறிவு வளம் பெறும்

வட்டாரச் சுயாட்சிக்கு வகை செய்யப்பட்டிருக்கும் எல்லா அரசுகளிலும் அரசியல் அறிவு வளம் பெறுவதற்கு வாய்ப்பு இருக் கும். கூட்டாட்சி முறையில் மாநிலங்கள் சுயாட்சி செலுத்துகின் றன. மக்கள் ஆர்வத்துடன் மாநில நிருவாகத்தில் பங்கு கொள்

வதோடு நாட்டின் ஆட்சியிலும் அக்கறை காட்டுகின்றனர். கூட்டாட்சி முறைக் குடியாட்சி வழி சுதந்திரமான தேர்தல்கள், எதிர்க் கட்சிகள் ஆளுங்கட்சியைக் குறைகண்டஞான்று இடித்துரைத்தல் ஆகியவைகளுக்கு இடமிருக்கின்றன. மாநில அரசாங்கத்திலும் மத்திய அரசாங்கத்திலும் பங்கேற்பதின் மூலம் மக்கள் பொது வாழ்வில் நாட்டம் காட்டுகின்றனர்.

## பெரிய நாடுகளுக்கு ஏற்றது

கூட்டாட்சிமுறை அரசு பெரிய நாடுகளுக்கு மிகவும் பொருத்தமுடையதாக இருக்கிறது. பெரிய நாடுகளில் மக்களிடையே இனம் மதம், மொழி, மரபு அடிப்படைகளில் வேறுபாடுகள் இருக்கும். நாட்டின் பரப்பளவும் மக்கள்தொகையும் அதிகமாக இருக்கும். இந்நாடுகளில் ஒன்றிய ஆட்சி வெற்றி பெறுது; மக்களை ஒருமுகப் படுத்த முடியாது. வேறுபாடுகள் காரணமாக ஒற்றுமையுணர்வு ஏற்படாது. ஆனல் கூட்டாட்சி முறையில் மக்களின் வேறுபாடுகளுக்கு இடமளிக்கப்படுகிறது. எனவே பல இன, மொழி, மரபு, சமய மக்கள் வாழும் பெரிய நாடுகளுக்குக் கூட்டாட்சி மிகவும் ஏற்றதாகும்.

## அலுவலகப் பாகுபாடு

கூட்டாட்சி முறையில் அலுவல்கள் பகுக்கப்பட்டுள்ளன. அரசாங்கத்தின் வேலைப்பளு குறைக்கப்பட்டுள்ளது. மாநில அரசாங்கத்தின் அலுவல்கள் மாநில அரசுகளிடமே விடப்பட்டுள்ளன. மத்திய அரசாங்கம் நாடு முழுவதற்குமான பொது வேலைகளையும் பொது நலன்களையுமே கவனிக்கிறது. இது அலுவலகப் பகுப்பாகும். ஆனல், ஒன்றிய அரசில் இவ்வலுவலகப் பகுப்புக் கிடையாது. வேலைப்பளு அனைத்தும் மத்திய அரசாங்கத்திடமே உள்ளன. அங்கு அலுவலகக் குவிப்பே நிலவுகிறது.

## வட்டார நலன் பேணப்படுகிறது

கூட்டாட்சி முறையில் வட்டார நலன் கவனம் பெறுகிறது. ஒன்றிய ஆட்சி முறையில் வட்டார நலன் கவனிக்கப்படாமல் தேசிய நலனே முக்கியத்துவம் அடைந்துள்ளது. ஆனல் கூட்டாட்சி முறையில் வட்டார நலனைக் கவனிக்கும் சுதந்திரமும் சுயாட்சியும் வட்டார நிறுவனங்களிடமே விடப்பட்டுள்ளன. வட்டார நிறுவனங்கள் தங்களுடைய தேவைகளைத் தாங்களே நிறைவேற்றிக்கொள்ளலாம். மத்திய அரசாங்கத்தை எதிர்பார்க்க வேண்டியதில்லை.

**கூட்டாட்சியின் குறைகள் : எளிமையின்மை**

கூட்டாட்சி முறை சிக்கல் நிறைந்ததாகும். கூட்டாட்சியை அமைப்பது எளிமையான காரியமல்ல. இருவகை அரசாங்கங்களைத் தோற்றுவிக்க வேண்டும். அவைகளிடையே அதிகாரத்தைப் பிரித்தளிக்க வேண்டும். முரண்பாடுகள் ஏற்படாமல் கண்காணிக்க வேண்டும். பல வகை நிறுவனங்கள் அமைக்கப்பட வேண்டும். எனவே கூட்டாட்சி முறை எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய முறையன்று. சிக்கல் மிக்கதாகும்.

**அதிகச் செலவினங்கள்**

கூட்டாட்சி முறையில் அரசாங்க அமைப்பில் இரு படிகள் ஏற்படுத்த வேண்டியுள்ளது. மத்திய அரசாங்கத்திலும் மாநில அரசாங்கத்திலும் அரசாங்க நிறுவனங்களான சட்டமன்றங்கள், செயல்துறை, நீதிமன்றங்கள் வெவ்வேறாக ஏற்படுத்த வேண்டும். ஒன்றிய அரசில் இருப்பது போலல்லாமல் இரட்டை மடங்கு நிறுவனங்கள் அவசியமாகிறது. இரட்டிப்புச் செலவு ஏற்படும். இதற்காக மக்களின் வரிச்சுமை பெருகும்.

**பூசல்களுக்கு இடம்**

கூட்டாட்சி மத்திய மாநில அரசாங்கங்களிடையே அதிகாரம் பங்கிடப்பட்டுள்ளது. ஒன்றன் அதிகாரத்தில் மற்றது தலையிடும் வாய்ப்பு அதிகமாகும். அதன் காரணமாக மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் இடையருப் பூசல்கள் இருந்து கொண்டேயிருக்கும். இவ்விரு அரசாங்கங்களுக்குமிடையே செயல் வேறுபாடுகளும் கருத்து வேறுபாடுகளும் நிலவும்.

**அயல் நாட்டுக் கொள்கையில் முரண்பாடுகள்**

கூட்டாட்சி முறையில் உள்ள அயல்நாட்டுக் கொள்கை நிலையற்றதாக இருக்கும். அயல் நாடுகளுடன் ஒப்பந்தங்கள் செய்யும் போது மத்திய அரசாங்கம் செயல்படுகிறது. மத்திய அரசாங்கத்தின் இச்செயல் சில மாநில அரசாங்கங்களுக்கு ஏற்புடையதாக இருக்காது. உள்நாட்டில் நிலவும் வேறுபாடுகள் காரணமாக அயல் நாட்டுக் கொள்கை வலுவற்றுப்போகும். இதனால் சர்வதேச அரங்கில் கூட்டாட்சி அரசாங்கத்தின் மதிப்புக் குறையும். உட்ரோ வில்சன் சர்வதேசச் சங்கத்தில் அமெரிக்காவை உறுப்பினராக்கினார். ஆனால், அதை மாநிலங்களின் அவையாகிய செனட்சபை ஏற்க மறுத்துவிட்டது. இவ்விதமாகக் கொள்கை முரண்பாடுகள்

தோன்றும். மேலும் நாட்டின் நெருக்கடிகாலங்களில் ஒன்றிய அரசைப்போலத் துரித முடிவெடுக்கவோ செயல்படவோ கூட்டாட்சி அரசால் இயலுவதில்லை.

### தேசப்பற்றுப் பிளவு

கூட்டாட்சி முறையில் மத்திய மாநில அரசாங்கமென இரு அரசாங்கங்களிருப்பதை நாம் காணலாம். மேலும் மாநிலத்தின் குடிமகன் என்றும், மத்தியக் கூட்டாட்சியின் குடிமகன் என்றும் இரு குடிமை இருப்பதையும் அறியலாம். ஒருவர் இரு அரசாங்கங்களின் மீது பற்றுக்கொள்ள வேண்டிய போது நம்பிக்கை பிளவுபடுகிறது. தேசிய அரசாங்கத்தின்மீது பற்றுள்ளவர்கள் மாநில அரசை வெறுப்பதையும், மாநில அரசாங்கத்தின் மீது மிகுதியான பற்றுக்கொண்டவர்கள் மத்திய அரசாங்கத்தை வெறுப்பதையும் காணலாம். ஆனால், ஒன்றிய ஆட்சியில் ஒரே அரசாங்கத்திடம் முழுப் பற்றுடன் செயலாற்ற முடிகிறது.

### வளையா அரசியலமைப்பு

கூட்டாட்சி நாடுகளின் அரசியலமைப்புகள் எழுதப்பட்டனவாகவும், நெகிழாத்தன்மையுடையனவாகவும் இருக்கின்றன. எனவே, அரசியலமைப்புகளைத் திருத்துவது மிகக் கடினமான காரியமாகும். மேலும் இத்திருத்தமும் உடனடியாகச் செய்ய முடியாது. காலதாமதம் ஏற்படும். தேசிய நெருக்கடி காலங்களில் வளைந்து கொடுத்துச் செயலாற்ற முடியாது. இரண்டாம் உலகப் பெரும் போரின்போது இங்கிலாந்துப் பாராளுமன்றம் எளிதில் தனது ஆயுட்காலத்தை ஆண்டிற்கு ஆண்டு அதிகரித்துக் கொண்டது. ஆனால் பெரும்போர்க்காலத்தில்கூட அமெரிக்காவில் குடியரசு தலைவர் தேர்தல் நடத்த வேண்டியதாயிற்று. இது மக்களிடம் பிரிவையும் கவனச்சிதைவையும் ஏற்படுத்தியிருக்குமென்பதில் ஐயமில்லை. அரசியலமைப்பை எளிதில் திருத்த முடியாததால் வளர்ந்துவரும் அரசியல், பொருளாதார, சமுதாயத் தேவைகளுக்கேற்ப மாற்றிக்கொள்ள இயலாமையைக் காணலாம்.

அமெரிக்க அரசியலமைப்பைத் திருத்துவதில் நான்கில் மூன்று பங்கு மாநிலங்களின் ஒப்புதல் அவசியம். மேலும் ஒப்புதல் அளிக்கக் காலவரையறையும் கிடையாது. 1924ஆம் ஆண்டில் மத்தியப் பாராளுமன்றத்தால் தீர்மானிக்கப்பட்ட சிறுவர் தொழில் பற்றிய அரசியலமைப்புத் திருத்தம் 1937ஆம் ஆண்டில் கான்ஸாஸ் மாநிலத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அரசியலமைப்பைத் திருத்துவதில் இவ்விதக் காலதாமதம் ஏற்படுகிறது. மேலும்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பதின்மூன்று சிறு மாநிலங்கள் ஒன்றுசேர்ந்து அரசியலமைப்புத் திருத்தத்தை ஏற்கவில்லையென்ருல் திருத்தம் நடைமுறைக்கு வராது. ஒரு சிறுபான்மையினர் ஏற்காவிடில் பெரும்பான்மையினரது விருப்பம் நிறைவேருது. கூட்டாட்சி அரசியலமைப்புத் திருத்தத்தில் இவ்வாறு இடையூறு இருப்பது நாட்டின் முன்னேற்றத்தைத் தடைசெய்யும்.

### சட்டப் பிணக்கு

மாநிலங்கள் தாஞக முன்வந்து ஒத்துழைத்தால்தான் ஒருமைப்பாடு நிலவும். மாநிலங்களின் நலன் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகிறது. இவைகள் தங்கள் தனிக் கொள்கைகளை நிறைவேற்றச் சட்டங்கள் இயற்றப்படுகின்றன. ஒரு மாநிலத்தின் சட்டம் மற்ற மாநிலத்தின் சட்டத்திற்கு மாறுபட்டதாக இருக்கும். மாநிலங்களின் சட்டங்கள் மத்திய அரசாங்கத்தின் கோட்பாடுகளுக்கு மாருக இருக்கும். எனவே, மாநிலங்களிடையே முரண்பாடும், மாநிலங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்குமிடையே முரண்பாடும் சட்டங்களில் தோன்றும்.

### வட்டார நலனுக்கு முக்கியத்துவம்

மாநிலங்களிடையே உள்ள வேறுபாடுகள் மறைவதில்லை. பொருளாதார வேறுபாடும் மொழி வேறுபாடும் தலைதூக்கி நிற்கும். இனப்பகைமை மறக்கப்படுவதில்லை. அமெரிக்காவில் நடந்த உள்நாட்டுப்போர் தென் மாநிலங்களுக்கும் வட மாநிலங்களுக்குமிடையே பொருளாதார அடிப்படையிலும், இன அடிப்படையிலும் இருந்த வேறுபாட்டைக் காட்டுவதாக உள்ளது. மத்தியக் கூட்டாட்சி அரசாங்கம் தேசிய நலனைக் கவனிக்கும்போது மாநில அரசாங்கங்கள் தேசிய நலனைப் பெரிதெனக் கருதாது வட்டார நலனையே கருதும். இதன் விளைவாகப் பிரிவு மனப்பான்மைகளும் தோன்றும்.

### பழமையை விரும்பும் நீதிமன்றம்

கூட்டாட்சி அரசிலுள்ள நீதிமன்றம் மிக்க அதிகாரம் படைத்ததாகும். பழமையை விரும்புவதாகவும், பிற்போக்கு உடையதாகவும் கருதப்படுகிறது. வளர்ந்துவரும் சமுதாயத் தேவைகளுக்கு இது இடம் கொடுக்காது. சட்டங்களுக்கு விளக்கம் கூறும்போது சட்டவாசகத்தைக் கருத்தில் கொள்ளுமே தவிரச் சட்டத்தின் உயிர்த் துடிப்பைக் கருதாது.

கூட்டாட்சியின் குறைகள் நீக்கப்பட்டால் இஃது ஒரு சிறந்த முறை அரசாங்க அமைப்பாகலாம். எனவே கூட்டாட்சியில் பெரி

தும் குறை கூறப்படுகிற அதிகாரப் பகிர்வும், அதனால் ஏற்படக் கூடிய தீங்குகளும் சட்டத்தாலும் நடைமுறையாலும் நீக்க நட வடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. கூட்டாட்சி அரசுகளி லும் அதிகாரப் பகிர்வு குறைக்கப்பட்டு அதிகாரக் குவிப்பிற்கான வழிகள் கையாளப்படுகின்றன. மத்திய அரசாங்கத்தின் அதிகா ரம் வலுப்படுத்தப்படுகிறது. இதற்காக அரசியலமைப்புச் சட் டங்கள் திருத்தப்படுகின்றன. அரசியலமைப்பிற்கு நீதிமன்றங்கள் வழங்கும் விளக்கங்களும் மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தை அதிகரிப்பதாகவே உள்ளன.

அமெரிக்க நீதிமன்றங்கள் கூறியுள்ள மறைந்து நிற்கும் அதி காரம் (Implied Powers), உள்ளடங்கு அதிகாரம் (Inherent Powers) ஆகியன மத்திய அரசாங்கத்திற்கு அதிக அதிகாரம் வழங்குகின்றன. போர், பொருளாதார மந்தநிலை, தொழிற் புரட்சி ஆகியன சுவிட்ஸர்லாந்தில் மத்திய அரசாங்கத்தின் அதிகா ரத்தைஅதிகப்படுத்தி உள்ளன.

## ஒன்றிய அரசிற்கும் கூட்டாட்சி அரசிற்கும் வேறுபாடுகள்

### அதிகாரக் குவிப்பும் பங்கீடும்

ஒன்றிய அரசில் அதிகாரம் குவிக்கப்பட்டுள்ளது. எல்லா அதி காரங்களும் மத்திய அரசாங்கத்திடமே உள்ளன. மத்திய அர சாங்கமே அனைத்து வல்லமையும் உடையது. நிருவாக வசதிக் காகப் பல மாநிலங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. ஆனால் மாநிலங் களுக்கெனத் தனித்தன்மை கிடையாது. அரசியலமைப்பில் இவைகளுக்கென அதிகாரம் கூறப்பட்டிருக்காது. இவைகளின் அதிகாரம் மத்திய அரசாங்கத்தால் அளிக்கப்பட்டதாகும். இவ் வதிகாரங்களை மத்திய அரசாங்கம் எந்நேரத்திலும் திரும்பப் பெற லாம். மாநில அரசாங்கங்களுக்கு சுயாட்சியோ சுதந்திரமோ கிடையாது.

ஆனால் கூட்டாட்சி அரசில் மத்திய மாநிலங்களிடையே அதி காரப் பங்கீடு செய்யப்பட்டுள்ளது. இந்த அதிகாரங்கள் அரசிய லமைப்பில் கூறப்பட்டுள்ளன. மத்திய மாநில அரசாங்கங்களின் அதிகாரங்கள் அரசியலமைப்பால் வரையறுக்கப்பட்டிருக்கும். தங்களுக்குள்ள அதிகாரங்களைச் சுதந்திரமாகச் செயல்படுத்தலாம். மாநில அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்தால் அளிக்கப்பட்டன அல்ல. அரசியலமைப்பால் அளிக்கப்பட்டனவாகும்.

### ஒருமைப் பன்மை அரசாங்கங்கள்

ஒன்றிய அரசில் ஓர் அரசாங்கமும், அரசாங்க உறுப்புகளான சட்டமன்றம், செயல்துறை, நீதிமன்றம் ஆகியனவும் ஒன்றே இருக்கும்.

கூட்டாட்சி அரசில் மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கங்களும், அவைகளுக்கான நிறுவனங்களைத் தனித்தனியாகவும் கொண்டிருக்கும். பல அரசாங்கங்களும் அவைகளுக்கான பல அரசாங்க நிறுவனங்களும் இருக்கும்.

### எழுதா, எழுதிய அரசியலமைப்பு

ஒன்றிய அரசில் எழுதா அரசியலமைப்போ எழுதப்பட்ட அரசியலமைப்போ இருக்கலாம். பொதுவாக ஒன்றிய அரசில் அரசியலமைப்பு எழுதப்பட்டிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை.

கூட்டாட்சி அரசில் அரசியலமைப்பு அவசியமாக எழுதப்பட்டிருக்கவேண்டும். ஏனெனில், மாநிலங்கள் கூட்டாட்சியில் அரசியல் பங்குதாரர்களாவர். மத்திய மாநில அரசாங்கங்களிடையே ஒப்பந்தங்களும் உண்டு. எனவே, இவைகள் எழுத்து வடிவில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

### நெகிழ்வுடைய, நெகிழ்வற்ற அரசியலமைப்பு

ஒன்றிய அரசில் அரசியலமைப்பு நெகிழ்வுடையதாகும். அரசியலமைப்புச் சட்டத்தைச் சாதாரணச் சட்டம்போல் திருத்தலாம். இதைத் திருத்தத் தனிமுறை கிடையாது.

கூட்டாட்சி அரசியலமைப்பு நெகிழ்வற்றதாகும். அரசியலமைப்பு மேலாண்மையுடையதாகவும், தலையாயதாகவும், புனிதத் தன்மையுடையதாகவும் கருதப்படுகிறது. எனவே, இதை மாற்றுவதில் கடினமான முறை கையாளப்படுகிறது.

### நீதிமன்றம்

ஒன்றிய அரசில் தனிச்சிறப்புத் தலைமை நீதிமன்றம் கிடையாது. ஏனெனில், பாராளுமன்றம் உன்னதமானதாகும். இஃது இயற்றும் சட்டத்தைத்திறனாய்வு செய்யவியலாது. எனவே நீதிமன்றங்களுக்கு நீதிப்புனராய்வு அதிகாரம் இல்லை. நீதிமன்றம் பாராளுமன்றச் சட்டத்தை அரசியலமைப்பிற்கு முரணானது என்று கூற முடியாது.

கூட்டாட்சி நாடுகளில் தனிச்சிறப்புத் தலைமை நீதிமன்றம் உண்டு. இஃது அரசியலமைப்பின் பாதுகாவலனாகச் செயல்பட்டு மக்களின் உரிமைகளையும் மாநிலங்களின் உரிமைகளையும் பாது காக்கிறது.

**ஒற்றையாட்சி இரட்டையாட்சி**

ஒன்றிய அரசில் மத்திய அரசாங்கம் ஒன்று மட்டுமே உண்டு. எனவே இஃது ஒற்றையாட்சி அமைப்பாகும். இங்கு மக்களுக்கு ஒரு குடியுரிமையே உண்டு.

கூட்டாட்சி நாடுகளில் மத்திய அரசாங்கமும் மாநில அரசாங் கங்களும் உள்ளன. இங்கு இரட்டையாட்சி நடைமுறையில் இருக்கிறது. இங்குள்ள மக்களுக்கு மாநிலத்தில் ஒரு குடியுரிமை யும் மத்திய அரசாங்கத்தில் ஒரு குடியுரிமையும் ஆக இரண்டு குடியுரிமைகள் உள்ளன.

**அதிகார ஒருதலையும் சமநிலையும்**

ஒன்றிய ஆட்சியில் அதிகாரமனைத்தும் மையத்தை நோக் கியே சாய்ந்துள்ளன. இங்கு அதிகார ஒருதலை நிலவுகிறது.

கூட்டாட்சியில் அதிகாரங்கள் ஒரே சமயத்தில் மாநிலங்களை நோக்கிப் பிரிந்தும் மையத்தை நோக்கிக் குவிந்தும் செல்கின்றன. பிரிதலுக்கும் குவிதலுக்கும் இடைப்பட்டதோர் சமநிலையைக் கூட் டாட்சிகளில் காணலாம். மிகுதியான பிரிவோ அல்லது மிகுதி யான குவிப்போ இல்லை. எனவே அதிகாரச் சமநிலை எனப்படு கிறது.

**ஒரு சீரான சட்டம்-பல வகைச் சட்டம்**

ஒன்றிய ஆட்சியில் நாடு முழுவதும் ஒரே விதமான சீரான சட்டம் நிலவும்.

கூட்டாட்சியில் மத்திய அரசாங்கச் சட்டம் ஒருபுறமும் மாநில அரசாங்கங்களில் சட்டங்கள் ஒரு புறமுமாகப் பலவகைச் சட்டங்கள் நிலவுகின்றன.

**வேறுபாடுகள் குறைதல்**

கூட்டாட்சி நாடுகளில் உள்ள அதிகாரப் பகிர்வு படிப்படியாக நீங்கி மத்திய அரசாங்கத்திற்கு அதிக அதிகாரம் கொடுக்கப்பட்டு ஒன்றிய ஆட்சிப் பாணியின் ஒரு பகுதி ஏற்கப்படுகிறது. அதே போல ஒன்றிய ஆட்சியில் மாநிலங்களுக்கு அதிகாரங்களும்

சுயாட்சியும் அளிக்கப்பட்டுக் கூட்டாட்சிப் பாணியின் ஒரு பகுதி ஏற்கப்படுகிறது. இந்தியா போன்ற அரசுகளில் தனிக் கூட்டாட்சிப் பண்போ அல்லது தனி ஒன்றிய ஆட்சிப் பண்போ இல்லாது இரண்டிற்கும் இடைப்பட்ட அரைகுறைக் கூட்டாட்சி (Quasi-Federal) ஏற்படுத்தப்பட்டுள்ளது. எனவே கூட்டாட்சியின் சிறப்புகளும் ஒன்றிய ஆட்சியின் சிறப்புகளும் அடங்கிய ஒரு முறைக்குச் சென்றுகொண்டிருக்கிறோம்.

## கூட்டாட்சி அரசுகளுக்கு எடுத்துக்காட்டுகள்

### அமெரிக்க ஐக்கிய நாடுகள்

உலகிலுள்ள கூட்டாட்சி அமைப்புகளில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு முழுக் கூட்டாட்சித் தன்மையையுடையது. அரசியலமைப்பின் மீயுயர்வு, அதிகாரப் பங்கீடு, கூட்டாட்சி நீதிமன்றத்தின் அதிகாரம் ஆகிய கூட்டாட்சியின் பண்புகளை அரசியலமைப்புக் கொண்டுள்ளது.

1781-ல் அமெரிக்காவின் பதின்மூன்று குடியேற்ற நாடுகள் நேசக்குழு அமைத்து இங்கிலாந்துடன் போரிட்டு வெற்றிபெற்றன. இந்த நேசக்குழு ஒருவரையும் பிணைக்க இயலாத மணற்கயிறு என உட்ரோ வில்சன் கூறுகிறார்.[24] இருப்பினும் கூட்டாட்சி அமைப்பதற்கு இந்த நேசக்குழு முதற்படியாகத் திகழ்ந்தது. 1787-ல் பிலடெல்பியாவில் கூடிய அவை கூட்டாட்சி அரசியலமைப்பை வகுத்தது. அமெரிக்க மாநிலங்கள் பதின்மூன்று 1789-ல் கூட்டாட்சி அரசியலமைப்பை ஏற்றுக் கூட்டரசை நடைமுறைப்படுத்தியதென C. F. ஸ்ட்ராங் கூறுகிறார்.[25]

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பில் அதிகாரப் பங்கீடு இருவகையில் செய்யப்பட்டுள்ளது. முதலாவதாக அரசாங்கத்தின் நிறுவனங்களாகிய சட்டத்துறை, நிருவாகத்துறை, நீதித்துறை ஆகிய மூன்று துறைகளையும் தனித்தனியே பிரித்து அதிகாரப் பிரிவினையை ஏற்படுத்தியுள்ளது. இரண்டாவதாக மத்திய மாநில அரசாங்கங்களிடையே அதிகாரப் பங்கீட்டை வகுத்துள்ளது. மத்திய அரசாங்கத்திற்கான அதிகாரங்கள் கூறப்பட்டு, எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களுக்கு விடப்பட்டுள்ளன. அதி

[24] Woodrow Wilson: 'A rope of sand which could bind no one.'

[25] C. F. Strong: 'The next step was taken in 1789 when a convention at Philadelphia drew up the present constitution, which was adopted by the Thirteen States and became effective in 1789.' (Page 108. Modern Political Constitutions.)

காரப் பங்கீட்டில் கூட்டாட்சியின் மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் வரையறுக்கப்பட்டுள்ளது. எஞ்சிய அதிகாரங்களை மாநிலங்களுக்கு வழங்கியதன் மூலம் மாநிலங்களின் சுதந்திரமும் சுயாட்சியும் பாதுகாக்கப்படுகின்றன.

அமெரிக்கப் பாராளுமன்றத்தில் பிரதிநிதிகளின் அவையென்றும், செனட் அவையென்றும் இரு அவைகள் உள்ளன. மேலவையில் மாநிலங்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டுள்ளது. இது மாற்றமுடியாத சட்டமாகும்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைவர் நான்கு ஆண்டுகளுக்கொரு முறை மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். தலைவரின் அதிகாரங்கள் அரசியலமைப்பில் சொல்லப்பட்டுள்ளன. தூதாண்மை அதிகாரங்களை செனட்டின் இசைவுபெற்றே செயல்படுத்த வேண்டும். மாநிலங்கள் கைவிட்ட வெளிப்புற இறைமை இதனால் கட்டுப்படுத்தப்படுகிறது.

கூட்டாட்சி நீதிமன்றம் அரசியலமைப்பின் பாதுகாவலனாகச் செயல்படுகிறது. மாநிலங்களின் உரிமைகளையும் மக்களின் உரிமைகளையும் பாதுகாக்கிறது. அரசியலமைப்பிற்கு முரணான சட்டங்களைச் செல்லுபடியற்றதாக்குகிறது. இருப்பினும் அவசியத்தின் காரணமாகக் கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரம் வலிமை பெற்றுள்ளது. அடிமைப் பிரச்சினைக்குத் தீர்வுகாண 1861லிருந்து 1865 வரை உள்நாட்டுப் போர் நடைபெற்றது. அடிமைமுறையை ஒழிக்க வேண்டியும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஐக்கியத்தைக் காக்க வேண்டியும் ஆப்ரஹாம் லிங்கன் (Abraham Lincoln) போரைத் துவக்கினார். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வட பகுதிக்கும் தென் பகுதியிலுள்ள பதினொரு மாநிலங்களுக்குமிடையே உள்நாட்டுப் போர் நடைபெற்றது. இப்போரில் தெற்கு மாநிலங்கள் தோற்கடிக்கப்பட்டன. ஐக்கியம் காப்பாற்றப்பட்டது.

கூட்டாட்சியிலிருந்து பிரிந்துசெல்வது சட்டவிரோதமாக்கப்பட்டது. தற்போது அமெரிக்காவின் எந்த ஒரு மாநிலமும் கூட்டாட்சியிலிருந்து பிரிந்துசெல்வதைக் கனவிலும் கருத முடியாது.

பிராங்ளின் ரூஸ்வெல்ட் (Franklin Roosevelt) பதவிக் காலத்திலும் கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரம் அதிகப்படுத்தப்படுவதற்கான முயற்சிகள் நடைபெற்றன. பொருளாதார மந்தநிலையைப் போக்க ரூஸ்வெல்ட் புதிய திட்டம் (The New Deal) கொண்டு வந்தார். இத் திட்டத்தின் மூலம் சமூகப் பொருளாதாரத் துறைகளில் பல சீர்திருத்தங்களை ரூஸ்வெல்ட் மேற்

கொண்டார். பொதுநலப் பாதுகாப்புகள், முதுமை உதவி ஊதியம் ஆகியன பற்றிப் பாராளுமன்றம் சட்டங்களை இயற்றியது. இச்சட்டங்கள் மாநிலங்களின் உரிமைகளைப் பாதிக்கக் கூடியனவாக இருந்தன. எனவே அமெரிக்காவின் தலைமை நீதிமன்றம் இச்சட்டங்கள் அரசியலமைப்பிற்கு முரணானவை எனக் கூறித் தள்ளுபடி செய்தது. இவைகள் ஒன்றிய ஆட்சியில் நடைபெற இயலாதனவாகும்.

இரண்டாவது உலகப் பெரும்போரில் அமெரிக்காவும் ஈடுபட்டது. இதன் காரணமாகக் கூட்டாட்சி மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் அதிகரித்தது. நாட்டின் பாதுகாப்பிற்காக அதிகார அதிகரிப்பு அவசியமாயிற்று. கூட்டாட்சி அதிகாரத்தை அதிகப்படுத்திலைன்றி தாமஸ் ஜெஃபர்ஸன் (Thomas Jefferson) கண்ட வாழ்க்கை, தன்னுரிமை, இன்ப வேட்கை என்னும் கனவு நனவாகாது.[26]

### ஸ்விஸ் நேசக்குழு

சுவிட்ஸர்லாந்து நேசக்குழு எனப்பட்டாலும், உண்மையில் அது சுவிட்ஸர்லாந்துக் கூட்டாட்சியாகும். பதின்மூன்றும் நூற்றுண்டில் மாவட்டங்கள் எனப்படும் மூன்று காட்டுக் கோட்டங்கள் நிறுவப்பட்டன. இவைகள் ஆஸ்திரியாவின் மேலாண்மையை எதிர்த்துப் போரிட்டு நேசக்குழுவாக இணைந்தன. மூன்று காட்டுக் கோட்டங்கள் நாளடைவில் பதின்மூன்று சுயேச்சை அரசுகளாக வளர்ந்தன. 1648ஆம் ஆண்டின் வெஸ்ட்போலியா உடன்படிக்கையின்படி (Treaty of Westpholia) இப் பதின்மூன்று அரசுகளின் இறைமையும் சுதந்திரமும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. நேசக்குழு அமைப்புமுறை தொடர்ந்து செயல்பட்டது. இவைகளிடையே மத்திய அரசாங்கம் வலுவற்று நெகிழ்வுடைய கூட்டாக இருந்தது. 1861-ல் ஏழு ரோமன் கத்தோலிக்கக் கோட்டங்கள் கூட்டிலிருந்து விலக முற்பட்டன. ஆனால் இவைகள் தோற்கடிக்கப்பட்டுக் குழு நிலைநாட்டப்பட்டது. இதன் விளைவாகப் பழைய நேசக்குழு (ஸ்டாட்டன் புந்த் - Statenbund) நீக்கப்பட்டுக் கூட்டாட்சி அரசியலமைப்பு (புந்த் ஸ்டாட் - Bundesstaat) தோற்றுவிக்கப்பட்டது. 1874-ல் தோற்றுவிக்கப்பட்ட கூட்டாட்சி 1848ஆம் ஆண்டின் நேசக்குழு அரசியலமைப்பை நீக்கியது. 1874ஆம் ஆண்டின் புதிய அரசியலமைப்புப்படியே தற்கால சுவிட்ஸர்லாந்து ஆளப்படுகிறது. ஆனால் அவ்வப்போது சில அரசியலமைப்புத் திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன.

[26] Thamas Jefferson : 'American dream of life, liberty and pursuit of happiness,'

சுவிட்ஸர்லாந்தில் பொது மதமோ, பொது மொழியோ கிடையாது. ஜெர்மானிய மொழியும், பிரஞ்சு மொழியும், இத்தாலிய மொழியும் பேசப்படுகின்றன. இயற்கை வளமுடைய மலைப்பாங்கான நாடாகும். இனத்தால் வேறுபட்ட மக்கள் வாழ்கின்றனர். எனவே கோட்டங்களின் சுதந்திரம் பாதுகாக்கப்படுகின்றது' வரையறுக்கப்பட்ட குறிப்பிட்ட அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்திற்கும் எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களுக்கும் வழங்கப்பட்டுள்ளன. மத, மொழி உரிமைகள் மக்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. சுவிட்ஸர்லாந்து நாட்டின் அரசியலமைப்பு மேலாண்மையுடையதாகக் கருதப்படுகிறது.

அமெரிக்க ஐக்கியநாடுகளின் நிருவாகத்துறையைப் போன்று அல்லாது சுவிட்ஸர்லாந்து நாட்டில் பன்மைச் செயல்துறை முறை நடைமுறையிலிருக்கிறது. பாராளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட எழுவர் கொண்ட அவையே சுவிட்ஸர்லாந்தின் செயல் துறையாகும். பாராளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் இவர்களை இம்மன்றம் நீக்க முடியாது.

சுவிட்ஸர்லாந்துப் பாராளுமன்றத்தில் தேசிய சபை, மாநில சபை என இரண்டு சபைகள் உள்ளன. மாநில சபையில் இருபத்திரண்டு மாநிலங்களுக்கும் சமப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டுள்ளது மாநிலங்களின் அவை அமெரிக்கக் கூட்டாட்சியின் செனட் சபையைப் போன்ற அமைப்புடையதாக இருக்கிறது.

சுவிட்ஸர்லாந்தின் நீதித்துறை அமெரிக்க நீதித்துறையிலிருந்து மாறுபட்டதாகும். சுவிட்ஸர்லாந்தின் தலைமை நீதிமன்ற நீதிபதிகள் பாராளுமன்றத்தால் ஆறு ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அரசியலமைப்பிற்கு விளக்கம் கூறும் அதிகாரமும், பாராளுமன்றச் சட்டங்களைப் புனராய்வு செய்துஅரசியலமைப்பிற்கு முரணானது என்று கூறும் அதிகாரங்களும் தலைமை நீதிமன்றத்திற்குக் கிடையாது. உலகில் காணும் கூட்டாட்சி நாடுகளில் சுவிட்ஸர்லாந்து நீதித்துறை மிகவும் வலிமையற்றதாக உள்ளது.

சுவிட்ஸர்லாந்தின் அரசியலமைப்பின் மிக முக்கியமான அம்சம் நேரிடைக் குடியாட்சி முறைகளாகும். குடியொப்பம் (Referendum), மக்கள் வாக்கெடுப்பு (Plebiscite), மக்கள் துவக்கம் (Initiative), மீட்புரிமை (Recall) ஆகியவைகளுக்கு அரசியலமைப்பில் வகை செய்யப்பட்டுள்ளது. குடியொப்பமும், மக்கள் வாக்கெடுப்பும், மக்கள் துவக்கமும் அரசியலமைப்புத் திருத்தத்தில் பெரிதும் கையாளப்படுகின்றன.

அதிகாரப் பங்கீடும் சுவிட்ஸர்லாந்து அரசியலமைப்பில் உள்ளது. ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள் கோட்டங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. அரசியலமைப்பின் மீயுயர்வு நிலவுகிறது. மக்களாட்சி முறைகள் பின்பற்றப்படுகின்றன. இவைகள் கூட்டாட்சி அமைப்பின் கூறுகளாகும்.

**ஆஸ்திரேலியக் காமன்வெல்த்**

ஆஸ்திரேலியக் காமன்வெல்த்தில் கூட்டாட்சி அரசிற்குரிய எல்லாப் பண்புகளும் உள்ளன. மத்திய மாநில அரசாங்கங்களிடையே அதிகாரப் பங்கீடும், அரசியலமைப்பின் மீயுயர்வும், நீதிமன்றத்திற்கு அரசியலமைப்பிற்கான விளக்கம் தரும் அதிகாரமும் உள்ளன.

ஆஸ்திரேலியா ஆங்கிலேயர்களின் குடியேற்ற நாடாக இருந்தது. இங்கிலாந்திற்கும் ஆஸ்திரேலியாவிற்கும் இருந்த தொலைவின் காரணமாகவும், குடியேற்ற நாடுகளிடையே வட்டார உணர்ச்சி வளர்ந்ததன் காரணமாகவும், ஆஸ்திரேலியக் குடியேற்ற நாடுகள் சுயாட்சியை நிறுவின. ஆறு சுயாட்சி அரசுகள் ஆஸ்திரேலியாவில் இருந்தன. ஜப்பானின் ஏகாதிபத்தியப் போக்கினால் இக்குடியேற்ற நாடுகளுக்கு ஆபத்து நிலவியது. இந்த ஆபத்தைத் தடுக்கவும், தங்கள் பொருளாதார சமூக நலன்களை வளர்க்கவும் ஆஸ்திரேலியக் காமன்வெல்த் அமைக்கப்பட்டது.

ஆஸ்திரேலியப் பொதுநல அரசின் மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்கள் வரையறை செய்யப்பட்டுள்ளன. எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களுக்கு விடப்பட்டுள்ளன. மாநிலங்களின் அதிகாரம் விரிந்து பரந்துள்ளது. கூட்டாட்சியின் பாராளுமன்றத்தின் செனட்சபை, பிரதிநிதிகள்சபை என இரு சபைகள் உள்ளன. செனட்சபையில் மாநிலங்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டுள்ளது. கூட்டாட்சியின் தலைமை நீதிமன்றம் அமெரிக்காவின் தலைமை நீதிமன்றத்தைப் போல் அரசியலமைப்பிற்கு விளக்கம் கூறும் அதிகாரத்தைப் பெற்றுள்ளது.

அமெரிக்காவில் மாநில ஆளுநர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். கனடாவில் மத்திய அரசாங்கத்தால் நியமிக்கப்படுகின்றனர். ஆனால், ஆஸ்திரேலியாவில் மாநில ஆளுநர்கள் மாநில அரசாங்கத்தின் ஒப்புதலுடன் இங்கிலாந்து அரசியால் நியமிக்கப்படுகிறார்கள். மாநிலங்களின் சுயேச்சை காக்கப்படுகிறது. மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தை அதிகரிக்கும் திட்டம் குடியொப்பத்தால் தோல்வியுற்றது.

**கனடாவின் தன்னாட்சி**

கனடாவின் அரசியலமைப்பை வகுப்பதில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் உள்நாட்டுப் போரும், கனடாவில் நிலவிய பல தேசிய யினங்களும் செல்வாக்குச் செலுத்தியுள்ளன. பூரண ஒன்றிய அரசாகவோ அல்லதுகூட்டாட்சி அரசாகவோ கனடா அமைக்கப் படவில்லை. இவ்விரு அரசாங்க முறைகளுக்கும் இடைப்பட்டதொரு நடுநிலை அமைப்புக் கையாளப்பட்டது.

மாநிலங்கள் பிரிந்து செல்லும் வாய்ப்பைக் குறைப்பதற்காக வலுவுள்ள மத்திய அரசாங்கம் கனடாவில் நிறுவப்பட்டுள்ளது. மாநிலங்களின் அதிகாரங்கள் கூறப்பட்டுள்ளன. எஞ்சிய அதி காரங்கள் மத்திய அரசாங்கத்திற்கு விடப்பட்டுள்ளன. அமெ ரிக்க ஐக்கிய நாடுகளின் உள்நாட்டுப் போரின் விளைவால் மத்திய அரசாங்கத்திற்கு அதிக அதிகாரமளிக்கும் இவ்வதிகாரப் பகிர்வு முறை கையாளப்பட்டது. பிரஞ்சு நாட்டினத்தாரும் ஆங்கிலேய நாட்டினத்தாரும் கனடாவிலிருந்ததால் ஒன்றிய அரசு நிறுவப் படாமல் கூட்டாட்சி அரசு நிறுவப்பட்டுள்ளது. கனடா அரசு கூட்டாட்சிப் பண்பையும் ஒன்றிய ஆட்சிப் பண்பையும் கொண் டுள்ள ஓர் அரசியலமைப்பை உடையது.

கனடாவின் கூட்டாட்சி முறைக்கும் ஆஸ்திரேலியாவின் கூட் டாட்சி முறைக்கும் ஒப்பீடுகாண்பின் கனடாவின் அரசியலமைப்பு முறை தெளிவுபடும். ஆஸ்திரேலியாவில் மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்கள் குறிப்பிடப்பட்டு எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங் களுக்கு அளிக்கப்பட்டுள்ளன. கனடாவில் மாநிலங்களின் அதி காரங்கள் வரையறுக்கப்பட்டு எஞ்சிய அதிகாரங்கள் மத்திய அர சிடம் விடப்பட்டுள்ளன.

ஆஸ்திரேலியாவின் மாநில ஆளுநர்கள் நியமனத்தில் மத்திய அரசாங்கம் தலையிடுவதில்லை. ஆனால் கனடாவின் மாநில ஆளு நர்களை மத்திய அரசாங்கம் நியமனம் செய்கிறது. ஆஸ்திரேலியா விலும் கனடாவிலும் மத்திய அரசாங்கத்தின் தலைமை ஆளுநர் களை மத்திய அரசாங்கத்தின் ஒப்புதலுடன் இங்கிலாந்து அரசியார் நியமனம் செய்கிறார்.

ஆஸ்திரேலியாவில் மத்திய அரசாங்கம் மாநிலச் சட்ட ஆக்கத் தில் தலையிடுவதில்லை. ஆனால் கனடாவில் மாநிலச் சட்டங்களை நிராகரிக்கும் மறுப்பாணை அதிகாரம் தலைமை ஆளுநருக்கு உண்டு.

ஆஸ்திரேலியாவின் தலைமை நீதிமன்றம் அரசியலமைப்பிற்கு விளக்கம் கூறும் அதிகாரம் உடையது. ஆனால் கனடாவின்

தலைமை நீதிமன்றம் விளக்கம் கூறுவதில்லை. ஏனெனில், எஞ்சிய அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்தைச் சார்ந்ததாகவும், மத்திய அரசாங்கம் மறுப்பாணை அதிகாரம் (Veto Power) உடையதாகவும் உள்ளது.

ஆஸ்திரேலிய மக்கள் குடியொப்பம் மூலம் அரசியலமைப்பை மாற்றும் அதிகாரம் உடையவர்களாவர். ஆனால் கனடாவில் மத்தியப் பாராளுமன்றமே அரசியலமைப்பைத் திருத்தும் அதிகாரம் பெற்றதாகும்.

ஆஸ்திரேலியாவின் செனட்சபை உறுப்பினர்கள் மாநிலங்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். உறுப்பினர்களை செனட் சபைக்கு அனுப்புவதில் மாநிலங்களுக்குச் சமத்துவம் உண்டு. ஆனால் கனடாவின் செனட் சபை அங்கத்தினர்கள் மத்திய அரசாங்கத்தால் நியமிக்கப்படுகின்றனர்.

சி. எப். ஸ்ட்ராங் அவர்களின் கருத்துப்படி, கனடா அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு அருகில் இருந்தாலும் கூட்டாட்சி அரசியலமைப்பு முறையில் அமெரிக்காவிலிருந்து விலகி உள்ளது. ஆஸ்திரேலியா அமெரிக்காவிலிருந்து தூரத்திலிருந்தாலும் கூட்டாட்சி முறையில் அமெரிக்காவை நெருங்கியுள்ளது. ஆஸ்திரேலியாவின் அரசியலமைப்பைவிடக் கனடாவின் அரசியலமைப்பு ஒன்றிய ஆட்சி முறையை நெருங்கியுள்ளது.[27]

**ஜெர்மானியக் கூட்டாட்சி**

இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு மேற்கு ஜெர்மனி யென்றும், கிழக்கு ஜெர்மனி யென்றும் ஜெர்மனி இரண்டாகப் பிரிக்கப்பட்டது. மேற்கு ஜெர்மனி பான் (Bonn) ஐத் தலைநகராகக் கொண்டு எழுதப்பட்டதோர் கூட்டாட்சி அரசியலமைப்பை 1949-ல் வகுத்தது. இப்புதிய கூட்டாட்சிக் குடியரசில் இரு சபைகள் உள்ள சட்டமன்றம் அமைக்கப்பட்டது. ஒன்று கூட்டாட்சிப் பேரவை யென்றும், மற்றது கூட்டாட்சிஅவை யென்றும் பெயரிடப்பட்டன. இரு அவைகளும் இணைந்து தலைவரைத் தேர்ந்தெடுக்கின்றன. கூட்டாட்சி அமைச்சரவையும் நிறுவப்பட்டது. தலைவரும் அமைச்சர்களும் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையவர்கள். மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் வரையறுக்கப்பட்டுள்ளது. எஞ்சிய அதிகாரங்கள் லேண்டர் (Lander) எனப்படும் மாநிலங்

[27] C. F. Strong: 'Inspite of Canada's proximity to the United States and the remoteness of Australia from America, the federalism of Australia resembles that of the United States in every particular, for more closely than does that of Canada. (Page 123, Modern Political Constitutions.)

களுக்கு உரியதாகும். கூட்டாட்சி நீதிமன்றமும் உண்டு. அரசியலமைப்பிற்கு இது விளக்கம் அளிக்கிறது. மத்திய மாநில அரசாங்கங்களின் உரிமைகளையும் கடமைகளையும் பற்றித் தீர்ப்பளிக்கிறது. இவைகளிடையே ஏற்படும் பிணக்குகளைத் தீர்த்து வைக்கிறது.

அரசியலமைப்பின் மீயுயர்வையும், அதிகாரப் பங்கீட்டையும், தலைமை நீதிமன்றத்தையும் உடைய ஜெர்மானியக் கூட்டாட்சி குடியாட்சி முறையில் நடைபெறுகிறது.

**சோவியத் ரஷ்யாவில் கூட்டாட்சி**

1918ஆம் ஆண்டில் லெனினது சோவியத் அரசியலமைப்பு ஏற்படுத்தப்பட்டது. இதற்கு ரஷ்ய சோவியத் கூட்டாட்சிப் பொதுவுடைமைக் குடியரசு என்று பெயர். இக்குடியரசில் ரஷ்யப் பகுதி மட்டும் இருந்தது.

1923-ல் ரஷ்யாவுடன் யுக்ரெய்னும் (Ukraine), பழைய ரஷ்யப் பேரரசின் பகுதிகளும் இணைந்தன. இவ்விணைப்பின் காரணமாகப் பொதுவுடைமைக் குடியரசுகளின் ஐக்கியம் (Union of Soviet Socialist Republics) தோன்றியது. கூட்டாட்சி முறையில் அரசாங்க அதிகாரங்கள் அமைக்கப்பட்டன. மத்திய அரசாங்கத்திற்குக் குறிப்பிட்ட அதிகாரங்களும், எஞ்சியன கூட்டாட்சியின் உறுப்புகளான குடியரசுகளுக்கும் அளிக்கப்பட்டன. 1936-ல் ஸ்டாலின் அரசியலமைப்பை மாற்றியமைத்தார். பதினொரு சோவியத் பொதுவுடைமைக் குடியரசுகள் இந்த அரசியலமைப்பை ஏற்றுக் குடியாட்சியை நிறுவின. தற்போது பதினாறு சோவியத் குடியரசுகள் கூட்டாட்சியில் உள்ளன. பல்வேறு இன மக்களும் பல்வேறு மொழி பேசும் மக்களும் கூட்டாட்சி அரசின் கீழ் வாழ்கின்றனர்.

கூட்டாட்சியின் மத்திய அரசாங்கத்திற்கு அதிகாரங்கள் பெருமளவில் வழங்கப்பட்டுள்ளன. எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களைச் சாரும். சோவியத் அரசியலமைப்பின்படி கூட்டாட்சியின் உறுப்புகள் கூட்டாட்சியை விட்டு விலகும் உரிமையை உடையனவாக உள்ளன. மற்றக்கூட்டாட்சி அமைப்புகளிலுள்ள கூட்டாட்சி உறுப்புகளுக்குக் கூட்டாட்சியை விட்டுப் பிரியும் உரிமை கிடையாது. எனவே ரஷ்யக் கூட்டாட்சி அமைப்பு நூதனமான ஒன்று. மாநிலங்களுக்கு இந்த உரிமை பெயரளவு உரிமையாகும். நடைமுறையில் இவ்வுரிமையை எந்த மாநிலமும் கோர முடியாது. மத்திய அரசாங்கத்தின் பாராளுமன்றம் மூன்றில் இரண்டு பகுதிப்

பெரும்பான்மையால் அரசியலமைப்பைத் திருத்தலாம். சோவியத் பொதுவுடைமைக் குடியாட்சி ஐக்கியத்தில் ஒரு கட்சி முறை நடைமுறையில் உள்ளது. சோவியத் கூட்டாட்சி அமைப்பு மற்றக் கூட்டாட்சி அமைப்புகளிலிருந்து வேறுபட்டு விளங்குகிறது.

## யூக்கோஸ்லாவியக் கூட்டாட்சி

யூக்கோஸ்லாவியா பல இன மக்களையுடைய நாடாக இருந்தது. முதலாம் உலகப் போருக்குப் பிறகு ஒன்றிய அரசு நிறுவப்பட்டது. இரண்டாம் உலக யுத்தத்தின் முடிவில் ஒன்றிய அரசும் முடியாட்சியும் நீக்கப்பட்டு 1946ஆம் ஆண்டில் கூட்டாட்சி மக்கள் குடியரசு (Federal People's Republic) நிறுவப்பட்டது. மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்களைக் கொண்ட பட்டியலுண்டு. ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள் மாநிலங்களைச் சார்ந்தனவாகும். யூகோஸ்லாவியாவும் ரஷ்யாவைப் போலப் பொதுவுடைமை நாடாகும்.

1963 ஆம் ஆண்டு அரசியலமைப்பில் பல புதிய மாற்றங்கள் செய்யப்பட்டன. கூட்டாட்சி அவையில் ஐந்து பிரிவுகள் ஏற்படுத்தப்பட்டன. இவைகள் முறையே கூட்டாட்சியின் விவகாரங்களையும், பொருளாதார முன்னேற்றத்தையும், கல்வி முன்னேற்றத்தையும், சமுதாய நலனையும், அரசியலமைப்புகளையும் கவனித்தன. இப்பிரிவுகளிடையே தோன்றும் முரண்பாடுகளைத் தீர்ப்பதற்காக நீதிமன்றமும் தோற்றுவிக்கப்பட்டது.

## இலத்தீன் அமெரிக்காவில் கூட்டாட்சி அரசியலமைப்புகள்

மத்திய தென்னமெரிக்காவில் இருபது குடியரசுகள் உள்ளன. அர்ஜென்டைனு (Argentina), பிரேசில் (Brazil), வெனிசுலா (Venezuela), மெக்ஸிகோ (Mexico) ஆகியன முக்கியக் கூட்டாட்சி நாடுகளாகும். இவைகள் ஸ்பெயினிடமிருந்தும், போர்ச்சுக்கலிடமிருந்தும் விடுதலை பெற்றனவாகும். 1825-ல் அர்ஜென்டைனு (Argentina) தனது அரசியலமைப்பை வகுத்தது. இவ்வரசியலமைப்பு அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பைப் போன்று அமைந்தது.

1822-ல் பிரேசில் (Brazil) போர்ச்சுக்கீசிய ஆதிகத்திலிருந்து விடுதலை பெற்றுக் குடியரசுக் கூட்டாட்சியாக மாறியது. மாநிலங்களுக்கு அதிகாரங்கள் ஏராளமாக ஒதுக்கப்பட்டன. இருப்பினும் பல புரட்சிகளின் காரணமாக மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் வலுவடைந்துள்ளது. பிரேசில் நாட்டில் கூட்டாட்சி நிறுவனங்கள் நிலைத்து நிற்கின்றன.

மெக்ஸிக்கோவின் (Mexico) கூட்டாட்சி முறை அமெரிக்க ஐக்கியநாடுகளின் கூட்டாட்சி முறையை ஒத்திருக்கிறது. 1917ஆம் ஆண்டில் மெக்ஸிக்கோவின் அரசியலமைப்பு ஏற்படுத்தப்பட்டது. இருபத்தெட்டு மாநிலங்களையுடைய மெக்ஸிக்கோ கூட்டாட்சியில் மாநிலங்களின் சுயேச்சையும் உரிமையும் காக்கப்படுகின்றன.

வெனிசுலா (Venezuela) 1830-ல் கூட்டாட்சி முறை அரசாங்கத்தை நிறுவியது. இவ்வரசியலமைப்பின்படி மாநிலங்களுக்கு மிகுதியான அதிகாரங்கள் அளிக்கப்பட்டன. 1947ஆம் ஆண்டில் வெனிசுலா புதியதோர் அரசியலமைப்பை ஏற்படுத்தியது. இதன் படி மக்களாட்சி முறைகள் அமைக்கப்பட்டன.

இலத்தீன் அமெரிக்காவில் கூட்டாட்சி அரசியலமைப்புகளிலிருந்து எதிர்காலத்திற்கான பல பாடங்களை உலகம் அறிய முடிகிறது. கூட்டாட்சி என்ற உயர் குறிக்கோள் மட்டும் மக்களிடம் இருந்தால் போதாது. அக்குறிக்கோளை அடையச் செயல் திறனும் உறுதியும் அவசியமாகும். பிரைஸ் கூற்றுப்படி, கருவியைப் பெறுவதனுல் மட்டும் தொழிலாளியின் கைத்திறன் உயராது. அதே போல நல்ல அரசியல் நிறுவனங்களைப் பெறுவதால் மட்டும் நாடுகளின் தகுதி உயர்ந்துவிடாது.[28] எனவே நல்ல அரசியல் நிறுவனங்களைப் பெறத் தகுதியற்ற நாடுகளுக்கு அந்நிறுவனங்களை வழங்க வேண்டாம். இதிலிருந்து கூட்டாட்சி முறை இலத்தீன் அமெரிக்காவில் உறுதியற்ற நிலையில் உள்ளது என்பதை அறியலாம்.

## இந்திய அரசியலமைப்பு

இந்தியா நீண்ட காலம் ஆங்கிலேயரது ஆட்சியிலிருந்தது. 1947ஆம் ஆண்டில் தன்னுட்சி நிலைபெற்றது. 1950-ல் இந்தியா குடியாட்சியாக மாறியது. இந்தியாவிற்கென ஓர் அரசியலமைப்பை அரசியல் நிர்ணயசபை வகுத்தது. இந்திய அரசியலமைப்பில் கூட்டாட்சிக்குள்ள பண்புகள் காணப்படுகின்றன. இந்திய அரசியலமைப்பு எழுதப்பட்டதாக உள்ளது. மத்திய அரசாங்கம், மாநில அரசாங்கம் என்ற இரு அரசாங்க முறை நிலவுகிறது. மத்திய மாநில அரசாங்கங்களிடையே அதிகாரங்கள் பங்கிடப்பட்டுள்ளன. அரசியலமைப்பிற்கு விளக்கம் நிறுவுவதற்கும் மத்திய மாநில அரசாங்கங்களுக்கிடையே ஏற்படும் பிணக்குகளைத் தீர்ப்பதற்கும் ஒரு தலைமை நீதிமன்றம் நிறுவப்பட்டுள்ளது. கூட்

[28] Bryle: 'Do not give to a people institutions for which it is unripe in the simple faith that the tool will give skill to the work man's hand.'

டாட்சிக்குரிய பண்புகள் இருப்பினும் இந்திய அரசியலமைப்பில் அதிகாரக் குவிப்பையும் காணலாம். இந்தியக் கூட்டாட்சி அமைப்பு மற்றக் கூட்டாட்சி அமைப்புகளிலிருந்து மாறுபட்டுள்ளது.

இந்தியாவின் மாநிலங்கள் மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் உள்ளன. மத்தியப் பாராளுமன்றம் மாநிலங்களுக்கான சட்டங்களை இயற்றலாம். மத்திய, மாநிலச் சட்டங்களிடையே முரண்பாடுகள் தோன்றும்போது மத்திய அரசாங்கத்தின் சட்டங்களே மீயுயர்வுடையனவாக இருக்கும். மேலும் மாநில ஆளுநர்கள் மத்திய அரசாங்கத்தால் நியமிக்கப்படுகின்றனர்.

மற்றக் கூட்டாட்சி அரசியலமைப்பைப் போல் அல்லாது இந்திய அரசியலமைப்பு நெகிழ்வுடையதாக அமைந்துள்ளது. இந்திய அரசியலமைப்புத் திருத்தத்திற்கான முன்படிவம் பாராளுமன்றத்தின் இரு அவைகளில் (ராஜ்ய சபை, லோக் சபை) ஏதாவது ஓர் அவையில் கொண்டுவரப்படலாம். அரசியலமைப்புத் திருத்த முன்படிவம் பாராளுமன்றத்தின் மொத்த அங்கத்தினர்களில் பெரும்பான்மையினராலும், அமர்ந்து வாக்களிக்கும் அங்கத்தினரில் மூன்றில் இரண்டு பகுதியினராலும் ஏற்கப்படவேண்டும். மாநில உரிமைகளைப் பாதிக்கும் அரசியலமைப்புத் திருத்தங்கள் பாராளுமன்றத்தினால் மேற்கூறிய முறையில் ஏற்கப்படுவதோடு, இந்தியாவின் மொத்த மாநிலங்களில் பாதியின் சட்டமன்றங்களாலும் ஏற்கப்படவேண்டும். குடியரசுத் தலைவர் ஒப்புதல் பெற்றுச் சட்டத் திருத்த முன்படிவம் சட்டநிலை எய்தும்.

மத்தியப்பாராளுமன்றத்தின் இரண்டாம் அவையாகிய ராஜ்ய சபையில் மாநிலங்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படுவதில்லை. மாநிலங்களின் மக்கள் தொகையின் அடிப்படையிலேயே பிரதிநிதித்துவம் வழங்கப்படுகிறது.

இந்திய அரசியலமைப்புப் பூரணக் கூட்டாட்சி அரசியலமைப்பு என்றோ, முழுமையான ஒரு முக அரசியலமைப்பென்றோ கூற முடியாது. இதை அரைகுறைக் கூட்டாட்சி (Quasi Federal) அரசியலமைப்பென முன்பே கண்டோம்.

## முக்கிய வினாக்கள்

1. கூட்டாட்சியின் நிறைகுறைகள் யாவை?
2. கூட்டாட்சியின் பிரச்சினைகள் யாவை? அவைகள் எவ்விதம் எதிர்கொள்ளப்படுகின்றன?

3. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கூட்டாட்சி முறைக்கும், சுவிட்ஸர்லாந்தின் கூட்டாட்சி முறைக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கூறுக.

4. 'கனடா அமெரிக்காவின் அருகிலிருந்தும் அரசியலமைப்பு முறையில் விலகியுள்ளது. ஆஸ்திரேலியா தூரத்திலிருந்தும் கூட்டாட்சி அரசியலமைப்பு முறையில் அமெரிக்காவை நெருங்கியுள்ளது' விளக்குக.

5. குறிப்பு வரைக:

அ. அமெரிக்கத் தலைமை நீதிமன்றம்.

ஆ. ஜெர்மானியக் கூட்டாட்சி.

இ. சோவியத் ரஷ்யாவின் இயக்கம்.

ஈ. யூகோஸ்லாவியக் கூட்டாட்சி முறை.

உ. இலத்தீன் அமெரிக்கக் கூட்டாட்சி அரசுகள்.

6. அமெரிக்க ஐக்கிய நாடுகள், கனடா, இந்தியா - இங்கே நாட்டு அரசுக்கும் மாநில அரசுகளுக்குமிடையே அதிகாரங்கள் எப்படிப் பகிர்ந்துகொள்ளப்படுகின்றன என்று ஒப்பிட்டுக் கூறுக. (ம. ப. க. ஏப்ரல், 1969)

7. 'இந்திய அரசியலமைப்பு அரைகுறைக் கூட்டாட்சி போன்றது. ஆனால் அரைகுறைக் கூட்டாட்சியுமல்ல'- இக்கூற்றை விளக்குக. (ம.ப.க. செப்டம்பர், 1969)

8. கூட்டாட்சி முறை ஒற்றை ஆட்சி முறையினின்று எவ்வகையில் வேறுபடுகிறது? கிரேட் பிரிட்டன், அமெரிக்கா, இந்தியா ஆகிய நாடுகளை மேற்கோள்களாகக் காட்டி விளக்குக. (செ.ப.க. ஏப்ரல், 1969)

9. அமெரிக்க மைய, மாநில அரசுகளுக்குள்ள அதிகாரப் பகிர்வுக்கும், இந்தியாவின் மைய மாநில அரசுகளுக்குள்ள அதிகாரப் பகிர்விற்குமுள்ள வேறுபாடுகளை விவரிக்க. (செ.ப.க. செப்டம்பர், 1969)

10. கூட்டாட்சி என்றால் என்ன? ஏதாவது இரண்டு கூட்டாட்சிகளை மேற்கோள்களாகக் கொண்டு கூட்டாட்சியின் இயல்புகளையும் தனிச்சிறப்புகளையும் விளக்குக. (ம.ப.க. ஏப்ரல், 1970)

11. அமெரிக்காவில் கூட்டரசு, மாநில அரசு இவற்றிற்கிடையேயுள்ள அதிகாரப் பகிர்வினை ஆராய்க. (செ. ப. க. ஏப்ரல், 1970)

12. கூட்டாட்சி அரசியலமைப்புச் சட்டங்களின் முக்கியப் பண்புகளை எடுத்துக் கூறுக. (செ. ப. க. ஏப்ரல் 1972)

13. கூட்டாட்சி அரசின் முக்கியப் பண்புகளை எடுத்துக் காட்டுக. (செ. ப. க. ஏப்ரல், 1973)

14. ஒற்றையாட்சி அமைப்பு கூட்டாட்சி அமைப்பு ஆகியவற்றின் வேற்றுமையை எடுத்துக் கூறுக. கூட்டாட்சிகள் செவ்வனே செயல்படத் தேவையான நிபந்தனைகள் யாவை? (செ. ப. க. செப்டம்பர், 1973)

15. அதிகாரப் பங்கீடு என்ற கருத்தை விளக்கி, கூட்டாட்சிகளில் மத்திய, மற்றும் மாநில அரசுகளிடையே அதிகாரங்கள் எவ்வாறு பங்கீடு செய்யப்படுகின்றன எனக் காட்டுக. (செ. ப. க. செப்டம்பர், 1975)

## இ. இணைக்கூட்டரசு (அ) நேசக்குழு (Confederation)

நேசக்குழுவின் தன்மைகள்— இணைக்கூட்டரசின் இலக்கணம்— கூட்டாட்சிக்கும் நேசக்குழுவிற்கும் ஒற்றுமைகள்— கூட்டாட்சிக்கும் நேசக்குழுவிற்கும் வேறுபாடுகள்— வேறுபாட்டு அட்டவணை— கூட்டாட்சியின் எதிர்காலம்.

கூட்டாட்சி என்ற சொல்லும், நேசக்குழு என்ற சொல்லும் ஒன்றுக்கொன்று மாறிப் பயன்படுத்தப்படுகின்றன. ஒரே மூலச் சொல்லிலிருந்து தோன்றியனவாயும் ஒருபொருள் கொண்டன போல் இருப்பினும், கூட்டாட்சிக்கும் நேசக்குழுவிற்கும் அடிப்படை வேறுபாடுகள் உள்ளன.

### நேசக்குழுவின் தன்மைகள்

இறைமையுடைய நாடுகள் பொது நோக்கத்தை அடிப்படையாகக்கொண்டு ஒன்றுசேர்ந்து அமைக்கும் கூட்டே நேசக்குழு (Confederation) எனப்படும். இவைகள் தங்கள் நாட்டின் பாதுகாப்பிற்காகவும் பொருளாதார முன்னேற்றத்திற்காகவும் கூட்டமைக்கலாம்.

நேசக்குழு (Confederation) நாடுகள் தங்கள் இறைமையை இழப்பதில்லை, தங்கள் மக்கள் குடியுரிமையை இழப்பதில்லை,

இக் கூட்டின் காரணமாகப் புதியதோர் அரசு தோன்றுவதில்லை. இந்நேசக்குழு நாடுகள் செய்துகொள்ளும் ஒப்பந்தங்கள் சம்பந்தப் பட்ட அரசாங்கங்களைப் பிணைக்குமே தவிர அவ்வரசாங்கங்களின் கீழ் வாழும் மக்களைப் பிணைக்காது. மேலும் நேசக்குழு நாடுகள் தாங்கள் விரும்பினால் குழுவிலிருந்து விலகிக்கொள்ளலாம். இவ் இணைக்கூட்டரசால் தோன்றிய இணைப்பு வலுவுடையது அல்ல. நேசக்குழு தனக்கென ஒரு கொடியையும் ஏற்படுத்திக்கொள்வ தில்லை. இந்நேசக்குழு நாடுகள் அனைத்தையும் கட்டுப்படுத்தும் புதிய சட்டங்கள் இயற்றிக்கொள்வதில்லை. அந்தந்த அரசுகள் தங்கள் சட்ட திட்டங்களையே பின்பற்றலாம்.

எனவே நேசக்குழுவிற்குத் தனி இறைமையோ, சட்டங் களோ, குடியுரிமையோ, கொடிகளோ இல்லை. நேசக்குழு நாடுகள் தங்கள் இறைமையையும், சட்டங்களையும், குடியுரிமை களையும், கொடிகளையும் இழப்பதில்லை.

நேசக்குழு நாடுகள் ஒரு மைய நிறுவனத்தை ஏற்படுத்துகின் றன, இணைக்கூட்டரசு நாடுகளிலிருந்து பிரதிநிதிகள் அனுப்பப் படுவர். இவர்கள் தங்கள் அரசாங்கத்தின் கருத்துக்கேற்ப வாக் களித்துத் தீர்மானங்கள் செய்வர். பொதுவாக நேசக்குழு இறை மையுள்ள நாடுகள் செய்துகொள்ளும் ஒரு ஒப்பந்தமும் உடன் பாடுமேயாகும்.

**இணைக்கூட்டரசின் இலக்கணம்**

இணைக்கூட்டரசிற்குக் கூறப்படும் அரசியல் அறிஞர்களின் இலக்கணத்தைக் காண்பின் நேசக்குழுப் பற்றித் தெளிவானதோர் கருத்தும், அது எவ்வாறு கூட்டாட்சியிலிருந்து வேறுபட்டதென்ப தும் தெரியும்.

பேரறிஞர் கார்னர் (Dr. Garner) இலக்கணப்படி, கூட்டாட்சி யைப் போன்று நேசக்குழு ஒரு தனி இறைமையையுடையதல்ல. ஆனால், எத்தனை நாடுகள் குழுவில் சேர்ந்துள்ளனவோ அத்தனை இறைமைகளின் பன்மை அங்கு உண்டு. பொதுவாக ஒவ்வொரு நாடும் சர்வதேச அரங்கில் தனியரசாகும். எனவே, அயல் நாடு களோடு ஒப்பந்தங்கள் செய்துகொள்ளலாம். மேலும் கூட்டாளி களை இணைக்காமல் அயல்நாடுகளுடன் போரிடலாம். கூட்டாளி

களுடன் போரிட நேர்ந்தால் அது சர்வதேசப் போராகுமே தவிர உள்நாட்டுப் போராகாது.[29]

லீக்காக் (Leacock) கருத்துப்படி நேசக்குழு ஒரு தனி அரசா காது. குறிப்பிட்ட நோக்கத்திற்காகக் குறிப்பிட்ட நிபந்தனையுடன் இணைந்துள்ள சுதந்திரமான இறைமையுடைய அரசுகளின் தொகுப்பாகும். நேசக்குழுவிலிருந்து விரும்பும்போது விலகிக் கொள்ளலாம். எனவே நேசக்குழு நிரந்தரமானதும் கலைக்க முடியாததுமல்ல. அப்படிச் சுதந்திரமானதாக இருந்தாலும் கலைக்க முடியாததாக இருந்தாலும் இறைமை மறைந்திருக்கும்.[30]

ஹால் (Hall) என்பாரது விளக்கப்படி இணைக்கூட்டரசு என்பது சுதந்திரமான நாடுகளின் கூட்டாகும். குறிப்பிட்ட நோக்கங்களுக்காக இவைகள் கூடியுள்ளன. இவைகள் ஒரு பொது அரசாங்கத்தின் கீழ் இணைவதில்லை. [31]

ஒப்பின்ஹிம் (Oppenheim) கூற்றுப்படி, உள்நாட்டு வெளிநாட்டுச் சுதந்திரத்தை நிலைநிறுத்துவதற்காக முழு இறைமையுள்ள நாடு இணைவது நேசக்குழுவாகும். சர்வதேச ஒப்பந்தத்தால் இவைகள் கூடுகின்றன. இவ் இணைக் கூட்டரசு நாடுகள் தங்கள் உறுப்பின அரசுகள் மீது சில கட்டுப்பாடுகள் விதிக்கலாம். ஆனால் அவ்வரசுகளின் குடிமக்கள் மீதல்ல. [32]

நேசக்குழுவிற்குச் சில எடுத்துக்காட்டுகளைக் காணலாம். 1781ஆம் ஆண்டின் நேசக்குழு விதிகளின்படி அமெரிக்காவின்

[29] Dr. Garner: 'Unlike the federal union a confederation does not possess a single sovereignty but there is a plurality of sovereignties as many in fact as their states compose it. Ordinarily each member state remains an international person, it may therefore enter into treaty relations, with foreign states and even engage in war with them without involving their assotiates. If war breaks out between two or more of them it is international war and not civil war.'

[30] Leacock: 'A Confederacy is not a single state. It is a collection of independent soverign bodies united on stated terms for certain purposes. Each of them is legally free to withdraw from the confederacy when it pleases them. Confederacy cannot therefore be permanent and indissolvable for, if it were so, then the sovereignty of the component states would disappear.'

[31] Hall: 'A Confederation is a union strictly of independent states which consent to forego permanently a part of their liberty of action for certain specific objects, and they are not so combined under a common government that the latter appears to their exclusion as the international entity.'

[32] Oppenheim: 'A confederacy consists of a number of full sovereign states linked together for the maintenance of their external and internal independence by a recognised international treaty into a union with organs of its own, which are vested with a certain power over the member states but not over the citizens of these states.'

பதின்மூன்று குடியேற்ற நாடுகள் நேசக்குழுவை ஏற்படுத்திக் கொண்டன. இங்கிலாந்தின் மீது போரிட்டுச் சுதந்திரம் பெறுவது இந்நேசக்குழுவின் நோக்கமாக இருந்தது. 1815ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்ட ஜெர்மானிய அமைப்பும் இணைக்கூட்டர சிற்கு எடுத்துக்காட்டாகும்.

### கூட்டாட்சிக்கும் நேசக்குழுவிற்கும் ஒற்றுமைகள்

கூட்டாட்சியிலும் நேசக்குழுவிலும் வெவ்வேறு நாடுகள் குறிப் பிட்ட நோக்கங்களுக்காக ஒன்றுகூடுகின்றன. இவ்விருவகை அமைப்பிலும் பொது நோக்கத்தை நிறைவேற்றுவதற்காக மத்திய நிறுவனமொன்று நிறுவப்படுகிறது. கூட்டாட்சிக்கும் நேசக்குழு விற்கும் உள்ள ஒற்றுமைகளைவிட வேறுபாடுகளே அதிகமாகும்.

### கூட்டாட்சிக்கும் நேசக்குழுவிற்கும் வேறுபாடுகள்

கூட்டாட்சியில் சேரும் நாடுகள் தங்கள் இறைமையை இழக் கின்றன. இஃது ஓர் ஒன்றியமாக மாறுகிறது. பல அரசுகள் மறைந்து ஒரு புது அரசு தோன்றுகிறது.

ஆனால் நேசக்குழுவில் நாடுகள் தங்கள் இறைமையை இழப்ப தில்லை. இஃது ஒரு சங்கம் போன்றதாகும். நேசக்குழுவில் புது நாடு தோன்றுவதில்லை. ஆனால், இருக்கும் நாடுகளிடையே ஒரு புது உறவு மட்டுமே தோன்றுகிறது.

கூட்டாட்சியின் தோற்றம் அரசியலமைப்பின் அடிப்படை யைக் கொண்டது. இதில் ஏற்படும் இணைப்பு நிரந்தரமானது. எனவே, கூட்டாட்சியிலிருந்து விலகுவது சட்ட விரோதமாகக் கருதப்படுகிறது. கூட்டாட்சி உறுப்புகளிடையே ஏற்படும் சண்டை உள்நாட்டுச் சண்டையாகும். ஆப்பிரகாம் லிங்கன் (Abraham Lincoln) காலத்தில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வட பகுதிக்கும் தென் பகுதிக்கும் அடிமைப் பிரச்சினை பற்றித் தோன்றியது உள்நாட்டுச் சண்டையேயாகும். ஏனெனில், அமெ ரிக்க ஐக்கிய நாடுகள் கூட்டாட்சி நாடாகும். மேலும் பிரிவினை யும் சட்ட விரோதமாக்கப்பட்டது. ராணுவப்பலத்தில் ஒன்றியம் காக்கப்பட்டது. ஆனால் நேசக்குழுவின் தோற்றம் அரசு களிடையே ஏற்பட்ட உடன்பாடு, ஒப்பந்தம் ஆகியவைகளின் விளைவாகும். இவர்களிடையே ஏற்பட்ட கூட்டுத் தற்காலிக மானது. விருப்பம்போல் வேண்டும்போது அமைப்பிலிருந்து வில கலாம். நேசக்குழு உறுப்புகளிடையே ஏற்படும் சண்டை சர்வ தேசச் சண்டையாகுமேயொழிய உள்நாட்டுச் சண்டையாகாது.

கூட்டாட்சியில் மத்திய அரசாங்கம் அரசியலமைப்பால் தோற்றுவிக்கப்படுகிறது; உறுப்பினர்களால் அல்ல. கூட்டாட்சி உறுப்பினர்கள் மத்திய அரசாங்கத்தை அழிக்க முடியாது. ஆனால் அரசியலமைப்புத் திருத்தத்தால் மாற்றலாம். உறுப்பினர்கள் அயல்நாடுகளுடன் தாங்களாக ஒப்பந்தம் செய்து கொள்ள முடியாது. கூட்டாட்சியில் குடிமக்கள் உண்டு. குடிமக்களுடன் கூட்டாட்சி அரசு தொடர்பு கொள்ளும்.

ஆனால் நேசக்குழுவில் மத்திய நிறுவனத்தை உறுப்பினர்கள் தோற்று க்கிறார்கள்; அரசியலமைப்பல்ல. எனவே உறுப்பினர்கள் மத்திய நிறுவனத்தை மாற்றலாம், அழிக்கலாம். இவர்கள் அயல்நாடுகளுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளலாம். நேசக்குழுவிற்குக் குடிமக்கள் கிடையாது. நேசக்குழு அங்கநாடுகளின் குடிமக்கள் நேசக்குழுவிற்குக் கட்டுப்பட்டவர்கள் அல்லர்.

**வேறுபாட்டு அட்டவணை**

| கூட்டாட்சி | நேசக்குழு |
|---|---|
| 1. இணையும் அரசுகள் இறைமையை இழக்கின்றன. | இறைமையை இழப்பதில்லை. |
| 2. புது அரசு தோன்றுகிறது. பழைய அரசுகள் மறைகின்றன. | புது அரசு தோன்றுவதில்லை. அரசுகள் மறைவதில்லை. |
| 3. இணைப்பு ஒன்றியமாகும். | இணைப்புச் சங்கமாகும். |
| 4. நிரந்தர இணைப்பு. | தற்காலிகக் கூட்டு. |
| 5. பிரிந்து செல்லல் சட்ட விரோதம். | சட்டப்படி பிரியலாம். |
| 6. குடிமக்கள் உண்டு. | இல்லை. |

**கூட்டாட்சியின் எதிர்காலம்**

கூட்டாட்சியின் அமைப்பில் மத்திய அரசாங்கத்திற்கு அதிக அதிகாரம் இல்லாததால் ஏற்படும் குறைகளை நிவர்த்திக்கத்தக்க நடவடிக்கைகள் தற்காலத்தில் மேற்கொள்ளப்படுகின்றன. ஒன்றிய ஆட்சியில் அதிகாரக்குவிப்பினால் ஏற்படும் நன்மைகளைக் கூட்டாட்சியும் பெற முயலுகிறது. எனவே, கூட்டாட்சியின் குறைகள் நாளடைவில் நீக்கப்படலாம். பகிர்வுமுறைக் கூட்டாட்சிக்கு

பதிலாகக் கூட்டுறவுக் கூட்டாட்சி (Co- operative Federalism) முறை தோற்றுவிக்கப்படுகிறது. 18ஆம் நூற்றுண்டிலிருந்த பகிர்வு முறைக் கூட்டாட்சி படிப்படியாக அகற்றப்பட்டு முன்னேற்றப் பாதையில் செல்லும் நவீனக் காலத்திற்கேற்பக் கூட்டுறவுக் கூட்டாட்சிமுறை அமெரிக்க ஐக்கியநாடுகள், கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் நடைமுறைப்படுத்தப்படுகிறது. பேராசிரியர் வியர் கருத்துப்படி கூட்டாட்சி வெற்றிப்பாதையை நோக்கி நடைபோடுகிறது.[33]

## முக்கிய வினக்கள்

1. நேசக்குழுவின் இலக்கணம் கூறி அதன் தன்மைகளை விவரிக்கவும்.
2. நேசக் குழுவிற்கும் கூட்டாட்சிக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் காண்க.
3. நேசக்குழுவிற்குச் சில எடுத்துக்காட்டுகள் கூறுக.

[33] Prof. Wheare: 'Federal government stands for multiplicity in Unity. It can provide unity where unity is needed, but it can ensure also that there is variety and independence in metters where unity and uniformity is not essential ... Federalism marches towards triumph.'

# 9. அதிகாரப் பிரிவினை

## (Separation of Powers)

**அரசாங்க அதிகாரங்கள்:** முப்பெரும் அதிகாரப் பிரிவுகள்—அரசாங்கத்துறைகள்—மூவகைப் பிரிவினைக்கு எதிர்ப்பு.

**அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு:** வல்லாட்சியாளர்களின் அதிகாரக் குவிப்பு—அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு.

**இக்கோட்பாட்டை வழங்கிய பிற அறிஞர்கள்:** அரிஸ்ட்டாட்டில் —சிசிரோ—மார்ஸிலியோ—போடின் —லாக்—பிளாக்ஸ்டன்.

**மாண்டஸ்க்யூ:** மாண்டஸ்க்யூவின் காலம் — இங்கிலாந்தில் சுற்றுப்பயணம்—சட்டங்களின் உள்ளுயிர்—அதிகாரக்குவிப்பின் தீங்கு—மாண்டஸ்க்யூவின் கூற்று—சமநிலைத் தலையீடுகள்—பிரிவினையின் அளவு.

**மாண்டஸ்க்யூ கோட்பாட்டின் செல்வாக்கு:** அரசியலில் திருப்பம்—அரசியலமைப்பில் ஆதிக்கம்— அமெரிக்க அரசியலமைப்பில் செல்வாக்கு.

**அதிகாரப் பிரிவினைக் கோட்பாடும் தற்கால அரசியலமைப்புகளும்**

**இங்கிலாந்து அரசியலமைப்பும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடும்:** கொள்கைப் பொருத்தமின்மை — செயல்துறையும் சட்டத்துறையும் இணைப்பு—சட்டத்துறையும் நீதித்துறையும் இணைப்பு—நீதித்துறையும் செயல்துறையும் இணைப்புக் கொள்கையில் சில பொருத்தம்.

**அமெரிக்க அரசியலமைப்பும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடும்:** கொள்கைப் பொருத்தம்—சட்டத்துறையில் இக்கோட்பாடு—செயல்துறையில் இக்கோட்பாடு—நீதித்துறையில் இக்கோட்பாடு.

**கொள்கைப் பொருத்தமின்மை:** சட்டத்துறையில் இக்கோட்பாடு பொருந்தாமை — செயல்துறையில் இக்

கோட்பாடு பொருந்தாமை — நீதித்துறையில் இக்கோட்பாடு பொருந்தாமை.

**இந்திய அரசியலமைப்பும் அதிகாரப் பிரிவினையும்:** கொள்கைப் பொருத்தமின்மை— சட்டத் துறையின் தலையீடு— செயல் துறையின் தலையீடு—நீதித்துறையின் தலையீடு— கொள்கைப் பொருத்தம்.

**இரஷ்ய அரசியலமைப்பும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடும்**

**பிரான்சு அரசியலமைப்பும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடும்**

**அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் குறைகள் :** முழுப் பிரிப்பு இயலாது— துறைகள் தனித்து நிற்க முடியாது— துறைகளிடையே பிணக்கு ஏற்படுகிறது— துறைகள் சமமல்ல— அதிகாரப் பிரிவு அல்ல— செயல் பிரிவு ஆகும்— துறைகள் பொறுப்பேற்பதில்லை—வரலாறு ஏற்பதில்லை— வல்லாட்சியினர் ஏற்பதில்லை— குடியாட்சியும் ஏற்பதில்லை— அரசியல் விழிப்பே அவசியம்.

## அரசாங்க அதிகாரங்கள்

### முப்பெரும் அதிகாரப்பிரிவுகள்

அரசாங்கத்தின் அதிகாரங்களைச் செயலின் அடிப்படையில் மூன்றாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு செயலையும் ஒவ்வொரு நிறுவனம் செய்கின்றது. நாட்டிற்குத் தேவையான சட்டங்களைச் சட்டசபைகள் இயற்றுகின்றன. சட்டசபைகளிடம் சட்டம் இயற்றும் அதிகாரம் உண்டு. இயற்றப்பட்ட சட்டங்கள் செயல்படுத்தப் படவேண்டியது அவசியமாகிறது. இச்சட்டங்களைச் செயல்படுத்தும் அதிகாரம் நிருவாகத்தினரிடம் இருக்கிறது. இயற்றப்பட்ட சட்டங்களுக்கு விளக்கம் கூற ஒரு நிறுவனம் தேவைப்படுகிறது. சட்டங்களுக்கு விளக்கம் கூறும் அதிகாரம் நீதிமன்றங்களிடம் உள்ளன. நீதி கூறும் அதிகாரம் படைத்த நீதிமன்றங்கள் சட்ட சபைகளுக்கும் செயல்துறைக்கும் முரண்பாடு தோன்றும்போது முரண்பாட்டைத் தீர்த்து வைத்து நீதி பகர்கின்றன. மேலும் செயல்துறைக்கும் தனி நபருக்கும் ஏற்படும் சிக்கலிலும் நீதிமன்றங்கள் முறை செய்கின்றன. மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் தகராறு ஏற்படும் காலத்தும் நீதிமன்றங்கள் நீதி கூறுகின்றன. நீதி சட்டத்தின் அடிப்படையில் கூறப்படுகின்றது.

## அரசாங்கத் துறைகள்

எனவே சட்டம் இயற்றல், இயற்றப்பட்ட சட்டத்தைச் செயல் படுத்துதல், சட்டங்களுக்கு விளக்கம் கூறல் என அரசாங்கத்தின் மூன்று அதிகாரங்களையும் முறையே சட்டசபைகள், செயல்துறை, நீதிமன்றங்கள் ஆகிய துறைகள் செய்கின்றன. அரசாங்கத் தின் அதிகாரங்களும் துறைகளும் மூன்றாகும்.

## மூவகைப் பிரிவினைக்கு எதிர்ப்பு

அரசாங்க அதிகாரங்களை மூவகையாகப் பிரித்தல் பழமை யான முறையாகும். பண்டைய அரசியல் அறிஞர்களான அரிஸ்ட் டாட்டிலும் (Aristotle) சிசரோவும் (Cicero) மும்முறைப் பகுப்பை ஏற்றுக்கொண்டுள்ளனர். போடின் (Bodin) போன்ற இடைக் கால அறிஞர்களும் அரசாங்க அதிகாரத்தின் மூவகைப் பிரிவை ஏற்றனர். இம்மூவகைப் பிரிவிற்குத் தற்காலத்தில் எதிர்ப்புகள் எழுந்துள்ளன. அரசியல் நூலாசிரியரான வில்லோபி (Willough-by) யின் கருத்துப்படி, அரசாங்க அதிகாரத்தின் மூவகைப் பிரிவினைக் குழப்பத்தையும் நடைமுறைச் சிக்கலையும் ஏற்படுத்து கின்றது.[1] வாக்காளர்களும் நிர்வாக அங்கத்தினர்களும் அரசாங் கத்தின் நிறுவனங்களாகச் சேர்க்கப்படவேண்டும் எனப் பேராசிரி யர் வில்லோபி கருதுகிறார். இவர் கூற்றுப்படி அரசாங்கத்தின் நிறுவனங்கள் அல்லது அங்கங்கள் ஐந்து ஆகும்.

பேராசிரியர் கிளாடன் (Gladden) என்பவர் வில்லோபியின் கருத்தையேற்க மறுக்கிறார். வாக்காளர்கள் என்ற தனி நிறு வனம் தோற்றுவிக்கப்பட வேண்டிய அவசியம் இல்லை என்றும், இவ்வங்கம் சட்டசபையினுள் அடங்கும் என்றும் கூறுகின்றார். மேலும் நிருவாக அங்கத்தினர்களுக்கோர் நிறுவனம் அரசாங்கத் தில் ஒதுக்கப்பட வேண்டியதில்லை. நிருவாகம், நிருவாக அங்கத் தினர்கள் ஆகிய அனைவரும் செயல்துறையில் அடங்குவர்.[2] எனவே அரசாங்க அதிகாரங்களையும் இவ்வதிகாரங்களைச் செலுத் தும் அங்கங்களையும் மூன்றாகப் பிரிப்பது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

[1] W. W. Willoughby. 'Attempts to act upon it (Classical division) lead not only to confusion of thought but to serious difficulties in working out the practical problems of the distribution of governmental powers functionally.'

[2] Gladden: 'Administration is subordinate to the main powers or branches of government.'

## அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு

**வல்லாட்சியாளர்களின் அதிகார க்குவிப்பு**

வல்லாட்சியாளர்களும் முற்கால மன்னர்களும் அரசாங்க அதிகாரம் அனைத்தையும் தங்களிடம் கொண்டிருந்தனர். அவர் களே சட்டங்கள் இயற்றினர். தாங்கள் இயற்றிய சட்டங்களைத் தாங்களே செயல்முறைப் படுத்தினர். சட்டங்களுக்கு விளக்கம் கூறுபவர்களாகவும், நீதி பகர்பவர்களாகவும், நீதியின் இருப்பிட மாகவும் இருந்தனர். அரசாங்கத்தின் மூன்று அதிகாரங்களும் ஒருவரிடமே இருந்ததால் வல்லாட்சி நிலவியது. மக்களின் உரி மைகளுக்கும் சுதந்திரங்களுக்கும் பாதுகாப்பு இல்லாது இருந்தது.

**அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு:** அரசாங்கத்தின் அதிகா ரங்கள் சட்டம் இயற்றல், சட்டத்தைச் செயல்படுத்தல், சட்டத் திற்கு விளக்கம் கூறல் ஆகியன தனித்தனியாகப் பிரிக்கப்பட வேண்டும். பிரிக்கப்பட்ட இவ்வதிகாரங்கள் தனித்தனியான நிறு வனங்களிடம் ஒப்படைக்கப்பட வேண்டும். சட்டம் இயற்றல் சட்டசபைகளிடமும், சட்டத்தைச் செயல்படுத்துதல் செயற்குழு விடமும், சட்டத்திற்கு விளக்கம் கூறல் நீதிபதிகளிடமும் கொடுக் கப்படவேண்டும். அரசாங்கத்தின் இம்மூன்று துறைகளும் தனித் தனியாக செயல்படவேண்டும். ஒரு துறை மற்றொரு துறையின் செயலில் தலையிடக்கூடாது. சுதந்திரமாகச் செயல்படவேண்டும். சட்டத்துறை மற்ற இரு துறைகளான செயல்துறையிலும் நீதித் துறையிலும் தலையிடக்கூடாது. செயல்துறை மற்ற இரு துறை களான சட்டத்துறையிலும் நீதித்துறையிலும் தலையிடக்கூடாது. நீதித்துறை மற்ற இரு துறைகளான சட்டத்துறையிலும் செயல் துறையிலும் தலையிடக்கூடாது. ஒவ்வொரு துறையும் மற்றத் துறையின் தலையீடு இன்றியும் சுதந்திரமாகவும் செயல்பட வேண்டும். இதுவே அதிகாரப் பிரிவினைக் கோட்பாடாகும்.

பிரான்சு நாட்டின் அரசியல் அறிஞரான மாண்டஸ்க்யூ (Montesquieu) இந்த அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை வகுத் தார். மக்களின் உரிமைகளுக்கும், சுதந்திரத்திற்கும் இவ்வதி காரப் பிரிவினை அவசியம் எனக் கருதினர்.

## இக்கோட்பாட்டை வழங்கிய பிற அறிஞர்கள்

**அரிஸ்ட்டாட்டில் (Aristotle)**

கிரேக்க அரசியல் அறிஞரான அரிஸ்ட்டாட்டில் காலத்தி லேயே அரசின் அதிகாரங்கள் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன.

ஆய்ந்து வினையாற்றல் (Deliberative), அதிகாரத்தை நெறி செய்தல் (Magisterial), நீதி வழங்குதல் (Judicial) என அரசாங்கத்தின் அதிகாரங்களை மூவகைப்படுத்தினர். ஆனல் இவர் இம்மூன்று அதிகாரங்களும் பிரிக்கப்பட வேண்டும் என்பதை வலியுறுத்தவில்லை. கிரேக்க நகர அரசுகளில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு நடைமுறைப்படுத்தப்படவில்லை.

**சிசிரோ** (Cicero)

ரோமானிய அரசியல் அறிஞரான சிசிரோ (Cicero) தடைகளையும் சமநிலைகளையும் (checks and balance) பற்றிக் கூறியுள்ளார். ரோமானிய அரசியல் அமைப்பில் தடைகளுக்கும் சமநிலைகளுக்கும் இடம் இருந்தது. இவைகள் அதிகாரப்பிரிவினைக் கோட்பாட்டின் கூறுகளாகும். ஆனல் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு அவசியம் என்பதையும், இவ்வதிகாரப் பிரிவினையால்தான் உரிமைகளும் சுதந்திரமும் காக்கப்படுகின்றன என்பதையும் ரோமானியர்கள் அறியார்கள். ரோமானிய நகரக் குடியரசிலும் முழு அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு நடைமுறைப்படுத்தப்படவில்லை.

**மார்சிலியோ** (Marsiylio)

பதினன்காம் நூற்ருண்டில் பாதுவா என்ற இடத்தில் வாழ்ந்த அரசியல் ஆசிரியர் மார்சிலியோ அதிகாரப் பிரிவினை பற்றிக் கூறியுள்ளார். சட்டங்களை இயற்றும் துறைகளுக்கும், இச்சட்டங்களைச் செயல்படுத்தும் துறைகளுக்கும் இடையே பிரிவு இருக்க வேண்டுமென வலியுறுத்தினர். ஆனல் மார்சிலியோவின் கருத்து மற்றவர்களைக் கவரவில்லை. அரசியல் சுதந்திர வேட்கை தோன்றிய பதினேழாம் நூற்ருண்டில்தான் மார்சிலியோவின் கருத்து மதிக்கப்பட்டது.

**போடின்** (Bodin)

நீதித்துறையும் செயல்துறையும் பிரிந்து செயல்பட வேண்டுமென்பதைக் 'குடியரசு' என்ற தமது அரசியல் நூலில் போடின் சுட்டிக்காட்டியுள்ளார். அரசாங்கத்தின் தலைவராகிய மன்னர் நிருவாகப் பணியையும், மன்னரால் நியமிக்கப்பட்ட நீதிபதிகள் தீர்ப்பளிக்கும் பணியையும் செய்யவேண்டுமென வலியுறுத்துகிருர்.

**லாக்** (Locke)

இங்கிலாந்து அரசியல் அறிஞரான லாக் தமது 'சிவில் அரசாங்கம்' என்னும் நூலில் அதிகாரப் பிரிவினை பற்றிய தமது

கோட்பாட்டைக் கூறியுள்ளார். அரசாங்கத்தின் அதிகாரத்தைச் சட்டமியற்றல், நிருவாகம், கூட்டமைத்தல் (Federative) என மூன்று வகையாகப் பிரித்துள்ளார். கூட்டமைத்தல் என்பது அயல் உறவுக் கோட்பாடு ஆகும். அயலுறவும் நிருவாகமும் இணைந்தேயிருக்கும். இவ்விணைப்பிற்கு லாக் எதிர்ப்புக் கூறவில்லை. ஆனால், செயல்துறையும் சட்டமியற்றலும் இணைந்திருப்பதை லாக் கண்டிக்கிறார். மனிதன் அதிகார ஆசை கொண்டவன். சட்டம் இயற்றுவதும் அவைகளை நடைமுறைப் படுத்துவதும் ஒருவராக இருந்தால் அதிகார வெறி அதிகரிக்கும். எனவே கொள்கையிலும் நடைமுறையிலும் சட்டம் இயற்றலும் நிருவாகமும் பிரிக்கப்பட வேண்டுமென லாக் கூறுகிறார்.[3]

### பிளாக்ஸ்டன் (Blackstone)

ஆங்கிலேயச் சட்ட வல்லுனரான பிளாக்ஸ்டன் தமது 'இங்கிலாந்துச் சட்டங்களுக்குப் பொருளுரை' என்ற நூலில் அதிகாரப் பிரிவினையின் அவசியத்தை வற்புறுத்தியுள்ளார். 'சட்டமியற்றும் உரிமையும், அச்சட்டத்தை நடைமுறைப்படுத்தும் உரிமையும், ஒருவரிடமோ அல்லது ஒரு குழுவினரிடமோ கொடுக்கப்பட்டிருந்தால் பொதுச் சுதந்திரம் இருக்காது. அரசாங்கத் தலைவர் வன்முறைச் சட்டங்களை இயற்றி, அவைகளை வன்முறையில் செயல்படுத்துவார். சட்டத்துறையும் நீதித்துறையும் இணைந்தால் மக்களின் உயிர், உடைமை, சுதந்திரம் ஆகியன எதேச்சையான நீதிபதிகளின் விருப்பு வெறுப்புக்கு உள்ளாகும்'[4] என்று பிளாக்ஸ்டன் கூறுகிறார்.

## மாண்டஸ்க்யூ

### மாண்டஸ்க்யூவின் காலம்

பிரான்சு நாட்டு அரசியல் அறிஞரான மாண்டஸ்க்யூ பதினான்காம்லூயியின் காலத்தில் வாழ்ந்தவராவார். லூயி மன்னர்

[3] Locke: 'The legislative and executive powers should be separate, 'because it may be too great temptation to human frailty, apt to grasp at power, for the same persons who have the power of making laws to have also in their hands the power to execute them' (Treatise of Civil Government).

[4] Blockstone: 'In all tyrannical governments the supreme magistracy or the right both of making laws and of enforcing them, is vested in one and the same man, or one and the same body of man; and wherever these two powers are united together there can be no public liberty. The magistrate may enact tyrannical laws and execute them in a tyrannical manner since he is possessed, in his quality of dispenser of Justice...Where the judicial power joined with the legislative, the life, liberty and property of the subject would be in the hands of arbitrary judges whose decisions would be regulated by their opinions, and not by any fundamental principles of law... Were it joined with the executive this union might be an over-balance of the legislative.' (Commentaries on the Laws of England.)

வல்லாட்சியாளராகவும், 'நானே நாடு' (I am the State) என்ற கோட்பாடு உடையவராகவும் இருந்தார். அரசாங்கத்தின் மூன்று அதிகாரங்களும் மன்னரிடமே இருந்தன. அவரது வாய்ச்சொல் சட்டமாகும். அவர் கூறியதே நீதியாகும். மக்களின் உரிமைக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு இல்லாதிருந்தது. எனவே ஃபிரஞ்சு நாட்டில் சர்வாதிகாரம் நிலவியது.

**இங்கிலாந்தில் சுற்றுப்பயணம்**

பிரான்சு நாட்டின் வல்லாட்சியில் வாழ்ந்த மாண்டஸ்க்யூ இங்கிலாந்து நாட்டிற்குச் சுற்றுப்பயணம் மேற்கொண்டார். இங்கிலாந்தில் இவர் கண்ட அரசியல் நிலைக்கும், பிரான்சு நாட்டில் நிலவிய அரசியல் நிலைக்கும் ஒப்பிட்டுப் பார்த்தார். இங்கிலாந்து மக்கள் உரிமைகளுடனும் சுதந்திரத்துடனும் வாழ்ந்தனர். இங்கிலாந்துப் பாராளுமன்றம் வலிமை மிக்கதாக இருந்தது. இந்நாட்டின் நீதிபதிகள் சுதந்திரமாகவும் சுயேச்சையாகவும் நீதி கூறினர். ஆனால், பிரான்சு நாட்டில் மக்களின் உரிமைகளும் சுதந்திரமும் நசுக்கப்பட்டன. ஸ்டேட்ஸ் ஜெனரல் (States General) எனப்படும் பிரான்சுப் பாராளுமன்றம் நீண்ட காலமாகச் செயலிழந்திருந்தது. பிரான்சு நாட்டின் நீதிபதிகள் சுதந்திரமாகச் செயல்படவில்லை. மன்னனின் விருப்பத்திற்கேற்பவே நீதி கூறினர்.

தம் நாட்டினருக்கு இல்லாத அரசியல் சுதந்திரத்தை இங்கிலாந்து மக்கள் அனுபவிப்பதை மாண்டஸ்க்யூ நேரில் கண்டார். இவர்களின் சுதந்திரத்துக்குக் காரணம் அரசாங்க அதிகாரங்கள் பிரிக்கப்பட்டிருப்பதும், அரசாங்க நிறுவனங்கள் தலையீடு இன்றிச் சுதந்திரமாகச் செயல்படுவதுமாகும். இங்கிலாந்து நாட்டில் சட்டம் இயற்றுதல், நிருவாகம், நீதிநிருவாகம், ஆகிய அரசாங்க அதிகாரங்கள் பிரிக்கப்பட்டிருந்தன. பாராளுமன்றமும் நீதிமன்றங்களும் தலையீடின்றிச் சுதந்திரமாகச் செயல்பட்டன. இங்கிலாந்துப் பாராளுமன்றம் சட்டங்களை இயற்றியது. அம்மன்னர் அச்சட்டங்களைச் செயல்முறைப் படுத்தினார். நீதிபதிகள் சட்ட விளக்கமளித்து நீதி பகர்ந்தனர் இம்மூன்று நிறுவனங்களிடையே தலையீடின்மையையும், சுதந்திரத்தையும், அதிகாரப் பிரிவினையையும் ஆசிரியர் கண்டார்.

**சட்டங்களின் உள்ளுயிர்** (Spirit of Laws)

மாண்டஸ்க்யூ தமது 'சட்டங்களின் உள்ளுயிர்' (The Spirit of Laws) என்ற நூலில் அரசாங்கத்தின் அதிகாரங்கள் பிரிக்கப்பட வேண்டியதைக் குறிப்பிடுகிறார். அரசாங்கத்தின் பணிகளும் அதிகாரங்களும் வேறுபடுத்தப்பட்டுப் பிரிக்கப்பட வேண்டும். இப்

பிரிக்கப்பட்ட அதிகாரங்கள் தனித்தனி நிறுவனத்திடம் அளிக்கப் படவேண்டும். இத்தனி நிறுவனமும் தனது பணியைச் சுதந் திரத்துடன் ஆற்றவேண்டும். இதுவே மாண்டஸ்க்யூவின் கோட் பாடாகும்.

### அதிகாரக் குவிப்பின் தீங்கு

அதிகாரப் பிரிவினையின் அவசியத்தை வலியுறுத்த மாண் டஸ்க்யூ அதிகாரக் குவிப்பின் விளைவுகளையும், அதனால் ஏற்படும் தீங்குகளையும் குறிப்பிடுகின்றார். சட்டம் இயற்றும் அதிகாரம், அச்சட்டங்களைச் செயல்படுத்தும் அதிகாரம், நீதிகூறும் அதிகாரம் ஆகியன ஒரு நபரிடமோ, ஒரு குழுவிடமோ குவிந்திருந்தால் அதி காரம் தவறாகப் பயன்படுத்தப்பட்டு வல்லாட்சி ஏற்படும். எனவே அரசாங்கத்தின் மூன்று துறைகளும் தனித்தனியே பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றும் அதனதன் வரையறைக்குள் செயல்பட வேண்டும்.

### மாண்டஸ்க்யூவின் கூற்று

'அதிகாரமுடையவன் அதைத் தவறாகப் பயன்படுத்துகிறான். சட்டம் இயற்றும் அதிகாரமும் செயல்துறை அதிகாரமும் இணைந்து ஒருவரிடமோ அல்லது ஒரு குழுவிடமோ இருக்குமானால் அங்குச் சுதந்திரம் இராது. அரசன் வன்முறைச் சட்டங்களை இயற்றி அவை களை வன்முறையில் செயல்படுத்துவான். நீதித்துறை சட்டத் துறையிலிருந்தும் செயல்துறையிலிருந்தும் பிரிக்கப்படாவிட்டாலும் அங்குச் சுதந்திரம் இராது. அது சட்டத்துறையுடன் இணைந்தால் மக்களின் உரிமைகள் பறிபோகும். அல்லது நீதிபதியே சட்டம் இயற்றுவார். அது செயல்துறையுடன் இணைக்கப்படுமானால் நீதி பதி வன்முறையாகவும் அடக்குமுறையுடனும் செயல்படுவார். சட்டமியற்றுதல், பொதுத்தீர்மானங்களைச் செயலாக்குதல், தனி நபரின் வழக்குகளை விசாரித்தல் ஆகிய இம் மூன்று அதிகாரங் களும் ஒருவரிடமோ அல்லது ஒரு குழுவிடமோ இருக்குமானால் அனைத்து உரிமைகளும் அழிந்துவிடும்,'[5] என்று மாண்டஸ்க்யூ கூறுகிறார்.

[5] Montesquieu : 'When the legislative and executive powers are united in the same person, or in the same body of magistrates there can be no liberty; because apprehensions may arise, lest the same monarch or senate should enact tyrannical laws, and execute them in tyrannical manner. Again, there is no liberty if the judicial power be not separated from the legislative and executive. Were it joined with the legislative, the life and liberty of the subject would be exposed to arbitrary control, for the judge would then be legislator. Were it joined to the executive power, the judge might behave with violence and appression. These would be at end of everythimg, were the same man or the same body...to exercise those three powers, that of enacting laws that of executing the public resolutions, and of trying the cases of individuals.' (Spirit of the Laws.)

### சமநிலைத் தலையீடுகள்

அதிகாரத்தை அதிகாரம் தடுக்கும்(Power Halts Power)என்ற கோட்பாட்டையும், சமநிலைக் கோட்பாட்டையும், தலையீட்டுக் கோட்பாட்டையும் (Doctrine of checks and balances) மாண்டஸ்க்யூ தமது அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டில் வலியுறுத்துவதாகப் பேரறிஞர் ஃபைனர் (H. Finer) கூறுகிறார்.[6] சட்டசபைகளைக் கூட்டுதலும் அதன் ஆயுட்காலத்தை வரையறுத்தலும் செயல்துறையின் அதிகாரமாக இருக்கிறது. ஆனால் செயல்துறையைக் குறை கூறவும் குற்றம் சாட்டவும் சட்டசபைகளுக்கு அதிகாரம் உண்டு. ஒவ்வொரு நிறுவனமும் தன் வரையறைக்குள் பணியாற்ற வேண்டும். ஒரு நிறுவனம் தன் அதிகார வரம்பை மீறும்போது மற்ற நிறுவனங்கள் அதைத் தடுக்கும். மற்ற நிறுவனங்களின் அதிகாரம் வரையறையை மீறும்போது நிறுவனத்தின் அதிகாரத்தைத் தடுக்கும். எனவே அதிகாரத்தை அதிகாரம் தடுக்கிறது. ஒவ்வொரு நிறுவனமும் சமநிலையில் வைத்துக் காக்கப்படுகின்றது. சமநிலை அழியும்போது மற்ற நிறுவனங்கள் தலையிட்டுச் சமநிலையை மீட்கின்றன.

### பிரிவினையின் அளவு

அரசியல் அறிஞர்களிடையே மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினையின் அளவுபற்றிய கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. ஒரு சாரார் மாண்டஸ்க்யூ முழுஅதிகாரப் பிரிவினையைக் கூறுகிறார் என்றும், மற்றொரு சாரார் இவர் முழுப்பிரிவினையை வலியுறுத்தவில்லையென்றும் கருதுகின்றனர்கள். முழு அதிகாரப் பிரிவினையை ஆதரிப்பதைவிட அதிகாரக் குவிப்பைத் தடுப்பதே மாண்டஸ்க்யூவின் நோக்கமாகும் என்று பேரறிஞர் பின்னர் கூறுகின்றார். மாண்டஸ்க்யூவின் கோட்பாட்டில் சட்டசபைகள் மக்களை அண்டியிருப்பதையும், செயலாட்சி சட்டசபைகளுக்கு அடங்கியிருப்பதையும், நீதித்துறை செயல்துறையுடன் இணங்கியிருப்பதையும் காணலாம். எனவே, முழு அதிகாரப் பிரிவினையை மாண்டஸ்க்யூ கருதவில்லையென்றும், அதிகாரக் குவிப்பைச் சீர்படுத்தக் கருதினார் என்றும் அறியலாம்.

[6] Dr. Finer: 'Montesquieu was searching for means to limit the crown; to make a constitution; to build canals through which, but not over which, power should stream; to create intermediary bodies; to check and balance probable despotism.' (The Theory and Practice of Modern Government)' 'If power is not to be abused then it is necessary in the nature of things that power be made a check to power.'

## மாண்டஸ்க்யூ கோட்பாட்டின் செல்வாக்கு

### அரசியலில் திருப்பம்

மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு அரசியலில் ஒரு பெரும் திருப்பத்தை ஏற்படுத்தியது. உலக நாடுகளில் ஆங்காங்கே வல்லாட்சிக்கு எதிரான புரட்சிகள் தோன்றவும், அதன் பிறகு குடியாட்சிகள் நிறுவப்படவும் இக்கோட்பாடு வழி வகுத்தது. பிரஞ்சுப் புரட்சிக்குத் தூண்டுகோலாக அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு அமைந்தது. மேலும் அக்காலத்தே நடைபெற்ற ஒவ்வொரு புரட்சியும் தங்கள் அரசாங்கத்தில் அதிகாரப் பிரிவினையை ஏற்படுத்துவதற்காகவே தோன்றியது.

### அரசியலமைப்பில் ஆதிக்கம்

புரட்சிக்குப்பின் பிரான்சு நாட்டில் வெளியிடப்பட்ட உரிமைப் பிரகடனம் (Declaration of Rights of 1789) அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை வலியுறுத்துவதாக அமைந்தது. அதிகாரப் பிரிவினைக் கொள்கையின் அடிப்படையில் அமையாத அரசியலமைப்பு ஓர் அரசியலமைப்பாகவே கருதப்படவில்லை. எனவே புரட்சிக்குப் பின் இயற்றப்பட்ட அரசியல் அமைப்பில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு கடைப்பிடிக்கப்பட்டது. சட்டமியற்றும் துறையும் நிருவாகத் துறையும் பிரிக்கப்படுகின்றன. நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அரசாங்கத்தின் மூன்று நிறுவனங்களும் சுதந்திரமாகச் செயல்படுவதற்கேற்றதோர் அரசியலமைப்பு வகுக்கப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டது.

### அமெரிக்க அரசியல் அமைப்பில் செல்வாக்கு

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு 1789ஆம் ஆண்டில் இயற்றப்பட்டபோது மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு மிகுந்த செல்வாக்குடன் விளங்கியது. இங்கிலாந்தின் வல்லாட்சியில் அனுபவம் அடைந்த அமெரிக்க மக்கள் தங்கள் அரசாங்கத்தில் வல்லாட்சி ஏற்படாவண்ணம் கருத்துடையவர்களாக இருந்தனர். எனவே தங்கள் அரசியலமைப்பை வகுக்கும்போது அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை முழுஅளவில் கையாண்டனர். இக்கொள்கையை அரசியல் கொள்கையாகவும் அரசியல் நீதியாகவும் கடைப்பிடித்தனர். பிலடெல்பியா மாநாட்டில் (Philadelphia Convention) அமெரிக்க ஐக்கிய நாடுகள் அரசியலமைப்பை உருவாக்கும்போது மாண்டஸ்க்யூவின் வழியில் சுதந்திரத்தைக் காக்க முனைந்தனர்,

அமெரிக்க மாநிலங்களின் அரசியலமைப்பை வகுக்கும்போதும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு ஆதிக்கம் செலுத்தியுள்ளது. மாசாச்சுசட்ஸ் (Massachusetts) மாநில அரசியலமைப்பு, சட்ட சபைகள் செயல்துறையின் அதிகாரத்தையும் நீதி மன்றங்களின் அதிகாரதிதையும் செலுத்தக் கூடாது என்றும், செயல்துறை சட்டத்துறையின் அதிகாரத்தையும் நீதிமன்றங்களின் அதிகாரத்தையும் செலுத்தக் கூடாது என்றும், நீதித்துறை, சட்டமன்றங்களின் அதிகாரத்தையும் செயல்துறையின் அதிகாரத்தையும் செலுத்தக்கூடாது என்றும், அப்போதுதான் சட்ட ஆட்சியை ஏற்படுத்த முடியும் என்றும் கூறுகின்றது.

வர்ஜீனியா (Virginia) மாநிலத்தின் அரசியலமைப்பை எழுதிய தாமஸ் ஜெபர்ஸன் கூற்றுப்படி, சட்டமியற்றல், செயல் துறை, நீதித்துறை என்ற அரசாங்கத்தின் அதிகாரங்கள் அனைத்தும் ஒருவரிடம் இருப்பின் அதுவே வல்லாட்சிக்கு இலக்கணமாகும்.[7] அதிகாரக் குவிப்பைத் தடுத்து அதிகாரப் பிரிவினையை ஏற்படுத்த அமெரிக்க அரசியலமைப்பாளர் மேடிசனும் விழைகிறார்.

டாக்டர் பின்னர் (Dr. Finner) கருத்துப்படி, அமெரிக்க அரசியலமைப்பு அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் கட்டுரையாகும். இக்கோட்பாட்டைப் பின்பற்றும் உலக அரசாங்கங்களில் அமெரிக்க ஐக்கிய நாடு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும்.[8] மாண்டஸ்க்யூவின் அதிகாரப்பிரிவினைக் கோட்பாடு அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியலமைப்பிலும் அமெரிக்க மாநிலங்களின் அரசியலமைப்புகளிலும் மிகுந்த செல்வாக்கும் ஆதிக்கமும் பெற்றுள்ளது.

## அதிகாரப் பிரிவினைக் கோட்பாடும் தற்கால அரசியலமைப்புகளும்

மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினைக் கொள்கை தற்கால அரசியலமைப்புகளில் எவ்வளவுதூரம் நடைமுறையில் கையாளப் படுகிறது என்பதைக் காணுதல் பயனுடையதாகும். மாண்டஸ்க்யூவின் கருத்துப்படி, அரசாங்க அதிகாரங்கள் மூன்றும் சட்டம் இயற்றும் அதிகாரம், நிர்வாக அதிகாரம், நீதி செலுத்தும் அதி

[7] Jefferson: 'All the powers of government, legistative, executive, and judiciary, result to the legislative body. The concentrating of these in the same hands is precisely the definition of despotic government.'

[8] Dr. Finer: 'The American constitution was conciansly and elaborately made an essay in the separation of powers and is to day the most important polity in the world which operated upon that principle.'

காரம் ஆகியன தொடர்பற்ற முறையில் தனித்தனியே பிரிக்கப் பட்டிருக்க வேண்டும். இவ்வதிகாரங்களைச் செலுத்தும் ஒரு நிறு வனம் மற்றொரு நிறுவனத்தின் மீது ஆதிக்கம் செலுத்தக்கூடாது. இக்கோட்பாடுகளை முழுமையாகக் கையாளும் அரசாங்கங்கள் குறைவேயாகும். தற்கால அரசாங்கங்களில் ஓரளவு அதிகார இணைப்பும் கலந்தே காணப்படுகின்றன. இங்கிலாந்து, அமெ ரிக்கா, ரஷ்யா, பிரான்சு ஆகிய நாடுகளின் அரசியல் அமைப்பு களில் மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினைக் கொள்கை எவ் வளவு தூரம் பொருந்தியுள்ளது என்பதைக் காண்போம்.

## இங்கிலாந்து அரசியல் அமைப்பும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடும்

### கொள்கைப் பொருத்தமின்மை

மாண்டஸ்க்யூ இங்கிலாந்தின் அரசியலமைப்பை நோக்கியே தமது அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை வகுத்தார். இங்கி லாந்தில் அதிகாரப் பிரிவினை இருப்பதால்தான் மக்களின் உரிமை களும் சுதந்திரமும் பாதுகாக்கப்படுவதாகக் கருதினார். ஆனால் அதிகாரப் பிரிவினையைக் கடைப்பிடிக்காத நாடுகளில் இங்கிலாந் தும் ஒன்றாகும். இங்கிலாந்து அரசியலமைப்பு அதிகார இணைப் புக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது கில்கிரைஸ்ட் டின் (Gilchirist) கூற்றுப்படி, இங்கிலாந்தின் நிதித்தலைவர் (Lord Chanceller) அமைச்சர் குழுவிலும், பிரபுக்கள் மன்றத்திலும், நீதித்துறையிலும் ஒரே நேரத்தில் இடம்பெற்று அதிகாரப் பிரி வினைக் கோட்பாட்டிற்கு எதிரான சான்றாகத் திகழ்கிறார்.

### செயல்துறையும் சட்டத்துறையும் இணைப்பு

இங்கிலாந்து அரசாங்கத்தின் செயல்துறை சட்டத்துறையின் பகுதியாகவே அமைந்துள்ளது. செயல்துறை நிறுவனமாகிய அமைச்சரவை அங்கத்தினர்கள் சட்டசபையிலிருந்து நியமிக்கப் படுகின்றனர். சட்டசபையின் பெரும்பான்மைக் கட்சியின் தலை வர் தலைமை அமைச்சராக இருக்கிறார். இங்கிலாந்துச் செயல்துறை யில் மன்னர் பெயரளவுத் தலைவராகவும், தலைமை அமைச்சரும் அவருடைய அமைச்சரவையுமே உண்மைச் செயல்துறையினராக வும் பணியாற்றுகின்றனர். சட்டசபையைக் கலைக்க ஆலோசனை கூறவும் அதிகாரம் அமைச்சரவைக்கு உண்டு. அமைச்சர்கள் ஒவ்வொருவரும் ஒன்றோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்டதோ ஆன அரசாங்கத்துறையினை நிருவகிக்கின்றார்கள். எனவே, செயல்

துறைக்கும் சட்டத்துறைக்கும் உள்ள அதிகாரப் பிரிவைவிட அதிகார இணைப்பே அதிகமாகும்.

### சட்டத்துறையும் நீதித்துறையும் இணைப்பு

இங்கிலாந்து நாட்டில் உண்மைச் செயல்துறை அமைச்சரவையென்றும், இவ்வமைச்சரவை அங்கத்தினர்கள் சட்டமன்ற உறுப்பினர்கள் என்றும் பார்த்தோம். இங்கிலாந்து நாட்டின் நீதிபதிகளைச் செயல்துறையினரே நியமிக்கின்றனர். மேலும் இங்கிலாந்தின் தலைமை நீதிமன்றம் பிரபுக்கள் சபையாகும். இது சட்டத்துறையின் ஒரு பகுதியாகும். எனவே, சட்டத்துறை நீதித்துறையின் மீது செல்வாக்குக் கொண்டிருப்பதைக் காணலாம். அதிகாரப்பிரிவினைக் கொள்கை பொருந்தாமையும், அதிகார இணைப்பு இருப்பதையும் இதனால் அறிகிறோம்.

### நீதித்துறையும் செயல்துறையும் இணைப்பு

இங்கிலாந்தின் செயல்துறைத் தலைவராகிய மன்னர் நீதியின் இருப்பிடமாகத் திகழ்கிறார். மேலும் செயல்துறையே நீதிபதிகளை நியமிக்கின்றது. நீதிபதிகளால் விசாரிக்கப்பட வேண்டிய வழக்குகள் பல செயல்துறையினரால் விசாரிக்கப்படுகின்றன. நீதித்துறையின் மீது செயல்துறை ஆதிக்கம் செலுத்துகிறது. நீதித்துறைக்கும் செயல்துறைக்கும் அதிகாரப் பிரிவினை இருப்பதைவிட அதிகார இணைப்பு அதிகம் காணப்படுகிறது.

### கொள்கையில் சில பொருத்தம்

இங்கிலாந்து நாட்டின் அரசியல் அமைப்பைக் கூர்ந்து கவனித்தால் வேறு எந்த நாட்டிலும் இல்லாத அளவு அதிகாரப் பிரிவினை நடைமுறையில் இருப்பதைக் காணலாம் என்று வில்லோபி என்பவர் கருதுகிறார். முழு அளவில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு இங்கிலாந்துக்குப் பொருந்தாவிடினும் கொள்கையில் ஒருசில பொருத்தங்கள் இருப்பது நமக்கும் புலனாகும்.

சட்டம் இயற்றும் அதிகாரம் சட்டசபைகளிடம் கொடுக்கப்பட்டுள்ளது. இங்கிலாந்தில் சட்டசபைகளைத் தவிர வேறு யாரும் சட்டம் இயற்ற முடியாது. சட்டசபை செயல்துறைப் பகுதியிலிருந்தும் நீதித்துறையிலிருந்தும் வேறுபடுத்தப்பட்டுள்ளது.

செயல்துறையின் அதிகாரம் இங்கிலாந்து அரசியிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. இந்தச் செயல்துறை அதிகாரத்தைச் சட்டமன்றங்கள் பெறமுடியாது. நாட்டை நிருவாகம் செய்வது அரசியே தவிரச் சட்டமன்றங்கள் அல்ல.

நீதிமன்றங்கள் இங்கிலாந்தில் சுதந்திரமுள்ள நிருவனங்களாக இருக்கின்றன. நீதிபதிகள் நன்னடத்தை உள்ள வரையில் பதவியில் இருக்கலாம். நீண்ட காலவரையறையும் உயர்ந்த ஊதியமும் கொடுக்கப்பட்டு நீதிபதிகளின் பதவி பாதுகாக்கப்படுகின்றது. செயல்துறையின் தலைவியாகிய அரசியார் நீதிபதிகளைப் பதவியிலிருந்து நீக்க முடியாது. நீதிபதிகளின் ஊதியத்திற்குச் சட்டமன்றங்கள் ஒப்புதல் அளிக்க வேண்டியதில்லை. பாராளுமன்ற ஆண்டு வரவு செலவுக் கணக்கில் நீதிபதிகளின் ஊதியம் அடங்குவதில்லை. இதனால் நீதிபதிகள் பாராளுமன்றத்தின் ஆதிக்கத்தில் அடங்குவதில்லை. சுதந்திரமாகச் செயல்படுகின்றனர்.

சட்டமியற்றல், நிருவகித்தல் ஆகிய அனைத்துச் செயல்களையும் அமைச்சரவை செய்தாலும் ஒரு துறையின் அதிகாரத்தைச் செயல்படுத்தும்போது மற்ற இரு துறைகளின் அதிகாரத்தை ஒதுக்கி வைக்கின்றது.

## அமெரிக்க அரசியல் அமைப்பும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடும்

### கொள்கைப் பொருத்தம்

அமெரிக்க நாட்டின் அரசியலமைப்பில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு மிகுந்த அளவில் பொருத்தப்பட்டுள்ளது. வேறு எந்த அரசியலமைப்பிலும் இல்லாத அளவு அதிகமான அதிகாரப் பிரிவினையை அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பில் காணலாம். மேலும் குடியரசு தலைவர் முறை அரசாங்க அமைப்பை அமெரிக்கா ஏற்றுள்ளதாலும் இந்த அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை முழு அளவில் கடைப்பிடித்துள்ளனர். ஆனால் அமெரிக்க அரசியலமைப்பில் எந்த இடத்திலும் அதிகாரப் பிரிவினைபற்றிக் கூறப்படவில்லை.

### சட்டத்துறையில் இக் கோட்பாடு

அமெரிக்கச் சட்டத்துறையில் இரு சட்டமன்றங்கள் உள்ளன. பிரதிநிதிகள் அவையும் செனட் அவையும் கொண்ட அமெரிக்கப் பாராளுமன்றத்திற்குக் காங்கிரஸ் என்று பெயர். அமெரிக்கச் சட்டத்துறையானது மற்ற இரு துறைகளான செயல்துறையிலிருந்தும் நீதித்துறையிலிருந்தும் சுதந்திரமாகச் செயல்படுகிறது.

நிருவாகத்துறை சட்டத்துறையில் ஆதிக்கம் செலுத்த முடியாது. குடியரசு தலைவரோ அல்லது அவரது அமைச்சர்களோ சட்டமன்றத்தின் அங்கத்தினர் அல்லர். குடியரசு தலைவர் ஓர்

அரசியல் கட்சியைச் சார்ந்தவராகவும் பாராளுமன்றத்தில் பிறிதோர் அரசியற்கட்சி பெரும்பான்மையுடையதாகவும் இருக்க லாம். குடியரசு தலைவர் ஒரு சட்டத்தைப் பரிந்துரைத்தாலும், அதைப் பாராளுமன்றம் நிறைவேற்ற வேண்டும் என்று அவர் விரும்பினாலும் சபைகள் அதை ஏற்க மறுக்கலாம். குடியரசுதலைவர் சட்டமன்றங்களைக் கலைக்க முடியாது. எனவே சட்டத்துறை செயல்படுகின்றது.

நீதித்துறையும் சட்டத்துறையின் மீது ஆதிக்கம் செலுத்துவ தில்லை. சட்டத்துறை சுதந்திரமாகச் செயல்படுகிறது. சட்டமன் றத்தின் நடவடிக்கைகளில் நீதிமன்றங்கள் தலையிடக்கூடாது. நிருவாகத்துறையின் தலையீடு இன்றியும் நீதித்துறையின் தலையீடு இன்றியும் அமெரிக்காவில் சட்டத்துறை தன் வரையறைக்குள் சுதந்திரமாகச் செயல்படுகின்றது.

**செயல்துறையில் இக் கோட்பாடு**

அமெரிக்கச் செயல்துறைத் தலைவர் குடியரசு தலைவராவார். இவர் மற்ற இரு துறைகளான சட்டத்துறை, நீதித்துறை ஆகிய வற்றின் தலையீடு இன்றிச் சுதந்திரமாகத் தன் அதிகார வரம் பிற்குள் செயல்படலாம்.

செயல்துறையின் தலைவரான குடியரசு தலைவர் மீது சட்டத் துறை ஆதிக்கம் செலுத்த முடியாது. இவர் சுதந்திரமாகச் செயல் படலாம். இவரது சுதந்திரம் பல விதங்களில் பாதுகாக்கப்படுகி றது. இவர் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றார். இவர் பாராளுமன்றத்தின் உறுப்பினர் அல்லர். இவர் ஓர் அரசி யல் கட்சியைச் சார்ந்தவராகவும், பாராளுமன்றத்தின் பெரும் பான்மையினர் பிறிதொரு அரசியல் கட்சியைச் சார்ந்தவராகவும் இருக்கலாம். இவரது அமைச்சர்களும் பாராளுமன்றத்தின் உறுப் பினர்களாக இடம் பெறுவதில்லை. குடியரசு தலைவரோ, அவரது அமைச்சர்களோ பாராளுமன்றத்திற்குப் பொறுப்பானவர்கள் அல் லர். பாராளுமன்றத்தில் ஒரு மசோதா தோல்வியடைந்தாலும் இவரோ அல்லது அமைச்சர்களோ பதவித் துறவு மேற்கொள்ள வேண்டியதில்லை. மேலும் குடியரசு தலைவரின் ஊதியம் பாராளு மன்றத்தின் தீர்மானத்திற்குட்பட்டதல்ல. இந்தச் சாதனங்களின் காரணமாக அமெரிக்கச் செயல்துறைத் தலைவரான குடியரசு தலைவர் பாராளுமன்றத்தின் தலையீடு இன்றிச் செயல்பட அதி காரப் பிரிவினைக் கோட்பாட்டைக் கையாண்டு அமெரிக்க அரசிய லமைப்பு வகை செய்துள்ளது.

அமெரிக்க நீதித்துறையும் செயல்துறைத் தலைவரான குடியரசு தலைவர் மீது ஆதிக்கம் செலுத்த முடியாது. குடியரசு தலைவர் நீதித்துறையின் தலையீடு இன்றிச் சுதந்திரமாகச் செயல்படலாம்: எனவே சட்டத்துறையின் தலையீடு இன்றியும் நீதித்துறையின் தலையீடு இன்றியும் செயல்துறைத் தலைவர் பணியாற்றலாம்.

## நீதித்துறையில் இக் கோட்பாடு

நீதித்துறையிலும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு கையாளப் படுகின்றது. நீதித்துறை மற்றத் துறைகளான சட்டத்துறை, செயல்துறை ஆகியவற்றின் ஆதிக்கத்திலிருந்து சுதந்திரமாகச் செயல்படுகின்றது.

சட்டத்துறையின் தலையீட்டிலிருந்து நீதித்துறை காக்கப்படு கின்றது. நீதிபதிகளின் ஊதியம் சட்டசபைகளின் அங்கீகாரத்திற் குட்பட்டதல்ல. நீதிமன்ற நடவடிக்கைகள் பற்றிச் சட்டசபைகள் விவாதிக்கக் கூடாது. நீதிபதிகள் சட்டசபையால் நியமிக்கப்பட் டவர்களுமல்லர். சட்டமன்றங்களுக்குப் பொறுப்பானவர்களு மல்லர். இவ்விதமாகச் சட்டத்துறையின் தலையீடு இன்றித் தன் அதிகார வரம்பிற்குள் நீதித்துறை சுதந்திரமாகச் செயலாற்றலாம்.

செயல்துறையின் ஆதிக்கத்திலிருந்தும் நீதித்துறை காக்கப்படு கின்றது. நீதிபதிகளைச் செயல்துறை பதவியிலிருந்து நீக்க முடி யாது. அமெரிக்காவின் சில மாநிலங்களில் நீதிபதிகள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். குடியரசு தலைவர் நீதிபதிகளின் பதவிக்காலத்தையோ ஊதியத்தையோ குறைக்க முடியாது. செயல் துறையின் தலையீடு இன்றி நீதிபதிகள் செயலாற்றலாம். எனவே, அமெரிக்க நீதிமன்றங்கள் சட்டத்துறையின் தலையீடு இன்றியும் செயல்துறையின் தலையீடு இன்றியும் சுதந்திரமாகச் செயல்படு கின்றன.

அமெரிக்காவில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பின்பற்றப் பட்டுச் சட்டத்துறை, செயல்துறை, நீதித்துறை ஆகியன மற்றத் துறைகளின் தலையீடின்றித் தங்கள் அதிகார வரம்பிற்குள் செய லாற்றுகின்றன. மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினைக் கோட் பாடு பொருந்துவதைக் காண்கிறோம்.

## கொள்கைப் பொருத்தமின்மை

அதிகாரப் பிரிவினைக் கொள்கை அமெரிக்க அரசியலில் சில இடங்களில் பொருந்தாமையை இங்குச் சுட்டிக்காட்ட வேண்டி யிருக்கிறது. அரசாங்கத்தின் ஒரு நிறுவனம் மற்ற நிறுவனங்களில் தலையிடுதலையும், இவைகள் சுதந்திரமாகச் செயல்பட இயலாமை

யையும் தெற்றெனப் புலப்படுத்தி நிற்கின்றன. அரசாங்க நிறுவனங்களிடையே தொடர்பும் அதிகார இணைப்பும் பல இடங்களில் இருப்பதைக் காணலாம்.

### சட்டத்துறையில் இக் கோட்பாடு பொருந்தாமை

சட்டத்துறையில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பொருந்தாமல் இருப்பதையும், சட்டத்துறையில் மற்ற இரு துறைகளான செயல்துறையும், நீதித்துறையும் தலையிடுவதையும் அமெரிக்க அரசாங்க நடைமுறையில் காணலாம்.

சட்டத்துறையில் செயல்துறை தலையிடுகின்றது. சட்டமன்றங்களுக்கும் குடியரசு தலைவருக்கும் தொடர்பிருப்பதைக் காணலாம். குடியரசு தலைவர் சில சட்டங்களை இயற்றும்படி சட்டமன்றங்களுக்குப் பரிந்துரை அனுப்பலாம். மேலும் சட்டமன்றங்கள் இயற்றிய சட்டங்களைக் குடியரசு தலைவர் தமது (Veto) உரிமையால் ஒத்திவைக்கலாம்.

சட்டத்துறையில் நீதிமன்றமும் தலையிடுகின்றது. சட்ட மன்றங்களால் இயற்றப்பட்ட சட்டங்களை அரசியலமைப்பிற்கு முரணானது எனக் கூறி நீதிமன்றங்கள் அச்சட்டங்களைச் செயலற்றதாக்கலாம். மேலும் சட்டமன்றங்களால் இயற்றப்பட்ட சட்டங்களுக்கு நீதிமன்றம் தன் விருப்பம்போல் விளக்கம் கூறலாம். சில வேளைகளில் சட்டமன்றங்களின் கருத்துக்கு முரணான விளக்கங்களும் கூறப்படுகின்றன. எனவே, சட்டத்துறையின் செயல்களில் செயல்துறையும், நீதித்துறையும் தலையிடுவதையும் இவ்விடத்து அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு தோல்வியுறுவதையும் காண்கிறோம்.

### செயல்துறையில் இக் கோட்பாடு பொருந்தாமை

செயல்துறையில் மாண்டஸ்க்யூவின் கோட்பாடு பொருந்தாததையும் மற்ற இரு துறைகளான சட்டத்துறையும் நீதித்துறையும் செயல்துறையில் தலையிடுவதையும் அமெரிக்க அரசியலமைப்பில் காணலாம்.

செயல்துறையில் சட்டத்துறை தலையிடுகின்றது. குடியரசு தலைவர் செய்த நிருவாக நடவடிக்கைகளைச் சட்டமன்றங்கள் ஏற்க வேண்டும். குடியரசு தலைவர் செய்யும் முக்கிய நியமனங்களையும் போர்ப் பிரகடனங்களையும் அயல்நாடுகளுடன் செய்துகொண்ட ஒப்பந்தங்களையும் அமெரிக்கச் சட்டமன்றங்களுள் ஒன்றான செனட் சபை அங்கீகரித்து ஏற்க வேண்டும். குடியரசு தலைவரின் நடவடிக்கையை செனட் மன்றம் ஏற்கலாம், அல்லது நிராகரிக்கலாம்,

சர்வதேசச்சங்கத்தின் தந்தையான அமெரிக்கக் குடியரசு தலைவர் உட்ரோவில்சன் (Woodrow Wilson) அமெரிக்காவைச் சர்வ தேசச் சங்கத்தில் உறுப்பினராக்கினர். ஆனால் குடியரசு தலைவரின் நடவடிக்கையை அமெரிக்க செனட் மன்றம் ஏற்க மறுத்து விட்டது. மேலும் குடியரசு தலைவர் கூறும் ஆலோசனைகளைச் சட்டமன்றங்கள் ஏற்க மறுக்கலாம். குடியரசு தலைவர் மீது தேசத் துரோகக் குற்றம் சாட்டும் உரிமை பிரதிநிதிகள் மன்றத்திற்கும், அக்குற்றச்சாட்டை விசாரிக்கும் உரிமை செனட் மன்றத்திற்கு முண்டு. வாட்டர் கேட் விவகாரத்தில் அமெரிக்கக் குடியரசு தலைவர் நிக்ஸன் மீது அரசத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டது நினைவிருக்கலாம்.

செயல்துறையில் நீதித்துறையும் தலையிடுகிறது. அமெரிக்கச் செயல்துறைத் தலைவரான குடியரசு தலைவரின் நிர்வாகச் செயல்களை அரசியல் அமைப்பிற்கு முரணானது என்று கூறி நீதி மன்றங்கள் அந்நிர்வாகச் செயல்களைப் பயனற்றதாக்கலாம். எனவே செயல்துறையின் நிர்வாகச் செயல்களில் சட்டத்துறையும் நீதித்துறையும் தலையிடுவதையும் இவ்விடத்து அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பொருந்தாமல் தோல்வியுறுவதையும் நாம் அறிகிறோம்.

**நீதித்துறையில் இக் கோட்பாடு பொருந்தாமை**

நீதித்துறையில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பொருந்தாததையும், மற்ற இரு துறைகளான சட்டத்துறையும் செயல் துறையும் நீதித்துறையில் தலையிடுவதையும் அமெரிக்க அரசிய லமைப்பில் காணலாம்.

நீதித்துறையில் சட்டத்துறை தலையிடுகின்றது. நீதிமன்றங்கள் நீதிப்புனராய்வு (Judicial Review) செய்து ஏற்க மறுத்த ஒரு சட்டத்திற்கு மன்றங்கள் மாறுனதோர் சட்டத்தை நிறைவேற்ற லாம். நீதிபதிகளைச் சட்டமன்றங்கள் தேசத்துரோகக் குற்றம் சாட்டி விசாரிக்கலாம்.

நீதித்துறையில் செயல்துறையும் தலையிடுகிறது. நீதிபதிகளை நியமிக்கும் உரிமை அமெரிக்கச் செயல்துறையின் தலைவரான குடியரசு தலைவருக்கு உண்டு. மேலும் நீதிமன்றங்களின் தண்டனை யைக் குறைக்கவும், நீக்கவும், மாற்றவும், மன்னிப்பு வழங்கவும் குடியாட்சி தலைவருக்கு அதிகாரம் உண்டு. நீதித்துறையின் செயல்களில் சட்டத்துறையும் செயல்துறையும் தலையிடுகின்றன.

இவ்விடத்து அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பொருந்தாமலிருக்கின்றது.

அமெரிக்க அரசியலமைப்பில் மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு சில இடத்தில் பொருந்துவதையும் சில இடத்தில் பொருந்தாமையையும் காண்கிறோம். பொதுவாகக் கூறுமிடத்து அமெரிக்க அரசியலமைப்பில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு மற்ற நாட்டு அரசியலமைப்புகளை விட அதிகம் பொருத்தப்பட்டுச் செயல்படுத்தப்படுகின்றது.

## இந்திய அரசியல் அமைப்பும் அதிகாரப் பிரிவினையும்

### கொள்கைப் பொருத்தமின்மை

இந்தியாவில் முழு அதிகாரக் குவிப்போ, அதிகாரப் பிரிவினையோ கிடையாது. இந்திய அரசியலமைப்புப் பெரும்பாலும் இங்கிலாந்து அரசியலமைப்பை ஒட்டியதாக இருக்கின்றது. எனவே, அதிகாரப் பிரிவினையைவிட இந்திய அரசியலமைப்பில் அதிகாரக் குவிப்பையே அதிகமாகக் காணலாம்.

### சட்டத்துறையின் தலையீடு

இந்தியச் சட்டத் துறை மற்ற இரு துறைகளான செயல்துறையிலும் நீதித்துறையிலும் தலையிடுகின்றது. சட்டத் துறையான பாராளுமன்றம் செயல்துறையினரான அமைச்சரவையை வினவுகிறது. தனக்குப் பொறுப்பாக்குகிறது. தனது நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கும்வரைதான் அமைச்சர்கள் செயல்படலாம்; இதன் மூலம் சட்டத்துறை செயல்துறையின் அதிகாரத்தில் தலையிடுகின்றது. செயல்துறைத் தலைவரான குடியரசு தலைவர் மீது பாராளுமன்றம் குற்றம் சாட்டலாம். இவ்வாறு நீதித்துறையின் அதிகாரத்தில் சட்டத்துறை தலையிடுகின்றது.

### செயல்துறையின் தலையீடு

இந்தியச் செயல்துறை மற்ற இரு துறைகளான சட்டத்துறையிலும் நீதித்துறையிலும் தலையிட்டு அதிகார இணைப்பை ஏற்படுத்துகிறது. உண்மைச் செயல்துறையினரான அமைச்சரவை சட்டமன்றங்களின் உறுப்பினர்களாவர். இவர்கள் சட்டமன்ற நடவடிக்கைகளில் கலந்துகொள்வர். சட்டமன்றப் பெரும்பான்மைக் கட்சியின் தலைவரே உண்மைச் செயல்துறையின் தலைவரான தலைமை அமைச்சர் ஆவார். இவர் செயல்துறைத் தலைவராகவும் பாராளுமன்றத்தின் மீது ஆதிக்கம் உள்ளவராகவும் இருக்கிறார். மேலும் இந்தியக் குடியரசு தலைவர் பிரகடனங்கள் மூலம் சட்டமியற்று

கின்றார். இச்சட்டம் பாராளுமன்றச் சட்டத்திற்கு ஒப்பானது. இதே போலச் செயல்துறை நீதித்துறையிலும் தலையிடுகின்றது. இந்தியச் செயல்துறையின் பெயரளவுத் தலைவரான குடியரசு தலைவரே நீதிபதிகளை நியமிக்கிறார். நீதிமன்றத்தால் தண்டிக்கப்பட்டவர்களின் தண்டனையைக் குடியரசு தலைவர் குறைக்கலாம்; மாற்றலாம்; நீக்கலாம்; மன்னிப்பு வழங்கும் அதிகாரம் குடியரசு தலைவருக்கு உண்டு. மேலும் செயல்துறைத் தலைவர் வேண்டும்போது நீதிபதிகள் ஆலோசனை நல்கவேண்டும். இவ்விதங்களில் இந்தியச் செயல்துறை சட்டத்துறையிலும் நீதித்துறையிலும் தலையிடுகின்றது.

## நீதித்துறையின் தலையீடு

இந்திய நீதித்துறை மற்ற இரு துறைகளான சட்டத் துறையிலும் செயல்துறையிலும் தலையிடுகின்றது. பாராளுமன்றம் இயற்றிய சட்டத்தை அரசியலமைப்பிற்கு முரணானது எனக் கூறி அச்சட்டத்தைச் செயலற்றதாக்கலாம். இதன்வழி நீதித்துறை சட்டத்துறையில் தலையிடுகின்றது நீதிபதிகள் செயல்துறையின் செயலைக் கண்டிக்கலாம்; செயல்துறையின் செயல்களைச் செயலற்றதாக்கலாம். இவ்விதங்களில் நீதித்துறை செயல்துறையிலும் தலையிடுகிறது.

எனவே, இந்திய அரசியலமைப்பில் அதிகாரப் பிரிவினையை விட அதிகாரக் குவிப்பு அதிகம் காணப்படுகிறது. அரசாங்கத்தில் மூன்று நிறுவனங்களாகிய சட்டத்துறை, செயல்துறை, நீதித்துறை ஆகியன இணைந்தே செயல்படுகின்றன.

## கொள்கைப் பொருத்தம்

இந்திய அரசியலமைப்பிலும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு இல்லாமலில்லை. அரசாங்கத்தின் மூன்று நிறுவனங்கள் ஆகிய சட்டத்துறை, செயல்துறை, நீதித்துறை ஆகியன மற்றதன் தலையீடு இன்றிச் சுதந்திரமாகச் செயல்படுகின்றன.

இந்தியப் பாராளுமன்றம் சட்டங்கள் இயற்றுகின்றன. மற்ற நிறுவனங்களான செயல்துறையோ நீதிமன்றங்களோ சட்டம் இயற்றுவதில்லை. குடியரசு தலைவர் அவசரப் பிரகடனம் செய்தாலும் அவைகளுக்குப் பாராளுமன்றத்தின் ஒப்புதல் பெற வேண்டும்.

இந்திய நிருவாகத் துறை செயலாட்சி புரிகின்றது. இச்செயலைப் பாராளுமன்றமோ நீதிமன்றங்களோ செய்வதில்லை.

செயல்துறையின் தலைவராகக் குடியரசு தலைவர் விளங்குகிருர். இந்திய அரசாங்க நிருவாகம் அனைத்தும் இவர் பெயராலேயே செய்யப்படுகின்றது. இந்திய நீதித்துறையில் சட்டமன்றங்களோ செயல்துறையினரோ தலையிடுவதில்லை. நீதிபதிகளின் பதவிக் காலமும் ஊதியமும் பாதுகாக்கப்படுகின்றன. நீதித் துறையின் செலவு பாராளுமன்றத்தால் அங்கீகரிக்கப்பட வேண்டியதில்லை. நீதிபதிகள் சுதந்திரமாகச் செயலாற்றுகின்றனர்.

இந்திய அரசியலிலும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு கடைப் பிடிக்கப்படுகிறது. இருப்பினும் இந்திய அரசு பாராளுமன்ற முறை அரசாக அமைந்திருப்பதால் நிருவாகத்துறைக்கும் சட்டத் துறைக்கும் உள்ள இணைப்புத் தவிர்க்க முடியாததாக உள்ளது. எனவே, இந்திய அரசியலமைப்பிலும் மற்ற அரசியல் அமைப்பு களைப்போல அதிகாரப் பிணைப்பும் பிரிவும் இணைந்தேயிருக்கிறது.

## இரஷ்ய அரசியலமைப்பும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடும்

இரஷ்ய அரசியலமைப்பில் மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டிற்கு இடம் அளிக்கப்படவில்லை. பிரிசீடியம் (Presidium) எனப்படும் தலைமை நிறுவனம் சட்டத்துறை, செயல்துறை, நீதித்துறை ஆகிய மூன்று துறைகளின் செயல்களை யும் செய்கின்றது. விசின்ஸ்கி (Vyshinsky) தமது 'சோவியத்து அரசின் சட்டம்' என்னும் நூலில் கூறுவதாவது, 'சோவியத் சமு தாய அமைப்பில் அடிமுதல் முடிவரை பாட்டாளிகளின் ஒன்றுபட்ட ஒருமை உயிர்ப்பு உணர்வே நிலவுகிறது. பொதுவுடைமைக் கட்சி யின் அகில ஒன்றியம் முதலாளி வர்க்கத்தின் அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை நிராகரிக்கிறது.'[9]

## ஃபிரான்சு அரசியலமைப்பும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடும்

அதிகாரப் பிரிவினை தோன்றிய இடமாகிய பிரான்சு நாட்டில் இக்கோட்பாடு மதிக்கப்படுவதில்லை. செயல்துறையினர் பிர கடனங்கள் வழியே சட்டங்களை இயற்றுகின்றனர். மேலும் பாராளு மன்றத்தால் நிறைவேற்றப்பட்டு நடைமுறையிலிருக்கும் சட்டங்

[9] Vyshinsky : 'From top to bottom the soviet social order is permeated by the single general spirit of the oneness of the authority of the toiler. The programme of the All Union Communist Party rejects the bourgeois principle of separation of powers.' (The Law of the Soviet State.)

களையும் மாற்றும் அதிகாரம் செயல்துறைக்கு வழங்கப்பட்டுள்ளது. பெயரளவில் பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரம் மற்ற நிறுவனங்களுக்கு மாற்றப்படுவதில்லை. ஆனால், நடைமுறையில் சட்டமியற்றும் அதிகாரம் செயல்துறைக்கு மாற்றப்பட்ட அதிகாரமாக (Delegated Powers) விளங்குகிறது. இவற்றிலிருந்து அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பிரான்சு நாட்டில் பின்பற்றப்படாமை அறியலாம்.

பிரான்சு நாட்டிலும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் கூறுகள் இல்லாமலும் இல்லை. நீதித்துறை நிருவாகத் துறையில் தலையிடுவது தடுக்கப்படுகிறது. நிருவாகத்துறை அலுவலர்களை விசாரிக்கும் அதிகாரம் நீதிமன்றங்களுக்குக் கிடையாது. நீதிமன்றங்கள் நீதி நிருவாகத்தில் கையாளும் சாதாரணச் சட்டங்கள் நிருவாகத்துறை அலுவலர்களை உட்படுத்துவதில்லை. நிருவாகத் துறை அலுவலர்கள் ஆட்சித்துறை நீதிமன்றங்களால் (Administrative Courts) விசாரிக்கப்படுகின்றனர். ஆட்சித் துறைச் சட்டங்களே (Administrative Law) அலுவலர்களைக் கட்டுப்படுத்தும். நிருவாக அலுவலர்கள் சாதாரண நீதிமன்றத்திலிருந்தும் சாதாரணச் சட்டத்திலிருந்தும் காக்கப்படுகின்றனர். சாதாரண நீதிமன்றமும் சாதாரணச் சட்டமும் நிருவாகத்துறை அலுவலில் தலையிடுவதில்லை. நிதித்துறையின் தலையீடின்றி நிருவாகத் துறை அலுவலர்கள் சுதந்திரமாகச் செயல்படுகின்றனர். இவற்றிலிருந்து அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் கூறு பிரான்சு நாட்டில் இருப்பதை அறியலாம். பிரான்சின் ஆட்சித் துறைச் சட்டங்கள் பற்றியும், இது இங்கிலாந்துச் சட்ட முறையிலிருந்து எவ்விதம் மாறுபாடுகிறதென்பதையும் பின்வரும் பகுதிகளில் தெளிவாகக் காணலாம்.

## அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் குறைகள்

அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு ஓர் அரசியல் தத்துவமாக எல்லா நாட்டினராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. ஆனால், இக் கோட்பாட்டிலுள்ள குறைபாடுகளின் காரணமாக இது முழு அளவில் நடைமுறைப்படுத்தப்படுவதில்லை. உலக நாடுகள் எதிலும் முழு அளவு அதிகாரப் பிரிவினை ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. அதிகாரப் பிரிவினையை அரசியல் கோட்பாடாக ஏற்றுள்ள அமெரிக்காவிலும் முழு அளவில் இக்கோட்பாட்டினைக் கையாள்வதில்லை. எனவே, பல நாட்டு அரசியல் அமைப்பிலும் அதிகாரப் பிணைப்பும் பிரிவும் கலந்தே செயல்படுகின்றன. முழு அளவில் கடைப்பிடிக்க இயலாமையும் இக்கோட்பாட்டிலுள்ள குறைபாடுகளுமே அதற்குக் காரணங்களாகும்.

### முழுப் பிரிப்பு இயலாது

உட்ரோ வில்சன் கருத்துப்படி, அரசாங்கம் ஓர் இயந்திரமன்று; அது ஓர் உயிருள்ள அமைப்பாகும். எனவே, அரசாங்கத்திலுள்ள நிறுவனங்கள் ஒன்றிற்கொன்று நெருங்கிய தொடர்புடையன. அந் நிறுவனங்களைப் பிரிக்க முடியாது. மக்களின் நலத்திற்காக இந் நிறுவனங்கள் இணைந்தே செயல்படவேண்டியுள்ளது. மேலும் அரசாங்கம் என்பது முழுமையாக நோக்கப்பட வேண்டிய ஒன்றே தவிரப் பிரித்து நோக்கப்பட வேண்டிய ஒன்றன்று. அங்கங்களி டையே ஒத்துழைப்பும் ஒருமைப்பாடும் அவசியம். ஆதலால் முழு அதிகாரப் பிரிவினை இயலாத ஒன்றாகும்.

### துறைகள் தனித்து நிற்க முடியாது

அரசாங்கத்து நிறுவனங்களான சட்டமன்றங்கள், செயல் துறை, நீதித்துறை ஆகியன தனித்து நிற்க முடியாது. ஒன்றுக் கொன்று பகைத்துக்கொண்டும் தனித்தியங்க முடியாது. சட்ட மன்றங்கள் நிருவாக அலுவல்களையும் நிர்வாகத்துறை, நீதித் துறை அலுவல்களையும் செய்துவருகின்றன. பாராளுமன்ற முறை மக்களாட்சியில் (Parliamentary Democracy) செயல் துறையும் சட்டமன்றங்களும் இணைந்தே செயல்படுகின்றன. செயல்துறை பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளதாக இருக்கிறது. சட்டங்களை இயற்றுவதில் அமைச்சரவை முக்கியப் பங்கு கொள்ளுகிறது. அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் உறுப்பினர்களாகவும் பாராளு மன்ற நடவடிக்கைகளில் பங்கு கொள்பவர்களாகவும் உள்ளனர். மன்றத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கும் வரையில் தான் அமைச்சர்கள் பதவியிலிருக்கலாம். இவ்விதமாகச் செயல் துறையும் சட்டத்துறையும் தனித்து நிற்காது. இணைந்தே செயல் படுகின்றன. மேலும் நீதிபதிகள் வழக்குகளுக்குத் தீர்ப்புக் கூறும் போதும் தீர்ப்புக் கூறச் சட்டத்தில் வழிகாட்டாதபோதும் புதிய சட்டங்கள் செய்து முன் தீர்ப்பு முறையை (Precedent) ஏற்படுத்து கின்றனர். நிருவாகத் தலைவராகிய குடியரசு தலைவர் அவசரப் பிரகடனங்கள் மூலம் சட்டங்களை இயற்றுகிறார். குற்றவாளிக்கு மன்னிப்பு வழங்குகிறார். இவ்வாறாக அரசாங்கத்தின் மூன்று துறைகளும் தனித்து நிற்காது ஒன்றையொன்று சார்ந்து நிற் கின்றன.

### துறைகளிடையே பிணக்கு ஏற்படுகிறது

அரசாங்கத்தின் துறைகளிடையே உயர்வு தாழ்வு மனப் பான்மைகளும், அதன் விளைவாகப் பொறாமை, நம்பிக்கையின்மை, பிணக்கு ஆகியனவும் தோன்றுகின்றன. இதனால் அரசாங்க அலு

வல்கள் அமைதியாகவும் திறம்படவும் நடைபெறுமல் தாமதங்களும் பூசல்களும் ஏற்படும். சில வேளைகளில் அரசியல் அமைப்பே சிதறும் நிலையும் தோன்றலாம்.

### துறைகள் சமமல்ல

அதிகாரப் பிரிவினைக் கொள்கை அரசாங்கத்தின் மூன்று துறைகளும் சமம் எனக்கொள்கிறது. குடியாட்சி வளர்ந்துள்ள தற்காலத்தில் மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய சட்டமன்றங்களின் அதிகாரம் அதிகமாவதையும், இவைகள் நிருவாகத்துறையையும் நீதித்துறையையும் கட்டுப்படுத்துவதையும் காணலாம். அமைச்சரவை ஆட்சியில் (cabinet government) நிருவாகத்துறை சட்டத்துறைக்குக் கட்டுப்பட்டிருப்பதையும் அறிகிறோம். மேலும் மக்கள் நலம் நாடும் அரசில் (welfare state) நிருவாகத்துறைக்கு அதிக அதிகாரம் அளிக்க வேண்டிய சந்தர்ப்பங்கள் தோன்றுகின்றன. அதிகாரப் பிரிவினையின் அடிப்படையில் அமெரிக்காவில் கடைப்பிடிக்கப்படும் சமநிலைத் தலையீடுகள் (Checks and Balances) கோட்பாடு கால மாறுதல்களுக்கேற்ப ஓரளவு திருத்தப்பட்டுள்ளது. இருப்பினும், சட்டமன்றங்களோ நிர்வாகத் துறையோ சட்டங்களுக்கும் நீதிக்கும் முரணாகச் செயல்படுவதும் தடுக்கப்படுகிறது.

### அதிகாரப் பிரிவு அன்று; செயல் பிரிவு ஆகும்

அரசாங்கத்தின் அதிகாரப் பிரிவினை எனக் கூறுதல் பொருத்தமுடையதாக இல்லை. அதிகாரம் என்ற சொல் வெறுப்பையும் மயக்கத்தையும் ஏற்படுத்துவதாக உள்ளது. அரசாங்கத்தின் அதிகாரத்தைப் பிரிப்பதைவிட அரசாங்கத்தின் செயல்களைப் பிரிப்பதும், இச் செயல்களைத் தனித் துறைகளிடம் ஒப்படைப்பதுமே சரியானதாகும். எனவே, அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு என்பதைவிடச் செயல் பிரிவினைக் கோட்பாடு என்பதே சாலப் பொருத்தமுடையதாகும்.

### துறைகள் பொறுப்பேற்பதில்லை

அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின்படி அரசாங்கத்தின் துறைகள் தனித்துச் செயல்படுகின்றன. அரசாங்கத்தின் திறமையின்மைக்கோ ஏற்படும் குறைபாடுகளுக்கோ எந்தத் துறையும் பொறுப்பேற்பதில்லை. மற்றத் துறை மீது பொறுப்பைச் சுமத்துகின்றன. ஆனல், அதிகார இணைப்புள்ள அரசாங்கங்களில் உண்மைச் செயல்துறையினரான அமைச்சரவை மீது பொறுப்பு திட்டவட்டமாகச் சுமத்தப்படுகிறது. அமைச்சர்கள் தங்கள் பொறுப்பிலிருந்து தப்பமுடியாது. அரசர் தவறு செய்யமாட்டார் என்ற கோட்பாடு இங்கிலாந்தில் நிலவுகிறது. ஏனெனில், அரசர்

தவறு செய்தால் அதற்கு அமைச்சரவையே பொறுப்பேற்க வேண்டும். அமைச்சர்களின் ஆலோசனையின்படியே அரசர் செயல்படுவதால் அரசரின் தவறு அமைச்சர்களின் தவறாகும்.

**வரலாறு ஏற்பதில்லை**

அரசாங்கத்துறைகளைப் பிரிப்பதாலும், அதன் செயல்களைப் பகுப்பதாலும் சுதந்திரம் காக்கப்படுகிறது என்று மாண்டஸ்க்யூ கருதினார். இவரது இக் கருத்துத் தவறானது ஆகும். இங்கிலாந்து நாட்டில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பின்பற்றப்படுவதில்லை. அமைச்சரவை அரசில் செயல்துறைக்கும் சட்டமன்றத்திற்கும் நெருங்கிய தொடர்பும் இணைப்பும் உள்ளன. அதிகாரப் பிரிவினை இல்லாதிருந்தும் இங்கிலாந்து மக்கள் சுதந்திரமாக உரிமைகளுடன் வாழ்கின்றனர். அதிகாரப் பிரிவினையால்தான் சுதந்திரத்தை ஏற்படுத்த முடியும் என்ற கருத்துத் தவறானதாகும். இக் கருத்தை வரலாறு ஏற்பதில்லை; பொய்ப்பிக்கிறது.

**வல்லாட்சியினர் ஏற்பதில்லை**

ஜெர்மனியின் நாசிக் கட்சியும், ரஷ்யாவின் பொதுவுடைமைக் கட்சியும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை ஏற்பது இல்லை. ஒற்றுமைக்கும் ஒருமைப்பாட்டிற்கும் அரசாங்கத்தின் திறமைக்கும் அதிகாரக் குவிப்பு அவசியமென இக் கட்சிகள் கருதுகின்றன. ஒருவரிடமோ அல்லது ஒரு குழுவிடமோ அரசாங்கத்தின் மூன்று அதிகாரங்களும் இணைந்திருப்பதே நாட்டின் நலத்திற்கு நல்லதென இவர்கள் எண்ணுகின்றனர்.

**குடியாட்சியும் ஏற்பதில்லை**

மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை குடியாட்சியும் ஏற்பதில்லை. எதிர்ப்புத் தெரிவிக்கிறது. குடியாட்சியில் அரசியல் கட்சிகள் நிலவுவதால் இக்கட்சிகளே சட்டத்துறையிலும் செயல்துறையிலும் செல்வாக்குக் கொள்கின்றன. நாட்டின் நலன் வளரவும் அரசாங்கம் திறம்பட நடைபெறவும் செயல்துறையிடம் அதிகாரக் குவிப்பு இருக்க வேண்டுமென வாதிடுகின்றன. குடியாட்சி நாடுகளில் சட்டத்துறையும் நிருவாகத்துறையும் இணைந்தே செயல்படுகின்றன.

**அரசியல் விழிப்பே அவசியம்**

உலக நாடுகளின் அரசியலமைப்பில் அதிகார இணைப்பைக் காண்கிறோம். இருப்பினும், மக்கள் சுதந்திரமாகவும் உரிமைகள் உடையவர்களாகவும் வாழ்கின்றனர். எனவே, அதிகாரப்பிரிவினை மட்டும் உரிமைகளையும் சுதந்திரத்தையும் காக்கிறது என்ற கூற்று

நடைமுறையால் பொய்ப்பிக்கப்படுகிறது. குடியாட்சி நாட்டில் மக்கள் கற்றவர்களாகவும் அரசியல் விழிப்புடையவர்களாகவும் இருந்தால் தங்களது உரிமைகளையும் சுதந்திரத்தையும் எளிதில் காக்க முடியும்.

## முக்கிய வினாக்கள்

1. அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் வரலாற்றை வரைக.
2. மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை விவரிக்கவும்.
3. மாண்டஸ்க்யூவின் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு தற்கால அரசியல் அமைப்புகளில் பொருந்துவதை ஆய்க.
4. அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் நிறைகுறைகள் யாவை?
5. அமெரிக்க அரசியலமைப்பில் அதிகாரப் பிரிவினை எவ்வாறு செயல்படுகிறது என்பதை ஆராய்க. (ம. ப. க செப்டம்பர், 1969.)
6. அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் முக்கியத்துவத்தை மதிப்பிடுக. பிரிட்டனில் அதன் செயல்பாட்டைக் கூர்ந்து ஆராய்க. (ம. ப. க. ஏப்ரல், 1970.)
7. அதிகாரப் பிரிவின் நன்மையை ஒரு சான்று கொண்டு விளக்குக. (செ. ப. க. ஏப்ரல், 1970.)
8. சிறு குறிப்பு வரைக:
   (அ) மாண்டஸ்க்யூ.
   (ஆ) அதிகாரப் பிரிவினை. (செ. ப. க. ஏப்ரல், 1972.)
9. அதிகாரப் பிரிவினையில் விரும்பத்தக்கதையும் செயல்படக்கூடியதையும் கூர்ந்து ஆராய்க. (செ. ப. க. ஏப்ரல், 1972–73.)
10. தற்கால அரசுகளில் நீதித்துறைக்கு சட்டமன்றங்களோடும் நிறைவேற்றுத் துறைகளோடும் உள்ள தொடர்பினை வாதிடுக. [செ. ப. க. (பு. மு.) செப்டம்பர், 1973.]
11. அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை விளக்கிக் கூறி நீவிர் படித்துள்ள அரசியலமைப்பில் அதன் பங்கை மதிப்பிடுக. [செ. ப. க (தி. மு.) செப்டம்பர், 1973.]

# 10. சட்டத்துறை
(Legislature)

## அ. வாக்காளர் தொகுதியும் பிரதிநிதித்துவமும்
(Electorate and Representation)

**மக்களாட்சியின் வளர்ச்சி**

**எல்லோருக்கும் வாக்குரிமை:** எல்லோருக்கும் வாக்குரிமையின் நிறைகள்—எல்லோருக்கும் வாக்குரிமையின் குறைகள்.

**பெண்கள் வாக்குரிமை:** பெண்கள் வாக்குரிமையின் நிறைகள்—பெண்கள் வாக்குரிமையின் குறைகள்.

**தொகுதிகள்:** ஓர் உறுப்பினர் தொகுதி—ஓர் உறுப்பினர் தொகுதி முறையின் நிறைகள்—ஓர் உறுப்பினர் தொகுதி முறையின் குறைகள் — பல உறுப்பினர் தொகுதி—பல உறுப்பினர் தொகுதி முறையின் நிறைகள்— பல உறுப்பினர் தொகுதி முறையின் குறைகள்.

**சிறுபான்மையினர் பிரதிநிதித்துவம்**

**விகிதாச்சாரப் பிரதிநிதித்துவம்:** ஹேர் முறை—பட்டியல் முறை —விகிதாச்சாரப் பிரதிநிதித்துவத்தின் நிறைகள் — விகிதாச்சாரப் பிரதிநிதித்துவத்தின் குறைகள்.

**வரையறுக்கப்பட்ட வாக்குமுறை**

**குவிக்கப்பட்ட வாக்குமுறை**

**இரண்டாம் முறை வாக்கெடுப்பு**

**மாற்று வாக்கு முறை**

**வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம்**

**தொழில்வகைப் பிரதிநிதித்துவம்:** தொழில் வகைப் பிரதிநிதித்துவத்தில் உள்ள நிறைகள்—தொழில் வகைப் பிரதிநிதித்துவத்தில் உள்ள குறைகள்.

**வாக்குரிமையும் அதைச் சார்ந்த சிக்கல்களும்:** வாக்காளர்களின் தகுதிகள்—வேட்பாளர்களின் தகுதிகள்—பிரதிநிதிகளின் பதவிக் காலம் — பிரதிநிதிகளின் கடமைகள்.

மக்களாட்சி முறை தற்காலத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட முறையாகும். மக்கள் அனைவரும் சட்டம் இயற்றுதலில் நேரடியாகப் பங்கு கொள்ளும் முறை நேர்முக மக்களாட்சி எனப்படுகிறது. இது மிகச் சிறந்த முறையாயினும் விரிந்து பரந்துள்ள தற்கால அரசுகளில் இயலாததாக உள்ளது. எனவே, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் சட்ட ஆக்கத்தில் பங்குகொள்கின்றனர். மக்களின் விருப்பம் பிரதிநிதிகள் வழியாகப் பிரதிபலிக்கிறது. மக்களின் விருப்பத்தைப் பிரதிபலிப்பவர்கள் பிரதிநிதிகள் (Representatives)எனவும், இவர்களைத் தேர்ந்தெடுப்பவர்கள் வாக்காளர்கள் (Voters or Electors or Electorate) எனவும் அழைக்கப்படுகின்றனர். பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் வழிக்குத் தேர்தல் (Election) என்றும், தேர்ந்தெடுக்கும் முறைக்கு வாக்களிப்பு (Voting) என்றும் பெயராகும்.

## மக்களாட்சியின் வளர்ச்சி

மக்களாட்சி குறிப்பிட்ட வகுப்பாரின் ஆட்சியன்று. சமுதாயத்தின் உறுப்பினர் அனைவரின் ஆட்சியாகும். எனவே, சமுதாயத்தின் விருப்பப்படியே ஆட்சி அமைய வேண்டும். சமுதாயத்தின் விருப்பம் பிரதிநிதிகளின் தேர்தல் வழியாக வெளிப்படுகிறது. இத்தேர்தல் முறைகளின் வளர்ச்சியால் மக்களாட்சி வளர்கிறது. மக்களாட்சி (Democracy) வளர்ச்சியையும், தேர்தல் முறை வளர்ச்சியையும், அவைகளுக்கான காரணங்களையும் காணலாம்.

பழங்காலக் கிரேக்க நகர அரசுகளிலும் ரோமானியக் குடியரசுகளிலும் மக்களாட்சி நிலவியது. ஆனால், அவைகள் நேரிடை மக்களாட்சிகளாகும். ஆனால், இன்றைய மக்களாட்சி பிரதிநிதித்துவ மக்களாட்சியாகும். இது அண்மைக் காலத்தில் தோன்றியது.

மறுமலர்ச்சியின் காரணமாக மக்களாட்சியின் வளர்ச்சியில் ஒரு முன்னேற்றத்தைக் காணலாம். இத்தாலி போன்ற நகரங்களில் சமத்துவத்தை நிலைநாட்டுவதற்கான முயற்சிகள் ஏற்பட்டன.

சமயக் கருத்துகளின் காரணமாக அரசியல் உரிமைகள் வளரத் தொடங்கின. மதச் சுதந்திரத்திற்கு அரசியல் உரிமைகள்

வற்புறுத்தப்பட்டன. இதனால் இங்கிலாந்தில் மக்களுக்கும் மன்னருக்கும் சச்சரவுகள் ஏற்பட்டன. மதச் சுதந்திரத்தை அடையவும், வழிபாட்டுரிமையைப் பெறவும் புதிய இங்கிலாந்துக் குடியேற்ற நாடுகள் (New England Colonies) நிறுவப்பட்டன. முதலாம் சார்லஸ் மன்னர் காலத்தில் நடைபெற்ற உள்நாட்டுப் போர் அரசியல் உரிமைகளையும் மதச் சுதந்திரத்தையும் பெறுவதற்காகவே நடைபெற்றது. இறைவன் முன் எல்லோரும் சமம் என்ற சமயக் கோட்பாடு வலிமை பெற்றது.

18ஆம் நூற்றாண்டில் 1789-ல் தோன்றிய ஃபிரெஞ்சுப் புரட்சி ஜனநாயக சகாப்தத்தை உருவாக்கியது. வால்டேர் (Voltaire), மாண்டஸ்க்யூ (Montesquieu), ரூஸோ (Rouseau) போன்ற அரசியல் அறிஞர்கள் புரட்சிகரமான அரசியற் கருத்துகளை எழுதினர். வால்டேர் வல்லாட்சி நிறுவனங்களை இடித்துக் கூறினார். அரசியல் அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் (separation of powers) அவசியத்தை மாண்டஸ்க்யூ எழுதினார். சட்டங்களின் உள்ளுயிர் (Spirit of laws) என்ற தமது ஏட்டில் அரசின் முப்பெரும் அதிகாரங்களான சட்டமியற்றல், நிருவாகம் செய்தல், நீதி கூறல் ஆகியன ஒருவரிடமிருந்தால் மக்களின் உயிர், உடைமை, சுதந்திரம் ஆகியன பறிபோகும் என்பதை விளக்கினார். ரூஸோ தமது சமுதாய ஒப்பந்தம் (Social Contract) என்னும் நூலில் 'மனிதன் பிறப்பில் சுதந்திரமுடையவன். ஆனால் எங்கும் சங்கிலியால் கட்டுண்டு உள்ளான்' எனக் கூறுகிறார். இவைகளால் எழுச்சி பெற்ற ஃபிரெஞ்சு மக்கள் வல்லாட்சிக்கு எதிராகப் புரட்சி செய்து சுதந்திரம் (Liberty), சமத்துவம் (Equality), சகோதரத்துவம் (Fraternity) என்னும் ஜனநாயகக் கோட்பாடுகளை நிலைநாட்டினர்.

அரசியலில் தோன்றிய புதிய கோட்பாடுகளும் மக்களாட்சி வளர்ச்சியில் செல்வாக்குப் பெற்றுள்ளன. அமெரிக்காவின் சுதந்திரப் பிரகடனமும் (Declaration of Independence), பிரான்சின் மனித உரிமைகளின் பிரகடனமும் (Declaration of Rights of Man) சுதந்திரத்தையும் சமத்துவத்தையும் சுட்டிக்காட்டின. இந்த ஆவணங்களில் கண்டுள்ள சமத்துவக் கொள்கை முக்கியமானதாகும். 'ஓர் ஆள் ஒரு வாக்கு' (One man one vote) என்ற சமத்துவக் கொள்கை வாக்குரிமையில் வளர்ந்தது.

தொழிற் புரட்சியின் காரணமாகப் பொருளாதார நிலையும், வாழ்க்கைத்தரமும், கல்வியறிவும் வளர்ந்தன. இதனால் பாராளுமன்ற முறை விரிவடைந்து வாக்காளர்களின் எண்ணிக்கையும்

பெருகியது. அரசியல்வாதிகளும் பெரும்பான்மை மக்களின் ஆதரவைப் பெற விரும்பினார்கள். வாக்குரிமையில் வளர்ச்சி தோன்றியது.

முறை தவறிய அரசாங்கத்தின் மீது மக்களுக்கு ஏற்பட்ட வெறுப்பும் வாக்குரிமையை வளர்ப்பதற்குக் காரணமாக இருந்தது. சமுதாயச் சீர்கேடுகள் பல நிலவியும் அரசாங்கங்கள் நடவடிக்கை மேற்கொள்ளவில்லை. பாராளுமன்றத்தில் சமூகத்தில் நிலவும் சீர்கேடுகளை எடுத்துக்கூறிச் சமூகத்தின் நிலையைச் சீர்படுத்தச் சீர்திருத்தவாதிகள் விரும்பினர். வாக்குரிமையை இவர்கள் சீர்திருத்தக் கருவியாக மதித்தனர். எனவே, இங்கிலாந்தில் சாசன இயக்கத்தினரும், ரஷ்யாவில் சார் மன்னர்களின் ஆட்சியில் அல்லலுற்ற சிறுபான்மையினரும் தேர்தல் சீர்திருத்தங்களை வேண்டிக் கிளர்ச்சி செய்தனர்.

தற்காலத்தில் வாக்குரிமையும் பிரதிநிதித்துவ மக்களாட்சியும் வளர்ந்துள்ளதற்கு மறுமலர்ச்சியும், சமயக் கருத்துகளும் அரசியலில் புதிய கோட்பாடுகளும், தொழிற் புரட்சியும், முறை தவறிய அரசாங்கத்தின் மீது மக்களுக்கு ஏற்பட்ட வெறுப்பும், தேர்தல் சீர்திருத்தம் வேண்டி மக்கள் செய்த கிளர்ச்சியும் காரணங்களாகும்.

## எல்லோருக்கும் வாக்குரிமை

வயதுவந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை (Universal Adult Franchise) என்பது வயதுவந்த குடிமக்கள் அனைவருக்கும் வேறுபாடு இன்றி வாக்குரிமை அளிப்பதாகும், 'வயது வந்தவர்' என்ற சொற்றொடருக்கான விளக்கம் நாட்டிற்கு நாடு மாறுபடுகிறது. வாக்குரிமை பெறுவதற்கு இந்தியா, அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளில் இருபத்தொரு வயதை அடைந்திருக்க வேண்டும். சுவிட்ஸர்லாந்தில் இருபது வயது நிர்ணயிக்கப்பட்டுள்ளது. சோவியத் ரஷ்யாவிலும், சீன மக்கள் குடியரசிலும் பதினெட்டு வயதை அடைந்தவர்கள் வயது வந்தோராகக் கருதப்படுகின்றனர். 'குடிமக்கள்' என்ற சொல்லிலிருந்து அயல் நாட்டவருக்கு வாக்குரிமையில்லை என்பது பெறப்படும். வேறுபாடின்றி என்பதிலிருந்து வாக்குரிமை அளிப்பதில் சாதி, சமய, இன, பால் வேறுபாடுகள் இடம் பெறக் கூடாது. கல்வித் தகுதிகளோ, சொத்துத்தகுதிகளோ வாக்குரிமை பெற வற்புறுத்தப்படலாகாது. ஆனால், சிறுவர்கள், பித்தர்கள், குற்றவாளிகள் ஆகியவர்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படுவதில்லை.

**எல்லோருக்கும் வாக்குரிமையின் நிறைகள்**

சமத்துவக் கோட்பாடு குடியாட்சியின் அடிப்படையாகும். எல்லோருக்கும் வாக்குரிமை அளிப்பதன் வழி அரசியல் சமத்துவத்தை ஏற்படுத்த இயலும். ஒரு சாராருக்கு வாக்குரிமை மறுக்கப்பட்டால் அவர்களுக்கு அரசியல் சமத்துவம் மறுக்கப்பட்டதாகக் கருதப்படுகிறது.

இயற்கை உரிமைக் கோட்பாட்டின்படி மனிதன் பிறப்பில் சமமானவனுகவே பிறக்கிருன். மனிதர்களிடையே வேறுபாடு கிடையாது. மக்கள் வேறுபடுத்தப்பட்டு ஒரு சிலருக்கு வாக்குரிமை மறுக்கப்பட்டால் அது இயற்கை உரிமைக் கோட்பாட்டிற்கு முரணுகும். இயற்கை உரிமைக் கோட்பாட்டினரான ரூஸோவின் கருத்துப்படி, மக்கள் பிறப்பில் சமமானவர்கள், வேறுபடுத்தல் இயற்கைக்கு மாருனதாகும்.

இறைமைக் கோட்பாட்டின்படி இறைமை மக்களிடமே உண்டு. இறைமையுடைய மக்களில் ஒரு சிலருக்கு வாக்குரிமை மறுக்கப்பட்டால் அவர்களது இறைமை மதிக்கப்படுவதில்லை. எனவே, அனைவருக்கும் வாக்குரிமை முறை இறைமைக் கோட்பாட்டிற்கு ஏற்ப உள்ளது.

எல்லோருக்கும் வாக்குரிமை அளிப்பதால் அனைவரும் அரசியலில் பங்கு பெறுபவர்களாகவும் ஈடுபாடுடையவர்களாகவும் இருக்கின்றனர். பொதுமக்கள் அரசியல் அறிவும் அரசியல் கல்வியும் பெற வாய்ப்பு ஏற்படுகிறது.

அரசாங்கச் செயல்கள் அனைவரையும் பாதிக்கக்கூடியதாக அமைகிறது. ஆகவே, அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்படல்வேண்டும். தங்களைப் பாதிக்கக்கூடிய நடவடிக்கைகளில் பங்கு கொள்வதற்கு அனைவருக்கும் உரிமை உண்டு. அனைவருக்கும் வாக்குரிமை அளிப்பது அரசாங்க நடவடிக்கைகளில் பங்கு கொள்ளும் உரிமையை அளிக்கிறது.

மக்கள் மதிக்கப்படுவதற்கும், தங்கள் ஆளுமையை வளர்த்துக் கொள்ளுவதற்கும் வாக்குரிமை அவசியமாகும். அனைவருக்கும் வாக்குரிமை அளிப்பதன்மூலம் சுயமரியாதையும் ஆளுமை வளர்ச்சியும் ஏற்படுகின்றன.

எல்லோருக்கும் வாக்குரிமை வழங்குவதன்மூலம் எல்லோர் நலனும் சட்டமன்றங்களில் பிரதிபலிக்கும்; காக்கப்படும். குறிப்பிட்ட வகுப்பாரும் சிறுபான்மையினரும் தங்கள் நலனைக் காத்துக்

கொள்வதற்கு எல்லோருக்கும் வாக்குரிமை அளிக்கப்படல் அவசிய மாகிறது.

வயது வந்த அனைவரும் வாக்குரிமை பெறுவதால் ஒருமைப் பாடு தோன்றுகிறது. வாக்காளர் பட்டியலில் இடம் பெற்றவனைக் கருதி இறும்பூதடைகிறன்.

வாக்குரிமை உரிமைகளின் தோற்றுவாயாக அமைகிறது. வாக்குரிமை பெற்றவன் இதர அரசியல், சமூக உரிமைகளையும் பெற்றவனாகிறன். வாக்குரிமை பெற்றவர்களே சில பதவிகளுக்குப் போட்டியிடத் தகுதியுள்ளவர்களாகிறார்கள். எனவே, வாக்கு ரிமை இதர உரிமைகளின் பிறப்பிடமாகிறது.

பேராசிரியர் லாஸ்கியின் கருத்துப்படி, பித்தர்கள், குற்ற வாளிகள் மட்டுமே வாக்குரிமை பெறுவதிலிருந்து ஒதுக்கப்பட வேண்டும். மற்றக் கல்வித் தகுதிகளோ, சொத்துத் தகுதிகளோ வாக்குரிமை பெறுவதில் வற்புறுத்தப்படலாகாது.

**எல்லோருக்கும் வாக்குரிமையின் குறைகள்**

எல்லோருக்கும் வாக்குரிமை அளிப்பதில் குறைகள் கூறப்படு கின்றன சர் ஹென்றி மெயின் (Sir Henry Maine), லெக்கி (Lecky), மெக்காலே (Macaulay), பிளன்சிலி (Bluntschli), ஜே. எஸ். மில் (J. S. Mill), கார்னர் (Garner) போன்ற அரசியல் வல்லுனர்கள் அனைவருக்கும் வாக்குரிமை அளிப்பதற்கு எதிர்ப்புத் தெரிவிக் கின்றனர்.

எழுத்தறிவற்றவர்களும் கல்லாதவர்களும் தங்கள் வாக்குரி மையை முறையாகப் பயன்படுத்த மாட்டார்கள். அரசியல் விவ காரங்களில் பங்கு கொள்ள இவர்களால் இயலாது. சரியான பிரதி நிதிகளைத் தேர்ந்தெடுப்பதில் திறமையற்றவர்களாக இருப்பர். எனவே, வாக்குரிமை பெறுவதற்குக் கல்வித் தகுதி அவசியமாகும்.

எழுத்தறிவற்றவர்களுக்கு வாக்குரிமை வழங்கினல் பாமரர் களின் ஆட்சி தோன்றிக் குழப்பங்களும் வல்லாட்சியும் ஏற்படு மென மெக்காலே கருதுகிறர்.[1] எனவே, இவரும் கல்வித் தகுதியை வற்புறுத்துகிறர். ஜான் ஸ்வர்டு மில் அவர்களின் கருத்துப்படி, அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்படுவதற்கு முன் அனைவருக் கும் கல்வி அறிவு புகட்ட வேண்டும்.

[1] Macaulay: 'A few half-naked fishermen would divide with the owls and foxes the ruins of the greatest of the European cities.'

சொத்துத் தகுதிகள் அவசியமென மில் கருதுகிறர். சொத்து டையவர்களே பொறுப்புடையவர்களாக இருப்பர். தங்கள் வாக் குரிமையைச் சரியாகப் பயன்படுத்துவர்.

அரசாங்கத்திற்கு வரி செலுத்துபவர்களுக்கே வாக்குரிமை அளிக்க வேண்டுமென லெக்கி கூறுகிருர். வரி விதிக்கும் பாராளு மன்ற உறுப்பினர்கள் வரி செலுத்துகிறவர்களால் தேர்ந்தெடுக்கப் படவேண்டும். வரி செலுத்துகிறவர்கள் சட்டமன்றத்தின் வரி விதிப்பிற்குள்ளாவதால் பொறுப்புடையவர்களைச் சட்டமன்ற உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுப்பர்.[2]

ஏழைகளுக்கும் பாமர மக்களுக்கும் வாக்குரிமை அளிப்பதில் தீங்குகள் பல நேரலாம். ஏழைகள் தங்கள் வாக்குகளை விற்கின் றனர். பாமரர்கள் அரசியல் கட்சிகளால் ஏமாற்றப்படுகின்றனர். சிந்தனையின் அடிப்படையிலும் அறிவின் அடிப்படையிலும் வாக் களிப்பதற்குப் பதிலாக மனவெழுச்சிகளால் தூண்டப்பட்டுத் தவருக வாக்களிக்கின்றனர்.

பெண்களுக்கு வாக்குரிமை அளிப்பதிலும் கருத்து வேறு பாடுகள் நிலவுகின்றன. தனித்துச் சிந்திக்கும் ஆற்றல் இல்லாத தால் தங்கள் கணவர் எக்கட்சிக்கு வாக்களிக்கின்றனரோ அதே கட்சிக்கு மனைவியரும் வாக்களிக்கின்றனர். சுயசிந்தனையால் கட்சி மாறி வாக்களிக்கும் போது குடும்ப ஒற்றுமையும் நலனும் பாதிக்கப்படுகிறது. எனவே, மகளிருக்கு வாக்குரிமை அளிப்ப தற்கும் எதிர்ப்புகள் உள்ளன.

அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கும் கோட்பாட்டில் நிறை குறைகளும் காண்கிறோம். தற்காலக் குடியாட்சி நாடுகளில் எல் லோருக்கும் வாக்குரிமைக் கோட்பாடு வலுவடைந்துள்ளது. நாம் குடியரசை மேற்கொண்டவுடன் துணிகரமாக எல்லோருக் கும் வாக்குரிமை அளித்து வெற்றி கண்டுள்ளோம்.

## பெண்கள் வாக்குரிமை

பெண்களுக்கு வாக்குரிமை அளிப்பதில் அரசியல் வல்லுனர் களிடையே மாறுபட்ட கருத்துகள் நிலவி வருகின்றன. அமெ ரிக்க ஐக்கிய நாடுகளில் 1920ஆம் ஆண்டில் முழு அளவில் பெண்

[2] J. S. Mill: 'It is important that the assembly which votes the taxes, either general or local should be elected exclusively by those who pay something towards the taxes imposed.'

களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டது. குடியாட்சியின் மரபுகளை நீண்ட காலமாகக் கொண்டுள்ள இங்கிலாந்திலும் 1928ஆம் ஆண்டு மக்கள் பிரதிநிதித்துவச் சட்டப்படி (Representation of People Act) மகளிருக்கு முழு அளவு வாக்குரிமை அளிக்கப்பட்டது. சுவிட்ஸர்லாந்தில் கூட்டாட்சியின் மத்தியத் தேர்தல்களில் பெண்களுக்கு வாக்குரிமை மறுக்கப்படுகிறது. கான்டோன்கள் என்னும் மாநிலங்களில் சிலவற்றில் பெண்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டுள்ளது. பெண்களுக்கு வாக்குரிமை வழங்குவதில் கூறப்படும் வாத, பிரதி வாதங்களைக் காண்போம்.

### பெண்கள் வாக்குரிமையில் நிறைகள்

குடியாட்சியில் பால் வேறுபாடுகள் கருதப்படுவதில்லை. பால் வேறுபாடுகளின் அடிப்படையில் வாக்குரிமை மறுப்பது அறிவிற்குகந்ததல்ல. மேலும், உடற்கூறுபாடுகளின் காரணமாகப் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்காமல் இருப்பது அநீதியாகும்.

ஜான் ஸ்வர்டு மில் அவர்களின் கருத்துப்படி, வாக்குரிமை அளிப்பதில் பெண்களுக்குத்தான் முழு அளவு சலுகை காட்ட வேண்டும். சக்தி பெற்ற ஆண்களைவிட சக்தியற்ற பெண்களுக்குச் சட்டத்தின் பாதுகாப்பும் சமுதாயத்தின் பாதுகாப்பும் அவசியமாகிறது. இப்பாதுகாப்பிற்காகப் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட வேண்டும்.[8]

சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்ற கோட்பாட்டின்படி பெண்களுக்கும் அரசியலில் சம உரிமையும், அதன்வழி வாக்குரிமையும் அளிப்பதே முறையாகும். சமுதாயத்தின் சரிபாதியாக அமைந்திருக்கும் மகளிர் சமுதாயத்திற்கு வாக்குரிமை மறுக்கப்பட்டால் குடியாட்சி முறை வெற்றி பெற இயலாது.

நெடுங்காலமாகப் பெண்கள் தாழ்த்தப்பட்டவர்களாகவும், ஆண்களின் அநீதிக்கு ஆளானவர்களாகவும் உள்ளனர். அவர்களுக்கு உரிமைகளும் சலுகைகளும் மறுக்கப்பட்டே வந்துள்ளன. இந்நிலை நீடிப்பது சமுதாய நலவாழ்விற்கு நல்லதன்று. எனவே, வாக்களித்தலின் வழி சட்டம் இயற்றலில் பங்கு பெற வாய்ப்பளிக்க

[8] J. S. Mill: 'It is a benefit to human being to take off their fetters, even if they do not desire to walk. It would already be a great improvement in the moral position of women to be no longer declared by law incapable of an opinion respecting the most important concerns of humanity.. It would also be no small benefit that the husband would necessarily discuss the matter with his wife, and that the vote would not be his exclusive affair, but a joint concern.'

வேண்டும். தங்கள் நலன் பாதுகாக்கப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதில் உரிமை இருக்க வேண்டும்.

உரிமைகளின் மூலமான வாக்குரிமை அளிக்கப்படாவிட்டால் இதர உரிமைகள் நிறைவு பெறுது. வாக்குரிமை இல்லாதவர்களுக்குக் குடிமையுணர்வு தோன்றுது. பெண்களும் நாட்டின் குடிமக்கள் என்ற இயல்பூக்கத்தை வளர்க்க மகளிருக்கும் வாக்குரிமை அளிக்கப்படவேண்டும்.

அரசியலையும் பொதுவாழ்வையும் தூய்மையாக்கவும், புனிதமாக்கவும், சீர்படுத்தவும் அரசியலில் மகளிர் பங்கும், பொதுவாழ்வில் அவர்களது ஈடுபாடும் அவசியமாகும் என்று பேராசிரியர் கார்னர் கருதுகிருர். நல்ல அரசாங்கத்தை நிறுவவும், சிறப்புடைய சமுதாயத்தைத் தோற்றுவிக்கவும் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்க வேண்டும்.[4]

பெண்கள் அரசியலில் ஈடுபடுவதால் குடும்ப வாழ்க்கை சீர்குலையுமென்பது தவருனதாகும். குழந்தைகளுக்கு குடிமைப் பயிற்சி அளிக்கவும் பெண்கள் நலனும் குழந்தைகள் நலனும் அடங்கிய சட்ட திட்டங்களைத் தூண்டவும் வகுக்கவும் பெண்களுக்கு வாக்குரிமை அளித்தல் அவசியமாகும்.

மகளிர் பல துறைகளில் ஆண்களோடு பணியாற்றுகின்றனர். தொழில்திறமையில் ஆண்களுக்குக் குறைந்தவர்கள் அல்லர் என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. ஆலைப் பணிகளிலும் அரசாங்கப் பணிகளிலும் இடம் பெற்றுள்ளனர். மருத்துவத் துறையிலும், கல்வித் துறையிலும், சமுதாய நலத் துறையிலும் மகளிர் மிகுதியான ஈடுபாடுடையவர்களாக உள்ளனர். இந்தியாவிலும் இலங்கையிலும் மகளிர் தலைமை அமைச்சர்களாக இருந்து திறம்பட அரசாங்கத்தை நடத்தியுள்ளனர். எனவே, பெண்கள் திறமையற்றவர்கள் என்றோ சக்தியற்றவர்கள் என்றோ வாக்குரிமை மறுக்கப்படுதல் முறையன்று.

### பெண்கள் வாக்குரிமையில் குறைகள்

பெண்களுக்கு வாக்குரிமை அளிப்பதில் பல குறைகளும் எதிரான வாதங்களும் காட்டப்படுகின்றன. நாடாளுவது மகளிர் பணி

[4] Garner, 'The admission of women in politics would introduce in political life a purifying, ennobling and refining influence that not only would tend to elevate the tone of public life and bring about more wholesome political conditions in society, but also would insure better government.'

யன்று; இல்லத்தையாள்வதே மகளிர் கடமையாகும். மக்களை ஆள்வது மகளிர் பணியன்று; மக்களை ஈன்று தருதலே மகளிர் கடனாகும். எனவே, பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டு அரசியலில் ஈடுபடும்போது குடும்ப வாழ்க்கை சீர்படுவதில்லை. பெண்மையின் தன்மைக்கு அரசியல் வாழ்வு பொருந்துவதில்லை. பெண்களின் வாக்குரிமைக்கு எதிரான இக் கூற்றுப் பொருந்துவதில்லை. பெண்களுக்கு வாக்குரிமை அளிப்பதாலும், அவர்கள் வாக்குரிமையைப் பயன்படுத்துவதாலும் இல்லற வாழ்வு பாதிக்கப்படுவதில்லை.

பெண்களுக்கு வாக்குரிமை அளிப்பதால் குடும்பத்தில் முரண்பாடுகள் தோன்றும். கணவனும் மனைவியும் அரசியலில் மாறுபட்ட கொள்கைகள் உடையவராயின் பூசல்கள் ஏற்படும். கணவனுடன் மனைவியும் அரசியலில் ஒரு கோட்பாட்டை உடையவர்களாயின் அதைக் காட்டுவதற்கு இரு வாக்குகள் அவசியமில்லை. மகளிர் வாக்குரிமைக்கு எதிரான இக் கருத்தும் மறுக்கப்படுகிறது. பெண்களுக்கு வாக்குரிமை இருப்பின் குடும்பம் மதிக்கப்படுவதோடு குடும்பத்தில் அரசியல் அறிவு நிலவும்.

சிக்கலும், முரண்பாடுகளும், பூசல்களும் நிறைந்திருக்கும் அரசியலில் பெண்கள் ஈடுபடும்போது மகளிரின் மதிப்பும் பெருமையும் குன்றும். ஆனால், பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படுவதால் மட்டும் அவர்களது மதிப்பும் பெருமையும் குறைந்துவிடாது. வாக்குரிமை பெறுவதால் மதிப்பு உயரும் எனக் கருதப்படுகிறது.

பெண்கள் மென்மையானவர்கள்; வலிமையற்றவர்கள். எனவே, ஆண்களைப் போல் உழைக்க இயலாது. முழு நேரமும் அரசியலில் பங்கு கொள்ள முடியாது. எனவே, பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட வேண்டியதில்லை. ஆண்களுக்குச் சமமாகப் பெண்களும் பொது வாழ்வில் திறமையுடன் ஈடுபடுவதால் இக் கூற்றும் மறுக்கப்படுகிறது.

மகளிர் அரசியலில் ஈடுபாடு காட்டுவதில்லை. அக்கறையற்றவர்களாக உள்ளனர். அறிவின் அடிப்படையில் செயல்படாது உணர்வின் உந்தலால் செயல்படுகின்றனர். எனவே, பெண்களுக்கு வாக்குரிமை அவசியமில்லை. இக் கூற்றும் மறுக்கப்படுகிறது. வாக்குரிமை அளிக்கப்பட்டால் அரசியலில் ஈடுபாடுடைய பெண்களாவது அரசியலில் பங்கு கொள்ள இயலும். மகளிரின் கல்வியறிவை வளர்ப்பதன் மூலம் அவர்களைச் சிந்தனையாளர்களாக்கலாம்.

வாதங்களும் எதிர் வாதங்களும் எப்படியிருந்தாலும் தற்காலத்தில் பெண்களின் வாக்குரிமைக்கு ஆதரவு பெருகி வருகிறது. உலகத்தில் பெரும்பான்மையான நாடுகள் பெண்களுக்கு வாக்குரிமை அளித்துள்ளன. பெண்களும் பொது வாழ்வில் ஈடுபாடு உடையவர்களாகவும், ஆண்களுக்குச் சமமான திறமையுடையவர்களாகவும் விளங்குகின்றனர்.

## தொகுதிகள்

மக்களாட்சியில் இரு வகைகள் உள்ளன. மக்கள் நேரடியாகச் சட்டம் இயற்றுதலில் கலந்து கொள்ளும்போது அதை நேரடி மக்களாட்சி என்கிறோம். நேரடி மக்களாட்சி முறை சுவிட்ஸர்லாந்து போன்ற சிறிய நிலப்பரப்புடைய நாடுகளில்தான் இயலும். பெரிய நிலப்பரப்புடைய நாடுகளில் மக்களின் பிரதிநிதிகள் சட்டம் இயற்றுதலில் பங்கு கொள்கின்றனர். இதைப் பிரதிநிதித்துவ மக்களாட்சி என்கிறோம்.

பிரதிநிதித்துவ மக்களாட்சிக்கு மக்கள் தங்கள் பிரதிநிதிகளை தேர்ந்தெடுக்க வேண்டும். ஓர் அரசாங்கத்தின் சட்டமன்றங்களில் எத்தனை பிரதிநிதிகள் இருக்க வேண்டும்; எத்தனை மக்கள் தொகைக்கு ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்பட வேண்டும், அல்லது எந்த அளவு நிலப்பரப்பிற்கு ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்; பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்கு நிலப்பரப்பு எவ்விதம் பிரிக்கப்பட வேண்டும்; ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பிற்கு ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்படலாமா அல்லது ஒரே நிலப்பரப்பிலிருந்து பல பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படலாமா, என்பன போன்ற பிரச்சினைகள் பிரதிநிதித்துவ மக்களாட்சியில் தோன்றுகின்றன.

பிரதிநிதிகளின் தேர்தலிற்காக நாட்டின் நிலப்பரப்புப் பல பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றன. இப்பகுதிகளுக்குத் தேர்தல் மாவட்டங்கள் அல்லது தேர்தல் தொகுதிகள் என்று பெயராகும். தேர்தல் தொகுதிகளைப் பிரிக்கும்போது ஒரு சீராகப் பிரிப்பது அவசியமாகிறது. தொகுதிகளிடையே மக்கள்தொகையிலோ நிலப்பரப்பிலோ மிகுதியான வேறுபாடுகள் தவிர்க்கப்பட வேண்டும். மேலும் தொகுதிகளை அவ்வப்போது மாற்றியமைத்தல் அவசியமாகும். தொகுதிகளை மாற்றியமைக்கும் பணிகள் பொதுவாக நடுநிலையான குழுக்களிடம் ஒப்படைக்கப்படுகின்றன. இத் தொகுதிகளை ஓர் உறுப்பினர் தொகுதிகள் என்றும், பல உறுப்பினர்

தொகுதிகள் என்றும் பிரிக்கலாம். இவைகளின் தன்மைகளையும் நிறை குறைகளையும் காணலாம்.

### ஓர் உறுப்பினர் தொகுதி

ஒரு தொகுதியிலிருந்து ஒரு பிரதிநிதி மட்டும் தேர்ந்தெடுக்கப்பட்டால் அது ஓர் உறுப்பினர் தொகுதி (Single Member Constituency) எனப்படும். ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் தொகுதிகள் மக்கள் தொகையில் ஏறத்தாழச் சமமாக இருக்க வேண்டும். எத்தனை பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமோ அத்தனை தொகுதிகள் ஏற்படுத்தலாம். ஓர் உறுப்பினர் தொகுதிமுறை இந்தியா, இங்கிலாந்து, கனடா, அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகிய நாடுகளில் நடைமுறையிலிருக்கின்றது.

### ஓர் உறுப்பினர் தொகுதி முறையின் நிறைகள்

ஓர் உறுப்பினர் தொகுதிமுறைத் தேர்தலில் பல நிறைகள் கூறப்படுகின்றன மக்களின் பிரதிநிதிக்கும் மக்களுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்துவதற்கான வாய்ப்புகள் உண்டு. ஏனெனில், ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் தொகுதியின் பரப்பளவு குறைந்ததாக இருக்கும். ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் அரசின் எல்லாப் பகுதிகளுக்கும் பூரணப் பிரதிநிதித்துவம் அளிக்க இயலுகிறது.

பிரதிநிதி அத்தொகுதியைச் சார்ந்தவராகவே இருப்பதால் தொகுதி மக்களின் தேவைகளையும், கஷ்டநஷ்டங்களையும் நன்கு அறிவார். தொகுதிப்பணிகளில் மிகுந்த அக்கறையுடனும் பொறுப்புடனும் செயல்பட இயலும். சட்டமன்றத்தில் தொகுதியின் நலன்களுக்காகப் பரிந்துரைத்துத் தன் தொகுதியின் முன்னேற்றத்தில் கவனமுடையவராகப் பிரதிநிதி இருப்பார்.

ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் மக்களும் திறமையுடைய பிரதிநிதிகளையும் தங்களுக்காக உழைக்கக்கூடிய பொறுப்புள்ள பிரதிநிதிகளையும் தேர்ந்தெடுக்க இயலுகிறது. தொகுதியில் போட்டியிடும் அனைத்து வேட்பாளர்களையும் தொகுதி மக்கள் முன்பே, அறிந்திருக்கும் வாய்ப்பு ஓர் உறுப்பினர் தொகுதிமுறையில் உண்டு. வேட்பாளர் தங்கள் வட்டாரத்தைச் சார்ந்தவராகவும் நீண்ட காலமாகத் தங்களோடு தொடர்பு கொண்டவராகவும் இருப்பார்.

சட்டமன்றங்களில் நிரந்தரமான பெரும்பான்மை இருப்பதற்கும், அதன் வழி நிலையான அரசாங்கத்தை நிறுவுவதற்கும் ஓர்

உறுப்பினர் தொகுதி முறையே சிறந்ததாக அமைகிறது. பல உறுப்பினர் தொகுதியில் எக்கட்சிக்கும் பெரும்பான்மை கிடைக்காமல் நிலையானதும் வலுவானதுமான அரசாங்கத்தை நிறுவ முடிவதில்லை.

ஓர் தொகுதி முறை சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்குச் சாதகமாக அமைகிறது. ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் உள்ள சில தொகுதிகளில் சிறுபான்மையினர் பெரும்பான்மையாக இருப்பர். அத்தொகுதியில் சிறுபான்மையினர் வெற்றி பெற்றுச் சட்டமன்றத்தில் பிரதிநிதித்துவம் பெறுகின்றனர். இதேபோலச் சமுதாயத்தின் பல பிரிவுகளுக்கும் ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் பிரதிநிதித்துவம் கிடைக்கிறது. தொழிலாளர் அதிகமுள்ள தொகுதியில் தொழிலாளர்களின் பிரதிநிதி வெற்றி பெறும் வாய்ப்பு ஏற்படுகிறது. விவசாயிகள் பெரும்பான்மையாக இருக்கும் தொகுதியில் அவர்களின் பிரதிநிதி வெற்றி பெறுவார். எனவே, சிறுபான்மையினருக்கும் சமுதாயத்தின் பல பிரிவினருக்கும் ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் பிரதிநிதித்துவம் கிடைக்கும் வாய்ப்புகள் ஏற்படுகின்றன.

தொகுதிகள் சிறியதாக அமைவதால் தேர்தல் பிரச்சாரங்களுக்கு வசதியாக இருக்கும். இதன் காரணமாகத் தேர்தல் செலவுகளும் குறையும். எனவே, ஓர் உறுப்பினர் தொகுதி முறை சிக்கனமானதாக அமைகிறது.

பாமர மக்களும் எளிதில் விளங்கிக் கொள்ளக்கூடிய ஒரு முறையாகும். ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் குழப்பங்களுக்கு இடமில்லை. இது எளிமையுடையதாகவும், வசதியானதாகவும் அமைகிறது. மேலும் பெரிய நாடுகளுக்கு ஓர் உறுப்பினர் தொகுதி முறை மிகவும் ஏற்றதாக இருக்கிறது

**ஓர் உறுப்பினர் தொகுதி முறையின் குறைகள்**

வாக்காளர்களுக்கு விரிந்த சந்தர்ப்பங்கள் அளிக்கப்படுவதில்லை. மேலும் குறிப்பிட்ட தொகுதியில் குடியிருப்பவரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்ற கட்டுப்பாடும் ஏற்படுகிறது. இதனால் வாக்காளர்களின் சந்தர்ப்பங்கள் குறைகின்றன. திறமை உடையவரைத் தேர்ந்தெடுக்க இயலுவதில்லை. ஓர் உறுப்பினர்தொகுதி முறை குறுகிய தொகுதிமுறையாக இருக்கிறது.

தேசிய நலன் புறக்கணிக்கப்படுகிறது. பிரதிநிதிகள் தங்கள் தொகுதியின் நலனைக் காப்பதிலேயே கருத்துடையவர்களாகவும்

தேசிய நலனைக் கருத்தில் கொள்ளாதவர்களாகவும் இருக்கின்றனர். வாக்காளர்களிடமும் பிரதிநிதிகளிடமும் தேசிய உணர்வை விட வட்டார உணர்வே மிகுந்திருக்கிறது.

ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் தொகுதிகளிடையே சமத்துவத்தைக் காக்க வேண்டியுள்ளதால் ஒவ்வொரு தேர்தலுக்கு முன்னும், ஒவ்வொரு மக்கள் கணக்கெடுப்பிற்குப் பின்னும் தொகுதிகள் மாற்றியமைக்கப்பட வேண்டியுள்ளன. இப்படித் தொகுதிகளை மாற்றியமைக்கும்போது ஆட்சியிலுள்ள அரசியல் கட்சி தனக்குச் சாதகமாகத் தொகுதிகளை மாற்றி அமைத்துக் கொள்கிறது. ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள் பல பகுதிகளிலும் பரவலாக இருக்கும் வண்ணம் தொகுதிகள் பிரிக்கப்படுகின்றன. இதனால் மொத்தத்தில் சிறுபான்மை வாக்குப்பெற்றாலும் பெரும்பான்மைத் தொகுதிகளில் வெல்ல முடிகிறது. எதிர்க்கட்சியினர் குறிப்பிட்ட சில தொகுதிகளில் அடைக்கப்படுகின்றனர். இவர்கள் பெரும்பான்மை வாக்குகள் பெற்றாலும் குறைந்த தொகுதிகளையே கைப்பற்ற முடிகிறது.

**பல உறுப்பினர் தொகுதி**

பல உறுப்பினர் தொகுதிமுறை அல்லது பொதுச்சீட்டு முறை (Multi Member Constituency) என்பதில் அரசின் நிலப்பரப்புப் பல தேர்தல் மாவட்டங்களாகப் (Electoral Districts) பிரிக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு தேர்தல் மாவட்டத்திலிருந்தும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவர். பல உறுப்பினர் தொகுதிமுறையில் தேர்ந்தெடுக்கப்படவேண்டிய பிரதிநிதிகளின் எண்ணிக்கையைவிடத் தொகுதிகளின் எண்ணிக்கை குறைவாக இருக்கும். தேர்தல் மாவட்டங்கள் அல்லது தொகுதிகள் ஒரே அளவினதாக இருக்க வேண்டியதில்லை. இவைகள் பரப்பளவிலும் மக்கள் தொகையிலும் மாறுபட்டிருக்கலாம். இம்மாறுபாடுகளுக்கேற்பத் தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளின் எண்ணிக்கை மாறுபடும். ஒரு குறிப்பிட்ட தொகுதியிலிருந்து எவ்வளவு பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமோ அவ்வளவு வாக்குகள் ஒவ்வொரு வாக்காளர்களுக்கும் உண்டு.

1951ஆம் ஆண்டின் தேர்தல் சட்டப்படி பிரான்சு நாட்டின் நான்காவது குடியரசில் இம்முறை பின்பற்றப்பட்டது. பிரான்சின் தேசிய சபைக்குப் பல உறுப்பினர் தொகுதி முறையில் பிரான்சின் மாநிலங்களான டிபார்ட்மெண்டிலிருந்து பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். டிபார்ட்மெண்டுகள் தேர்தல் தொகுதிகளாகக்

கருதப்பட்டன. ஒவ்வொரு டிபார்ட்மெண்டிலிருந்தும் தேசிய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய பிரதிநிதிகளின் எண்ணிக்கை அவைகளின் மக்கள் தொகைக்கேற்பத் தீர்மானிக்கப் பட்டிருந்தது.

ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் நிறைகுறைகள் இருப்பது போலப் பல உறுப்பினர் தொகுதி முறையிலும் நிறைகுறைகளைக் காணலாம்.

**பல உறுப்பினர் தொகுதி முறையின் நிறைகள்**

பல உறுப்பினர் தொகுதி முறையில் பெரும்பான்மையினரது விருப்பத்தை அறிய முடிகிறது. அரசியல் கட்சிகளின் செல்வாக்கையும் தீர்மானிக்கலாம். நாடு முழுவதும் ஒரே தொகுதியாகக் கருதப்பட்டு வாக்கெடுப்பு நடைபெறும்போது பெரும்பான்மைக் கட்சியினரையும் அறிவதோடு பெரும்பான்மையினரின் விருப்பத்தையும் தீர்மானிக்கலாம்.

பல உறுப்பினர் தொகுதி முறையில் வாக்காளர்களின் விருப்பத்தை வெளியிட விரிந்த சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. பல வேட்பாளர்களில் மிகச் சிறந்தவர்களைப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்க இயலும். ஆனால் ஓர் உறுப்பினர் முறையில் குறிப்பிட்ட தொகுதிக்கு வெளியே இருப்பவர்கள் திறமையுடைய அபூர்வ மனிதர்களாக இருப்பினும் தேர்ந்தெடுக்க இயலுவதில்லை.

தேசிய உணர்வும் ஒருமைப்பாடும் பல உறுப்பினர் தொகுதி முறையில் ஏற்படுகிறது. தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் வட்டார நோக்குடையவர்களாக அமையாது தேசிய நோக்குடையவர்களாக அமைகின்றனர். நாட்டின் நலத்தில் அக்கறை காட்டுகின்றனர். வட்டாரப் பிரதிநிதிகளாக இல்லாமல் நாட்டின் பிரதிநிதிகளாக இருக்கின்றனர்.

**பல உறுப்பினர் தொகுதி முறையின் குறைகள்**

பல உறுப்பினர் தொகுதிமுறையில் பல கட்சிமுறைகள் தோன்றுகின்றன. பல கட்சிகளும் தங்கள் வேட்பாளர்களைத் தேர்தலில் நிறுத்திப் பல திட்டங்களையும் கொள்கைகளையும் வாக்காளர்கள் முன் வைக்கின்றன. பலதிட்டங்களும் கொள்கைகளும் வாக்காளர் மனத்தில் குழப்பத்தை ஏற்படுத்துவனவாக அமைகின்றன. வாக்காளர்களுக்குத் தெளிவு ஏற்படுவதில்லை.

பல உறுப்பினர் தொகுதிமுறை பிரதிநிதித்துவக் கோட்பாட்டிற்கு முரணாக அமைகிறது. பிரதிநிதிகளுக்கும் வாக்காளர்

களுக்கும் தொடர்பு ஏற்படுவதில்லை, மாநிலம் முழுவதும் ஒரே தொகுதியாக இருப்பதால் பிரதிநிதிகளைப் பற்றிய செய்திகளும் விவரங்களும் வாக்காளர்களுக்குத் தெரிவதில்லை. கட்சிக்காகவே வாக்களிக்க வேண்டியுள்ளது. மேலும், பிரதிநிதிகள் தேர்தல் வாக்குறுதிகளை அளிப்பதில்லை; தேர்தல் பிரச்சாரம் செய்வதில்லை; கட்சிகளே வாக்குறுதிகளை அளித்துத் தேர்தல் பிரச்சாரம் செய்கின்றன.

பல கட்சி உறுப்பினர் தொகுதி முறையில் ஒரு பிரதிநிதி காலமானாலும் பதவித்துறவு கொண்டாலும் இடைத்தேர்தல்கள் நடத்தப்பெறுவதில்லை.

சிறுபான்மையினர் பல உறுப்பினர் தொகுதி முறையில் புறக்கணிக்கப்படுகின்றனர். இவர்கள் தங்கள் பிரதிநிதிகளைச் சட்டமன்றங்களுக்கு அனுப்புவதற்கு வாய்ப்பு ஏற்படுவதில்லை. ஓர் உறுப்பினர் தொகுதிமுறையில் சிறுபான்மையினர் பெருமளவு இருக்கும் தொகுதியில் சிறுபான்மையினருக்கு வெற்றி வாய்ப்பு உண்டு.

பல உறுப்பினர் தொகுதிமுறையில் தேர்தல் நடத்துவது சிக்கல் மிக்கதாகவும், பெருஞ்செலவு ஏற்படக் கூடியதாகவும் இருக்கிறது.

பல உறுப்பினர் தொகுதி முறையில் குறிப்பிட்ட வட்டாரத்தில் ஏற்படும் நிறைகுறைகளுக்கும் சாதகபாதகங்களுக்கும் குறிப்பிட்ட ஒரு பிரதிநிதியைப் பொறுப்பாக்க இயலுவதில்லை. பிரதிநிதிகள் பொறுப்பிலிருந்து எளிதில் தப்ப இயலுகிறது.

ஓர் உறுப்பினர் தொகுதிமுறையிலும் பல உறுப்பினர் தொகுதி முறையிலும் நிறைகளும் குறைகளும் இருக்கின்றன. இருப்பினும் இவ்விரு முறைகளிலும் ஓர் உறுப்பினர் தொகுதி முறையே பல நாடுகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட முறையாகும்.

## சிறுபான்மையினர் பிரதிநிதித்துவம்

பிரதிநிதித்துவக் குடியாட்சி முறையில் எல்லாப் பிரிவினருக்கும் பிரதிநிதித்துவம் வழங்க வேண்டியது அவசியமாகும். நடைமுறையில் பெரும்பான்மையினர்களே பாராளுமன்றத்தின் எல்லா இடங்களையும் பிடித்துவிடுகின்றனர். சிறுபான்மையினர்களுக்குப் பிரதிநிதித்துவம் கிடைப்பதில்லை இதனால் சிறுபான்மையினரிடையே அதிருப்தி நிலவுகிறது. குடியாட்சியில் சிறுபான்மையின

ருக்கும் அவர்களது பலத்திற்கேற்பப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும். இதற்கு வழி வகை செய்யப் பிரதிநிதித்துவ முறை கையாளப்பட வேண்டும். ஜே. எஸ். மில் அவர்கள் கூற்றுப்படி, பெரும்பான்மையினர் பெரும்பான்மைப் பிரதிநிதித்துவம் பெற்றால் சிறுபான்மையினர் சிறுபான்மைப்பிரதிநிதித்துவம் பெறவேண்டும்.

ஓர் உறுப்பினர் தொகுதிமுறையில் அறுதிப் பெரும்பான்மை வாக்குகளைப் பெருதவர்களும் வெற்றி பெறுகின்றனர். இம்முறையில் பெரும்பான்மை வாக்காளர்களுக்குப் பிரதிநிதித்துவம் கிடைப்பதில்லை. 10,000 வாக்காளர்கள் இருக்கும் தொகுதியில் 5 வேட்பாளர்கள் போட்டியிட்டு முறையே 3000, 2500, 2000, 1500, 1000 வாக்குகளைப் பெற்றால் 3000 வாக்குகள் பெற்றவர் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இங்கு பிரதிநிதித்துவம் 3000 வாக்காளர்களுக்கு மட்டுமே கிடைக்கிறது. இந்த 3000 வாக்காளர்கள் சிறுபான்மையினர் ஆவர். பெரும்பான்மையினரான 7000 வாக்காளர்களுக்குப் பிரதிநிதித்துவம் கிடைப்பதில்லை. 40 விழுக்காடு வாக்குப்பெற்றவர்கள் பெரும்பான்மை பெற்று ஆட்சியை அமைப்பதும் 60 விழுக்காடு வாக்குகள் பெற்றவர்கள் எதிர்க்கட்சியினராக அமைவதையும் தற்காலப் பிரதிநிதித்துவ முறையில் நாம் காண்கிறோம். இங்கு வாக்காளர்களுக்குத் தங்கள் பலத்திற்கேற்ற விகிதாச்சார பிரதிநிதித்துவம் கிடைப்பதில்லை.

சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்காகவும், வாக்காளர்கள் தங்கள் பலத்திற்கேற்ற விகிதப்படி பிரதிநிதித்துவத்தைப் பெறுவதற்காகவும் பல பிரதிநிதித்துவ முறைகள் சோதனைக்குட்பட்டுக் கையாளப்படுகின்றன. அவைகளில் விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறை (Proportional Representation), வரையறுக்கப்பட்ட வாக்குமுறை (Limited Vote system), குவிக்கப்பட்ட வாக்குமுறை (Cumulative vote system), இரண்டாவது வாக்கெடுப்பு முறை (Second Ballot system), மாற்று வாக்கு முறை (Alternative vote system), வகுப்புப் பிரதிநிதித்துவ முறை (Communal Representation system) ஆகியன முக்கியமானவைகளாகும்.

## விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறை
## (Proportional Representation)

சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்காகக் கையாளப்படும் முறைகளில் விகிதாச்சாரப் பிரதிநிதித்துவமுறை முக்கியமானதாகும். ஹேர்முறை (Hare system) எனப்படும் ஒற்றைமாற்று வாக்கு முறையும், பட்டியல் முறையும் விகிதப் பிரதிநிதித்துவ முறையின் இரு முக்கிய வகைகளாகும்.

ஹேர்முறை (Hare system)

தாமஸ் ஹேர் என்ற ஆங்கிலேயர் தமது 'பிரதிநிதிகளின் தேர்தல்' (Election of Representative) என்ற புத்தகத்தில் இம்முறையை விளக்கியுள்ளார். எனவே இம்முறை ஹேர் முறை என வழங்கப்படுகிறது. தாமஸ் ஹேரின் விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறை ஒற்றை மாற்று வாக்குமுறையைப் பயன்படுத்துகிறது.

ஹேர்முறை செயல்படுத்துவதற்குப் பல உறுப்பினர் தொகுதி முறை பின்பற்றப்பட்டு இரண்டிற்கு மேற்பட்ட பிரதிநிதிகள் ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். வேட்பாளர்களின் பெயர்கள் வாக்குச்சீட்டில் அச்சடிக்கப்பட்டிருக்கும். வாக்காளர் தமது விருப்ப வரிசையை 1, 2, 3, 4 என்று வாக்குச் சீட்டில் குறிக்கலாம். வேட்பாளர்கள் முழுப் பெரும்பான்மை வாக்குகள் பெற வேண்டுமென்ற அவசியமில்லை. ஒரு குறிப்பிட்ட வீதப் பங்கு (Quota) வாக்குகள் பெறுதலே போதுமானது ஆகும். வீதப்பங்கு கீழ்க்காணும் விதி முறையில் தீர்மானிக்கப்படுகிறது.

$$\text{வீதப்பங்கு} = \frac{\text{தொகுதியில் பதிவான மொத்த வாக்குகள்}}{\text{தொகுதியில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய வேட்பாளர்கள்}} + 1$$

எடுத்துக்காட்டாக, ஒரு தொகுதியில் மொத்தம் பதிவான வாக்குகள் 300 எனவும், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய வேட்பாளர்கள் 5 பேர் எனவும் கொண்டு வீதப் பங்கைக் கணக்கிடலாம்.

$$\text{வீதப்பங்கு} = \frac{300}{5} + 1 = 61$$

முதல் விருப்ப வரிசைப்படி விகிதப் பங்காகிய 61 வாக்குகளையும் பெற்றவர்கள் அனைவரும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இப்படித் தேர்ந்தெடுத்தும் எல்லா இடங்களும் நிரப்பப்படவில்லையென்றால் ஏற்கனவே வீதப்பங்கைப் பெற்று வெற்றி பெற்ற வேட்பாளர்களுக்கு வாக்களித்தவர்களின் இரண்டாவது விருப்ப வாக்குகளையும் கூட்டி இடங்களை நிரப்பலாம். ஏனெனில் வெற்றி பெற்றவர்களுக்கு அவ்வாக்குகள் அவசியமில்லை. வாக்குகள் ஒரு வேட்பாளரிடமிருந்து மற்றொரு வேட்பாளருக்கு மாற்றப்படுகிறது. முதல் விருப்ப வரிசை வேட்பாளரிடமிருந்து இரண்டாம் விருப்ப வரிசை வேட்பாளருக்கு வாக்குகள் மாற்றப்படுகின்றன. எல்லா

இடங்களையும் நிரப்பும் வரையில் இவ்வாறு மூன்றுவது, நான்கா வது விருப்ப வரிசைகளைக் கூட்டிக் கொள்ள வேண்டும்.

ஒருசில வேட்பாளர்கள் மிகக் குறைந்த முதல் விருப்ப வரிசை வாக்குகளைப் பெற்றிருப்பர். வாக்குகளை மாற்றினாலும் இவர்களுக்கு வெற்றி வாய்ப்பு மிகக் குறைவாதலால் இவர்கள் நீக் கப்பட்டு இவர்களது முதல் விருப்ப வரிசை வாக்குகள் அதற்கடுத் துள்ள இரண்டாம் விருப்ப வரிசையினருக்கு அளிக்கப்படும். இவ் விதமாக எல்லா வாக்குகளும் சேதம் அடையாமல் பயன்படுத்தப் படுகின்றன. வாக்காளர்கள் முதலில் விரும்புகிறவர்கள் தோல்வி யடைந்தாலும் இரண்டாவது, மூன்றுவது, நான்காவது வரிசையி லிருப்பவர்கள் வெற்றி பெற வாய்ப்பு இருக்கிறது.

ஒற்றை மாற்று வாக்கு முறையிலமைந்த விகிதாச்சாரப் பிரதி நிதித்துவ முறை நார்வே, ஸ்வீடன், பெல்ஜியம், டென்மார்க் போன்ற நாடுகளிலும் இந்தியாவின் குடியரசு தலைவர், துணைத் தலைவர் தேர்தல்களிலும் மேலவையான ராஜ்ய சபை உறுப்பினர் களின் தேர்தல்களிலும், மாநில சட்டமன்றங்களின் மேலவைத் தேர்தல்களிலும், இங்கிலாந்தில் நான்கு பல்கலைக் கழகத் தொகுதி களிலும், ஆஸ்திரேலியாவில் செனட் தேர்தலிலும் பயன்படுத்தப் படுகிறது.

பட்டியல் முறை (List System)

விகிதாச்சாரப் பிரதிநிதித்துவத்தின் மற்றொருமுறை பட்டியல் முறையாகும். அரசியல் கட்சிகள் வேட்பாளர்களின் பட்டியலைத் தயாரிக்கின்றன. இப்பட்டியலில் உள்ள வேட்பாளர்களின் வரிசை கட்சியால் ஏற்றுக்கொள்ளப்பட்டதாகும். வாக்கிடும் கட்சி வாக்காளர்களும் இப்பட்டியலை ஏற்றே வாக்கிடுகின்றனர். வாக்குகள் தனி வேட்பாளர்களுக்கு இடப்படுவதில்லை; கட்சிக்கும், கட்சிப் பட்டியல் முழுமைக்குமே வாக்குகள் அளிக்கப்படுகின்றன.

பட்டியல் முறை செயல்படுவதற்குப் பல உறுப்பினர் தொகுதி களும் ஒவ்வொரு தொகுதியிலும் குறைந்தது மூன்று வேட்பாளர் களும் இருக்க வேண்டும். அரசியல் கட்சிகள் ஒவ்வொரு தொகு திக்கும் தங்கள் வேட்பாளர்களின் பட்டியலை வெளியிடும். ஒவ் வொரு வேட்பாளரும் கட்சிக்காக ஒரு வாக்கு அளிக்கும் முறையோ அல்லது எத்தனை வேட்பாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமோ அத்தனை வாக்குகள் அளிக்கும் முறையோ இருக்க லாம். ஒவ்வொரு கட்சியும் பெற வேண்டிய வீதப்பங்கு ஹேர் முறையின்படி தீர்மானிக்கப்படும். அதாவது பதிவான மொத்த

வாக்குகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய வேட்பாளர்களின் எண்ணிக்கையால் வகுக்கப்பட வேண்டும். ஓர் அரசியல் கட்சி பெற்ற மொத்த வாக்குகளை வீதப்பங்கினால் வகுக்கும்போது கட்சிக்குக் கிடைக்கும் பிரதிநிதிகளின் எண்ணிக்கையை அறியலாம். வகுப்பதில் மீதமுள்ள வாக்குகளை மற்றத் தொகுதிகளுக்கோ அல்லது மற்றத் தொகுதிகளில் இருந்து குறிப்பிட்ட தொகுதிக்கோ மாற்றிக் கொள்ளலாம்.

பட்டியல் முறைகள் பெல்ஜியம், டென்மார்க், சுவிட்ஸர்லாந்து போன்ற ஐரோப்பிய நாடுகளில் பின்பற்றப்படுகின்றன.

### விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையின் நிறைகள்

விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையில் சிறுபான்மையினருக்கு அவர்களது வாக்காளர்களின் எண்ணிக்கைக்கேற்பப் பிரதிநிதித்துவம் கிடைக்கிறது. நாட்டின் எல்லா இனத்தாருக்கும் பிரிவினருக்கும் அவரவர் பலத்திற்கேற்பப் பிரதிநிதித்துவம் கிடைப்பதால் பாராளுமன்றம் எல்லோருடைய பொதுக் கருத்தையும் பிரதிபலிப்பதாக அமைகிறது. விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையில் வாக்குகள் சேதமடைவதில்லை. ஒருவருக்குள்ள வாக்குகள் விருப்ப வரிசைப்படி மற்றவருக்கு மாற்றப்படுகிறது. ஓர் உறுப்பினர் தொகுதிமுறையில் தோல்வியடைந்த வேட்பாளரின் வாக்குகள் சேதமடைவதோடு, தோற்ற வேட்பாளருக்கு வாக்கிட்ட மக்களுக்கும் பிரதிநிதித்துவம் இல்லாமல் போகிறது. மற்றவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவரே பிரதிநிதியாக அமைகிறார். ஆனால், ஒற்றை மாற்று வாக்கு முறையினால ஒவ்வொரு வாக்காளர்களின் பிரதிநிதியும் சட்டமன்றத்தில் இருப்பார். ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் 45 விழுக்காடு வாக்குப் பெற்ற கட்சி பாராளுமன்றத்தில் மூன்றில் இரண்டு பங்கு இடங்களைப் பிடிப்பதையும், 55 விழுக்காடு பெற்றகட்சிகள் எதிர்க்கட்சிகளாயிருப்பதையும் முன்பே கண்டோம். விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு அமைக்கப்பட்ட சட்டமன்றங்கள் இயற்றும் சட்டங்கள் மக்களின் பொதுக் கருத்தைப் பிரதிபலிப்பதாக அமைவதால் சட்டங்களை நடைமுறைப்படுத்தல் எளிது; சட்டங்கள் மக்களால் மதிக்கப்படுவதோடு சட்டங்களுக்கு மக்கள் பணிவார்கள். ஓர் உறுப்பினர் தொகுதி முறையில் இருப்பது போன்று பெரும்பான்மையார் வல்லாட்சி தோன்றுவதற்கு வழியில்லை. வாக்காளர்களுக்குத் தங்கள் வாக்குகளைப் பயன்படுத்த விரிந்த சந்தர்ப்பங்கள் அளிக்கப்படுகின்றன. மேலும் இனத்தாலும், சமயத்தாலும், மொழியாலும் வேறுபட்ட மக்கள் வாழும் நாடுகளுக்கு விகிதாச்சார பிரதிநிதித்துவ முறை மிகச் சிறப்புடையதாகும்.

**விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையின் குறைகள்**

விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையின் காரணமாக அரசியலில் பல கட்சி முறை தோன்றுகிறது. பல கட்சிமுறையில் எக் கட்சியும் பெரும்பான்மை பெற்று நிலையான ஆட்சியை அமைக்க இயலுவதில்லை. எனவே அரசாங்கம் அடிக்கடி வீழ்வதையும் அடிக்கடி மாறுவதையும் காணலாம். குறுகிய கால அரசாங்கமும் திறமையற்ற அரசாங்கமுமே இருக்கிறது. விகிதாச்சாரப் பிரதிநித்துவ முறை சாதாரணப் பாமர மக்களுக்கு விளங்குவதில்லை. சிக்கலும் குழப்பமும் நிறைந்த முறையாக அமைகிறது. இம்முறை செயல்படுவதற்குப் பல உறுப்பினர் தொகுதிமுறையும் ஒரு தொகுதிக்குக் குறைந்தது மூன்று வேட்பாளர்களும் அவசியமாகும். இதனால் வாக்காளர்களுக்கும் பிரதிநிதிகளுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படுவதில்லை. விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையில் தேசிய நலன் புறக்கணிக்கப்பட்டு வட்டார நலன்களும் பல இனத்தார் நலன்களும் தலை தூக்குகின்றன. பல இனங்களிடையே மோதல்களும் பூசல்களும் தோன்றி வளர்கின்றன. விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறை பெரிய தொகுதிகளுக்குப் பொருத்தமற்றதாகவும், இந்தியா, சீனா போன்ற நாடுகளில் நிலவும் பன்மைத் தொகுதிகளில் நடைமுறைப்படுத்த இயலாததாகவும் இருக்கின்றது. விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையில் கட்சியின் மத்தியக் கழகம் வேட்பாளர் பட்டியலைத் தயார் செய்கிறது. எனவே வேட்பாளர்கள் கட்சிக்கும், மத்தியக் கழகத்திற்கும் நன்றியுள்ளவர்களாகவும் ஆதரவு காட்டக் கூடியவர்களாகவும் இருப்பார்கள். கட்சியின் கீழ் மட்டத்திற்கோ வாக்காளர்களுக்கோ பிரதிநிதிகள் நாணயம் உடையவர்களாக இருக்கமாட்டார்கள். ஆதிக்கமும் செல்வாக்கும் உடையவர்களுக்கே நன்மைகள் ஏற்படும்.

## வரையறுக்கப்பட்ட வாக்குமுறை

சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் வழங்குவதற்கு ஏற்படுத்தப்பட்ட முறைகளுள் வரையறுக்கப்பட்ட வாக்குமுறையும் (Limited vote system) ஒன்றாகும். இம்முறையில் பல உறுப்பினர் தொகுதி முறை கையாளப்படுகிறது. ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் குறைந்தது மூன்று பிரதிநிதிகளாவது தேர்ந்தெடுக்கப்படவேண்டும். வாக்காளர்களுக்கு வரையறுக்கப்பட்ட வாக்குகளே அளிக்கப்படுகிறது. வேட்பாளர்களின் எண்ணிக்கையைவிட அனுமதிக்கப்பட்ட வாக்குகள் குறைவாகும். ஒரு தொகுதியில் ஐந்து வேட்பாளர்கள் போட்டியிட்டால் மூன்று அல்லது நான்கு வாக்குகளே வாக்காளர்களுக்கு அளிக்கப்படும். மேலும் வாக்காளர்கள்

ஒரு வேட்பாளருக்கு ஒரு வாக்கிற்கு மேல் அளிக்கக் கூடாது. இம்முறை இங்கிலாந்து, இத்தாலி, ஜப்பான் ஆகிய நாடுகளில் கையாளப்பட்டது.

வரையறுக்கப்பட்ட வாக்கு முறையில் சிறுபான்மையினர் ஒரு சில பிரதிநிதித்துவங்களை அடைய இயலுகிறது. வரையறுக்கப் பட்ட வாக்கு முறையில் கணிசமான சிறுபான்மையினரே பிரதி நிதித்துவம் பெற இயலும். மிகச் சிறிய சிறுபான்மையினர் பிரதி நிதித்துவம் அடைய இயலுவதில்லை. மேலும் பல அரசியல் கட்சிகள் செயல்படும்போது இம்முறை வெற்றிகரமாகச் செயல்படு வதில்லை. வரையறுக்கப்பட்ட வாக்கு முறையில் சிறுபான்மை யினரின் பலத்திற்கேற்ப விகிதாச்சாரப் பிரதிநிதித்துவத்திற்கும் வாய்ப்பு ஏற்படுவதில்லை. இம்முறை பல உறுப்பினர் தொகுதி முறையிலேயே செயல்பட இயலும்; ஓர் உறுப்பினர் தொகுதி முறைக்கு ஏற்றதல்ல. வாக்காளர்களுக்குத் தங்கள் விருப்பங்களைக் காட்ட அதிக வாய்ப்பில்லை.

## குவிக்கப்பட்ட வாக்கு முறை

குவிக்கப்பட்ட வாக்குமுறை (Cumulative vote system) சிறு பான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் வழங்குவதற்காக ஏற்படுத் தப்பட்ட மற்றொரு முறையாகும். இம்முறையிலும் பல உறுப் பினர் தொகுதிமுறை பின்பற்றப்படுகிறது. ஒவ்வொரு தொகுதி யிலிருந்தும் குறைந்தது மூன்று பிரதிநிதிகளாவது தேர்ந்தெடுக் கப்படவேண்டும். குவிக்கப்பட்ட வாக்குமுறையில் ஒரு தொகுதி யிலிருந்து எத்தனை பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமோ அத்தனை வாக்குகள் ஒவ்வொரு வாக்காளருக்கும் வழங்கப்படும். வாக்காளர்கள் தங்கள் வாக்குகள் அனைத்தையும் ஒரு வேட்பாள ருக்கோ அல்லது பல வேட்பாளர்களுக்குப் பிரித்தோ தங்கள் விருப்பம் போல் அளிக்கலாம்.

குவிக்கப்பட்ட வாக்கு முறையில் சிறுபான்மையினருக்கு அதிகச் சந்தர்ப்பங்கள் உள்ளன. வரையறுக்கப்பட்ட வாக்கு முறையைவிட இம்முறையில் சிறுபான்மையினர் பிரதிநிதித்துவம் பெறுதல் உறுதியாக்கப்படுகிறது. சிலசமயங்களில் சிறுபான்மை யினருக்கு அதிகப் பிரதிநிதித்துவமும் பெரும்பான்மையினருக்குக் குறைந்த பிரதிநிதித்துவமும் கிடைக்கிறது. ஆனால், சிறுபான்மை யினர் அமைப்புடையவராக இயங்க வேண்டும். சிறுபான்மை யைச் சார்ந்த வாக்காளர்கள் அனைவரும் தங்கள் வேட்பாளருக்கு வாக்களிக்க வேண்டும்.

குவிக்கப்பட்ட வாக்குமுறையிலும் கட்சிச் செல்வாக்கும், கட்டுப்பாடும் நிலவுகிறது. இம்முறையில் வாக்குகள் சேதம் அடைகின்றன. சில வேட்பாளர்கள் மிக அதிகமான வாக்குகளைப் பெறுவர். ஆனல் இவ்வாக்குகள் மற்ற வேட்பாளர்களுக்குப் பயன் படுவதில்லை. மாற்ற இயலுவதில்லை. மேலும் சிறுபான்மையினர் தங்கள் பலத்திற்கேற்ற விகிதப் பிரதிநிதித்துவத்தை அடைவ தில்லை. இம்முறைக்குத் தொகுதிகள் பெரியனவாகவும், பல வேட்பாளர்கள் போட்டியிடக் கூடியனவாகவும் அமைய வேண்டும்.

## இரண்டாம் முறை வாக்கெடுப்பு

இரண்டாம் முறை வாக்கெடுப்பு (Second Ballot System) சிறு பான்மையினருக்கும் பிரதிநிதித்துவம் வழங்குவதற்காகத் தோற்று விக்கப்பட்டதாகும். இம்முறையில் ஓர் உறுப்பினர் தொகுதிமுறை பின்பற்றப்படுகிறது. மேலும் பிரதிநிதி முழுப் பெரும்பான்மை வாக்குகள் பெறுவது வற்புறுத்தப்படுகிறது. இம்முறை செயல்பட இரண்டிற்கு மேற்பட்ட வேட்பாளர்கள் ஒரு தொகுதியில் போட்டி யிடவேண்டும்.

ஒரு தொகுதியில் மூன்று வேட்பாளர்கள் போட்டியிட்டு மூவரில் ஒருவர் முழுப்பெரும்பான்மை பெற்ருல் இரண்டாம் வாக் கெடுப்பு நடைபெருது. வேட்பாளர்கள் மூவரில் எவரும் முழுப் பெரும்பான்மை பெறவில்லையென்ருல் மிகக் குறைந்த வாக்குகள் பெற்ற வேட்பாளர் நீக்கப்பட்டு மற்ற இருவருக்கும் இரண்டாவது வாக்கெடுப்பு நடைபெறும். இதில் யார் முழுப் பெரும்பான்மை பெறுகிருரோ அவர் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிருர்.

எடுத்துக்காட்டாக, 10,000 வாக்குகள் பதிவு செய்யப்பட்ட ஒரு தொகுதியில் அ, ஆ, இ என்ற மூன்று வேட்பாளர்கள் முறையே 4000, 3500, 2500 வாக்குகள் பெறும்போது இவர்களில் யாரும் முழுப்பெரும்பான்மையான 5001 வாக்குகள் பெறுவதில்லை. எனவே, மூவரில் மிகக் குறைந்த வாக்குகள் பெற்ற இ நீக்கப்படு வார். அ, ஆ ஆகியவர்களிடையே இரண்டாம் வாக்கெடுப்பு நடைபெறும். இதில் யார் அதிக வாக்குகள் பெறுகிருரோ அவர் தேர்ந்தெடுக்கப்படுவார். இ-க்கு அளிக்கப்பட்ட வாக்குகள் அ, ஆ ஆகியவர்களுக்கு அளிக்கப்படும். ஒரு முறை வாக்கெடுப் பாக இருந்தால் மூவரில் அதிக வாக்குப் பெற்ற அ தேர்ந்தெடுக்கப் படுவார். ஆனல், இரண்டாம் முறை வாக்கெடுப்பில் ஆ கூட வெற்றி பெறலாம். பல வேட்பாளர்கள் போட்டியிடும்போது

இந்த முறையில் ஒவ்வொருவராக நீக்கப்பட்டு இறுதியில் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

இரண்டாவது வாக்கெடுப்பு முறையில் தேர்தல் செலவு மிகுதியாகும். சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் உறுதியாக்கப்படுவதில்லை. மேலும், கட்சிகளின் பலத்திற்கேற்ற விகிதாச்சாரப் பிரதிநிதித்துவத்திற்கு வாய்ப்பு ஏற்படுவதில்லை.

## மாற்று வாக்கு முறை

இரண்டாவது வாக்கெடுப்பு முறையில் உள்ள குறைகளை நீக்குவதற்காக மாற்று வாக்கு முறை அல்லது விருப்ப வரிசை வாக்கு முறை (Alternative Vote System or Preferential Vote System) பயன்படுத்தப்படுகிறது. மாற்று வாக்கு முறையிலும் ஓர் உறுப்பினர் தொகுதி முறை பின்பற்றப்படுகிறது. இதிலும் இருவருக்கு மேற்பட்ட வேட்பாளர்கள் போட்டியிட வேண்டும்.

வாக்காளர்கள் வாக்களிக்கும்போது தங்கள் விருப்ப வரிசையை 1,2,3 என வாக்குச் சீட்டில் குறிக்க வேண்டும். வேட்பாளர் ஒருவர் விருப்பவரிசை 1 உள்ள வாக்குகளை முழுப் பெரும்பான்மையளவு பெற்றுவிட்டால் மாற்று வாக்கு முறைக்கு அவசியமில்லை. மூன்று வேட்பாளர்களில் வேட்பாளரும் எந்த முழுப் பெரும்பான்மை பெருவிடில் விருப்ப வரிசை ஒன்றை மிகக் குறைவாகப் பெற்றவர் நீக்கப்படுவார். நீக்கப்பட்ட இவரது விருப்ப வரிசை ஒன்று வாக்கு விருப்ப வரிசை இரண்டைப் பெற்றவருக்கு அளிக்கப்படும். இப்படி வாக்கு மாற்றப்பட்ட பிறகு யார் முழுப் பெரும்பான்மை எய்துகிறார்களோ அவர் தேர்ந்தெடுக்கப்படுவார். மூன்றிற்கு மேற்பட்ட வேட்பாளர்கள் போட்டியிட்டிருந்தால் விருப்ப வரிசையில் கடைசியில் உள்ளவர்களை ஒவ்வொருவராக இதே முறையில் நீக்கவேண்டும். இறுதியில் ஒருவர் முழுப்பெரும்பான்மை பெறுவார்.

மாற்று வாக்கு முறையில் இரண்டாம் முறை வாக்கெடுப்பில் உள்ளது போல இரு முறைத் தேர்தல் நடத்த வேண்டியதில்லை. ஆனால் இம்முறையிலும் ஓர் உறுப்பினர் தொகுதிமுறையே பின்பற்றப்படுகிறது. கட்சிகளின் பலத்திற்கேற்பப் பிரதிநிதித்துவம் வழங்கப்படுவதில்லை. சிறிய சிறுபான்மையினர் இம்முறையிலும் பிரதிநிதித்துவம் பெறுதல் இயலுவதில்லை.

## வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம்

வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ (Communal Representation) முறையும் சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் வழங்குகிறது. வகுப்புப் பிரதிநிதித்துவத்தில் இரு முறைகள் கையாளப்படுகின்றன. ஒன்று தனி வாக்காளர் தொகுதி என்றும், மற்றது கூட்டு வாக்காளர் தொகுதி என்றும் கூறப்படுகிறது. தனி வாக்காளர் தொகுதியில் ஒரு இந்து வாக்காளர் இந்து வேட்பாளருக்கு வாக்களிப்பார். அதே போல் ஒரு முஸ்லீம் வாக்காளர் முஸ்லீம் வேட்பாளருக்கே வாக்களிப்பார். இம்முறை ஆங்கிலேயர்களால் இந்தியாவில் புகுத்தப்பட்டு முஸ்லீம்களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது. இம்முறை 1919ஆம் ஆண்டின் இந்தியச் சட்டப்படி இதர வகுப்பாளர்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டது. கூட்டு வாக்காளர் தொகுதியில் அனைத்து வகுப்பு வாக்காளர்களும் ஒரு வகுப்பு வேட்பாளர்களுக்கு வாக்களிக்கின்றன. இம்முறையில் அட்டவணைச் சாதியினருக்கும், மலைச்சாதியினருக்கும் இந்தியாவில் தற்போது பிரதிநிதித்துவம் வழங்கப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட தொகுதி இவர்களுக்கு ஒதுக்கப்படும். அத்தொகுதியில் அட்டவணைச் சாதியைச் சார்ந்த வேட்பாளர்களே போட்டியிடலாம். அனைத்து வகுப்பு வாக்காளர்களும் வாக்களித்து அட்டவணைச் சாதி வேட்பாளர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுக்கலாம்.

சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் வழங்கும் வகுப்பு வழிமுறை மக்களிடையே சாதி வெறியையும் பிரிவு மனப்பான்மையையும் தோற்றுவிக்கும்.

## தொழில் வகைப் பிரதிநிதித்துவம்

தொழில்களின் அடிப்படையில் பிரதிநிதித்துவம் வழங்கப்படவேண்டும். தொகுதிவாரிப் பிரதிநிதித்துவம் வழங்கப்படக்கூடாது. பிரதிநிதித்துவம் நிலப்பரப்பின் அடிப்படையில் அமையாது தொழில் வகையைச் சார்ந்ததாக அமையவேண்டும். தொகுதிவாரிப் பிரதிநிதித்துவ முறை சமுதாயத்தில் இருக்கும் அனைத்து நலனையும் பிரதிபலிப்பதாக அமைவதில்லை. எனவே பல வகைத் தொழில்களின் நலனைக் காக்கும் பிரதிநிதித்துவமே முறையான பிரதிநிதித்துவம் ஆகும்.

ஆசிரியர் கழகம், மருத்துவர் சங்கம், வழக்குரைஞர் சங்கம், தொழிலாளர் நிறுவனம், விவசாயிகள் சங்கம், வணிகர்கள் கழகம், எனப் பல்வேறுபட்ட தொழில் நிறுவனங்களுக்கும், சங்கங்களுக்கும், கழகங்களுக்கும், பிரதிநிதித்துவம் வழங்க வேண்டும்.

பாராளுமன்றம் முழுவதிலும் தொழில்வகைப் பிரதிநிதிகளே இருக்க வேண்டும்.[6]

தொழில்வகைப் பிரதிநிதித்துவத்தை ஜி. டி. எச். கோல் (G.D.H. Cole), டுகிட் (Duguit), வாலஸ் (Wallas) போன்றவர்கள் வரவேற்றுக் கூறியுள்ளார்கள். தொழில்வகைப் பிரதிநிதித்துவ முறை சோவியத் ரஷ்யாவில் பெரும் அளவு கையாளப்படுகிறது. இத்தாலியில் பாஸிஸ தொழிற் கூட்டுக் கழக அரசாங்கத்தை (Fascist Corporate State) முஸோலினி அமைத்தார். ஜெர்மனியின் வெய்மார் அரசியலமைப்பின் படி தொழில் வகைப் பிரதிநிதித்துவ முறையில் தேசியப் பொருளாதாரக்கழகம் (National Economic Council) அமைக்கப்பட்டது. தற்போது தொழில் வகைப் பிரதி நிதித்துவமுறை சோவியத் ரஷ்யா, யூகோஸ்லாவியா, போலந்து ஆகிய நாடுகளில் நடைமுறையில் உள்ளன. தொழில்வகைப் பிரதிநிதித்துவத்தில் உள்ள நிறைகளையும் குறைகளையும் காணலாம்.

### தொழில்வகைப் பிரதிநிதித்துவத்தில் உள்ள நிறைகள்

தொகுதிவாரிப் பிரதிநிதித்துவ முறை குடியாட்சிக்கு ஏற்புடையதாக இல்லை. குடியாட்சியில் அனைவருக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்படவேண்டும். ஆனால், தொகுதிவாரி முறையில் அனைத்துப் பிரிவாருக்கும் அனைத்து நலன்களுக்கும் பிரதிநிதித்துவம் வழங்கப்படுவதில்லை. தொழில் வகைப் பிரதிநிதித்துவமே அனைத்து நலன்களையும் பிரதிபலிக்கும்.

தற்காலச் சமுதாயத்தில் தொழிலும் தொழில்துறைகளும் முக்கியமானவைகளாகும். தபால்தந்தி இலாக்கா இயங்கவில்லையென்றாலும், வங்கிகளும் பேருந்துப் போக்குவரத்தும் இயங்காவிடிலும், சுமையுந்துகள் செயல்படாவிடிலும் சமுதாய இயக்கமும் பொருளாதார இயக்கமும் ஸ்தம்பித்துப் போவதைக் காண்கிறோம். தொழில் துறைகளின் இன்றியமையாமையை உணர்கின்றோம். இம்முக்கியத் துறைகளுக்குப் பாராளுமன்றத்தில் பிரதிநிதித்துவம் அளித்தல் அவசியமாகும்.

தொகுதி முறையில் பண்டங்களை நுகர்வோருக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படுகிறது. பண்டங்களை உற்பத்தி செய்வோருக்

[6] Duguit: 'All the great forces of the national life ought to be represented- industry, property, commerce, manufacturing professsions, and even science and religion.' 'weaver, miner, baker, teacher, each has his part to play in the commonwealth.'

கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும். தொழில்வகைப் பிரதிநிதித்துவம் அளிப்பதன் மூலம் உற்பத்தியாளர்களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்க இயலுகிறது. உற்பத்தியையும் உற்பத்திக் காரணிகளையும் நெறிமுறைப்படுத்தப் பாராளுமன்றத்தில் தொழில்துறைகளுக்குப் பிரதிநிதித்துவம் அவசியமாகிறது.

தொழிலாளர்களிடையே நெருங்கிய தொடர்பையும், இவர்களிடையே பொது நலன் நிலவுவதையும் தொழில்துறை வளர்ந்துள்ள இக்காலத்தில் காணலாம். ஒரு தொழில்துறையில் பணியாற்றும் தொழிலாளர்கள் தொகுதியிலுள்ள மற்றவர்களோடும் உறவு கொள்வதைவிடத் தங்களுக்குள் பொதுநல அடிப்படையில் மிகுதியான உறவு கொள்கின்றனர். எனவே, தொகுதிகள் மையமாக அமைவதைவிடத் தொழிற்றுறைகளே உறவின் மையமாக அமைகின்றன.

பொது நலம் பேணும் அரசில் பாராளுமன்றங்கள் தொழிற்றுறைச் சட்டங்களை இயற்றுகின்றன. வணிகர்கள், தொழிற்சாலைகள், விவசாயிகள் ஆகியவர்களைச் சார்ந்த சட்டங்கள் சட்டமன்றங்களில் இயற்றப்படுகின்றன. ஆனால், இச்சட்டங்களை ஆக்குபவர்கள் தொழிற்றுறையில் அனுபவம் பெருதவர்களாகவும் தொழில் நுணிக்கங்களை அறியாதவர்களாகவும் இருக்கின்றனர். தொகுதிவாரிப் பிரதிநிதித்துவத்தின் காரணமாக இக்குறைகள் தோன்றுகின்றன. தொழில்வகைப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டால் தொழில்துறைகளுக்கான சட்டங்களைப் பயன் கருதிச் செய்ய முடியும்.

**தொழில் வகைப் பிரதிநிதித்துவத்தில் உள்ள குறைகள்**

தொழில்வகைப் பிரதிநிதித்துவத்தில் தேசியநலன் புறக்கணிக்கப்பட்டுத் தொழிற் பிரிவுகளின் நலன் பேணப்படுகிறது. தொழில் அடிப்படையில் நாட்டில் பிரிவுகள் தோன்றுகின்றன. இக்கருத்துப்படி, இத்தாலியில் 22 தொழில் துறைகள் இருந்ததால் அந்நாடு 22 பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. எனவே தொழில் வகைப் பிரதிநிதித்துவம் தேசிய ஒருமைப்பாட்டிற்கு முரணாக அமைந்தது.

தொழில்வகைப் பிரதிநிதித்துவ முறையில் பல தொழில்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிப்பதில் இடையூறுகள் தோன்றுகின்றன. கல்வித்துறைக்கும், துறைமுகத் தொழில்துறைக்கும், விவசாயத்திற்கும், ஆலைத் தொழிலுக்கும் பிரதிநிதித்துவ விகிதம் வகுப்பதில் பூசல்கள் தோன்றும்.

தொழில் பிரிவுகளின் காரணமாகப் பல அரசியல் கட்சிகள் தோன்றுகின்றன. பல கட்சி முறையில் எக்கட்சிக்கும் பாராளு மன்றத்தில் பெரும்பான்மை கிடைக்கா நிலையில் கூட்டுஅரசாங்கம் அமைக்கப்படும். கூட்டு அரசாங்கத்தில் அரசாங்கம் நிலையற்ற தாக இருக்கும். மேலும் கட்சிகளின் தோற்றத்தினுல் தொழில் வகைப் பிரதிநிதித்துவ முறையிலும் கட்சிகளே செல்வாக்குடை யனவாக இருக்கும். இந்நிலையில் தொழில்வகைப் பிரதிநிதித்துவ முறைக்கும் தொகுதி பிரதிநிதித்துவ முறைக்கும் அதிக வேறு பாடுகள் இருக்காது. இரு வகைப் பிரதிநிதித்துவத்திலும் கட்சி ஆதிக்கமே நிலவும்.

தொழில் வகைப் பிரதிநிதித்துவ முறை குறுகிய நோக்குடை யது. மனிதனைவிடத் தொழிலுக்கு முக்கியத்துவம் அளிக்கிறது. இம்முறைப் பிரதிநிதித்துவம் குடியாட்சிக் கோட்பாடான சமத் துவத்திற்கு ஏற்புடையதாக இல்லை. எத்தொழிலில் இருந்தாலும் ஒவ்வொரு குடிமகனுக்கும் சம வாய்ப்பு அளிக்க வேண்டும். குடி மகன் என்ற நிலை முதலிலும், தொழிலாளி என்ற நிலை பிறகும் தோன்றுகிறது.

ஒரு தொழிலில் ஒரே வகை நலன் இருப்பதில்லை. மருத்துவத் துறையில் மருத்துவர் நலன் ஒன்ருகவும், செவிலியர் நலன் மாறு பட்டதாகவும், மருந்து தயாரிப்பார் நலன் மேலும் வேறுபட்டதாக வும் இருக்கும். பேராசிரியர் லாஸ்கியின் கூற்றுப்படி, ஒரு தொழி லில் பல வகை நலன்கள் பேணப்பட வேண்டியுள்ளதால் திருப்தி கரமான தொழில் வகைப் பிரதிநிதித்துவம் அளிக்க இயலாது.[6]

மேலும் ஜெர்மனியிலும் பிரான்சிலும் தொழில் வகைப் பிரதி நிதித்துவ வழித்தோற்றுவிக்கப்பட்ட தேசியப் பொருளாதாரக் குழு வெற்றிகரமாகச் செயல்படவில்லை. எனவே, தொழில் வகைப் பிரதிநிதித்துவம் நடைமுறைக்கு ஒவ்வாது.

உலக நாடுகளில் தொழில் வகைப் பிரதிநிதித்துவத்திற்கு ஆதரவு மிகக் குறைவு. லாஸ்கி போன்றவர்கள் கருத்துப்படி, சட்டமன்றங்கள் சட்டங்கள் இயற்றும்போது சம்பந்தப்பட்ட

[6] Laski: 'It would promote a struggle between different interests and forces, accentuate the feeling of antagonism between them, and undermine the sound doctrine that a man's interest in the welfare of the group, class or profession to which he belongs, should be secondary to his interest in the welfare of the whole society.'

'Why a function, like that of medicine for instance, is property relevant to the purpose of a legislative assembly? There is not a medical view of foreign policy, if the nationalisation of mines or of free trade.,

தொழில்துறைக் குழுவின் ஆலோசனையைப் பெறலாம். மேலும் தொழில்துறைகளுக்குச் சட்டமன்றங்களின் மேலவையில் பிரதிநிதித்துவம் பல நாடுகளில் வழங்கப்படுகிறது. கீழவையானது தொகுதிகளின் பிரதிநிதிகளை உடையதாகவும், மேலவையானது தொழில் வகைப் பிரதிநிதிகளை உடையதாகவும் இருக்க வேண்டுமென்ற கொள்கை ஆதரவு பெற்றுள்ளது.

## வாக்குரிமையும் அதைச் சார்ந்த சிக்கல்களும்

### வாக்காளர்களின் தகுதிகள்

வாக்காளர்களுக்கு விதிக்கப்பட்டுள்ள தகுதிகள் உலக நாடுகளிடையே மாறுபடுகின்றன. வயது தகுதியில் இங்கிலாந்து, இந்தியா போன்ற நாடுகளில் 21 வயதும், சுவிட்ஸர்லாந்தில் 20 வயதும், சோவியத் ரஷ்யாவிலும் சீன மக்கள் குடியரசிலும் 18 வயதும் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. எல்லோருக்கும் வாக்குரிமை (Universal Suffrage) வழங்கப்பட்டுள்ள இக்காலத்தில் சொத்துத் தகுதிகளோ, பால் தகுதிகளோ வற்புறுத்தப்படுவதில்லை. வாக்காளர்கள் வரி செலுத்துபவர்களாக இருக்கவேண்டுமென்ற நிலையும் மாறிவிட்டது. கல்வித் தகுதியின்மை வாக்களிப்பதற்குத் தடையாக இல்லையாயினும் வாக்காளர்களைக் கல்வித் தகுதியுடையவர்களாக்க வேண்டுமென்பது கொள்கையாகும். இந்தியாவில் ஆரம்பக் கல்வி கட்டாயமாக்கப்பட்டுள்ளது. பித்தர்களும், சிறுவர்களும், அயல்நாட்டாரும் வாக்களிக்கத் தகுதியற்றவர்களாவர். சில நாடுகளில் குற்றவாளிகளும் வாக்களிக்க அனுமதிக்கப்படுவதில்லை.

வாக்காளர்களுக்குச் சில கடமைகளும் வற்புறுத்தப்படுகிறது. தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதில் குடிமை உணர்வுடன் செயல்பட வேண்டும். திறமை மிக்கவர்களையும், நாட்டிற்காகத் தங்களைத் தியாகம் செய்பவர்களையும், தொகுதிக்குப் பாடுபடுகிறவர்களையும், தேசிய ஒருமைப்பாட்டைக் காப்பவர்களையும் வாக்காளர்கள் தேர்ந்தெடுத்தல் சிறப்புடையது. வாக்களித்தல் தங்களுக்கு அளிக்கப்பட்ட அரசியல் சிறப்புரிமை என்பதை அறிதல் நல்லது. வாக்களித்தலின் வழி தங்கள் அரசியல் வாழ்வைத் தாங்களே தீர்மானிக்கின்றனர். இதில் வெறுப்பு விருப்பு இன்றி நடுநிலையாகச் செயல்படல் போற்றப்படும். தங்கள் அரசியல் இறைமையையும் உரிமையையும் விற்றல் நன்றன்று. கடமை உணர்வும் பொறுப்பும் உள்ள வாக்காளர்களே பொறுப்பான அரசாங்கத்தை ஏற்படுத்த முடியும்.

### வேட்பாளர்களின் தகுதிகள்

வேட்பாளர்கள் நாட்டின் குடிமக்களாக இருக்க வேண்டும். அயல் நாட்டவர்களாக இருக்கக் கூடாது. குடியிருப்புத் தகுதிகளும் சில நாடுகளில் வற்புறுத்தப்படுகின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் வேட்பாளர்கள் தங்கள் தொகுதியில் குடியிருப்பவர்களாகவும் வாழ்பவர்களாகவும் இருக்க வேண்டும். இந்தியாவில் எந்த வேட்பாளரும் எந்தத் தொகுதியில் வேண்டுமானாலும் போட்டியிடலாம். வேட்பாளர்களுக்கு வயது தகுதிகளும் வற்புறுத்தப் படுகின்றன. பொதுவாக வாக்காளருக்குக் குறிப்பிட்டுள்ள வயதை விட வேட்பாளர் அதிக வயதுடையவராக இருக்க வேண்டும். அதேபோலக் கீழவையின் வேட்பாளரைவிட மேலவை வேட்பாளர் அதிக வயதுடையவராக இருக்க வேண்டும். இந்தியாவில் வாக்காளருக்கு 21 வயதும், கீழவை வேட்பாளருக்கு 25 வயதும், மேலவை வேட்பாளருக்கு 30 வயதும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. சொத்துத் தகுதிகள் தற்காலத்தில் வற்புறுத்தப்படுவதில்லை. இந்தியாவில் வேட்பாளர்கள் அரசாங்கத்தில் ஆதாயம் உள்ள பதவிகளை வகிக்கக் கூடாது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் செயல் துறையினரும் சட்டமன்றத் தேர்தல்களில் போட்டியிடக் கூடாது. தேர்தலில் ஊழல் செய்தவர்களும் தேர்தலில் போட்டியிடத் தடுக்கப்படுகிறார்கள். இங்கிலாந்து போன்ற நாடுகளில் மதத் தகுதிகளும் வேண்டப்படுகிறது. ரோமன்கத்தோலிக்கப் பாதிரியார்கள் தேர்தலில் போட்டியிடக்கூடாது. வேட்பாளர்கள் ஸ்தலஸ்தாபனங்களில் பதவி வகித்து அனுபவம் உடையவர்களாக இருப்பது விரும்பத்தக்க தகுதியாகக் கருதப்படுகிறது.

### பிரதிநிதிகளின் பதவிக்காலம்

பிரதிநிதிகளின் பதவிக்காலம் நாடுகளிடையே மாறுபடுகின்றன. இந்தியாவிலும் இங்கிலாந்திலும் கீழவையில் பதவிக்காலம் ஐந்து ஆண்டுகளாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கீழவையின் பதவிக்காலம் இரண்டு ஆண்டுகளாகும். மேலவை நிரந்தரமானது. அதன் உறுப்பினர்கள் ஆறு ஆண்டுக்காலம் பதவி வகிப்பர். அமெரிக்காவில் இரு மாநிலங்கள் ஆண்டிற்கொரு முறை பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கின்றன. பொதுவாக மேலவையில் பதவிக்காலம் கீழவையின் பதவிக் காலத்தைவிட அதிகமாக இருக்கிறது. இங்கிலாந்தில் மேலவை உறுப்பினர்கள் பரம்பரை வழியில் பதவியை அடைகின்றனர். அரசியல் அறிஞர்களின் கருத்துப்படி, சட்டமன்றங்களில் பதவிக்காலம் மிகக் குறைந்ததாகவோ மிக அதிகமாகவோ இருக்கக் கூடாது. மிகக் குறைந்திருந்தால் அடிக்கடி தேர்தல்கள் நடத்த வேண்டும். மிக அதிகமாக

இருந்தால் பிரதிநிதிகள் தங்கள் பொறுப்பை மறந்துவிடுவார்கள். எனவே, கீழவையில் நான்கு அல்லது ஐந்து ஆண்டுப் பதவிக் காலம் மிக ஏற்புடையதாகிறது. மேலவை உறுப்பினர்களுக்கு ஆறு ஆண்டுப் பதவிக்காலம் பரிந்துரைக்கப்படுகிறது.

**பிரதிநிதிகளின் கடமைகள்**

பிரதிநிதிகள் தங்கள் தொகுதியின் நலனையும் தேசிய நலனையும் பேணுபவர்களாக அமைய வேண்டும். தேசிய நலனுக்கு முதலிடமும் தொகுதி நலனுக்கு இரண்டாவதிடமும் அளிக்கப்பட வேண்டும் நாட்டிற்காகவும் மக்களுக்காகவும் சேவை செய்வதில் தங்களை அர்ப்பணித்துக்கொள்ளவேண்டும். அரசாங்கத்தின் கொள்கைகளிலும் திட்டங்களிலும் ஈடுபாடுடையவராக இருந்து குறை நிறைகளை அவ்வப்போது சட்டமன்றத்தில் சுட்டிக் காட்ட வேண்டும். சட்டம் இயற்றுதலிலும், விவாதங்களிலும், குழு வேலைகளிலும் ஆர்வத்துடன் பங்கேற்க வேண்டும். குறைகாணும் போது அரசாங்கத்தைக் குறை கூறுவதில் தயங்கக்கூடாது. பயனுள்ள ஆலோசனைகளை அவ்வப்போது நல்க வேண்டும். அரசியலமைப்பையும் குடியாட்சியையும் பேணிக் காப்பதில் கருத்துடையவராக வேண்டும்.

ஒரு தொகுதியின் பிரதிநிதி சட்டமன்றத்தில் சொந்தக் கருத்தைப் பிரதிபலிக்க வேண்டுமா அல்லது தொகுதி மக்களின் கருத்தைப் பிரதிபலிக்க வேண்டுமா என்பதில் மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு விவாதத்தின் போதும் தொகுதி வாக்காளரின் கருத்தை அறிய இயலாது. பிரதிநிதிகள் தொகுதி நலனையும் புறக்கணிக்காமல் தேசிய நலனையும் காக்க வேண்டும்.

## முக்கிய வினாக்கள்

1. அரசியல் மக்களாட்சி வளர்ச்சியின் ஏதுக்கள் யாவை?
2. எல்லோருக்கும் வாக்குரிமைக் கொள்கைக்கு ஆதரவானதும் எதிரானதுமான வாதங்கள் யாவை?
3. பெண்கள் வாக்குரிமையின் நிறைகுறைகளைக் காண்க.
4. ஓர் உறுப்பினர் தொகுதி முறையின் நிறைகுறைகளையும் பல உறுப்பினர் தொகுதி முறையின் நிறைகுறைகளையும் ஒப்பிடுக.

5. சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் வழங்க வகுக்கப்பட்ட முறைகள் யாவை?

6. விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறைகளை விளக்கி அதன் நிறைகுறைகளை ஆய்க.

7. தொழில்வகைப் பிரதிநிதித்துவத்தின் நிறை குறைகள் யாவை?

8. குறிப்பு வரைக :

(அ) ஹேர் முறை, (ஆ) பட்டியல் முறை, (இ) வரையறுக்கப்பட்ட வாக்கு முறை, (ஈ) குவிக்கப்பட்ட வாக்கு முறை, (உ) இரண்டாம் முறை வாக்கெடுப்பு, (ஊ) மாற்று வாக்கு முறை, (எ) வகுப்புப் பிரதிநிதித்துவம்.

9. வாக்காளர்களின் தகுதிகளையும் வேட்பாளர்களின் தகுதிகளையும் கூறுக.

10. பிரதிநிதிகளின் பதவிக்காலத்தையும் கடமைகளையும் ஆய்க.

11. சரிசமப் பிரதிநிதித்துவ முறையை அதன் தத்துவம், நடைமுறை ஆகியவற்றிலிருந்து துணிக. ஆராய்க. (செ.ப.க. ஏப்ரல், 1972)

12. சட்டமன்றங்களில் சிறுபான்மையினரின் பிரதிநிதித்துவத்தின் தேவையை விளக்குக. எம்முறைகளில் அவ்வகைப் பிரதிநிதித்துவம் கிடைக்கப் பெறுகின்றது என்பதைக் கூர்ந்தாராய்க. (செ.ப.க. செப்டம்பர், 1972)

13. வயது வந்தோர் வாக்குரிமை - குறிப்பு வரைக. (செ.ப.க. செப்டம்பர், 1972)

14. ஓட்டுரிமை, மற்றும் தொகுதி ஆகிய கருத்துகளை விளக்கி, சட்டமன்றத்திற்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதில் அவற்றின் பங்கை மதிப்பிடுக. (செ.ப.க. செப்டம்பர், 1975)

## ஆ. சட்டமன்றங்கள்
## (Legislatures)

**சட்டமன்றத்தின் பணிகள் :** சட்டமியற்றும் பணி— நிதித்துறைப் பணி— செயல்துறைப்பணி— நீதித்துறைப் பணி— தேர்தல் பணி— அரசியற்புனைப் பணி— குறைகளின் வெளியீடு—திட்டப்பணிகள்— விசாரணைப்பணி — ஆட்சித்துறைப் பணி.

சட்டமன்றத்தின் அமைப்பு

**ஓரவைச் சட்டமன்றம் :** ஓரவைச் சட்ட மன்றத்தின் நிறைகள்— ஓரவைச் சட்டமன்றத்தின் குறைகள்.

**ஈரவைச் சட்டமன்றம் :** சட்டமன்றக் கீழவை அமைப்பு – சட்டமன்ற மேலவை அமைப்பு— ஈரவைச் சட்டமன்றத்தின் நிறைகள் — அதிகாரக் குவிப்புத் தடை— வேகம் தடைபடுகிறது— தாமதத்தின் நற்பயன்— சிறுபான்மையோருக்குப் பிரதிநிதித்துவம்— கலைத்துறைப் பிரதிநிதித்துவம் – தொழில்துறைப் பிரதிநிதித்துவம்— சட்டமன்றத் தொடர்ச்சி— கீழவையின் வேலைப்பளு குறைவு— சட்டமுன்படிவங்களின் நன்முறைத் திருத்தம்— கூட்டாட்சிக்கு அவசியம் – சுதந்திரம் காத்தல்— செயல்துறையின் தன்னுரிமை— ஈரவைச் சட்டமன்றத்தின் குறைகள்— மக்களவையின் மதிப்பைக் குறைத்தல்—இரண்டாம் அவை பிற்போக்கு— காலதாமதம் ஏற்படல்— அவைகளிடையே முரண்பாடு— மேலவை கீழ்ப்படுதல்— மேலவையின் அமைப்பில் ஒருமைப்பாடின்மை— கூட்டாட்சிக்கு இன்றியமையாதல்ல— ஓரவையிலும் நிதானம்— வன்முறைக்குப் பாதுகாப்பு— அதிகச் செலவு— சிறந்த இரண்டாமவையின் தன்மைகள்— அமைப்பு— பணிகள்— கீழவையோடான தொடர்பு.

**இரண்டாமவைக்குச் சில எடுத்துக் காட்டுகள் :** இங்கிலாந்தின் மேன்மக்கள் அவை — கனடாவில் மேலவை—தென்னாப்பிரிக்காவின் செனட்— அயர்லாந்து நாட்டு மேலவை — இந்தியாவின் மாநிலங்களின் அவை—ஒன்றிய அரசுகளில் மேலவை — பிரான்சின் மேலவை — இத்தாலியின் மேலவை — கூட்டாட்சியில் தேர்ந்தெடுக்கப்பட்ட மேலவை — அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேலவை—ஆஸ்திரேலியாவின் மேலவை—சுவிட்சர்லாந்தின் மேலவை—ஜெர்மானியக் குடியரசு—ரஷ்யாவின் மேலவை—யுகோஸ்லாவியா மேலவை.

**சட்டமியற்றும் முறை:** இங்கிலாந்து — அமெரிக்க ஐக்கிய நாடுகள்—இந்தியா.

**ஒப்படைக்கப்பட்ட சட்டஞ் செய்யுரிமை:** ஒப்படைக்கப்பட்ட சட்டஞ் செய்யுரிமை—உரிமை ஏன் ஒப்படைக்கப்படுகிறது — விழிப்பின் அவசியம்.

நாடு தானாக இயங்க இயலாது. நாட்டின் பணிகள் அரசால் நிறைவேற்றப்படுகின்றன. பணிகளின் அடிப்படையில் அரசு சட்டத்துறை, செயல்துறை, நீதித்துறை எனும் மூன்று அங்கங்களைப் பெற்றுள்ளது. சட்டங்களை இயற்றுவது சட்டமன்றங்களின் பணிகளாகும். இயற்றப்பட்ட சட்டங்களை செயல்முறைப்படுத்துவது நிருவாகத் துறையாகும். சட்டங்களை மீறுபவர்களைத் தண்டிப்பதும் சட்டங்களுக்கு விளக்கங்கள் அளிப்பதும் நீதி மன்றங்களாகும். சட்டத்துறை, செயல்துறை, நீதித்துறை ஆகிய முப்பெரும் துறைகளில் சட்டத்துறை முக்கியமானதாகும். செயலாட்சி செய்வதற்கும் நீதி கூறுவதற்கும் சட்டங்கள் முதன்மையானதாகும். எனவே செயல்துறையும் நீதித்துறையும் செயல்படச் சட்டத்துறை சட்டங்களை இயற்றித் தன் பணியாற்ற வேண்டும். அப்போதுதான் சட்டங்களைச் செயல்படுத்துவதும், சட்டங்களின் அடிப்படையில் நீதி பகர்வதும் இயலும். பேராசிரியர் கில்கிறைஸ்ட் (Gilchrist) கருத்துப்படி, சட்டத்துறை, செயல்துறை நீதித்துறை ஆகிய முத்துறைகளில் சட்டத்துறை மிக முக்கியமான தாகும்.[7]

சட்டத்துறையின் முக்கியத்துவம் குடியாட்சி நிலவும் தற்காலத்தில் மிகவும் அதிகரித்துள்ளன. குடியரசு தலைவர் முறை அரசாங்கத்தைவிடப் பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் சட்டமன்றங்களின் பங்கும் பணியும் மிகுதியாகும். அதே போலக் கூட்டாட்சி முறை அரசாங்கத்தைவிட ஒன்றிய ஆட்சியில் சட்டமன்றங்கள் மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ளன. மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய சட்டமன்றங்கள் மக்களின் கருத்தைப் பிரதிபலிப்பனவாக அமைந்துள்ளன. பேராசிரியர் வியர் அவர்களின் கூற்றுப்படி, சட்டமன்றங்கள் அதிகமான பணிகளைச் செய்கின்றன; நீண்டநேரம் பணியாற்றுகின்றன. பல தலைப்புகளில் ஆர்வம் கொண்டுள்ளன. சட்டமன்றங்களின் அதிகாரம் பெரிதும் அதிகரித்துள்ளது. சட்டமன்றங்களின் அதிகாரங்களையும் பணிகளையும் காணலாம்.

## சட்டமன்றத்தின் பணிகள்

சட்டமன்றத்தின் பணிகள் உலக நாடுகளிடையே ஒரே மாதிரியாக இல்லை. நாட்டிற்கு நாடு மாறுபடுகின்றன. ஒரு

[7] Gilchrist. 'The legislature forms the major premise, the judiciary, the miner and the executive, the conclusion....As the major premise in more important than miner and the conclusion, so the legislature is more important than the executive or judicial.'

நாட்டில் நிலவும் அரசாங்க அமைப்பிற்கேற்பச் சட்டமன்றத்தின் பணிகளின் அளவு அமையும். அரசியலமைப்பால் கட்டுப்படுத்தப் படாத முடியாட்சி நாடுகளில் சட்டமன்றங்கள் முக்கியத்துவம் பெறவில்லை. ரஷ்யாவின் சார் மன்னர்களின் சட்டமன்றங்கள் செயலற்றிருந்தன. இதே போல வல்லாட்சி நிலவும் நாடுகளின் சட்டமன்றங்களும் செயல்துறைக்கு அடங்கியிருந்தன. ஹிட்லர் காலத்திய ஜெர்மானியச் சட்டமன்றங்கள் ஆலோசனை அவை களாக அமைந்தன. சர்வாதிகாரத்துவம் நிலவும் சோவியத் ரஷ்யா, பொதுவுடைமை நாடான சீனு ஆகியவைகளின் சட்டத் துறை நிர்வாகத்துறைக்குக் கட்டுப்பட்டிருக்கின்றன.

பாராளுமன்ற முறை அரசாங்கம் நிலவும் நாட்களில் சட்டத் துறை முக்கியமானதாகவும், இதன் பணிகள் விரிந்தனவாகவும் இருக்கின்றன. சட்டமன்றங்கள் செயல்துறையினரைக் கட்டுப் படுத்துகின்றன. செயல்துறை பாராளுமன்றத்திற்குப் பொறுப் புடையதாகவும், பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்கு உரியதாகவும் இருக்கும் வரையே பதவி வகிக்கக்கூடியதாகவும் அமைகிறது. எடுத்துக்காட்டாக, இங்கிலாந்துப் பாராளுமன்றம் இறைமை யுடையது. சர்வ வல்லமை படைத்தது. ஓர் ஆணைப் பெண்ணுக் குவதையும், ஒரு பெண்ணை ஆணுக்குவதையும் தவிர அனைத்தை யும் செய்யும் சக்தியுடையதெனச் சொல்லப்படுகிறது. (It can do everything but make a man woman, and woman a man)

தலைவர் முறை அரசாங்கத்தில் சட்டமன்றங்கள் செயல் துறைக்கு இணையாகக் கருதப்படுகின்றன. எனவே சட்டமன்றங் களின் தகுதியில் மூன்று நிலைகளைக் காண்கிறோம். வல்லாட்சி அரசாங்கத்தில் செயல்துறைக்குத் தாழ்ந்ததாகவும், பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் செயல்துறை உயர்ந்ததாகவும்; தலைவர் முறை அரசாங்கத்தில் செயல்துறைக்கு இணையானதாகவும் சட்ட மன்றங்கள் அமைந்துள்ளன. அரசாங்க அமைப்பிற்கேற்பச் சட்ட மன்றங்களின் நிலை அமைகிறது. சட்டமன்றங்களின் நிலைக்கேற்ப அவைகளின் பணிகள் அமைகின்றன. சட்டமன்றங்களின் முக்கிய மான பணிகளைக் காண்போம்.

### சட்டமியற்றும் பணி

சட்டமியற்றல் சட்டசபைகளின் முக்கியமான பணியாகும். நாட்டின் தேவைக்கேற்பப் புதிய சட்டங்கள் இயற்றப்படுகின்றன. வளரும் சமுதாயத்திற்கேற்பப் பழைய சட்டங்கள் திருத்தப்படு கின்றன. பயனற்ற சட்டங்கள் நீக்கப்படுகின்றன. புதிய சட்டங்களை இயற்றுதல், பழைய சட்டங்களைத் திருத்துதல், நீக்கு

தல் ஆகிய அதிகாரங்கள் இதற்கு அரசியலமைப்பால் அளிக்கப் பட்டனவாகும்.

பாராளுமன்றமுறை அரசாங்கத்தில் செயல்துறை சட்ட மியற்றலில் பெரும் பங்கும் செல்வாக்கும் கொண்டுள்ளது. செயல் துறையினரே சட்டமுன்படிவங்களைத் தொகுத்து உருவாக்கிச் சட்டமன்றங்களில் சமர்ப்பித்து நிறைவேற்றுகின்றனர். தலைவர் முறை அரசாங்கத்தில் சட்டமியற்றலில் செயல்துறை மறைமுக ஆதிக்கம் செலுத்துகிறது. செய்திகள் வழி சட்டங்களுக்குப் பரிந்துரை அனுப்பப்படுகிறது.

தற்கால அரசாங்கம் பொது நலம் நாடுவதால் சட்டத்துறை யின் வேலை மிகுந்துள்ளது. கல்வி, பொதுச் சுகாதாரம், சமுதாய நலத்திட்டம், பொருளாதாரத் திட்டமிடல் ஆகிய பல துறைகளி லும் சட்டங்கள் இயற்றப்பட வேண்டியுள்ளன. சட்டமன்றங்க ளின் வேலை அதிகரித்துள்ளதால் சட்டமன்றங்கள் சட்டக் கொள்கைகளையும் சட்டத்தின் பரந்த எல்லைக் கோடுகளையும் வகுத்து, அவ்வெல்லைக் கோடுகளை நிரப்பும் அதிகாரத்தை மற்ற நிறுவனங்களுக்கு அளித்துள்ளன. இதற்கு ஒப்படைக்கப்பட்ட சட்டஞ் செய்யுரிமை (Delegated Legislation) என்று பெயர்.

சட்டமன்றங்கள் நிறைவேற்றிய முன்படிவங்கள் செயல் துறைத் தலைவரின் ஒப்புதல் பெற்றே சட்டமாகும். அமெரிக்கக் குடியரசு தலைவர் தமது மறுப்பாணை அதிகாரத்தினால் சட்ட முன்படிவத்திற்கு ஒப்புதல் மறுக்கலாம். இங்கிலாந்து அரசியா ருக்கும் இவ்வதிகாரம் இருப்பினும் வழக்காறு காரணமாக மறுப் பாணை அதிகாரத்தைப் பயன்படுத்துவதில்லை. பாராளுமன்றத் தால் நிறைவேற்றப்பட்ட சட்டமுன்படிவங்களுக்கு இந்தியக் குடி யரசு தலைவரும் தமது மறுப்பாணை அதிகாரத்தைப் பயன்படுத் தாது ஒப்புதல் அளிக்கிறார்.

சட்டமன்றங்கள் நிறைவேற்றும் சட்டங்கள் அரசியலமைப் பிற்கு முரணாக இருந்தால் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றம் அச்சட்டங்கள் அரசியலமைப்பிற்கு முரண் (Ultravire) எனக் கூறி அச்சட்டங்களைச் செல்லுபடியற்றதாக்கிவிடும். இந்திய நீதிமன்றங்களுக்கும் இவ்வதிகாரம் உண்டு. இங்கிலாந்தின் பாராளு மன்றம் நிறைவேற்றிய சட்டங்கள் அரசியலமைப்பிற்கு முரணா னவை எனக் கூறும் அதிகாரம் நீதிமன்றங்களுக்குக் கிடையாது. சுவிட்ஸர்லாந்தின் சட்டமன்றங்களால் நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் குடியொப்பத்திற்கு உட்பட்டனவாகும்.

**நிதித்துறைப் பணி**

சட்டமன்றங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள நிதித்துறைப் பணிகள் குடியாட்சிக் கோட்பாட்டைப் பிரதிபலிப்பதாக அமைந்துள்ளன. 'பிரதிநிதித்துவம் இன்றேல் வரியும் இல்லை' (No taxation without representation) என்ற கொள்கை நிதித்துறையில் சட்டமன்றங்களுக்குள்ள செல்வாக்கைக் காட்டுகிறது. செயல்துறை வரி வசூல் செய்யவும், அவற்றைச் செலவிடவும் சட்டமன்றங்களின் அனுமதி அவசியமாகிறது. அரசாங்கத்தின் ஆண்டு வரவு செலவுக் கணக்குகளைச் சட்டமன்றங்கள் ஏற்க வேண்டும். அரசாங்கத்தின் நிதி நிர்வாகம் பாராளுமன்றத்தின் அங்கீகாரத்திற்குட்பட்டதாகும். பாராளுமன்றத்தின் வரவு செலவுக்குழு, தேசியச் செலவுக் குழு ஆகியன நிதிநிர்வாகத்தைக் கண்காணிக்கின்றன.

போர்ப் பிரகடனங்கள் செய்வதற்கு முன் செயல்துறையினர் சட்டமன்றங்களின் ஒப்புதல் பெற வேண்டும். ஐந்தாண்டுத் திட்டங்கள் போன்ற பெரிய தேசியத் திட்டங்களுக்கும் பாராளுமன்றத்தின் இசைவு அவசியமாகிறது. போர் நடவடிக்கைகளுக்கும் திட்டங்களின் செயலாக்கத்திற்கும் ஏற்படக் கூடிய செலவினங்களைப் பாராளுமன்றம் அனுமதிக்க வேண்டுமென்பதே மன்றத்தின் ஒப்புதல் பெறுவதன் உட்பொருளாகும்.

**செயல்துறைப் பணி**

செயல்துறையினர் பொதுவாக ஏதாவது ஒரு நிருவாகத்திற்குப் பொறுப்பாகின்றனர். பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் செயல் துறையினர் பாராளுமன்றத்திற்கும், தலைவர்முறை அரசாங்கத்தில் செயல்துறையினர் மக்களுக்கும் பொறுப்பாகின்றனர்.

பாராளுமன்றமுறை அரசாங்கத்தில் உண்மைச் செயல்துறையினரான அமைச்சரவை பாராளுமன்றத்தின் ஒரு குழுவேயாகும். அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையவர்களாகவும், பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்கு உரியவர்களாகவும் இருக்க வேண்டும். அரசாங்கத்தின் நடவடிக்கைகளைச் சட்டமன்றங்கள் வினவலாம். பாராளுமன்றத்தின் வினாக்களுக்கு விடையளிக்க வேண்டிய கடமை செயல்துறையினருக்கு உண்டு. குறைகாணும்போது கண்டனத் தீர்மானங்களையும், ஒத்திவைப்புத் தீர்மானங்களையும், நம்பிக்கையில்லாத் தீர்மானங்களையும் கொண்டுவரலாம். நம்பிக்கையில்லாத் தீர்மானங்களும்

கண்டனத் தீர்மானங்களும் நிறைவேறினால் அமைச்சரவை பணித்துறவு கொள்ள வேண்டும்.

மேலும் செயல்துறையினரால் ஆக்கப்படும் அவசரப் பிரகடனங்களுக்குப் பாராளுமன்றம் ஒப்புதல் அளிக்க வேண்டும். அப்போதுதான் அப்பிரகடனங்கள் தொடர்ந்து சட்ட நிலையிலிருக்கும்.

தலைவர் முறைச் செயல்துறையில் சட்டமன்றத்தின் செயல் துறைப்பணிகள் பாராளுமன்ற முறைச் செயல்துறையில் சட்டமன்றங்களுக்குள்ள செயல்துறைப் பணிகளைவிடக் குறைவாகும். இருப்பினும் அமெரிக்காவின் இரண்டாவது அவையான செனட் குடியரசு தலைவர் செய்யும் நியமனங்களை அங்கீகரிக்க வேண்டும். உடன்படிக்கைகளுக்கு ஒப்புதல் அளிக்க வேண்டும். செயல்துறையினர் மீது கொண்டுவரப்படும் புகார்களைச் செனட் விசாரிக்கிறது. இதற்காகப் பதிவேட்டுச் சான்றுகளைப் பரிசீலனை செய்யலாம். சாட்சியங்களை அழைக்கலாம்; விசாரிக்கலாம். எனவே, சட்டமன்றங்களும் செயல்துறையில் பங்கு கொள்கின்றன. இப்பங்கின் அளவு அரசின் அமைப்பிற்கேற்ப மாறுபடும்.

### நீதித் துறைப் பணிகள்

சட்டமன்றங்கள் நீதித்துறைப் பணிகளையும் ஆற்றுகின்றன. இரு அவையுள்ள நாடுகளில் இரண்டாவது அவை நீதிமன்றங்களாகச் செயல் புரிகின்றன. இங்கிலாந்தின் உயர்குடியவை தலைமை நீதிமன்றமாக இருக்கிறது. இறுதி மேல் முறையீடுகளை விசாரிக்கும் அதிகாரம் பெற்றுள்ளது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் இரண்டாவது அவையான செனட் குடியரசு தலைவர் மீது சுமத்தப்படும் தேசத்துரோகக் குற்றங்களை விசாரிக்கிறது. இந்தியப் பாராளுமன்றத்திற்கும் குடியரசு தலைவர் மீதான தேசத் துரோகக் குற்றங்களை விசாரிக்கும் உரிமை உண்டு. கீழவைகள் குற்றம் சாட்டுவனவாகவும் மேலவைகள் விசாரிப்பனவாகவும் அமைகின்றன.

இந்தியப் பாராளுமன்றம் நீதித்துறை அதிகாரங்களைச் செயல்துறையினருக்கு அளிக்கலாம். மேலும் பாராளுமன்றம், மன்ற விதிமுறைகளுக்கும், நடைமுறைகளுக்கும் முரணாகச் செயல்படும் தனது அங்கத்தினர்களை விசாரித்து மன்ற நடவடிக்கைகளிலிருந்து தள்ளி வைத்துத் தண்டனை வழங்குகிறது.

**தேர்தல் பணி**

சட்டமன்றங்கள் தேர்தல் பணிகளையும் செய்கின்றன. இந்தியாவில் சட்டமன்றங்களின் உறுப்பினர்களிலிருந்து தேர்வாளர் குழு அமைக்கப்பட்டுக் குடியரசு தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசு தலைவர் தேர்தலில் எவரும் பெரும்பான்மை வாக்குகள் பெறவில்லையென்றால் மிக அதிக வாக்குகள் பெற்றுள்ள மூவரில் ஒருவரைப் பிரதிநிதிகள் சபை குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கும். குடியரசின் துணைத்தலைவர் தேர்தலில் எவரும் பெரும்பான்மை வாக்குகள் பெறவில்லையென்றால், மிக அதிக வாக்குகள் பெற்றுள்ள இருவரில் ஒருவரை செனட்சபை குடியரசின் துணைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கும். சுவிட்ஸர்லாந்தின் சட்டத்துறை பன்மைச் செயல்துறையினர் எழுவரையும் தேர்ந்தெடுக்கிறது. சட்டமன்றங்களின் இரு அவைகளின் இணைப்புக் கூட்டத்தில் பிரான்சு நாட்டின் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

மேலும், நீதிபதிகளைத் தேர்ந்தெடுப்பதிலும் அரசாங்கத்தின் உயர் அலுவலர்களைத் தேர்ந்தெடுப்பதிலும் சில நாடுகளின் சட்டமன்றங்களுக்கு உரிமையுண்டு. பாராளுமன்றங்கள் தங்கள் அலுவலர்களையும் தேர்ந்தெடுத்துக்கொள்கின்றன.

**அரசியல் புனைப் பணி**

பாராளுமன்றங்கள் சட்டமன்றங்களாகப் பணியாற்றுவதோடு அரசியல் புனை அவைகளாகவும் பணியாற்றுகின்றன. இங்கிலாந்துப் பாராளுமன்றம் சட்டமன்றமாகவும் அரசியல் நிர்ணய சபையாகவும் செயலாற்றுகிறது. அரசியலமைப்புச் சட்டத்திற்கும் சாதாரணச் சட்டத்திற்கும் வேறுபாடு இல்லாததால் சாதாரணச் சட்டத்தை இயற்றுவதைப் போல அரசியலமைப்புச் சட்டங்களையும் இயற்றுகிறது. அரசியலமைப்புத் திருத்தச் சட்டமுன்படிவம் இந்தியப் பாராளுமன்றத்தின் இரு அவைகளில் ஏதாவது ஒன்றில் தோன்றலாம். ஒவ்வோர் அவையிலும் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையோரும், மன்றத்திற்கு வந்திருந்து வாக்களிப்போரில் மூன்றில் இரு பங்கினரும் அரசியலமைப்புத் திருத்தத்திற்கு ஆதரவாக வாக்களித்தால் திருத்தச் சட்ட முன்படிவம் நிறைவேறும். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பாராளுமன்ற உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்குப் பெரும்பான்மையினர் அரசியலமைப்புத் திருத்த முன்படிவத்தை நிறைவேற்றலாம். எனவே சட்டமன்றங்கள் அரசியல் நிர்ணயசபையின் பணிகளையும் செய்கின்றன.

### குறைகளின் வெளியீடு

சட்டமன்றங்களில் அரசாங்கத்தின் எல்லை மீறிய செயல்கள், குறைகள், நிறைகள் அனைத்தும் பேசப்படுகின்றன. மக்களின் குறைகளும் பாராளுமன்றத்தில் தெரிவிக்கப்படுகின்றன. மன்றத்தின் விவாதங்கள் செய்தித் தாள்களில் பிரசுரிக்கப்பட்டுப் பொது மக்களின் கருத்து உருவாக்கப்படுகிறது. இதன் விளைவாக அரசாங்கத்தின் கொள்கைகள் மாற்றியமைக்கப்படுகிறது. குறைகளை நீக்கப் புதிய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகிறது.

சட்டமன்றங்களில் பல துறையினர் நலன்களும் பிரதிபலிக்கின்றன. நுகர்வோர், உற்பத்தியாளர், ஆலைத்தொழிலாளர், உழவர் பெருங்குடி மக்கள், ஆசிரியர்கள், பட்டதாரிகள், சிறுபான்மையினர் ஆகிய அனைவரின் பிரதிநிதிகளும் பாராளுமன்றத்தில் இருக்கின்றனர். மேலும் விண்ணப்பங்கள் மூலமும் மன்றத்திற்கு குறைகளைத் தெரிவிக்கலாம். பேராசிரியர் லாஸ்கி (Laski) யின் சட்டமன்றம் தனிச் சிறப்புடையதாகிறது.[8]

### திட்டப் பணிகள்

புதியதாகத் தோன்றிய நாடுகளிலும், பொருளாதாரத் துறையில் பிற்பட்ட நாடுகளிலும், பொருளாதார வளர்ச்சிக்காகவும், முன்னேற்றத்திற்காகவும், திட்டங்கள் தீட்டப்படுகின்றன. இத்திட்டங்களை ஏற்பதிலும், இவைகளை நடைமுறைப்படுத்துவதிலும் சட்டமன்றங்கள் பங்கு கொள்கின்றன. தொழில் நிறுவனங்களைத் தோற்றுவிக்கவும், அவைகளை நாட்டுடைமையாக்கவும் சட்டமன்றங்கள் சட்டங்களை இயற்றுகின்றன. பொதுநிறுவனங்களைக் கண்காண்பதிலும் அவைகளின் இலாப நஷ்டங்களிலும் சட்டமன்றங்கள் ஈடுபாடுடையன. அரசுடைமை ஆக்கப்பட்ட தொழில் நிறுவனங்கள், வங்கிகள் ஆகியவற்றிலும், ஆயுட் பாதுகாப்புக் கூட்டமைப்புகள் போன்றவற்றிலும் அரசு முதலீடு செய்துள்ள துறைகளிலும், அரசின் தொழில்துறைகளான இரயில்வே, தபால் தந்தித் துறையிலும், லாப நட்டங்களிலும் மன்றங்கள் கவனம் செலுத்துகின்றன. பொருளாதார நடவடிக்கைகளிலும், வங்கிச் செயல்களிலும், ஏற்றுமதி இறக்குமதி விவகாரங்களிலும் சட்டமன்றங்கள் கட்டுப்பாடுகளை விதிக்கின்றன.

### விசாரணைப் பணி

விசாரணைக் குழுக்களையும் ஆய்வுக் குழுக்களையும் சட்டமன்றங்களே நியமனம் செய்கின்றன. நாட்டின் தொழில்

[8] Laski: 'The opportunity to either complaint is one of the occasions where the legislature has special value.'

நிலையை அறியவும், உயர்கல்வி நிலையை அறியவும், பயிர்த் தொழில் நிலைபற்றித் தெரியவும், அவ்வப்போது குழுக்கள் நியமிக் கப்படுகின்றன. டாக்டர் இராதா கிருஷ்ணன் தலைமையில் பல் கலைக் கழகக் கல்வி பற்றியும், டாக்டர் லக்குமணசாமி தலைமையில் இடைநிலைக் கல்வி பற்றியும், டாக்டர் கோத்தாரி தலைமையில் அனைத்துக் கல்விநிலை பற்றியும் அறியக் குழுக்களை இந்தியப் பாராளுமன்றம் அமைந்தது.

## ஆட்சித் துறைப் பணி

ஆட்சித்துறை அலுவல்கள், பொதுத்துறை அலுவல்கள், பற்றிய சட்டதிட்டங்களையும், விதிமுறைகளையும் சட்ட மன்றங்கள் செய்கின்றன. பொதுத்துறை அலுவலின் அமைப்பை வகுத்து அலுவலர்களின் பணிகளையும், அதிகாரங்களையும், அலுவலர் களிடையே இருக்கும் தொடர்பினையும் தீர்மானிக்கிறது. அலுவ லர்களின் ஊதியங்கள், படிகள், ஓய்வுகால ஊதியங்கள் ஆகியவை களுக்கான மானியம் வழங்குகிறது. பொதுத்துறை அலுவலில் பல பதவிகளைத் தோற்றுவிப்பதிலும் சட்டமன்றங்களுக்குப் பங்குண்டு. பொதுத்துறை அலுவல் சீர்திருத்தங்களுக்கான பரிந் துரைகள் பெறக் குழுக்களை நியமிக்கிறது.

தற்காலத்தில் சட்டமன்றங்களின் பணிகள் மிகுந்துள்ளன. சட்டமன்றங்கள் பல துறைகளிலும் செயலாற்றுகின்றன. கார்னர் கருத்துப்படி, தற்காலத்தில் சட்டமியற்றுதல் மட்டும் சட்டமன்றங் களின் பணிகள் அல்ல. தேர்தல், நீதி, நிர்வாகம், ஆகிய பல விதமான பணிகளையும் சட்டமன்றங்கள் செய்கின்றன.[9]

சட்டமன்றங்கள் சிறப்புடன் அச்சமின்றிப் பணியாற்றுவதற் காக அரசியலமைப்பில் சட்டமன்ற உறுப்பினர்களுக்குப் பல பாது காப்புகள் வழங்கப்பட்டுள்ளன. சட்டமன்றத்திற்குள் பேச்சுச் சுதந்திரம் வழங்கப்பட்டுள்ளது. சட்டமன்றங்களின் நடவடிக்கை களை நீதிமன்றங்கள் வினவ முடியாது. சட்டமன்றத்தினுள் ஒரு வரைக் கைது செய்ய இயலாது. முறையற்ற நடத்தைகளுக்குத் தனது உறுப்பினரைச் சட்டமன்றங்களே தண்டிக்கலாம். மேலும் சட்டமன்ற அலுவலர்களைச் சட்டமன்றங்களே தேர்ந்தெடுத்துக் கொள்கின்றன. தங்களுக்கான விதிமுறைகளையும் சட்டமன்றங் களே வகுத்துக் கொள்கின்றன. நாட்டின் நலனுக்கான சட்ட ஆக்கத்தில் ஈடுபடுபவர்கள் தலையீடு இன்றிச் செயலாற்ற வேண்

[9] Dr. Garner: 'In most countries the legislature is not merely the law making organ but at the same time, it exercises a variety of other functions, electoral, judicial, directoral and executive.'

டும் என்பதற்காக இப்பாதுகாப்புகளும் சலுகைகளும் வழங்கப்பட்டுள்ளன.

## சட்டமன்றத்தின் அமைப்பு

அரசாங்கத்தின் முப்பெரும் நிறுவனங்களில் முக்கியமானது சட்டமன்றம் ஆகும். இது பல அடிப்படைகளில் பிரிக்கப்படுகின்றது. ஓரவையுள்ள சட்டமன்றம், ஈரவையுள்ள சட்டமன்றம் என்றும்; தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களையுடைய சட்டமன்றம், நியமன உறுப்பினர்கள் உள்ள சட்டமன்றம் என்றும்; கலைக்கப்படாத நிரந்தர அவை என்றும், கலைக்கப்படக்கூடிய அவை என்றும் சட்டமன்றம் பிரிக்கப்படுகின்றது. இப்பிரிவுகளில் எண்ணிக்கையின் அடிப்படையில் ஏற்பட்டுள்ள ஓரவைச் சட்டமன்றம், ஈரவைச் சட்டமன்றம் என்ற பிரிவு அரசியலறிஞர்களின் கருத்தைக் கவர்ந்துள்ளது. எனவே, இவற்றின் அமைப்பு, குறைநிறைகள் ஆகியன காண்பது பயனுடையதாகும்.

## ஓரவைச் சட்டமன்றம்

சட்டமன்றத்தில் ஓரவை மட்டும் இருக்குமானால் அது ஓரவைச் சட்டமன்றம் (Unicameral Legislature) எனப்படுகிறது. மக்களின் இறைமைக் கொள்கையின் அடிப்படையில் ஓரவைச் சட்டமன்றங்கள் செல்வாக்குப் பெற்றுள்ளன. இறைமை என்பது பிரிக்க முடியாத ஒன்றாகும். ஈரவைகளுக்குப் பிரித்து அளிக்கக் கூடியதன்று. மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய ஓரவையில் அரசின் இறைமை இருக்க வேண்டும். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓரவை மக்களுக்குப் பொறுப்புடையதாக இருக்கும். இங்கிலாந்தின் அரசியல் அறிஞர் ஜெர்மி பென் தாம் (Jeremy Ben tham) என்பாரும், அமெரிக்க அரசியல் வல்லுனரான பெஞ்சமின் பிராங்லின் (Benjamin Franklin) என்பாரும், பிரான்சு நாட்டின் அரசியல் ஆசிரியரான அபிசியே (Abbesieyes) என்பாரும் ஓரவையுள்ள சட்டமன்றத்தை ஆதரிக்கின்றனர். ஓரவையுள்ள மன்றமே மக்களின் எண்ணத்தையும் விருப்பத்தையும் காட்டக்கூடியதாக அமைகிறது. பிரான்சின் அறிஞரான அபிசியே பிரான்சு நாட்டின் புரட்சிக் காலத்தவர் ஆவார். இவர் அரசியலமைப்பு வல்லுனராக இருந்தார். இவர் கருத்துப்படி, 'சட்டம் என்பது மக்களின் விருப்பமாகும். ஒரு பொருள் பற்றி ஒரே நேரத்தில் மாறுபட்ட இரு வேறுபட்ட கருத்துகள் இருக்க முடியாது. எனவே மக்களின் விருப்பத்தையும் கருத்தையும்

பிரதிபலிக்கக் கூடிய சட்ட அவை ஒன்று மட்டுமே இருக்க வேண்டும்.[10]

**ஓரவைச் சட்டமன்றத்தின் நிறைகள்**

ஓரவையுள்ள சட்டமன்ற முறை மிக எளிமையான முறையாகும். ஈரவைச் சட்ட மன்றத்தில் தோன்றும் முரண்பாடுகளும் பிரச்சினைகளும் ஓரவைச் சட்ட மன்றத்தில் தடுக்கப்படுகின்றன. வாக்காளர்களின் கருத்துகளை ஒரே மன்றம் எதிரொலிக்கும். குறை நிறைகளுக்கு ஓரவை முறையில் சட்டமன்றம் எளிதில் பொறுப்பாக்கப்படுகிறது. காலதாமதங்கள் தவிர்க்கப்பட்டுச் சட்டம் இயற்றுதல் விரைவில் நடைபெறும். ஓரவை இருப்பதால் செலவு மிகவும் குறைவாக இருக்கும். சிறு அரசுகளுக்கு ஓரவை முறை மிகவும் பொருத்தமுடையது. புதிய நாடுகளுக்கும் இம்முறை ஏற்றதாக அமைகிறது.

**ஓரவைச் சட்டமன்றத்தின் குறைகள்**

ஓரவையிலிருக்கும் பெரும்பான்மைக் கட்சியினர் மிகுந்த ஆதிக்கம் செலுத்த நேரிடும். இதனால் சிறுபான்மையினரின் நலன்கள் பாதிக்கப்படலாம். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓரவைபுரட்சிகரமான மாறுதல்களை நிதானமின்றி மேற்கொள்ளும். மசோதாக்கள் நன்கு ஆராயப்படாமல் சட்டமாக்கப்படலாம்.

நியூசிலாந்து, டென்மார்க், பின்லாந்து போன்ற சில நாடுகளில் மட்டுமே ஓரவை முறை நிலவுகிறது. தற்காலத்தில் ஓரவை முறை குறைந்துகொண்டே வருகிறது. ஓரவை முறையைப் பின்பற்றிய பல நாடுகள் ஈரவை முறைக்கு மாறிவிட்டன. மெக்ஸிகோ, போர்ச்சுக்கல், நேபிஸஸ் போன்ற நாடுகள் ஓரவை முறையைக் கைவிட்டன. லெக்கியின் (Leckey) கருத்துப்படி, வல்லமையுள்ள ஓரவை அரசாங்கத்தைப் போல் சீர்கேடானது வேறொன்றுமில்லை. கட்டுப்பாடற்ற மிகுந்த அதிகாரம் உடைய வல்லாட்சியாளரைப் போல மிகவும் ஐயப்படவேண்டியதாகும். பொறுப்பற்றும் சிந்தனையற்றும் செயல்படுவதற்கான வாய்ப்புகளுண்டு.[11]

[10] Abbesieyes. 'The law is the will of the people, the people cannot at the same time have two different wills on the same subject; therefore the legislative body which represents the people ought to be essentially one.'

[11] Lecky: 'Of all forms of government that are possible among mankind, I do not know any which is likely to be worse than the government of single omnipotent democratic chamber. It is atleast susceptible as an individual despot to the temptation that grows out of the possession of an uncontrolled power, and it is likely to act with much less sense of responsibility and real deliberation.'

# ஈரவைச் சட்டமன்றம்

சட்ட மன்றத்தில் கீழவையொன்றும் மேலவை ஒன்றுமாக இரண்டு அவைகளிருந்தால் அதை ஈரவைச் சட்டமன்றம் (Bicameral Legislature) என்கிறோம். தற்காலத்தில் ஈரவைச் சட்ட மன்ற முறையே உலக நாடுகளிடையே அதிகமாகக் காணப்படு கின்றது. இங்கிலாந்தில் ஈரவை முறை நீண்டகாலமாக இருந்து வருகிறது. ஆலிவர்கிராம்வெல்லின் காப்பாளர் ஆட்சியில் ஓரவை முறை பின்பற்றப்பட்டது. ஆனால் அது கைவிடப்பட்டு ஈரவை முறை தோற்றுவிக்கப்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாடு களின் அரசியலமைப்புப் பிலடெல்பியா மாநாட்டில் வகுக்கப்படும் பொழுதே ஈரவை முறை ஏற்றுக்கொள்ளப்பட்டது. மாநிலங் களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் அளிப்பது இதன் நோக்கமாக அமைந்தது. பிரான்சின் முதல் குடியரசின் அரசியலமைப்புப்படி ஓரவைச் சட்டமன்றம் நிறுவப்பட்டது. ஆனால், அது கைவிடப் பட்டு இரண்டாம் குடியரசின் அரசியலமைப்புப்படி ஈரவைச் சட்ட மன்றம் தோற்றுவிக்கப்பட்டது. தற்காலத்தில் ஈரவைச் சட்ட மன்றங்கள் உள்ள நாடுகளே அதிகமாகும். இருப்பினும் அரசியல் வல்லுனர்களிடையே ஓரவை ஈரவை பற்றிய பிரச்சினைகளும், வாதப் பிரதிவாதங்களும், கருத்து மாறுபாடுகளும் இருந்துகொண் டிருக்கின்றன. ஈரவை முறையின் நிறைகுறைகளைக் கீழ்க் காண லாம்.

## சட்டமன்றக் கீழவை அமைப்பு

சட்டமன்றத்தின் கீழவையில் பொதுவாக வயதுவந்த வாக் காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் இருக்கின்றனர். 500 பிரதிநிதிகள் அடங்கிய கீழ்ச்சபையே அரசியல் வல்லுனர் களால் விரும்பப்படுகிறது. மிகப் பெரிய அவையாக இருப்பின் ஒரு பிரச்சினைக்குச் சுமூகமான தீர்வு காணுதல் கடினமாகும். வட்டார அடிப்படையிலும் மக்கள் தொகை அடிப்படையிலும் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஓர் உறுப்பினர் தொகுதி முறை யும் பல உறுப்பினர் தொகுதி முறையும் கையாளப்படுகின்றன. பெரும்பான்மை வாக்குகள் பெற்றவரே தேர்ந்தெடுக்கப்பட்டவ ராகக் கருதப்படுகிறார். பிரதிநிதிகளின் பதவிக்கால அளவுபற்றியும் மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. நான்கு அல்லது ஐந்து ஆண்டுக் காலம் விரும்பத்தக்கது. இரண்டாண்டு மிகக் குறுகிய தாகவும், ஆறு, ஏழு ஆண்டுக் காலங்கள் மிக அதிகமாகவும் கருதப்படுகின்றன. கீழ் அவை பற்றிய இக்கோட்பாடுகள் நாடு களிடையே வேறுபடுகின்றன.

**சட்டமன்ற மேலவை அமைப்பு**

சட்டமன்றத்தின் மேலவையாகிய இரண்டாவது அவை பரம்பரை முறை, நியமன முறை, தேர்தல் முறை, ஓரளவு தேர்தல் முறை, ஓரளவு நியமன முறை என்ற அடிப்படைகளில் அமைக்கப்படுகின்றன. சிறுபான்மையினர்கள், அறிவியல், சமூக சேவை, இலக்கியம், தொழில் வல்லுனர்கள், உற்பத்தியாளர், அரசியல் வாதிகள் ஆகிய அனைவருக்கும் பிரதிநிதித்துவம் இரண்டாம் அவையில் அளிக்கப்படுகிறது. மேலவை உறுப்பினர்களின் எண்ணிக்கை கீழவையின் எண்ணிக்கையைவிடக் குறைவாக இருக்க வேண்டும். பாதியாக இருப்பது விரும்பத்தக்கது. மேலவை உறுப்பினர்களின் பதவிக் காலம் நான்கு முதல் ஆறு ஆண்டுகளாகவும், அவை நிரந்தரமானதாகவும் இருப்பது சிறப்புடையனவாகும். இரண்டாண்டிற்கொரு முறையோ அல்லது மூன்றாண்டிற்கொருமுறையோ அவையின் மூன்றிலொரு பங்கினரோ அல்லது பாதி அளவினரோ பதவி விலகுவது நல்லது. அதிகாரங்களைப் பொறுத்தவரையில் மேலவை கீழவையினும் கீழாக இருக்கவேண்டும். மேலவை பற்றிய இக்கோட்பாடுகள் நாடுகளிடையே வேறுபடுகின்றன.

**ஈரவைச் சட்டமன்றத்தின் நிறைகள்: அதிகாரக் குவிப்புத் தடை**

சட்டமன்றத்தில் ஈரவை இருப்பதால் அதிகாரக் குவிப்புத் தடுக்கப்படுகிறது. சட்ட ஆக்க அதிகாரங்கள் அனைத்தும் ஓரவையில் இருந்தால் அதிகாரங்கள் தவறான வழியில் பயன்படுத்தப்படும். அவை ஆணவத்துடனும், வல்லாட்சிப் போக்கிலும் நடந்துகொள்ளும். ஊழல் மலிந்துவிடும். ஜான் ஸ்டூவர்டு மில் (John Stuart Mill) அவர்களின் கருத்துப்படி, ஓரவையில் சட்டமியற்றும் அதிகாரக் குவிப்பு அந்த அவையை வல்லாட்சி வழியில் கொண்டுசெல்லும். அவை தன் அதிகார வரம்பை மீறாமல் தடுக்க இரண்டாவது அவை அவசியமாகிறது.

**வேகம் தடைபடுகிறது**

இரண்டாவது அவை ஒரு தடை போலப் பணியாற்றுகிறது. வயது வந்த வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இளைஞர்களை உடைய ஓர் அவை தீவிரத்திட்டங்களை நிறைவேற்றும். அனுபவ முதிர்ச்சி அற்றதாகவும், தீவிர வாதமுடையதாகவும், அறிவுடைமையைவிட உணர்வுடைமையினதாகவும், புதுமைகளைப் புகுத்த ஆர்வம் மிக்கதாகவும் அவை விளங்கும். நிதானிக்காமலும், ஆலோசிக்காமலும், அதிவிரைவிலும் சட்டங்களை இயற்றும். இச்சட்டங்களால் தீங்குகள் தோன்றும். எனவே, அனுபவம் மிக்க

தும் பழமை வாதமுடையதும் ஆன இரண்டாம் அவையிருந்தால் முதல் அவைக்கு வேகத் தடையாக அமையும். லெக்கி (Lecky) என்பவரது கருத்தப்படி, சட்டமியற்றலில் கட்டுப்பாட்டையும், திருத்தத்தையும், தெளிவையும், தடை வழி நிதானத்தையும் இரண்டாம் அவை ஏற்படுத்தும்.[12] முதல் அவை குடி மயக்க முடைய பிலிப்பாகவும் (Philip Drunk), இரண்டாம் அவை அறிவுத் தெளிவுடைய பிலிப்பாகவும் (Philip Sober) உவமை காட்டப்படு கிறது. முதல் அவையின் அதிகார மயக்கத்தால் ஆக்கப்படும் சட்டங்கள் இரண்டாம் அவையின் அறிவுத் தெளிவாலும் அனு பவத்தாலும் சீர்படுத்தப்படுகிறது.

### தாமதத்தின் நற்பயன்

இரண்டாம் அவை இருப்பதால் சட்டமியற்றப்படுவதில் கால தாமதங்கள் ஏற்படுகின்றன. முதல் அவையில் நிறைவேற்றப் பட்ட தீர்மானங்கள் சட்டமாக்கப்படுவதற்கு அவைகள் இரண் டாம் அவையிலும் நிறைவேற்றப்பட வேண்டும். சட்டமுன் படிவம் முதல் அவையில் நிறைவேற்றப்பட்டதற்கும் இரண்டாம் அவையில் நிறைவேற்றப்படுவதற்கும் இடையில் உள்ள காலத் தில் சட்ட முன்படிவம் பற்றிய பொது மக்கள் கருத்து உருவாகும். பொது மேடைகளும் செய்தித்தாள்களும் மக்களின் கருத்தைப் பிரதிபலிக்கும். சட்ட முன்படிவத்திற்கு மக்களின் ஆதரவையும் எதிர்ப்பையும் நன்கு அறியலாம். அதற்கேற்பச் சட்டமுன்படிவம் மாற்றி அமைக்கப்படலாம். காலதாமதத்தின் காரணமாகச் சட்ட முன்படிவத்தை நிதானமாக ஆராயவும், சட்டமுன்படிவத்தின் மீது பொதுமக்கள் கருத்தை அறியவும் இயலுகிறது. முதல் அவை உறுப்பினர்கள் மக்களின் நேரடிப் பிரதிநிதிகளாக இருப்ப தால் கட்சித் தலைவர்களின் வேண்டுகோளை மறுக்க முடியாதவர் களாகவும் வேண்டுதலுக்கு உடனே இணங்கிச் செல்ல வேண்டிய வர்களாகவும் இருப்பர். முதல் அவையில் சட்ட ஆக்கப்பணிகள் நிறைந்துள்ளன. எனவே முதல் அவை நிதானமாகச் செயல்பட இயலாது. இரண்டாம் அவையில் தாமதம் ஏற்படுத்தப்பட்டு அதனால் பல நன்மைகள் விளைகின்றன.

### சிறுபான்மையோருக்குப் பிரதிநிதித்துவம்

இரண்டாம் அவையாக (Second Chamber) மேலவை யிருப்ப தால் சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் வழங்க இயலும்.

[12] Lecky: 'The Second Chamber exercises a controlling, modifing, retarding and steadying influence on legislation ... By interposing delay between the introduction and the final adoption of a measure, the Second house permits time for further reflection and deliberation.'

சிறுபான்மையினர் தேர்தலில் போட்டியிட்டு வெற்றி பெற்று முதல் அவையில் உறுப்பினராவது கடினம். குடியாட்சி நாட்டில் சிறு பான்மையோர் நலன் பாதுகாக்கப்பட வேண்டியிருப்பதாலும், அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டியிருப்ப தாலும் இரண்டாம் அவை இதற்குரிய வாய்ப்பை நல்கும்.

**கலைத்துறைப் பிரதிநிதித்துவம்**

தனித்துறைகளில் சிறப்புடையவர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு இரண்டாவது அவை வகை செய்கிறது. கலைஞர்கள் அறிவியல் வல்லுனர்கள், கல்வியாளர்கள், அரசியல் அறிஞர்கள், இராணுவத் தளபதிகள், சமூக சேவகர்கள், ஆகியவர் களுக்கு இரண்டாம் அவையில் நியமனம் மூலம் இடமளிக்கலாம். இவர்களது திறமைகளும் ஆலோசனைகளும் முன்னேற்றத்திற்கு வழிகாட்டும். பொதுவாக இவர்கள் தேர்தலில் போட்டியிடுவதை விரும்பாதவர்களாகவும், ஒதுங்கி வாழ்பவர்களாகவும் இருப் பார்கள். நியமன வழி இவர்களுக்கு இரண்டாம் அவையில் இடம் ஒதுக்க இயலும். ஜான் ஸ்வர்டுமில் அவர்களின் கூற்றுப்படி, கீழ் அவை மக்கள் அவையாக இருக்கும். மற்றது தேசத் தலைவர்களை யும், திறமைசால் அரசியல் வாதிகளையும் உடையதாகும். இவ் வவை கருவிலே திருவுடையாரைக் கொண்டிருக்கும். இவர்கள் மக்களை முன்னேற்றப் பாதையில் நடத்திச் செல்வர். இங்கிலாந் தின் இரண்டாவதுஅவையாகிய பிரபுக்கள் அவையில் விஞ்ஞானி களும், கற்றோரும், ஓய்வுபெற்ற நிருவாகிகளும், தளபதிகளும், நிய மனம் பெறுகின்றனர். கனடாவின் செனட்சபையில் திறமை மிக்க அரசியல் வாதிகள் இடம் பெறுகின்றனர். இந்தியாவின் இரண்டாம் அவையாகிய மாநிலங்களின் அவை கலை, கல்வி, விஞ்ஞானம், சமூகசேவை ஆகியவைகளின் அடிப்படையில் பன்னிருவர் நியமனம் பெறுகின்றனர்.

**தொழில் துறைப் பிரதிநிதித்துவம்**

கீழவையில் நுகர்வோரின் பிரதிநிதிகள் உள்ளனர். மேலவை யில் உற்பத்தியாளர்களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட் டுள்ளது. ஆலை முதலாளிகள், வணிகர்கள், விவசாயிகள், ஆசிரி யர்கள், பட்டதாரிகள், வழக்கறிஞர்கள் ஆகியவர்களுக்குக் கழகங்கள் உள்ளன. இக்கழகங்கள் இவர்களின் நலன்களைப் பாது காப்பனவாக அமைகின்றன இவர்களின் நலன்கள் சட்டமன் றங்களிலும் பாதுகாக்கப்பட வேண்டும். இதற்குச் சட்ட மன்றங் களில் இவர்களின் பிரதிநிதிகள் இருக்க வேண்டும். மேலவை இருப்பதால் இவர்களின் நலன் காக்கப் பிரதிநிதித்துவம் வழங்க ஏதுவாகிறது.

**சட்டமன்றத் தொடர்ச்சி**

முதல் அவை எனப்படும் கீழவை நான்கு ஆண்டுகளிலோ ஐந்து ஆண்டுகளிலோ பதவிக் காலம் முடிவுற்றுக் கலைக்கப்படும். பிறகு புதிய தேர்தல்கள் நடைபெற்றுப் புதிய கீழவை அமைக்கப் படும். மேலவை தொடர்ந்து இருக்கக் கூடியதாகும். கீழவை கலைக்கப்பட்ட காலத்தும் மேலவை பொது மக்களின் கருத்தைப் பிரதிபலிக்கும். இந்தியாவில் கீழவையாகிய லோக்சபையின் பதவிக் காலம் ஐந்து ஆண்டாகவும், மேலவையாகிய ராஜ்யசபை யின் பதவிக் காலம் ஆறு ஆண்டாகவும் அமைகிறது. அதில் ஒவ்வோர் இரண்டாண்டு இறுதியிலும் மூன்றில் ஒரு பகுதியினர் ஒய்வு பெறுகின்றனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செனட் சபையின் பதவிக் காலமும் ஆறு ஆண்டுகளாகும். ஒவ்வொரு இரண்டாண்டு இறுதியிலும் மூன்றில் ஒரு பகுதியினர் ஓய்வுபெற்று அதற்குப் பதிலாகப் புது அங்கத்தினர்கள் பதவியை அடைகின் றனர். எனவே இரண்டாவது அவை ஒரு நிரந்தர அவையாக இருந்து மக்களின் கருத்துகளைப் பிரதிபலித்துக்கொண்டிருக்கிறது.

**கீழவையின் வேலைப்பளு குறைகிறது**

தற்காலக் குடியாட்சி அரசாங்கங்கள் பொது நல அரசாங்கங் களாக அமைந்துள்ளன. ஆரம்ப காலத்தில் உள்நாட்டுப் பாது காப்பு, அயல்நாட்டு ஆக்கிரமிப்பிலிருந்து பாதுகாப்பு ஆகிய இரண்டு மட்டும் அரசாங்கத்தின் பணிகளாக இருந்தன. தற்காலத்தில் பொருளாதார நடவடிக்கைகள், சமூகச் சீர்திருத் தங்கள், பொதுச் சுகாதாரம், பொதுக் கல்வி, வாணிகக் கட்டுப் பாடு, போக்குவரத்துத் துறைகள், செய்தித்துறைகள், தொழி லாளர் நலன்கள் ஆகிய பல துறைகளையும் அரசாங்கம் கண் காணித்துச் சட்டங்கள் இயற்றுகின்றன. எனவே சட்டமன்றங் களின் பணியும் வேலைப் பளுவும் மிகுந்துள்ளன. சட்டமன்றத் தின் ஓரவை அனைத்துத் துறைகளுக்கும் சட்டஞ்செய்ய இயலு வதில்லை. கீழவையின் வேலைப்பளுவைக் குறைக்க இரண்டா மவை தேவைப்படுகிறது. சிக்கல்களும் பிரச்சினைகளும் இல்லாத மசோதாக்களை இரண்டாமவையில் தோற்றுவித்துக் கவனிக்க லாம். இது முதலவையின் வேலைப் பளுவைக் குறைக்கும்.

**சட்டமுன்படிவங்கள் நன்முறைத் திருத்தம் பெறுகின்றன**

பேராசிரியர் பேஸ்காட் கருத்துப்படி, இரண்டாம் அவை திருத்தும் அவையாகப் பணியாற்றுகிறது. கீழவையில் நிறைவேற்றப்பட்ட சட்டமுன்படிவங்கள் குறையுடையனவாக அமையலாம்: இவைகளில் சட்ட நுணுக்கங்கள் விடுபட்டிருக்க

லாம்; சட்ட வாசகங்களில் குறையேற்பட்டிருக்கலாம். இக்குறைகளுடன் முன்படிவம் நிறைவேற்றப்பட்டுச் சட்டமாக்கப்பட்டால் அரசாங்கத்திற்கு இழுக்கு ஏற்படும். நீதிமன்றங்களில் சட்ட விளக்கத்திற்கான வழக்குகள் நிறையத் தோன்றும். சட்டத்தின் நோக்கமே நிறைவேறுமல் போகலாம்; அல்லது மீண்டும் திருத்த சட்டமுன்படிவங்கள் நிறைவேற்ற வேண்டிய சூழ்நிலையும் தோன்றலாம். இரண்டாம் அவை முதலவை நிறைவேற்றிய சட்டமுன்படிவங்களை உன்னிப்பாகக் கவனிப்பதால் இக்குறைபாடுகளை நீக்க முடியும்; திருத்த முடியும். சட்ட வாசகங்களையும் சட்டக் கருத்துகளையும் சட்ட நுணுக்கங்களையும் திருத்தியமைக்க இரண்டாமவை உதவுகிறது.

### கூட்டாட்சிக்கு அவசியமாகிறது

கூட்டாட்சி அரசாங்கத்தின் கீழ் அவைக்கு மக்கள்தொகையின் அடிப்படையில் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். கூட்டரசில் பெரிய மாநிலங்களுக்கு அதிகப் பிரதிநிதிகளும், சிறிய மாநிலங்களுக்குக் குறைவான பிரதிநிதிகளும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அதிகப் பிரதிநிதிகளையுடைய பெரிய மாநிலங்கள் சிறிய மாநிலங்களின் மீது ஆதிக்கம் செலுத்தும் வாய்ப்பு ஏற்படுகிறது. எனவே, இதைத் தடுப்பதற்காக இரண்டாமவையில் மாநிலங்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் வழங்கப்படுகிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இரண்டாம் அவையான செனட்டில் ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் இரண்டு உறுப்பினர்கள் இடம் பெறுகின்றனர். சிறிய மாநிலமாயினும் பெரிய மாநிலமாயினும் வேறுபாடின்றி இரண்டு உறுப்பினர்களுக்கு இடம் அளிக்கப்படுகிறது. மாநிலங்களின் சமத்துவமும் நலன்களும் காக்கப்படுகின்றன. கீழவை தேசிய நலனைக் காப்பதாகவும், மேலவை வட்டார நலனைக் காப்பதாகவும் அமைகிறது. எனவே, ஈரவை முறை கூட்டாட்சி முறைக்கு அவசியமாகிறது.

### சுதந்திரம் காக்கப்படுகிறது

மேடிசன் (Madison) கருத்துப்படி, மனிதனை மனிதன் ஆள்வதில் இடையூறுகள் இருக்கின்றன. முதலாவது, ஆள்வோர் ஆளப்படுவோரைக் கட்டுப்படுத்த வேண்டும். அடுத்தது, ஆள்வோர் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும். இரண்டாவது அவையால் மேடிசனின் கூற்று மெய்ப்பிக்கப்படு

கிறது.[18] ஆள்வோர் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக்கொள்ள இயலுகிறது. முதல் அவையின் அதிகாரத்தைச் சமநிலைப்படுத்த இரண்டாவது அவை அவசியமாகிறது இரண்டாவது அவை இல்லாவிடில் கீழவையின் அதிகாரங்கள் கட்டுப்படுத்தப்படாது வல்லாட்சிப் போக்கில் இயங்கும். மக்களின் சுதந்திரம் பறி போகும். குடியாட்சிக் கோட்பாடு வீழ்ச்சியுறும். எனவே, இரண்டாமவை கீழவையின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தி மக்களின் சுதந்திரத்தைக் காக்கிறது.

**செயல்துறையின் தன்னுரிமை காக்கப்படுகிறது**

சட்ட மன்றங்களின் தலையீடு இன்றியும் சுதந்திரமாகவும் செயல் துறையினர் இயங்க வேண்டும். இருப்பினும் துரோகக் குற்றங்களுக்காகச் செயல்துறைத் தலைவரை நீக்கும் அதிகாரம் சட்ட மன்றங்களுக்கு வழங்கப்பட்டுள்ளது. ஓரவைச் சட்டமன்றமாக இருப்பின் தலைவர் மீது குற்றம்சாட்டுவதும் விசாரிப்பதும் ஒரே அவையாக அமைந்துவிடும். குற்றம் சாட்டுபவரும் விசாரிப்பவரும் ஒருவராக இருந்தால் நீதியின் நீர்மை குன்றிவிடும். ஈரவை முறையானால் குற்றம் சாட்டுவது ஓரவையாகவும், அதை விசாரிப்பது மறுஅவையாகவும் அமையும். அமெரிக்கக் குடியரசு தலைவர் மீது கீழவை துரோகக் குற்றம் சாட்டும் உரிமையையும், மேலவையான செனட் அக்குற்றச்சாட்டை விசாரிக்கும் உரிமையையும் உடையதாக இருக்கின்றன. இரு அவை முறையில் செயல்துறைத் தலைவர் சுதந்திரமாக இயங்கலாம். ஓரவை முறையில் செயல்துறைத் தலைவர் அவையின் கைப்பாவையாக இருக்க வேண்டும்.

ஈரவை முறைச் சட்ட மன்றத்தின் நிறைகளைக் காண்போம். இரு அவை முறைக்கு எதிரான வாதங்களையும் குறைகளையும் காண்பது அவசியமாகிறது.

**ஈரவைச் சட்டமன்றத்தின் குறைகள்: மக்களவையின் மதிப்பைக் குறைக்கிறது**

முதலவையாகிய கீழவை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளையுடைய அவையாகும் இவ்வவை மக்களின் கருத்தையும் ஆர்வத்தையும் நலனையும் பிரதிபலிப்பனவாக அமைகிறது.

[18] Madison: 'In framing a government which is to be administered by men over men the great difficulty lies in this: it must first enable the government to control the governed, and in the next place oblige it to control itself.'

எனவே, இரண்டாமவை குடியாட்சி முறையில் அவசியமற்றதாகும். குடியாட்சியில் மக்கள் ஒரு கருத்தையுடையவர்களாகவே இருப்பர். இக்கருத்தை ஒலிக்க ஓரவையே போதுமானதாகும். ஒரே நேரத்தில் ஒரே தலைப்பின் மீது இரு கருத்துகள் இரு அவைகளில் ஒலிக்கப்பட வேண்டியதில்லை. மேலும், இறைமை பிரிக்கப்பட்டு இரு அவைகளில் இருப்பது இறைமைக் கோட்பாட்டிற்கு முரணானது ஆகும். பெந்தாம் (Bentham) கூற்றுப்படி, இரண்டாமவை 'அவசியமற்றதாகும்; பயனற்றதாகும்.' (Needless, Useless and worse than useless.)

## இரண்டாம் அவை பிற்போக்கு உடையது

பொதுவாக இரண்டாமவையின் உறுப்பினர்கள் பிற்போக்கு உடையவர்களாகவும் பழமைவாதிகளாகவும் அமைகின்றனர். முன்னேற்றத் திட்டங்களுக்குத் தடை விதிப்பவர்களாக இருக்கின்றனர். மக்களவையின் திட்டங்களுக்குத் தடைகள் விதிக்கப்படும்போது வாக்காளர்களின் விருப்பம் நிறைவேற்றப்படுவதில் தடைகள் ஏற்படுகின்றன. இங்கிலாந்தின் இரண்டாம் அவையாகிய பிரபுக்களவையில்பழமைவாதிகளும் உயர்குடியினரும் நிலச்சுவான்தார்களும் செல்வந்தர்களுமே உள்ளனர். இவர்கள் தீவிரத் திட்டங்களுக்கும் முன்னேற்றச் சட்டங்களுக்கும் இடையூறாகவும் தடை விதிப்பவர்களாகவும் இருக்கின்றனர். எனவே, இரண்டாம் அவையானது வண்டியின் ஐந்தாவது சக்கரமாகப் பயனற்று விளங்குகிறது.

## கால தாமதம் ஏற்படுதல்

ஓரவை முறையில் சட்டமுன்படிவம் எளிதிலும் விரைவிலும் நிறைவேற்றப்பட்டுச் சட்டமாக்கப்படும். இரு அவை முறையில் வீணான காலதாமதம் ஏற்படுகிறது. முதல் அவையில் சட்ட முன்படிவங்கள் நன்கு ஆராயப்படுகின்றன; விவாதிக்கப்படுகின்றன. மேலும் சட்ட முன்படிவங்களை வகுப்பதும் அதற்கான திட்டங்களை உருவாக்குவதும் சட்டமன்றத்தின் சிறப்புக் குழுக்களாகும். இக்குழுக்களின் உறுப்பினர்கள் குறிப்பிட்ட துறையில் திறம் படைத்தவர்களாகவும் தொழில் நுணுக்கமுடையவர்களாகவும் இருப்பர். இவர்களே சட்டமுன்படிவங்களை நன்கு ஆய்ந்து செவ்வையாக்க முடியும்; திருத்த முடியும். எனவே சட்ட முன்படிவத்தைத் திருத்துவதற்கும் சீராக்குவதற்கும் இரண்டாமவை அவசியமில்லை. இரண்டாமவையால் வீணான கால தாமதமே ஏற்படுகிறது. மேலும், முதலவையில் சட்டமுன்படிவங்கள் கொண்டுவரப்படும் போதும் அவைகள் விவாதிக்கப்படும் போதும்

செய்தித்தாள்களிலும் அரசியல் மேடைகளிலும் சட்ட முன்படிவம் விமர்சனம் பெற்றுப் புதுக் கருத்து உருவாக்கபபடும். எனவே கால தாமதத்தை ஏற்படுத்திய பொதுக் கருத்தை உருவாக்குவதற் கோர் இரண்டாமவை தேவையற்றதாகும். மேலும் சட்டமன் றங்கள் அரசியல் கட்சிகளின் செல்வாக்கிலுள்ளன. கீழவையும் மேலவையும் ஒரே அரசியல் கட்சியைச் சார்ந்தனவாக அமைந் தால் கீழவை நிறைவேற்றிய சட்ட முன்படிவத்தை மேலவை அப்படியே நிறைவேற்றும்; விவாதிப்பதும் இல்லை; அலசிப்பார்ப் பதும் இல்லை. கீழவை ஓர் அரசியல் கட்சியைச் சார்ந்ததாகவும் மேலவை பிறிதோர் அரசியல் கட்சியைச் சார்ந்ததாகவும் இருந் தால் கீழவை நிறைவேற்றிய சட்ட முன்படிவத்தை மேலவை நிறைவேற்ருது காலதாமதத்தை ஏற்படுத்தும். இரண்டா மவைக்கு உள்ள தாமதப்படுத்தும் அதிகாரம் தவருகப் பயன் படுத்தப்படுகிறது. நாட்டின் அவசியத்திற்கும் அவசரத்திற்கும் தேவையான சட்டங்களை உடனடியாக இயற்றுவதில் தடைகள் ஏற்படுகின்றன. வாக்காளர்களின் விருப்பம் நிறைவேருமல் போகிறது.

### அவைகளிடையே முரண்பாடுகள்

கீழவை மேலவை ஆகிய இவைகளிடையே அடிக்கடி முரண் பாடுகள் தோன்றுகின்றன. இவ்வவைகளின் அமைப்பிலும், அதி காரத்திலும், பதவிக் காலத்திலும், நலன் பாதுகாப்பிலும், ஆர்வத் திலும் வேறுபாடுகள் நிலவுகின்றன. இவ்விரு அவைகளில் எது அதிகாரம் மிக்கது; எது உயர்ந்தது; எது தாழ்ந்தது என்ற வினாக்கள் தோன்றுகின்றன. ஒன்றன் விருப்பமும் ஆர்வமும் மற்றதன் விருப்பத்திற்கும் ஆர்வத்திற்கும் முரண்பட்டதாக உள் ளன. ஒன்று நிறைவேற்றிய சட்டமுன்படிவத்தை மற்றது நிறை வேற்றுவதில் தாமதம் செய்கிறது. இவ்வித முரண்பாடுகளால் சட்ட முன்படிவங்கள் விரைவில் நிறைவேறுவதில்லை. பெஞ்சமின் பிராங்ளின் (Benjamin Franklin) கூற்றுப்படி, இரு அவையுள்ள சட்டமன்றம் முன்னுல் ஒரு குதிரையும் பின்னுல் ஒரு குதிரையும் பூட்டப்பட்ட ஒரு வண்டி போல ஆகும். இவ்விரு குதிரைகளும் இரு வேறுபட்ட திசைகளில் செல்லும். இதேபோல இரு அவைச் சட்டமன்றத்தில் ஓர் அவை ஒரு கருத்துடையதாகவும், மறு அவை பிறிதோர் கருத்துடையதாகவும் செயல்பட்டுத் தீங்கை விளைவிக்கும்.

### மேலவை கீழ்ப்பட்டதாகும்

உலக நாடுகளில் பொதுவாக மேலவையின் நிலைகளும் அதிகாரங்களும் கீழவைக்குக் கீழ்ப்பட்டதாகவே உள்ளன.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேலவையான செனட்சபை கீழவையான பிரதிநிதிகள் சபையைக் காட்டிலும் அதிகாரமிக்கது. கீழவைக்குக் குறைவான அதிகாரமுடைய மேலவைகள் கீழவைகளின் சட்ட நடவடிக்கைகளில் தலையிட்டுச் சட்டம் இயற்றலில் பயனுள்ள திருத்தத்தைச் செய்ய இயலாது. பிரான்சு நாட்டின் அரசியல் அறிஞரான ஏபி (Abbe) யின் கருத்துப்படி 'கீழவையின் தீர்மானங்களை இரண்டாமவைக்கு எப்போதும் ஏற்புடையதானால் இரண்டாமவை தேவையற்றதாகும். கீழவையின் தீர்மானங்கள் இரண்டாமவைக்கு எப்போதும் மாறுபாடுடையதானால் இரண்டாமவை தீங்குடையதாகும்.'[14]

### மேலவையின் அமைப்பில் ஒருமைப்பாடின்மை

உலக அரசுகளிடையே மேலவையின் அமைப்பில் ஒருமைப்பாடின்மையைக் காணலாம். இவ்வொருமைப்பாடின்மையும் ஒரு குறையாகக் கருதப்படுகிறது. இங்கிலாந்தின் மேலவை உறுப்பினர் பதவியை உயர் குடியினர் பரம்பரையாக அடைகின்றனர். கனடா நாட்டின் மேலவை உறுப்பினர்கள் தலைமை ஆளுநரால் நியமிக்கப்படுகிறார்கள். இந்தியாவின் மேலவை உறுப்பினர்களில் ஒரு பகுதியினர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பிறிதோர் பகுதியினர் இந்தியக் குடியரசு தலைவரால் நியமிக்கப்படுகிறார்கள். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் இரண்டாம் அவையாகிய செனட்டின் உறுப்பினர்கள் ஒவ்வொரு மாநிலத்தாலும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மேலவை உறுப்பினர்களின் நியமன முறை குடியாட்சி முறைக்கு முரணானது ஆகும். மேலவை உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டால் இது கீழவைக்குப் போட்டி அவையாக அமையும்.

### கூட்டாட்சிக்கு இன்றியமையாததல்ல

கூட்டாட்சி அரசிற்கும் இரண்டாமவை இன்றியமையாதது அல்ல. இரண்டாமவை உறுப்பினர்கள் தங்கள் மாநிலத்தின் நலனைப் பிரதிபலிப்பவர்களாக அமைவதில்லை. தற்போது அரசியல் கட்சிகளின் ஆதிக்கம் மிகுந்துள்ளதால் உறுப்பினர்கள் கட்சி அடிப்படையிலேயே இயங்குகிறார்கள். கட்சியின் நலனைப் பிரதிபலிப்பவராக உள்ளனரேயொழிய வட்டார நலனைப் பிரதிபலிப்பவராக இருப்பது இல்லை. தம் கட்சியினர் கீழவையில் எத்தீர்மானம் நிறைவேற்றுகின்றனரோ அதே தீர்மானம்

[14] Abbe: 'If a second chamber is in agreement with the first, it is superfluous and if it is not in agreement with it, it is pernicious.'

மேலவையிலும் ஆதரிக்கப்படுகிறது. எனவே கூட்டாட்சியிலும் இரண்டாமவைகள் இன்றியமையாதன அல்ல.

### ஓரவையிலும் நிதான கவனம் பெறுதல்

ஓரவை முறையிலும் சட்ட முன்படிவங்கள் நிதானமாகக் கவனம் பெறுகின்றன. அவையில் சட்ட உறுப்பினரால் முன் மொழியப்படுதல், அதன் மீதான விவாதங்கள் ஆகியன செய்தித் தாள்களிலும் பொது மேடைகளிலும் விமர்சனம் பெறுகின்றன. எனவே பொதுமக்கள் கருத்தை அறியவும், அதற்கேற்பச் சட்ட முன்படிவத்தைத் திருத்தி அமைக்கவும் இயலும். கீழவையில் விவர்தத்தின் பிறகு வாக்கெடுப்பில் நிறைவேறிய சட்டமுன் படிவம் இரண்டாம் அவையில் விவாதிக்கப்படுதல் ஒருவேலையின் இருபடிகளாகும். எனவே அவசியமற்றதாகக் கருதப்படுகிறது.

### வன்முறைக்குப் பாதுகாப்பு

ஓர் அவையில் சட்டமன்றத்தின் வன்முறை தோன்றும் எனக் கூறப்பட்டதும் சரியானதல்ல. இரண்டாம் அவை மட்டும் கீழவையின் வன்முறைக்குப் பாதுகாப்பாக அமையாது. சட்ட மன்றங்களின் வன்முறைகளைத் தடுக்கப் பிற மார்க்கங்களும் உள்ளன. செயல்துறைத் தலைவருக்கு மறுப்பாணை அதிகாரமும் நீதி மன்றங்களுக்குப் புனராய்வு அதிகாரமும் கொடுக்கப்பட்டுள்ளன. செயல்துறைத் தலைவர் தனது மறுப்பாணை அதிகாரத்தால் சட்ட மன்றம் நிறைவேற்றிய தீர்மானத்திற்கு ஒப்புதல் மறுக்கலாம். சட்டங்கள் அரசியல் அமைப்பிற்கு முரணானதாக இருந்தால் நீதி மன்றங்கள் அவைகளை செல்லுபடியற்றதாக்கலாம். மேலும் குடியொப்பமுறையும், சட்டத்தைத் தொடங்கும் உரிமையும், மீட்புரிமையும் ஓர் அவையில் வல்லாட்சிப் போக்கிற்குத் தடைகளாக அமைந்துள்ளன. எனவே சட்ட மன்றங்களின் வல்லாட்சிப் போக்கைத் தடுக்க இரண்டாம் அவை அவசியமற்றதாகும்.

### அதிகச் செலவு

இரண்டாம் அவையின் காரணமாகச் சட்டமன்றங்களுக்கு செலவிடப்படும் தொகை இரட்டிப்பாகிறது. இதனால் மக்களின் மீதான வரிச்சுமை அதிகரிக்கிறது. இரண்டாமவைக்கான செலவு அவசியமற்ற செலவாக அமைகிறது.

பிரதிநிதித்துவக் குடியாட்சி முறையில் இரண்டாம் அவை ஏற்றுக்கொள்ளப்படுகிறது. உலக நாடுகளிடையே இரண்டாம் அவைக்கான ஆதரவு நிறைந்திருப்பதைக் காணலாம். முற்றிலும்

அகற்றப்படுவதைவிடக் குடியாட்சிக்கேற்ப இரண்டாமவை திருத்தியமைக்கப்படவேண்டும். சிறந்த இரண்டாமவையின் பண்புகளைக் காணலாம்.

### சிறந்த இரண்டாமவையின் தன்மைகள்

இரண்டாமவையைப் பற்றிய பிரச்சினைகள் அரசியல் வல்லுனர்களிடையே வாதத்திற்குரியனவாக உள்ளன. எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படக்கூடிய திருப்திகரமான இரண்டாம் அவையின் தன்மையைக் காட்டுவது கடினமானதாகும். இரண்டாம் அவையின் அமைப்பு, பணிகள், இரண்டாம் அவைக்கும் கீழவைக்கும் உள்ள தொடர்பு ஆகியவைகளின் அடிப்படையில் சிறந்த இரண்டாமவையின் தன்மைகளை வகுக்கலாம்.

### அமைப்பு

இரண்டாம் அவையின் அமைப்பில் பல முறைகள் காணப்படுகின்றன. பரம்பரை வழி உறுப்பினர் பதவியடைதல், நியமன முறையில் உறுப்பினராதல், தேர்தல் முறையில் உறுப்பினராதல், ஒரு பகுதி தேர்ந்தெடுக்கப்பட்டும், பிறிதோர் பகுதி நியமிக்கப்பட்டும் அவை அமைதல் ஆகிய பல முறைகளில் இரண்டாம் அவை அமைக்கப்படுகிறது.

பரம்பரை வழியாகப் பதவியடைவது குடியாட்சி முறைக்கு முரணானது ஆகும். செயல்துறைத் தலைவரால் நியமனம் பெறும் இரண்டாமவை சுதந்திரமாகச் செயலாற்ற இயலாது; தேர்ந்தெடுக்கப்படும் இரண்டாம் அவை வல்லமையுடையதாகவும் கீழவைக்குப் போட்டியாகவும் அமையும். எனவே, ஒரு பகுதியினர் தேர்ந்தெடுக்கப்பட்டும், பிறிதோர் பகுதியினர் நியமிக்கப்பட்டும் அமையக்கூடிய இரண்டாம் அவையே சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. இந்தியாவின் ராஜ்ய சபை சிறந்த அமைப்புடைய இரண்டாம் அவையாகும்.

### பணிகள்

1917-1918ஆம் ஆண்டின் பிரைஸ் மாநாடு (The Bryce Conference) சிறப்பான இரண்டாமவையின் பணிகளை வகுத்துள்ளது.

1. கீழ்சபையால் அனுப்பப்பட்ட சட்டமுன்படிவங்களைப் பரிசீலனை செய்து மாற்றியமைத்தல்.

2. முரண்பாடுகளுக்கும் பிரச்சினைகளுக்கும் இடமில்லாச் சட்டமுன்படிவங்களைத் தோற்றுவித்தல். இது கீழவையின் வேலைப்பளுவைக் குறைக்கும்,

3. சட்டமுன்படிவம் நிறைவேறுவதில் தாமதத்தை ஏற்படுத்திச் சட்டமுன்படிவத்தின் மீதான மக்களின் கருத்தை அறியச் செய்தல்.

### கீழவையுடன் தொடர்பு

மேலவை கீழவைக்குக் கீழ்ப்பட்டதாக இருக்க வேண்டும். கீழவை மக்களின் பிரதிநிதிகளையுடையது. இரண்டாமவை மக்களின் பிரதிநிதிகளுக்கு எதிராக இயங்கக் கூடாது பணச் சட்ட முன்படிவங்களில் கீழவையே செல்வாக்குடையதாக விளங்க வேண்டும். மேலவையின் தலையீடு நீக்கப்படவேண்டும். பணச் சட்டமுன்படிவங்கள் மேலவையில் தோன்றக்கூடாது. கீழவை நிறைவேற்றிய பணச் சட்டமுன்படிவங்களை மேலவை மாற்றவோ நிராகரிக்கவோ கூடாது. மேலவை ஆலோசனை கூறும் அவையாகவும், கருத்துகளைச் சுதந்திரமாகத் தெரிவிக்கும் அவையாகவும், சுயேச்சையாக விவாதிக்கும் அவையாகவும் அமைய வேண்டும்.

## இரண்டாம் அவைக்குச் சில எடுத்துக்காட்டுகள்

### இங்கிலாந்தின் மேன்மக்கள் அவை

இங்கிலாந்து ஈரவைச் சட்டமன்றத்தையுடையதாகும். கீழவை மக்களவை எனவும், இரண்டாம் அவை உயர்குடியினர் அவை (House of Lords) எனவும் வழங்கப்படுகிறது. உயர்குடியினர் அவையின் அமைப்பு, அதிகாரங்கள், பணிகள், பயன்கள் ஆகியனவற்றைக் காண்போம்.

அமைப்பு: மேன்மக்கள் அவையில் பரம்பரை உறுப்பினர்களும், நியமன உறுப்பினர்களும் உள்ளனர். ஸ்காட்லாந்திற்கும் அயர்லாந்திற்கும் அவையில் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டுள்ளது. ஆன்மீகப் பிரபுக்களும் சட்டப் பிரபுக்களும் அங்கம் வகிக்கின்றனர்.

அதிகாரங்கள்: 19ஆம் நூற்றுண்டில் உயர்குடி அவையின் உறுப்பினர்கள் அமைச்சர்களாக நியமனம் பெற்றனர். 1911 ஆம் ஆண்டின் பாராளுமன்றச்சட்டம் நிறைவேற்றப்படும்வரை மேன் மக்கள் அவை கீழவையான மக்களவைக்கு மேலான அதிகாரமுடையதாக இருந்தது. 1911ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்டமும், 1949ஆம் ஆண்டின் பாராளுமன்றத் திருத்தச்சட்டமும் மேன்மக்களின் அதிகாரத்தை மிகவும் குறைத்துள்ளன. தற்போது மிகக் குறைந்த அதிகாரமுடைய வலிவற்ற இரண்டாம் அவையாக இங்கிலாந்தின் மேன்மக்களவை அமைந்துள்ளது.

மேன்மக்கள் அவை இங்கிலாந்தின் தலைமை நீதிமன்றமாகப் பணியாற்றுகிறது. மேல்முறையீட்டு வழக்குகளை விசாரணை செய்யும்போது சட்டப் பிரபுக்கள் மட்டுமே பங்கு கொள்கின்றனர். தேசத்துரோகக் குற்றங்களையும் மேன்மக்கள் அவையினர் விசாரிக்கின்றனர். பாராளுமன்றத்தின் இரண்டாமவை என்ற முறையில் மக்கள்சபையால் நிறைவேற்றப்பட்ட சட்டமுன்படிவங்கள் மேன்மக்கள் அவையிலும் ஆய்வுசெய்யப்படுகின்றன.

குறைகள்: மேன்மக்கள் அவை பெரிதும் குறை கூறப்படுகிறது. பரம்பரை முறையில் பதவி பெறுதல் குடியாட்சி முறைக்கு முரணானது. மேலும் திறமையற்றவர்கள் பரம்பரை முறையில் உறுப்பினராவார். இவர் பிற்போக்கு வாதிகளாகவும் பழமை விரும்பிகளாகவும் அமைந்துள்ளனர். சபை நடவடிக்கைகளில் பெரும்பான்மையான பிரபுக்கள் ஆர்வத்துடன் கலந்துகொள்வதில்லை.

பயன்கள்: மக்களவையால் நிறைவேற்றப்பட்ட சட்டமுன்படிவங்களை மேன்மக்கள் அவை சுதந்திரமாக விவாதிக்கிறது. பயனுள்ள காலதாமதத்தை ஏற்படுத்திச் சட்டமுன்படிவத்தின் மீதான மக்களின் பொதுக் கருத்தைத் திரட்டுகிறது.

**கனடாவின் மேலவை**

கனடாவின் மேலவையாகிய செனட் ஒரு நியமன அவை. இதில் 102 உறுப்பினர்கள் இருக்கின்றனர். இவர்கள் வாழ்நாள் முழுவதும் பதவி வகிப்பர். 30 வயது ஆகியவராகவும், எம்மாநிலத்திற்காக நியமிக்கப்படுகிறாரோ அம்மாநிலத்தில் குடியிருப்பவராகவும், நாலாயிரம் டாலர் மதிப்புள்ள சொத்துடையவராகவும் இருக்க வேண்டும். கனடாவின் மேலவை உறுப்பினர்கள் அமைச்சரவையின் அறிவுரையின் பேரில் தலைமை ஆளுநரால் நியமிக்கப்படுகின்றனர். கட்சியில் செல்வாக்கு உடையவர்கள் மேலவை உறுப்பினர் பதவியை அடைகின்றனர்.

கனடாவின் மேலவையான செனட் செல்வாக்கற்றதாக உள்ளது. பணச் சட்ட முன்படிவங்கள் இவ்வவையில் தோன்ற முடியாது. இங்கிலாந்தின் பிரபுக்கள் அவையைவிடக் கவர்ச்சியற்றதாக உள்ளது.

**தென் ஆப்பிரிக்காவின் செனட்**

தென் ஆப்பிரிக்காவின் செனட் ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்டதாகவும், ஓரளவு நியமிக்கப்பட்டதாகவும் உள்ளது. 1961ஆம்

ஆண்டின் குடியரசு சட்டம் செனட்டின் அமைப்பையும் அலுவலையும் குறிப்பிடுகிறது.

குடியரசு தலைவர் ஒரு மாநிலத்திற்கு இருவராக நான்கு மாநிலங்களுக்கு எண்மரை நியமிப்பார். எஞ்சியுள்ள செனட் உறுப்பினர்களை மாநிலங்களின் சட்டசபையும் மாநிலச் சபையும் ஒன்றுயமர்ந்து தேர்ந்தெடுக்கும். செனட் உறுப்பினர்கள் வெள்ளையராயும், முப்பது வயதுடையவராயும், குடியரசு எல்லைக்குள் ஐந்து ஆண்டு வாழ்ந்தவராயும் இருக்கவேண்டும்.

பணச் சட்டமுன்படிவத்தைக் கொண்டுவரவோ அல்லது அதைத் திருத்தவோ செனட்டிற்கு அதிகாரமில்லை. இங்கிலாந்தின் பிரபுக்கள் அவையைப் போலச் சாதாரணச் சட்டமுன்படிவங்களை மறுப்பாணை மூலம் ஒத்தி வைக்கலாம். கீழவைக்கும் செனட் சபைக்கும் முரண்பாடுகள் தோன்றினால் தலைவர் அதைத் தீர்த்து வைப்பார்.

**அயர்லாந்து நாட்டு மேலவை**

அயர்லாந்தின் செனட் அவையும் ஓரளவு நியமிக்கப்பட்டதாகவும், ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்டதாகவும் அமைந்துள்ளது. செனட்டில் மொத்தம் அறுபது உறுப்பினர்கள் உள்ளனர். பதினொரு பேர் தலைமை அமைச்சரால் நியமிக்கப்படுகிறார்கள். ஆறு பேர் பல்கலைக் கழகங்களால் தேர்ந்தெடுக்கப்படுவர். எஞ்சியிருக்கும் நாற்பத்திமூவர் மறைமுகத் தேர்தல் வழி தேர்ந்தெடுக்கப்பட்ட பட்டியலிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

21 வயதான ஆடவரும் பெண்டிரும் செனட் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படத் தகுதியுடையவராவார். அதாவது பிரதிநிதிகளின் அவைக்குத் தேர்ந்தெடுக்கப்படக்கூடிய தகுதியுடையவர்கள் செனட் சபைக்கும் தேர்ந்தெடுக்கப்படலாம்.

அயர்லாந்தின் இரண்டாம் அவையும் அதிகாரமற்ற அவையாகும். சட்டமுன்படிவங்களை விவாதிக்கும் அதிகாரமும் ஒத்திவைக்கும் அதிகாரமுமே செனட்டிற்கு உண்டு.

**இந்தியாவின் மாநிலங்களின் அவை**

இந்தியாவின் மேலவையான ராஜ்ய சபை பெருமளவு தேர்ந்தெடுக்கப்பட்டதாகவும், ஓரளவு நியமிக்கப்பட்டதாகவும் அமைந்துள்ளது. இதில் 250 உறுப்பினர்கள் உள்ளனர். 238 உறுப்பினர்கள் மாநிலங்களின் கீழவைகளால் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்

கப்படுகின்றனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செனட்டின் அமைப்பைப் போல் மாநிலங்களுக்குச் சமத்துவம் வழங்கப்படுவதில்லை. மக்கள்தொகையின் அடிப்படையிலேயே ஒவ்வொரு மாநிலத்திற்கும் உறுப்பினர்கள் ஒதுக்கப்படுகின்றனர். மேலவையின் எஞ்சிய பன்னிரண்டு உறுப்பினர்கள் அமைச்சரவையின் பரிந்துரையின் பேரில் குடியரசு தலைவரால் நியமிக்கப்படுகின்றனர். இலக்கியம், அறிவியல், கலை, சமூகசேவை ஆகியவைகளில் தலைசிறந்தவர்களே நியமன உறுப்பினர்களாகின்றனர்.

மேலவையின் உறுப்பினர்கள் ஆறு ஆண்டுக் காலம் பதவி வகிப்பர். இரண்டாண்டுகளுக்கு ஒரு முறை மூன்றில் ஒரு பகுதி அங்கத்தினர்கள் ஓய்வு பெறுவர் இந்தியக் குடியரசின் துணைத் தலைவர் ராஜ்ய சபையின் தலைவராவார்.

இந்தியாவின் ராஜ்ய சபை அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செனட் சபையைப் போல் அதிகாரம் மிக்கதாக இல்லை. இருப்பினும் சட்டம் இயற்றுதலிலும், குடியரசின் தலைவர், துணைத்தலைவர் ஆகியவர்களைத் தேர்ந்தெடுப்பதிலும், இவர்கள் மீது தேசத் துரோகக் குற்றம் சாட்டுவதிலும், அதை விசாரிப்பதிலும், நீதிபதிகளை நீக்குவதிலும், அரசியலமைப்பைத் திருத்துவதிலும் ராஜ்ய சபை முக்கியமான பங்குகொண்டு பணியாற்றுகிறது.

**ஒன்றிய அரசுகளில் மேலவை: பிரான்சின் மேலவை**

1958ஆம் ஆண்டின் பிரான்சின் ஐந்தாவது குடியரசின் அரசியலமைப்பின்படி 307உறுப்பினர்கள் செனட்டில் உள்ளனர். இவர்களில் 255 பேர் பிரான்சு நாட்டின் டிபார்ட்மெண்டுகள் எனப்படும் மாநிலங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அறுவர் அயல் நாடுகளிலிருக்கும் பிரான்சின் குடிமக்களாலும், எஞ்சியவர்கள் பிரான்சின் குடியேற்ற நாடுகளிலிருந்தும், கடல் கடந்த பகுதிகளிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். செனட் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக மாநிலங்களில் மறைமுகத் தேர்தல்கள் நடைபெறுகின்றன.

பிரான்சின் ஐந்தாவது குடியரசு தலைவர்முறை ஆட்சியை நிறுவியுள்ளது. செனட்டின் அதிகாரம் மிகக் குறைவாகவே உள்ளது.

**இத்தாலியின் மேலவை**

இத்தாலியின் புதிய குடியரசின் அரசியலமைப்பின்படி பிரதிநிதிகள் அவை, செனட் என இரு அவைச் சட்டமன்றம் நிறுவப்

பட்டது. இரண்டாமவையாகிய செனட்டின் உறுப்பினர்கள் நிலப் பிரிவின் அடிப்படையில் ஒவ்வொரு மண்டலத்திலிருந்தும் இரண்டு லட்சம் பேருக்கு ஓர் உறுப்பினர் வீதம் தேர்ந்தெடுக்கப்படு கின்றனர். செனட் உறுப்பினர்களின் நேர்முகத் தேர்தல்களில் 25 வயதான குடிமக்கள் வாக்களிக்கலாம். குடியரசின் முன்னையத் தலைவர்களும் கலை, இலக்கியம், சமூக அறிவியல் துறைகளில் சிறப்புக்கருதிக் குடியரசு தலைவரால் நியமிக்கப்படும் ஐந்து உறுப்பி னர்களும் வாழ்நாள் முழுவதும் செனட்டின் உறுப்பினராக இருக்கலாம்.

செனட்டின் பதவிக் காலம் ஆறு ஆண்டுகளாகும். ஆனால் பதவிக் காலம் முடிவதற்கு முன்பே அவை கலைக்கப்படலாம்.

இத்தாலியின் இரண்டாமவை கீழவையாகிய பிரதிநிதிகளின் அவைக்குச் சமமான அதிகாரமுடையதாக விளங்குகிறது. அமைச்சரவையின் மீது கண்டனத் தீர்மானமும் நம்பிக்கை யில்லாத் தீர்மானமும் கொண்டுவரும் உரிமை மேலவைக்கு உண்டு. கீழவையைப் போல மேலவையிலும் சட்டமுன்படிவங்கள் கொண்டுவரப்படலாம். ஆனால் மேலவையிலோ கீழவை யிலோ சட்ட முன்படிவங்கள் கொண்டுவரப்படுமுன் ஓராணைக் குழுவின் ஆய்வுக்கு முன்படிவம் சமர்ப்பிக்கப்படவேண்டும்.

### அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேலவை

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேலவையான செனட்டிற்கு கூட்டாட்சியின் மேலவைக்கு உள்ள தன்மைகள் உள்ளன. உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக உள்ளனர். மாநிலங்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் வழங்கப்படுகிறது. அவை அமர வாழ்வு பெற்றுத் தொடர்ந்து செயல்படுகிறது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செனட் அவையில் ஒரு நூறு உறுப்பினர்கள் உள்ளனர். ஒவ்வொரு மாநிலத்திலும் இரு உறுப் பினர் தேர்ந்தெடுக்கப்படுவதனுல் மாநிலங்களுக்குச் சமப் பிரதி நிதித்துவம் அளிக்கப்படுகிறது. உறுப்பினர்கள் ஆறு ஆண்டுக் காலத்திற்குப் பதவி வகிக்கின்றனர். இரண்டாண்டுகளுக்கு ஒரு முறை மூன்றில் ஒரு பகுதி உறுப்பினர்கள் ஓய்வு பெறுகின்றனர்.

செனட்டின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு முப்பது வயதுள்ளவராகவும், தேர்ந்தெடுக்கப்படக்கூடிய மாநிலத் தில வாழ்பவராகவும், அமெரிக்க ஐக்கிய நாட்டில் ஒன்பதாண்டுக் காலம் குடிமகனுகவும் இருக்க வேண்டும்.

உலகிலுள்ள எந்த மேலவைக்கும் இல்லாத அளவு அதிகாரங்கள் அமெரிக்க செனட்டிற்கு வழங்கப்பட்டுள்ளது. சட்டத் துறையில் பிரதிநிதிகளின் அவைக்குச் சமமான அதிகாரங்கள் செனட்டிற்கு உண்டு. பணச் சட்டமுன்படிவங்களைத் திருத்தும் அதிகாரமும் நிராகரிக்கும் அதிகாரமும் இருக்கின்றன. அரசியலமைப்புத் திருத்தத்திலும் செனட் பங்கு கொள்கிறது. செயல் துறையிலும் செனட்டிற்கு அதிகாரங்கள் உண்டு. செயல் துறைத் தலைவர் செய்யும் உடன்படிக்கைகளையும் ஒப்பந்தங்களையும் செனட்டின் மூன்றில் இரு பகுதிப் பெரும்பான்மையினர் ஏற்க வேண்டும். குடியரசு தலைவரால் செய்யப்படும் முக்கிய நியமனங்களுக்குச் செனட் ஒப்புதல் அளிக்க வேண்டும். நீதித்துறை அதிகாரங்களையும் செனட் உடையதாயிருக்கிறது. குடியரசு தலைவர் மீதான தேசத்துரோகக் குற்றங்களை விசாரிக்கிறது. தேர்தல் உரிமைகளும் செனட்டிற்கு உண்டு. குடியரசின் துணைத் தலைவர் தேர்தலில் எந்த ஒரு வேட்பாளரும் பெரும்பான்மை பெறுவிடில் அதிக வாக்குகள் பெற்றுள்ள முதல் இருவரில் ஒருவரைத் துணைத் தலைவராக செனட் தேர்ந்தெடுக்கும். மேலும் செனட் பல நிலையான குழுக்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அரசாங்கத்தின் பல நடவடிக்கைகளையும் குழுவழி ஆய்வு செய்யும் அதிகாரம் உடையதாகும். செனட்டின் அயல்நாட்டுச் செய்திக்குழு மிக்க ஆதிக்கமுடையது.

செனட்டின் உறுப்பினர்கள் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவதாலும் செனட் ஒரு நிரந்தர அவையாக இருப்பதாலும், மாநிலங்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டிருப்பதாலும், கீழவைக்குச் சமமான அதிகாரமுடையதாலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் இரண்டாம் அவையான செனட்டின் செல்வாக்கு உயர்ந்துள்ளது.

## ஆஸ்திரேலியாவின் மேலவை

அமெரிக்காவின் செனட்டைப் போல ஆஸ்திரேலியாவின் செனட்டிலும் கூட்டாட்சிக் கொள்கையைக் காணலாம். மாநிலங்களுக்குச் சமப்பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டுள்ளது. ஆறு மாநிலங்களும் ஒவ்வொன்றும் பத்து உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கின்றன. செனட்டில்மொத்தம் 60 உறுப்பினர்கள் உள்ளனர்.

கீழவைக்கும் மேலவைக்கும் நேர்முகத் தேர்தல்களே நடைபெறுகின்றன. ஆனால் மேலவைத் தேர்தலில் மாநிலம் முழுவதும் ஒரு தொகுதியாகக் கருதப்பட்டு அம்மாநிலத்திற்கு எத்தனை பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமோ அத்தனை வாக்குகளை

ஒவ்வொரு வாக்காளரும் அளிப்பர். செனட் உறுப்பினர்கள் ஆறு ஆண்டுகள் பதவி வகிக்கின்றனர். மூன்றாண்டிற்கு ஒரு முறை பாதிப்பேர் உறுப்பினர் பதவியிலிருந்து ஓய்வு பெறுவர். ஆனால் அமெரிக்க செனட்டைப் போல இது ஒரு நிரந்தர அவையாக இல்லை. ஏனெனில் தலைமை ஆளுநர் இரு அவைகளையும் கலைத்து விட்டுப் புதிய அவைகளைத் தேர்ந்தெடுக்கலாம்.

சட்டமியற்றுதலில் செனட்டிற்கும் கீழ் அவைக்குச் சமமான அதிகாரம் உண்டு. ஆனால் பணச் சட்டமுன்படிவம் கீழவையில் தான் தோன்றவேண்டும். இச்சட்டமுன்படிவத்தைத் திருத்தும் அதிகாரம் இல்லை. ஆனால், தள்ளிவிடும் அதிகாரம் உண்டு. செனட் அவை மாநில நோக்குடன் அமையாமல் கட்சி அடிப் படையிலேயே செயலாற்றுகிறது.

**சுவிட்ஸர்லாந்தின் மேலவை**

சுவிட்ஸர்லாந்தின் மேலவை அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேலவைக்கும் ஆஸ்திரேலியாவின் மேலவைக்கும் ஒரு விதத் தில் ஒத்திருக்கிறது. கோட்டங்கள் எனப்படும் மாநிலங்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டுள்ளது. சுவிட்ஸர்லாந்தின் மேலவையில் 44 உறுப்பினர்கள் உள்ளனர். 19 கோட்டங்களி லிருந்து கோட்டத்திற்கு இருவராக 38 உறுப்பினர்களும் 6 அரைக் கோட்டங்களிலிருந்து 6 உறுப்பினர்களும் மேலவையில் பதவி வகிக்கின்றனர்.

மேலவை உறுப்பினர்களின் தேர்தல் முறையும் பதவிக்கால மும் கோட்டங்களிடையே மாறுபடுகின்றன. சில கோட்டங்களில் ஓராண்டிற்கும், சிலவற்றில் இரண்டு ஆண்டுகளுக்கும், சிலவற்றில் மூன்றாண்டுகளுக்கும், மேலும் சில கோட்டங்களில் நான்காண்டிற் கும் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். சில கோட்டங் களில் மேலவை உறுப்பினர்களை மக்களே தேர்ந்தெடுக்கின்றனர். சில கோட்டங்களில் சட்டமன்றங்கள் தேர்ந்தெடுக்கின்றன. சுவிட் ஸர்லாந்தின் அரசியலமைப்பின்படி செனட்டின் உறுப்பினர்களின் தேர்தல் முறையும் பதவிக்காலமும் கோட்டங்களின் விருப்பத் திற்கு விடப்பட்டுள்ளன.

இரு அவைகளும் சமத்தகுதிகள் உடையன. எந்தச் சட்ட முன்படிவமும் எந்த அவையிலும் கொண்டுவரப்படலாம். எந்த அவையில் கொண்டுவரப்பட்ட சட்ட முன்படிவமும் இரு அவைகளிலும் நிறைவேற வேண்டும். சட்ட முன்படிவங்கள் குடியொப்பத்திற்கு விடப்படுவதுண்டு. செயல்துறையினரை இரு

அவைகளும் இணைந்த கூட்டம் தேர்ந்தெடுக்கிறது. செயல்துறையினர் இரு அவைகளுக்கும் பொறுப்பானவர்கள் அல்லர்.

சுவிட்ஸர்லாந்தின் செயல்துறையில் எழுவர் உள்ளனர். இது ஒரு நூதன முறையாகும். அதே போல எந்தச் சட்ட முன்படிவமும் எந்த அவையிலும் கொண்டுவரலாம் என்பதும் ஒரு நூதன முறையேயாகும்.

**ஜெர்மானியக் குடியரசு**

முதல் உலகப் பெரும் போருக்குப் பிறகு வெய்மார் குடியாட்சி அமைக்கப்பட்டது. மாநிலங்களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்கப்படுவதற்காக ரெஷ்ராத் (Reichsrat) என்னும் மேலவை நிறுவப்பட்டது. ஆனால் ரெஷ்ராத் வலிமை அற்றதாக அமைந்திருந்தால் சட்டங்களைத் தொடங்கும் உரிமை இதற்கு அளிக்கப்படவில்லை. சட்டங்களை நிறைவேற்றுவதற்கும் மேலவையின் இணக்கம் அவசியமில்லை. ரெஷ்டாக் (Reichstag) எனப்படும் கீழவை வலிமை மிக்கதாக இருந்தது.

வெய்மார் அரசியலமைப்பு ஹிட்லரால் அழிக்கப்பட்டு ஜெர்மனியில் வல்லாட்சி தோற்றுவிக்கப்பட்டது. இரண்டாம் உலகப் பெரும் போரில் ஜெர்மனி முறியடிக்கப்பட்டதன் விளைவாக மேற்கு ஜெர்மனி, கிழக்கு ஜெர்மனி என இரண்டாகப் பிரிக்கப்பட்டது. கிழக்கு ஜெர்மனி பொதுவுடைமைக் கட்சியின் ஆதிக்கத்தில் உள்ளது. மேற்கு ஜெர்மனியில் 1949 ஆம் ஆண்டில் பான் அரசியலமைப்பின்படி குடியாட்சி நிறுவப்பட்டது. இதன் மேலவை புந்தஸ்ராத் (Bundesrat) எனப்படுகிறது. இது லேண்டர் (Lander) எனப்படும். மாநிலங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கிறது. இதன் உறுப்பினர்கள் மக்கள்தொகையின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பிரதிநிதிகளின் எண்ணிக்கை மக்கள் தொகைக்கேற்ப மாறுபடுகிறது.

மேலவையும் கீழவையும் இணைந்து குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்கின்றன. சட்டம் இயற்றலில் இதற்குரிய பங்கை ஆற்றுகிறது.

**ரஷ்யக் கூட்டாட்சியின் மேலவை**

1936ஆம் ஆண்டின் ஸ்டாலின் அரசியலமைப்புப்படி மீயுயர் சோவியத்து (Supreme Soviet) ரஷ்யாவின் பாராளுமன்றமாகும். இதில் ஐக்கியத்தின் சோவியத்து (Soviet of Union) என்றும், தேசிய இனங்களின் சோவியத்து (Soviet of Nationalities) என்

றும் இரு அவைகள் உள்ளன. தேசிய இனங்களின் சோவியத்து என்பது இரண்டாம் அவையாகும். இதன் உறுப்பினர்களைக் கூட்டாட்சிக் குடியரசுகளின் (Union of Republics) மக்கள் தேர்ந்தெடுக்கிறார்கள். இரண்டாம் அவைக்குச் சம அதிகாரம் உண்டு. ஒரு சட்டமுன்படிவம் நிறைவேற வேண்டுமானால் இரு அவைகளிலும் நிறைவேற்றப்பட வேண்டும். அவைகளிடையே முரண்பாடு தோன்றுமாயின் முரண்பாடுகளைத் தீர்ப்பதற்காக ஒரு குழு நிறுவப்படும். அதுவும் முரண்பாடுகளை தீர்க்கவில்லையெனில் பாராளுமன்றம் கலைக்கப்பட்டுப் புதிய தேர்தல்கள் நடைபெறும்.

**யுகோஸ்லாவியக் கூட்டாட்சியின் மேலவை**

யூகோஸ்லாவியாவின் பாராளுமன்றம் குடியரசின் மக்கள் அவை (Peoples Assembly of Republics) எனப்படும். இதில் கூட்டாட்சி அவை என்றும், தேசிய இனங்களின் அவையென்றும் இரு அவைகள் உண்டு. தேசிய இனங்களின் அவை மேலவையாகும். இதன் உறுப்பினர்கள் மக்களால் நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

பாராளுமன்றத்தின் இரு அவைகளும் தனித்தனியே அமரும். செயல்துறையைத் தேர்ந்தெடுக்கும் போதும், அரசியலமைப்பைத் திருத்தும்போதும், இரு அவைகளும் ஒன்றாக அமரும். அப்பொழுது பிரச்சினைகள் பெரும்பான்மை வாக்குகளால் தீர்மானிக்கப்படும். இரு அவைகளுக்கும் சமமான அதிகாரங்கள் உண்டு. ஏதாவது ஓர் அவையில் மசோதாக் கொண்டுவரப்பட்டு நிறைவேற்றப்படலாம். அது மறு அவையிலும் நிறைவேற்றப்பட வேண்டும். இவ்விரு அவைகளிடையே முரண்பாடுகள் தோன்றினால் இவைகளைத் தீர்ப்பதற்காக இணக்கக்குழு அமைக்கப்படும். இக்குழுவில் இரு அவைகளிலிருந்தும் சம எண்ணிக்கையுள்ள உறுப்பினர்கள் இருப்பர். இக்குழுவும் இரு அவைகளிடையே இணக்கத்தை ஏற்படுத்தவில்லையென்றால் இரு அவைகளும் கலைக்கப்பட்டுப் புதிய தேர்தல்கள் நடைபெறும்.

## சட்டமியற்றும் முறை

**இங்கிலாந்து**

பாராளுமன்றத்தில் கொண்டுவரப்படும் மசோதாக்கள் பொது மசோதாக்கள் (Public Bills) என்றும் தனிப்பட்ட மசோதாக்கள் (Private Bills) என்றும் வகைப்படுத்தலாம். நாடு முழுவதையும் சார்ந்த மசோதாக்கள் பொது மசோதாக்கள் ஆகும். பொது

மசோதாக்களை அமைச்சர்கள் கொண்டுவரும்போது தனி உறுப்பி னர் மசோதா என்றும் பெயர் பெறும். அரசாங்க மசோதா பண மசோதாவாகவோ, சாதாரண மசோதாவாகவோ இருக்கலாம். குறிப்பிட்ட இடத்தையோ, இனத்தையோ, நபரையோ சார்ந்த மசோதாக்கள் தனிப்பட்ட மசோதாக்கள் எனப்படும்.

சாதாரண மசோதாக்கள் பொதுமக்களவையிலோ, பிரபுக்கள் அவையிலோ தோன்றலாம். பண மசோதாக்கள் பொதுமக்கள் அவையில்தான் கொண்டுவரப்படவேண்டும். பொதுமக்கள் அவைத் தலைவரின் அனுமதியின் பேரில் மசோதா சமர்ப்பிக்கப் பட்டவுடன் முதல் வாசிப்பு நடைபெறும். மீண்டும் ஒரு குறிப் பிட்ட நாளில் மசோதா இரண்டாவது முறையும் வாசிக்கப்படும். இந்நிலையில் மசோதாவின் பொதுக் கருத்துகள் விவாதிக்கப் படும். பிறகு விரிவான பரிசீலனைக்கு மசோதா குழுவிற்கு அனுப் பப்படும். மசோதாவைக் குழு ஆய்ந்து விதிகளைக் கூட்டலாம்; குறைக்கலாம். அல்லது திருத்தலாம். அக்குழு மசோதா பற்றிய தனது அறிக்கையைப் பாராளுமன்றத்திற்குச் சமர்ப்பிக்கும். குழு வின் அறிக்கையோடு மசோதா விரிவாக விவாதிக்கப்படும். அதன் பின் மசோதா மூன்ருவது முறையாக வாசிக்கப்பட்டு வாக்கெடுப் பிற்கு விடப்படும். வாக்கெடுப்பில் நிறைவேறிய மசோதா பிரபுக்கள் சபைக்கு அனுப்பப்படும். இந்தச் சபையிலும் மசோதா மும்முறை வாசிக்கப்பட்டு நிறைவேறுமானல் அரசி யாரின் இசைவுக்கு அனுப்பப்படும். அவரது இசைவு பெற்ற மசோதா சட்டமாகும்.

அரசாங்க மசோதாக்கள் அமைச்சரவையின் செல்வாக்கினு லும், பாராளுமன்றத்தில் பெரும்பான்மையினர் ஆதரவு இருப்ப தாலும் எளிதில் நிறைவேறும். பாராளுமன்றத்தில் அரசாங்க மசோதாக்கள் தோல்வியுறுமானல் அமைச்சரவை மீது நம்பிக்கை யில்லை என்பது புலனாகும். எனவே அமைச்சரவை பதவித்துறவு கொள்ளவேண்டும்.

பண மசோதாக்களை ஒரு மாதத்திற்கும், சாதாரண மசோ தாக்களை ஓர் ஆண்டிற்கும் பிரபுக்கள் சபை ஒத்தி வைக்கலாம். அதன்பின் அரசியாரின் ஒப்புதலின் பேரில் மசோதா சட்டமாகும். அரசியாரின் இசைவு பொதுவாக மறுக்கப்படுவதில்லை.

### அமெரிக்க ஐக்கிய நாடுகள்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சட்டமன்றமான காங்கிரசின் ஏதாவது ஓர் அவையின் உறுப்பினர் மசோதாவைத் துவக்கலாம்.

முதல் நிலையாக மசோதா பதியப்பட்டு முதல் வாசிப்பு நிகழும். முதல் வாசிப்பின்போது மசோதாவின் மீதான விவாதம் நடைபெறுவதில்லை. இரண்டாவது நிலையாக மசோதா அதற்குரிய குழுவிற்கு அனுப்பப்படும். குழுவில் மசோதா ஆராயப்பட்டுத் திருத்தப்படலாம்; மாற்றப்படலாம் அல்லது ஒதுக்கி வைக்கப் படலாம். மூன்ருவது நிலையாக மசோதாவின் இரண்டாவது வாசிப்பு நிகழும். அப்போது விவாதங்கள் நடைபெற்றுத் திருத் தங்கள் முன்மொழியப்படலாம். விவாதத்தின் பின் மசோதா வாக்கெடுப்பிற்கு விடப்படும். நான்காவது நிலையாக மசோதாவின் மூன்ருவது வாசிப்பு நிகழும். இது ஒரு ஒழுங்கு முறையாகக் கருதப்பட்டு மசோதாவின் தலைப்பு மட்டும் வாசிக்கப்படும். சபைத் தலைவரின் ஒப்பத்துடன் மசோதா செனட்டிற்கு அனுப்பப் படும். செனட்டிலும் இந்த நடவடிக்கைகளைக் கடந்து மசோதா நிறைவேறினால் குடியரசு தலைவரின் கையொப்பத்திற்கு அனுப் பப்படும். அவரது ஒப்பம் பெற்றதும் மசோதா சட்டமாகும்.

செனட் மசோதாவைத் தள்ளுபடி செய்யலாம் அல்லது திருத்தங்களுடன் பிரதிநிதிகள் அவைக்கு அனுப்பலாம். பிரதி நிதிகள் அவை திருத்தத்தை ஏற்ருல் மசோதா குடியரசு தலைவரின் ஒப்புதலுக்கு அனுப்பப்படும்.

### இந்தியா

இங்கிலாந்தின் சட்டம் இயற்றும் முறை இந்தியாவிலும் பின் பற்றப்படுகிறது. முதல் வாசிப்பின் போது மசோதாவைச் சமர்ப் பித்தவர் அம்மசோதா பற்றிய முக்கிய இயல்புகளைக் கூறுவார். எதிர்ப்பவர்களும் தங்கள் கருத்தைக் கூறலாம். மசோதாவின் இரண்டாம் வாசிப்பின் போது அதன் அடிப்படைக் கொள்கைகள் விவாதிக்கப்படும். அதன்பின் பொதுமக்களிடையே அறிக்கை யிடவோ உடனே விவாதிக்கவோ, தக்க குழுவிற்கு அனுப்பவோ முடிவு செய்யப்படும். பொதுவாகக் குழுக்களுக்கே அனுப்பப் படும். குழு தனது பரிந்துரைகளோடு மசோதாவை அவைக்குச் சமர்ப்பிக்கும். அவையில் மசோதாவின் விவரங்கள் விவாதிக்கப் பட்டு வாக்கெடுப்பிற்கு விடப்படும். அதன்பின் மூன்ரும் வாசிப்பு நிகழும். ராஜ்ய சபையிலும் மசோதா இந்நிலைகளைத் தாண்டி நிறைவேற்றப்பட்டவுடன் குடியரசு தலைவரின் இசை விற்கு மசோதா அனுப்பப்படும். அவர் ஒப்புதல் பெற்றவுடன் மசோதா சட்டமாகும்.

## ஒப்படைக்கப்பட்ட சட்டஞ் செய்யுரிமை

### ஒப்படைக்கப்பட்ட சட்டஞ் செய்யுரிமை

சட்டஞ் செய்யும் உரிமை சட்டமன்றங்களைச் சார்ந்ததாகும். ஆனால், சட்டங்கள் அனைத்தையும், விதிகளையும் விதிமுறைகள் முழுவதையும் சட்டமன்றங்களே தனித்து ஆக்குவதில்லை; தனித்து ஆக்க இயலுவதில்லை. எனவே, தனக்கு உள்ள சட்டஞ் செய் உரிமையை செயல்துறையினருக்கும் இதர நிறுவனங்களுக்கும் சட்டமன்றம் தந்துள்ளதை முன்பே கண்டோம். சட்ட மன்றம் அளித்துள்ள இந்த உரிமைக்கு ஒப்படைக்கப்பட்ட சட்டஞ் செய்யுரிமை (Delegated Legislation) என்று பெயர்.

### உரிமை ஏன் ஒப்படைக்கப்படுகிறது?

சட்டமன்றங்கள் ஏன் தங்கள் சட்டஞ் செய்யுரிமையை இதர நிறுவனங்களுக்கு விட்டுக்கொடுத்தன என்பதைக் காண வேண்டும். தற்கால அரசு பொது நல அரசாகும். சமுதாய வாழ்வில் பல துறைகளை நெறிமுறைப்படுத்தச் சட்டங்கள் இயற்றப் படவேண்டியுள்ளன. தொழில், தொழிற்சாலைகள், விவசாயம், கல்வி, பொதுச் சுகாதாரம், எளியோர் துயர்துடைப்பு, போக்கு வரத்து, வரிவிதிப்பு, வாணிபம், ஆகிய அனைத்துத் துறைகளும் அரசாங்கத்தின் கண்காணிப்பில் உள்ளன. இவைகள் அனைத்தையும் ஒழுங்குபடுத்தச் சட்டங்கள் அவசியமாகின்றன. எனவே சட்ட மன்றங்களின் வேலைப் பளு தற்காலத்தில் மிகுந்துள்ளது. மேலும் கல்வித் துறை, மருத்துவத் துறை, பொறியியல் துறை போன்ற துறைகளுக்குச் சட்டம் இயற்றுவதில் தொழில் நுணுக்கமும் துறைகள் பற்றிய விரிந்த அறிவும் அவசியமாகின்றன. இத்துறைகளின் சிக்கல் மிக்க தொழில் நுணுக்கங்களைச் சட்டமன்ற உறுப்பினர்கள் அனைவரும் அறிந்திருப்பது இயலாதனவாகும். மேலும் எல்லாத் துறைகளிலும் சட்டமன்றத்தின் சட்டங்களைச் செயல் படுத்த இயலாது. ஆங்காங்கே நெகிழ்வும் தன்யுக்தி (Discretion) முடிவும் பயனபடுத்த வேண்டியுள்ளன. சட்டங்கள் செயல்படா நிலையில் அடிக்கடி நடைமுறைக்கேற்பத் திருத்தியமைக்கப்பட வேண்டியுள்ளன. அடிக்கடி சட்ட மன்றங்களை அணுகி விதிகளைத் திருத்துவது இயலாததாகும்.

எனவே, சட்டமன்றங்கள் விரிந்த எல்லைக் கோடுகளைச் சட்டங்களாக இயற்றுகின்றன. பரந்த எல்லைக்கோடுகளை விதிகளாலும் விதிமுறைகளாலும் நிரப்பும் உரிமையைச் சட்டமன்றங்கள் மற்ற நிறுவனங்களுக்கு அளித்துள்ளன. ஒப்படைக்கப்பட்ட சட்டஞ்செய்யுரிமையைச் செயல்துறையினர் மிகுதியாகப் பயன்படுத்து

கின்றனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செயல்துறைத் தலைவர் ரூஸ்வெல்ட் தமது பதவிக் காலத்தில் 3711 விதிகளை வகுத்து ஆணைகள் பிறப்பித்துள்ளார். இவ்வொப்படைக்கப்பட்ட சட்டஞ் செய்யுரிமை தற்காலத்தில் தவிர்க்க இயலாததொன்றாகிவிட்டது.

## விழிப்பின் அவசியம்

பேராசிரியர் லாஸ்கியின் (Laski) கருத்துப்படி, சட்டஞ் செய் உரிமையைப் பாராளுமன்றம் மற்ற நிறுவனங்களுக்கு அளித்தாலும் இந்நிறுவனங்களைக் கண்காணிக்க வேண்டும். அடிப்படைக் கொள்கைகளைச் சட்டமன்றங்களே வகுக்க வேண்டும். சட்டஞ் செய்யுரிமை சட்டமன்றங்களால் மீட்கப்படக் கூடியதாக இருக்க வேண்டும். செயல்துறைக்கு அளிக்கப்பட்டிருக்கும் இவ்வுரிமை வரையறுக்கப்படவேண்டும். தற்காலத்தில் சட்டஞ் செய்யுரிமை தவிர்க்க இயலாதது. ஆனால், பாராளுமன்றம் இவ்வுரிமை செயல்படுதலை எப்பொழுதும் எல்லா நிலையிலும் விழிப்புடன் நோக்கவேண்டும்.

பொதுநல அரசு கொள்கையைப் பின்பற்றுவதாலும், கட்சி முறையின் காரணமாகச் செயல்துறையின் அதிகாரம் அதிகரித்துள்ளதாலும், ஒப்படைக்கப்பட்ட சட்டஞ் செய்யுரிமையாலும் பாராளுமன்றத்தின் செல்வாக்குக் குறைந்துள்ளது. செயல்துறையின் செல்வாக்கு ஓங்கியுள்ளது.

## முக்கிய வினாக்கள்

1. தற்கால அரசாங்கங்களில் சட்ட மன்றங்களின் பணிகள் யாவை?
2. ஓரவைச் சட்ட மன்றத்தின் அமைப்பையும் நிறைகுறைகளையும் கூறுக.
3. ஈரவைச் சட்டமன்றத்தின் அமைப்பையும் நிறைகுறைகளையும் காண்க.
4. இரண்டாமவையின் அவசியத்தை ஆய்க.
5. கீழ்க்காணும் நாடுகளிலுள்ள இரண்டாம் அவையினை விவரிக்கவும்.

(அ) இங்கிலாந்தின் மரபுவழி மேன்மக்கள் அவை.

(ஆ) கனடாவின் நியமிக்கப்பட்ட மேலவை.
(இ) ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்ட மேலவை.

(i) தென்னுப்பிரிக்காவின் செனட்.
(ii) அயர்லாந்தின் செனட்.
(iii) இந்தியாவின் ராஜ்ய சபை.

(ஈ) ஒன்றிய அரசுகளில் மேலவை.

(i) பிரான்சின் மேலவை.
(ii) இத்தாலியின் மேலவை.

(உ) கூட்டாட்சியில் தேர்ந்தெடுக்கப்பட்ட மேலவை.

(i) அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேலவை.
(ii) ஆஸ்திரேலியாவின் மேலவை.
(iii) சுவிட்ஸர்லாந்தின் மேலவை.
(iv) ஜெர்மானியக் குடியரசின் மேலவை.
(v) ரஷ்யக் கூட்டாட்சியின் மேலவை.
(vi) யூகோஸ்லாவியா கூட்டாட்சி மேலவை.

6. கீழ்க்காணும் நாடுகளின் சட்டமியற்றும் முறையைக் கூறுக.

(அ) இங்கிலாந்து
(ஆ) அமெரிக்க ஐக்கிய நாடுகள்
(இ) இந்தியா

7. ஒப்படைக்கப்பட்ட சட்டஞ்செய்யுரிமை என்றால் என்ன? ஏன் சட்டஞ்செய்யுரிமை ஒப்படைக்கப்பட்டுள்ளது?

8. ஈரவைச் சட்டமன்றத்தின் தேவையையும் தேவையின்மையையும் பற்றி வாதிடுக. (செ.ப.க. ஏப்ரல், 1972)

9. அமெரிக்க செனட் மன்றத்தின் கூட்டமைவு, கடமைகள், அதிகாரம் ஆகியவற்றை இங்கிலாந்தின் பிரபுக்கள் சபையோடு ஒப்பிடுக. (செ.ப.க. ஏப்ரல், 1973)

10. ஒற்றை மன்றச் சட்டசபை முறை-குறிப்பெழுதுக. (செ. ப.க. ஏப்ரல், 1973)

11. பாராளுமன்ற முறைகளில் கீழ்ச் சட்டமன்றங்களின் அதிகாரங்களும் கடமைகளும் யாவை? அவை செயல்துறை மீது எவ்வளவு கட்டுப்பாட்டைச் செயல்படுத்துகின்றன? (செ.ப.க. செப்டம்பர், 1973)

12. தற்கால அரசுகளில் மேல்சபைகள் தொடர்ந்து நீடிப்ப தற்கு ஆதரவாகவும் எதிராகவும் கூறப்படும் வாதங்களைக் கூறுக. (செ.ப.க. செப்டம்பர், 1975)

## இ. நேர்முக மக்களாட்சியும் அதன் தடைகளும்
## (Direct Democracy And its Checks)

### நேர்முக மக்களாட்சித் தடைகளின் அவசியம்

**நேர்முக மக்களாட்சித் தடைகள் :** குடியெப்பம்— குடியொப்பத்தின் நிறைகள்— மக்களின் கருத்தை அறிய லாம்— மக்களின் மறுப்பாணை அதிகாரம்— நாட்டுப்பற்று வளர்கிறது— பொதுமக்களின் அரசியல் அறிவு— மக்க ளுடன் தொடர்பு— முரண்பாடுகள் அகற்றப் படு கின்றன— மக்களின் இறைமைக்கு மதிப்பு— புரட்சிகரச் சட்டங்கள் தவிர்ப்பு— சிறுபான்மையினர் நலன்— குடி யொப்பத்தின் குறைகள்— சட்டமன்ற மதிப்புக் குறை கிறது— பாமரர் சட்ட நுணுக்கம் அறியார்— திருத்தங் களைத் தெரிவிக்க இயலுவதில்லை— காலதாமதம்— தேர்தல் சலிப்பு— பொதுக் கருத்தாவதில்லை— பிளவு தோன்றல்— பழமை விரும்பிய மக்கள்— பெரும்பான்மை யின் அளவு— பெரிய நாடுகளுக்கு ஏற்றதல்ல.

தொடக்கவுரிமை: தொடக்கவுரிமையின் நிறைகள்— தொடக்கவுரிமையின் குறைகள் — மக்கள் வாக் கெடுப்பு— மக்கள் வாக்கெடுப்பின் நிறைகுறைகள்— மீட் புரிமை— மீட்புரிமையின் நிறைகளும் குறைகளும்.

**நேர்முக மக்களாட்சி நாடுகள் :** நெப்போலியன் கால பிரான்சு— ஹிட்லர் கால ஜெர்மனி - சுவிட்ஸர் லாந்து— அரசியலமைப்புத் திருத்தத்திற்குக் குடி யொப்பம்— சாதாரணச் சட்டங்களுக்குக் குடியொப்பம்— கோட்டங்களில் குடியொப்பம்— அரசியலமைப்பை மாற்றத் தொடக்க உரிமை— புதிய சட்டம் இயற்றத் தொடக்க உரிமை—கோட்டங்களின் தொடக்க உரிமை— மீட்புரிமை—ஆஸ்திரேலியா—இத்தாலி— அயர்லாந்து— அமெரிக்க ஐக்கிய நாடுகள்— நேரடிக் குடியாட்சியின் வெற்றி.

குடிமக்களின் இறைமை அதிகாரம் மதிக்கப்படும் ஆட்சியே மக்களாட்சி அல்லது குடியாட்சி எனப்படும். இவ்விடத்து குடிமக்கள் என்பாரின் இலக்கணம் அறிதல் அவசியம். அரிஸ்ட்டாட்டில் (Aristotle) காலத்திலிருந்து ஆபிரஹாம் லிங்கன் (Abraham Lincoln)காலம் வரை குடிமகனுக்குரிய இலக்கணம் மாறுபட்டுள்ளது எனப் பேராசிரியர் பிரைஸ் (Bryce) கூறுகிறார்.[15] கிரேக்க நாட்டில் அடிமைகள் குடிமக்களாகக் கருதப்படவில்லை என்பதை அறிவோம். தற்காலத்தில் ஒவ்வொரு நாடும் தனது குடிமகனுக்குள்ள தகுதிகளை வரையறுத்துக்கொண்டுள்ளது. தகுதியுடைய குடிமக்களில் பெரும்பான்மையினரால் நடத்தப்படும் ஆட்சியே குடியாட்சியாகும்.

ஆபிரஹாம் லிங்கனின் குடியாட்சிக்கான இலக்கணம்: 'மக்களால் மக்களுக்காக நடத்தப்படும் மக்கள் அரசு.'[16]

ஜேம்ஸ் பிரைஸின் குடியாட்சி இலக்கணம்: 'குடியாட்சி என்பது தகுதியுடைய பெரும்பான்மைக் குடிமக்களின் ஆட்சியாகும்.'[17]

குடியாட்சியை நேரடிக் குடியாட்சி (Direct Democracy) என்றும், பிரதிநிதித்துவக் குடியாட்சி (Representative Democracy) என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். ஆட்சி நிலமும் மக்கள் தொகையும் மிகுந்துள்ள தற்காலக் குடியாட்சி நாடுகளில் பிரதிநிதித்துவ மக்களாட்சியே நடைபெறுகிறது. மக்களின் பிரதிநிதிகளே மக்களுக்காகச் சட்டம் செய்கின்றனர். ஆட்சி நடத்துகின்றனர். மக்கள் நேரடியாகச் சட்டம் இயற்றலிலும், ஆட்சி நடத்தலிலும் பங்கு கொள்ள இயலுவதில்லை. இருப்பினும் இறைமை அதிகாரம் மக்களிடமே அமைந்துள்ளது.

பழங்கால கிரேக்க ரோமானிய நகர நாடுகள் ஆட்சி நிலத்திலும் மக்கள் தொகையிலும் சிறியனவாக இருந்தன. இங்குச் சட்டம் இயற்றலில் மக்கள் நேரடியாகப் பங்கு கொண்டனர். எக்ளிசியா (Ecclesia) எனப்பட்ட ஏதென்ஸ் சட்டசபையிலும், காமிட்டியா (Commitia) எனப்பட்ட ரோம் சட்டசபையிலும் குடிமக்கள் அனைவரும் கூடிச் சட்டம் இயற்றினர். தற்காலத்தில் சுவிஸ்சர்

[15] Bryce: 'The people has been a varying term and it has not come to mean something vastly different from what it meant to Aristotle or even to Lincoln.

[16] Abraham Lincoln: 'It is the government of the people, by the people and for the people.'

[17] James Bryce: 'Democracy is a government in which the will of the majority of qualified citizens rules.'

லாந்தில் லேண்ஸ் ஜெமிண்டி (Lands gemeinde) எனப்படும் கேன்டான் சட்டசபையில் மக்கள் நேரடியாகச் சட்டம் இயற்ற லில் பங்கு கொள்கின்றனர். கேன்டான் (Canton) எனப்படும் மாநிலங்களின் மக்கள் ஏப்ரல் மே மாதங்களில் ஓரிடத்தில் கூடி அரசாங்க நடவடிக்கைகளைத் திட்டமிடுகின்றனர்; சட்டங்களை இயற்றுகின்றனர்; வரிவிதிக்கின்றனர்; அரசாங்க அலுவலர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர். குடிமக்கள் சட்டம் இயற்றலிலும், ஆட்சியிலும் நேரடியாகப் பங்கு கொள்ளும் குடியாட்சி முறை நேரடிக் குடியாட்சி (Direct Democracy) என்றும், முழுக்குடியாட்சி (Pure Democracy) என்றும் கூறப்படுகிறது. இந்நேரடிக் குடியாட்சி சுவிஸ்சர்லாந்து போன்ற சிறிய நாடுகளில் மட்டுமே நடைமுறைப் படுத்த இயலுகிறது.

நேர்முகச் சட்டமியற்றல் (Direct Legislation), நேர்முகக் குடியாட்சி வழிகள் (Direct Democratic Devices), நேர்முக மக்கள் தடைகள் (Direct popular checks) நேர்முக மக்களாட்சித் தடைகள் (Direct Democratic checks)என்ற சொற்றொடர்கள் நேர்முக மக்களாட்சிக்குரிய வகைகளையும் வழிகளையும் கூறுவன வாக அமைகின்றன. சட்டம் இயற்றும் முறையில் மக்களின் இறைமைக்கு மதிப்பளித்து மக்களுக்குப் பங்கு அளிக்கிறது.

**நேர்முக மக்களாட்சித் தடைகளின் அவசியம்**

பிரதிநிதித்துவ மக்களாட்சி அல்லது மறைமுக மக்களாட்சி குறைகள் மலிந்ததாக உள்ளது. பிரதிநிதிகள் தாங்கள் தேர்ந் தெடுக்கப்பட்டுப் பதவியை அடைந்தவுடன் தங்கள் தொகுதியையும், தொகுதி மக்களையும், அவர்களது தேவைகளையும் மறந்து விடுகின்றனர். நான்கு ஆண்டுகளுக்கோ ஐந்து ஆண்டுகளுக்கோ தங்கள் பதவிக்கு ஆபத்து இல்லை என்று எண்ணி மறு தேர்தல் வரையில் வாக்காளரின் நலன்களைக் கவனிப்பதில்லை. தேர்தல் நாளன்றே இங்கிலாந்து சுதந்திரமாக உள்ளது (England is free only on the day of elections) என்ற ரூஸோவின் கூற்றைப் பிரதிநிதிகள் மெய்ப்பிக்கின்றனர். மக்களாட்சியில் இறைமை பிரதிநிதிகளிடம் இல்லை. இது மக்களிடமே உண்டு. சட்ட ஆக்கத்தில் மக்களுக்குப் பங்கு அளிப்பது மக்களின் இறைமையை மதிப்பதாகும். இவ்விதம் மக்களுக்குப் பங்கு அளிக்கும்போது மக்கள் தங்கள் பிரதிநிதிகளைக் கட்டுப்படுத்த வாய்ப்பு ஏற்படு கிறது. மக்களாட்சி நிறுவனங்கள் மீது தற்காலத்தில் நம்பிக்கை குறைந்து வருகிறது. மக்களாட்சி அரசியல் கட்சிகளின் அடிப் படையில் அமைக்கப்படுகின்றன. அரசியல் கட்சிகள் மக்களின் நலன்களைக் கவனிப்பதைவிடக் கட்சியின் நலன்களையே கவனிக்

கின்றன. சட்ட ஆக்கத்துறையிலும் நிருவாகத்திலும் அரசியல் கட்சித் தலைவர்கள் செல்வாக்கு அடைகின்றனர். கட்சியை வளர்ப்பதற்காக அரசாங்க இயந்திரம் பயன்படுத்தப்படுகிறது. பொதுமக்களின் கருத்து கவனிக்கப்படுவதில்லை. குடியாட்சி நாட்டில் இக்குறைகள் அனுமதிக்கக் கூடியன அல்ல. நீக்கப்பட வேண்டியவையாகும்.

பிரதிநிதிகள் அடங்கிய சட்டமன்றம் செய்யும் சட்டங்களை ஏற்கவோ மறுக்கவோ மக்களுக்கு வழிவகைகள் இருக்க வேண்டும். சட்டமன்றங்கள் பொதுநலனைக் கருத்தில் கொள்ளா மல் தீங்கான சட்டங்களையும் பாதகமான சட்டங்களையும் இயற்று கின்றன. தற்காலத்தில் சட்டமன்றங்களின் வேலைப்பளு அதி கரித்துள்ளதால் சட்டங்கள் நிதானமாகச் சிந்திக்கப்படாமல் அவசரமாக இயற்றப்படுகின்றன. சில முக்கியமானதும், மக்களை நிரந்தரமாகவும் பெரிதும் பாதிக்கக் கூடியதுமான சட்டங்களைப் பிரதிநிதிகள் இயற்றினாலும், இதற்கு மக்களின் கருத்தை அறி தலும் அவர்களின் ஒப்புதலைப் பெறுதலும் அவசியமாகும். அர சாங்க அலுவலர்கள் நேர்மையற்றவர்களாகவும் திறமையற்றவர் களாகவும் இருக்கும் போது மக்களின் பிரதிநிதிகள் மீட்கப்படவும் திருப்பி அழைக்கப்படவும் வேண்டும்.

மறைமுகக் குடியாட்சியில் காணப்படும் குறைகளை நீக்கவும், மக்களின் நலன்களைப் பாதுகாக்கவும், வளர்க்கவும், குடியொப்பம் (Referendum), தொடக்க உரிமை (Initiative), மக்கள் வாக் கெடுப்பு (Plebiscite), மீட்புரிமை (Recall), ஆகிய மக்களாட்சித் தடைகள் அவசியமாகின்றன.

## நேர்முக மக்களாட்சித் தடைகள்

### குடியொப்பம் (Referendum)

குடியொப்பம் என்பது ஒரு சட்டத்தின் மீதோ அல்லது அர சியல் அமைப்புத் திருத்தத்தின் மீதோ மக்கள் கருத்தை அறித லாம். சட்டமன்றம் தீர்மானித்துள்ள சட்டத்தையும், அரசிய லமைப்புத் திருத்தத்தையும் மக்கள் முன் சமர்ப்பித்து அவர்களின் ஏற்பையோ அல்லது மறுப்பையோ அறிந்து செயல்படவேண்டும். வக்காளர்களில் ஒரு குறிப்பிட்ட பெரும்பான்மையினரால் ஏற்றுக் கொள்ளப்படுமானால் சட்டமோ அல்லது அரசியலமைப்புத் திருத் தமோ நடைமுறைக்கு வரும். ஏற்றுக்கொள்ளப்படவில்லை யென்றால் அச்சட்டமோ (அ) திருத்தமோ கைவிடப்படும்.

கட்டாயக் குடியொப்பம் (Obligatory Referendum or Compulsary Referendum) என்றும், விருப்பக் குடியொப்பம் (Optional Referendum or Facultative Referendum) என்றும் குடியொப்பம் இருவகைப்படும். சட்டமன்றங்கள் நிறைவேற்றிய சட்டமுன்படிவங்கள் அனைத்தும் ஒப்புதலுக்கு மக்களின் முன் சமர்ப்பிக்கப்படுமானால் அது கட்டாயக் குடியொப்பமாகும். குறிப்பிட்ட சில சட்டங்கள் மக்களின் ஒப்புதலைக் கட்டாயம் பெறவேண்டும். ஒப்புதலைப் பெற்ற பின்பே அவைகள் சட்டத்தின் நிலையை எய்தும். எடுத்துக்காட்டாக, சுவிட்ஸர்லாந்து நாட்டில் அரசியலமைப்புத் திருத்தச் சட்டங்கள் அனைத்தும் மக்களின் ஒப்புதலைப் பெற வேண்டும் மக்கள் பெரும்பான்மை வாக்குகளால் அரசியலமைப்புத்திருத்தத்தை ஏற்றால் தான் அத்திருத்தம் நடைமுறைக்கு வரும்.

ஒரு குறிப்பிட்ட சட்டம் மக்களின் ஒப்புதலைப் பெறவேண்டுமென்று குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள வாக்காளர்கள் விரும்பினால் அச்சட்டம் ஒப்புதலுக்காக மக்களின் முன் சமர்ப்பிக்கப்படும். இது விருப்பக் குடியொப்பம் எனப்படும். எடுத்துக்காட்டாக, சுவிட்ஸர்லாந்து நாட்டில் முப்பதாயிரம் வாக்காளர்கள் ஒரு குறிப்பிட்ட சட்டம் மக்களின் ஒப்புதலைப் பெறவேண்டுமென்று விரும்பினால் அச்சட்டம் மக்களின் ஒப்புதலுக்குச் சமர்ப்பிக்கப்படும். மக்கள் ஏற்றால் அது சட்டமாக்கப்படும். பெரும்பான்மை மக்கள் ஒப்புதலை மறுத்தால் அச்சட்டம் கைவிடப்படும்.

### குடியொப்பத்தின் நிறைகள்

#### (1) மக்களின் கருத்தை அறியலாம்

குடியொப்பத்தின் மூலம் மக்களின் உண்மையான கருத்தை அறியமுடிகிறது. பிரதிநிதிகளின் கருத்து மக்களின் கருத்திற்கு மாறுபட்டதாக இருக்கலாம். அரசியல் கட்சிகளின் கருத்தும் மக்களுக்கு ஏற்புடையது என்று கூறமுடியாது. எனவே, மக்களின் உண்மைக் கருத்தை அறிவதற்குக் குடியொப்பம் வழிவகுக்கிறது.

#### (2) மக்களின் மறுப்பாணை அதிகாரம்

குடியொப்பம் மக்களுக்கு அளிக்கப்பட்ட மறுப்பாணை அதிகாரம் எனக் கூறலாம். சட்டமன்றங்கள் மக்களுக்கு ஏற்புடைய சட்டங்களை இயற்றவில்லையானால் அவைகளை நிராகரிக்கும் உரிமை வாக்காளர்களுக்குக் கிடைக்கிறது. சட்டமன்றங்களின் பெரும்பான்மைக் கட்சியினர் தங்களுக்குச் சாதகமான சட்டங்களையே செய்கின்றனர். குடியொப்பத்தால் சட்டமன்றங்களின்

பெரும்பான்மைச் சட்டங்கள் ஏற்கப்படாவிட்டால் சட்டமன்றத்தின் மீதான பொதுமக்கள் நம்பிக்கை குறையும்.

**(3) நாட்டுப்பற்று வளர்கிறது**

குடியொப்பம் மூலம் சட்டம் இயற்றலில் மக்களுக்குப் பங்கு ஏற்படுகிறது. அரசாங்கச் செயல்களில் தாங்களும் பங்கேற்கின்றோம் என்ற உணர்வும், அரசின் சட்டங்கள் தாங்களியற்றிய சட்டங்கள் என்ற உணர்வும் தோன்றுகின்றன. இதனால் மக்கள் விருப்பத்துடன் அரசாங்கச் சட்டதிட்டங்களுக்குப் பணிகின்றனர். நாட்டுப்பற்றும் பொறுப்பும் வளர்கின்றன.

**(4) பொதுமக்களின் அரசியல் அறிவு பெருகுகிறது**

ஒரு குறிப்பிட்ட சட்டமோ அரசியலமைப்புத் திருத்தமோ மக்களின் முன் ஒப்புதலுக்காகச் சமர்ப்பிக்கப்படும்போது அதன் மீதான வாதப்பிரதிவாதங்கள் தோன்றி மக்களுக்கு அரசியல் அறிவு ஏற்படுகிறது. குடியொப்பமுறை பொதுமக்களின் அரசியல் அறிவை வளர்ப்பதில் சிறந்த சாதனமாகும்.

**(5) மக்களுடன் தொடர்பு**

சாதாரணமாகத் தேர்தல் காலங்களில் மட்டுமே பிரதிநிதிகளும் அரசியல் கட்சிகளும் மக்களுடன் தொடர்பு கொள்வதுண்டு. மேலும் வாக்காளர்களும் தேர்தல் காலங்களிலேயே அரசியலைப் பற்றியும் அரசாங்கத்தைப் பற்றியும் எண்ணுகின்றனர். ஆனால் குடியொப்பத்தின் காரணமாக மக்களுக்கும் அரசாங்கத்துக்கும் நெருங்கிய தொடர்பு அடிக்கடி ஏற்படுகிறது.

**(6) முரண்பாடுகள் அகற்றப்படுகின்றன**

சட்டமன்றங்களின் இரு அவைகளிடையே ஒரு சட்டம் பற்றிய முரண்பாடுகள் தோன்றலாம். சட்டமன்றங்களுக்கும் செயல்துறைத் தலைவருக்கும் முரண்பாடுகள் தோன்றலாம். இம்முரண்பாடுகளைத் தீர்க்கும் சிறந்த சாதனமாகக் குடியொப்பம் அமைகிறது. பேராசிரியர் பிரைசின் கூற்றுப்படி, 'ஒவ்வொரு அரசாங்கத்திலும் மேல் முறையீடு செய்ய முடியாத இறுதி முடிவு கூறும் ஓர் அதிகாரம் வேண்டும். குடியாட்சியில் மக்களே முரண்பாடுகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கக் கூடியவர்கள்.'[18]

[18] Bryce: 'There must some where in every government be a power which can say the last word, can deliver a decision from which there is no appeal In a democracy, it is only the people who can thus put an end to Controvercy.'

(7) மக்களின் இறைமை மதிக்கப்படுகிறது

பிரதிநிதிகளும் அவர்கள் அடங்கிய சட்டமன்றங்களும் சட்டத்தை இயற்றினாலும் இறுதியானதும் முடிவானதுமான இறைமை மக்களிடமே உண்டு என்பது உணரப்படுகிறது. பிரதிநிதிகள் மக்களின் தேவைகளை அறிவதைவிட வாக்காளர்களே தங்கள் தேவையை நன்கு அறிகின்றனர். இவைகள் குடியொப்பத்தால் நிருபிக்கப்படுகின்றன.

(8) புரட்சிகரமான சட்டங்கள் தவிர்க்கப்படுகின்றன

குடியொப்பத்தினால் புரட்சிகரமான மாறுதல்கள் தவிர்க்கப்படுகின்றன. சட்டமன்றங்கள் புரட்சிகரமான சட்டங்களை இயற்றலாம். ஆனால், குடியொப்பத்தின்போது மக்களின் ஆதரவு மறுக்கப்பட்டு புரட்சிகர மாறுதல்களும் புரட்சிகரச் சட்டங்களும் தடுக்கப்படும். பொதுவாக மக்கள் புரட்சிகர மாறுதல்களுக்கு ஆதரவு காட்டமாட்டார்கள்.

(9) சிறுபான்மையினர் நலன்

குடியொப்ப முறையால் சிறுபான்மையினர் நலன்கள் காக்கப்படுகின்றன. சட்டமன்றங்களில் உள்ள பெரும்பான்மையினர் இயற்றும் சட்டங்களில் சிறுபான்மையினர் நலன்கள் கவனிக்கப்படாத பொழுது குடியொப்ப நேரத்தில் சிறுபான்மையினர் தங்கள் வன்மையான எதிர்ப்பைக் காட்ட இயலும்.

குடியொப்பத்தின் குறைகள்

(1) சட்டமன்ற மதிப்புக் குறைகிறது

குடியொப்பத்தினால் சட்டமன்றங்களின் மதிப்புக் குறைகிறது சட்டமன்றங்கள் சட்டங்களை இயற்ற வேண்டிய கடப்பாடுடையன. வாக்காளர்கள் சட்டமன்றங்களின் சட்டமியற்றும் பணியில் தலையிடும்போது சட்டமன்றங்களின் ஆர்வம் குறைகிறது. எவ்வளவு சிறந்த சட்டதிட்டங்களை வகுத்தாலும் மக்களால் நிராகரிக்கப்படலாம். அப்போது சட்டமன்றங்களுக்கு இழுக்கு ஏற்படுகிறது. சட்டதிட்டங்களை மக்கள் ஏற்கும்போதும் அதற்குரிய சிறப்பு வாக்காளர்களுக்கே செல்கிறது. பேராசிரியர் பிரைசின் கூற்றுப்படி, குடியொப்பத்தால் சட்டமன்றங்களின் பொறுப்புணர்வு குறைக்கப்படுகிறது. [19]

[19] Bryce: 'Its sense of responsibility is reduced and it may be disposed to pass measures its judgement disapproves, counting on the people to reject them, or may fear to pass laws its thinks needed lest it should receive a buffer from the popular vote.'

## (2) பாமரர் சட்ட நுணுக்கம் அறியார்

சட்டமியற்றல் தற்காலத்தில் மிகவும் சிக்கல் உடையதாகவும், சட்ட நுணுக்கம் தேவைப்பட்டதாகவும் இருக்கிறது. சட்டம் இயற்றலுக்குத் தனிப் பயிற்சியும் திறமையும் அவசியப்படுகிறது. சட்டத்துறையில் நல்ல அனுபவமும் முதிர்ந்த அறிவும் உடையவர்களே சட்டஞ் செய்ய இயலும். ஒரு சட்டத்திற்குப் பாமர மக்கள் சரியான கருத்தைத் தெரிவிக்க இயலாது. சட்ட நுணுக்கங்களை இவர்கள் அறியார்கள். ஆம் அல்லது இல்லையென்றோ ஏற்பு அல்லது மறுப்பு என்றோ கூறுவதால் சட்டமியற்றும் பணி முடிந்து விடுவதில்லை. சட்ட மன்றத்தில் ஒரு சட்ட முன்படிவத்தின் மீதான வாதங்களும் பிரதிவாதங்களும் அலசி ஆராயப்படுகின்றன. இத்திறமை பாமர மக்களுக்குக் கிடையாது. சிறந்த நல்ல சட்டங்கள் கூடக் குடியொப்பத்தில் நிராகரிக்கப்படலாம்.

## (3) திருத்தங்களைத் தெரிவிக்க இயலுவதில்லை

குடியொப்பம் வாயிலாக ஒரு சட்டத்தை ஏற்கலாம் அல்லது மறுக்கலாம். ஆனால் அந்தச் சட்டத்திற்கான திருத்தங்களைக் குடியொப்பத்தின் மூலம் கூற இயலுவதில்லை. சட்டமன்றத்தில் திருத்த சட்ட முன்படிவத்தின் மீது விவாதங்கள் நடைபெறுகின்றன. நன்மை தீமைகள் சீர்தூக்கி ஆராயப்படுகின்றன. பின்பே திருத்த சட்ட முன்படிவத்தின் மீதான வாக்கெடுப்பு நடைபெறுகிறது. இவ்வித வாய்ப்புகள் குடியொப்பத்தில் இல்லை.

## (4) காலதாமதம்

குடியொப்பத்தால் ஏராளமான காலதாமதங்கள் ஏற்படுகின்றன. சட்டமன்றத்தால் சட்டமுன்படிவம் ஆராயப்பட்டுத் தீர்மானிக்கப்படுகிறது. அதன் பிறகு சட்ட முன்படிவம் மக்களின் வாக்கெடுப்பிற்கு விடப்படுகிறது. மக்களின் தீர்ப்பை அறிவதில் காலதாமதம் ஏற்படுகிறது. தேசிய முக்கியத்துவமுள்ள சட்டங்களைச் செய்வதில் இவ்விதக் காலதாமதங்கள் தீங்கை ஏற்படுத்துகின்றன. ஸ்ட்ராங் அவர்களின் கருத்துப்படி, சட்டமுன்படிவம் குடியொப்பத்திற்கு விடப்படும் போது அச்சட்ட முன்படிவத்தில் கூறப்பட்ட நன்மையை மக்கள் பெற முடியாத அளவு காலதாமதம் ஏற்படுகிறது.[20]

[20] C. F. Strong: 'As to the referendum if generally adopted in a large state, it would probably cause such delay in the promulgation of laws, as might deprive society of the benefits they were designed to bestow or permit the perpetuation of the evils they were intended to remove'

### (5) தேர்தல் சலிப்பு

குடியொப்பத்தின் காரணமாக மக்கள் அடிக்கடி வாக்குச் சாவடிகளுக்குச் செல்ல வேண்டியுள்ளது. இதனால் தேர்தலில் வெறுப்பும் சலிப்பும் (Electoral fatigue) தோன்றிப் பலர் வாக்களிக்கச் செல்வதில்லை. எனவே குடியொப்பத்தால் தெரியவரும் தீர்மானம் அனைத்து வாக்காளர்களின் தீர்மானமாக ஆவதில்லை.

### (6) பொதுக் கருத்தாவதில்லை

பொதுக் கருத்தை அறிய வேண்டுமென்ற குடியொப்பத்தின் நோக்கம் நிறைவேறுவதில்லை. சட்டமுன்படிவம் வாக்கெடுப்பிற்கு விடப்படும்பொழுது அதன் ஆதரவாளர்களைவிட எதிர்ப்பாளர்களே ஆர்வத்துடன் வாக்களிக்கச் செல்கின்றனர். பலர் வாக்களிப்பில் கலந்துகொள்ளாமையால் உண்மையான பொதுக் கருத்துத் தெரிவதில்லை.

### (7) பிளவு தோன்றல்

குடியொப்பத்தாலும் அடிக்கடி இது கையாளப்படுவதாலும் மக்களிடையே பிரிவுகள் தோன்றுகின்றன. இவற்றை அரசியல் கட்சிகள் நன்கு பயன்படுத்திக்கொண்டு பிளவை மேலும் பெரிதாக்குன்கிறன. ஆளும் கட்சியின் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்காகக் குடியொப்பம் பயன்படுத்தப்படும். ஃபைனர் (Finer) கருத்துப்படி, வெறுப்படைந்த அரசியல் கட்சிகள் குடியொப்பத்தைப் பயன்படுத்திக் குழப்பங்களை விளைவிக்கும்.[21]

### (8) பழமை விரும்பிய மக்கள்

மக்கள் முற்போக்கையும் தீவிர மாறுதல்களையும் விரும்பாத பிற்போக்குவாதிகளாகவும், பழமை விரும்பிகளாகவும் இருப்பர். முற்போக்குச் சட்டங்கள் அனைத்துக் குடியொப்பத்தால் நிராகரிக்கப்படும். பிரைஸ் அவர்களின் கருத்துப்படி, அரசியல், சமுதாய, பொருளாதார முன்னேற்றங்கள் குடியொப்பத்தால் தடைசெய்யப்படும்.[22]

### (9) பெரும்பான்மையின் அளவு

குடியொப்பத்தின் மூலம் ஒரு மசோதாவிற்குக் கிடைக்கும் பெரும்பான்மையின் அளவு முக்கியத்துவம் உடையது. எடுத்துக்

[21] Finner: 'The referendum gave to the discontented parties the chances of agitation, not only for something just, but out of malice, spike and revenge for having suffered loses at the preceding elections and for their exclusion from the cabinet'.

[22] Bryce: 'The most Comprehensive but also the Vaguest argument adduced against the referendum is that it retards political, social and economic progress.'

காட்டாக ஐம்பத்தொரு விழுக்காடு பெரும்பான்மையால் ஒரு சட்டமுன்படிவம் குடியொப்பத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டுச் சட்டமாக்கப்பட்டால் நாற்பத்தொன்பது விழுக்காடு வாக்காளர்கள் அச் சட்டத்தை ஏற்றுக்கொள்ளவில்லை என்பது புலனாகும். இதன் காரணமாகச் சட்டத்தின்பால் மக்கள் கொண்ட நம்பிக்கையும் மதிப்பும் தகர்த்தெறியப்படும்.

## (10) பெரிய நாடுகளுக்கு ஏற்றதல்ல

குடியொப்ப முறை பெரிய நாடுகளுக்கு ஏற்றதல்ல. பொதுவாக் கெடுப்புகள் நடத்துவதிலும் வாக்குகள் எண்ணப்பட்டு முடிவுகள் வெளியிடப்படுவதிலும் கால தாமதங்களும் செலவுகளும் மிகுதியாகும். எனவே, பெரிய நாடுகளுக்குப் பொருத்தமற்றதாகும்.

குடியொப்பமுறை உலகின் பல நாடுகளில் பின்பற்றப்படுவதில்லை. பின்பற்றிய நாடுகளும் குடியொப்பத்தைக் கைவிட்டன. சுவிட்ஸர்லாந்து நாட்டு மக்களின் மனப்பான்மையும் கட்சிகளின் பொறையுடைமையும் குடியொப்பத்தின் வெற்றிக்குக் காரணங்களாகும். பேராசிரியர் ஃபைனர் (Finer) கூற்றுப்படி, பாராளுமன்ற முறையில் உள்ள குறைகளை நீக்க நேரிடைச் சட்டமியற்றும் முறை உகந்ததல்ல. சட்டங்களையோ மக்களையோ முன்னேற்றுவதில்லை. பிரச்சினைகளைத் தீர்ப்பதுமில்லை.[28]

## தொடக்கவுரிமை (Initiative)

சட்டங்களைத் தொடங்கவும் அரசியலமைப்புத் திருத்தங்களைத் தொடங்கவும் அளிக்கப்பட்ட உரிமையே தொடக்க உரிமை எனப்படும். ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை வாக்காளர்கள் ஒரு சட்ட முன்படிவத்தை முன் மொழிந்து அதைச் சட்டமாக்கும்படி சட்ட மன்றத்தைக் கோரலாம். சட்டம் இயற்றுவதற்கு மக்களுக்கு உள்ள உரிமையைத் தொடக்க உரிமை காட்டுகிறது. சட்டமன்றங்கள் இயற்றத் தவறிய சட்டங்களையும் சட்டமன்றங்கள் இயற்ற மறுக்கும் சட்டங்களையும் தொடக்க உரிமை மூலம் கொண்டு வரலாம்.

மக்கள் துவக்கம் இரு வடிவங்களில் இருக்கலாம். மசோதா வடிவில் முற்றுப்பெற்றதாகத் துவக்கம் அமைந்திருந்தால் அது

[28] Finer: 'It improves nothing; neither the laws nor the people. It disturbs without providing solutions. It is an appeal from a court which has the makings and some of the equipment of a wise legislature, to all the crudities of a mojority vote. Its operations leave stark naked the physical power of numbers, surely not a desirable thing.'

தொகுக்கப்பட்ட மக்கள் துவக்கம் (Formulative Initiative) எனப்படும். மசோதா வடிவில் முறையாகத் தொகுக்கப்படாமல் பொதுத் முறையில் அமைந்திருந்தால் அது தொகுக்கப்படா மக்கள் துவக்கம் (Unformulative Initiative) எனப்படும்.

குடியொப்பத்தின் மூலம் விரும்பத்தகாச் சட்டங்களை நீக்க இயலும். இது எதிர்மறை உரிமையாகும். தொடக்க உரிமையின் மூலம் விரும்பும் சட்டங்களை இயற்ற இயலும். இது உடன்பாட்டு உரிமையாகும்.

**தொடக்கவுரிமையின் நிறைகள்**

குடியொப்பத்திற்குக் கூறப்பட்ட நிறைகள் தொடக்க உரிமைக்கும் பொருந்துவனவாகும். தொடக்க உரிமைக்கு உரித்தான மேலும் சில நிறைகளை இங்குக் காணலாம்.

சட்டமன்றங்களின் வேலைப்பளு தற்காலத்தில் மிகவும் அதிகரித்துள்ளது. எனவே எல்லாத் தேவைகளையும் நிறைவு செய்யச் சட்டங்கள் இயற்றப்படாமல் விடுபட்டுப்போகலாம். தொடக்க உரிமையின் வழி சட்டமன்றங்கள் செய்யாது விட்ட சட்டங்களை இயற்ற இயலும்.

குடியொப்பத்தில் மக்கள் இறைமை மதிக்கப்படுவதைக் கண்டோம். ஆனால் குடியொப்பத்தின் வழி மக்களின் எதிர்மறை உரிமையே காக்கப்படுகிறது. மக்களின் இறைமை முழுமை பெற அவர்களது உடன்பாட்டு உரிமைகளும் காக்கப்படவேண்டும். மக்களின் தொடக்க உரிமை இவர்களது உடன்பாட்டு உரிமையைக் காக்கக்கூடியதாக அமைகிறது.

சட்டங்களைத் தொடங்க மக்களுக்கு உரிமைகள் இருந்தால் சட்டமன்றங்களால் விடப்பட்ட சட்டங்களைத் தொடங்கலாம். மேலும் சட்டமன்றங்கள் இயற்ற மறுக்கும் சட்டங்களையும் தொடக்க உரிமையின் காரணமாகத் தொடங்கலாம். மக்களுக்கு இவ்வுரிமைகள் இருப்பதால் சட்டமன்றங்கள் விழிப்போடும் பொறுப்போடும் நடந்துகொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது.

சட்டமன்றங்கள் மக்களின் தேவைக்கும் முன்னேற்றத்திற்கும் இணைந்து செயல்படுவதில்லை. சமுதாயம் முன்னேறிச் செல்லும் போது சட்டமன்றங்கள் பின்தங்கியிருக்கும். தொடக்க உரிமையால் இக்குறையை நீக்கி முன்னேற்றத்திற்குத் தேவையான சட்டங்களை அவ்வப்போது இயற்ற இயலும்.

மக்களால் தொடங்கி இயற்றப்பட்ட சட்டங்கள் மக்களின் கருத்தைப் பிரதிபலிக்கக் கூடியதாகவும் மக்களின் மதிப்பைப் பெற்றதாகவும் அமைகிறது. மக்கள் தாமாகவே விருப்பத்தினுல் தோற்றுவித்த சட்டங்களுக்குப் பணிந்து நடப்பார்கள்.

மக்கள் தாங்கள் வேண்டும் போது வேண்டிய சட்டங்களை இயற்றத் தொடக்க உரிமையின் மூலம் வழிவகையிருப்பதால் சட்டங்கள் வேண்டிப் போராட்டங்களும் அரசியல் குழப்பங்களும் அவசியமில்லை. எனவே, தொடக்க உரிமை அரசியல் குழப்பங்களைத் தவிர்க்கிறது.

### தொடக்கவுரிமையின் குறைகள்

குடியொப்பத்தின் குறைகள் தொடக்க உரிமைக்கும் பொருந்துவனவாக உள்ளன. சட்டமன்றங்களின் செல்வாக்கையும் முக்கியத்துவத்தையும் தொடக்க உரிமைகள் குறைக்கின்றன. சட்ட முன்படிவங்களைத் தீட்டுவதில் தொழில்திறமை அவசியப்படுகிறது. சட்டம் இயற்றலில் அனுபவமிக்க சட்டமன்ற உறுப்பினர்களே சட்டமுன்படிவங்களை நன்கு வகுக்க இயலும். பொது மக்களால் வகுக்கப்பட்ட சட்டமுன்படிவங்கள் முறையாக அமைக்கப்பட்டிரா. சரியான கலைச்சொற்களை உடையனவாக இரா. இதன் காரணமாகச் சட்டமுன்படிவத்திற்கு மாறுபட்ட விளக்கங்கள் தோன்றும். மேலும் பொதுமக்களின் அறியாமையை அரசியல் வாதிகள் பயன்படுத்திக்கொண்டு குழப்பத்தைத் தோற்றுவிப்பார்கள். அரசியலமைப்புத் திருத்தங்கள் நாட்டின் அரசாங்கத்தையே மாற்றக்கூடியதும், முக்கியமானதும், அடிப்படையானதும் ஆகும். அரசியல் முதிர்ச்சி இல்லாப் பொது மக்களின் கையில் அரசியலமைப்புத் திருத்தங்கள் விடப்படும்போது பல தீங்குகள் ஏற்பட்டு இறுதியில் குழப்பங்கள் தோன்றக் கூடும். எனவே சட்டங்களைத் தொடங்கும் உரிமை நன்மை பயப்பதைவிட அதிகமான தீங்கையே ஏற்படுத்தும்.

### மக்கள் வாக்கெடுப்பு (Plebiscite)

மக்கள் வாக்கெடுப்பு என்பது மக்களின் தீர்ப்பை அறியும் முறையாகும். பேராசிரியர் ஸ்ட்ராங்கின் இலக்கணப்படி, முக்கியமானதும் நிரந்தரமானதுமான அரசியல் விவகாரங்களில் மக்களின் தீர்ப்பை அறியும் முறையே மக்கள் வாக்கெடுப்பாகும்.[24]

[24] C. F. Strong: 'The plebiscite is a device to obtain a direct popular vote on a matter of political importance but chiefly inorder to create some more or less permanent political condition.'

முதலாம் நெப்போலியனும் மூன்றும் நெப்போலியனும் மக்கள் வாக்கெடுப்பின் மூலம் மக்களின் தீர்ப்பையும் ஆதரவையும் அறிந்து பேரரசர் ஆனுர்கள். தேசிய வாக்கெடுப்பினுல் மக்களின் ஆதரவைப் பெற்று ஹிட்லர் ஜெர்மனியின் வல்லாட்சியாளர் ஆனுர். இந்தியக் குடியரசுடன் இணைவதற்கு சிக்கிம் நாட்டில் மக்கள் வாக்கெடுப்பு நடத்தப்பட்டது. வாக்கெடுப்பின் மூலம் இணைப்பிற்கு மக்கள் ஆதரவைத் தெரிவித்தனர். எனவே, 1975 ஆம் ஆண்டில் சிக்கிம் இந்தியாவுடன் இணைந்து இந்தியக் குடியரசின் மாநிலமானது. எனவே, மக்கள் வாக்கெடுப்பு என்பது முக்கியமானதும் நிரந்தரமானதுமான அரசியல் பிரச்சினைகளின் தீர்விற்காகக் கையாளப்படும் ஒரு குடியாட்சி முறையாகும்.

## மக்கள் வாக்கெடுப்பின் நிறைகுறைகள்

தங்களை பாதிக்கக்கூடிய நிரந்தரமானதும் முக்கியமானதுமான அரசியல் பிரச்சினைகளை மக்களே தீர்மானிக்க வேண்டும். தங்கள் பிரதிநிதிகளின் தீர்மானமும் முடிவும் மட்டும் போதாது. சிக்கிம் இந்தியாவோடு இணைவது சிக்கிம் மக்கள் வாழ்க்கையிலும் வரலாற்றிலும் மிக முக்கியமான நிகழ்ச்சியாகும். மேலும், இது ஒரு நிரந்தரமான மாற்றமும் ஆகும். எனவே, வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இப்பிரச்சினை சிக்கிம் சட்டமன்றம் மட்டும் முடிவு செய்யக்கூடாது. பிரதிநிதிகள் அடங்கிய சட்டமன்றங்களின் முடிவு மக்களின் தீர்ப்பிற்கு ஏற்புடையதாக இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. எனவே, மக்களின் தீர்ப்பும் அவசியமாகும். சிக்கிம் சட்டமன்றம் மிகுந்த பெரும்பான்மையால் இணைப்பை விரும்பியது. மக்கள் வாக்கெடுப்பு நடத்தப்பட்டு இணைப்பிற்கு மக்களின் ஆதரவும் இசைவும் பெறப்பட்டது. இவைகளின் பின்பே சிக்கிம் நாட்டை இந்திய மாநிலமாக்க நமது பாராளுமன்றம் ஒப்புக்கொண்டது. மக்கள் வாக்கெடுப்பின் வழி மக்களின் இறைமை மதிக்கப்பட்டுக் காக்கப்படுகிறது. மக்கள் தங்கள் தலைவிதியைத் தாங்களே தீர்மானிக்கவேண்டும். தங்கள் பிரதிநிதிகளால் தீர்மானிக்கப்படக்கூடாது. குடியொப்பத்திற்கான நிறைகள் மக்கள் வாக்கெடுப்பிற்கும் பொருந்துவதைக் காணலாம்.

அரசியல் அறிவற்ற பொதுமக்கள் கட்சித் தலைவர்களால் ஏமாற்றப்படுவர். உறுதிமொழிகளை நம்பி வஞ்சிக்கப்படுவர். மக்கள் வாக்கெடுப்பு என்ற ஆயுதத்தைப் பயன்படுத்தி ஜெர்மனியில் ஹிட்லர் வல்லாட்சியை ஏற்படுத்த முடிந்தது. இதே போல முதலாம் நெப்போலியனும் மூன்றும் நெப்போலியனும் பிரான்சில் குடியாட்சியை நீக்கி முடியாட்சியை ஏற்படுத்த முடிந்தது.

**மீட்புரிமை (Recall)**

தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளோ அலுவலர்களோ தங்கள் கடமையைச் சரியாக ஆற்றவில்லையெனில் மக்கள் அவர்களைத் திரும்ப அழைத்துக்கொள்வதற்கான உரிமை மீட்புரிமை எனப்படும். மீட்புரிமையின் மூலம் நீதிபதிகளும் திரும்ப அழைத்துக் கொள்ளப்படுகின்றனர். பிரதிநிதிகள், அலுவலர்கள், நீதிபதிகள் ஆகியவர்கள் திறம்படவும், திருப்தி அளிக்கும் முறையிலும் பணியாற்றுவதைக் கண்காணிக்கும் உரிமை மக்களுக்கு வழங்கப்படுகிறது.

**மீட்புரிமையின் நிறைகளும் குறைகளும்**

மக்கள் தங்களைத் திரும்ப அழைத்துக்கொள்வார்கள், பதவியிலிருந்து நீக்குவார்கள் என்பதை அறிந்த அலுவலர்களும், பிரதிநிதிகளும், நீதிபதிகளும் தங்கள் கடமைகளைத் திறம்பட ஆற்றுவார்கள். அலுவலர்களிடையே நிலவும் ஊழல்கள் தவிர்க்கப்படுகின்றன. அரசாங்க நிர்வாகம் காலதாமதமின்றியும் திறமையுடையதாகவும் இருக்கும். அலுவலர்கள் மக்களின் வரிப் பணத்திலிருந்து ஊதியம் பெறுகின்றனர் என்ற உணர்வும் விழிப்பும் தோன்றும். மக்களது ஊழியர்களை மக்கள் நீக்குவதற்கான உரிமை மக்களின் இறைமையை வெளிப்படுத்துவதாக அமைகிறது.

மீட்புரிமைக்கு அஞ்சிய அலுவலர்கள் தங்கள் கடமையைத் துணிவுடனும் நேர்மையாகவும் ஆற்றுவதில்லை. ஒரு சிறுபான்மை மக்கள் மீட்புரிமையைக் காட்டி அலுவலர்களை அச்சுறுத்துவர். பொதுநலன் கவனிக்கப்படாது போகலாம். நல்ல திறமையான அரசாங்க நிர்வாகத்திற்கு இது பாதகமாகிறது. விருப்பு வெறுப்புகளின் காரணமாகத் திறமையும் நாணயமும் உடைய அலுவலர்கள் பதவியிலிருந்து நீக்கப்படுவர். எனவே, திறமையுடையவர்கள் அரசாங்கப் பணிக்கு வரமாட்டார்கள். பிரதிநிதிகள் நாட்டின் நலன்களுக்குப் பாடுபடுவதைவிடத் தம்மை மீட்புரிமை காட்டி அச்சுறுத்துபவர்களுக்குச் சாதகமாகிவிடுவர். பொதுநலம் நாடுபவர்கள் பொதுவாழ்வில் ஈடுபட மாட்டார்கள். நீதிபதிகள் சுயேச்சையாகவும் சுதந்திரமாகவும் செயல்பட மாட்டார்கள். நீதியின் நேர்மை குன்றும். நாட்டின் பொதுநலனும் நிர்வாகமும் பெரிதும் பாதிக்கப்படும்.

## நேர்முக மக்களாட்சி நாடுகள்

### நெப்போலியன் காலப் பிரான்சு

முதலாம் நெப்போலியனும் மூன்றும் நெப்போலியனும் மக்கள் வாக்கெடுப்பின் மூலம் அதிகாரத்தைப் பெற்று பிரான்சில் பேரரசை நிறுவினர்கள். குடியாட்சி முறைகள் சுயநலத்திற்காகப் பயன்படுத்தப்பட்டன. முதலாம் நெப்போலியன் அப்போதிருந்த அரசாங்கத்தை ஏமாற்றுவதற்காக இதைப் பயன்படுத்தினர். 1848-ல் இரண்டாம்குடியரசு தலைவர் பதவியைப் பெறவும், 1851-ல் குடியரசை வீழ்த்தவும், 1852-ல் இரண்டாம் பேரரசை நிறுவவும் மூன்றும் நெப்போலியன் மக்கள் வாக்கெடுப்பைப் பயன் படுத்தினர்.

### ஹிட்லர் கால ஜெர்மனி

ஹிட்லர் ஜெர்மனியில் குடியாட்சி முறைகளைப் பயன்படுத்தித் தன் செல்வாக்கை அதிகரித்துக்கொண்டார். அதன்வழி அதிகாரத்தைக் கவர்ந்தார். 1933-ல் சர்வதேசச் சங்கத்திலிருந்து விலகுவதற்கு மக்கள் வாக்கெடுப்புப் பயன்படுத்தப்பட்டது. படைக் குறைப்பு மாநாட்டிலிருந்து விலகுவதையும் மக்கள் ஆதரித்தனர். 1934ஆம் ஆண்டு மக்கள் வாக்கெடுப்பின்படி 90 விழுக்காடு வாக்குகள் பெற்று ஹிட்லர் ஜெர்மனியின் தலைவரானர். நேரடிக் குடியாட்சி முறைகளைத் தகாத வழிகளில் பயன்படுத்தினர். ஆக்கிரமிப்புகளுக்கும் மக்களின் ஆதரவைப் பெற்றர். ஸ்ட்ராங் அவர்கள் கூற்றுப்படி, கொடுங்கோலர்கள் நேரடிக் குடியாட்சி முறைகளின் பயன்களைப் பாழ்படுத்தினர்.[25]

### சுவிட்ஸர்லாந்து

உலகிலுள்ள நாடுகளில் நேர்முக மக்களாட்சியும் நேர்முக மக்களாட்சித் தடைகளும் வெற்றிகரமாகச் செயல்படும் நாடு சுவிட்ஸர்லாந்துக் குடியாட்சி நாடாகும். சுவிஸ் மக்களின் இயல்பும் சுயாட்சியில் அனுபவமும் நாட்டுப்பற்றும் நேர்முக மக்களாட்சியின் வெற்றிக்குக் காரணங்களாகும். பேராசிரியர் பிரைசின் கருத்துப்படி, சுவிட்ஸர்லாந்தின் மலைப்பகுதியில் செடி கொடிகள் தழைத்தோங்கி வளர்வதைப் போல நிறுவனங்களும் செழித்துள்ளன.[26]

[25] C F Strong: 'The plebiscites at the time seemed an ideal instrument of self-determination and sure means of making the world safe for democracy. But, infact, their results were vitiated by the aggressions of the very tyrant who had used the same method to legalise his tyranny.'

[26] Bryce: 'It is racy of the soil. There are institutions which like plants, flourish on their hill side and under their own sunshine.'

**அரசியலமைப்புத் திருத்தத்திற்குக் குடியொப்பம்**

சுவிட்ஸர்லாந்தில் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்படும் ஒவ்வோர் அரசியலமைப்புத் திருத்தமும் குடியொப்பத்திற்கு விடப் பட்டுப் பெரும்பான்மைக் கோட்டங்களிலுள்ள பெரும்பான்மை வாக்காளர்களால் ஆதரிக்கப்படவேண்டும். அப்போதுதான் அந்த அரசியலமைப்புத் திருத்தம் ஏற்கப்படும்.

அரசியலமைப்புத் திருத்தத்தைச் சட்டமன்றங்களில் ஓரவை ஏற்கவில்லையென்றால் அத்திருத்தச் சட்டமுன்படிவம் மக்களின் முன் குடியொப்பத்திற்காக வைக்கப்படும். குடியொப்பத்தால் திருத்தச் சட்டமுன்படிவம் ஏற்றுக்கொள்ளப்படுமானால் சட்ட மன்றங்கள் கலைக்கப்பட்டுப் பொதுத் தேர்தல் நடைபெறும். புதிய தாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றத்தால் சட்டமுன் படிவம் நிறைவேற்றப்பட்டு மீண்டும் மக்களின் முன்னும் கோட் டங்களின் முன்னும் குடியொப்பத்திற்காகச் சமர்பிக்கப்படும். அரசியலமைப்புத் திருத்தத்திற்கான எல்லாச் சட்ட முன்படிவங் களும் சட்டமாக்கப்படுவதற்கு முன் குடியொப்பம் பெற வேண்டும். இதற்குக் கட்டாயக் குடியொப்பம் என்று பெயராகும்.

**சாதாரணச் சட்டங்களுக்குக் குடியொப்பம்**

அரசியலமைப்புத் திருத்தச் சட்டமில்லாத சாதாரணச் சட்டம் நிறைவேற்றப்பட்ட தொண்ணூறு நாட்களுக்குள் முப்பதா யிரம் வாக்காளர்களோ அல்லது எட்டுக் கோட்டங்களோ குடி யொப்பம் விரும்பினால் அச்சட்டம் குடியொப்பத்திற்கு விடப்பட வேண்டும். இது விருப்பக் குடியொப்பமாகும். கூட்டாட்சிச் சட்ட மன்றம் ஒரு சட்டத்தை அவசரச் சட்டமென அறிவித்தால் அச் சட்டம் விருப்பக் குடியொப்பத்திற்கு விடப்பட வேண்டியதில்லை.

**கோட்டங்களில் குடியொப்பம்**

கோட்டங்களின் அரசியலமைப்புத் திருத்தங்களுக்குக் குடி யொப்பம் கட்டாயமானதாகும். சாதாரணச் சட்டங்களுக்குக் குடியொப்பம் பெறுவதில் கோட்டங்களிடையே மாறுபாடுகள் நிலவுகின்றன. சில கோட்டங்களில் சில சட்டங்கள் மட்டுமே குடியொப்பத்திற்கு விடப்படுகின்றன. சில கோட்டங்களில் மக்கள் தொகை குறைவாக இருப்பதாலும், மக்களே நேரடியாகச் சட்டங்களை இயற்றுகின்றனர். குடியொப்பத்திற்கு அவசியம் தோன்றுவதில்லை.

### அரசியலமைப்பை மாற்றத் தொடக்கவுரிமை

ஐம்பதாயிரம் வாக்காளர்கள் அரசியலமைப்பை முற்றிலும் மாற்றி அமைக்க விண்ணப்பிக்கலாம். இவ்விண்ணப்பம் குடியொப்பத்திற்கு விடப்பட்டுப் பெரும்பான்மைக் கோட்டங்களில் பெரும்பான்மை வாக்காளர்களால் ஏற்றுக்கொள்ளப்படுமானல் சட்டமன்றங்கள் கலைக்கப்பட்டுப் பொதுத் தேர்தல்கள் நடைபெறும். புதிய சட்டமன்றங்கள் அரசியலமைப்பை மாற்றியமைத்து மீண்டும் குடியொப்பத்திற்குச் சமர்ப்பிக்க வேண்டும்.

### புதிய சட்டமியற்றத் தொடக்கவுரிமை

ஐம்பதாயிரம் வாக்காளர்கள் அரசியலமைப்பின் ஒரு பகுதியைத் திருத்தியமைக்க விண்ணப்பிக்கலாம்; அல்லது புதிய சட்டம் ஒன்றை இயற்ற விண்ணப்பிக்கலாம். அவ்விண்ணப்பம் தீட்டப்பட்ட மசோதா வடிவிலோ அல்லது தீட்டப்பெருத கொள்கை வடிவிலோ இருக்கும். முறையாகத் தீட்டப்பட்ட வடிவில் மசோதா இருந்து அதைச் சட்டமன்றங்களில் ஒன்று ஏற்றுக்கொள்ளுமானுல் மசோதா குடியொப்பத்திற்கு விடப்படும். மசோதா இரு சட்டமன்றங்களுக்கும் ஏற்புடையது அல்லவானுலும் சட்டமுன்படிவம் குடியொப்பத்திற்கு விடப்படும். ஆனல், சட்டமுன்படிவத்திற்கு எதிராக வாக்களிக்கும்படி சட்டமன்றங்கள் மக்களைக் கோரும். குடியொப்பத்தின் முடிவிற்கேற்ப நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்.

தொடக்கவுரிமை விண்ணப்பம் மசோதா வடிவில் தீட்டப்பெருது, கொள்கை வடிவில் இருந்து அதைச் சட்டமன்றங்கள் ஏற்றுக்கொள்ளுமானுல் உரிமை விண்ணப்பத்தின் அடிப்படையில் சட்டமன்றங்களே மசோதா ஒன்றைத் தீட்டிக் குடியொப்பத்திற்குச் சமர்ப்பிக்கும். சட்டமன்றங்கள் சட்டத் தொடக்க விண்ணப்பத்தை ஏற்றுக்கொள்ளவில்லையெனில் விண்ணப்பம் குடியொப்பத்திற்கு விடப்படும். விண்ணப்பம் குடியொப்பத்தால் ஏற்றுக்கொள்ளப்படுமானுல் சட்டமன்றங்கள் விண்ணப்பத்திற்கு மசோதா வடிவளித்து மீண்டும் வாக்காளர்களின் இறுதி இசைவிற்காகக் குடியொப்பத்திற்குச் சமர்ப்பிக்கும்.

### கோட்டங்களின் தொடக்க உரிமை

கூட்டாட்சி அரசாங்கத்தில் தொடக்கவுரிமை செயல்படுவதைவிடக் கோட்ட அரசாங்கங்களில் தொடக்கவுரிமை அதிகமாகச் செயல்படுகிறது. கோட்டங்களில் மக்களின் எண்ணிக்கை பொதுவாகக் குறைவாக இருப்பதால் இவ்வுரிமையை நன்கு பயன்

படுத்துகின்றனர். சட்டஞ்செய்யுரிமையைத் தொடங்குவதற்கான வாக்காளர்களின் எண்ணிக்கை கோட்டங்களிடையே மாறுபடுகின்றன.

### மீட்புரிமை

சுவிட்ஸர்லாந்து நாட்டின் ஏழு கோட்டங்களில் குறிப்பிட்ட வாக்காளர்கள் விரும்பினால் கோட்டச் சட்டமன்றங்களைக் கலைத்துப் பிரதிநிதிகளைத் திருப்பி அழைத்துக்கொள்ளலாம். மீட்புரிமையின் மூலம் பிரதிநிதிகள் தங்கள் பதவிக்காலம் முடியுமுன்பே சட்டமன்ற உறுப்பினர் பதவியை இழக்கின்றனர். புதிய உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கப் பொதுத் தேர்தல்கள் நடத்தப்படும். சட்டமன்றங்கள் அமைக்கப்படும்.

### ஆஸ்திரேலியா

ஆஸ்திரேலியக் கூட்டாட்சிப் பாராளுமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்ட அரசியலமைப்புத் திருத்த மசோதா மாநிலங்களின் கீழ்ச் சபையின் வாக்காளர்களுக்குக் குடியொப்பத்திற்காகச் சமர்பிக்கப்படவேண்டும். பாராளுமன்றம் சட்டமுன்படிவத்தை நிறைவேற்றிய இரண்டு மாதங்களுக்கு மேலும் ஆறு மாதங்களுக்குள்ளும் முன்படிவம் குடியொப்பத்திற்கு அனுப்பப்படவேண்டும். வாக்காளர்களில் பெரும்பான்மையினர் குடியொப்புதல் மூலம் மசோதாவை ஏற்றுக் கொண்டால்தான் அரசியலமைப்புத் திருத்த சட்டமுன்படிவம் நிறைவேறியதாகக் கருதப்படும்.

அரசியலமைப்புத் திருத்தச் சட்டமுன்படிவத்தைக் கூட்டாட்சிப் பாராளுமன்றங்களில் ஒன்று ஏற்றுக்கொண்டு மற்றது ஏற்க மறுக்குமானால் அம்மசோதாவையும் தலைமை ஆளுநர் குடியொப்பத்திற்கு சமர்ப்பிப்பார். வாக்காளர்களின் தீர்ப்புப்படி சட்டமுன்படிவம் தீர்மானிக்கப் படும்.

மேலும் மாநிலங்களின் பிரதிநிதிகளின் எண்ணிக்கை, இவைகளின் எல்லைகள் ஆகியவைகளை மாற்றியமைக்கும் மசோதாக்களும் சம்பந்தப்பட்ட மாநிலங்களின் குடியொப்பத்திற்கு விடப்படும். மசோதாவிற்கு ஆதரவாகப் பெரும்பான்மையினர் வாக்களித்தால் மசோதா நிறைவேறியதாகக் கருதப்படும்.

### இத்தாலி

இத்தாலிய நாட்டின் அரசியலமைப்புத் திருத்தத்தை இருமுறை பாராளுமன்றம் நிறைவேற்ற வேண்டும். முதல் முறை

நிறைவேற்றத்திற்கும் இரண்டாம் முறை நிறைவேற்றத்திற்கும் இடைவெளி மூன்று மாதங்கள் இருக்க வேண்டும். இவ்விடைக் காலத்தில் ஐந்துலட்சம் வாக்காளர்கள் மசோதாவிற்குக் குடியொப்பத்தை விரும்பினல் அரசியலமைப்புத் திருத்தச் சட்டமுன் படிவம் குடியொப்பத்திற்குச் சமர்ப்பிக்கப்படும்.

### அயர்லாந்து

அயர்லாந்து நாட்டின் பாராளுமன்றத்தின் இரு அவைகளாலும் நிறைவேற்றப்பட்ட அரசியலமைப்புத் திருத்த மசோதா குடியொப்பத்தால் பெரும்பான்மை வாக்காளரால் ஏற்றுக்கொள்ளப் பட்ட பிறகு நடைமுறைக்கு வரும்.

### அமெரிக்க ஐக்கிய நாடுகள்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மாநிலங்கள் சிலவற்றில் அரசியலமைப்புத் திருத்தங்களுக்கு குடியொப்பம் வற்புறுத்தப் படுகிறது. மேலும் சில மாநிலங்களில் சாதாரணச் சட்ட இயற்றலுக்கும் குடியொப்பம் கையாளப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய மக்கள் சட்டமன்றத்தால் நிறைவேற்றப் பட்ட சட்டத்திற்குக் குடியொப்பம் விரும்பினல் அச்சட்டம் மக்கள் முன் குடியொப்பத்திற்காக வைக்கப்படும்; சில மாநிலங்களில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய வாக்காளர்கள் தொடக்க உரிமைகள் மூலம் சட்டங்களுக்கான திட்டங்களைச் சமர்ப்பிக்க லாம். மேலும் சில மாநிலங்களில் மொத்த வாக்காளர்களில் ஐந்து முதல் பதினைந்து விழுக்காடு வாக்காளர்கள் தொடக்க உரிமை மூலம் சட்டக் கொள்கைகளைச் சமர்ப்பிக்கின்றனர். மீட்புரிமையும் அமெரிக்க மாநிலங்களில் கையாளப்படுகிறது. ஆர்கான் மாநிலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் அலுவலரை நீக்கவேண்டி ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை வாக்காளர்கள் விண்ணப்பிக்கலாம். இவ்விண்ணப்பம் குடியொப்பத்திற்கு விடப் பட்டுப் பெரும்பான்மை வாக்காளர்கள் அலுவலரின் நீக்கத்தை ஆதரித்தால் அவர் பதவியிலிருந்து நீக்கப்படுவார். மேலும் புதிய அலுவலருக்கான வாக்கெடுப்பும் நடத்தப்பட்டுப் புதிய அலுவலரும் தேர்ந்தெடுக்கப்படுவார்.

### நேரிடைக் குடியாட்சியின் வெற்றி

நேரிடைக் குடியாட்சி முறை எல்லா நாடுகளிலும் வெற்றி பெறுவதில்லை. சுவிட்ஸர்லாந்தில் முழு வெற்றி பெற்றுள்ளது. நேரிடைக் குடியாட்சி முறைகள் வெற்றி பெற வேண்டுமானல் சில அடிப்படைத் தேவைகள் அமைந்திருக்க வேண்டும். சுவிஸ் நாட்டிலும் நாட்டு மக்களிடமும் இத்தேவைகள் காணப்படுவதால்

நேரிடைக் குடியாட்சியும், நேர்முக மக்களாட்சித் தடைகளும் வெற்றிபெற்றுள்ளன.

மக்கள் கல்வியறிவுடையவர்களாகவும் அரசியலில் சுய சிந்தனையுடையவர்களாகவும் இருக்க வேண்டும். அரசியல் கட்சியின் மீதுள்ள பற்றின் காரணமாக உண்மையிலிருந்தும், நியாயத்திலிருந்தும் வழுவாது நீதியின் மீது பற்றுக் கொள்ள வேண்டும். மக்களுக்குச் சுயாட்சியில் நம்பிக்கையும் பயிற்சியும் அவசியமாகும். நாட்டுப்பற்றும், நாட்டு மக்களின் நலத்தில் ஆர்வமும் வாக்காளர்களுக்கு ஏற்பட வேண்டும். ஒத்துணர்வும், பொறையுடைமையும், சமாதானத்தில் நம்பிக்கையும் அரசியல் கட்சிகளிடமும் மக்களிடமும் தோன்றி வளர வேண்டும். ஆர்வமும் செல்வாக்கும் உள்ள தலைவர்கள் மக்களை நெறிவழி நடத்த வேண்டும். அப்போதுதான் நேரிடைக் குடியாட்சி வெற்றி பெறும். இச் சூழல்கள் சுவிட்ஸர்லாந்து நாட்டில் பெரிதும் தென்படுகின்றன.

## முக்கிய வினாக்கள்

1. நேர்முக மக்களாட்சித் தடைகளின் அவசியம் யாவை?
2. குடியொப்பத்தை விளக்கி அதன் நன்மை தீமைகளைக் கூறுக. தற்கால அரசாங்கங்களில் இது எவ்வளவு தூரம் கையாளப்படுகிறது?
3. சுவிட்ஸர்லாந்தின் நேர்முக மக்களாட்சி முறையை விளக்குக. இங்கு நேர்முக மக்களாட்சியின் வெற்றிக்குக் காரணங்கள் யாவை?
4. உலக நாடுகளில் நேர்முக மக்களாட்சித் தடைகள் எந்த அளவு நடைமுறையில் உள்ளன?
5. குறிப்பு வரைக:
   (அ) மீட்புரிமை
   (ஆ) தொடக்கவுரிமை
   (இ) மக்கள் வாக்கெடுப்பு
   (ஈ) கட்டாயக் குடியொப்பம்
6. பொதுமக்கள் வாக்கெடுப்பு, பொது மக்களால் சட்ட முயற்சி இவற்றின் குணதோசங்களை விளக்கமாக வரைக. (ம. ப. க. செப்டம்பர், 1959)

7. சுவிட்ஸர்லாந்தில் மக்கள் துவக்கம், மக்கள் தீர்ப்பு இவற்றின் இயல்பையும் செயல் முறையையும் விளக்கவும். (ம. ப. க. ஏப்ரல், 1970)
8. 'பொதுமக்கள் வாக்கெடுப்பு' என்பதை விளக்கி நீவிர் படித்துள்ள ஏதாவது ஒரு நாட்டில் அதன் இயல்பையும் நடைமுறையையும் பற்றி ஆராய்க. (செ. ப. க. ஏப்ரல், 1972)
9. 'நேர்முக மக்களாட்சி முறையின் சின்னங்கள்' என்ருல் நீவிர் அறிவதென்ன? அவை வெற்றிகரமாகச் செயல் படத்தேவையான நிபந்தனைகள் யாவை? (செ. ப. க. ஏப்ரல், 1973)
10. கீழவையைக் கட்டுப்படுத்த மேலவையைவிட, நேர்முகச் சட்டம் இயற்றும் முறை உசிதமானதா என்பதை ஆராய்க. (செ. ப. க. செப்டம்பர், 1973)
11. திரும்ப அழைத்தல்— குறிப்பு வரைக. (செ. ப. க. செப்டம்பர், 1973)
12. நேர்முக மக்களாட்சி— குறிப்பு வரைக. செ. ப. க. செப்டம்பர், 1975).

## *. குழு முறை

## (Committee System)

**பலவகைக் குழுக்கள்:** தற்காலிகக் குழுக்கள்—நிரந் தரக் குழுக்கள்—கூட்டுக் குழுக்கள்—சிறப்புக் குழுக்கள்—குழுவின் உறுப்பினர்கள்—இங்கிலாந்தில் குழு முறை—முழு அவைக்குழு—நிலையான குழு—சிறப்புக் குழுக்கள்—கூட்டத் தொடர் குழுக்கள் — தனியார் மசோதாக் குழு.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் குழு முறை—பிரதி நிதிகள் அவை முழுக் குழு—நிலையான குழுக்கள்—கலந் தாய்வுக் குழுக்கள்—சிறப்பு ஆய்வுக் குழுக்கள்—இந்தியா வில் குழுமுறை—சிறப்புக் குழுக்கள்—பொதுத்துறைக் கணக்குக் குழு— விதிமுறைக் குழு — நடவடிக்கை ஆலோசனைக் குழு—தனிநபர் மசோதாக் குழு—பொதுத் துறை நிறுவனக் குழு

**பிரான்சில் குழு முறை**

**கனடாவில் குழு முறை**

**சோவியத் ரஷ்யாவில் ஆணைக் குழு முறை**

சட்டமன்றக் குழுக்கள் தற்காலத்தில் இன்றியமையாதனவாகும். சட்டமன்றங்கள் நிறைய உறுப்பினர்களைக் கொண்ட பெரிய அவைகளாக இருப்பதால் தங்கள் முன் வரும் ஒவ்வொரு பிரச்சினைகளையும் மன்றம் முழுவதுமாக ஆராய இயலுவதில்லை. வேலைப்பளுவின் காரணமாகவும் ஒவ்வொரு மசோதாவையும் கூர்ந்து ஆராய்வதற்கு மன்றங்களுக்குப் போதிய நேரம் இருப்பதில்லை. மேலும், ஒரு குறிப்பிட்ட பிரச்சினையை அப்பிரச்சினையில் தேர்ச்சியும் திறமையுமுடையவர்களின் ஆய்விற்கு விடுதலே சிறந்ததாக அமைகிறது. எனவே, தேர்ச்சியும் திறமையுமுடையவர்களைக் கொண்ட குழுக்கள் அமைக்கப்பட்டு அக்குழுக்களிடம் குறிப்பிட்ட மசோதாக்களைப் பரிசீலனைக்காகவும், அதன் மீதான அறிக்கைக்காகவும் ஒப்படைக்கப்படுகின்றன. இவ்வறிக்கைகளின் அடிப்படையில் சட்டமன்றம் முழுவதுமாக மசோதாவை விவாதித்து நிறைவேற்றும் என்று டேனியல்விட் (Daniel Wit) கூறுகிறார்.[27] ரீட்டு (Reid) என்பாரின் கூற்றுப்படி, குழு மன்றத்தின் கண்ணாகவும், கையாகவும், பல வேளைகளில் மூளையாகவும் அமைகிறது.[28] உட்ரோ வில்சன் கருத்துப்படி, குழுக்கள் சிறு சட்டமன்றங்களாகின்றன.[29]

## பலவகைக் குழுக்கள்: தற்காலிகக் குழுக்கள்

சட்டமன்றக் குழுக்கள் தற்காலிகக் குழுக்கள் (Adhoc Committee) என்றும், நிரந்தரக் குழுக்கள் (Permanent Committees) என்றும், கூட்டுக்குழு (Joint Committee) என்றும் பிரிக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட மசோதாவை ஆராய்வதற்காகத் தற்காலிகக் கமிட்டிகள் அமைக்கப்படுகின்றன. ஒப்படைக்கப்பட்ட பணிகள் முடிந்தவுடன் இக்கமிட்டிகள் கலைக்கப்படும். இவைகள் சிறப்புக் குழுக்கள் (Special Committee) என்றும், தேர்வுக்குழுக்கள் (Select Committee) என்றும் அழைக்கப்படுகின்றன. சிறப்புக் குழுக்களும் தேர்வுக்குழுக்களும் குறிப்பிட்ட நோக்கங்களுக்காக அமைக்கப்பட்ட தற்காலிகக் குழுக்களாகும்.

[27] Daniel Wit: 'Almost all democratic legislatures have turned to the Committee method as the primary means of combating the quantity and Complexity of their work loads. Through the committee technique a number of measures may simultaneously be considered and investigated, while recommendation for final disposition by the legislature can be reached with a speed which would be impossible if the whole house had to engage in this activity.'

[28] Reid: 'The Committee is eye, the hand, and very often the brain of the House.'

[29] Woodrow Wilson. 'The Committees are little Legislatures.'

### நிரந்தரக் குழுக்கள்

நிலையான குழுக்கள் (Permanent Committees Standing Committees) கலைக்கப்படாது எப்போதும் நிலவும். புகார்களை விசாரிப்பதற்காகவும், சட்டங்களைத் திட்டமிடுவதற்காகவும், அயல் நாட்டுக் கொள்கைகளை வகுப்பதற்காகவும், அரசாங்க வரவு செலவுகளைக் கண்காணிக்கவும் நிரந்தரக் குழுக்கள் ஏற்படுத்தப்படுகின்றன. நிரந்தரக் குழுக்களின் பணிகள் நாட்டிற்குநாடு வேறுபடுகின்றன.

### கூட்டுக் குழுக்கள்

கூட்டுக்குழு (Joint Committee) என்பது சட்டமன்றத்தின் இரு அவைகளின் உறுப்பினர்களையும் கொண்டதாகும். கூட்டுக் குழுக்கள் இரு அவைகளிடையே தோன்றும் முரண்பாடுகளைத் தீர்ப்பதற்காக அமைக்கப்படும். கூட்டுக் குழுக்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இணைப்புக் குழுக்கள் (Conference Committee) என்று அழைக்கப்படுகின்றன. கூட்டுக் குழுக்கள் தற்காலிகக் குழுக்களாகவோ அல்லது நிரந்தரக் குழுக்களாகவோ இருக்கலாம்.

### சிறப்புக் குழுக்கள்

சிறப்பான ஒரு குறிப்பிட்ட விவகாரத்தைக் கவனிப்பதற்காக அமைக்கப்படும் குழுவிற்குச் சிறப்புக் குழு என்று பெயர். கல்வி, அயல்நாட்டுக் கொள்கை, வாணிபம் என ஏதாவது ஒரு துறையைக் கவனிக்கச் சிறப்புக் குழுக்கள் அமைக்கப்படுகின்றன. குழுக்கள் தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட துறையைச் சார்ந்த மசோதாக்களை வகுத்துப் பரிசீலனை செய்து அதற்கான அறிக்கையைச் சட்டமன்றத்தில் சமர்ப்பிக்கும்.

### குழுவின் உறுப்பினர்கள்

சட்ட மன்றத்தின் அவைத் தலைவரோ அல்லது உறுப்பினர்களை நியமிப்பதற்கென அமைக்கப்படும் குழுவோ அல்லது சட்ட மன்றமோ குழுக்களின் உறுப்பினர்களை நியமிப்பர். குழு உறுப்பினர்களின் நியமனத்தில் நாடுகளிடையே வேறுபாடுகளைக் காண்கிறோம். மேலும் குழுவில் இடம் பெறும் அங்கத்தினர்களின் எண்ணிக்கையும் குழுவிற்குக் குழு மாறுபடும்; நாட்டிற்கு நாடு மாறுபடும். பொதுவாகக் குழுக்களில் எதிர்க்கட்சியினருக்கும் பல திறப்பட்ட ஆர்வங்களைக்கொண்ட பல பிரிவினர்களுக்கும் பிரதிநிதித்துவம் வழங்கப்படும். குழுக்களின் பொதுவான தன்மைகளைக் கண்டோம். உலகின் சில முக்கிய நாடுகளில் குழு முறை செயல்படுவதைக் காணலாம்.

**இங்கிலாந்தில் குழு முறை**

இங்கிலாந்தில் குழு முறை சட்டமியற்றல் முக்கியமான பங்கை வகிக்கிறது. ஒவ்வொரு மசோதாவும் 600 உறுப்பினர்களுள்ள பாராளுமன்றத்தில் முழுமையாக விவாதிக்கப்பட்டுத் தீர்மானிக்கப்பட வேண்டுமென்ருல், மன்றம் ஆண்டு முழுவதும் தொடர்ச்சியாக அமர வேண்டும். மேலும் 600 பேர் உள்ள கூட்டத்தில் எந்த முடிவும் விரைவில் ஏற்படாது. சட்ட ஆக்கங்களும் குறித்த காலத்தில் முற்றுப் பெருது. மேலும் ஒரு மசோதாவைப் பாராளுமன்றத்தில் விவாதிப்பதென்ருல் ஒருவர் ஒரு முறைக்கு மேல் பேசக் கூடாது என்பது போன்ற சில முறைகளைப் பின்பற்ற வேண்டும். காலதாமதத்தைத் தவிர்க்கவும், மசோதாக்களை நன்கு ஆராயவும், விரைவில் நிறைவேற்றவும் குழுமுறைகள் பின்பற்றப்படுகின்றன. இங்கிலாந்தில் ஐந்து வகைக் குழுக்கள் இருக்கின்றன.

**முழு அவைக்குழு**

முழு அவைக் குழுவில் (Committee of the whole house) பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் அனைவரும் இருப்பர். மன்றம் மசோதாக்களை ஆராயும் குழுவாகச் செயல்படும்போது மக்கள் மன்ற அவைத் தலைவர் (Speaker) தலைமை தாங்க மாட்டார். குழுவின் தலைவர் வகிப்பார். குழுவே செயல்படுகிறது; பாராளுமன்றம் செயல்படவில்லை என்பதைக் காட்டுவதற்காக அவைத் தலைவரின் முத்திரைக்கோல் (Mace) நாற்காலியின் அடியில் வைக்கப்படும். குழுவின் பணி முடிந்து மன்றத்தின் பணி ஆரம்பிக்கும்போது மன்றத்தின் அவைத்தலைவர் தலைமை ஏற்பார். முத்திரைக்கோல் உரிய இடத்தில் வைக்கப்படும். குழுக் கூட்டங்களில் மன்ற முறை தளர்த்தப்பட்டு ஒருவர் எத்தனை முறை வேண்டுமானுலும் பேச அனுமதிக்கப்படுவார்.

முழு அவைக் குழு வருவாய் வழிகளை ஆராயும்போது வழி வகைக் குழு (Committee of Ways and Means) என்றும், அது செலவினங்களைப் பரிசீலிக்கும் போது வழங்கும் குழு (Committee of Supply) என்றும் அழைக்கப்படுகிறது. மசோதாக்களை விவாதிக்கும் வாய்ப்பும் பாராளுமன்றத்திற்கு நிறைய உள்ளதால் மன்ற முழுக்குழுக்களுக்கு அதிகமான மசோதாக்கள் பரிசீலனைக்கு அனுப்பப்படுவதில்லை.

**நிலையான குழு**

நிலையான ஒரு குழுவில் (Standing Committee) ஐம்பதிலிருந்து முப்பது உறுப்பினர்கள் வரை இருப்பர். ஒரு குறிப்பிட்ட தலைப்புப்

பரிசீலனைக்கு வரும்போது அத்தலைப்பில் தேர்ச்சி பெற்றுள்ள பதினைந்து அல்லது இருபது உறுப்பினர்களை நிலையான குழுவில் மேலும் சேர்த்துக்கொள்ளலாம். தேர்வுக்குழுவால் கொடுக்கப்பட்டுள்ள பத்துப் பேர் அடங்கிய பட்டியலில் இருந்து நிலையான குழுவின் தலைவர் நியமிக்கப்படுவார். பொதுவாக இவர் அரசாங்கத்தை ஆதரிப்பவராகவே இருப்பார். நிலையான குழுவின் பரிசீலனைக்காக ஒதுக்கப்பட்ட மசோதாக்களை இது ஆய்ந்து அறிக்கையைச் சமர்ப்பிக்கும்.

### சிறப்புக் குழுக்கள்

சிறப்புக்குழுக்களில் (Select Committee) பதினைந்து உறுப்பினர்கள் இருப்பர். இவர்கள் தேர்வுக் குழுவால் (Committee of Selection) நியமிக்கப்படுகிறார்கள். பாராளுமன்றத்தின் மக்கள் சபையோ அல்லது பிரபுக்கள் சபையோ அனுப்பும் தலைப்புகளைச் சிறப்புக் குழுக்கள் பரிசீலனை செய்யும். இக்குழு உறுப்பினர்கள் ஆய்வுகளுக்காகவும் விசாரணைக்காகவும் பல இடங்களுக்குச் சென்று அரசாங்க அலுவலகங்களைப் பார்வையிடலாம். சிறப்புக் குழுக்கள் தங்கள் அறிக்கையைச் சமர்ப்பித்தவுடன் கலைக்கப்படும்.

### கூட்டத் தொடர்க் குழுக்கள்

கூட்டத் தொடர் குழுக்கள் (Sessional Committees) பாராளுமன்றத்தின் ஒவ்வொரு கூட்டத்தின் ஆரம்பத்திலும் நியமிக்கப்படும். இவைகள் மன்றக் கூட்டத் தொடர் முழுவதும் பணியாற்றும். மன்றத்திற்கு வந்திருக்கும் முறையீட்டு விண்ணப்பங்களைக் கூட்டத்தொடர்க் குழுக்கள் ஆராய்ந்து அறிக்கையைச் சமர்ப்பிக்கும்.

### தனியார் மசோதாக் குழு

தனியார் மசோதாக்குழு (Private Bill Committee) தேர்வுக் குழுவால் தேர்ந்தெடுக்கப்படும். இதில் நான்கு உறுப்பினர்கள் இருப்பர். பாராளுமன்றத்தில் கொண்டுவரப்படும் தனியார் மசோதாக்களை இக்குழு ஆய்வு செய்யும். இக்குழுவின் உறுப்பினர்கள் குறிப்பிட்ட தனியார் மசோதாவில் தனி ஈடுபாடு இல்லையென உறுதிமொழி கூறவேண்டும். இவர்கள் மசோதாவை நடுநிலையுடன் ஆய்ந்து அறிக்கையைச் சமர்ப்பிக்க வேண்டும்.

சட்ட மன்றக் குழுக்களில் குறைவான எண்ணிக்கையுடைய உறுப்பினர்கள் இருப்பதால் தங்கள் முன்வரும் மசோதாக்களை நன்கு பரிசீலிக்க இயலும். மேலும் குறிப்பிட்ட மசோதாவில்

தேர்ச்சியுடையவர்கள் குழுவில் உறுப்பினராக நியமனம் பெறுவதால் மசோதாவின் குறைநிறைகளை ஆராய்ந்து அறிக்கையனுப்ப முடியும். சட்டம் இயற்றுதலில் பாராளுமன்றக் குழுக்கள் இங்கிலாந்தில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன.

### அமெரிக்க ஐக்கிய நாடுகளில் குழுமுறை

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சட்டமன்றக் குழுமுறை சட்ட ஆக்கத்தில் முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது. பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் சட்டமன்றத்தின் தலைமைப் பொறுப்புத் தலைமை அமைச்சரிடமும் அமைச்சரவையிடமும் உள்ளது. மசோதாக்களை வகுப்பதிலும் நிறைவேற்றுவதிலும் இவர்கள் பெரும் பங்கேற்கின்றனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சட்டமன்றக் குழுக்களே சட்டம் இயற்றுதலில் தலைமைப் பொறுப்பை ஏற்று வழி நடத்துகின்றன என்று கார்டர் (Carter) கூறுகிருர்.[80] அமெரிக்காவில் நிலவும் பல சட்ட மன்றக் குழுக்களைக் காணலாம்.

### பிரதிநிதிகளவை முழுக்குழு

இங்கிலாந்தில் இருப்பது போலவே பிரதி நிதிகள் அவை முழுக்குழு (Committee of Whole House of Representatives) பல மசோதாக்களைப் பரிசீலனை செய்கிறது. பிரதிநிதிகள் அவை குழுவாகச் செயல்படும் போது அவைத் தலைவர் (Speaker) குழுவிற்குத் தலைமை தாங்குவதில்லை. இக்குழு செயல்படும்போது நூறு பிரதிநிதிகளாவது கலந்து கொள்ள வேண்டும். வருவாய் வழிகள் பற்றியும் ஒதுக்கீடுகள் பற்றியும் பிரதிநிதிகளவை முழுக்குழு ஆய்வு நடத்தும்.

### நிலையான குழுக்கள்

நிலையான குழுக்களின் (Standing Committees) எண்ணிக்கை 1946ஆம் ஆண்டின் சட்டமன்றச் சீரமைப்புச் சட்டப்படி திருத்தி அமைக்கப்பட்டது. இச்சட்டத்திற்கு முன் பிரதிநிதிகள் சபையில் நாற்பத்தி எட்டுக் குழுக்களும், செனட்டில் 33 குழுக்களும் இருந்தன. சீரமைப்புச் சட்டத்தின்படி நிலையான குழுக்களின் எண்ணிக்கை குறைக்கப்பட்டுத் தற்போது பிரதிநிதிகள் சபையில் 19 குழுக்களும் செனட்டில் 15 குழுக்களும் உள்ளன.

[80] Carter. 'The committees are in fact the real legislative bodies of the House of Representatives. They have been called the 'little legislatures' by the critic... they have full power over bills committed to them except that they cannot change the title or subject; but amendment of a project may essentially change it'.

பாங்குகள், நாணயமுறை, வாணிபம், பொதுப்பணிகள், தொழிலாளர் நலன், அயல்நாட்டுத் தொடர்பு, உள்நாட்டு அயல் நாட்டு வாணிபம், பணஒதுக்கீடு ஆகிய துறைகளைக் கவனிக்க நிலையான குழுக்கள் உள்ளன. இக்குழுக்களின் உறுப்பினர்களைச் சட்டமன்றங்களே தேர்ந்தெடுக்கின்றன. சட்டமன்றத்திலுள்ள அரசியல் கட்சிகளுக்கு அவைகளின் பலத்திற்கேற்ப விகிதாச் சாரப்படி குழுக்களில் உறுப்பினர் பதவி அளிக்கப்படுகிறது. பெரும்பான்மைக் கட்சியின் மூத்த உறுப்பினர் குழுவின் தலைவராக நியமிக்கப்படுகிறார். குழுவின் நடவடிக்கைகளைக் கவனிப்பதும் விவாதங்களை நெறிப்படுத்துவதும், மன்றத்திற்கு அறிக்கையைச் சமர்ப்பிப்பதும் குழுத் தலைவரின் பணிகளாகும்.

### கலந்தாய்வுக் குழுக்கள்

கலந்தாய்வுக் குழுக்களில் (Conference Committee) சட்டமன்றத்தின் இரு அவைகளின் உறுப்பினர்களும் இடம் பெறுவர். ஒவ்வோர் அவையிலிருந்தும் மூன்று உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுக் கலந்தாய்வுக் குழுக்கள் அமைக்கப்படும். இரு அவைகளுக்குமிடையே ஒரு மசோதா பற்றி இருக்கும் கருத்து வேறுபாடுகளை இக்குழு நீக்கும். இரு அவைகளும் ஏற்க மறுக்கும் மசோதாவின் பகுதிகளைக் குழுக்கள் திருத்தி அமைத்து ஒரு சமரசத்தை ஏற்படுத்தும்.

### சிறப்பு ஆய்வுக் குழுக்கள்

சிறப்பு ஆல்வுக் குழுக்கள் (Special Investigating Committees) குறிப்பிட்ட செய்திபற்றி ஆய்வு நடத்தி அறிக்கையினைச் சட்டமன்றத்திற்குச் சமர்ப்பிக்கும். குடியரசு தலைவர் ரூஸ்வெல்டின் ஆட்சிக் காலத்தில் 165 முறை குழு விசாரணைகள் நடைபெற்றன. இக்குழுக்கள் பொது மக்களிடமும் அலுவலர்களிடமும் விசாரணை செய்து அறிக்கையைத் தயாரிக்கும் என ஃபைனர் கூறுகிறார்.[81]

குழுமுறை அமெரிக்க அரசியலில் நிலைத் தன்மையைப் பெற்றுள்ளது. இங்கிலாந்தைவிட அதிகமான நிரந்தரக் குழுக்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உண்டு. மேலும் அமெரிக்கச் சட்டமன்றக் குழுக்களின் அதிகாரங்களும் இங்கிலாந்தின் சட்டமன்றக் குழுக்களின் அதிகாரத்தைவிட மிகுதியாக இருக்கின்றன.

[81] Finner. 'The most notable difference between the Congressional Committees and those of the British and continental parliaments is that the farmer may institute hearings in any place where their information is to be found, and they may open their hearings to receive witnesses of all kinds'.

## இந்தியாவில் குழுமுறை

இந்தியப் பாராளுமன்றத்தின் இரு அவைகளிலும் குழுக்கள் அமைக்கப்பட்டு முக்கியமான பணிகள் ஒப்படைக்கப்பட்டுள்ளன. சிறப்புக் குழுக்கள், பொதுக் கணக்குக்குழு, க் விதிகளின் குழு, நடவடிக்கை ஆலோசனைக் குழு, தனிநபர் மசோதாக் குழு, பொதுத் துறை நிறுவனக் குழு ஆகியன இந்தியாவின் முக்கியச் சட்ட மன்றக் குழுக்களாகும்.

## சிறப்புக் குழுக்கள்

சிறப்புக் குழுக்கள் (Select Committee) சட்டமன்றத்தால் நியமிக்கப்படுகின்றன. சிறப்புக் குழுக்களின் தலைவர்களை லோக் சபையின் தலைவர் நியமனம் செய்வார். லோக்சபையின் துணைத் தலைவர் சிறப்புக் குழுவின் உறுப்பினராக இருந்தால் இவரே குழுவின் தலைவராகப் பணியாற்றுவார். குழு தனது பார்வைக்காக எந்த ஆவணங்களையும் தன்முன் சமர்ப்பிக்கும்படி பணிக்கலாம்; சான்றுகளைக் கோரலாம்; நபர்களை விசாரிக்கலாம்.

குழுவின் உறுப்பினரல்லாதார் குழுவில் உரையாற்றவோ குழு நடவடிக்கைகளில் கலந்து கொள்ளவோ இயலாது. குழுத் தலைவரின் அனுமதியின் பேரில் குழுவின் உறுப்பினராக இல்லாத அமைச்சர்களும் உரையாற்றலாம். அவசியமென்று கருதினல் குழு உபகுழுக்களை நியமித்துக் கொள்ளலாம். குழுவின் செயல்கள் முற்றுப் பெறும்போது தனது அறிக்கையை மன்றத்திற்கு சமர்ப்பிக்க வேண்டும்.

## பொதுத்துறைக் கணக்குக் குழு

இந்தியாவின் தலைமைக் கணக்காயர் அறிக்கையின் மீதான வரவு செலவுகளைப் பொதுக் கணக்குக்குழு (Public Accounts Committee) ஆய்வு செய்யும். அரசாங்கத் துறைகள் ஒவ்வொன்றிற்கும் செய்யப்பட்ட ஒதுக்கீடுகளையும், அவ்வொதுக்கீட்டுத் தொகைகள் முறையாகச் செலவிடப்பட்டதையும் குழு பார்வையிடும். மேலும், பொதுத்துறைத் தொழில் நிறுவனங்களின் வரவு செலவுக் கணக்குகளையும் தணிக்கை செய்யும். திட்டங்களுக்கான ஒதுக்கீடுகளையும் அவைகள் செலவிடப்பட்ட முறையையும் கவனிக்கும். கணக்கு வைக்கப்படும் முறையில் உள்ள குறைகளையும் சுட்டிக் காட்டும். எதிர்க்கட்சித் தலைவர் இக்குழுவின் தலைவராகப் பணியாற்றுவது சிறப்புடையதாகும்.

ஆவணங்களையும் சாட்சியங்களையும் பொதுக்கணக்குக் குழு பார்வையிடும்; விசாரிக்கும். குழுவினர் கேட்கும் விபரங்களையும்

விளக்கங்களையும் அரசாங்கத்துறைச் செயலாளர்கள் குழுவின் முன் நேரில் சென்று அளிக்கவேண்டும்.

பொதுக் கணக்குக் குழு அரசாங்கச் செலவினங்களில் நடந்துள்ள முறை கேடுகளைச் சுட்டிக்காட்டிப் பொதுமக்கள் அறியும்படி செய்யும். குறைகளுக்கான நடவடிக்கைகளுக்குப் பாராளுமன்றத்திற்குப் பரிந்துரை செய்யும். இக்குழுவின் அறிக்கை மீதான விவாதத்தைப் பாராளுமன்றம் மேற்கொள்ளும்.

### விதிமுறைக் குழு

நெறிமுறை (அ) விதிமுறைக் குழுவிற்கு (Rules Committee) லோக்சபையின் தலைவர் அதிகாரப் பூர்வத் தலைவராக இருப்பார். இவர் இல்லாத காலத்தில் லோக்சபையின் துணைத் தலைவர் குழுவின் தலைவராகப் பணியாற்றுவார். பாராளுபன்ற நடைமுறை விதிகளை வகுப்பதும், மாற்றுவதும், திருத்துவதும் இக்குழுவின் பணிகளாகும்.

### நடவடிக்கை ஆலோசனைக்குழு

பாராளுமன்றத்தின் நடவடிக்கை ஆலோசனைக்குழு (Business Advisory Committee) மன்றத்தின் நடவடிக்கைகளைத் திட்டமிடும். இதற்கான கால அட்டவணையை வகுக்கும். ஒவ்வொரு பாராளுமன்றக் கூட்டத்திலும் சமர்ப்பிக்கப்பட வேண்டிய மசோதாக்களின் எண்ணிக்கையையும், அவைகள் ஒவ்வொன்றிற்கும் ஒதுக்கப்பட வேண்டிய காலத்தையும் திட்டமிடும்.

### தனிநபர் மசோதாக் குழு

தனிநபர் மசோதாக் குழு (Committee on Private Members's Bills) தனிநபர் மசோதாக்களை ஆராய்வதுடன் அவைகளுக்கு ஒதுக்கப்படவேண்டிய காலத்தையும் தீர்மானிக்கும். மசோதாக்கள் மன்றத்தின் அதிகார வரம்பிற்குட்பட்டதா என்பதையும் கவனிக்கும். மசோதாக்களை வகைப்படுத்திப் பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கும்.

### பொதுத்துறை நிறுவனக்குழு

பொது நிறுவனக்குழு (Committee of Public Undertakings) பொதுத்துறை நிறுவனங்களின் வரவு செலவுக் கணக்குகளைத் தணிக்கை செய்யும். பாராளுமன்றத்தின் இரு அவைகளைச் சார்ந்த உறுப்பினர்களும் பொதுநிறுவனக்குழுவில் உறுப்பினர்களாக இருப்பர். பொதுத்துறை நிறுவனங்கள் சுயேச்சையான நிறுவனங்கள் ஆகும். இவைகள் சட்டமன்றக் குழுவின் ஆய்வுக்கு

உட்படுதல் பொதுத்துறை நிறுவனங்களில் நிகழக்கூடிய முறை கேடுகளைத் தவிர்க்கும்.

மதிப்பீட்டுக் குழு, புகார்களின் விசாரணைக் குழு, சலுகைகளைக் கண்காணிக்கும் குழு, அரசாங்கக் காப்பு நிதிக்குழு என மேலும் பல சட்டமன்றக் குழுக்கள் இந்தியாவில் அமைக்கப்பட்டுப் பணியாற்றுகின்றன.

## பிரான்சில் குழு முறை

பிரான்சு நாட்டின் தேசிய சபையில் முப்பதுக்கு மேல்படாத தற்காலிகக் குழுக்கள் அவ்வப்போது நியமிக்கப்படுகின்றன. ஆறு நிரந்தரக் குழுக்களும் உள்ளன. கலாச்சார, சமுதாய, விவகாரங்களைக் கவனிக்கவும், உற்பத்தி, வாணிகம் ஆகியவைகளைக் கண்காணிக்கவும் தேசியப் படைகளுக்கும், அயல்நாட்டு விவகாரங்களுக்கும், நிதித்துறைக்கும், திட்டமிடலுக்கும், அரசியலமைப்புச் சட்டமியற்றல், பொது நிர்வாகம் ஆகியவைகளைப் பார்வையிடவும் நிரந்தரக் குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. குழுக்களின் உறுப்பினர்களின் எண்ணிக்கை குழுவிற்குக் குழு மாறுபடுகின்றன. ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு தலைவரும், மூன்று துணைத்தலைவர்களும், இரண்டு மூன்று செயலாளர்களும் நியமிக்கப்படுகிறார்கள்.

## கனடாவில் குழுமுறை

கனடாவின் பாராளுமன்றத்தில் அவை முழுக்குழு, சிறப்புக் குழு, நிரந்தரக் குழு, இணைப்புக் குழு என நான்கு வகைக் குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. மன்ற முழுக்குழு பண மசோதாக்களைப் பரிசீலனை செய்யும். சிறப்புக் குழுக்கள் அவ்வப்போது நியமிக்கப்படுகின்றன. இக்குழுக்களில் பதினைந்துக்கு மேற்படாத உறுப்பினர்கள் நியமனம் பெறுகின்றனர்; குறிப்பிட்ட மசோதாக்கள் இக்குழுக்களின் பரிசீலனைக்கு அனுப்பப்படும். நிரந்தரக் குழுக்கள் ஒவ்வொரு பாராளுமன்றக் கூட்டத்தின்போதும் அமைக்கப்படும். இணைப்புக் குழுக்களில் பாராளுமன்றத்தின் இரு அவைகளிலிருந்தும் உறுப்பினர்கள் நியமிக்கப்படுவர். மன்றத்தில் அரசியல் கட்சியின் பலத்திற்கேற்பக் குழுவில் கட்சி உறுப்பினர்களுக்கு இடம் அளிக்கப்படும். பெரும்பான்மைக் கட்சியைச் சார்ந்தவர்கள் குழுவின் தலைவராக அமைவர். கனடாவின் குழுமுறை இங்கிலாந்தின் குழுமுறைக்குப் பெரிதும் ஒத்ததாக அமைகிறது.

## சோவியத் ரஷ்யாவின் ஆணைக்குழு முறை

சோவியத் ரஷ்யாவில் பாராளுமன்றக் குழுக்கள் ஆணைக் குழுக்கள் (Commissions) என அழைக்கப்படுகின்றன. பாராளு மன்றத்தின் இரு அவைகளும் ஆணைக்குழுக்களை அமைக்கின்றன. இவ்வாணைக் குழுக்கள் தங்கள் மன்றத்திற்கும் பொறுப்பானவை களாகும். பாராளுமன்றம் நடைமுறையில் இல்லாத காலத்தும் இவ்வாணைக் குழுக்கள் பணியாற்றும். அயல்நாட்டு விவகாரங் களைக் கவனிக்கவும், வரவு செலவிற்கும், சட்டங்களைத் திட்ட மிடவும் ஆணைக் குழுக்கள் நியமிக்கப்பட்டுள்ளன. இவ்வாணைக் குழுக்கள் அலுவலர்களை விசாரிக்கவும், அரசாங்க ஆவணங்களைப் பார்வையிடவும் அதிகாரம் படைத்தனவாகும். இவ்வாணைக் குழுக்கள் தங்கள் அறிக்கைகளைப் பாராளுமன்றத்திற்குச் சமர்ப் பித்துச் சட்டம் இயற்றுதலைப் பரிந்துரைக்கும்.

சட்ட இயற்றலில் குழுக்களின் பங்கு மிக முக்கியமானதாகும். சட்ட மன்றங்களின் பணி பெருகியுள்ள தற்காலத்தில் குழு முறை பின்பற்றப்படாவிட்டால் சட்டமன்றங்கள் தங்கள் கடமைகளை ஆற்ற இயலாது.

## முக்கிய வினாக்கள்

1. தற்காலச் சட்டம் இயற்றலில் குழுமுறையின் பங்கை விவரிக்கவும்.
2. குழுக்களின் வகைகளை எடுத்துக்காட்டுகளுடன் கூறி அவைகளின் பணிகளை விவரிக்க.
3. கீழ்க்காணும் நாடுகளில் நிலவும் குழுமுறையை விவரிக்க வும்.
   (அ) இங்கிலாந்து
   (ஆ) அமெரிக்க ஐக்கிய நாடுகள்
   (இ) இந்தியா
   (ஈ) பிரான்சு
   (உ) கனடா
   (ஊ) சோவியத் ரஷ்யா
4. சட்டமன்றக் குழுக்கள்—குறிப்பெழுதுக. (செ. ப. க. ஏப்ரல், 1973.)

# 11. செயல்துறை
(Executive)

## அ. செயல்துறை—பொது

**செயல்துறை—பொது :** செயல்துறையின் அடக்கம்.

**செயல்துறையின் வகைகள் :** உண்மைச் செயல் துறையும் பெயரளவுச் செயல்துறையும்—ஒருமைச் செயல் துறையும் பன்மைச் செயல்துறையும்—பாராளுமன்றச் செயல்துறையும் தலைவர் முறைச் செயல்துறையும்—அரசியல் செயல்துறையும் நிரந்தரச் செயல்துறையும்.

**செயல்துறையின் பணிகள் :** சட்டம், ஒழுங்கு நிலை நாட்டல்—அயல்நாட்டு உறவும் தூதாண்மையும்—பாதுகாப்பும் இராணுவமும்—சட்டத்துறை சார்ந்த பணிகள்—நீதித்துறை சார்ந்த பணிகள்—நிதித்துறை சார்ந்த பணிகள்—பொதுநலப் பணிகள்—நாட்டுடைமைத் தொழில்கள்—நிருவாக அலுவல்கள்—வளர்ச்சித் திட்டங்கள்—நெருக்கடிக் காலப் பணிகள்—செயல்துறையின் பணிகள் பெருகியதன் காரணங்கள்.

**செயல்துறையின் தேர்வு :** பரம்பரைக் கோட்பாடு—நேரிடைத் தேர்தல் முறை—மறைமுகத் தேர்தல் முறை—சட்டமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படல் — நியமன முறை—செயல்துறைத் தலைவரின் பதவிக் காலம்—செயல்துறைத் தலைவரின் அதிகாரங்கள்.

சட்டத்துறை, செயல்துறை, நீதித்துறை எனப் முப்பெருந் துறைகள் அடங்கியதே அரசாங்கம் என்று அறிவோம். சட்டத் துறை இயற்றிய சட்டங்களைச் செயல்படுத்துவதும், அரசின் ஆணையை நிறைவேற்றுவதும் செயல்துறையாகும். தற்கால அரசாங்கத்தில் செயல்துறையின் பணியும் பங்கும் மிக முக்கியமானதாகக் கருதப்பட்டுச் செயல்துறை அரசாங்கத்தின் அச்சாணி எனவும், உயிர்நாடி எனவும் அழைக்கப்படுகிறது. பண்டைக் காலத்தில் முடியாட்சியில் தனிஒருவரிடம் செயல்துறை அதிகா

ரங்கள் இருந்தன. ஒருசில ஆலோசகர்களின் உதவியால் அரசாங்க அலுவல்கள் அனைத்தையும் அரசர் கண்காணித்தார். சட்டத் துறை அதிகாரங்களும் நீதித்துறை அதிகாரங்களும் செயல்துறை யின் தலைவராகிய மன்னரிடமே இருந்தன. இதேபோல வல்லாட்சி அரசாங்க முறையிலும் முக்கியத்துவம் செயல்துறைக்கே அளிக்கப் பட்டது. செயல்துறையின் தலைவரான வல்லாட்சியாளரே சட்டம் இயற்றுபவராகவும், நீதி வழங்குபவராகவும் விளங்கினர். பாராளு மன்ற முறைக் குடியாட்சியிலும் செயல்துறையின் முக்கியத் துவத்தைக் காணலாம். கொள்கையளவில் காணின் சட்டத் துறைக்குக கட்டுப்பட்டதாகச் செயல்துறை தென்படும். ஆனல் நடைமுறையில் உண்மைச் செயல்துறையினரான அமைச்சரவை சட்டமன்றங்களின் மீது செல்வாக்கு உடையதை நாம் உணர லாம். திட்டங்களைத் தீட்டுவதும், அவைகளுக்கான சட்டங்களை இயற்றச் சட்டமன்றங்களைத் தூண்டுவதும் அச் சட்டங்களைச் செயல்படுத்துவதும் அமைச்சரவையேயாகும். மேலும் வரவு செலவுக் கணக்குகளைத் தயாரிப்பதும், அவைகளுக்குப் பாராளு மன்றத்தின் ஒப்புதல் பெறுவதும் உண்மைச் செயல்துறையின ரான அமைச்சரவையாகும். தலைவர் முறை அரசாங்க அமைப் பிலும் செயல்துறையின் முக்கியத்துவத்தைக் காணலாம். குடி யரசு தலைவர் சில குறிப்பிட்ட சட்டங்களை இயற்றும்படி பாராளு மன்றத்திற்குப் பரிந்துரைகள் அனுப்புகிறர். இவரது நீதிப் பங் கீட்டுப் பரிந்துரைகளும் பாராளுமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப் படுகின்றன. பொதுவாகக் காணின் எம்முறை அரசாங்க அமைப் பாக இருந்தாலும் செயல்துறையின் முக்கியத்துவத்தையும் இன்றி யமைபாமையையும் காணலாம் புரூஸ்டர் (Brewester) கருத்துப் படி, 'முடியாட்சியாக இருந்தாலும், வல்லாட்சியாக இருந்தாலும், அல்லது தற்காலத் தலைவர்முறை அரசாங்கமாக இருந்தாலும் செயல்துறை அரசாங்கத்தையே பிரதிபலிக்கிறது.'[1] பாராளுமன்ற முறைக் குடியாட்சியில் செயல்துறையினராகிய அமைச்சரவை மாறும்போது அரசாங்கம் மாறியதாகவே கூறுகிறேம். இங்கு ஒரு பகுதியாகிய அரசாங்கத்தைத் தாங்கி நிற்கிறது. இவைவகளி லிருந்து செயல்துறையின் முக்கியத்துவத்தை நாம் அறியலாம்.

### செயல்துறையின் அடக்கம்

செயல்துறை என்ற சொல் இரு பொருள் உடையதாக உள்ளது. சுருங்கிய பொருளில் செயல்துறையைக் காணும்போது

[1] Brewster: 'No matter what form dictatorship may take, whether it be a monarchy, a tyranny, or modern variety under a leader, it represents a form of executive government.'

செயல்துறைத் தலைவரும் அவரது ஆலோசகர்களான அமைச்சர் களும் அடங்குவர். இந்தியாவின் குடியரசு தலைவரான திரு. நீலம் சஞ்சீவரெட்டி அவர்களும், பிரதம மந்திரி திரு மொரார்ஜி தேசாய் அவர்கள் தலைமையிலான அமைச்சர்களும் இந்தியச் செயல்துறை யில் அடங்குவர். இங்கிலாந்தின் செயல்துறையில் இரண்டாம் எலிசபெத் அரசியாரும் அவரது அமைச்சர் குழுவும் அடங்குவர். அமெரிக்காவின் செயல்துறையில் குடியரசு தலைவரும், அவரது செயலாளர்களும் அடங்குவர்.

செயல்துறையை விரிந்த பொருளில் காணும் போது செயல் துறையின் தலைவர், அவரது அமைச்சர்கள், அரசாங்கத் துறை களும் அவைகளின் செயலாளர்கள், அரசாங்கத்தின் பல நிலை யிலும் உள்ள அலுவலர்கள் ஆகிய அனைவரும் செயல்துறையில் அடங்குவர். அரசாங்கத்தின் திட்டங்களை வகுப்பது அமைச்சர் களாகவும், அத்திட்டங்களை ஒப்புதல் செய்வது செயல்துறைத் தலைவராகவும், அவைகளை நடைமுறைப்படுத்துவது பொதுத்துறை அலுவலர்களாகவும் (Civil Service) அமைகின்றனர்.

## செயல்துறையின் வகைகள்

செயல்துறையை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம். உண்மைச் செயல்துறை பெயரளவுச் செயல்துறையென்றும், ஒருமைச் செயல்துறை, பன்மைச் செயல்துறையென்றும், பாராளு மன்ற முறைச் செயல்துறையென்றும், அரசியல் செயல்துறை, நிரந்தரச் செயல்துறையென்றும் செயல்துறை வகைப்படுத் தப்படும்.

### உண்மைச் செயல்துறையும் பெயரளவுச் செயல்துறையும்

பழைய முடியாட்சியிலும், வல்லாட்சிகளிலும் நாட்டின் தலைவரும் அரசின் தலைவரும் ஒருவராகவே இருக்கிறார். இவரே அதிகாரங்களின் இருப்பிடமாகவும், அவ்வதிகாரங்களை நடை முறைப்படுத்துபவராகவும் உள்ளார். அமெரிக்க ஐக்கிய நாடு களின் குடியரசு தலைவர் செயல்துறை அதிகாரங்களை உடையவரா கவும், அவைகளைச் செயல் முறைப்படுத்துபவராகவும் உள்ளார். நாட்டின் தலைவராகவும் அரசாங்கத்தின் தலைவராகவும் செயல்படு கிறார். அரசியலமைப்பால் கட்டுப்படுத்தப்படாத மன்னர்களும் வல்லாட்சியாளர்களும், தலைவர் முறை அரசாங்கத்தின் தலைவ ரான அமெரிக்கக் குடியாட்சித் தலைவரும் உண்மைச் செயல்துறை யினராக விளங்குகின்றனர்.

பாராளுமன்ற முறை அரசாங்க அமைப்பில் அரசாங்கத்தின் நடைமுறை அதிகாரங்கள் அமைச்சரவையிலும், பெயரளவு அதிகாரங்கள் நாட்டின் தலைவரிடமும் உள்ளன. இங்கிலாந்து அரசாங்கத்தில் அமைச்சரவை உண்மைச் செயல்துறையினராக வும் அரசாங்கத்தின் நடைமுறை அதிகாரங்களையுடையவர்களாக வுமுள்ளனர். இவர்கள் உண்மைச் செயல்துறையினர் (Real or Actual or Defacto Executive); இங்கிலாந்தின் அரசியார் பெயரளவு செயல்துறையினராக (Nominal or Titular or Dejure Executive) இருக்கிறார். அரசியார் நாட்டின் தலைவரேயொழிய அரசாங்கத் தின் தலைவரல்லர். உண்மைச் செயல்துறையினரான அமைச்சர் களின் ஆலோசனையின் அடிப்படையிலேயே இவர் செயலாற்ற வேண்டும். அரசாங்கத்தின் அதிகாரங்கள் அனைத்தும் அரசியார் பெயரிலேயே நடைமுறைப்படுத்தப்படும். சட்டத்தின்படி இவரே அரசாங்கத்தின் தலைவராகவும் அதிகாரங்களின் இருப்பிட மாகவும் இருக்கிறார். ஆனால் நடைமுறையில் தம் விருப்பப்படி இவர் செயலாற்றுவதோ அதிகாரங்களை நடைமுறைப்படுத்து வதோ இல்லை. எனவேதான் இங்கிலாந்து அரசியார் தவறிழைக்க இயலாது எனக் கூறப்படுகிறது. அரசியார் தவறு இழைத்திருந் தால் அது அமைச்சர்களின் ஆலோசனையின் பேரிலேயே இழைத் திருக்க வேண்டும். அமைச்சர்களே அரசியாரின் நடவடிக்கை களுக்குப் பொறுப்பாக்கப்படுவர். இந்தியாவின் குடியரசு தலைவரும் பெயரளவுச் செயல்துறையினராகவும், அமைச்சரவை உண்மைச் செயல்துறையினராகவும் உள்ளனர்.

இந்திய அரசியலமைப்பில் குடியரசு தலைவர் அமைச்சர் களின் ஆலோசனையின்படியல்லாது தம் விருப்பத்தின்படி செயலாற்றவும் இடமளிக்கப்பட்டுள்ளது. பிரான்சின் ஐந்தாவது குடியரசின் தலைவர் உண்மை அதிகாரங்களையுடையவராக இருக் கிறார். எனவே பாராளுமன்ற முறை அரசாங்கத்தின் குடியரசு தலைவர்களும் உண்மை அதிகாரங்கள் சிலவற்றையுடையவர் களாகவும் அமைகின்றனர்.

### ஒருமைச் செயல்துறையும் பன்மைச் செயல்துறையும்

செயற்குழுவில் அடங்கியிருக்கும் நபர்களின் எண்ணிக் கைக்கு ஏற்பச் செயல்துறையை ஒருமைச் செயல்துறையென்றும் பன்மைச் செயல்துறையென்றும் பிரிக்கலாம். செயல்துறையின் தலைவர் ஒருவராக இருந்தாலும், அல்லது செயல்துறைக் குழுவில் பலர் இருந்து ஒருமுகமாகச் செயல்பட்டாலும் ஒருமைச் செயல் துறை யெனப்படும். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசு தலைவர் ஒருவரே செயல்துறையின் தலைவராக இருக்கிறார்.

இவரது அமைச்சர்கள் ஆலோசகர்களாகவே பணியாற்று கின்றனர். தலைவர் முறை அரசாங்கத்தில் செயல்துறை அதி காரம் ஒருவரிடமே அமைந்துள்ளது. பாராளுமன்ற முறைச் செயல்துறை அமைப்பில் அமைச்சர் குழுவும் அதன் தலைவரான தலைமை அமைச்சரும் உண்மைச் செயல்துறையினராக இருக் கின்றனர். அமைச்சர்கள் பலர் இருப்பினும் ஒருமைச் செயல்துறை யாகவே நாம் கருதுகிறோம். இவர்கள் தங்கள் கருத்துக்களை உருவாக்குவதிலும் தெரிவிப்பதிலும் ஒருமுகமாகச் செயல்படு கின்றனர். மேலும் பாராளுமன்றத்தின் நம்பிக்கையை ஒரு அமைச்சர் இழந்தாலும் அமைச்சரவை முழுவதுமாகப் பணித் துறவு மேற்கொள்ள வேண்டும். அமைச்சரவையின் இந்தக் கூட்டுப் பொறுப்பு அவர்களை ஒருமைச் செயல்துறையினர் ஆக்குகின்றன.

செயல்துறையின் பொறுப்பும் அதிகாரங்களும் பலரிடம் இருக்கும்போது அது பன்மைச் செயல்துறை எனப்படும். சுவிட் ஸர்லாந்து அரசாங்கம் பன்மைச் செயல்துறைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இங்குச் செயல்துறைப் பொறுப்பு எழுவர் கொண்ட அவையிடம் உள்ளது. இவர்கள் பாராளு மன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டு மூன்று ஆண்டுகள் பதவி வகிப்பர். பாராளுமன்றமுறை அரசாங்கத்தில் உள்ளது போன்ற கூட்டுப் பொறுப்பு இவர்களுக்குக் கிடையாது. கொள்கையில் மாறுபட்டவர்களாகவும் இருக்கலாம். மேலும் பாராளுமன்றத் திற்குப் பொறுப்பானவர்களுமல்லர். பாராளுமன்றத்தின் நம்பிக் கையைப் பெற வேண்டியவர்களுமல்லர். பாராளுமன்றத்தால் நீக்கப்படக்கூடியவர்களுமல்லர். சுவிட்ஸர்லாந்தின் பன்மைச் செயல்துறை முறை, ஒருமைச் செயல்துறையான அமைச்சரவை முறையிலிருந்து முற்றிலும் மாறுபட்டுள்ளது. பன்மைச் செயல் துறை முறை பற்றிய மேலும் விரிவான விளக்கத்தைப் பின்பகுதி யில் காணலாம்.

### பாராளுமன்ற முறைச் செயல்துறையும் தலைவர் முறைச் செயல் துறையும்

செயல்துறைக்கும் சட்டத் துறைக்கும் உள்ள தொடர்பின் அடிப்படையில் செயல்துறையைப் பாராளுமன்ற முறைச் செயல் துறையென்றும், தலைவர் முறைச் செயல்துறையென்றும் வகைப் படுத்தலாம். பாராளுமன்ற வகைச் செயல்துறையில் செயல் துறைக்கும் பாராளுமன்றத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. உண்மைச் செயல்துறையினரான அமைச்சர்கள் பாராளுமன்றத் தின் அங்கத்தினர்கள் ஆவார். இவர்கள் பாராளுமன்றத்திற்குக்

கூட்டுப் பொறுப்புடையவர்கள். பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்கு உரியவர்களாக இருக்கும் வரையில்தான் அமைச்சர்அவை பதவியிலிருக்க முடியும். இங்கிலாந்தின் செயல் துறை பாராளுமன்ற முறைச் செயல்துறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு ஆகும்.

தலைவர் முறைச் செயல்துறைக்கு அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செயல்துறை முறை நல்லதொரு சான்றாக அமைகிறது. அமெரிக்கக் குடியரசு தலைவர் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இவரோ அல்லது இவரது அமைச்சர்களோ பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் அல்லர். மேலும், குடியரசு தலைவர் பாராளுமன்றத்திற்குப் பொறுப்பானவரும் அல்லர். எனவே, பாராளுமன்றத்தின் நம்பிக்கையை இழந்தாலும் இவர் பணித் துறவு மேற்கொள்ள வேண்டியதில்லை. குடியரசு தலைவர் பாராளுமன்றத்தின் தலையீடு இன்றியும சுதந்திரமாகவும் செயல்படலாம். தலைவர் முறைச் செயல்துறையில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் செல்வாக்கினைக் காணலாம்.

### அரசியல் செயல்துறையும் நிரந்தரச் செயல்துறையும்

செயல்துறையின் தலைவரும் அவரது ஆலோசகர்களும் அரசியல் செயல்துறையினராகவும் தற்காலிகமானவர்களாகவும் இருக்கின்றனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசு தலைவரும் அவரது அமைச்சர்களும் நான்கு ஆண்டுக் காலத்திற்கே பதவி வகிக்கிறார்கள். இந்தியாவின் குடியரசு தலைவரும் அமைச்சரவையும் ஐந்து ஆண்டுக் காலம் பதவியில் இருக்கின்றனர். அதே போல உண்மைச் செயல்துறையினராகிய இங்கிலாந்தின் அமைச்சரவையும் ஐந்து ஆண்டுக் காலம் நிருவாகம் செய்கின்றனர். இவர்கள் அரசியல் தலைவர்களாகவும் அரசாங்கக் கொள்கைகளை வகுப்பவர்களாகவும் அமைகின்றனர்.

அரசாங்கத்தின் தலைவர் வகுத்த திட்டங்களைச் செயல்முறைப் படுத்துபவர்கள் பொதுத்துறை அலுவலர்கள் (Civil Service) ஆவார். இவர்களே அரசின் சட்டதிட்டங்களை ஒவ்வொரு நிலையிலும் நடைமுறைப்படுத்துகிறார்கள். சட்ட நுணுக்கங்களை அறிந்தவர்களாகவும், நிரந்தரப் பணியை வகிப்பவர்களாகவும் உள்ளனர். அமைச்சரவை மாறினாலும், அரசாங்கம் மாறினாலும் இவர்கள் மாறுவதில்லை. இவர்கள் தேர்வாணைக் குழுவால் நியமிக்கப்பட்டு ஒரு குறிப்பிட்ட வயதில் ஓய்வு பெறும் வரை பணியில் உள்ளனர். அரசாங்கத்தின் ஒவ்வொரு துறையையும் கண்காணிக்க அலுவலர்கள் உயர் மட்டத்திலிருந்து கீழ் மட்டம் வரை நியமிக்கப்பட்டுள்ளார்கள். நிரந்தரச் செயல்துறையினரது

எண்ணிக்கை அரசியல் செயல்துறையினரது எண்ணிக்கையை விடப் பன்மடங்கு அதிகமாகும். அரசியல் செயல்துறையினர் மக்களிடமுள்ள செல்வாக்கின் காரணமாகப் பதவியை அடைகின்றனர். நிரந்தரச் செயல்துறையினரான பொதுத்துறை அலுவலர்கள் திறமையின் அடிப்படையில் பதவிக்கு அமர்த்தப் படுகிறார்கள். இவர்களைப் பற்றி பின்வரும் தனிப்பகுதியில் விரிவாகக் காணலாம்.

உண்மைச் செயல்துறை, பெயரளவுச் செயல்துறை, ஒருமைச் செயல்துறை, பன்மைச் செயல்துறை, பாராளுமன்றமுறைச் செயல்துறை, தலைவர்முறைச் செயல்துறை, அரசியல் செயல் துறை, நிரந்தரச் செயல்துறை என்று செயல்துறையினை வகைப் படுத்தினாலும் இவைகளிடையே தொடர்புகளும் உண்டு. முழுமையான வேறுபாடுகளுடையன என்று கூறுவதற்கில்லை.

## செயல்துறையின் பணிகள்

அரசாங்கத்தின் முக்கியமான நிறுவனம் செயல்துறையாகும். சட்ட மன்றத்தின் சட்ட திட்டங்களைச் செயல்முறைப் படுத்துவது இதன் முக்கியப் பணியாகும். தற்காலத்தில் செயல்துறையின் பணிகள் மிகவும் அதிகரித்துள்ளன. செயல்துறையின் பணிகளை யும், அப்பணிகள் தற்காலத்தில் அதிகரித்துள்ளதற்கான காரணங் களையும் இப்பகுதியில் காணலாம்.

### சட்டம், ஒழுங்கு நிலைநாட்டல்

உள்நாட்டில் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவது செயல்துறையின் தலையாய கடமையாகும். சட்டமும் ஒழுங்கும் நிலைநாட்டப்பட்டு நாட்டில் அமைதி நிலவினால்தான் மக்கள் நல் வாழ்வும் முன்னேற்றமும் காண இயலும். நாட்டின் தோற்றக் கொள்கைகளைக் (Theories of Origion of State) காணின் உள் நாட்டில் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவதும் மக்களின் உயிர், உரிமை, உடைமை ஆகியவைகளுக்குப் பாதுகாப்பு அளிப்ப தும் செயல்துறையின் பணி என்பதை உணரலாம். செயல்துறை யின் உள்துறை (Home Department) உள்நாட்டு அமைதியையும் ஒழுங்கையும் கண்காணிக்கிறது. இதற்காகக் காவல் துறையும் அதன் அலுவலர்களும் செயல்துறையினருக்கு உதவுகின்றனர்.

### அயல்நாட்டு உறவும் தூதாண்மையும்

தற்காலச் சூழ்நிலையில் எந்த ஒரு நாடும் தனித்து வாழ இயலாது. நாடுகளிடையே தொடர்பும் உறவும் அவசியமாகிறது.

இந்த உறவையும் தொடர்புகளையும் கண்காணிப்பது செயல்துறையின் பணியாகும். ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் உடன்படிக்கைகளும் ஒப்பந்தங்களும் ஏற்படுவதுண்டு. வாணிப ஒப்பந்தங்களும், பாதுகாப்பு ஒப்பந்தங்களும், இராணுவ உடன்படிக்கைகளும், கல்வி கலாச்சாரப் பரிவர்த்தனைகளும் நாடுகளிடையே தோன்றுவதை நாம் காண்கிறோம். ஒரு நாட்டிலிருந்து மற்ற நாடுகளுக்கு அரசாங்கத் தூதர்கள் அனுப்பப்படுகிறார்கள். அதே போல நல்லுறவுள்ள மற்ற நாடுகளின் தூதர்களும் வருகின்றனர். ஒரு நாட்டின் அரசாங்கத்தை அங்கீகரிக்கும் போது அந்நாட்டிற்குத் தூதர்களை அனுப்புதலும் அந்நாட்டிலிருந்து தூதர்களைப் பெறுவதும் வழக்கமாக உள்ளது. இத்தூதாண்மை அலுவல்கள் செயல்துறையின்பாற்பட்டனவாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் செயல்துறையின் தூதாண்மை அலுவல்கள் பாராளுமன்ற மேலவையான செனட்சபையால் அங்கீகரிக்கப்படவேண்டும். அயல்நாட்டு உறவுகளையும் தூதாண்மை அலுவல்களையும் கவனிப்பதற்காக அரசாங்கத்தில் அயலுறவுத்துறை (Department of Foreign Affairs) நிறுவப்பட்டிருக்கும்.

## பாதுகாப்பும் ராணுவமும்

நாட்டின் பாதுகாப்பு செயல்துறையினர் பொறுப்பாகும். நாட்டின் ஆட்சிநிலத்தை மற்ற அரசாங்கம் ஆக்கிரமிப்புச் செய்யாமல் கவனிக்க வேண்டும். மற்ற நாடுகளின் ஆக்கிரமிப்பால் நாட்டுமக்களின் உயிரும், உரிமையும், உடைமைகளும் பறிபோகாமல் காக்க வேண்டும். இது அரசாங்கத்தின் தலையாய கடனாகும். இக்கடமையைச் செய்யவே அரசு தோற்றுவிக்கப்பட்டது. இராணுவத்தையுடைய செயல்துறை இப்பணியை ஆற்றுகிறது. இராணுவத்துறையும் பாதுகாப்புத் துறைகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. தரைப்படை, விமானப் படை, கடற்படை என முப்படைகள் உள்ளன. இப்படைகளின் தளபதியாகச் செயல்துறைத் தலைவர் விளங்குகிறார். மேலும் மற்றத் தளபதிகளையும் இவரே நியமனம் செய்கிறார். நாட்டின் பாதுகாப்பிற்கு ஆபத்து வருமபோதும், ஆக்கிரமிப்பு நிகழும் போதும் அவசர நிலைப்பிரகடனத்தையும் போர்ப் பிரகடனத்தையும் செயல்துறைத் தலைவரே வெளியிடுகிறார். போரின் பேராபத்திலிருந்து நாட்டைக் காப்பதற்கான அவசியமான நடவடிக்கைகள் அனைத்தும் மேற்கொள்ளும் அதிகாரம் செயல்துறைத் தலைவருக்கு வழங்கப்படுகிறது. அடிப்படை உரிமைகள் ரத்து செய்யப்படுகின்றன. கட்டாய சேவை சட்டமாக்கப்படுகிறது. உற்பத்திச் சாதனங்களும், போக்குவரத்துச் சாதனங்களும் பாதுகாப்பு நடவடிக்கைகளுக்காகக் கட்டுப்

படுத்தப்படுகின்றன. செயல்துறையின் அதிகாரங்கள் அதிகரிக் கப்படுகின்றன.

**சட்டத்துறை சார்ந்த பணிகள்**

சட்டத்துறையின் பணிகளான சட்டமியற்றலைச் செயல்துறை யினரும் செய்கின்றனர். செயல்துறையின் இச்சட்டமியற்றும் பணி அரசாங்க அமைப்பிற்கேற்ப மாறுபடுகிறது. முழு அதிகாரப்பிரி வினை இயலாததால் அரசாங்கத்தின் முப்பெரும் நிறுவனங்களில் ஒவ்வொன்றும் மற்றதன் பணிகளையும் செய்கின்றன. சட்டத் துறை செயல்துறைப் பணியையும், நீதி கூறும் பணியையும் செய் கிறது. அதேபோலச் செயல்துறை சட்ட மன்றங்களின் பணி களான சட்டமியற்றலில் பெரும் பங்கு கொள்வதை நாம் இங்குக் காணலாம்.

பாராளுமன்றங்களைக் கூட்டுவதும், ஒத்திவைப்பதும், கலைப் பதும் செயல்துறையின் அதிகாரங்களாகும். பாராளுமன்ற முறைக் குடியாட்சி நிலவும் நாடுகளில் பாராளுமன்றத்தின் ஆயுட்காலத்திற்கு முன்பே அதைக் கலைக்கும் அதிகாரமும், மறு தேர்தலுக்கு ஆணையிடும் அதிகாரமும் செயல்துறையினருக்கு உண்டு. இங்கிலாந்து, இந்தியா போன்ற பாராளுமன்ற முறைக் குடியாட்சி நிலவும் நாடுகளில் செயல்துறையினரின் இவ்வதி காரங்களைக் காணலாம்.

செயல்துறைத் தலைவர் நாட்டின் தேவைகளுக்கேற்பக் குறிப் பிட்ட சட்டங்களை இயற்றுமாறு பாராளுமன்றத்திற்குப் பரிந்துரை வழங்கலாம். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசு தலைவர் பாராளுமன்றத்திற்குத் தாம் அனுப்பும் செய்திகளில் இயற்றப்பட வேண்டிய சட்டங்கள் பற்றியும் வரவு செலவுகள் பற்றியும் குறிப் பிடுகிறார். இங்கிலாந்தில் உண்மைச் செயல்துறையினரான அமைச்சரவை சட்ட திட்டங்களை உருவாக்குவதிலும் அரசாங்கச் சட்ட முன்படிவங்களைச் சட்டமன்றங்களில் நிறைவேற்றுவதிலும் பெரும் பங்கு கொள்கிறது.[2] மேலும் செயல்துறைத் தலைவர் பாராளுமன்றத்தின் துவக்கத்தில் உரை நிகழ்த்தும் உரிமை யுடையவராவார். அரசாங்கத்தின் கொள்கையை விளக்கி அதற் கேற்ற சட்டங்களைப் பரிந்துரைக்கிறார். இந்தியாவின் குடியரசு

[2] Ogg: 'The cabinet formulate policies, make decisions, and draft bills on all significant matters which in their judgement require legislative attention, asking of parliament only that it gives effect to such decisions and policies by considering them and taking the necessary votes.'

தலைவர் பாராளுமன்றத்தை ஆரம்பித்து வைத்து அரசாங்கக் கொள்கைகளை விளக்கும் அதிகாரம் பெற்றுள்ளார்.

பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்ட முன் படிவம் செயல்துறைத் தலைவரின் ஒப்புதலும் இசைவும் பெற்றால் தான் சட்டமாகும். செயல்துறைத் தலைவர் தமது மறுப்பாணை அதிகாரத்தைப் (Veto Power) பயன்படுத்திப் பாராளுமன்றம் நிறைவேற்றிய மசோதாவிற்கு ஒப்புதல் அளிக்க மறுக்கலாம் இங்கிலாந்து அரசியாருக்கு இம்மறுப்பாணை அதிகாரம் இருப்பினும் அவர் அதைக் கையாளுவதில்லை. மரபின் காரணமாகப் பாராளு மன்றம் நிறைவேற்றிய மசோவிற்கு இசைவு மறுக்கப்படுவதில்லை. 1707ஆம் ஆண்டிலிருந்து செயல்துறைத் தலைவரின் மறுப்பாணை அதிகாரம் பயன்படுத்தப்படாமல் வழக்கொழிந்துவிட்டது. இந்தியக் குடியரசு தலைவரும் பாராளுமன்றம் நிறைவேற்றிய ஒரு மசோதாவிற்கு ஒப்புதல் அளிக்க மறுக்கலாம். அப்படி மறுக்கும்போது தமது ஆலோசனைகளையும் மசோதாவில் தாம் விரும்பும் திருத்தங்களையும் குறிப்பிட்டு மறுபரிசீலனைக்காக மசோதாவைப் பாராளுமன்றத்திற்குத் திருப்பி அனுப்பவேண்டும் குடியரசு தலைவரின் ஆலோசனைகளையும் பரிந்துரைகளையும் பாராளுமன்றம் ஏற்றோ, ஏற்காமலோ மசோதாவை மீண்டும் நிறைவேற்றிக் குடியரசு தலைவரின் இசைவிற்கு அனுப்பினால் தலைவர் தமது இசைவை மறுக்கக் கூடாது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசு தலைவர் பாராளுமன்றம் நிறைவேற்றிய மசோதாக்களுக்கு தமது மறுப்பாணை அதிகாரத்தின் மூலம் ஒப்புதல் அளிக்க மறுக்கலாம். குடியரசு தலைவரால் ஒப்புதல் அளிக்க மறுக்கப்பட்ட ஒரு மசோதா பாராளுமன்றத்தில் மூன்றில் இரண்டு பங்குப் பெரும்பான்மையினரால் நிறைவேற்றப்பட்டால் அம்மசோதா சட்டமாக்கப்படுவதற்கான தகுதியைப் பெறுகிறது. முழு மறுப்பாணை அதிகாரமும் செயல்துறைத் தலைவருக்கு அளிக்கப்பட்டுள்ளது.

செயல்துறைத் தலைவர் பாராளுமன்றக் கூட்டம் நடைபெறாத பொழுது பிரகடனங்கள் மூலம் சட்டங்களை இயற்றுகிறார். தலைவ ரின் இப்பிரகடனங்கள் பாராளுமன்றச் சட்டத்திற்குச் சமமான வலிமையுடையனவாகும். இந்தியாவின் குடியரசு தலைவர் பிர கடனங்கள் மூலம் சட்டத்தை இயற்றலாம். பாராளுமன்றம் கூட் டப்பட்ட ஆறு வார காலத்திற்குள் இப்பிரகடனங்கள் சபையின் அங்கீகாரத்திற்கு வைக்கப்படவேண்டும். பாராளுமன்றம் கூடிய ஆறு வார காலத்திற்குள் பிரகடனங்கள் சபையின் ஒப்புதலுக்கு அனுப்பப்படாவிட்டாலும் ஒப்புதலுக்குப் பிரகடனங்கள் தன் முன்

வருமுன்பே பாராளுமன்றம் பிரகடனங்களை நிராகரித்துத் தீர்மானம் நிறைவேற்றினாலும் பிரகடனங்கள் செல்லுபடியாகா.

தற்காலத்தில் சட்டமன்றங்களின் பணிகள் அதிகரித்துள்ளதால் எல்லாச் சட்டங்களையும் பாராளுமன்றமே இயற்றுவதில்லை. மேலும், சட்டங்களின் விரிவான எல்லாப் பிரிவுகளையும் சட்டமன்றங்களே செய்வதுமில்லை. செயல்துறையிடம் ஒப்படைக்கப்பட்ட சட்டஞ்செய் உரிமை (Delegated Legislation) இங்குக் குறிப்பிடத்தக்கது. இவ்வுரிமையின் காரணமாகச் செயல்துறையினர் சட்டங்களையும், விதிகளையும் இயற்றுகின்றனர். சட்டமன்றங்கள் சட்டத்தின் பரந்த எல்லைக் கோடுகளை மட்டும் வகுக்கின்றன. சட்டத்தின் இதர நுணுக்கங்களையும் விவரங்களையும் செயல்துறையினரே இயற்றுகின்றனர். தேவைகளுக்கேற்பவும், அவசரநிலைக்கேற்பவும் அவ்வப்போது ஆணைகளையும், விதிகளையும், பிரகடனங்களையும் தற்காலத்தில் செயல்துறையினர் செய்வது தவிர்க்க முடியாததாகும்.

**நீதித்துறை சார்ந்த பணிகள்**

நீதித்துறைப் பணிகளைச்செயல்துறையினரும், செயல்துறைத் தலைவரும் செய்கிறார்கள். தலைமை நீதிமன்ற நீதிபதிகளைச்செயல்துறையினரே நியமிக்கிறார்கள். இந்தியாவில் தலைமை நீதி மன்ற முதன்மை நீதிபதியைக் குடியரசு தலைவர் நியமிக்கிறார். முதன்மை நீதிபதியின் ஆலோசனையின் பேரில் இதர நீதிபதிகளையும், உயர்நீதிமன்ற நீதிபதிகளையும், குடியரசு தலைவர் நியமனம் செய்கிறார். இதன்வழி செயல்துறை நீதித்துறையில் செல்வாக்குடையதாகிறது.

செயல்துறைத் தலைவர் கருணைகாட்டிக் குற்றவாளிகளை மன்னிக்கும் அதிகாரம் உடையவர் ஆவார். நீதிமன்றங்கள் அளித்த தண்டனையைக் குறைக்கவும் நீக்கவும் இந்தியக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் உண்டு. நீதிமன்றங்கள் தவறுதலாகவும் தண்டனையளிக்க நேரலாம் என்பதற்காகவும் நீதிமன்றத் தவறு பரிசீலனையிலிருந்து தப்பக் கூடாது என்பதற்காகவும் மன்னிப்பு அதிகாரம் செயல்துறைத் தலைவருக்கு வழங்கப்பட்டுள்ளது.

செயல்துறைத் தலைவர் மீது குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டு விசாரிக்கப்படலாம். இருந்தாலும் குற்றப்பிரிவு நீதிமன்றங்கள் செயல்துறைத் தலைவர் மீதான விசாரணைகளைச் செய்வதில்லை. செயல்துறைத் தலைவர் ஒன்றைச் செய்ததனால் ஏற்பட்ட குற்றத்தையும், செய்யாது விட்டதனால் ஏற்பட்ட தவறையும் சட்ட மன்றங்களே குற்றம் சாட்டி விசாரிக்கின்றன.

செயல் துறையினர் பல வழக்குகளைத் தாங்களே விசாரித்துத் தீர்ப்புக்கூறும் உரிமைகளையும் உடையவர்களாவர். ஒப்படைக்கப் பட்ட சட்டஞ்செய்யுரிமையின் காரணமாகச் செயல்துறையினரது அதிகாரம் விரிவடைந்துள்ளது. பொது நிர்வாகத்தின்போது தோன்றும் வழக்குகளைச் செயல்துறையின் பொதுத்துறை அலுவலர்களே விசாரித்துத் தீர்ப்பளிக்கின்றனர். இவைகளிலிருந்து செயல்துறையினருக்கு நீதித்துறை அதிகாரங்களும் பணிகளும் இருப்பதைக் காணலாம்.

### நிதித்துறை சார்ந்த பணிகள்

நிதிநிர்வாகம் செயல்துறையின் முக்கியமான பணியாகும். ஆண்டு வரவு செலவுக் கணக்குகளைத் தயாரித்துப் பாராளுமன்றத்தின் ஒப்புதலைப் பெறுகிறது. வரிவசூல் செய்வதும், அரசாங்க வருமானத்தைப் பல துறைகளுக்கும் பங்கீடு செய்து செலவிடுவதும் செயல்துறையாகும். வரவு செலவுக் கணக்குகளைச் சரியாக வைப்பதும், வரவு செலவு பற்றிய அறிக்கையைத் தயாரிப்பதும், அவைகளைத் தணிக்கை செய்வதும் செயல்துறையின் பிரிவாகிய நிதித்துறையாகும். மேலும், உள்நாட்டில் கடன் பெறுவதும், அயல்நாடுகளில் இருந்து கடன் வாங்குவதும் இக்கடன்களைத் தீர்ப்பதும் செயல்துறையின் கடமையாகும். வரிப்பணம் நன்கு செலவிடப்படுவதற்கும் இதனால் பெரும்பான்மைச் சமுதாயம் பயனடைவதற்கும் செயல்துறையே பொறுப்பேற்கிறது.

### பொதுநலப் பணிகள்

தற்கால அரசாங்கம் மக்கள் நலன் நாடும் அரசாங்கமாக அமைந்துள்ளது. எனவே, உள்நாட்டு அமைதியைக் காப்பதும் அயல்நாட்டு ஆக்கிரமிப்பிலிருந்து நாட்டைப் பாதுகாப்பதும் மட்டுமே அரசாங்கத்தின் பணிகளாகா. மக்களின் நலனை வளர்க்கும் சமுதாயப் பணிகள் பலவற்றையும் செயல்துறை மேற்கொள்கிறது. கல்வி, பொதுச்சுகாதாரம், விவசாயம், வாணிபக் கட்டுப்பாடு, தொழிலாளர் நலன், முதியோர் பாதுகாப்பு, நோயுற்றோர் பாதுகாப்பு, வேலையற்றோர் பாதுகாப்பு எனச் சமுதாய நலப் பணிகள் பலவற்றையும் செயல்துறை மேற்கொள்கிறது.

### நாட்டுடைமைத் தொழில்கள்

அரசாங்கம் பொதுவுடைமைக் கொள்கையைப் பின்பற்றிப் பல தொழில்களையும் நிறுவனங்களையும் நாட்டுடைமையாக்கியுள்ளது. புகைவண்டிப் போக்குவரத்து, பேருந்துப் போக்குவரத்துகள், தொழில் நிறுவனங்கள், மின்சாரம் ஆகியன நாட்டுடைமை ஆக்கப்

பட்டுள்ளன. எனவே இவைகளின் நிருவாகத்தைக் கவனிக்க வேண்டிய பொறுப்புச் செயல்துறையையே சாரும். நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளைக் கண்காணிப்பதும், அவைகளின் மீது கட்டுப்பாடு விதிப்பதும், தொழிற்சாலைகள் துவக்க அனுமதி வழங்குவதும், உற்பத்தியையும் உற்பத்திக் காரணிகளையும் கட்டுப் படுத்துவதும் செயல்துறையின் தவிர்க்க இயலாப் பணிகளாகி விட்டன.

### நிருவாக அலுவல்கள்

நாட்டின் பொது நிர்வாகத்தைக் கண்காணிக்கும் பணியும் செயல்துறையின் பாற்பட்டதாகும். பொதுத் துறை அலுவலர்களை நியமிப்பதும், அவர்களது பணிகளை ஒழுங்குபடுத்துவதும், பதவி உயர்வுகளைக் கவனிப்பதும், அதற்கான விதிகளை வகுப்பதும், செயல்துறையாகும். பொதுத்துறை அலுவலர்களின் அதிகாரங் களை வரையறுப்பதும் அவர்களுக்குத் தக்க பயிற்சி அளிப்பதும், துறைத் தேர்வுகளும் சோதனைகளும் நடத்துவதும் செயல்துறை யின் பணிகளாகும்.

### வளர்ச்சித் திட்டங்கள்

சமுதாய முன்னேற்றம், தொழில் முன்னேற்றம், பொருளா தார முன்னேற்றம், கல்வி முன்னேற்றம், விவசாய முன்னேற்றம் ஆகியவைகளுக்கான திட்டங்களைத் தீட்டுவதும், இவைகளுக்குப் பாராளுமன்றத்தின் ஒப்புதல் பெறுவதும் செயல்துறையாகும். சோவியத் ரஷ்யாவில் ஏழாண்டுத் திட்டங்கள் தீட்டப்பட்டதை யும், இந்தியாவில் பல ஐந்தாண்டுத் திட்டங்கள் வகுக்கப் பட்டதை யும் நாம் அறிவோம். பொருளாதாரத் திட்டங்களும், சமுதாய வளர்ச்சித் திட்டங்களும் வெற்றிகரமாக நடைமுறைப்படுத்தப் படுவதற்கும், உணவு, உடை, தொழில் தேவைகளிலும், இராணுவத் தேவைகளிலும், நாடு தன்னிறைவு பெறுவதற்கும் செயல்துறை பல பணிகளை மேற்கொள்ளுகிறது.

### நெருக்கடி காலப் பணிகள்

உள்நாட்டுக் குழப்பங்களின் காரணமாகவும், அயல் நாட்டு ஆக்கிரமிப்பின் காரணமாகவும், அரசியல் எந்திரம் செயல்படாத தன் காரணமாகவும் நெருக்கடி நிலை பிரகடனங்கள் வெளியிடப் படுகின்றன. இக்காலங்களில் செயல்துறையின் அதிகாரங்கள் விரிவுபடுத்தப்படுகின்றன. நாட்டின் பாதுகாப்பிற்காகவும் அரசியலமைப்பைக் காப்பதற்காகவும் நடவடிக்கைகளைச் செயல் துறையினர் மேற்கொள்கின்றனர். அவசர காலங்களிலும்,

நெருக்கடி நிலைகளிலும் அடிப்படை உரிமைகளும் அரசியலமைப்பின் விதிகளும் ஒத்திவைக்கப்படலாம்.

சட்டத்துறை, நீதித்துறை ஆகியவைகளைவிடச் செயல்துறையின் பணிகள் அதிகமாக இருப்பதையும், இவைகள் தற்காலத்தில் மேலும் அதிகரித்திருப்பதையும் காணலாம். செயல்துறையின் பணிகள் தற்காலத்தில் மிகுதியானதற்குரிய காரணங்களைக் காண்போம்.

**செயல்துறையின் பணிகள் பெருகியதன் காரணங்கள்**

அரசின் தோற்றத்திற்கு இரு காரணங்கள் கூறப்படுகின்றன. ஒன்று உள்நாட்டில் அமைதியைப் பாதுகாப்பதற்காகவும், இரண்டாவது அயல்நாட்டின் ஆக்கிரமிப்பிலிருந்து நாட்டையும் மக்களையும் காப்பதற்காகவும் அரசு தோன்றியது. எனவே, இவ்விரு பணிகளை மட்டுமே அரசாங்கம் செய்ய வேண்டும் என்னும் கோட்பாடு நிலவியது. ஆனால், தற்காலத்தில் இக்கோட்பாடு ஏற்கப்படுவதில்லை. பொதுநல நாடு (Welfare State) என்னும் அரசியல் கோட்பாடு வலுப்பெற்றுள்ளது. அரசாங்கம் உள்நாட்டு அமைதி, அயல்நாட்டு ஆக்கிரமிப்பிலிருந்து பாதுகாப்பு ஆகிய இவைகளைத் தவிர மக்களின் நலனையும் பேணுதல் வேண்டும். இவற்றிற்கான கல்வி, சுகாதாரம், வேலை வாய்ப்பு, சமத்துவம் ஆகிய துறைகளிலும் அரசாங்கம் தலையிட வேண்டியுள்ளது. எனவே, செயல்துறையின் பணிகள் பொதுநல நாட்டில் அதிகரித்துள்ளன.

நாட்டின் முன்னேற்றத்திற்கான நான்காண்டுத் திட்டங்கள், ஐந்தாண்டுத் திட்டங்கள், ஏழாண்டுத் திட்டங்கள் என வளர்ச்சித் திட்டங்களைச் செயல்துறை திட்டமிட்டு நடைமுறைப்படுத்த வேண்டியுள்ளது. எனவே செயல்துறையின் பணிகள் மிகுந்துள்ளன.

தற்காலச் சட்டமன்றங்களின் பணிகள் அதிகரித்துள்ளதால் சட்டத்தின் விரிந்த எல்லைக்கோடுகளை மட்டும் சட்டசபைகள் வகுக்கின்றன. இவ்வெல்லைக் கோடுகளை நிரப்ப வேண்டிய பணியும், விவரமான விதிகளை உருவாக்க வேண்டிய பணிகளும் செயல்துறையின் பணிகளாகிவிட்டன. ஒப்படைக்கப்பட்ட சட்டஞ் செய்யுரிமையின் காரணமாகச் செயல்துறை சட்டங்களை வகுக்க வேண்டியுள்ளது. நிருவாக ஆணைகளையும் விதிமுறைகளையும் வகுத்து அவைகளை நடைமுறைப்படுத்த வேண்டிய பொறுப்புச் செயல்துறையிடம் ஒப்படைக்கப் பட்டுள்ளது. எனவே செயல்துறையின் அலுவல்கள் தற்காலத்தில் அதிகரித்துள்ளன.

அவசர நிலைகளும், போர்க் கால நடவடிக்கைகளும், பொருளாதார சீர்குலைவுகளும், அயல் நாட்டு உறவுகளும், கட்சி முறை வளர்ச்சியும், செயல்துறையின் பணிகளையும், அதிகாரங்களையும் மேலும் விரிவுபடுத்தியுள்ளன.

## செயல்துறைத் தலைவர் தேர்வு

செயல்துறையின் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறைகள் நாட்டிற்கு நாடு மாறுபடுகின்றன. செயல்துறையின் திறமையானது செயல்துறைத் தலைவரின் தேர்தல்முறை, பதவிக்காலம், அவரது அதிகாரங்கள் ஆகியவைகளைப் பொறுத்து அமைகிறது. எனவே செயல்துறைத் தலைவரின் தேர்தல்முறை, பதவிக்காலம் அதிகாரங்கள் ஆகியன பற்றி இங்குக் காணலாம்.

### பரம்பரைக் கோட்பாடு

பரம்பரைக் கோட்பாட்டின் அடிப்படையில் செயல்துறைத் தலைவர் பதவியை அடைவதுண்டு. இக்கோட்பாடு முடியரசு நாடுகளில் காணப்படுகின்றன. பரம்பரையாகச் செயல்துறைத் தலைவர் பதவியை அடையும் மன்னர்கள் வாழ்நாள் முழுவதும் பதவியிலிருப்பார்கள். ஒரு மன்னருக்குப் பிறகு அவரது மூத்த மகன் பதவியை அடைவார். இம்மன்னராட்சி முறை சில நாடுகளில் நிலவுகிறது. இங்கிலாந்தில் முடியரசையும் மன்னராட்சி முறையையும் காணலாம். பரம்பரை மன்னராட்சி முறையில் சில நிறைகள் இருந்தாலும் குடியாட்சி நிலவும் தற்காலத்தில் இது ஏற்கக் கூடியதாக இல்லை. எனவே, முடியாட்சியும் பரம்பரை மன்னர் முறையும் அழிந்துகொண்டே வருகின்றன.

### நேரிடைத் தேர்தல் முறை

செயல்துறைத் தலைவரை மக்கள் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கும் முறை குடியாட்சி முறைக்கு ஒத்ததாகவும், மக்களின் இறைமையை வெளிப்படுத்தக் கூடியதாகவும் உள்ளது. இம்முறையில் மக்களின் உரிமைகள் மதிக்கப்படுகிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசு தலைவர் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அரசியல் அமைப்பை வகுத்த பெரியோர்கள் குடியரசு தலைவர் தேர்தலுக்கு மறைமுக முறையையே வகுத்தார்கள். ஆனால், அம்முறை கைவிடப்பட்டு நேரிடைத் தேர்தல் முறை வழக்காறாக அமைந்துள்ளது. ஜெர்மனியின் வெய்மார் அரசியலமைப்பின்படி குடியரசு தலைவரை மக்கள் நேரடியாகத் தேர்ந்தெடுக்கும் முறை ஏற்படுத்தப்பட்டது. பிரான்சு நாட்டில் 1848ஆம் ஆண்டின் இரண்டாவது குடியரசு அரசியு

லமைப்பின்படி தலைவர் தேர்தலுக்கு நேரடி முறை ஏற்படுத்தப்பட்டது. ஆனால், 1871ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட மூன்றாவது குடியரசில் நேரடித் தேர்தல் முறை கைவிடப்பட்டது. சுவிட்ஸர்லாந்தின் மாநிலங்களான கேன்டன்களின் செயல்துறைத் தலைவர்களும், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மாநிலங்களின் செயல்துறைத் தலைவர்களான ஆளுநர்களும், இலத்தீன் அமெரிக்க நாடுகளின் செயல்துறைத் தலைவர்களும் நேரடி முறையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

செயல்துறைத் தலைவர் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவதில் பல சிறப்புகள் உள்ளன. மக்கள் தங்கள் இறைமையையும் உரிமையையும் அனுபவிக்க முடிகிறது. செயல்துறைத் தலைவர் நேரடியாக மக்களுக்குப் பொறுப்புள்ளவராக விளங்குவார். திறமையும் நாணயமும் உள்ள தலைவர்களை மக்கள் தேர்ந்தெடுப்பர். பொதுமக்களுக்கு அரசியலில் ஆர்வமும் அரசியல் கல்வியும் ஏற்படும்.

செயல்துறைத் தலைவர் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவதில் குறைகள் உள்ளன. நாட்டில் மிகப்பெரும் பதவியாகிய செயல்துறைத் தலைவர் பதவிக்கு நேரடித் தேர்தல் நடைபெறும் போது பாமரமக்கள் ஏமாற்றப்படுவர். இவர்கள் சரியான தலைவரைத் தீர்மானித்துத் தேர்ந்தெடுக்க இயலுவதில்லை. அரசியல் கட்சிகளிடையே கடுமையான போட்டிகளும் பூசல்களும் தோன்றும். மேலும் பாராளுமன்றமுறை அரசாங்கம் நடைபெறும் நாட்டின் செயல்துறைத் தலைவர் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் அமைச்சரவைக்கும் செயல்துறைத் தலைவருக்குமிடையே பூசல்கள் தோன்றும். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர் பெயரளவுத் தலைவராக இருக்கச் சம்மதிக்க மாட்டார். எனவே, நேரடித்தேர்தல் முறையில் நிறைகளும் குறைகளும் உள்ளன.

### மறைமுகத் தேர்தல் முறை

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அடங்கிய தேர்வாளர் குழு (Electoral College) செயல்துறைத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறைக்கு மறைமுகத் தேர்தல் என்பது பெயர். இந்தியக் குடியரசு தலைவர் தேர்வாளர் குழுவால் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார், அமெரிக்க அரசியலமைப்பை உருவாக்கிய பெரியோர்கள் குடியரசு தலைவர் தேர்தலுக்கு மறைமுக முறையை வகுத்தார்கள். ஒவ்வோர் அமெரிக்க மாநிலமும் தான் பாராளுமன்றத்தின் இரு அவைகளுக்கும் தேர்ந்தெடுத்து

அனுப்பும் அங்கத்தினர்களின் எண்ணிக்கையின் அளவைத் தேர்ந்தெடுத்துத் தேர்வாளர் குழுவிற்கு அனுப்பவேண்டும். எல்லா மாநிலங்களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டு வரும் அங்கத்தினர்கள் தேர்வாளர் குழுவாக அமைவர். இவர்களே குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள். தேர்வாளர் குழு அங்கத்தினர்கள் கட்சி அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவ்வங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவுடனே எக்கட்சி பெரும்பான்மை பெற்றுள்ளது என்பதும், யார் குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவார் என்பதும் தெரிந்து விடும். தேர்வாளர் குழு செயல்துறைத் தலைவரைத் தேர்ந்தெடுக்குமுன்பே செயல்துறைத் தலைவர் யார் என்பது வெளியாகும்.

மறைமுகத் தேர்தலால் பூசல்களையும் குழப்பங்களையும் தவிர்க்கலாம். மக்கள் நேரடியாகச் செயல்துறைத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதைவிட மக்களின் பிரதிநிதிகள் செயல்துறைத்தலைவரைத் தேர்ந்தெடுப்பதில் நேர்மை நிலவும். பாமர மக்களை ஏமாற்றுவது போல் பிரதிநிதிகளை ஏமாற்ற முடியாது. அலெக்ஸாண்டர் ஹாமில்டன் கூற்றுப்படி, பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்க அவசியமான அறிவு உள்ளவர்களாக இருப்பார்கள்.[8] உலக நாடுகளிடையே செயல்துறைத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதில் மறைமுகத் தேர்தலே செல்வாக்குப் பெற்றுள்ளது.

**சட்டமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படுதல்**

சுவிட்ஸர்லாந்து நாட்டின் செயல்துறையினர் கூட்டாட்சிப் பாராளுமன்றத்தின் இரு அவைகளின் இணைக்கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். 1875ஆம் ஆண்டின் அரசியலமைப்புப்படி பிரான்சு நாட்டின் செயல்துறைத் தலைவரான குடியரசு தலைவர் மக்கள் மன்றமான தேசிய சபையால் தேர்ந்தெடுக்கப்பட்டார். பிரதிநிதிகள் சபையும் செனட் சபையும் இத்தேர்தலில் வாக்களித்தன. சோவியத் ரஷ்யாவின் செயல்துறையினரும் சட்டமன்றங்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இந்தியாவின் குடியரசு தலைவர் பாராளுமன்றத்தின் இரு அவை அங்கத்தினர்களும் மாநிலச் சட்டமன்றங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களும் அடங்கிய தேர்வாளர் குழுவால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

[8] Alexander Hamilton: 'It was desirable that the immediate election should be made by men most capable of analysing the qualities adapted to the station. A small number of persons selected by their fellow-citizens from the general mass will be most likely to posses the information and discernment requisite to so Complicated an investigation.'

செயல்துறையின் தலைவர் சட்டமன்றங்களால் தேர்ந்தெடுக்கப்படுவதில் பல நன்மைகள் உள்ளன. பாமர மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுப்பதைவிடச் சட்டமன்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுவது சிறப்புடையதாகும். சட்டமன்ற உறுப்பினர்கள் அரசியலில் அனுபவமும் அறிவும் உடையவர்களாக இருப்பர். அரசாங்கத்தின் மிகவும் உயர்ந்த பதவியாகிய செயல்துறைத் தலைவர் பதவிக்குத் தகுதியானவரைச் சட்டமன்றம் தேர்ந்தெடுக்க இயலும். சட்டமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட செயல்துறைத் தலைவர்கள் சட்டமன்றத்திற்கு இணங்கிச் செயல்படுவார். செயல்துறைக்கும் சட்டமன்றங்களுக்கும் இடையே நல்லுறவு நிலவும் வாய்ப்பு ஏற்படும். அரசாங்கத்தின் இவ்விரு நிறுவனங்களிடையே தோன்றக்கூடிய பூசல்களைத் தவிர்க்கலாம்.

சட்டமன்றங்கள் செயல்துறைத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும்போது அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு முறியடிக்கப்பட்டு அதிகாரக் குவிப்புத் தோன்றுகிறது. செயல்துறைத் தலைவர் சுதந்திரமாகச் செயல்பட முடியாத நிலையும் சட்டமன்றங்களைச் சார்ந்திருக்க வேண்டிய நிலையும் தோன்றுகின்றன. இக்குறைகளிருப்பினும் செயல்துறைத் தலைவர் சட்டமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படும் முறை செல்வாக்குப் பெற்றுள்ளது.

## நியமன முறை

செயல்துறைத் தலைவர்கள் நியமன முறையிலும் பதவியை அடைகிறார்கள். கனடா, ஆஸ்திரேலியா ஆகிய டொமினியன் தகுதியுள்ள நாடுகளின் செயல்துறைத் தலைவர்களான தலைமை ஆளுநர்கள் அந்தந்த நாட்டு அரசாங்கத்தின் பரிந்துரையின் மேல் இங்கிலாந்து அரசியால் நியமிக்கப்படுகிறார்கள். கனடாவும் ஆஸ்திரேலியாவும் இறைமையுடைய அரசுகளாயினும் இவைகள் செயல்துறைத் தலைவரின் நியமன முறையை விரும்பி ஏற்றுக்கொண்டன. இந்தியா ஆங்கிலேயரின் ஆட்சியில் இருக்கும்போது இந்தியச் செயல்துறைத் தலைவர் நியமனமுறையிலேயே பதவியடைந்தார். பொதுத் துறையில் ஈடுபாடுள்ளவர்களும், திறமையும், நேர்மையுமுள்ளவர்களும் நியமன முறையில் செயல்துறைத் தலைவர்களாக நியமிக்கப்பட்டனர்.

## செயல்துறைத் தலைவரின் பதவிக் காலம்

செயல்துறைத் தலைவரின் பதவிக்காலம் இரண்டு ஆண்டிலிருந்து ஏழு ஆண்டுவரை நாட்டுக்கு நாடு மாறுபடுகிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மாநிலங்களில் சிலவற்றில் செயல்துறைத் தலைவரின் பதவிக்காலம் இரண்டாண்டாக உள்ளது. அமெரிக்கக்

குடியரசு தலைவரின் பதவிக் காலம் நான்கு ஆண்டுகளாகும். இந்தியச் செயல் துறைத் தலைவரின் பதவிக்காலம் ஐந்து ஆண்டு களாகும். பிரான்சு நாட்டின் குடியரசு தலைவரின் பதவிக்காலம் ஏழு ஆண்டுகளாக உள்ளது.

பதவிக்காலத்தின் அளவு பற்றி மாறுபட்ட கருத்துகள் நிலவு கின்றன. குறைந்த பதவிக்காலமாக இருந்தால் நிலையான கொள்கைகளை வகுக்க முடியாது. நீண்டகாலப் பெரியதோர் திட் டத்தைச் செயல்படுத்த முடியாது. குறுகிய பதவிக் காலத்தில் நல்ல அனுபவமும் ஏற்படாது. பதவிக்காலம் விரைவில் முடிவதைக் கருத்தில்கொண்டு செயல்துறைத் தலைவர்கள் ஆர்வத் துடன் செயல்பட மாட்டார்கள். நிர்வாகத்தில் தொடர்ச்சி யின்மையும், அடிக்கடி கொள்கைகளும் திட்டங்களும் மாறுவதும் குறுகிய பதவிக்காலத்தில் உள்ள குறைகளாகும்.

நீண்ட பதவிக் காலமாக இருப்பது செயல்துறைத் தலைவரின் வல்லாட்சிப் போக்கிற்கு வழிகோலும். தமது அதிகாரத்தைத் தவறான வழியிலும், சுயநோக்கத்திற்காகவும் பயன்படுத்த நீண்ட பதவிக்காலம் ஏதுவாகும். நெப்போலியன், ஹிட்லர், முசோலினி போன்றவர்கள் நீண்ட பதவிக்காலத்தைத் தோற்றுவித்து வல் லாட்சியை நிறுவினார்கள். நெப்போலியன் தமது கான்சல் பதவியைப் பத்தாண்டிலிருந்து ஆயுட்காலம் வரை நீடித்தார். பிறகு பிரான்சை முடியரசாக்கித் தாம் அதன் பேரரசரானார். எனவே, செயல் துறைத் தலைவருக்கு நீண்ட பதவிக்காலம் அளிப்பது நல்லதல்ல.

செயல்துறைத் தலைவருக்கு மிக நீண்ட பதவிக்காலமோ அல்லது மிகக் குறைந்த பதவிக் காலமோ விரும்பத் தக்கதல்ல. எனவே இரண்டாண்டுக் காலமும் ஏழு ஆண்டுக்காலமும் தற்காலத்தில் விரும்பப்படுவதில்லை. நான்கு ஆண்டுப் பதவிக் காலமே சிறப்புடையதாக அரசியல் அறிஞர்கள் கருதுகின்றனர்.

செயல்துறைத் தலைவரின் மறுதேர்தல் பற்றியும் மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. செயல்துறைத் தலைவரின் பதவிக் காலம் நீண்டதாக இருப்பின் இவர் மறுமுறை பதவிக்குத் தேர்ந் தெடுக்கப்படுதல் விரும்பப்படுவதில்லை. பதவிக்காலம் குறுகிய தாக இருப்பின் மறுமுறை தேர்ந்தெடுக்கப்படுதல் ஆதரிக்கப் படுகிறது. செயல்துறைத் தலைவர் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படு வதிலுள்ள கொள்கை நாட்டுக்கு நாடு மாறுபடுகிறது.

தென்அமெரிக்க நாடுகளில் சில, செயல்துறைத் தலைவர் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுவதையும் பதவிக்கு வருதலையும்

தடைசெய்துள்ளன. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் முதல் குடியரசு தலைவர் ஜார்ஜ் வாஷிங்டன் இரு முறை செயல்துறைத் தலைவர் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதற்கு மேலும் பதவியை அடைந்தால் குடியரசு தலைவர் ஜார்ஜ் வாஷிங்டனிற்கும் இங்கிலாந்து மன்னர் ஜார்ஜிற்கும் வேறுபாடு இல்லாததாகிவிடும் என அவர் கருதினர். இரு முறைக்கு மேல் குடியரசு தலைவர் பதவி அடையாமை ஒரு மரபாக்கப்பட்டது. ஆனல் பிராங்ளின் டி ரூஸ்வெல்டு (Franklin D Roosevelt) இம்மரபை முறித்தெறிந்து நான்கு முறை செயல்துறைத் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனல் வாஷிங்டன் ஏற்படுத்திய மரபு அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பின் இருபத்திரண்டாவது திருத்தத்தின்படி சட்டமாக்கப்பட்டது. தற்போது ஒருவர் இருமுறைக்கு மேல் குடியரசு தலைவர் பதவிக்குப் போட்டியிட முடியாது. இந்தியாவின் குடியரசு தலைவர்களும் இருமுறைகளுக்கு மேல் போட்டியிடாமல் ஒரு மரபைத் தோற்றுவித்துள்ளனர். ஆனல் இந்திய அரசியலமைப்பில் ஒருவர் எத்தனை முறை செயல்துறைப் பதவிக்குப் போட்டியிடலாம் என்ற வரையறை கூறப்படவில்லை.

செயல்துறைத் தலைவரின் பதவிக்காலம் குறுகியதாக இருப்பின் மறுமுறையும் தேர்ந்தெடுககப்பட்டால் திட்டங்களில் தொடர்ச்சி நிலவும் வாய்ப்பு ஏற்படும். மறு முறையும் தேர்தலில் நிற்க வேண்டும் என்ற ஆர்வத்தால் நிர்வாகத் திறமையும் மக்களின் நலமும் கவனம் பெறும். ஆட்சியில் திறமையுடையவர்களும் முன் அனுபவம் உடையவர்களும் மீண்டும் செயல்துறைத் தலைவர் பதவியை அடைவது சிறப்புடையதென அமெரிக்க அரசியலறிஞரான அலெக்ஸாண்டர் ஹாமில்டன் கருதுகிருர். [4]

செயல்துறைத் தலைவர் மீண்டும் தொடர்ந்து தேர்ந்தெடுக்கப்படுவதில் தீங்குகளும் உள்ளன. மீண்டும் பதவியை அடைய வேண்டும் என்ற விருப்பத்தால் சுதந்திரமாகச் செயல்பட இயலாது. மறு தேர்தலுக்கான வாய்ப்புகளை அனுசரித்தே நிர்வாகம் நடைபெறும். அரசாங்க இயந்திரத்தைத் தமது மறு தேர்தலுக்குச் சாதகமாகச் செயலாட்சித் தலைவர் பயன்படுத்த நேரிடும். மறு தேர்தலில் குறைகளிருப்பினும் இரண்டாம் முறை

[4] Alexander Hamilton: 'Reelection of the executive was necessary, 'to enable the people, when they see reason to approve of his conduct to continue him in the station inorder to prolong the utility of his talents and virtues, and to secure to the government the advantage of permanency in a wise system of government.'

தேர்ந்தெடுக்கப்படுவது உலக நாடுகளில் பலவற்றில் அனுமதிக்கப் படுகிறது.

### செயல்துறைத் தலைவரின் அதிகாரங்கள்

உள்நாட்டில் அமைதியைக் காப்பதற்கும், அயல் நாட்டு ஆக்கிரமிப்பின் பேராபத்திலிருந்து நாட்டைக் காப்பதற்கும் செயல்துறைத் தலைவருக்குத் தேவையான அதிகாரங்கள் அளிக்கப் படவேண்டும். அப்போது தான் உள்நாட்டிலும் அயல்நாட்டிலும் செயல்துறைத் தலைவர் நன்கு மதிக்கப்படுவார். செயல்துறைத் தலைவர் அதிகாரமற்றவராகவோ வலிமையற்றவராகவோ இருந் தால் நாட்டில் குழப்பங்களும் பூசல்களும் நிகழ ஏதுவாகும். அலெக்சாண்டர் ஹாமில்டன் கருத்துப்படி, 'செயல்துறைத் தலைவர் வலிமையற்றிருந்தால் அரசாங்கமும் வலிமையற்றதாகும். வலிமையற்ற அ ர சா ங் க ம் என்பது தீய அரசாங்கத்தின் மறு பெயராகும்.'[5]

செயல்துறைத் தலைவரின் அதிகாரம் விரிவுபட்டதாக இருந் தாலும், அது கட்டுப்பாடு அற்றதாக இருந்தாலும் தீங்குகளும் வல் லாட்சியும் தோன்றும். எனவே, செயல்துறைத் தலைவரின் அதி காரங்கள் கட்டுப்படுத்தப்படவேண்டும். இந்தியா, இங்கிலாந்து போன்ற பாராளுமன்ற முறையாட்சி நடைபெறும் நாடுகளில் செயல்துறையின் அதிகாரம் பாராளுமன்றத்தால் கட்டுப்படுத்தப் படுகிறது. செயல்துறையினர் பாராளுமன்றத்திற்குப் பொறுப் புடையவர்களாக இருக்கின்றனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செயல்துறைத் தலைவரான குடியரசு தலைவரைப் பாராளு மன்றங்கள் கட்டுப்படுத்த இயலாது. இவர் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையவரல்லர். இவர் நேரடியாக மக்களால் தேர்ந் தெடுக்கப்படுவதால் மக்களுக்குப் பொறுப்புடையவராகிறார். அடுத்து வரும் தேர்தலில் மக்களின் வாக்கையும் நன்மதிப்பையும் பெறவேண்டும். செயல்துறையினர் மக்களுக்கோ பாராளுமன்றத் திற்கோ பொறுப்பாக்கப்பட்டு அதிகார வரம்பை மீறாமல் கண் காணிக்கப்படுகின்றனர். செயல்துறையினருக்குத் தேவையான அதிகாரங்களும் அவ்வதிகாரங்களின் மீதான கண்காணிப்பும் அவசியமாகின்றன.

செயல்துறைத் தலைவரின் தேர்தல் முறைகள், பதவிக் காலம், மறுதேர்தலுக்குள்ள வாய்ப்பு, அதிகாரங்கள் ஆகியன செயல் துறையின் திறமையைத் தீர்மானிக்கின்றன.

[5] Alexander Hamilton: 'A feeble executive implies a feeble government and is but another name for bad government.'

செயல்துறையின் பொருள் பற்றியும், தன்மைகள் பற்றியும், வகைகள் பற்றியும், பணிகள் பற்றியும், செயல்துறைத் தலைவரின் தேர்வுகள் பற்றியும் கண்டோம். செயல்துறை வகைகளில் முக்கியமான பாராளுமன்றச் செயல்துறை பற்றியும், தலைவர் முறைச் செயல்துறை பற்றியும் விரிவாகக் காண்போம்.

## முக்கிய வினாக்கள்

1. செயல்துறையின் வகைகளைக் கூறுக.
2. செயல்துறையின் பணிகளை விளக்கி, அவைகள் ஏன் தற்காலத்தில் அதிகரித்துள்ளன என்பதையும் காட்டுக.
3. செயல்துறையின் தேர்வு முறைகள், பதவிக்காலம், அதிகார வரம்பு ஆகியவைகளில் நீர் விரும்பும் கொள்கை யாது? அவற்றிற்குக் காரணங்கள் காட்டுக.

## ஆ. பாராளுமன்றச் செயல்துறை
## (Parliamentary Executive)

**பாராளுமன்றச் செயல்துறையின் தன்மைகள்:** பெயரளவுச் செயல்துறை—உண்மைச் செயல்துறை—தலைமை அமைச்சரின் சிறப்பிடம்—கட்சி அரசாங்கம்—செயல் துறையும் சட்டத்துறையும் இணைப்பு—சட்டமன்றத்திற்கு அமைச்சரவையின் பொறுப்பு—அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு—அரசியலில் ஒத்த தன்மை—எதிர்க் கட்சிகள்.

**பாராளுமன்றச் செயல்துறையின் இன்றியமையாத தேவைகள்:** சட்டமன்றத்தில் பெரும்பான்மை—ஆற்றல் நிறை எதிர்க்கட்சி—கட்சிகளிடையே பொறையுடைமை—அமைச்சரவைப் பொறுப்பு—ரகசியப் பாதுகாப்பு—பாராளுமன்றக் கலைப்பு—அரசியலில் பட்டறிவு—எழுத்துச் சுதந்திரம்—உரிமை.

**பாராளுமன்றச் செயல்துறையின் நிறைகள்:** இணக்கமான நிருவாகம்—மக்களின் இறைமை மதிக்கப்படுகிறது—நெகிழ்வுடைமை—கூட்டுப் பொறுப்பு—எதிர்க் கட்சிக்கு இடம்—குடியாட்சி நெறிப்படுதல்—அரசியல்

அறிவு—பேராசிரியர் பிரைசின் கருத்து — பேராசிரியர் லாஸ்கியின் கருத்து.

பாராளுமன்றச் செயல்துறையின் குறைகள்: அதிகாரக் குவிப்பு—கட்சி அரசாங்கம்—நிலையில்லா அரசாங்கம்—திறமையில்லா நிருவாகம்— எதிர்க்கட்சிகளின் எதிர்ப்பு—விரைந்து செயல்படாத் தன்மை—சட்டமன்றத்தின் செல்வாக்கு மிகுதல் — பாராளுமன்றச் செயற்துறையின் வெற்றிகளும் தோல்விகளும்.

பாராளுமன்றச் செயல்துறைக்கு எடுத்துக்காட்டுகள்: ஆங்கிலேய அமைச்சரவையின் வரலாறும் அதன் இக்கால அமைப்பும்— அரசரின் அமைச்சர்கள் சட்டம் 1937— பேரவை— உயரவை— அமைச்சரவை— கட்சி முறை— குடியேற்ற உரிமை நாடுகளில் அமைச்சரவை அரசாங்கம்— குடியேற்ற உரிமை நாடுகள்— கனடாவின் செயல்துறை — நியூசிலாந்து, ஆஸ்திரேலியச் செயல்துறைகள்— தென்னுப்பிரிக்காவின் செயல்துறை— அயர்லாந்தின் செயல்துறை—பிரஞ்சுக் குடியரசில் அமைச்சரவை— பிரான்சின் ஐந்தாம் குடியரசு—இத்தாலியக் குடியரசில் அமைச்சரவை முறை— இந்தியாவில் பாராளுமன்றச் செயல்துறை — இந்தியக் குடியரசு தலைவர்— தேவையான தகுதிகள் — தேர்தல்முறை — பதவிக் காலம்— குடியரசு தலைவரின் அதிகாரங்கள்—குடியரசு தலைவரின்நிலை— குடியரசின் துணைத்தலைவர்— இந்தியாவின் அமைச்சரவை— அமைச்சரவையின் இயல்புகள்— அமைச்சரவையின் அலுவல்கள்— தலைமை அமைச்சர்.

செயல்துறைக்கும் சட்டமன்றங்களுக்கும் இடையே நிலவும் தொடர்பின் அடிப்படையில் தற்காலக் குடியாட்சி அரசாங்கங்கள் பலவகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. பாராளுமன்ற முறை அரசாங்கம் அல்லது அமைச்சரவை அரசாங்கம் அல்லது பொறுப்புள்ள அரசாங்கம் என்றும், தலைவர் முறை அரசாங்கம் அல்லது பாராளுமன்ற முறையில்லா அரசாங்கம் அல்லது பேராய அரசாங்கம் (Congressional Government) அல்லது பொறுப்பமையா அரசாங்கம் அல்லது உறுதியுள்ள அரசாங்கம் என்றும் இருவகையாகப் பகுக்கப்படுகின்றன. செயல்துறைக்கும் சட்டமன்றங்களுக்கும் நெருங்கிய தொடர்பும், ஒத்துழைப்பும், இணைப்பும் இருக்குமானுல் அது பாராளுமன்ற முறைச் செயல்துறை எனப்படும்.

## பாராளுமன்றச் செயல்துறையின் தன்மைகள்

### பெயரளவுச் செயல்துறை

பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் இருவகைச் செயல் துறைகள் இருப்பதைக் காணலாம். ஒன்று பெயரளவுச் செயல் துறை, மற்றது உண்மைச் செயல்துறை. இவ்விரு செயல்துறை களும் பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் வேறுபடுத்தப்படு கின்றன. இங்கிலாந்தின் அரசியாரும் இந்தியாவின் குடியரசு தலைவரும் பெயர்ளவுச் செயல்துறையினருக்குச் சான்றுகள் ஆவர். சட்டப்படியாக இவர்களே அதிகாரத்தின் இருப்பிடமாக இருந் தாலும், நடைமுறையில் இவர்கள் தங்கள் அதிகாரத்தைச் சுதந் திரமாகச் செயல்படுத்துவதில்லை. இவர்கள் நாட்டின் தலைவர் களாக இருந்தாலும் அரசாங்கத்தின் தலைவர்களாகச் செயலாற்று வதில்லை. மதிக்கத்தக்க பெயரளவுத் தலைவர்களாகவே உள்ளனர்.

### உண்மைச் செயல்துறை

அமைச்சரவையே உண்மைச் செயல்துறையாகச் செயல்படு கிறது. அமைச்சரவை பாராளுமன்றத்தின் குழுவாகவும், பெரும் பான்மைக் கட்சியைச் சார்ந்தவர்களாகவும் இருக்கின்றனர். கொள்கைகளை வகுப்பதும், அவைகளைப் பாராளுமன்றத்தில் நிறை வேற்றுவதும், அரசாங்க இயந்திரத்தை இயக்குவதும், உண்மைச் செயல்துறையினரான அமைச்சர்களே ஆவர். செல்வாக்குடைய மிக முக்கியமான அமைச்சர் குழுவே அமைச்சரவை எனப்படும். அமைச்சர் அவையில் இடம் பெறாத அமைச்சர்களும் துணை அமைச்சர்களும் இருப்பர். இவர்கள் தங்கள் துறை நடவடிக்கை களைக் கவனித்துக்கொள்வர். அமைச்சரவையில் இடம்பெற்ற அமைச்சர்களே தங்கள் தலைவரான தலைமை அமைச்சருடன் கலந்து கொள்கைகளை வகுத்து அரசாங்கத்தை நடத்துவர்.

### தலைமை அமைச்சரின் சிறப்பிடம்

அமைச்சரவை தலைமை அமைச்சரின் கீழ் இயங்குகிறது. இவர் அமைச்சரவையின் தலைவராகவும், பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியின் தலைவராகவும் விளங்குகிறார். கொள்கைகளை வகுப்பதிலும் அரசாங்கத்தை நடத்துவதிலும் தலைமை அமைச்சர் முக்கியமான பங்கு வகிக்கிறார். அமைச்ச ரவையின் தலைவராக மட்டுமிராது பாராளுமன்றத்தின் தலைவராக வும் இருந்து அரசாங்கக் கொள்கைகளுக்கும் நடவடிக்கைகளுக் கும் பாராளுமன்றத்தின் ஒப்புதலைப் பெறுகிறார். அரசியாருக்கும் அல்லது குடியரசு தலைவருக்கும் பாராளுமன்றத்திற்கும் இணைப்புச்

சங்கிலியாகப் பணியாற்றுகிருர். மேலும் கட்சியின் தலைவராக இருந்து கட்சிக்கும் அரசாங்கத்திற்கும் இடையே சுமுகமான இணக்கத்தை ஏற்படுத்துகிருர். பாராளுமன்றச் செயல்துறையில் தலைமை அமைச்சரின் பங்கும் பணிகளும் முக்கியமானவை களாகும்-

**கட்சி அரசாங்கம்**

பாராளுமன்றச் செயல்துறையின் மற்ருெரு கூறுபாடு கட்சி அரசாங்க முறையாகும். ஒரு கட்சி முறை, இரு கட்சிமுறை, பல கட்சிமுறை என அரசியல் கட்சிகளின் இயக்கத்தில் மும்முறைகளைக் காண்கிருேம். எக்கட்சி முறையாயினும் பாராளுமன்றத்தில் பெரும்பான்மையினரின் ஆதரவைப் பெற்றுள்ள தலைவர் தலைமை அமைச்சராக நியமிக்கப்படுகிருர். அவரின் பரிந்துரையின் மேல் மற்ற அமைச்சர்கள் நியமிக்கப்படுகின்றனர். எக்கட்சிக்கும் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை கிடைக்காவிடில் கூட்டரசாங்கம் அமைக்கப்படும். இந்நிலையில் செயல்துறையின் தலைவர் தம் யுக்தி போல் தலைமை அமைச்சரைத் தேர்ந்தெடுப்பார். பல கட்சியிலிருந்தும் அமைச்சர்கள் நியமிக்கப்படுவார்கள். பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியினர் ஆளும் கட்சியினராகவும், மற்றவர்கள் எதிர்க்கட்சியினராகவும் அமைவர்.

**செயல்துறையும் சட்டத்துறையும் இணைப்பு**

பாராளுமன்றமுறை அரசாங்கத்தில் செயல்துறையும் சட்டத்துறையும் இணைந்துள்ளதைக் காண்கிருேம். இங்கு அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு கடைப்பிடிக்கப்படுவதில்லை. சட்டமன்றத்தின் உறுப்பினர்களே அமைச்சரவையின் உறுப்பினர்களாக உள்ளனர். சட்டமன்றத்தின் ஒரு குழுவே அமைச்சரவையாக இருந்து அரசாங்கத்தை நடத்துகிறது. மேலும், அரசாங்கத்தை நடத்தும் அமைச்சரவை சட்டம் இயற்றுவதிலும் பெரும் பங்கு கொள்கிறது. கார்டர், ஹெர்ஸ் (Carter & Herz) ஆகியவர்களின் கருத்துப்படி செயல்துறைக்கும் சட்டத்துறைக்கும் நெருங்கிய தொடர்பும் இணைப்பும் பாராளுமன்றமுறைச் செயல்துறையில் நிலவுகின்றன.

அமைச்சர்கள் அனைவரும் பாராளுமன்றத்தின் உறுப்பினர்களாக இருக்கவேண்டும். இங்கிலாந்தில் ராம்சே மாக்டனுல்டும், மால்கம் மாக்டனுல்டும் 1935ஆம் ஆண்டில் பாராளுமன்றத்தின் உறுப்பினர்களாக இல்லாதிருந்தும் அமைச்சர்களாக இருந்தனர். ஆனுல், இத்தவிர்ப்பு முறைகள் மக்கள் சபையால் வன்மையாகக் கண்டிக்கப்பட்டன. இந்தியாவில் பாராளுமன்றத்தின் அங்கத்

தினரல்லாதவர்களும் அமைச்சர்களாக இருக்கலாம். ஆனால், தாங்கள் பதவி ஏற்ற ஆறு மாத காலத்திற்குள் பாராளுமன்றத்தின் அங்கத்தினராக வேண்டும். பாராளுமன்றத்தின் ஓர் அவையின் உறுப்பினரான அமைச்சர் மறு அவையில் கலந்து கொள்ளவும் உரையாற்றவும் கூடும். ஆனால், சபை நடவடிக்கைகளில் பங்கு கொள்ள முடியாது. இங்கிலாந்தில் ஓர் அவையின் உறுப்பினராக அல்லாதவர் அச்சபையில் பேசவும், சபை நடவடிக்கைகளில் கலந்து கொள்ளவும் அனுமதிக்கப்படுவதில்லை. சுவீடன் நாட்டில் பதினைந்து அமைச்சர்களில் மூவர் பாராளுமன்ற அங்கத்தினர்களாக இருக்க வேண்டியதில்லை. நார்வே, நெதர்லாந்து போன்ற நாடுகளில் அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் அங்கத்தினர்களாக இருப்பது தடைசெய்யப்படுகிறது. பிரான்சின் ஐந்தாவது குடியரசில் அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் அங்கத்தினர்கள் அல்லர். அங்கத்தினர்களாக இருந்தவர்களும் அமைச்சரானவுடன் அங்கத்தினர் பதவியைத் துறந்தனர்.

### சட்டமன்றத்திற்கு அமைச்சரவையின் பொறுப்பு

சட்டமன்றங்களுக்கு அமைச்சரவை பொறுப்புடையதாகும். கொள்கைகள் பற்றியும், அரசாங்க நடவடிக்கைகள் பற்றியும், அரசாங்கத் துறைகள் பற்றியும் சட்டமன்ற அங்கத்தினர்கள் கேள்விகள் கேட்கலாம்; குறை கூறலாம். பதில் அளிக்க வேண்டிய பொறுப்பும், வேண்டப்படும் செய்திகளைக் கூறவேண்டிய பொறுப்பும் அமைச்சரவைக்குண்டு. பாராளுமன்றத்தின் மக்களவையின் நம்பிக்கைக்கு உரியவர்களாக அமைச்சர்கள் விளங்க வேண்டும். மன்றத்தின் நம்பிக்கைக்கு உரியவராக இருக்கும் வரைதான் அமைச்சர்கள் பதவியில் இருக்க முடியும். எனவே, தான் பொறுப்புள்ள அரசாங்கம் என்றும், அமைச்சர்களின் பொறுப்பு என்றும் வழங்கப்படுகின்றன. பாராளுமன்றத்தின் நம்பிக்கையை இழந்த அமைச்சரவை தனது பதவியைத் துறக்க வேண்டும்.

பாராளுமன்றத்தின் நம்பிக்கையின்மை பல விதங்களில் வெளிப்படுகிறது. அரசாங்கத்தால் கொண்டுவரப்படும் முக்கியச் சட்ட முன்படிவம் பாராளுமன்றத்தில் நிறைவேறாமல் தோல்வியடையும்போது அமைச்சரவை மன்றத்தின் நம்பிக்கையை இழந்ததாகக் கருதப்படும். அரசாங்கத்தின் மீதும், அமைச்சர்களின் மீதும் கண்டனத் தீர்மானம் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டாலும், நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டாலும் அமைச்சரவை மன்றத்தின் நம்பிக்கையை இழந்ததாகக் கருதப்படும்.

அரசாங்கக் கொள்கை பாராளுமன்றத்தின் பெரும்பான்மையினரால் ஆதரிக்கப்படாதபோது மன்றத்தில் செல்வாக்கையும், ஆதரவையும், நம்பிக்கையையும். பெரும்பான்மையையும் அமைச்சர்கள் இழக்கின்றனர். எனவே அமைச்சரவை பதவித் துறவு மேற்கொள்ள வேண்டும். முக்கிய அரசாங்கக் கொள்கை தோற்கடிக்கப்படுவதால் எதிர்க்கட்சியினருக்கு ஆதரவும், செல்வாக்கும், நம்பிக்கையும், பெரும்பான்மையும் பாராளுமன்றத்தில் ஏற்படுகின்றன. எனவே அமைச்சரவை அமைக்கும் வாய்ப்பு எதிர்க்கட்சியினருக்கு அளிக்கப்பட வேண்டும் அல்லது தலைமை அமைச்சரின் ஆலோசனையின் பேரில் குடியரசு தலைவரோ அல்லது அரசியாரோ பாராளுமன்றத்தைக் கலைத்துப் புதிய தேர்தல்களை நடத்தி வாக்காளர்களின் கருத்தை அறியலாம். புதிய தேர்தலில் பாராளுமன்றத்தில் பெரும்பான்மையிடத்தையடையும் அரசியல் கட்சி அமைச்சரவையை அமைக்கும்.

## அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு

பாராளுமன்றச் செயல்துறையில் அமைச்சரவை பாராளுமன்றத்திற்குக் கூட்டுப் பொறுப்புடையதாகும். ஓர் அமைச்சரின் நடவடிக்கைகளுக்கு மற்ற அமைச்சர்களும் பொறுப்பாக்கப்படுவர். அரசாங்கத்தின் செயல்கள் அனைத்திற்கும் அமைச்சர்கள் அனைவரும் பொறுப்பேற்கின்றனர். அமைச்சரவை பதவியிலிருந்தாலும் பதவியிலிருந்து கவிழ்க்கப்பட்டாலும் அனைத்து அமைச்சர்களும் ஒன்றுபோல் செயல்பட வேண்டும்.

## அரசியலில் ஒத்த தன்மை

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் செயல்துறைத் தலைவரான குடியரசு தலைவர் ஓர் அரசியல் கட்சியைச் சார்ந்தவராகவும், பாராளுமன்றம் பிறிதோர் அரசியல் கட்சியைச் சார்ந்ததாகவும் இருக்கலாம். இங்கு அரசியலில் ஒவ்வாத்தன்மையைக் காண்கிறோம். ஆனால் பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் பாராளுமன்றத்தில் பெரும்பான்மையுடைய அரசியல் கட்சியினரே செயல்துறையை நடத்தும் கட்சியினராக அமைகின்றனர். பாராளுமன்றச் செயல்துறையில் அரசியலில் இணக்கமும் ஒத்ததன்மையும் காணப்படுகிறது. இதன் காரணமாக அரசாங்கம் திறமையுடையதாகவும் நிலைத்த தன்மையுடையதாகவும் விளங்குகிறது. பாராளுமன்றத்தில் எக்கட்சியும் பெரும்பான்மை பெறாது இருக்குமானால் கூட்டு அமைச்சரவை நிறுவப்படும். இதில் கட்சி ஒருமைப்பாடு நிலவ இயலாது. அடிக்கடி அரசாங்கம் வீழ்வதும் தோன்றுவதுமாக இருக்கும். அரசாங்கத்தில் நிலையாமை நிலவும். அமைச்

சரவையில் ஒத்துழைப்பும் கூட்டுறவும் இருக்காது. அமைச்சர்களின் கூட்டுப்பொறுப்பு அரிதாகிவிடும்.

**எதிர்க்கட்சிகள்**

பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் எதிர்க்கட்சிகள் ஒரு முக்கியமான கூறுபாடாகும். பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியினர் அமைச்சரவையை அமைத்து அரசாங்கத்தை நடத்துவர். பாராளுமன்றத்தின் பெரும்பான்மை பெருத கட்சிகள் எதிர்க்கட்சிகளாக அமைந்து ஆளும் கட்சியின் நடவடிக்கைகளையும், அரசாங்கத்தின் கொள்கைகளையும், அமைச்சரவையின் பொறுப்புகளையும் உன்னிப்பாகக் கவனித்துக் குறைகள் நிகழும்போது சுட்டிக்காட்டி, நிறைகள் நிகழும்பொழுது பாராட்டிச் செயல்படுவர். பாராளுமன்றத்தின் எதிர்க்கட்சித் தலைவர் முக்கியமானவராகக் கருதப்படுகிருர். சட்டமன்றக் குழுக்களில் எதிர்க்கட்சியினருக்கு எப்பொழுதும் இடம் ஒதுக்கப்படுகிறது.

பாராளுமன்றச் செயல்துறையில் நாடுகளிடையே வேறுபாடுகள் நிலவுகின்றன. இங்கிலாந்தில் இரு கட்சி முறையும், அமைச்சர்களிடையே ரகசியக் காப்பும், கூட்டுப் பொறுப்பும் நிலவுகின்றன. அமைச்சரவை மக்கள் அவையில் செல்வாக்கு உடையதாக விளங்குகிறது. பல கட்சி முறை நிலவும் பிரான்சு நாட்டில் மக்களவை அமைச்சரவையின் மீது ஆதிக்கம் கொண்டுள்ளது. கூட்டு அரசாங்கம் அமைக்கப்படுவதால் அமைச்சர்களிடையே ரகசியத்தைப் பாதுகாக்கும் பண்பும் கூட்டுப் பொறுப்பும் நிலவுவதில்லை. இந்தியப் பாராளுமன்றச் செயல்துறை இங்கிலாந்தின் முறையை ஒத்ததாக அமைந்துள்ளது.

## பாராளுமன்றச் செயல்துறையின் இன்றியமையாத தேவைகள்

பாராளுமன்றச் செயல்துறை உலக நாடுகள் பலவற்றில் வெற்றிகரமாகச் செயல்படுகிறது. இம்முறை தோல்வியுற்றதால் பாராளுமன்றச் செயல்துறையைச் சில நாடுகள் கைவிட்டன. பாராளுமன்றச் செயல்துறை வெற்றிகரமாக நடைபெறச் சில முன் தேவைகள் அவசியமாகும். சில நிபந்தனைகள் நிறைவேற்றப்பட வேண்டும்.

**சட்டமன்றத்தில் பெரும்பான்மை**

பாராளுமன்ற முறை அரசாங்கம் வெற்றி பெறவும், அரசாங்கம் நிலையுள்ளதாக அமையவும் ஆளும் கட்சிக்குப் பாராளுமன்றத்தில்

பெரும்பான்மை யிருக்க வேண்டும். நிலையான அரசாங்கம் இருந்தால் தான் கொள்கைகளில் தொடர்ச்சியை ஏற்படுத்தவும், நீண்டகாலக் கொள்கைகளை வகுக்கவும் இயலும். இரு கட்சி முறை நடைமுறையில் இருக்கும் போதுதான் ஒரு கட்சி ஆளும் கட்சியாகவும், மற்றது எதிர்க்கட்சியாகவும் இருக்கும். இவ்விரு கட்சி முறை இங்கிலாந்து நாட்டில் காணலாம். பல கட்சி முறையுடைய பிரான்சு நாட்டில் அடிக்கடி அமைச்சரவை வீழ்வதையும் அரசாங்கம் நிலையில்லாதிருப்பதையும் காண்கிறோம். எந்த ஒரு தனிக்கட்சிக்கும் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை கிடைக்காத காரணத்தால் கூட்டு அரசாங்கம் ஏற்படுத்தப்படுகிறது. கூட்டு அரசாங்க அமைச்சரவை உறுப்பினர்களிடையே கொள்கையில் ஒருமைப்பாடு இருக்காது; சரியான தலைவர் இருக்க மாட்டார்; கட்டுப்பாடும் ஒழுங்கும் நிலவா. தங்கள் பதவியைக் காத்துக் கொள்வதற்கான திட்டங்கள் வகுக்கப்படுமே தவிர நாட்டின் நலங்கருதி நீண்டகாலத் திட்டங்கள் உருவாகா. திட்டங்களின் தோல்விக்கும் அரசாங்கத்தின் குறைகளுக்கும் எந்த ஒரு கட்சியும் பொறுப்பேற்காது; பொறுப்பைத் தட்டிக்கழிக்கும். இரு உலகப் பெரும் போர்களிடையே இருந்த இருபத்திமூன்று ஆண்டுகளில் பிரான்சு நாட்டில் நாற்பத்திரண்டு அரசாங்கங்கள் தோன்றி வீழ்ந்தன. சராசரி ஒரு கூட்டு அமைச்சரவை ஆறு மாத காலத்திற்கே நடைமுறையில் இருந்துள்ளது. இவ்வித நிரந்தரத் தன்மையில்லா அரசாங்கம் பாராளுமன்ற முறைக்கு ஏற்றதல்ல. அரசாங்கம் நிரந்தரமுள்ளதாக இருக்கவேண்டுமானால் இருகட்சி முறையும், அதன் விளைவான பாராளுமன்றத்தில் தெளிவான பெரும்பான்மையும் அவசியமாகிறது.

### ஆற்றல் நிறை எதிர்க்கட்சி

பாராளுமன்றக் குடியாட்சியில் வலுவான எதிர்க்கட்சி அவசியமாகிறது. அரசாங்கத்தின் அதிகாரம் தவறான வழியில் பயன்படுத்தப் படுவதைத் தடுக்க வலிமையுள்ள எதிர்க்கட்சியாலேயே இயலும். அரசாங்கத்தின் கொள்கைகள், செயல்முறைகள், அமைச்சர்களின் நடவடிக்கைகள் ஆகியவைகளை உன்னிப்பாக எதிர்க்கட்சிகள் கவனித்துப் பாராளுமன்றத்தில் கேள்விகள் கேட்கும்; குறைகள் கூறும்; தவறு காண்பின் கண்டனத் தீர்மானங்களையும், நம்பிக்கையில்லாத் தீர்மானங்களையும் பாராளுமன்றத்தில் கொண்டுவரும். பொதுமக்களின் கருத்தையும் ஆதரவையும் எதிர்க்கட்சிகள் தங்களுக்குச் சாதகமாக்கி அடுத்த தேர்தலில் ஆட்சிக்கு வர முயலும். பொதுமக்களிடையே ஆதரவும் செல்வாக்கும் குறையும் என்ற அச்சம் ஆளும் கட்சியினரிடையே தோன்றுவதால் ஆட்சி செவ்வையாக நடைபெறும்.

## கட்சிகளிடையே பொறையுடைமை

பாராளுமன்ற முறைச் செயல்துறையில் ஆளுங்கட்சியும் எதிர்க்கட்சியும் இருக்கும். ஆளுங்கட்சியினர் நாணயமாகவும் வெளிப்படையாகவும் செயலாற்ற வேண்டும். எதிர்க்கட்சியினரை மதித்து அவர்களது வினாக்களுக்கு விடையளிக்க வேண்டும். அவர்கள் காட்டும் குறையைக் கருத்தில் கொண்டு ஆட்சி நடத்த வேண்டும். பொறுமையுடன் குறைகளை ஆய்தல் வேண்டும். எதிர்க்கட்சிகளை அடக்க முயல்வதும் அவைகள் மீது பலாத்காரத்தைப் பயன்படுத்துவம் முறையாகாது.

எதிர்க்கட்சியினர் அரசாங்கக் கொள்கைகளைக் குறை கூறுகின்றனர். அரசாங்க நடைமுறையில் குற்றம் காண்கின்றனர். அமைச்சர்களின் நடத்தையிலும் போக்கிலும் தவறு காண்கின்றனர். கண்டனத் தீர்மானங்களையும், நம்பிக்கையில்லாத் தீர்மானங்களையும் கொண்டுவருகின்றனர். இவைகள் அனைத்தும் நியாயத்தின் அடிப்படையிலும் உண்மைச் செய்திகளின் அடிப்படையிலும் அமைய வேண்டும். ஆளும் கட்சியும் எதிர்க்கட்சிகளும் அரசியல் நாகரிகத்தின் அடிப்படையிலும், நியாயத்தின் அடிப்படையிலும் பொறையுடைமையுடன் செயலாற்ற வேண்டும்.

## அமைச்சரவைப் பொறுப்பு

தலைமை அமைச்சர் ஆளுங்கட்சியின் தலைவராகவும், பாராளுமன்றத்தின் தலைவராகவும், அமைச்சரவையின் தலைவராகவும் விளங்குகிறார். இவர் தலைமையிலான அமைச்சரவை பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளதாக வேண்டும். அரசாங்கக் கொள்கைகளுக்கும் நடவடிக்கைகளுக்கும் அமைச்சரவை பொறுப்பேற்க வேண்டும். மேலும் அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு முக்கியமானதாகும். அமைச்சர்கள் தனித்தும் கூட்டாகவும் சட்டமன்றங்களுக்குப் பொறுப்புடையவர்களாக இருக்க வேண்டும். இருந்தாலும் வீழ்ந்தாலும் அமைச்சரவை ஒன்றுபோல் செயல்பட வேண்டும்.

## இரகசியம் பாதுகாக்கப்படுதல் வேண்டும்

அமைச்சரவையின் தீர்மானங்கள் உருவாக்கப்படும்போது ரகசியங்கள் காக்கப்பட வேண்டும். அமைச்சர்களிடையே கொள்கையில் கருத்து வேறுபாடு இருந்தாலும் அந்தரங்கமாக இருக்க வேண்டும். கருத்து வேறுபாடு வெளிப்பட்டால் கட்சியில் பிளவு ஏற்படும். இதன் விளைவாகப் பாராளுமன்றத்திலும் பிளவு ஏற்படும். பெரும்பான்மை குறைந்து அரசாங்க வீழ்ச்சிக்கு வழி

கோலும். அமைச்சரவை கருத்து ஒருமித்ததாகக் காட்சியளிக்க வேண்டும். மேலும் ரகசியங்கள் காக்கப்படாவிட்டால் சட்டத்தி லிருந்து தப்புவதற்கான மாற்று ஏற்பாடுகள் கையாளப்பட்டுச் சட்டத்தின் நோக்கம் நிறைவேருமல் போகலாம். எனவே, அமைச்சர்களிடையே அந்தரங்கம் காக்கப்படுதல் வற்புறுத்தப் படுகிறது.

### பாராளுமன்றக் கலேப்பு

பாராளுமன்றத்தைக் கலேப்பதற்கான உரிமையும் வழிவகை யும் பாராளுமன்ற முறை அரசாங்கத்திலிருக்க வேண்டும். அமைச்சரவைக்கும் பாராளுமன்றத்திற்கும் இடையே ஏற்படும் முரண்பாடுகளேத் தீர்ப்பதற்கு இது வகை செய்யும். பாராளு மன்றத்திற்குத் தான் கலேக்கப்படலாம் என்ற அச்சம் தோன்றும் போது முறைப்படி செயலாற்றும். சட்டமன்றங்களின் வல்லாட்சிப் போக்குக் கட்டுப்படுத்தப்படும். மேலும் அரசாங்கத் தின் உறுதியான தன்மை வலுவடையும். பாராளுமன்றம் கலேக்கப்பட்டுப் புதிய தேர்தல்கள் நடத்தப்பெற்ருல் மக்களின் கருத்தை அறிய முடியும். மக்களின் இறைமையைக் காக்க இயலும். பாராளுமன்றத்திற்கும் அமைச்சரவைக்குமிடையே உள்ள தகராறுகளுக்குத் தீர்ப்பளிக்கும் உரிமை மக்களுக்கு இருக்க வேண்டும்.

### அரசியலில் பட்டறிவு பெறுதல்

பாராளுமன்ற முறையில் அரசியல் பட்டறிவு பெற வாய்ப்பு இருப்பதால் அரசாங்கம் வெற்றியுடன் செயல்பட இயலும். இங்கி லாந்தில் நெடுங்காலமாகப் பாராளுமன்றச் செயல்துறை கடைப் பிடிக்கப்படுவதால் வழக்கங்களும், வழக்காறுகளும், மரபுகளும் தோன்றி இம்முறையை வெற்றிபடையச் செய்துள்ளன. பாராளு மன்ற முறைக் குடியாட்சியில் மக்கள் விழிப்புள்ளவர்களாகவும், பாராளுமன்ற நடவடிக்கைகளேயும், செயல்துறையின் நடவடிக் கைகளேயும் கண்காணிப்பவர்களாகவும் இருக்க வேண்டும். தங்கள் உரிமைகளும் சுதந்திரமும் காக்கப்படுவதற்கு மக்களின் விழிப்பு அவசியமாகிறது.

### எழுத்துச் சுதந்திரம் - உரிமை

சுதந்திரமாகப் பத்திரிக்கைகள் செயல்படுவதால் பாராளுமன்ற முறையை அவைகள் வெற்றிபெறச் செய்கின்றன. மக்களுக்கு அரசியல் கல்வியைப் புகட்டி விழிப்பை ஏற்படுத்துகின்றன. அர சாங்கத்தின் நடவடிக்கைகளேயும் கொள்கைகளேயும் விளக்கிப்

பொதுமக்களின் கருத்தை உருவாக்குவதில் பத்திரிக்கைகள் பெரும் பங்கு கொள்கின்றன. பாராளுமன்றமும் அரசாங்கமும் பொதுமக்களின் கருத்தை அறிய வேண்டியதும், அவற்றை மதித்துச் செயல்பட வேண்டியதும் குடியாட்சி நாட்டில் இன்றியமையாதனவாகும்.

## பாராளுமன்றச் செயல்துறையின் நிறைகள்

### இணக்கமான நிருவாகம்

பாராளுமன்றமுறைச் செயல்துறையில் இணக்கமான நிருவாகம் நடைபெற முடிகிறது. சட்டமன்றத்திற்கும் செயல்துறைக்கும் இடையே இவ்விணக்கத்தைக் காணலாம். உண்மைச் செயல் துறையினராகிய அமைச்சரவையினர் பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் ஆவர். அமைச்சரவையின் தலைவராகிய தலைமை அமைச்சர் பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியின் தலைவராவார். பாராளுமன்றத்தின் பெரும்பான்மையினரும் அமைச்சரவையும் ஒரே அரசியல் கட்சியைச் சார்ந்தவர்களாவர். தலைமை அமைச்சர் அமைச்சரவையின் தலைவராகவும் பாராளுமன்றத்தின் தலைவராகவும் இருக்கிறார். எனவே, அமைச்சரவையின் தீர்மானங்களும் கொள்கைகளும் பாராளுமன்றத்திலிருக்கும் அவர்களது கட்சியால் எளிதில் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. சட்டம் செய்பவர்களும், மானியம் வழங்குபவர்களும் சட்டத்தை நடைமுறைப்படுத்துகிறவர்களாகவும், செலவிடுகிறவர்களாகவும் அமைகின்றனர். சட்டமன்றத்திற்கும் செயல்துறையினருக்கும் இடையே முரண்பாடுகளோ, பிணக்குகளோ, பூசல்களோ நேருவதில்லை. தலைவர் முறை நடைமுறையிலிருக்கும் அமெரிக்க நாட்டின் குடியரசு தலைவர் ஓர் அரசியல் கட்சியைச் சார்ந்தவராகவும் பாராளுமன்றம் மற்றோர் அரசியல் கட்சியைச் சார்ந்ததாகவும் இருக்கலாம். சட்டங்கள் இயற்றுவதும், மானியம் வழங்குவதும் ஒரு கட்சியாகவும், சட்டங்களை நடைமுறைப்படுத்துவதும், மானியத்தைச் செலவிடுவதும் மற்றோர் அரசியல் கட்சியாகவும் அமையும் போது பிணக்குகளும் முரண்பாடுகளும் தோன்றுகின்றன. இவைகள் பாராளுமன்றமுறைச் செயல்துறையில் தவிர்க்கப்படுகின்றன.

### மக்களின் இறைமை மதிக்கப்படுகிறது

பாராளுமன்றச் செயல்துறையில் மக்கள் இறைமை மதிக்கப்படுகிறது. பாராளுமன்ற அங்கத்தினர்கள் மக்களின் பிரதிநிதிகள் ஆவர். இப்பிரதிநிதிகளின் குழுவே அமைச்சரவையாக அமைந்து

ஆட்சியை நடத்துகிறது. அவ்வப்போது பொதுமக்களின் கருத்துக்கள் பாராளுமன்றத்தில் பிரதிபலிக்கின்றன. இக்கருத்துகளுக்கேற்பவே அரசாங்கம் நடைபெறுகிறது. பொதுமக்களின் கருத்திற்கு மதிப்பளித்து அரசாங்கம் தனது கொள்கைகளேயும் நடைமுறைகளேயும் வகுக்கிறது; செயல்படுத்துகிறது; மாற்றி அமைத்துக் கொள்கிறது. பொதுமக்களின் கருத்தைப் புறக்கணிக்கும் அரசாங்கம் நம்பிக்கையை இழந்து பதவியைத் துறக்க நேரிடும். அடுத்து வரும் தேர்தல்களிலும் மக்களிடம் செல்வாக்கை இழக்க நேரிடும். பேராசிரியர் ஜென்னிங்ஸ் (Jennings) கருத்துப்படி பாராளுமன்றமுறை அரசாங்கம் மக்களின் கருத்தின்படியான அரசாங்கமாகவும் இயலக்கூடிய ஒரே சுயாட்சி முறை அரசாங்கமாகவும் விளங்குகிறது.[6]

### நெகிழ்வுடைமை

பாராளுமன்றச் செயல்துறை நெகிழ்வுடையதாகவும் சூழ்நிலேகளின் அவசியத்திற்கேற்ப எளிதில் மாறி அமையக் கூடியதாகவும் உள்ளது. அவசர காலத்திற்கேற்பவும் நெருக்கடி நிலேகளுக்கேற்பவும் வளேந்து கொடுக்கும் தன்மையைப் பாராளுமன்ற முறையில் காணலாம். பாராளுமன்ற முறையின் நெகிழ்ந்து கொடுக்கும் தன்மையைப் பேராசிரியர் பேஜ்ஹாட் (Bagehot) பெரிதும் பாராட்டுகிருர்.

### கூட்டுப் பொறுப்பு

பாராளுமன்ற முறையில் கூட்டுப் பொறுப்பு இருப்பதையும் பொறுப்புப் பிரிக்கப்படாமல் இணேந்திருப்பதையும் காணலாம். தனது கொள்கைகளுக்கும் நடைமுறைகளுக்கும் அமைச்சரவை பாராளுமன்றத்திற்கு நேரடியாகப் பொறுப்பானதாகும். இதன் வழி இது மறைமுகமாக வாக்காளர்களுக்குப் பொறுப்பாகிறது. தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்குப் பொறுப்பென்பது பிரதிநிதிகளேத் தேர்ந்தெடுத்த மக்களுக்குப் பொறுப்பாகும்.

### எதிர்க்கட்சிக்கு இடம்

பாராளுமன்ற முறையில் எதிர்க்கட்சிகள் முக்கியமான இடத்தை வகிக்கின்றன. பாராளுமன்றத்தில் பெரும்பான்மை ஆதரவுடையவர் ஆளும் கட்சியினராகவும், மற்றவர்கள் எதிர்க்கட்சியினராகவும் அமைகின்றனர். எதிர்க்கட்சிகள் அரசாங்கத்

[6] Jennings: 'Government with us is government by opinion, and that is the only kind of self-government that is possible.'

தின் நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டும் குறை கூறிக் கொண்டும் இருக்கும். எதிர்க்கட்சிகளின் கருத்திற்கு மதிப்பளித்தே அரசாங்கம் நடைபெற வேண்டும். எதிர்க்கட்சியினரின் கருத்தை கவனியாத அரசாங்கம் மக்கள் மத்தியில் செல்வாக்கை இழக்க நேரிடும். தம் மனைவியைவிட எதிர்க்கட்சித் தலைவரை இங்கிலாந்து தலைமை அமைச்சர் நன்கு அறிவார் என்று கூறப்படுகிறது. எதிர்க்கட்சியினர் மக்களின் கருத்தைத் தங்களுக்குச் சாதகமாக உருவாக்கி அடுத்துவரும் தேர்தலில் ஆட்சியைக் கைப்பற்ற முனைந்துகொண்டிருப்பர். பாராளுமன்றத்தை அரசியல் மேடையாகவும், செய்தித்தாள்களை ஒலிபெருக்கியாகவும், மக்களைச் செவிமடுப்போர்களாகவும் எதிர்க்கட்சிகள் பயன்படுத்தித் தங்கள் செல்வாக்கை உயர்த்தும். எதிர்க்கட்சிகள் இருப்பதால் அரசாங்கம் நெறிமுறையில் பிறழாமல் செலுத்தப்படும்.

## குடியாட்சி நெறிப்படுதல்

பாராளுமன்றச் செயல்துறை அரசாங்கத்தைக் குடியாட்சி முறைக்கு நெறிப்படுத்தியுள்ளது. இங்கிலாந்தில் முடியாட்சி நிலவினும் உலகத்தில் மிகப் பழமையான குடியாட்சி நாடு எனக் கருதப்படுகிறது. இதற்குக் காரணம் பாராளுமன்ற முறை அரசாங்கமே ஆகும். நாட்டின் தலைவர் அரசியாக இருந்தாலும், குடியரசு தலைவராக இருந்தாலும் அரசாங்கத்தின் தலைவர் மக்களின் தலைவராகப் பாராளுமன்ற முறையில் விளங்குகிறார்; பாராளுமன்றக் குடியாட்சி இங்கிலாந்தில் வெற்றி பெற்றுள்ளது. தெளிந்த வாக்காளர்களும், செய்தி நிறுவனங்களும், இரு கட்சி முறையும், பொதுமக்கள் கருத்தும், அரசியலமைப்பின் வழக்காறுகளும், படிப்படியான வளர்ச்சியும் இங்கிலாந்தில் பாராளுமன்ற முறையின் செல்வாக்கிற்குக் காரணங்களாகும்.

## அரசியல் அறிவு

பாராளுமன்றக் குடியாட்சியில் அரசியல் கட்சிகள் வெற்றிக்கு மக்களை அணுகி அவர்களிடம் தங்கள் கொள்கைகளையும் திட்டங்களையும் விளக்க வேண்டும். ஒவ்வோர் அரசியல் கட்சியும் மக்களின் ஆதரவைப் பெற முயலும். மக்களின் தீர்ப்பே மகேசனின் தீர்ப்பாக அமையும். வாக்காளர்கள் மத்தியில் அரசியல் கொள்கைகளும் திட்டங்களும் விளக்கித் தெளிவுபடுத்துவதால் மக்களுக்கு அரசியல் அறிவு வளர்கிறது. தங்கள் உரிமையின் உயர்வை உணர்கிறார்கள்.

## பேராசிரியர் பிரைசின் கருத்து

பேராசிரியர் பிரைசின் (Bryce) கருத்துப்படி, பாராளுமன்ற முறையில் எதிர்க்கட்சியினரின் வழியாக அமைச்சர்கள் சட்ட

அவைகளின் நாடியை அறிய முடிகிறது. பாராளுமன்ற அங்கத்தினர்கள் தங்கள் தொகுதியில் நிலவும் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டி உடனடி நிவாரணம் பெற இயலுகிறது. அரசாங்கக் காரியங்களைத் துரிதமாகவும் தாமதம் இன்றிக் கவனிக்கவும் செயல்படுத்தவும் பாராளுமன்ற முறைச் செயல்துறையில் இயலும். ஏனெனில், பாராளுமன்றத்தில் எதிர்க்கட்சியினர் குறை கூறினாலும் தம் கட்சியைச் சார்ந்த பெரும்பான்மையினர் ஆதரவு வெளிப்படையானதாகும். உள்நாட்டு நடவடிக்கைகளிலும் அயல்நாட்டுக் கொள்கைகளிலும் தயக்கமின்றிச் செயல்படலாம். மேலும் நாட்டின் தேவைக்கேற்ற சட்டங்களைத் தடைகளின்றி இயற்றலாம்.[7]

### பேராசிரியர் லாஸ்கியின் கருத்து

பேராசிரியர் லாஸ்கியின் (Laski) கருத்துப்படி அமெரிக்கக் குடியரசு தலைவருக்கும், அதன் பாராளுமன்றமாகிய காங்கிரசுக்கும் இருக்கும் பிணக்குப் பாராளுமன்றக் குடியாட்சியில் இல்லை. செயல்துறையினர் பாராளுமன்றத்தின் குழுவாதலால் இவர்கள் கருத்துகளும் திட்டங்களும் பாராளுமன்றத்தில் பொறுப்புடன் கவனிக்கப்படுகிறது.

## பாராளுமன்றச் செயல்துறையின் குறைகள்

### அதிகாரக் குவிப்பு

பாராளுமன்றச் செயல்துறையில் சட்டமன்றத்திற்கும் செயல்துறைக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதால் அதிகாரக் குவிப்பு நிலவுகிறது. அரசாங்க நிறுவனங்களிடையே சுதந்திரமும் சுயேச்சையும் நிலவ வேண்டுமென்ற அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு தகர்க்கப்படுகிறது. இவ்வதிகாரக் குவிப்பின் காரணமாக வல்லாட்சி தோன்றும் வாய்ப்பு உள்ளது. பேராசிரியர் சிட்விக் (Sidgwick) கருத்துப்படி, செயல்துறையும் சட்டமன்றமும் இணைந்திருப்பதால் செயல்துறை தனது அலுவலைக் கவனிக்காது சட்டமியற்றும் அலுவலைக் கவனிக்கும். மசோதாக்களை தயாரிப்பதிலும், அவைகள் சட்டமன்றத்தில் நிறைவேற்றப்படுவதிலும் கவனம் செலுத்தும். பாராளுமன்றம் சட்டமியற்றும் தனது அலுவலில்

[7] Bryce: 'Swiftness in decision and vigour in action, and enables the cabinet to press through such legislation as it things needed, and to conduct both domestic and foreign policy with the confidence that its majority will support it against the attacks of the opposition.'

முழுக்கவனம் செலுத்தாது. அன்றாட நிருவாகத்தில் கவனம் செலுத்தும். மேலும் அயல்நாட்டு விவகாரங்களிலும் தலையிடும்.[8]

சிட்விக் கூறும் இக்குறைபாடு ஏற்றுக்கொள்ளத் தக்கதாக இல்லை. நடைமுறையில் பார்க்கும் போது செயல்துறையும் சட்ட மன்றங்களும் இணைந்து செயல்படுவதால் மட்டும் வல்லாட்சி தோன்றாது. இவ்வாறு இணைந்து செயல்படுவது அரசாங்கத்தின் திறமைக்கு உகந்ததாக இருக்கிறது. மேலும், அதிகாரப் பிரிவினைக்கோட்பாட்டை முழு அளவில் கடைப்பிடிப்பதும் இயலாத தொன்றாகும்.

**கட்சி அரசாங்கம்**

பாராளுமன்றச் செயல்துறை கட்சிகளின் அடிப்படையில் இயங்கும் அரசாங்கமாகும். பாராளுமன்றத்தில் பெரும்பான்மை பெற்ற கட்சியினர் ஆட்சியை நடத்துகின்றனர். இவர்கள் வல்லாட்சிப் போக்கில் நடந்து கொள்ள இடமிருக்கிறது. சிறுபான்மைக் கட்சியினரை அலட்சியப்படுத்தலாம். அரசாங்க நடவடிக்கைகளில் சிறுபான்மைக் கட்சியினருக்கும், இதன் தலைசிறந்த தலைவர்களுக்கும் அரசினை நடத்தப் பங்கு அளிக்கப்படுவதில்லை. மேலும், அமைச்சர் அவை வல்லாட்சிப் பாதையில் செல்லுமானால் தலைமை அமைச்சர் வல்லாட்சியின் தலைவராக விளங்குவார்.

எனினும் தலைமை அமைச்சரும் இதர அமைச்சர்களும் தங்கள் அரசியல் கட்சிகளின் கட்டுப்பாட்டுள் அடங்குவர். தலைமை அமைச்சர் தம் விருப்பப்படி எதையும் செய்ய இயலாது. தம் சகாக்களின் ஆலோசனையைப் பெற்றே செயலாற்ற வேண்டும் தம் கட்சி மீண்டும் வெற்றி பெறுவதற்குத் தம் அரசியல் நண்பர்களையும் தலைமை அமைச்சர் அனுசரித்தே செல்ல வேண்டும். எனவே, தலைமை அமைச்சரோ மற்ற அமைச்சர்களோ, கட்சியோ வல்லாட்சிப் போக்கில் சென்றால் அடுத்து வரும் தேர்தலில் பாடம் கற்பிக்கப்படுவர்.

**நிலையில்லா அரசாங்கம்**

பாராளுமன்றச் செயல்துறையில் அரசாங்கம் உறுதியற்றதாக இருக்கிறது. அமைச்சரவை பதவியில் இருக்கக்கூடிய காலம் வரையறுக்கப்படவில்லை. பாராளுமன்றத்தில் பெரும்பான்மை

[8] Sidgwick 'Ministers are liable to be distracted from their executive duties by the work of preparing legislative measures and carrying them through parliament while parliament is tempted away from legislative problems by interesting questions of current administration in which, especially in foreign affairs, it is liable to interfere to an excessive extent.'

இருக்கும் வரையில் அமைச்சரவை பதவியில் இருக்கலாம் என்பதே விதியாகும். பாராளுமன்றத்தில் குறைந்த பெரும்பான்மையுடைய அமைச்சரவைக்கு எப்போதும் ஆபத்து இருந்து கொண்டேயிருக்கும். பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் கட்சி மாறும்போது ஆளும் கட்சிக்குப் பெரும்பான்மை குறைந்துவிடலாம். அப்போது அமைச்சரவை பதவித்துறவு கொள்ள வேண்டும். பல கட்சி முறைகள் நிலவும் நாடுகளிலும் கூட்டு அமைச்சரவை ஆட்சியிலிருக்கும் நாடுகளிலும் இவ்விதம் அரசாங்க நிலையாமை அடிக்கடி தோன்றும். நிலையாமை உள்ள அரசாங்கங்கள் தங்கள் பதவியைக் காப்பதற்காக உடனடித் தேவைகளையே நிறைவேற்றும். நீண்டகாலத் திட்டங்களை மேற்கொள்ளாது. மேலும் பதவித்துறவு மேற்கொண்ட அமைச்சரவைக்குப் பிறகு வரும் புதிய அமைச்சரவை புதிய கொள்கைகளைக் கடைப்பிடிப்பதோடு பழைய அமைச்சரவையின் கொள்கைகளை மாற்றும். அரசாங்கக் கொள்கைகளிலும் திட்டங்களிலும் ஒரு நிரந்தரத் தன்மையைக் காணமுடியாது.

பிரான்சு நாட்டில் பல கட்சி முறை நிலவுகிறது. மூன்றாவது நான்காவது குடியரசுகளின் அமைச்சரவைகள் சில வாரக் கணக்கில் கூட நிலைத்திருக்கவில்லை. அந்நாட்களில் பிரான்சு நாடு ஓராண்டில் நான்கு மாதங்கள் அமைச்சரவையாலும் எட்டு மாதங்கள் பாராளுமன்றத்தாலும் ஆளப்பட்டது. 1958 ஆம் ஆண்டின் ஐந்தாவது குடியரசில் இந்த அவல நிலையை நீக்குவதற்காக டிகாலின் (De Gaulle) முயற்சியால் குடியரசு தலைவருக்கு அதிக அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன.

பாராளுமன்றச் செயல்துறை மீது கூறப்பட்ட இந்தக் குற்றச்சாட்டுகள் பல கட்சி முறையுள்ள அரசாங்கத்திற்கே பொருந்துவனவாகும். இங்கிலாந்து போன்ற இரு கட்சி முறையுள்ள நாடுகளில் அமைச்சரவை நிலையானதாக இருந்து பாராளுமன்ற அரசாங்கம் நன்கு செயல்படுகிறது.

### திறமையில்லா நிருவாகம்

பாராளுமன்ற அரசாங்கம் திறமையில்லா நிர்வாகமுடையது என்று குறை கூறப்படுகிறது. துறைகளுக்குப் பொறுப்பேற்கும் அமைச்சர்கள் அரசாங்கத்துறை பற்றிய முன்னறிவு இல்லாதவர்களாக இருக்கிறார்கள். பொதுத்துறை அலுவலர்களின் ஆலோசனையின் படியே துறை நிர்வாகத்தை நடத்துகின்றனர். துறையில் உள்ள அனுபவத்தைக் கருத்தில் கொள்ளாது கட்சியில்உள்ள செல்வாக்கை மட்டுமே கருத்தில் கொண்டு பிரதம அமைச்சரால்

மற்ற அமைச்சர்கள் நியமிக்கப்படுகிறார்கள். சர் சிட்னி லோ (Sir Sidney Low) என்பவரது கூற்றுப்படி, 'கருவூலத்தின் இரண்டாம் நிலை எழுத்தர் கணிதத் தேர்வில் வெற்றி பெற்றிருக்க வேண்டும். ஆனால், சான்ஸ்லர் ஆப் எக்செக்யூர் (Chanceller of Exchequer) எனப்படும் கருவூலத் தலைவர் நடுத்தர வயதினராகவும் தாம் ஈடன் பள்ளியிலும் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்திலும் கற்ற எண்களை மறந்தவராகவும் இருக்கிறார். கருவூலக் கணக்கில் தசமஸ்தானத்தில் எண்களுக்கு முன் உள்ள புள்ளிகளை அறியாதவராகக் கள்ளம் கபடம் அற்ற முறையில் புள்ளிகள் என்னவென்று வினவுகிறார்.'[9] அரசியல்வாதிகள் தங்கள் கட்சி வேலைகளைக் கவனிப்பதிலும், பொது விழாவில் கலந்து கொள்வதிலும் தங்கள் தொகுதிப் பணிகளைக் கவனிப்பதிலும் பெரும் பகுதி நேரத்தைச் செலவிடுகின்றனர். இதன் காரணமாகப் பாராளுமன்ற நிர்வாகம் திறமையற்றதாகி விடுகிறது.

ஆனால் இக்கூற்று ஏற்புடையதல்ல. அமைச்சர்கள் துறையின் நுணுக்கங்களை அறிந்திருக்க வேண்டுமென்பதில்லை. துறையில் திறம்படைத்தவர்களாகவும் இருக்க வேண்டுமென்பதில்லை. அமைச்சர்கள் துறையின் அலுவலர்கள் அல்லர். அரசாங்கக் கொள்கையின்படி துறை செயல்படுகிறதா என்பதைக் கண்காணிப்பதும், பாராளுமன்றத்திற்குப் பொறுப்பாக இருப்பதுமே அமைச்சர்களின் பணியாகும். ராம்சே மாக்டனால்டு (Ramsay Mac Donald) கூற்றுப்படி, அமைச்சரவை மக்களுக்கும் துறை நிபுணர்களுக்கும், கொள்கைக்கும், செயல்முறைக்கும் இடையே பாலமாக அமைகிறது. துறை செயல்படுவதைக் கவனிப்பதில்லை; துறை குறிப்பிட்ட நெறியில் செயல்படுவதையே கவனிக்கின்றனர்.[10]

### எதிர்க்கட்சிகளின் எதிர்ப்பு

பாராளுமன்ற அரசாங்கத்தில் எதிர்க்கட்சியினர் அரசாங்கத்தை எதிர்ப்பதையே கொள்கையாகக் கொண்டுள்ளனர். செயல்

[9] Sir Sidney Low: 'A Youth must pass an examination in Arithmetic before he can hold a second class clerkship in the Treasury; but a Chancellor of the Exchequer may be middle aged man of the world who has forgotten what little he ever learnt about figures at Eton or Oxford, and is innocently anxious to know the meaning of those little first dots when confronted with Treasury accounts worked out in decimals.'

[10] Ramsay Mac Donald 'The cabinet is the bridge linking up the people with the expert, joining principle to practice. Its function is to transform the message sent along sensory nerves. It does not keep the departments going; it keeps teem going in certain direction.'

துறையினர் நன்மையைச் செய்தாலும் தீமையைச் செய்தாலும் வேறுபாடின்றி எதிர்க்கட்சியினரின் எதிர்ப்பு நிலவுகிறது. ஆளும்கட்சியினர் திட்டங்களைச் செயல்படுத்த வேண்டுமென்று கருதும்போதெல்லாம் எதிர்க்கட்சிகள் திட்டங்களைத் தடைசெய்ய வேண்டுமெனக் கருதுகின்றனர். இதன் விளைவாகப் பொருள் விரயமும் கால விரயமும் ஏற்படுகின்றன. நாட்டில் குழப்பமும் கொந்தளிப்பும் தோன்றுகின்றன. பொது அனுமதிக்குப் பங்கம் விளைகிறது. ஓயாத நீங்காத முரண்பாடுகளும் பூசல்களும் நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. பேராசிரியர் பிரைசின் (Bryce) கருத்துப் படி, ரத்தக் குழாய்களில் சிவப்பு அணுக்களுக்கும் நோய்க் கிருமிகளுக்கும் நடைபெறும் போராட்டம் போல ஆளும்கட்சியினருக்கும் எதிர்க்கட்சியினருக்கும் போராட்டங்கள் நடைபெறுகின்றன.[11]

இக்குறைக்கும் நாம் மறுமொழி கூற இயலும்; பாராளுமன்றக் குடியாட்சி நாட்டில் அரசியல் கட்சிகளிடையே பொறையுடைமை அவசியமாகிறது. பெரும்பான்மையோர் ஆளுவதும், சிறுபான்மையோர் குறை கூறுவதும் குடியாட்சியில் ஏற்றுக்கொள்ளப்பட்ட கோட்பாடாகும். எதிர்க்கட்சிகளின் குறைகளுக்குச் செவி மடுப்பதன் மூலம் அரசாங்கம் தன்னையும் தனது கொள்கைகளையும் திட்டங்களையும் நெறிமுறைப்படுத்திக் கொள்ள இயலும்.

### விரைந்து செயல்படாத் தன்மை

பாராளுமன்றச் செயல்துறையில் பிரதம அமைச்சர் தலைவராக இருந்தாலும் இதர அமைச்சர்களின் ஒப்புதலும் பெறவேண்டும். தலைவர் முறைச் செயல்துறையிலிருப்பது போல் பாராளுமன்றச் செயல்துறையில் தனித் தலைவர் கிடையாது. ஒவ்வொரு முடிவும் மேற்கொள்ளப்படுவதற்கு முன் சக அமைச்சர்கள் கலந்து ஆலோசிக்கப்பட வேண்டும். இதனால் நடவடிக்கைகளை மேற்கொள்வதிலும், செயல்படுத்துவதிலும் காலதாமதங்கள் நிகழ்கின்றன. குறிப்பாகப் பல கட்சிமுறையும் கூட்டு அமைச்சரவையும் நிலவும் பிரான்சு போன்ற நாடுகளில் ஒரு கொள்கையை வகுப்பதிலும் இதற்கு மற்ற அமைச்சர்களின் ஆதரவைப் பெறுவதிலும் ஏராளமான காலதாமதங்கள் ஏற்படுகின்றன. துரித நடவடிக்கை தேவைப்படும் அவசர காலங்களிலும், நெருக்கடி காலங்களிலும் இடையூறுகள் தோன்றுகின்றன.

[11] Bryce: 'One party holds them, the other desires them, and the conflict is unending for immediatley after a defeat the beaten party begins its campaign to dislodge the victors. It is like the incessant batt e described as going on in the blood vessels between the red corpuscles and the invading microbes.'

### சட்டமன்றத்தின் செல்வாக்கு மிகுதல்

பாராளுமன்ற முறை அரசாங்கத்தில் பாராளுமன்றத்தின் செல்வாக்கு மிகுந்து செயல்துறை பாராளுமன்றத்திற்கு அடிமையாகிறது. சுதந்திரமாகச் செயல்பட இயலுவதில்லை. தலைவர் முறைச் செயல்துறையில் குடியரசு தலைவர் பாராளுமன்றத்தின் தலையீடு இன்றிச் சுதந்திரமாகச் செயல்பட இயலுகிறது. பாராளுமன்றத்தின் வல்லமை மிகுந்துள்ளதையும், அதன் இறைமை அதிகாரத்தையும் இங்கிலாந்தில் காணலாம்.

### பாராளுமன்றச் செயல்துறையின் வெற்றிகளும் தோல்விகளும்

இங்கிலாந்து, இந்தியா, சிலோன் போன்ற நாடுகளில் பாராளுமன்றச் செயல்துறை வெற்றி பெற்றுள்ளது. பாராளுமன்றச் செயல்துறை வெற்றி பெறுவதற்குச்,சூழ்நிலைகள் சாதகமாகஅமைய வேண்டும். இரு கட்சி முறையும், அரசியல் கட்சிகளிடையே பொறையுடைமையும் அவசியமாகும். கட்சி நலனைவிடத் தேசிய நலன் கருத்தில் கொள்ளப்பட வேண்டும். மக்களின் மனப்பான்மை சாதகமாக அமையவேண்டும். அரசியல் அறிவும் விழிப்பும் வாக்காளரிடம் இருக்கவேண்டும்.

பாராளுமன்றச் செயல்துறை பர்மா, இந்தோனேசியா, பாகிஸ்தான், வங்காள தேசம் ஆகிய நாடுகளில் தோல்வியடைந்துள்ளது. அரசியலமைப்பில் உள்ள குறை, முறையான தேர்தல் நடைபெறுமை, அரசின் தலைவர் அமைச்சரவையில் தலையிடுதல், சிறந்த தலைவர்களின்மை ஆகிய காரணங்களால் பாராளுமன்றச் செயல்துறை நடைமுறையில் வெற்றி பெறாது தோல்வியடைந்தது.

## பாராளுமன்றச் செயல்துறைக்கு எடுத்துக்காட்டுகள்

### ஆங்கிலேய அமைச்சரவையின் வரலாறும், அதன் இக்கால அமைப்பும்: அரசரின் அமைச்சர்கள் சட்டம் 1937

குடியேற்ற உரிமை நாடுகளும் சில ஐரோப்பிய நாடுகளும் தங்கள் அரசியலமைப்பில் அமைச்சர்கள் பற்றியும் அமைச்சரவை பற்றியும் குறிப்பிடுகின்றன. ஆனால், இங்கிலாந்து நாட்டில் 1937 ஆம் ஆண்டு வரை ஆவண வடிவத்தில் அமைச்சர்கள் பற்றியோ அமைச்சரவை பற்றியோ குறிப்பிடப்படவில்லை. 1937 ஆம் ஆண்டில் அரசரின் அமைச்சர்கள் சட்டம் (Ministers of Crown Act) இயற்றப்பட்டது. முதன்முறையாக அமைச்சர்கள் பற்றியும், தலைமை அமைச்சர் பற்றியும், எதிர்க்கட்சித் தலைவர் பற்றியும் இச் சட்டத்தில் குறிப்பிடப்பட்டது. தலைமை அமைச்சரின் ஊதியம்

ஆண்டிற்குப் பத்தாயிரம் பவுன் என்றும், எதிர்க்கட்சித் தலைவருக்கு ஆண்டிற்கு இரண்டாயிரம் பவுன் என்றும் சட்டத்தில் குறிப்பிடப்பட்டது. 1937ஆம் ஆண்டிலிருந்து அமைச்சரவையும், தலைமை அமைச்சரும், எதிர்க்கட்சித் தலைவரும் சட்டப்படியான இடத்தைப் பெறுகின்றனர். அமைச்சரவையின் முன்னைய வரலாறு காண்பதும் இங்கு அவசியமாகும்.

**பேரவை** (The Great Council)

பண்டைக் காலத்தில் சட்டம் இயற்றல், நிர்வாகம் செய்தல், நீதி கூறுதல் ஆகிய அரசாங்க அதிகாரங்கள் அனைத்தையும் அரசரே செலுத்தினர். அரசருக்கு ஆலோசனை நல்க இங்கிலாந்தில் முதலாம் வில்லியம் காலத்தில் பேரவை (The Great Council) ஒன்று அமைக்கப்பட்டது. இது ஆண்டிற்கு மும்முறை கூடியது. பேரவையிலிருந்து ஒரு தனிக்குழு தோற்றுவிக்கப்பட்டு அது நிரந்தர அவையாகச் செயலாற்றியது. அதில் கான்டர்பரி, யார்க்கு நகர தலைமைக் குருக்கள் (Archbishops), முறைவர் (Justicier), பொருளாளர், நிதித்தலைவர் (Chanceller) ஆகியோர் உறுப்பினர்களாக இருந்தனர். பேரவை தற்கால நிறுவனங்களின் அடிப்படையாய் அமைந்தது எனக் கூறலாம்.

**உயரவை** (Privy Council)

பேரவை அரசரோடு நெருங்கிய தொடர்புகொள்ள இயலவில்லை. எனவே பிரிவி கவுன்சில் எனப்படும் **உயரவை** தோற்றுவிக்கப்பட்டது. இது அரசருக்கு அறிவுரை வழங்கும் குழுவாக அமைந்தது. உயரவை பல எதேச்சை அதிகாரங்களைப் பெற்றுச் செயல்பட்டது. டியூட்டர் மன்னர்கள் காலத்தில் இச்சபை மிகுந்த செல்வாக்குப் பெற்று விளங்கியது.

**அமைச்சரவை** (Cabinet)

உயரவையும் எண்ணிக்கையில் பெருகியதால் அதனினும் சிறிய அவையின் அவசியம் தோன்றியது. இச்சிறிய அவையை உட்புற அவையென மெக்காலே கூறுகிறார். இது ஒரு தனிச் சிறிய அறையில் (Cabinet) கூடித் தனது அலுவலைக் கவனித்தது.

இங்கிலாந்தின் செயல்துறை அதிகாரம் மூன்று படிகளில் அமைச்சரவைக்கு மாறியது. 1942-ல் முதலாம் சார்லஸ் காலத்தில் தோன்றிய உள்நாட்டுப் போர் முதற்படியாகவும், 1688 ஆம் ஆண்டின் புகழ்மிக்க புரட்சி இரண்டாம் படியாகவும் அமைந்தன.

இப்புரட்சிகளின் காரணமாகப் பாராளுமன்றத்தின் நம்பிக்கையை உடைய அமைச்சர்கள் நியமிக்கப்பட்டனர். மூன்றும் வில்லியம் காலத்திலும் ஆன் அரசியார் காலத்திலும் அமைச்சரவைக் கூட்டங்களுக்கு மன்னர்களே தலைமை தாங்கினர். 1701ஆம் ஆண்டின் அரசுரிமை நிர்ணயச் சட்டப்படி (Act of Settlement) ஹனோவேரிய மரபினர் இங்கிலாந்தின் அரியணை ஏறினர். இவர்கள் ஆங்கிலம் அறியாதவர்களாவர். எனவே, முதலாம் ஜார்ஜ், இரண்டாம் ஜார்ஜ் மன்னர்கள் அமைச்சரவைக் கூட்டங்களுக்குத் தலைமை வகிக்கவில்லை. அமைச்சர்களில் ஒருவர் தலைமை ஏற்றதால் அவர் தலைமை அமைச்சர் ஆனர். 18ஆம் நூற்றுண்டின் இறுதியிலிருந்து அமைச்சரவை தன் செல்வாக்கை நிரந்தரமாக அடைந்தது. இங்கிலாந்து அமைச்சரவையின் கூறுபாடுகளை டிரெயில் (Trail) என்பார் கூறியுள்ளார். (அ) அமைச்சரவை உறுப்பினர்கள் ஒரே அரசியல் கருத்துள்ளவர்களாகவும், பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியைச் சார்ந்தவர்களாகவும் இருந்தனர். (ஆ) அமைச்சர்களிடையே ஒருமுகத் தீர்மானமும் கூட்டுப்பொறுப்பும் நிலவியது. பாராளுமன்றம் கண்டனம் தெரிவிக்கும்போது அனைவரும் பதவியைத் துறந்தனர். (இ) தலைமை அமைச்சரின் நிலையும் செல்வாக்கும் உயர்வடைந்தன. இதர அமைச்சர்கள் தலைமை அமைச்சருக்கு அடங்கி அவரது தலைமையை ஏற்றனர்.

### கட்சிமுறை

இங்கிலாந்தில் இருகட்சி முறை தோன்றியது. ஒன்று ஆளும் கட்சியாகவும், மற்றது எதிர்க்கட்சியாகவும் செயல்படுகின்றன. அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்குரியவர்களாகவும், அதன் வழி வாக்காளர்களுக்குப் பொறுப்புள்ளவர்களாகவும் இருக்கின்றனர். வால்டர் பேஜ்ஹாட் (Walter Bagehot) கூற்றுப்படி, அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள். பாராளுமன்றத்தால் தோற்றுவிக்கப்பட்டவர்கள். தன்னைத் தோற்றுவித்த பாராளுமன்றத்தையே அழிக்கும் ஆற்றலுடையவர்களாகவும் விளங்குகின்றனர். பாராளுமன்றத்தின் நம்பிக்கையை இழக்கும்போது பாராளுமன்றத்தைக் கலைக்கும்படி அமைச்சரவை அரசிக்கு ஆலோசனை கூறலாம்.[12]

[12] Walter Bagehot: 'The cabinet is a creature, lent, unlike all other creatures, it has the power of destroying its creator, iie., the House of commons. For if the cabinet is defeated in the commons it can, instead of reisgning advise the Queen to dissolve the assembly upon which it depends.'

## குடியேற்ற உரிமை நாடுகளில் அமைச்சரவை அரசாங்கம்: குடியேற்ற உரிமை நாடுகள்

முன்பு இங்கிலாந்துப் பேரரசில் இருந்து பிறகு குடியேற்ற உரிமைநிலையை (Dominion Status) அடைந்த நாடுகள் இங்கிலாந்தின் பாராளுமன்றச் செயல்துறையையே பின்பற்றின. நிர்வாகத்துறை அதிகாரம் இங்கிலாந்து அமைச்சரவையிடமிருந்து தன்னாட்சி பெற்ற இந்நாடுகளின் அமைச்சரவைக்கு மாற்றப்பட்டது. குடியேற்ற நிலை நாடுகளுக்குத் தலைமை ஆளுநரை இங்கிலாந்து அரசியார் நியமித்தாலும் தலைமை ஆளுநர் அந்நாட்டுப் பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியிலிருந்து அமைக்கப்பட்ட அமைச்சரவையின் அறிவுரைப்படியே செயலாற்றுவார். இம்முறைச் செயல்துறை இங்கிலாந்துப் பாராளுமன்றச் செயல்துறைக்கு ஒத்ததாக உள்ளது.

### கனடாவின் செயல்துறை

கனடாவின் தலைமை ஆளுநர் டர்ஹாமின் 1839 ஆம் ஆண்டின் அறிக்கைப்படி (Durham Report), 1840 ஆம் ஆண்டில் கனடா சட்டம் இங்கிலாந்துப் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. ஆனால் உடனடியாக அமைச்சரவை முறை கனடாவில் ஏற்படுத்தப்படவில்லை. டர்ஹாமிற்குப் பிறகு கனடாவின் தலைமை ஆளுநர்களாகச் சென்ற சைடன்ஹாமும் (Sydenham) எல்கினும் (Elgin) கனடாவில் அமைச்சரவை முறையைத் தோற்றுவித்தனர். பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியிலிருந்து தமது நிர்வாக அவையின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தனர். 1867 ஆம் ஆண்டில் கனடா குடியேற்ற உரிமை நாட்டுச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இச்சட்டத்தின்படி கனடாவில் பாராளுமன்றச் செயல்துறை ஏற்படுத்தப்பட்டது.

### நியூசிலாந்து ஆஸ்திரேலியச் செயல்துறைகள்

1850ஆம் ஆண்டில் நியூசிலாந்திற்கும் ஆஸ்திரேலியாவுக்கும் பொறுப்புள்ள அரசாங்கங்கள் வழங்கப்பட்டன. இந்நாடுகளிலும் பாராளுமன்ற அரசாங்கம் நிறுவப்பட்டது. அமைச்சர்கள் பிரதிநிதி சபையிலோ அல்லது செனட் சபையிலோ உறுப்பினராய் இருக்கவேண்டும். உறுப்பினராக இல்லாத அமைச்சர் தாம் பதவியேற்ற மூன்று மாதங்களில் பாராளுமன்றத்தின் உறுப்பினராக வேண்டும், அல்லது பதவி துறக்க வேண்டும்.

### தென் ஆப்பிரிக்காவின் செயல்துறை

1910ஆம் ஆண்டில் தென் ஆப்பிரிக்காவின் ஐக்கியம் அமைக்கப்பட்டது. பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ள அமைச்சரவை

நிறுவப்பட்டது. 1960ஆம் ஆண்டில் தென்னுப்பிரிக்கா குடியரசாகி பிரிட்டிஷ் பொது நலக் கூட்டிலிருந்து விலகியபோதும் பாராளுமன்றச் செயல்துறை முறையைக் கைவிடவில்லை. தென் ஆப்பிரிக்காவின் 1961ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி செயல்துறை தலைவர் அமைச்சரவையின் அறிவுரைக் கேற்பச் செயலாற்ற வேண்டும். அமைச்சரவை உறுப்பினர் பாராளுமன்றத்தின் ஏதாவது ஓர் அவையில் உறுப்பினராயிருக்க வேண்டும். உறுப்பினராயில்லாத அமைச்சர் மூன்று மாதக் கெடுவில் பாராளுமன்ற உறுப்பினராக வேண்டும் அல்லது பதவித்துறவு கொள்ள வேண்டும்.

### அயர்லாந்தின் செயல்துறை

அயர்லாந்துக் குடியேற்ற நிலை பெற்ற நாடான போது பாராளுமன்றச் சார்புள்ள செயல்துறையைப் பின்பற்றியது. தற்போது இது குடியரசாகிப் பொதுநலக் கூட்டிலிருந்து வெளியேறிவிட்டது. இருப்பினும் பாராளுமன்றச் செயல்துறையையே பேணிவருகிறது. அயர்லாந்து அரசியலமைப்பின் 51ஆம் விதி அரசாங்கத்திற்கு அறிவுரை வழங்கும் அமைச்சரவையை நிருவாக அவையெனக் குறிப்பிடுகிறது. இவ்வவைப் பிரதிநிதிகளின் அவைக்குப் பொறுப்புள்ளது. எழுவருக்கு மிகாமலும் ஐவருக்குக் குறையாமலும் உறுப்பினர்கள் நிர்வாக அவையில் இருப்பர். அவைத்தலைவரின் பரிந்துரையின் பேரில் அவை உறுப்பினர்கள் நியமிக்கப்படுவர்.

### பிரான்சின் ஐந்தாம் குடியரசு

1958ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் பிரான்சின் ஐந்தாம் குடியரசு நடைமுறைக்கு வந்தது. அமைச்சரவையின் உறுதியான தன்மையைஏற்படுத்துவதற்காகப் புதிய அரசியலமைப்பைச் சார்லஸ் டி கால் (Charles De Gaulle) வகுத்துக் குடியொப்ப மூலம் மக்களின் ஒப்புதலைப் பெற்றுர். புதிய அரசியலமைப்பின்படி தேர்வாளர் குழுவால் குடியரசு தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறுர் பாராளுமன்றம் தேர்ந்தெடுப்பதில்லை. தலைமை அமைச்சரைக் குடியரசு தலைவர் நியமனம் செய்கிறுர். இதர அமைச்சர்களைத் தலைமை அமைச்சரின் பரிந்துரையின் பேரில் குடியரசு தலைவர் நியமனம் செய்வார். அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையவர் ஆவர். ஆனுல், அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் அல்லர். ஐந்தாவது குடியரசில் தலைவரின் அதிகாரங்கள் அதிகரிக்கப்பட்டன. பாராளுமன்றத்தைக் கலைக்கும் உரிமையையும், நெருக்கடி நிலைகளைப் பிரகடனம் செய்யும் உரிமைகளையும், அமைச்சர்களை நியமிக்கும் உரிமைகளையும் பெற்றுள்ளார்,

**இத்தாலியக் குடியரசில் அமைச்சரவை முறை**

முசோலினியின் பாஸிஸ வல்லாட்சிக்கு முன் இத்தாலியில் பாராளுமன்றச் செயல்துறை இருந்தது. அரசர் பெயரளவுச் செயல்துறையினராகவும் அமைச்சர்கள் உண்மைச் செயல்துறையினராகவும் இருந்தனர். இவர்கள் பாராளுமன்றத்திற்கும் பொறுப்புடையவர்களாக விளங்கினர். இரண்டாம் உலகப்பெரும் போருக்குப் பிறகு முசோலினியின் வல்லாட்சி நீக்கப்பட்டு 1948ஆம் ஆண்டில் இத்தாலியக் குடியாட்சி நிறுவப்பட்டது.

இத்தாலியின் குடியாட்சித் தலைவர் பாராளுமன்றத்தின் இணைக்கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இவரது பதவிக் காலம் ஏழு ஆண்டுகளாகும். குடியரசு தலைவர் தலைமை அமைச்சரை நியமனம் செய்கிறார். இதர அமைச்சர்களைத் தலைமை அமைச்சர் தேர்ந்தெடுக்கிறார். அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் பிரதிநிதிகள் சபையின் நம்பிக்கைக்கு உரியவர்களாக இருக்க வேண்டும். குடியாட்சித் தலைவர் பெயரளவுச் செயல்துறையினராகவும் அமைச்சரவை உண்மைச் செயல்துறையினராகவும் செயலாற்றுகின்றனர். இத்தாலியக் குடியரசில் பாராளுமன்றச் செயல்துறை நடைமுறையிலுள்ளது.

**இந்தியாவில் பாராளுமன்றச் செயல்துறை**

1947 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் பதினைந்தாம் நாள் இந்தியா சுதந்திரம் பெற்றது. 1950ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 26ஆம் நாள் இந்தியா ஒரு குடியாட்சி நாடாகியது. இந்திய அரசியலமைப்பின்படி பாராளுமன்றக் குடியாட்சி பின்பற்றப்படுகின்றது. குடியாட்சித் தலைவரும், தலைமை அமைச்சரும் இதர சில அமைச்சர்களும் அடங்கிய அமைச்சரவையும் இந்தியக் குடியரசின் செயல்துறையினராக இருக்கின்றனர்.

**இந்தியக் குடியரசு தலைவர்**

**தேவையான தகுதிகள் :** இந்தியக் குடியரசு தலைவராகப் போட்டியிட இந்திய அரசியலமைப்பில் தகுதிகள் கூறப்பட்டுள்ளன. இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும். முப்பத்தைந்து வயதை அடைந்தவராக இருக்க வேண்டும். மக்கள் சபையாகிய லோக் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கான தகுதிகள் பெற்றிருக்க வேண்டும். அரசாங்கத்தில் ஆதாயமுள்ள எந்தப் பதவியும் வகிக்கக் கூடாது. பித்தர்களும் குற்றவாளிகளும் தகுதியற்றவராவர்.

## தேர்தல் முறை

இந்தியக் குடியரசு தலைவர் பாராளுமன்ற உறுப்பினர்களாலும் மாநிலங்களின் சட்டமன்ற உறுப்பினர்களாலும் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். மாநிலங்களுக்கு ஒரு சீரான பிரதி நிதித்துவம் வழங்குவதற்காக ஒற்றை மாற்று வாக்கின்படி (Single Transferable Vote) விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையில் இந்தியக் குடியரசு தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

## பதவிக்காலம்

இந்தியக் குடியரசு தலைவரின் பதவிக்காலம் ஐந்து ஆண்டுகளாகும். பதவித்துறவு மேற்கொள்ளுவதன் மூலமும், குற்றம் சாட்டிப் பதவியிலிருந்து நீக்கப்படுவதன் மூலமும், இறப்பின் மூலமும் குடியரசு தலைவர் பதவி காலியாகலாம். குடியரசு தலைவர் பதவி காலியானால் அப்பொறுப்புகளைத் துணைத்தலைவர் கவனிப்பார். ஆனால், புதிய குடியரசு தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் வரையிலேயே துணைத்தலைவர் பதவி வகிப்பார். இது அமெரிக்க முறையிலிருந்து மாறுபட்டுள்ளது. இந்தியாவில் தலைவர் பதவி காலியான ஆறு மாதங்களுக்குள் புதிய தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். புதியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர் ஐந்தாண்டுகளுக்குப் பதவி வகிக்கலாம். குடியரசு தலைவர் தமது பதவிக் காலம் முடிந்ததும் திரும்பவும் தேர்ந்தெடுக்கப்படலாம். இருமுறை தேர்ந்தெடுக்கப்படுதலே இந்தியாவில் மரபாக உள்ளது.

## குடியரசு தலைவரின் அதிகாரங்கள்

இந்தியக் குடியரசுதலைவர் தலைமை அமைச்சரையும், அவரது அறிவுரைப்படி இதர அமைச்சர்களையும் நியமிக்கிறார். மாநில ஆளுநர்கள், தலைமை நீதிமன்ற, உயர்நீதிமன்ற நீதிபதிகள், அரசினர் பணியாளர் தேர்வாணைக்குழு உறுப்பினர்கள் போன்றவர்களைத் தலைவர் நியமிக்கிறார். அயல்நாட்டிற்குத் தூதுவர்களை அனுப்புவதும், அயல்நாட்டுத் தூதுவர்களை அடைவதும், அயல்நாடுகளுடன் உடன்படிக்கைகள் செய்வதும் குடியரசு தலைவரே யாவார். இந்திய நாட்டின் நிர்வாகம் அனைத்தும் குடியரசு தலைவரின் பெயராலேயே நடைபெறும். இவைகள் குடியரசு தலைவரின் நிர்வாக அதிகாரங்களாகும்.

பாராளுமன்றத்தைக் கூட்டவும், கலைக்கவும், ஒத்தி வைக்கவும், மன்றத்தில் உரை நிகழ்த்தவும், செய்திகளை அனுப்பவும் குடியரசு தலைவருக்கு அதிகாரமுண்டு. நாடாளுமன்றம் நிறைவேற்றிய சட்டமுன்படிவங்களுக்குத் தலைவர் ஒப்புதல் அளித்

தால்தான் அவைகள் சட்டத்தின் நிலையை எய்தும். குடியரசு தலைவர் தமது மறுப்பாணை அதிகாரம் மூலம் சட்டமுன்படிவத்திற்கு ஒப்புதல் அளிக்க மறுக்கலாம். ஆனால் மரபின் காரணமாக மறுப்பாணை அதிகாரம் பயன்படுத்தப்படுவதில்லை. குடியரசு தலைவர் அவசரச் சட்டங்களை (Ordinance) இயற்றலாம். இச் சட்டங்கள் பாராளுமன்றத்தின் சட்டங்களைப் போன்ற வல்லமையுடையனவாகும். இவைகள் குடியரசு தலைவரின் சட்டத்துறை அதிகாரங்களாகும்.

குடியரசு தலைவர் குற்றங்களை மன்னிக்கலாம். நீதிமன்றம் அளித்துள்ள தண்டனைகளைக் குறைக்கலாம்; நீக்கலாம்; அல்லது ஒத்தி வைக்கலாம். நீதிபதிகளை நியமிப்பதும் தலைவரே யாவார். இவைகள் தலைவரின் நீதித்துறை அதிகாரங்களாகும்.

குடியரசு தலைவர் முப்படைகளின் தளபதியாவார். போர்ப் பிரகடனங்கள் செய்வதும், உடன்படிக்கைகள் செய்வதும் குடியரசு தலைவரே யாகும். ஆனால் இவைகள் பாராளுமன்றத்தின் ஒப்புதலின் பேரில் செய்யப்பட வேண்டும். இவைகள் குடியரசு தலைவரின் படைத்துறை அதிகாரங்களாகும்.

வரவு செலவு அறிக்கையை ஒவ்வொரு நிதியாண்டிலும் பாராளுமன்றத்தின் முன் சமர்ப்பிக்க வேண்டும். பணச்சட்டமுன் படிவங்களைக் குடியரசு தலைவரின் பரிந்துரையின் பேரில் நாடாளுமன்றத்தில் கொண்டுவர வேண்டும். இவைகள் குடியரசு தலைவரின் நிதித்துறை அதிகாரங்களாகும்.

வெளிநாட்டுத் தாக்குதல்களின் போதும், உள்நாட்டுக் குழப்பத்தின் போதும், மாநிலங்களில் அரசியல் நிலைசீர்குலையும்போதும், நிதி நெருக்கடிகள் ஏற்படும்போதும் குடியரசு தலைவர் நெருக்கடி நிலை பிரகடனம் செய்வார். இப்பிரகடனங்கள் மூலம் அரசியலமைப்பின் அடிப்படையுரிமைகளை ஒத்திவைக்க இயலும். மாநில நிர்வாகத்தைக் குடியரசு தலைவரே ஏற்கலாம். மாநிலச் சட்டமன்றங்களின் அதிகாரத்தைப் பாராளுமன்றத்திற்கு மாற்றலாம். இவைகள் குடியரசு தலைவரின் நெருக்கடி கால அதிகாரங்களாகும்.

**குடியரசு தலைவரின் நிலை**

இந்தியாவில் குடியரசு தலைவர் இங்கிலாந்தின் அரசியாரைப் போன்று பெயரளவுத் தலைவராகவே விளங்குகிறார். இவர் நாட்டின் தலைவரேயொழிய அரசாங்கத்தின் தலைவரல்லர். இவர் நாட்டின்

பிரதிநிதியாகச் செயல்படுகிருரேயொழிய நாட்டை ஆளுபவராக அல்ல. இந்தியக் குடியரசுதலைவர் அமைச்சர்களின் அறிவுரையின் படியே நடந்து பெயரளவுச் செயல்துறையினராக விளங்குகிருர். அரசியலமைப்பில் மறுப்பாணை போன்ற அதிகாரங்கள் அளிக்கப் பட்டிருப்பினும் அவைகள் நடைமுறைப்படுத்தப்படுவதில்லை. பாராளுமன்றத்தில் எந்த ஒரு தனி அரசியல் கட்சியும் பெரும் பான்மை பெருதபோது தன்விருப்ப அதிகாரத்தைப் பயன்படுத்தித் தலைமை அமைச்சரை நியமிப்பார்.

### குடியரசின் துணைத்தலைவர்

பாராளுமன்றத்தின் இரு அவைகளாலும் ஒற்றைமாற்று வாக் கெடுப்பின்படி விகிதாச்சார பிரதிநிதித்துவ முறையில் ரகசிய வாக்கெடுப்பின் மூலம் இந்தியக் குடியரசின் துணைத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிருர். இவருக்கு வேண்டிய தகுதிகளும் இவரது பதவிக்காலமும் குடியரசு தலைவரின் தகுதிக்கும் பதவிக் காலத்திற்கும் ஒக்கும், துணைத்தலைவர் ராஜ்ய சபையின் தலை வராகப் பணியாற்றுகிருர். குடியரசு தலைவர் பதவி காலியாக உள்ள நேரத்தில் அவர் பணிகளைத் துணைத் தலைவர் ஆற்றுவார்.

### இந்தியாவின் அமைச்சரவை

**அமைச்சரவையின் இயல்புகள் :** இந்தியாவின் அமைச்சரவை இங்கிலாந்தின் அமைச்சரவையைப் போலவே செயலாற்றுகிறது. அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் ஏதாவது ஓர் அவையில் உறுப் பினர்களாக இருக்கவேண்டும். பாராளுமன்ற உறுப்பினராக இல் லாத அமைச்சர் தாம் பதவியேற்ற ஆறுமாத காலத்திற்குள் பாராளுமன்றத்தின் உறுப்பினராக வேண்டும் அல்லது தமது அமைச்சர் பதவியைத் துறக்க வேண்டும். பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியின் தலைவரைக் குடியரசு தலைவர் தலைமை அமைச்சராக நியமிப்பார். தலைமை அமைச்சரின் அறிவுரையின் படி இதர அமைச்சர்களைக் குடியரசு தலைவர் நியமனம் செய்வார். அமைச்சரவை பாராளுமன்றத்திற்குக் கூட்டுப் பொறுப்புடையதா கும். பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்கு உரியவர்களாக இருக்கும் வரையில்தான் அமைச்சர்கள் பதவியில் இருக்க முடியும். அரசின் கொள்கைகள் பற்றி அமைச்சர்கள் கருத்து ஒருமைப்பாடு உள்ள வர்களாக இருக்கவேண்டும்.

### அமைச்சரவையின் அலுவல்கள்

அமைச்சரவை அரசாங்கத்தின் கொள்கைகளை வகுத்துச் செயல்முறைப்படுத்துகிறது. சட்டம் இயற்றலில் பெரும் பங்கு கொள்கிறது. உண்மைச் செயல்துறையினராகப் பணியாற்றி நிர்

வாகத்தை நடத்துகிறது. உள்நாட்டு விவகாரங்களையும் அயல் நாட்டு விவகாரங்களையும் கவனிக்கிறது. வரவு செலவுத் திட்டங்களை வகுப்பதும் அதற்குப் பாராளுமன்றத்தின் ஒப்புதல் பெறுவதும் அமைச்சரவையின் பணியேயாகும். இது இங்கிலாந்தின் அமைச்சரவையைப் போல அலுவலாற்றுகிறது.

### தலைமை அமைச்சர்

இந்தியாவின் தலைமையமைச்சர் இங்கிலாந்தின் தலைமையமைச்சரைப் போல் செல்வாக்கு உடையவராக விளங்குகிறார். இவர் பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியின் தலைவராவார். குடியரசு தலைவரால் தலைமை அமைச்சராக நியமிக்கப்படுகிறார். இவரது அறிவுரையின்பேரிலேயே இதர அமைச்சர்கள் நியமிக்கப்படுகின்றனர்.

அரசாங்கத்தின் கொள்கைகளை வகுப்பதிலும், அவற்றை நடைமுறைப்படுத்துவதிலும் பெரும்பங்கு கொள்கிறார். அமைச்சரவைக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்குகிறார். அமைச்சரவையின் அச்சாணியாகவும், அமைச்சரவையையும் குடியரசு தலைவரையும் இணைக்கும் பிணைப்பாகவும் விளங்குகிறார்.

பாராளுமன்றத்தின் ஆதரவும் அதன் வழி வாக்காளர் மத்தியில் செல்வாக்கும், சக அமைச்சர்களின் ஒத்துழைப்பும் தலைமை அமைச்சருக்கு இன்றியமையாதனவாகும். இந்தியப் பாராளுமன்றச் செயல்துறை முறை இங்கிலாந்தின் செயல்துறை முறையை ஒத்திருக்கிறது.

## முக்கிய வினாக்கள்

1. பாராளுமன்றச் செயல்துறையின் தன்மைகள் யாவை?
2. பாராளுமன்றச் செயல்துறையின் முன் தேவைகள் யாவை?
3. பாராளுமன்றச் செயல்துறையின் நிறைகுறைகள் யாவை?
4. இங்கிலாந்துப் பாராளுமன்றச் செயல்துறையையும், இந்தியப் பாராளுமன்றச் செயல்துறையையும் ஒப்பிடுக.
5. குறிப்பு வரைக:
   (அ) குடியேற்ற உரிமை நாடுகளில் அமைச்சரவை.
   (ஆ) பிரான்சு குடியரசுகளின் அமைச்சரவை.
   (இ) இத்தாலியின் செயல்துறை.

6. இன்று பிரிட்டனில் நிலவும் மந்திரிசபை அமைப்பின் எடுப்பான அம்சங்களை சுருங்கச் சொல்லவும். (ம. ப. க. ஏப்ரல், 1969)
7. பாராளுமன்ற முறைச் செயலாட்சி அல்லது அமைச் சரவை அரசாங்கம்- இதன் இலக்கணம் கூறி நன்மை தீமைகளை ஆய்க. (செ. ப. க. செப்டம்பர், 1972)
8. பாராளுமன்ற முறைச் செயற்குழுவின் சிறப்புப் பண்புகள் யாவை? அது வெற்றிகரமாகச் செயல்பட தேவையான சூழ்நிலைகள் யாவை? செ. ப. க. ஏப்ரல், 1973)
9. பாராளுமன்ற முறையில் அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்புப் பற்றிக் குறிப்பு வரைக. (செ. ப. க. செப் டம்பர், 1973)
10. பெயரளவுச் செயலாட்சி முறையை நிஜசெயலாட்சிமுறை யிலிருந்து வேறுபடுத்திக்காட்டிப் பெயரளவுச் செயலாட்சி முறையின் தேவையையும் பணிகளையும் எடுத்துக் காட்டுக. (செ. ப. க. செப்டம்பர், 1975)
11. இந்தியக் குடியரசு தலைவர் பற்றிக் குறிப்பு வரைக. (செ. ப. க. செப்டம்பர், 1975.

## இ. தலைவர்முறைச் செயல்துறை

(Presidential Executive)

**தலைவர் முறைச் செயல்துறையின் தன்மைகள்:** அமெ ரிக்க முறை— அதிகாரப் பிரிவினை — நாட்டின் தலை வரே அரசாங்கத் தலைவர்— பதவிக்காலம்— சட்டத் துறையில் பங்கேற்காமை.

**தலைவர்முறைச் செயல்துறையின் நிறைகள்:**—வலிமை மிக்க செயல்துறை— திறமை மிக்க அமைச்சர்கள்— செயல்திறமை— பாராளுமன்றச் சுயேச்சை— செயல் துறையின் சுயேச்சை—பலதேசிய இனத்திற்கு ஏற்றது— அதிகாரப் பிரிவினை.

**தலைவர்முறைச் செயல்துறையின் குறைகள்:**— அதி காரப் பிரிவினையின் குறை— காலதாமதம்— சட்டத் துவக்கம்— வல்லாட்சிக்கு வாய்ப்பு— தலைவர் தேர்தலில் போட்டி— அயல்நாட்டுக் கொள்கை.

**தலைவர்முறைச் செயல்துறைக்கு எடுத்துக்காட்டுகள்:** அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செயல்துறை—துருக்கியக் குடியரசின் செயல்துறை.

**பாராளுமன்றச் செயல்துறைக்கும், தலைவர் முறைச் செயல்துறைக்கும் உள்ள வேறுபாடுகள்**

செயல்துறைக்கும் சட்டமன்றங்களுக்கும் இடையே நிலவும் தொடர்பின் அடிப்படையில் செயல்துறையைப் பாராளுமன்றச் செயல்துறை என்றும், தலைவர் முறைச் செயல்துறை என்றும் பிரிக்கலாம் என்று கண்டோம். பாராளுமன்ற முறையில் செயல்துறைக்கும் சட்டமன்றங்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பிருப்பதையும் கண்டோம். தலைவர் முறையில் செயல்துறைக்கும் சட்டமன்றங்களுக்கும் இடையே தொடர்பின்மையைக் காண்போம்.

## தலைவர் முறைச் செயல்துறையின் தன்மைகள்

### அமெரிக்க முறை

அமெரிக்காவின் செயல்துறை தலைவர் முறை அரசாங்கத்தைப் பெற்றுள்ளது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செயல்துறைத் தலைமையாளர் தலைவர் என்று அழைக்கப்படுகிறார். அதன்வழி இம்முறை தலைவர் முறைச் செயல்துறை என அழைக்கப்படலாகிறது.

### அதிகாரப் பிரிவினை

செயல்துறைக்கும் சட்டத்துறைக்கும் இடையே உள்ள அதிகாரங்கள் தலைவர் முறைச் செயல்துறையில் பிரிக்கப்பட்டுள்ளன. செயல்துறை பாராளுமன்றத்தால் தோற்றுவிக்கப்பட்டதோ அல்லது பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையதோ அல்ல. குடியரசு தலைவர் அரசியலமைப்பிலிருந்து தமது அதிகாரங்களைப் பெறுகிறார் சட்டமன்றங்களுக்குச் சரிநிகர் சமமானவரே ஒழியத் தாழ்ந்தவர் அல்லர். மேலும், குடியரசு தலைவரின் அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் அங்கத்தினர்களும் அல்லர். பாராளுமன்றத்திற்குப் பொறுப்பானவர்களும் அல்லர். குடியரசு தலைவர் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவதால் இவர் நேரடியாக வாக்காளர்களுக்கே பொறுப்பாகிறார். தலைவர் முறைச் செயல்துறையில் தலைவர் பாராளுமன்றத்தின் தலையீடின்றிச் சுயேச்சையாகச் செயல்படுவதால் பாராளுமன்றத்திற்கும் குடியரசு தலைவருக்கும் இடையே அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு செயல்படுகிறது. பேராசிரியர் பேஜ் ஹாட் (Bagehot) கூற்றுப்படி, 'சட்டசபைகளின் அதிகாரங்களும் செயல்துறையின் அதிகாரங்களும் சுதந்திரமாக இயங்குவது தலைவர் முறை அரசாங்

கத்தின் குறிப்பிடத்தக்க பண்பாகும். ஆனால், இவைகளின் இணைப்பும் தொகுப்பும் அமைச்சரவை அரசாங்கத்தின் கோட்பாடாகும்.[13]

**நாட்டின் தலைவரே அரசாங்கத் தலைவர்**

தலைவர் முறைச் செயல்துறையில் அரசின் தலைவரே அரசாங்கத்தின் தலைவராகவும் இருக்கிறார். சட்டப்படியாகவும் நடைமுறைப்படியும் தலைவரே செயல்துறை அதிகாரங்களை உடையவர். பெயரளவுச் செயல்துறை என்றும் உண்மைச் செயல்துறை என்றும் வேறுபாடுகள் தலைவர்முறைச் செயல்துறையில் கிடையா. வெர்னி (Verney) கருத்துப்படி, பாராளுமன்ற முறையில் நாட்டின் தலைவரிலிருந்து அரசாங்கத்தின் தலைவரை வேறுபடுத்துவதற்காக உபயோகிக்கப்படும் 'அரசாங்கம்' 'அமைச்சரவை' என்ற சொற்கள் தலைவர்முறை அமைப்பில் பொருத்தமற்றனவாகும். அமெரிக்கர்கள் குடியரசுதலைவரையும், அவரது உதவியாளர்களையும் குறிக்க 'நிருவாகம்' என்ற சொல்லையே பயன்படுத்துகின்றனர்.[14]

**பதவிக்காலம்**

குடியரசு தலைவரின் பதவிக்காலத்தைப் பாராளுமன்றம் குறைக்க இயலாது. மன்றத்தில் குடியரசு தலைவரின் அரசியல் கட்சிக்குப் பெரும்பான்மை இருந்தாலும் இல்லாவிட்டாலும் தலைவரின் பதவியும், பதவிக்காலமும் பாதிக்கப்படாது. அரசத் துரோகக் குற்றச்சாட்டினால் மட்டுமே குடியரசு தலைவரைப் பதவியிலிருந்து நீக்க இயலும்.

**சட்டத்துறையில் பங்கேற்காமை**

செயல்துறைத் தலைவரான குடியரசு தலைவரும் அமைச்சர்களும் நிருவாகச் செயலில் மட்டும் ஈடுபடுகிறார்கள். சட்டமியற்றும் செயல்களில் பங்கு கொள்வதில்லை. தலைவர் பாராளுமன்றத்திற்குச் செய்திகளாக அரசாங்கத்தின் தேவைகளைத் தெரிவிக்கிறார். செயல்துறையினருக்குச் சட்டமன்றங்களைக் கலைக்கும் அதிகாரமும் கிடையாது.

[13] Bagehot: 'The independence of the legislative and executive powers' is the specific quality of presidential government just as fusion and combination is the principle of cabinet government.'

[14] Verney: 'Indeed the use of the terms 'government' and 'Ministry' employed in parliamentarism to distinguish the repository of real political power from the need of state is inappropriate in the presidential context. American tend to use the expression 'Administration' to describe the President and his aides'.

## தலைவர்முறைச் செயல்துறையின் நிறைகள்

### வலிமை மிக்க செயல்துறை

தலைவர்முறைச் செயல்துறையில் குடியரசு தலைவர் நாட்டின் தலைவராகவும், அரசாங்கத்தின் தலைவராகவும் அமைந்துள்ளார். பாராளுமன்றத்தின் உண்மைச் செயல்துறையின் அதிகாரங்களும் பெயரளவுச் செயல்துறையின் அதிகாரங்களும் தலைவர்முறைச் செயல்துறையில் தலைவரிடமே குவிந்துள்ளன. குடியாட்சி முறையையும் பிரதிநிதித்துவ முறையையும் இழக்காமல் ஒரு வலிமை மிக்க செயல்துறையைத் தலைவர் முறைச் செயல்துறையில் நிறுவ முடிகிறது.

### திறமைமிக்க அமைச்சர்கள்

தலைவர் முறைச் செயல்துறையின் அமைச்சர்கள் கட்சி அடிப் படையில் அமைவதில்லை. பாராளுமன்றத்தின் உறுப்பினர்களும் அல்லர். பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியைச் சேர்ந் திருக்க வேண்டுமென்ற அவசியமும் இல்லை. எனவே குடியரசு தலைவர் தமது அமைச்சர்களை நியமிக்கும்போது துறையில் அனுபவம் மிக்கவர்களையும், தொழில்திறம்படைத்தவர்களையும் நியமிக்கிறார். கட்சி ஈடுபாடுகளைக் கவனிக்க வேண்டியதில்லை. எதிர்க்கட்சியினர்களும் அமைச்சர்களாக நியமனம் பெறுகின் றனர். தியோடர் ரூஸ்வெல்ட் (Theodore Roosevelt), கிளிவ் லேண்ட் (Cleve land), ஹூவர் (Hoover) போன்ற அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசு தலைவர்கள் எதிர்க்கட்சியினரைப் போர் அமைச்சராகவும், உள்நாட்டு அமைச்சராகவும், வழக்குரை ஞராகவும் நியமனம் செய்தனர். ஆனால் பாராளுமன்றச் செயல் துறையில் திறமை மிக்கவர் அமைச்சர்களாக நியமனம் பெறு வதில்லை. துறையின் தொழில் நுணுக்கம் இல்லாதவர்களாயினும் கட்சியில் செல்வாக்குடையவர்கள் அமைச்சர்களாக நியமனம் பெறுகின்றனர்.

### செயல் திறமை

குடியரசு தலைவர் உடனடியாக முடிவெடுப்பதும் துரிதமாகச் செயல்படுவதும் இயலுகிறது. இதனால் அரசாங்கம் செயல்திறமை மிக்கதாக அமைகிறது. நெருக்கடிக் காலங்களிலும் போர்க் காலங்களிலும் சுதந்திரமாகத் தம் யுக்திப்படி தலைவர் செயலாற்று கிறார். இவரே படைகளின் தளபதியாதலால் போர் நடவடிக்கை களையும் நேரில் மேற்கொள்ளலாம். முதல் உலகப்பெரும் போரின் போது உட்ரோ வில்சனும் (Woodrow wilson), இரண்டாம் உலகப்

பெரும் போரின்போது பிராங்கிலின் ரூஸ்வெல்ட்டும் (Franklin-Roosevelt) பொருத்தமான நடவடிக்கைகளை மேற்கொண்டனர், உள் நாட்டில் பொருளாதார நெருக்கடிக் காலத்தில் ரூஸ் வெல்ட்டின் புதுத்திட்டம் (New deal) போற்றத்தக்கதாக அமைந் திருந்தது. இவ்விதத் துரித நடவடிக்கைகளை இங்கிலாந்தின் பிரதமர் தனித்து மேற்கொள்ள இயலாது.

### பாராளுமன்றச் சுயேச்சை

தலைவர் முறைச் செயல்துறையில் பாராளுமன்றம் சுயேச்சை யாகச் சட்ட ஆக்கப் பணிகளைச் செய்கிறது. செயல்துறையின் தலையீடு இன்மை ஒரு காரணமாகும். பாராளுமன்றத்தில் சட்ட முன்படிவம் தோல்வியடைந்தாலும் அரசாங்கமும் குடியரசு தலைவரும் பாதிக்கப்படுவதில்லை. இது இரண்டாவது காரண மாகும். அரசாங்கத்தைப் பிழைக்க வைப்பதற்காகச் சட்டமுன் படிவங்கள் நிறைவேற்றப்படுவதில்லை. நிறைகளின் அடிப்படை யில் நிறைவேறுகின்றன.

### செயல்துறையின் சுயேச்சை

சட்டமியற்றும் பணிகளைச் சட்டமன்றங்களே கவனிக்கின்றன. குடியரசு தலைவரோ, அவரது செயலாளர்களான அமைச்சர்களோ மசோதாக்களைத் திட்டமிடவோ உருவாக்கவோ வேண்டியதில்லை. அவைகள் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப் படுவதையும் கண் காணிக்க வேண்டிய அவசியமில்லை. அவைகள் நிறைவேரு விடினும் இவர்களது பதவிக்கு ஆபத்து இல்லை. மேலும் தலைவர் முறை அரசாங்கத்தின் அமைச்சர்களுக்குத் தொகுதிகளும் இல்லை. அவைகளுக்குக் கவனம் செலுத்த வேண்டிய தேவையும் இல்லை. எனவே செயல்துறையினர் தங்கள் முழு நேரத்தையும் கவனத் தையும் நிருவாகத்தில் செலவிடுகின்றனர். அரசாங்கக் கொள் கைகளை வகுத்து நடைமுறைப்படுத்துவதில் இடையூறுகள் தோன்றுவதில்லை.

### பல தேசிய இனத்திற்கு ஏற்றது

தலைவர் முறைச் செயல்துறைமுறை பல இன மக்கள் வாழும் நாடுகளுக்கும் பெரிய நாடுகளுக்கும் மிகவும் ஏற்றதாகும். இனத் தாலும், மொழியாலும், மரபாலும், சமயத்தாலும் வேறுபட்ட பல்வேறு இன மக்கள் வாழும் நாட்டில் கட்சி ஒருமைப்பாடு இருக்காது. பலகட்சி முறைகள் நிலவலாம். கட்சியில் ஒருமைப் பாடின்மையும் பல கட்சி முறையும் பாராளுமன்ற முறை அரசாங் கத்திற்கு ஏற்றதல்ல. பல கட்சி முறையில் செயல்துறை வலிமை யற்றதாகவும், அடிக்கடி அரசாங்கம் மாறக்கூடியதாகவும்

இருக்கும். ஆனுல் தலைவர் முறைச் செயல்துறையில் அரசாங்கத்திற்கு ஆபத்து இல்லை. அரசாங்கத்தின் உறுதியான தன்மை காக்கப்படுகிறது.

**அதிகாரப் பிரிவினை**

தலைவர்முறை அரசாங்கத்தில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பின்பற்றப் படுகிறது. பாராளுமன்ற அரசாங்கத்தில் உள்ள அமைச்சரவை வல்லாட்சிக்கு இடமில்லை. செயல்துறையின் நடவடிக்கைகளில் சட்டமன்றங்கள் தலையிடுவதில்லை. சட்டமன்றங்களின் நடவடிக்கைகளில் செயல்துறை தலையிடுவதில்லை. இவைகள் தங்கள் அதிகார வரம்பிற்குள் சுயேச்சையாகச் செயல்படுகின்றன. மேலும் சமநிலைத் தடையீடுகளுக்கு (Check and Balances) வழிகோலப்பட்டு நிருவாகம் வலிமையாகவும் திறமையாகவும் நடைபெற வாய்ப்பு இருக்கிறது.

## தலைவர்முறைச் செயல்துறையின் குறைகள்

**அதிகாரப் பிரிவினையின் குறை**

சட்டத்துறைக்கும் செயல்துறைக்கும் இடையே அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு கையாளப்படுவதால் தலைவர் முறை அரசாங்கம் பாராளுமன்ற அரசாங்கத்தைப்போல் இணக்கமாகச் செயல்படாது. சட்டத்துறைக்கும் செயல்துறைக்கும் இடையே முரண்பாடுகளும் பூசல்களும் அடிக்கடிதோன்றும். இது நாட்டின் நலத்திற்கு நல்லதல்ல. கெட்டல் (Gettell) கூற்றுப்படி, செயல்துறையும் சட்டமன்றங்களும் மாறுபட்ட அரசியல் கட்சியைச் சார்ந்தனவாக இருந்தால் இடையரு முரண்பாடுகள் தோன்றிக் கொண்டேயிருக்கும். இவைகளிடையே பூசல்கள் நிலவும் போது ஒன்றன் பொறுப்பை மற்றென்றின் மீது சுமத்திக் கொண்டேயிருக்கும்.[15] டாக்டர் ஃபைனர் (Dr. Finer) கருத்துப்படி கேட்கும் துறையாகிய செயல்துறையும், வழங்கும் துறையாகிய சட்டத்துறையும் பிரிக்கப்படுமாஞல் இவைகளிடையே தொடர்ந்த போட்டி நிலவும்.[16] குடியரசு தலைவர் உட்ரோ வில்சன் ஜனநாயகக் கட்சியைச் (Democratic Party) சார்ந்தவராகவும்,

[15] R. G. Gettell: 'When legislature and executive are of different parties, there is Constant danger of deadlock. When the executiveean the legislature are at odds, each can shift the responsiblity to the other.'

[16] Finer: 'The Fathers the American Constitution separated the executive sources of knowledge from the legislative Centre of their application severed their Connection between those who ask for supplied and those who have the power to grant them and introduced the continuous possiblity of contest.'

அமெரிக்க செனட் சபை குடியரசு கட்சியைச் (Republican Party) சார்ந்தவராகவும் இருந்ததால் அமெரிக்க ஐக்கிய நாடுகளை வில்சன் சர்வதேசச் சங்கத்தில் (League of Nations) உறுப்பினராக்கியதை செனட் சபை நிராகரித்தது.

**காலதாமதம்**

தலைவர் முறைச் செயல்துறையில் துரிதமான நடவடிக்கை மேற்கொள்ள இயலுவதில்லை. துரித நடவடிக்கை அவசியப்படும் அவசர காலங்களிலும் நெருக்கடி காலங்களிலும் காலதாமதம் பெருந் தீங்குகளைத் தோற்றுவிக்கும். செயல்துறையும் பாராளு மன்றமும் வெவ்வேறு அரசியல் கட்சிகளைச் சார்ந்திருந்தால் ஒன்று ஒரு கோட்பாட்டையும், மற்றது பிறிதோர் கோட்பாட்டை யும் பின்பற்றிக் காலதாமதத்தை அதிகமாக்கும்.

**சட்டத் துவக்கம்**

தலைவர் முறையில் செயல்துறை சட்டமியற்றலைத் துவங்கு வதில்லை. பாராளுமன்ற முறையில் தலைமை அமைச்சரும் இதர அமைச்சர்களும் மசோதாக்களை உருவாக்குகின்றனர். அரசாங்க நடைமுறைக்குத் தேவைப்படும் மசோதாக்களைத் தயாரித்துப் பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கின்றனர். இதனால் சட்டமன்றத் திற்கும் செயல்துறைக்கும் இடையே நல்ல தொடர்பு ஏற்படுகிறது. இத்தொடர்பும் இணைப்பும் தலைவர்முறைச் செயல்துறையில் ஏற்படு வதில்லை. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் சபை யான சட்டமன்றங்களுக்கு எவ்விதத்திலும் தலைவர் பொறுப்பா வதில்லை. மாக்ரிடிஸ் (Macridis) கருத்துப்படி, தலைவர் முறைச் செயல்துறையில் திட்டங்களை நடைமுறைப்படுத்துவதில் ஒருமைப் பாடும் பொறுப்பும் நிலவுகிறது. ஆனால், சட்டதிட்டங்களைத் தயா ரிப்பதிலும் இயற்றுவதிலும் பாராளுமன்றமுறைச் செயல்துறையில் நிலவுவது போன்ற ஒருமைப்பாடும் பொறுப்பும் தலைவர் முறைச் செயல்துறையில் நிலவுவதில்லை.[17]

**வல்லாட்சிக்கு வாய்ப்பு**

நிரந்தரச் செயல்துறை எனப்படும் தலைவர் முறைச் செயல் துறையில் வல்லாட்சி தோன்றும் வாய்ப்பு உள்ளது. குடியரசுத் தலைவர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டால் குறிப்பிட்ட அவரது பதவிக் காலத்தில் அவரைக் கட்டுப்படுத்தவோ பதவியிலிருந்து

[17] Macridis: 'The Presidential system, although it unifies responsibility for the execution of a programme, does not unity responsibility for the preparation and enactment of a legislative programme as does the parliamentary system'.

நீக்கவோ இயலுவதில்லை. அரசியலமைப்பின் எல்லைக்குள் அவர் வல்லாட்சியாளராக விளங்கலாம். பாராளுமன்ற முறையில் உள்ளதுபோல் சட்டமன்றங்கள் செயல்துறையினரது நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த முடியாது. பாராளுமன்றம் குடியரசு தலைவரை நன்னெறிப்படுத்த அரசியலமைப்பில் வகை வகுப்பதில்லை. ஸ்ட்ராங் (Strong) அவர்கள் கூற்றுப்படி, சில லத்தீன் அமெரிக்க நாடுகளில் இருப்பதுபோல் நிரந்தரச் செயல்துறை வல்லாட்சியாகி அரசியலமைப்பைப் பயனற்றதாக்கலாம்.[18] பாராளுமன்றச்செயல் துறையில் செயல்துறையின் மீது விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகள் தலைவர் முறைச் செயல்துறையில் இல்லை. பேஜ்ஹாட் (Bagehot) கருத்துப்படி, தலைவர் முறைச் செயல்துறையில் 'அரசாங்கம் உனக்கு ஏற்புடையதாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் அது நன்கு செயல்பட்டாலும் படாவிட்டாலும், அதை நீ விரும்பினாலும் விரும்பா விட்டாலும் அதை நீ வைத்துக்கொள்ள வேண்டும்.' எனவே, குடியரசு தலைவரின் பதவிக்காலத்தில் தலைவரையோ அவரது அரசாங்கத்தையோ நீக்க இயலாது. வல்லாட்சியாக அமைந்தாலும் ஏற்றுக்கொள்ளவேண்டும். பெரும்பான்மையரது விருப்பத்திற்கு முரணாகத் தலைவர் பொறுப்பற்றவராக நடந்தாலும் கண்டிக்க வகையில்லை.[19]

**தலைவர் தேர்தலில் போட்டி**

தலைவர் முறை செயல்துறையில் குடியரசு தலைவருக்கு ஏராளமான அதிகாரங்கள் இருக்கின்றன. அதிகாரக் குவிப்பைக் காணலாம். எனவே, தலைவர் பதவியை அடையக் கடும்போட்டிகள் தோன்றுகின்றன. தலைவரின் தேர்தலில் மக்களிடையே பெரும் பிளவுகள் தோன்றுகின்றன. சில தென் அமெரிக்க நாடுகளில் இதன் விளைவாகக் கலகங்களும் புரட்சிகளும் ஏற்பட்டன. தலைவர்முறை செயல்துறையிலும் அரசியலமைப்பிலும் நெகிழாமையைக் காணலாம்.

**அயல்நாட்டுக் கொள்கை**

தலைவர்முறைச்செயல்துறையில் வெற்றிகரமான அயல்நாட்டுக் கொள்கையைப் பின்பற்ற இயலுவதில்லை. குடியரசு தலைவரின் அயல்நாட்டுக் கொள்கைகளையும், உடன்படிக்கைகளையும் பாராளு

[18] C. F. Strong: 'A fixed executive can become a mere tyranny where the constitution is a dead letter, as in some of the Latin American Countries'

[19] Bagehot. 'You have bespoken your government in advance and whether it suits you or not, whether it works well or ill, whether it is what you want or not by law you must keep it.'

மன்றத்தின் மாநில அவையான செனட் சபை ஏற்க வேண்டும். தலைவரின் அயல்நாட்டு நடவடிக்கைகளில் காங்கிரஸ் ஆர்வம் காட்டுவதில்லை. அயல்நாட்டுக் கொள்கை காங்கிரசால் ஏற்கப் படுமா அல்லது நிராகரிக்கப்படுமா என்பது திட்டவட்டமாகப் புலப்படுவதில்லை.

## தலைவர் முறைச் செயல்துறைக்கு எடுத்துக்காட்டுகள்

### அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செயல்துறை

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செயல்துறை முறை பாராளு மன்றச் சார்பற்ற செயல்துறை முறையென்றும், தலைவர் முறைச் செயல்துறை முறையென்றும், உறுதியுள்ள செயல்துறை முறை யென்றும் அழைக்கப்படுகிறது. இதன் முக்கியமான கூறுபாடு செயல்துறையும் சட்டத்துறையும் தனித்து இயங்குவதாகும். செயல்துறை சட்டத்துறையைச் சார்ந்திருப்பதில்லை. அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு நடைமுறைப்படுத்தப்படுகிறது.

குடியரசு தலைவரின் பதவிக்காலம் நான்கு ஆண்டுகளாகும். குடியரசின் துணைத் தலைவரின் பதவிக்காலமும் நான்காண்டு களாகும். ஆரம்ப முறைப்படி குடியரசு தலைவருக்கு அடுத்த படியாக அதிக வாக்குப் பெற்றவர் துணைத் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். 1804 ஆம் ஆண்டின் 12 ஆம் அரசியலமைப்புத் திருத்தப்படி தலைவர் தேர்விற்கும் துணைத்தலைவர் தேர்விற்கும் தனித்தனி வாக்கெடுப்புகள் நடைபெறுகின்றன.

குடியரசு தலைவர் படைகளின் தளபதியாக விளங்குகிறார். அரசாங்கத்தின் உயர் அலுவலர்களையும் இவரே நியமனம் செய் கிறார். அயல் நாடுகளுடன் ஒப்பந்தங்கள் செய்யலாம். ஆனால் செனட் சபையின் மூன்றில் இரண்டு பகுதியினரின் இசைவு பெற வேண்டும்.

உலகிலுள்ள குடியரசு தலைவர்களில் மிகுந்த அதிகாரம் படைத்தவராக அமெரிக்கச் செயல்துறைத் தலைவர் விளங்குகிறார். தமது நான்காண்டுப் பதவிக்காலத்தில் அரசியலமைப்பிற்குட்பட்டு சுதந்திரமாகச் செயலாற்றுவதை யாரும் தடை செய்ய இயலாது.

### துருக்கியக் குடியரசின் செயல்துறை

முதல் உலகப் பெரும் போரில் துருக்கியப் பேரரசு சிதறுண் டது. 1923ஆம் ஆண்டில் புதிய அரசியலமைப்பு ஏற்படுத்தப்பட்டுத் துருக்கி குடியரசு நாடானது. முஸ்தாபா கெமால் பாட்சா இதன் முதல் குடியரசு தலைவரானார்.

குடியரசு தலைவர் பெருந் தேசிய அவை (Grand National Assembly) எனப்படும் துருக்கியின் ஓரவைப் பாராளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இவர் மறுமுறையும் தேர்ந்தெடுக்கப் படலாம். சட்டமன்றத்திற்குப் பொறுப்பான அமைச்சரவை யுண்டு. தலைமை அமைச்சர் நிருவாகத்தில் குடியரசு தலைவருக்கு உதவியாக இருப்பார். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைவருக்கு உள்ள மறுப்பாணை அதிகாரம் துருக்கியக் குடியரசு தலைவருக்கும் உண்டு. தலைவர் கெமால் குடியரசு தலைவராகவும், அமைச்சரவை யின் தலைவராகவும், தேசிய அவையின் தலைவராகவும் நாட்டின் ஒரே அரசியல் கட்சியான மக்கள் குடியரசு கட்சியின் தலைவ ராகவும் விளங்கினார் என C. F. ஸ்ட்ராங் கூறுகிறார்.[20] துருக்கி யில் குடியாட்சியின் குணங்களைவிட வல்லாட்சியின் பண்புகளே அதிகம் காணப்பட்டன.

கெமாலுக்குப் பிறகு இஸ்மெட் இனோனு குடியரசு தலைவர் பதவியை அடைந்தார். கெமாலின் காலத்திய வல்லாட்சி தொடர்ந்தது. ஆனால், சட்டபூர்வமான எதிர்க்கட்சி அனுமதிக் கப்பட்டது. எதிர்க்கட்சியான ஜனநாயகக் கட்சியின் செல்வாக்குப் பெருகி 1950ஆம் ஆண்டின் தேர்தலில் ஜனநாயகக் கட்சி வெற்றி பெற்று ஆளும் கட்சியானது. இனோனு குடியரசு கட்சியிலிருந்து பதவித் துறவு கொண்டு ஜனநாயகக் கட்சியின் தலைவரானார். இக் கட்சி 1954-விலும் 1957-விலும் வெற்றி பெற்று ஆட்சியை அமைத் தது. ஆனால், 1960ஆம் ஆண்டில் படைவீரர்கள் ஜனநாயகக் கட்சியின் ஆட்சியைக் கவிழ்த்துத் தேசிய ஐக்கியக் குழு என்ற படையாட்சியை ஏற்படுத்திப் புதியதோர் அரசியலமைப்பை வகுத்தார்கள்.

1960 ஆம் ஆண்டின் அரசியலமைப்பின்படி குடியரசு தலைவர் ஏழாண்டுகளுக்கொருமுறை மூன்றில் இரண்டு பங்குப் பெரும்பான் மையில் பெருந்தேசிய அவையில் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இவர் நாற்பது வயதிற்கு மேற்பட்டவராக இருக்க வேண்டும். மறுமுறை தலைவர் பதவிக்குப் போட்டியிட அனுமதிக்கப்படுவ தில்லை. தேசிய அவை, செனட் அவை யெனப்படும் இரு அவை களுள்ள பாராளுமன்றம் பெருந்தேசிய அவை யெனப்படும். தலைமை அமைச்சரும், இதர அமைச்சர்களும் பெருந்தேசிய

[20] C. F. Strong: 'In fact, as the Constitution worked under Ataturk he held what was virtually a fourfold presidency - of the Republic, of the Cabinet, of the Assembly, and of the only party in the legislature. It was a position without precedent in the evolution of the Modern Constitutional State.'

அவைக்குப் பொறுப்புடையவர்களாவர். 1961-ல் தளபதி கர்சல் (General Cursel) தலைவராகவும் முன்னையத் தலைவராயிருந்த இஸ்மெட் இனோனு தலைமை அமைச்சராகவும் பதவி பெற்றனர். கூட்டு அமைச்சரவை நிறுவப்பட்டது. ஸ்ட்ராங் அவர்களின் கூற்றுப்படி, துருக்கி ஒரு பாராளுமன்றச் சார்புள்ள செயல் துறையை நிறுவியுள்ளது.

## பாராளுமன்றச் செயல்துறைக்கும் தலைவர் முறைச் செயல்துறைக்கும் உள்ள வேறுபாடுகள்

பாராளுமன்றச் செயல்துறைக்கும் தலைவர்முறைச் செயல் துறைக்கும் இடையே ஒற்றுமைகளும் வேற்றுமைகளும் நிலவுகின்றன. இவ்விரு செயல்துறை முறைகளும் குடியாட்சியின் அடிப்படையில் அமைந்தனவாகும். இவைகள் மக்களின் இறைமையை மதிக்கின்றன ; பிரதிநிதித்துவ முறைப்படி அமைந்துள்ளன. இவைகளிடையேயுள்ள இவ்வொற்றுமைகளை விட வேற்றுமைகளே அதிகம். அவைகளைக் காண்போம்.

பாராளுமன்ற முறைச் செயல்துறையில் உண்மைச் செயல் துறையும் பெயரளவுச் செயல்துறையும் உண்டு. அரசாங்கத்தின் தலைவர் வேறு, அரசின் தலைவர் வேறு. அமைச்சரவை உண்மைச் செயல்துறையாகவும் அரசாங்கத்தின் தலைவராகவும் இருக்கும். அரசர் அல்லது குடியரசு தலைவர் பெயரளவுச் செயல் துறையாகவும் அரசின் தலைவராகவும் இருப்பார். ஆனால் தலைவர் முறைச் செயல்துறையில் உண்மைச் செயல்துறை, பெயரளவுச் செயல் துறை என்ற வேறுபாடுகள் இல்லை. அரசின் தலைவரும் அரசாங்கத்தின் தலைவரும் குடியரசு தலைவரே யாவார்.

பாராளுமன்ற முறையில் உண்மைச் செயல்துறையான அமைச்சரவையின் பதவிக்காலம் பாராளுமன்றத்தால் தீர்மானிக்கப்படுகிறது. பாராளுமன்றத்தின் நம்பிக்கையை இழக்கும் போது அமைச்சரவை பதவியை இழக்க வேண்டும். ஆனால் தலைவர் முறைச் செயல்துறையில் குடியரசு தலைவரின் பதவிக் காலம் பாராளுமன்றத்தால் தீர்மானிக்கப்படுவதில்லை. பாராளு மன்றத்தின் நம்பிக்கையை இழந்தாலும், பாராளுமன்றம் பெரும்பான்மையை இழந்தாலும் தலைவர் பதவி பாதிக்கப்படுவதில்லை.

பாராளுமன்ற முறையில் செயல்துறை சட்டமன்றங்களைக் கலைக்க முடியும். ஆனால் தலைவர்முறைச் செயல்துறையில் குடியரசு தலைவர் பாராளுமன்றத்தைக் கலைக்க முடியாது.

பாராளுமன்ற முறையில் செயல்துறைக்கும் சட்டமன்றங்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு உண்டு. செயல்துறை நிர்வாகம் செய்வதோடு சட்டத்தையும் ஆக்குகிறது. ஆனல் தலைவர் முறைச் செயல்துறையில் செயல்துறைக்கும் சட்டமன்றங்களுக்கும் தொடர்பில்லை.

பாராளுமன்றச்செயல்துறையின் தலைவரான தலைமை அமைச்சரும் இதர அமைச்சர்களும் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையவர்கள் ஆவார்கள். ஆனல் தலைவர் முறையில் குடியரசு தலைவரோ அல்லது அவரது அமைச்சர்களோ பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையவர்கள் அல்லர்.

பாராளுமன்ற முறையில் அமைச்சர்கள் அனைவரும் தலைமை அமைச்சரின் தோழர்கள் ஆவர். அமைச்சரவை பாராளுமன்றத்திற்குக் கூட்டுப் பொறுப்புடையது. ஆனல் தலைவர் முறையில் அமைச்சர்கள் குடியரசு தலைவருக்குக் கீழ்ப்பட்டவர்கள். இவர்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையவரல்லர்.

பாராளுமன்ற முறையில் சட்டத்துறையும் செயல்துறையும் இணைந்து அதிகாரக் குவிப்பை ஏற்படுத்தியுள்ளன. ஆனல், தலைவர் முறையில் செயல்துறையும் சட்டத்துறையும் பிரிந்து செயல்பட்டு அதிகாரப் பிரிவினையைக் கொண்டுள்ளன.

பாராளுமன்ற முறையில் கோட்பாட்டிற்கும் நடைமுறைக்கும் வேறுபாடுள்ளன. கோட்பாட்டின்படி அரசின் தலைவரான மன்னர் அல்லது குடியரசு தலைவர் அல்லது தலைமை ஆளுநர் ஆகிய இவர்களிடமே அனைத்து அதிகாரங்களும் உண்டு. ஆனல், நடைமுறையின்படி இவர்களிடம் எந்த அதிகாரமும் இல்லை. அனைத்து அதிகாரங்களையும் தலைமை அமைச்சரும் அவரது அமைச்சரவையுமே கொண்டுள்ளனர். ஆனல், தலைவர் முறையில் கோட்பாட்டிற்கும் நடைமுறைக்கும் வேறுபாடில்லை. கோட்பாட்டின்படியும் நடைமுறையின்படியும் குடியரசு தலைவரிடமே அனைத்து நிர்வாக அதிகாரங்களும் உள்ளன.

பாராளுமன்றச் செயல்துறை மிகவும் நெகிழ்வுடையதாகும். இரு கட்சி முறை நிலவும் நாட்டிற்கு ஏற்றதாகும். ஓர் இன மக்களுக்குப் பொருத்தமுடையது. ஆனல், தலைவர்முறைச் செயல்துறை நெகிழ்வற்றதாகும். பல கட்சிகள் நிலவும் நாட்டிற்கும், இனத்தாலும், மதத்தாலும், மொழியாலும் வேறுபட்ட மக்கள் வாழும் நாட்டிற்கும் ஏற்றதாகும்,

தலைவர் முறைச் செயல்துறையின் தன்மைகள், இதன் நிறை குறைகள், தலைவர் முறைச் செயல்துறைக்கு எடுத்துக்காட்டுகள், பாராளுமன்ற முறைச் செயல்துறைக்கும், தலைவர் முறைச் செயல் துறைக்கும் உள்ள வேறுபாடுகள் ஆகியன கண்டோம். தலைவர் முறைச் செயல்துறையைக் காணும்போது சுவிட்ஸர்லாந்தின் செயல்துறை பற்றியும், சோவியத் ரஷ்யாவின் செயல்துறை பற்றியும் காணல் நன்று. இவைகள்பற்றிப் பன்மைச் செயல்துறை யெனப்படும் அடுத்த பகுதியில் காணலாம்.

## முக்கிய வினாக்கள்

1. தலைவர் முறைச் செயல்துறையின் தன்மைகள் யாவை?
2. தலைவர் முறைச் செயல்துறையின் நிறை குறைகள் யாவை?
3. தலைவர் முறைச் செயல்துறைக்கு எடுத்துக்காட்டுகள் தருக.
4. பாராளுமன்ற முறைச் செயல்துறைக்கும் தலைவர்முறைச் செயல்துறைக்கும் வேறுபாடுகள் யாவை?
5. பாராளுமன்ற முறையல்லாத செயலாட்சி அமைப்பின் நன்மை தீமைகள் யாவை? (செ. ப. க. ஏப்ரல், (1972)
6. ஜனாதிபத்திய செயலாட்சி முறையின் முக்கியப் பண்புகள் யாவை? அதன் குணங்குறைகள் யாவை? (செ. ப. க. செப்டம்பர், 1973)
7. பெயரளவுச் செயலாட்சி முறையை நிஜசெயலாட்சி முறையிலிருந்து வேறுபடுத்திக்காட்டிப் பெயரளவுச் செயலாட்சி முறையின் தேவையையும் பணிகளையும் எடுத்துக்காட்டுக. (செ. ப. க. செப்டம்பர், 1975)

## ச. பன்மைச் செயல்துறை
## (Plural Executive)

பன்மைச் செயல்துறை— ஸ்விட்ஸர்லாந்தின் செயல் துறை— சோவியத் ரஷ்யாவின் செயல்துறை—பன்மைச் செயல்துறையின் நிறைகள்— பன்மைச்செயல்துறையின் குறைகள்,

செயல்துறையின் தலைவர் ஒருவராக இருப்பதற்குப் பதிலாகப் பலராக இருக்கும் முறைக்குப் பன்மைச் செயல்துறை முறை என்று பெயர். பழங்கால ஏதன்சு நாட்டில் செயல்துறை அதிகாரம் தனி ஒருவரிடம் இல்லாமல் பல அலுவலர்களிடம் இருந்தது. இவ்வலுவலர்கள் ஒருவருக்கொருவர் சுயேச்சையாகச் செயல்பட்டனர். ஸ்பார்ட்டா நகர அரசில் இரு மன்னர்கள் செயல்துறைத் தலைவர்களாக இருந்தனர். ரோமானியக் குடியரசில் இரண்டு கான்சல்கள் இருந்தனர். இவர்களிடம் செயல்துறை அதிகாரம் இருந்தது. ஒருவர் நடவடிக்கையை மற்றவர் மறுப்பாணை அதிகாரம் வழி தடுக்க இயலும். எனவே, அரசியலில் பன்மைச் செயல்துறை முறை பண்டைக்காலம் தொட்டே நிலவிய முறையாகும்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசு தலைவர் அதன் செயல்துறைத் தலைவராவார். இவரே அரசின் தலைவராகவும் அரசாங்கத்தின் தலைவராகவுமிருந்து ஒருமைச் செயல்துறைக்கு எடுத்துக் காட்டாகிறார். ஆனல், பாராளுமன்ற அரசாங்கத்தில் அமைச்சரவையே உண்மைச் செயல்துறையாக இருக்கிறது. தலைமை அமைச்சரும் இதர அமைச்சர்களும் நிருவாகம் செய்கின்றனர். இந்த அமைச்சரவை முறையைப் பன்மைச் செயல்துறை முறை எனக் கருதுகின்றனர். இது தவறுன கருத்தாகும். தலைமை அமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சரவை ஒருமைத் தன்மையுடையது; ஒன்று போலச் செயல்படுகிறது. பதவியிலிருக்கும் போதும் பதவியைத் துறக்கும் போதும் அமைச்சரவை ஒருமைத் தன்மையுடன் இயங்குகிறது. மேலும், அமைச்சரவை பாராளுமன்றத்திற்குக் கூட்டுப் பொறுப்புடையதாகும். கொள்கைகளை வகுப்பதிலும் நிருவாகம் செய்வதிலும் அமைச்சரவை தனி ஒன்ருகவே செயல்படுகிறது. எனவே, அமைச்சரவைச் செயல்துறை முறையைப் பன்மைச் செயல்துறை முறை எனக் கருதலாகாது.

**சுவிட்ஸர்லாந்தின் செயல்துறை**

சுவிட்ஸர்லாந்தின் செயல்துறை பாராளுமன்ற முறைப் பண்பை உடையதாகவும் தலைவர் முறைப் பண்பை உடையதாகவும் அமைந்துள்ளது. செயல்குழு பாராளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படுவதால் பாராளுமன்றச் செயல்துறைப் பண்பும் பாராளுமன்றம் நீக்க இயலாததால் தலைவர் முறைச் செயல்துறையின் பண்பும் இணைந்ததாகிறது.

கூட்டாட்சி அவை (Federal Council) எனப்படும் எழுவர் கொண்ட ஒரு நிறுவனமே சுவிட்ஸர்லாந்தின் செயல்துறையாகும்.

இவர்கள் நாட்டு அவை, மாநிலங்களின் அவை ஆகிய சுவிட்ஸர் லாந்தின் இரு சட்டமன்றங்களும் இணைந்த கூட்டாட்சிப் பேரவை யால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவர்கள் மூன்றாண்டுக்காலம் பதவியிலிருப்பர். இவர்களில் ஒருவர் தலைவராக இருப்பார். அவர் கூட்டாட்சித் தலைவர் என அழைக்கப்படுகிறார். இருப்பினும் மற்ற அறுவரும் தலைவருக்குத் தாழ்ந்தவர்கள் அல்லர். எழுவரில் ஒவ்வொருவரும் மற்றவருக்கு இணையான அதிகாரம் செலுத்து கின்றனர். தலைவர் பதவி சுழற்சி முறையில் ஆண்டிற்கு ஒரு முறை ஒவ்வொருவருக்கும் அளிக்கப்படுகிறது. ஒருவர் ஓராண் டிற்கு மேல் தலைவர் பதவியை வகிக்கக் கூடாது.

பன்மைச் செயல்துறையினராகிய எழுவரும் சட்டமன்றங் களின் உறுப்பினராக இருக்க வேண்டியதில்லை. சட்டமன்ற உறுப்பினராக இருந்தாலும் செயல்துறையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் சட்டமன்ற உறுப்பினர் பதவியைத் துறக்க வேண்டும். இவர் எத்தனை முறை வேண்டுமென்றாலும் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவர்கள் சட்டமன்ற நடவடிக்கைகளில் கலந்துகொள்கின்றனர். பாராளுமன்றத் திற்குச் சட்டம் இயற்றுதல் சம்பந்தமாக அறிவுரை நல்குகின்றனர். சட்டமன்றங்களால் இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் சட்ட மன்றங்கள் இவர்களை நீக்க இயலாது. உறுதியுள்ள செயல்துறை யினராக விளங்குகின்றனர்.

பேராசிரியர் டைசியின் (Dicey) கூற்றுப்படி, சுவிட்ஸர் லாந்தின் கூட்டாட்சி அவை கூட்டுப்பங்கு நிறுவனத்தின் (Joint-Stock Company) இயக்குநர் குழுவைப் போன்றது. பொதுநலத் திற்குத் திறமையுடன் உழைக்கும்வரை இவர்கள் மாற்றப்பட வேண்டியதில்லை.[21] மேலும் இது பாராளுமன்ற முறைப் பண்பை யும், தலைவர்முறைப் பண்பையும் உடையது. ஆனால் இதை தனித்துப் பாராளுமன்றச் செயல்துறை என்றோ தலைவர்முறைச் செயல்துறை என்றோ கூற இயலாது. இவ்விரு முறைகளிலிருந்தும் மாறுபட்ட தன்மைகளையுடையதாகும். ஸ்ட்ராங் கூற்றுப்படி, சுவிட்ஸர்லாந்துச் செயல்துறையில் பெரிதும் குறிப்பிடத்தக்கது அதன் உறுதியுள்ள தன்மையாகும். உறுதியான செயல்துறையை விட (Fixed Executive) நிரந்தரமானதாகவும் நிலையானதாகவும்

[21] C. F. Strong: 'Dicey, indeed, likened the Swiss Federal Council to a board of directors of a Joint-Stock Company, adding that there is no more reason for altering its composition if it is doing its work efficiently in the general interest than there is to alter the membership of such a board under similar circumstances'.

இருக்கிறது.[22] கோஷ் (Ghosh)அவர்களின் கருத்துப்படி, சுவிட்சர் லாந்தின் குழுச்செயல்துறை தற்காலக் குடியரசு நிறுவனங்களில் மிகவும் குறிப்பிடத் தக்கதாக அமைந்துள்ளது.[23]

### சோவியத் ரஷ்யாவின் செயல்துறை

சோவியத் ரஷ்யாவின் பாராளுமன்றத்தால் நான்கு ஆண்டு களுக்குத் தேர்ந்தெடுக்கப்படும் முப்பத்துமூன்று உறுப்பினர் களுடைய பிரிசிடியம் செயல்துறையாகப் பணியாற்றுகிறது. பிரிசிடியத்திற்குத் தலைவர் ஒருவருண்டு. இவருக்குத் தனிச்சலுகை களோ அதிகாரங்களோ கிடையாது. பதினாறு பேர் துணைத் தலைவர்களாகவும் ஒருவர் செயலாளராகவும் மீதமுள்ள பதினைந்து பேர் உறுப்பினர்களாகவும் செயலாற்றுகின்றனர்.

பிரிசிடியத்திற்குப் பரந்த அதிகாரங்கள் உண்டு. இருப்பினும் சோவியத் ரஷ்யாவின் ஒரே கட்சியான பொதுவுடைமைக் கட்சி வகுத்தளிக்கும் கொள்கைகளையே இது செயல்முறைப்படுத்தும். செயல்துறை அதிகாரத்தையும், சட்டத்துறை அதிகாரத்தையும் பிரிசிடியம் செலுத்துகிறது. சுப்ரீம்சோவியத் எனப்படும் சோவியத் ரஷ்யாவின் பாராளுமன்றத்திற்கு இது பொறுப்புடையதாகும். பாராளுமன்றத்தைக் கலைக்கும் அதிகாரமும் இது பெற்றுள்ளது. பாராளுமன்றம் கலைக்கப்பட்ட காலத்திலும் பிரிசிடியம் பதவியி லிருந்து செயலாற்றும். சோவியத் ரஷ்யாவின் பன்மைச் செயல் துறையான பிரிசிடியம் ஒரு நூதன அமைப்பாக உள்ளது. சீனாவின் மக்கள் குடியாட்சியிலும் இவ்விதப் பன்மைச் செயல்துறை முறையைக் காணலாம்.

### பன்மைச் செயல்துறையின் நிறைகள்

உண்மையான குடியாட்சியில் அதிகாரங்கள் பரவலாக அமையவேண்டும். எனவே, செயல்துறை அதிகாரங்கள் தனி ஒருவரிடம் இருப்பதைவிடப் பலரிடம் இருப்பது குடியாட்சி முறையை நன்கு செயல்படுத்த வகைசெய்யும். தற்கால அரசாங்கத்தில் செயல்துறையின் அதிகாரங்கள் அதிகரித் துள்ளன. மிகுதியான அதிகாரங்களைத் தனி ஒருவரிடம் ஒப் படைப்பது வல்லாட்சிக்கு வழிகோலும். எனவே இவ்வதிகாரங்கள் பலரிடம் இருப்பது வல்லாட்சிப் போக்கைத் தடுக்கவல்லது.

[22] C. F. Strong: 'The most remarkable feature about the executive in Switzerland is its stability. It has a permanence and stability for more like that which characterizes a fixed executive'.

[23] R. G. Ghosh: 'The collegial executive of Switzerland is one of the most striking political institutions in modern democracy'.

தனி ஒருவரின் தீர்மானத்தைவிடப் பலரின் தீர்மானம் உயர்ந்த தாகவும், விவேகமுள்ளதாகவும் அமைகிறது. எனவே செயல் துறை அதிகாரங்களைத் தனி ஒருவரிடம் ஒப்படைப்பதைவிடப் பலரிடம் ஒப்படைப்பதே மேலாகும். பாராளுமன்றத்தின் தீர் மானங்களை நடைமுறைப்படுத்துவது மட்டும் செயல்துறையின் பணியாகாது. கொள்கைகளையும் திட்டங்களையும் வகுக்க வேண்டியதும் செயல்துறையின் பணியாகும். இப் பணியைத் திறம்படச் செய்யப் பன்மைச் செயல்துறையே சிறந்ததாகும். மக்களின் உரிமைகளும் சட்டமன்றங்களின் அதிகாரங்களும் பன்மைச் செயல்துறையில் நன்கு காக்கப்படுகின்றன.

**பன்மைச் செயல்துறையின் குறைகள்**

பன்மைச் செயல்துறையின் தீர்மானங்களிலும் கொள்கைகளி லும் ஒருமைப்பாடின்மை நிலவுகிறது. செயல்துறைக் குழுவில் ஒருவரையொருவர் சார்ந்திருக்க வேண்டியுள்ளதால் சுதந்திர மாகச் செயல்பட இயலுவதில்லை. பலர் இருக்குமிடத்தில் தனி ஒருவர்மீது பொறுப்பைக் காட்டுவது இயலாது. இவர்களில் யாரும் பொறுப்பை ஏற்பதில்லை. இதை ஒருவர் மற்றவர் மீது தள்ளிவிடுகிறார். அரசாங்கத்தின் ஒவ்வொரு கொள்கையையும் மற்றவர்களுடன் கலந்தாலோசித்து நடவடிக்கை மேற்கொள்ள வேண்டியுள்ளதால் காலதாமதங்கள் ஏற்படுகின்றன. பன்மைச் செயல்துறை திறமையற்றதாக அமைகிறது. அலெக்ஸாண்டர் ஹாமில்டன் கருத்துப்படி திறமையற்ற அரசாங்கம் தீங்கான அரசாங்கத்தைவிடப் பெருந்தீங்கு உடையதாகும்.

சுவிட்ஸர்லாந்தில் நடைபெறும் பன்மைச் செயல்துறை போற் றத்தக்கதாக அமைந்துள்ளது. சுவிஸ் மக்களின் பழக்க வழக்கங் களும், மரபுகளுமே பன்மைச் செயல்துறையின் வெற்றிக்குக் கார ணங்களாகும். சோவியத் ரஷ்யாவின் பிரிசிடியம் பொதுவுடை மைக்கட்சியின் ஆணைப்படியே இயங்குகிறது.

தற்கால அரசியல் வல்லுனர்களால் பன்மைச் செயல்துறை முறை பாராட்டப்படுவதில்லை. உலக நாடுகளிடையே இம்முறைக் குச் செல்வாக்கு இல்லாததை நாம் காணலாம். உல்சீயின் (Woolsey) கருத்துப்படி, செயல்துறையின் தனித்தலைவர் அரசாங் கத்தில் ஒருமைப்பாட்டையும் திறமையையும் ஏற்படுத்துகிறார். தனி ஒருவராக இருப்பதால் இவரோ அல்லது இவரது அமைச்சர் அவையோ பொறுப்புடையராவர். இரு செயல்துறைத் தலைவர்கள் மாறுபட்ட கட்சியினராயின் ஒருவருக்கொருவர் தடையாக

அமைவர்; ஒரே கட்சியினராயின் பொருமையும் போட்டியும் உடையவராக விளங்குவர்.[24]

## முக்கிய வினாக்கள்

1. பன்மைச் செயல்துறையை எடுத்துக்காட்டுகளுடன் விளக்கி அதன் நிறைகுறைகளை ஆய்க.
2. சுவிட்ஸர்லாந்தின் செயல்துறை பற்றிக் குறிப்பு வரைக.
3. பன்மைச் செயலாட்சி முறை-குறிப்பு வரைக. (செ.ப.க. ஏப்ரல், 1973)
4. சுவிட்ஸர்லாந்தின் செயல்குழுவின் முக்கியக் குணதிசயங்களை விவரிக்க. (செ.ப.க. செப்டம்பர், 1973)
5. சுவிட்ஸர்லாந்தின் செயலாட்சிக் குழுவின் சிறப்புப் பண்புகள் யாவை? (செ.ப.க. செப்டம்பர், 1975)

## உ. பொதுத்துறை அலுவல்
## (Civil Service)

அரசியல் செயல்துறைக்கும் நிரந்தரச் செயல்துறைக்கும் உள்ள வேறுபாடுகள்.

பொதுத்துறை அலுவல் — பொதுத்துறை அலுவலமைப்பு— பொதுத்துறை அலுவலர்களின் பங்கும் பணிகளும்— பொதுத்துறை அலுவலுக்கு நியமன முறை— பொதுப் பணித் தேர்வாணைக்குழு.

பொதுத்துறை அலுவலின் நிறைகுறைகள்— பொதுத்துறை அலுவலின் நிறைகள்— பொதுத்துறை அலுவலின் குறைகள்.

சில நாடுகளின் பொதுத்துறை அலுவல்— இங்கிலாந்தில் பொதுத்துறை அலுவல்— அமெரிக்காவில் பொதுத்துறை அலுவல்—இந்தியாவில் பொதுத்துறைஅலுவல்-- பிரான்சில் பொதுத்துறை அலுவல்— சோவியத் ரஷ்யாவில் பொதுத்துறை அலுவல்.

[24] Woolsey: 'The advantages of a single Chief, 'are obvious; he is able to bring unity and efficiency into the government, and being alone, he or his ministry is responsible;where as two presidents would be apt to checkmate one another, if they were of different parties, and would be jealous and rivals if they were of the same party.'

செயல் துறையில் அரசியல் செயல்துறையினர், நிரந்தரச் செயல்துறையினர் என இரு பிரிவுகள் உண்டு. தேர்ந்தெடுக்கப் பட்ட அமைச்சர்களும் செயல்துறைத் தலைவரும் அரசியல் செயல் துறையினர் ஆவர். ஆட்சித்துறை அலுவலர்கள் எனப்படும் பொதுத்துறை அலுவலர்கள் திறமையுள்ள, ஊதியம் பெறும் நிரந்தரச் செயல்துறையினர் ஆவர்.[25] அமைச்சர்களின் செயலாள ரான உயர் அலுவலர்களிலிருந்து சாதாரண எழுத்தர் வரையுள்ள அனைத்து அலுவலர்களும் பொதுத் துறை அலுவலில் அடங்குவர்.

## அரசியல் செயல்துறைக்கும் நிரந்தரச் செயல்துறைக்கும் உள்ள வேறுபாடுகள்

அரசியல் செயல்துறையின் தலைவரும் அமைச்சர்களும் அரசியல் கட்சியைச் சார்ந்தவர்கள்; கட்சி அடிப்படையிலே தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்; கட்சியில் ஈடுபாடும், அதன் வளர்ச்சி யில் மிகுந்த அக்கறையும் உடையவர்கள். ஆனால் நிரந்தரச் செயல்துறையினரான பொதுத்துறை அலுவலர்கள் அரசியல் கட்சியைச் சார்ந்தவர்கள் அல்லர். கட்சியில் நேரடி ஈடுபாடு உடையவர்களும் அல்லர். இவர்கள் கட்சி சார்பற்று நடுநிலையில் நின்று பணியாற்றுபவர்கள் ஆவர்.

அரசியல் செயல்துறையினர் நான்காண்டுகள் அல்லது ஐந்தாண்டுகள் எனக் குறிப்பிட்ட காலத்திற்கும் பதவி வகிப் பார்கள். இவர்களது பதவிக்காலம் குறுகியது; தற்காலிகமானது. ஆனால் பொதுத்துறை அலுவலர்கள் தாங்கள் ஒரு குறிப்பிட்ட வயதில் ஓய்வு பெறும்வரை பதவியிலிருப்பார்கள். எனவே இவர்களை நிரந்தரச் செயல்துறையினர் என்று இங்குக் குறிப் பிடுகிறோம்.

அரசியல் செயல்துறையினர் கட்சி அடிப்படையில் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஆனால் பொதுத்துறை அலு வலர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவதில்லை. பொதுப் பணித் தேர்வாணைக் குழுவால் தேர்ந்தெடுக்கப்பட்டு நியமிக்கப்படுகின் றனர். அரசியல் செயல்துறையினர் மக்களிடையேயுள்ள செல் வாக்கின் காரணமாகத் தங்கள் பதவியை அடைகின்றனர். பொதுத்துறை அலுவலர்கள் தங்கள் திறமையின் காரணமாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

[25] Finer: 'The Civil Service is a professional body of officials, perma-nent, paid and skilled.'

அமைச்சராவதற்குத் தொழில் நுணுக்கங்களோ கல்வித் தகுதிகளோ வற்புறுத்தப்படுவதில்லை. எனவே பள்ளியிறுதித் தேர்வில் தோல்வியுற்றவர்கள்கூடக் கல்வியமைச்சராக இருக்க லாம். அமைதியையே விரும்பும் ஒருவர் போர் அமைச்சராக இருக்கலாம். கணக்குகளிலும் வரவு செலவிலும் தேர்ச்சியில்லாத ஒருவர் நிதியமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்படலாம். நிர்வாக நுணுக்கங்களை அறியாதவர்களும் அரசியல் செயல்துறையில் பணி யாற்றலாம். ஆனால் பொதுத்துறை அலுவலர்கள் குறிப்பிட்ட கல்வித் தகுதிகளையும் தொழில் தகுதிகளையும் உடையவர்களாக இருப்பார்கள்.

## பொதுத்துறை அலுவலர்

### பொதுத்துறை அலுவலமைப்பு

ஒவ்வொரு துறையும் ஓர் அமைச்சரின் பொறுப்பில் இருக்கும். இவருக்கு உதவியாக நிரந்தரச் செயல்துறையினரான பொதுத் துறை அலுவலர்கள் இருப்பர். செயலாளர், துறைத் தலைவர், துறைத்தலைவரின் கீழ் உள்ள அலுவலர்கள், அலுவலக எழுத்தர்கள் ஆகியோர் பொதுத்துறை அலுவலர்கள் ஆவர். கல்வி யமைச்சர் கல்வித்துறைக்குப் பொறுப்பாக உள்ளார். இவருக்கு உதவியாகக் கல்வித் துறைச் செயலாளர், இணைச் செயலாளர், துணைச்செயலாளர், கல்வித்துறை இயக்குநர், இணை இயக்குநர், துணை இயக்குநர் ஆகியவர்கள் உள்ளனர். இவர்களுக்குக் கீழ் முதன்மைக் கல்வி அலுவலர்கள், மாவட்டக் கல்வி அலுவலர்கள், பள்ளி ஆய்வாளர்கள், இளநிலை ஆய்வாளர்கள் என அலுவலர்கள் உள்ளனர். ஒவ்வோர் அலுவலகத்திலும் மேலாளர், தலைமை எழுத்தர், உதவி எழுத்தர் என அலுவலக அலுவலர்களும் உண்டு. அரசாங்கத்தின் ஒவ்வொரு துறையும் இவ்வித அமைப்பை உடையதாக உள்ளது. சாதாரண நிலை எழுத்தரிலிருந்து அமைச் சரின் செயலாளர் வரை பொதுத்துறை அலுவலர்கள் ஆவர். பொதுத்துறை அலுவல் அமைப்புகள் அரசாங்கத் துறை களிடையே மாறுபடலாம்.

### பொதுத்துறை அலுவலர்களின் பங்கும் பணிகளும்

தற்கால அரசாங்கத்தில் பொதுத்துறை அலுவலர்களின் பங் கும் அவர்களின் முக்கியத்துவமும் அதிகரித்துள்ளன. சமூக

நலம் நாடும் அரசாங்கமாக அமைந்துள்ளதால் பொதுத்துறை அலுவலர்களின் எண்ணிக்கையும் பணிகளும் மிகுந்துள்ளன. அரசாங்கம் வாழ்க்கைத் துறைகளில் மக்களின் நடத்தையை ஒழுங்குபடுத்த வேண்டியுள்ளது. ஒப்படைக்கப்பட்ட சட்டஞ்செய்யுரிமை (Delegated Legislation) யின் காரணமாகவும், நீதி நிர்வாகத்தின் காரணமாகவும், பொதுத்துறை அலுவல்கள் அதிகரித்துள்ளன. அமைச்சர்கள் இல்லாமல் நிர்வாகத்தை நடத்த இயலும். ஆனால் பொதுத்துறை அலுவலர்கள் இல்லாமல் அரசாங்கத்தை இயக்க இயலாது.

அமைச்சர்களுக்கு வழிகாட்டுபவர்களாகவும், கொள்கைகளை வகுப்பதில் உதவி செய்பவர்களாகவும், பொதுத்துறை அலுவலர்கள் அமைகின்றனர். கொள்கைகளைச் செயல்முறைப்படுத்துகின்றனர். நிர்வாக நுணுக்கங்களை அறிந்து அவைகளை அன்றாட அரசாங்க நடைமுறைகளில் கையாளுகின்றனர். சட்டமன்றங்களுக்கும் அரசாங்க அலுவலர்கள் துணை நிற்கின்றனர். நுணுக்கங்களுடன் சட்டத்தை வகுத்தளிப்பது பொதுத்துறை அலுவலர்களே யாகும். அரசாங்கம் மாறும்போதும் அலுவலர்கள் மாறாது இருந்து நிர்வாகத்தில் தொடர்ச்சியையும் நிலைத்த தன்மையையும் ஏற்படுத்துகிறார்கள். பொதுத்துறை அலுவல் பற்றிய விதிமுறைகளையும் நடைமுறைகளையும் வகுக்கிறார்கள். செயல்துறைத் தலைவருக்கும் அமைச்சர்களுக்கும் தேவையான புள்ளி விவரங்களைச் சேகரித்து அளித்து இவர்கள் பாராளுமன்றத்தில் விடையிறுக்க உதவுகின்றனர். பாராளுமன்றத்தின் ஒப்புதலுக்காக வைக்கப்படும் மசோதாக்களும் வரவு செலவுக் கணக்குகளும் பொதுத் துறை அலுவலர்களால் உருவாக்கப்பட்டனவாகும். சட்டமன்றங்கள் இயற்றும் சட்டங்களில் பரந்த எல்லைக்கோடுகளையே காணலாம். அரசாங்க அலுவலர்களே இவ்வெல்லைக்கோடுகளை நிரப்பிசட்டங்களுக்கு முழுவடிவம் அளிக்கின்றனர். அரசாங்கத்தின் சட்டத்துறை அலுவலர்கள் இப் பணிகளைச் செய்கின்றனர். பாராளுமன்றம் நிறைவேற்றிய சட்டங்களை நடைமுறைப்படுத்தி அச்சட்டத்தின் பலன்கள் மக்களையடையச் செய்வதும் பொதுத்துறை அலுவலர்களே ஆவர். ஃபைனர் கூற்றுப்படி, பொதுத்துறை அலுவலர்கள் இல்லையேல் அரசாங்கச் சட்டங்களும் ஒழுங்குமுறைகளும் மக்கள்மீது செல்வாக்கையும் விளைவையும் ஏற்படுத்தாமல் நடுவானில் கட்டித் தொங்கவிடப்பட்டனவாக அமைந்துவிடும். எனவே, அரசாங்கம் என்னும் உடலமைப்பிற்குப் பொதுத்துறை அலுவலர்கள் முதுகெலும்பு போன்றவர்களாவர்.

**பொதுத்துறை அலுவலுக்கு நியமனமுறை**

பொதுத்துறை அலுவலர்கள் அரசாங்க நிர்வாகத்தில் மிக முக்கியமான பங்கை வகிக்கிறார்கள்; பணிகளைச் செய்கிறார்கள். எனவே, இவர்களின் நியமனம் பற்றிய விவரங்கள் கவனம் பெற வேண்டியது அவசியமாகிறது. கல்வித் தகுதியும் பயிற்சியும் உடையவர்களாகவும், திறமையுடையவர்களாகவும், நாணயம் உடையவர்களாகவும், நுண்ணறிவு மிக்கவர்களாகவும், நல்ல ஆளுமையுடையவர்களாகவும் பொதுத்துறை அலுவலர்கள் இருக்க வேண்டும். சர் வில்லியம் பீவிரிட்ஜ் (Sir William Beveridge) அவர்களின் கருத்துப்படி, பொதுத்துறை அலுவல் ஒரு தொழில் துறையாகும். அது கற்றவர்களின் தொழில்துறை. எனவே, தொழில்திறம் படைத்தவர்கள் நியமிக்கப்பட வேண்டும்.[26]

பொதுத்துறை அலுவலர்களின் நியமனத்தில் அரசியல் செயல்துறையினர் தலையீடு இருக்கக் கூடாது. செயல்துறைத் தலைவரும் அவரது அமைச்சர்களும் அரசியல் கட்சியைச் சார்ந்தவர்களாவர். பொதுத்துறை அலுவலர்களை இவர்கள் நியமனம் செய்தால் கட்சி அரசியல் பொதுத்துறை நியமனத்தில் ஆதிக்கம் செலுத்தும். ஆளுங்கட்சியைச்சார்ந்தவர்கள் நியமிக்கப்படுவார்கள். உறவு அடிப்படையிலும் சாதி சமய அடிப்படையிலும் சலுகைகள் காட்டப்படும்; திறமை கவனிக்கப்படாது வேண்டியவர், வேண்டாதவர் என்ற பாகுபாட்டின் அடிப்படையில் நியமனங்கள் செய்யப்படும். பொதுத் தேர்தலில் செயல் துறைத் தலைவருக்கும், அமைச்சர்களுக்கும் உதவி செய்தவர்களுக்குச் சாதகமான நியமனங்கள் செய்யப்படும். தேர்தல் செலவை ஈடுகட்டுவதற்காக லஞ்சம் வாங்குதலும் தோன்றும். செயல்துறைத் தலைவரால் பொதுத்துறை அலுவலர்கள் நியமிக்கப்படுவதில் ஏற்பட்ட தீங்குகளை அமெரிக்க ஐக்கிய நாடுகளில் காணலாம். அமெரிக்காவின் பொதுத்துறை அலுவல் பற்றிப் பின்பகுதியில் காண்போம்.

பொதுத்துறை அலுவலர்களைத் திறமையின் அடிப்படையில் போட்டித் தேர்வுகளின் வழி தேர்ந்தெடுத்து நியமித்தலே சிறப்புடையதாகும். இதற்காகத் தேர்வும் நேர்முகத் தேர்வும் நடத்தப்படுகின்றன. தேர்வு நடத்தும் நிறுவனங்களும், நியமனம் செய்யும் நிறுவனங்களும் அரசியல் செயல்துறையினர் தலையீடு இன்றிச் சுயேச்சையாகவும், சுதந்திரமாகவும் இயங்க வேண்டும்.

[26] Sir William Beveridge: 'The civil service, is a profession, and I should like it to become and realise itself as a learned profession'.

அப்போதுதான் விருப்பு வெறுப்பின்றி, சாதகபாதகமின்றி, அச்சமின்றி, சலுகை காட்டாமல் திறமையின் அடிப்படையில் பொதுத்துறை அலுவலர்களைத் தேர்ந்தெடுக்க இயலும்.

நியமிக்கப்பட்ட பொதுத்துறை அலுவலர்களுக்கு நிர்வாகத்தில் பயிற்சி அளிக்கப்படுகிறது. துறைச்சோதனைகளால் துறை நுணுக்கங்களிலும் விதிமுறைகளிலும் தேர்ச்சி ஏற்படுகிறது. இச் சோதனைகளில் வெற்றி பெற்றவர்களுக்குத் தகுதிகாண் பருவத்தைமுடித்து ஊக்குவிப்பு ஊதியங்கள் அளிக்கப்படுகின்றன. ஒரே விதமான அலுவல்களைச் செய்பவர்களுக்கு ஒரே விதமான ஊதியம் வழங்கப்படுகிறது. பொதுத்துறை அலுவலில் தனது தகுதிகளை உயர்த்திக் கொள்ளவும், முன்னேறவும், பதவிஉயர்வுகள் பெறவும் வாய்ப்புகள் உள்ளன. பதவி உயர்வு அளிப்பதில் விருப்பு வெறுப்புக் காட்டாமல் தகுதியின்அடிப்படையிலும் முன்னுரிமையின் அடிப்படையிலும்உயர்வு அளிக்க வேண்டும். ஊழியர்களின் நலன்கருதி விடுப்பு வசதிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. குறிப்பிட்ட வயதை ஓய்வு அடையும் வயதாகக் கொள்ளப்படுகிறது. ஓய்வு பெற்ற அலுவலர்கள் வசதியுடன் வாழ்வதற்கு ஓய்வுகால ஊதியங்கள் அளிக்கப்படுகின்றன. ஆளும் கட்சியினர் மீதுகூட நடவடிக்கை மேற்கொள்வதற்கான பணிப்பாதுகாப்புகள் அளிக்க வேண்டும்.

நியமனத்தில் செயல்துறையினரின் தலையீடு இருக்கக்கூடாது என்பதையும், திறமையின் அடிப்படையில் போட்டித் தேர்வுகளின் வழி சுயேச்சையான நிறுவனங்கள் பொதுத்துறை அலுவலர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்பதையும், பணிப் பாதுகாப்பின் அவசியத்தையும் கண்டோம்.

### பொதுப் பணித் தேர்வாணைக்குழு

பொதுத்துறை அலுவலர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக தேர்வாணைக்குழுக்கள் தற்காலத்தில் அமைக்கப்பட்டுள்ளன. இத்தேர்வாணைக் குழுக்கள் சுயேச்சையுடன் இயங்குகின்றன. இவைகள் அரசியலமைப்புச் சட்டப்படி நிறுவப்பட்டனவாகும். எனவே தேர்வாணைக்குழு அங்கத்தினர்களின் பதவிப் பாதுகாப்பும் சுதந்திரமும் காக்கப்படுகின்றன. இந்தியாவில் ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒரு தேர்வாணைக் குழுவும் மத்திய அரசாங்க நியமனங்களுக்கென ஒரு தேர்வாணைக்குழுவும் உள்ளன. மாநிலங்களின் பொதுத்துறை அலுவலர்களை மாநிலத் தேர்வாணைக் குழுக்களும், மத்திய அரசாங்கத்தின் பொதுத்துறை அலுவலர்களை மத்திய தேர்வாணைக்குழுவும் தேர்ந்தெடுக்கின்றன. அகில இந்தியப்

பணிகளுக்கான ஊழியர்களை மத்தியத் தேர்வாணைக் குழு தேர்ந் தெடுக்கிறது.

## பொதுத்துறை அலுவலின் நிறைகுறைகள்

### பொதுத்துறை அலுவலின் நிறைகள்

பொதுத்துறை அலுவலின் காரணமாக நிர்வாகத் திறமை ஏற்பட்டுள்ளது. குடியாட்சி முறை அரசாங்கம் திறமையாக நடைபெறுவதற்கும் நிர்வாகத்தில் தொடர்ச்சி இருப்பதற்கும் பொதுத்துறை அலுவலர்களின் பங்கு முக்கியமானதாகும். பேரா சிரியர் பால்பூரின் (Balfoor) கருத்துப்படி, பொதுத்துறை அலுவலர்கள் அரசியல் கட்சியைச் சார்ந்தவர்கள் அல்லர். இருப் பினும் கட்சி ஆட்சி நடைபெறுவதற்கு முக்கியமானவர்களாவர். ஒரு கட்சி அமைச்சரவை நீங்கி மறு அமைச்சரவை வரும் வரை நிர்வாகம் அழியாமல் இருப்பதற்குப் பொதுத்துறை அலுவலர்களே காரணமாவர்.

அரசாங்கக் கொள்கைகளை வகுப்பதற்கும், அவைகளை வெற்றி கரமாகச் செயல்படுத்துவதற்கும் பொதுத்துறை அலுவலர்கள் அவ சியமாகின்றனர். பொதுத்துறையின் உயர் அலுவலர்கள் கொள்கைகளை வகுத்து அமைச்சர்களுக்கு உதவுகின்றனர். இக் கொள்கைகள் பாராளுமன்றத்தால் அங்கீகரிக்கப்பட்டவுடன் அவைகள் வெற்றிகரமாகச் செயல்படப் பொதுத்துறை அலுவலர் கள் உதவுகின்றனர். விதிகளை வகுத்தும் ஆணைகளைப் பிறப்பித் தும் அரசாங்கக் கொள்கைகள் நிறைவேற்றப்படுகின்றன.

அரசியல் கட்சிகளால் தேர்த்தெடுக்கப்படும் அமைச்சர்கள் நிர்வாக நுணுக்கங்களையும் விதிமுறைகளையும் அறியாதவர்களாக உள்ளனர். அவர்களுக்கு ஆலோசனைகள் கூறி நிர்வாகத்துறை யில் வழிப்படுத்திச் செல்வது பொதுத்துறை அலுவலர்களேயாவர். நிர்வாக அனுபவம் அற்ற அரசியல் கட்சித் தலைவர்கள் ஆட்சியை நடத்திச் செல்வதில் அலுவலர்கள் உதவுகின்றனர்.

நிர்வாகத்தில் ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டுவதற் கும், பாராளுமன்றச் சட்டம் தனி மனிதனை அடைவதற்கும் திறமை மிக்க பொதுத்துறை அலுவலர்களே கரரணமாவர். பொதுத்துறை அலுவலில் ஒழுங்கு கடைப்பிடிக்கப்படுவதற்கும் அலுவலர்களே விதிகளை வகுக்கின்றனர்.

திறமையான நிர்வாகமும் நல்லாட்சியும் நடைபெறுவதற்குப் பொதுத்துறை அலுவலர்களின் பொறுப்பு மிகுதியாகும்.

## பொதுத்துறை அலுவலின் குறைகள்

பொதுத்துறை அலுவலர்கள் அதிகார மனப்பான்மையுடையவர்கள் (Bureaucracy) என்றும், சலுகைகள் உடைய தனி வகுப்பார் என்றும் குறை கூறப்படுகின்றனர். நாடுகள் சுதந்திரம் பெற்றுக் குடியாட்சி நிறுவப்படுவதற்கு முன் பொதுத்துறை அலுவலர்களே வல்லாட்சிக்குத் துணைநின்று சர்வாதிகார அரசாங்கத்தை நடத்தினர். குடியாட்சி நிலவும் தற்காலத்திலும், தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்கள் பொறுப்பாயுள்ள இந்நாளிலும் பொதுத்துறை அலுவலர்களுக்குத் தன் யுக்தி அதிகாரம் (Discretionary Powers) இருப்பதைக் காணலாம். ஸ்ட்ராஸ் (Strauss) என்பவர் கருத்துப்படி, பொதுத்துறை அலுவலர்கள் அரசாங்கத்தின் நிரந்தர அரசியல் வாதிகள் ஆவர். சென்ற தலைமுறையில் அரசாங்கத்தின் அலுவலர்கள் அதிகரித்ததால் இவர்கள் அதிகாரமும் ஏராளமாக வளர்ந்துள்ளன.[27]

அமைச்சர்களின் பொறுப்பு என்ற போர்வையில் நிர்வாகத்தில் ஆர்வமும் அக்கறையும் அற்றவர்களாகப் பொதுத்துறை அலுவலர்கள் செயல்படுகின்றனர். இவர்களது செயல்களுக்கான பொறுப்பு அமைச்சர்கள் மீது தள்ளப்படுகிறது. மேலும் கீழ்நிலை அலுவலர்கள் உயர்நிலை அலுவலர்களின் மீது பொறுப்பைச் சுமத்துகின்றனர். நிர்வாகத்தின் திறமையின்மைக்கு உயர்நிலை அலுவலர்கள் தங்கள் கீழ் உள்ள அலுவலர்களைக் குறை கூறுகின்றனர். பொறுப்பு முழுமனதுடன் ஏற்கப்படாமல் மற்றவர்களின் மீது தள்ளப்படுகிறது.

பொதுத்துறை அலுவலர்கள் சிவப்பு நாடா முறைக்கும் (Red Tapism) குறை கூறப்படுகின்றனர். இம்முறையின் காரணமாக விதிகளிலும் விதிமுறைகளிலும் நெகிழ்வற்ற தன்மையைக் காணலாம். விதிமுறைகளைப் பின்பற்றும்போது ஏராளமான காலதாமதம் நிகழ்கிறது. குறித்த காலத்தில் குறித்த நோக்கத்தை நிறைவேற்ற முடிவதில்லை.

பொதுத்துறை அலுவலர்கள் பிற்போக்கு உடையவர்களாகவும், குறுகிய மனப்பான்மையுடையவர்களாகவும், ஆணவம் பிடித்தவர்களாகவும் உள்ளனர். ராபர்ட் மைக்கில்ஸ் (Robert Michels) கூற்றுப்படி, பொதுத்துறை அலுவலர்கள் தம் கீழ் உள்ளவர்

[27] Strauss: 'The higher civil servants are... 'permanent politicians' who do not so much work under the direction of minister as work with him, and whose share in this co-operative effort has inevitably grown with the enormous expansion in government activities during the last generation.'

களிடம் ஆணவமாகவும் தம், மேலுள்ளவர்களிடம் அடிமையாகவும் நடந்துகொள்கின்றனர்: [28]

பொதுத்துறை அலுவலர்கள் மீது லஞ்சக் குற்றங்களும் கைக் கூலி பெறும் குற்றங்களும் கூறப்படுகின்றன. காரியங்களை நிறை வேற்றுவதற்காகவும் சலுகைகள் காட்டுவதற்காகவும் பொதுத் துறை அலுவலர்கள் கைக்கூலி பெறுகின்றனர்.

பொதுத்துறை அலுவலர்கள் தற்கால அரசாங்கத்தில் தவிர்க்க முடியாதவர்களாகிவிட்டனர், அரசாங்கத்தை நடத்து வதற்கும் மக்களின் தேவைகளை நிறைவேற்றுவதற்கும் பொதுத் துறை அலுவலர்கள் அத்தியாவசியமாகின்றனர். சரியான ஊழிய விதிகளையும் பொதுத்துறை அலுவலர்களின் நடத்தை விதிகளையும் வகுத்துச் செயல்படுத்துவதன் மூலம் பொதுத்துறை அலுவலைச் சீருடையதாகவும் சிறப்புடையதாகவும் செய்யலாம்.

## சில நாடுகளில் பொதுத்துறை அலுவல்

### இங்கிலாந்தின் பொதுத்துறை அலுவல்

ஆரம்ப காலத்தில் இங்கிலாந்தின் பொதுத்துறை அலுவல்கள் உயர் குடியினருக்கு வழங்கப்பட்டன. முறையான ஆட்சித்துறை அமைக்கப்படவில்லை. திறமைக்கும் தகுதிக்கும் இடம் அளிக்கப் படவில்லை. செல்வாக்கு உள்ளவர்கள் பொதுத்துறை அலுவலில் உயர்பதவியை அடைந்தனர். 1854ஆம் ஆண்டில் நிரந்தரமான பொதுத்துறை அலுவலர்கள் பற்றிய நார்த் கோட் ட்ரிவிலியன் அறிக்கை (North Cote Trevelyan Report) பாராளுமன்றத்தில் ஏற்கப்பட்டு 1855ஆம் ஆண்டில் பொதுத்துறை அலுவலர் தேர் வாணைக்குழு (Civil Service Commission) இங்கிலாந்தில் நிறுவப் பட்டது. இதன் அங்கத்தினர்கள் அமைச்சரவையால் நியமிக்க பட்டனர்.

வயது வரம்பு, உடல்நிலை, நன்நடத்தை, திறமை ஆகியன தேர்வாணைக் குழுவால் சோதிக்கப்பட்டுப் பொதுத்துறை அலு வலர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தேர்வாணைக் குழுவில் மூன்று அங்கத்தினர்கள் நியமிக்கப்பட்டனர். இவர்கள் சுயேச்சையுடை யவர்களாக விளங்கினர்.

[28] Robert Michels: 'Bureaucracy is the sworn enemy of individual liberty, and of all bold imitiative in matters of internal policy... There is arrogance towards inleriors and servility towards superiors.'

இங்கிலாந்தின் தற்போதைய பொதுத்துறையில் பலநிலை அலுவலர்கள் இருக்கின்றனர். ஆட்சித்துறை அலுவலர்களாகப் பல்கலைக் கழகப் பட்டதாரிகளே நியமிக்கப்படுகிறார்கள். இவர்கள் அரசாங்கத்தின் உயர் அலுவலர்களாவர். செயல்துறை அலுவலர்கள் அரசாங்கத்தின் சட்டதிட்டங்களை நடைமுறைப்படுத்துகின்றனர். பொறியியல் வல்லுனர்கள், மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், கணக்காயர்கள் ஆகியோர் தனிப்பயிற்சி பெற்ற சிறப்புத் துறை அலுவலர்களாகப் பணியாற்றுகின்றனர். தட்டெழுத்தர்கள், சுருக்கெழுத்தர்கள், அலுவலக எழுத்தர்கள் ஆகியோர் அடங்கிய எழுத்தர் பிரிவும் பொதுத்துறை அலுவர்களில் ஒரு பிரிவாகும். மேலாளர்களும் சிறு பதவி அலுவலர்களும் பொதுத் துறை அலுவலின் பிறிதோர் பிரிவைச் சார்ந்தவர்களாவர். தூதர்களும், அவர்களுடைய அலுவலக ஊழியர்களும் தூதரகப் பிரிவைச் சார்ந்தவர்களாவர்.

பொதுத்துறை அலுவலர்களைத் தேர்ந்தெடுக்குமுன் பாராளுமன்றத்தின் ஒப்புதலும் நிதித்துறையின் அனுமதியும் பெற வேண்டும். அலுவலர்களின் நியமனத்தால் ஏற்படக்கூடிய செலவினங்களுக்கு இவ்வொப்புதல்கள் அவசியமாகின்றன.

பொதுத்துறை அலுவலர்களின் பதவியுயர்வுகள் திறமையடிப்படையிலும் அளிக்கப்படுகின்றன. ஒவ்வொரு துறையும் நடத்தும் தேர்வில் வெற்றி பெறுவதன் மூலமும் பதவி உயர்வுகள் அளிக்கப்படும்போது அலுவலர்களின் கடந்தகாலச் செயல்களுக்கு அந்தரங்கச் சேர்ப்புகள் பார்க்கப்படுகின்றன.

இங்கிலாந்தின் பொதுத்துறை அலுவல் சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. கட்சிமுறை அரசாங்கம் நடைபெற்றாலும் அலுவலர்கள் கட்சி சார்பற்றவர்களாகவும், நடுநிலையாளர்களாகவும் விளங்குகின்றனர். சிறந்த நன்நடத்தையுடையவர்களாக இருக்கின்றனர். பொதுமக்களின் கருத்துப் பொதுத்துறை அலுவலர்களின் திறமையையும் மதிப்பையும் உயர்த்துவதாக உள்ளது.

### அமெரிக்காவில் பொதுத்துறை அலுவல்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் முதல் குடியரசு தலைவரான ஜார்ஜ் வாஷிங்டன் திறமையின் அடிப்படையில் பொதுத்துறை அலுவலர்களை நியமித்தார். நாளடைவில் அமெரிக்காவில் அரசியல் கட்சிகளின் தோற்றம் ஆரம்பித்தது. குடியரசு தலைவர் ஜாக்சன் பொதுத்துறை அலுவலர்களைக் கட்சி அடிப்படையில் நியமனம் செய்தார். தமது அரசியல் கட்சியைச் சார்ந்தவர்களை

யும் தேர்தலில் தமக்கு உதவி செய்தவர்களையும் தேர்ந்தெடுத்து அலுவலர்களாக நியமனம் செய்தார். இந்த நியமன முறைக்கு ஸ்பாயில்ஸ் முறை (Spoil system) என்று ஆங்கிலத்தில் பெயர். வெற்றி பெற்றவர்களுக்குத் திறைப் பொருள் 'அருங்கலம் எல்லாம் ஆள்வோர்க்கே' என்னும் கோட்பாடு பின்பற்றப்பட்டது. ஸ்பாயில் முறையில் தம் கட்சியைச் சார்ந்தவர்களையும் தமது நம்பிக்கைக்கு உரியவர்களையும் பதவியில் நியமனம் செய்ய முடிந்தது. இவர்கள் நிர்வாகத்தில் முழு ஒத்துழைப்பை நல்கினர். மேலும் ஒவ்வொரு குடியரசு தலைவர் மாறும்போதும் அவரால் நியமிக்கப்பட்டவர்கள் விலக்கப்பட்டுப் புதியதாகப் பதவியை அடையும் தலைவரின் ஆதரவாளர்கள் பதவியை எய்தினர். இதனால் பொதுத்துறை அலுவல்களில் பணிபுரியும் வாய்ப்பு தனிச் சிலருடையதாக இல்லாது எல்லோருக்கும் கிடைக்கிறது. இதன் வழி பதவிச் சுழற்சி முறையை (Rotation of office) நிறுவ முடிகிறது. ஆனால் ஸ்பாயில்ஸ் முறையின் காரணமாக நிருவாகத்தில் தொடர்ச்சி இருப்பதில்லை. ஒவ்வொரு குடியரசு தலைவர் மாறும்போதும் அலுவலர்களும் மாறுவதால் அனுபவம் பெற்றவர்கள் நீக்கப்படுகின்றனர். புதியதாக நியமிக்கப்படுகிறவர்களுக்கு நிருவாக அனுபவம் இருப்பதில்லை. இதனால் நிருவாகத் திறமை குறைந்து விடுகிறது. பதவியை அடைய வேண்டுமென்ற ஆர்வத்தால் பல ஒழுங்கீனங்களுக்கு இடம் ஏற்படுகிறது. எனவே ஸ்பாயில்ஸ் முறையின் குறைகளை உணர்ந்த அமெரிக்கா இம்முறை நியமனத்தை நீக்கியது.

1833ஆம் ஆண்டு பெண்டில்டன் சட்டம் (Pendilton Act) எனப்படும் பொதுத்துறை அலுவல் சட்டம் இயற்றப்பட்டது. இதன்படி மூன்று அங்கத்தினர்கள் கொண்ட பொதுப்பணித் தேர்வாணைக்குழு (Civil Service Commission) ஏற்படுத்தப்பட்டது. இதன் அங்கத்தினர்களை செனட்சபையின் ஒப்புதலின் பேரில் குடியரசு தலைவர் நியமனம் செய்தார். இவர்களில் ஒருவர் எதிர்க் கட்சியைச் சார்ந்தவராக இருந்தார். கட்சி அடிப்படை நியமனம் நீக்கித் திறமை அடிப்படையில் நியமனங்கள் செய்யப்பட்டன. பொதுத்துறை நியமனங்களுக்காகத் தேர்வு நடத்துவதும், தகுதியைக் காண்பதும், அலுவலர்களைத் தரம் பிரிப்பதும், மாநிலங்களின் மக்கள்தொகைக்கேற்பப் பதவிகளைப் பிரித்தளிப்பதும், நிரந்தரப் பதவி அளிப்பதற்கு முன் தகுதிகாண் பருவம் அமைத்தலும் பொதுத்துறைத் தேர்வாணைக் குழுவின் பணிகளாக அமைந்தன.

இங்கிலாந்தின் பொதுத்துறை அலுவல் அமைப்பிலிருந்து அமெரிக்காவின் அமைப்பு மாறுபட்டுள்ளது. தொழில்திறம்

படைத்தவர்கள், அறிவியல் வல்லுநர்கள், எழுத்தர்கள் என அமெரிக்கப் பொதுத்துறை அலுவலில் பிரிவுகள் உள்ளன. முப்பத்தைந்து வயதானவர்கள் கூடப்பதவிக்குப் போட்டியிடலாம். இன்னும் செயலாளர்கள், உதவிச் செயலாளர்கள் போன்ற உயர் அலுவலர்கள் குடியரசு தலைவரால் நியமிக்கப்படுகிறார்கள். உயர் பொதுத்துறை அலுவலில் அரசியல் கட்சியின் செல்வாக்கைக் காணலாம்.

பொதுத்துறை நியமனங்களுக்குப் பயிற்சியும் திறமையும் வற்புறுத்தப்படுகின்றன. இங்கிலாந்தில் நியமனங்கள் பொது அறிவின் அடிப்படையிலும் பொதுக்கல்வியின் அடிப்படையிலும் செய்யப்படுகின்றன. அமெரிக்காவில் குறிப்பிட்ட பதவிக்குத் தேவையான செய்முறைப் பயிற்சியும் உடனடித் தகுதியும் வேண்டப்படுகிறது. பொதுத்துறை அலுவலுக்கு மாநிலங்களின் மக்கள் தொகை கருத்தில் கொள்ளப்பட்டு அதன் விகிதாச்சாரப்படி நியமனங்கள் செய்யப்படுகின்றன.

## இந்தியாவின் பொதுத்துறை அலுவல்

1919ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டப்படி 1925ஆம் ஆண்டில் முதன் முதலாகப் பொதுத்துறை அலுவல் தேர்வாணைக் குழு அமைக்கப்பட்டது. 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி மத்திய அரசாங்கத்திற்கெனத் தேர்வாணைக் குழுவும் மாநில அரசாங்கங்களுக்கெனத் தேர்வாணைக் குழுக்களும் அமைக்கப்பட்டன. இத்தேர்வாணைக் குழுக்களே பொதுத்துறை அலுவலர்களை ஆங்கிலேயரின் ஆட்சிக்காலத்தில் தேர்ந்தெடுத்தன. ஆங்கிலேயரின் ஆட்சியில் உயர் பொதுத்துறைஅலுவலர்கள் அதிகார வர்க்கத்தினர்களாக இருந்தனர். உயர் அலுவலர்களில் பெரும்பான்மையோர் அயல்நாட்டினராகவும் அதிகாரம் மிக்கவர்களாகவும் அமைந்தனர். அவர்களுக்கு மிக உயர்ந்த ஊதியம் அளிக்கப்பட்டது. அலுவலர்கள் மக்களின் நலத்தைக் கருத்தில் கொள்ளாதவர்களாகவும் ஆட்சியாளர்களுக்கு அடிபணிபவர்களாகவும் இருந்தனர்.

இந்தியா சுதந்திரம் பெற்றுக் குடியாட்சி அரசான பிறகு முறையான பொதுத்துறை அலுவல் தேர்வாணைக்குழு அமைக்கப்படுவதற்கு அரசியலமைப்பில் விதிகள் வகுக்கப்பட்டன. மத்திய அரசாங்கத் தேர்வாணைக் குழுவும், மாநில அரசாங்கத் தேர்வாணைக் குழுக்களும் ஏற்படுத்தப்பட்டன. மத்தியத் தேர்வாணைக் குழுவின் தலைவரையும் உறுப்பினர்களையும் குடியரசு தலைவர் நியமனம் செய்கிறார். மாநிலத் தேர்வாணைக் குழுக்களின் தலைவரையும்

உறுப்பினர்களையும் மாநில ஆளுநர்கள் நியமனம் செய்கிறார்கள். இவர்கள் ஆறு ஆண்டுக் காலங்களுக்குப் பதவி வகிப்பர். இவர்கள் குடியரசு தலைவரால் பதவியிலிருந்து நீக்கப்படலாம். பதவிக் காலம் முடிந்த பிறகு மீண்டும் நியமிக்கப்படுவதற்கு உறுப்பினர்கள் தகுதியற்றவர்களாவர்.

பொதுத்துறை அலுவல் தேர்வாணைக் குழுவின் பணிகள் இந்திய அரசியலமைப்பிலேயே கூறப்பட்டுள்ளன.

1. மத்திய—மாநிலப் பொதுத்துறை அலுவல் தேர்வாணைக் குழுக்கள் பொதுத்துறை அலுவலர்களைத் தேர்ந்தெடுப்பதற்காகத் தேர்வுகளை நடத்த வேண்டும்.

2. கீழ்க்காணும் ஆலோசனைகள் நல்க வேண்டும்.

(அ) பொதுத்துறை அலுவல்களுக்கு நியமனம் செய்தல் பற்றியும் நியமன முறைகள் பற்றியும் ஆலோசனை அளிக்க வேண்டும்.

(ஆ) ஒரு துறையிலிருந்து மறு துறைக்கு நியமிப்பது பற்றியும் பதவி உயர்வு அளிப்பது பற்றியும் மாறுதல்கள் செய்வது பற்றியும் அறிவுரை வழங்க வேண்டும்.

(இ) ஒழுங்கு நடவடிக்கைகள் பற்றியும், அவற்றின் மீதான விண்ணப்பங்கள் பற்றியும் கருத்துரை அளிக்க வேண்டும்.

(ஈ) நீதி மன்றங்களில் தொடரப்பட்ட வழக்குகளுக்கு ஏற்பட்ட செலவுகளை அலுவலர்களுக்கு அளிப்பது பற்றிய யோசனை கூற வேண்டும்.

(உ) பணியாற்றும்போது ஏற்பட்ட ஊறுகளுக்கு நஷ்ட ஈடு வழங்குவதிலும், உதவித்தொகை வழங்குவதிலும் ஆலோசனை அளிக்க வேண்டும். அளிக்கப்பட வேண்டிய தொகையின் அளவு பற்றியும் தெரிவிக்க வேண்டும்.

3. பாராளுமன்றத்தாலும் மாநிலச் சட்டமன்றத்தாலும் ஆலோசனை நல்கஅதிகாரம் அளிக்கப்பட்டால் வேண்டப்படும் இதர ஆலோசனைகளையும் வழங்க வேண்டும்.

பாராளுமன்றமும் சட்டமன்றங்களும் தங்கள் அலுவலர்களின் நியமன விதிகளையும் பணிவிதிகளையும் வகுக்கலாம். குடியரசு தலைவர்களும் ஆளுநர்களும் விரும்பும் காலம் வரை அலுவலர்கள்

பதவி வகிப்பர். நியமனம் செய்த நிறுவனத்தைத் தவிர மற்ற வர்கள் அலுவலர்களைப் பதவியிலிருந்து நீக்க முடியாது. பதவியி லிருந்து நீக்கும்போது தற்காத்துக்கொள்ள அலுவலர்களுக்கு வாய்ப்பு நல்க வேண்டும்.

மத்திய ஆட்சித் துறையில் அயலுறவுகள், பாதுகாப்பு, தபால்தந்தி, இரும்புப் பாதை, சுங்கவரி, வருமான வரி ஆகிய பொதுத்துறை அலுவல் பிரிவுகள் உள்ளன. மாநில ஆட்சித் துறையில் கல்வி, காவல், வேளாண்மை, பொதுச்சுகாதாரம், நில வருவாய், உள்ளாட்சி ஆகிய பொதுத்துறை அலுவல் பிரிவுகள் உள்ளன. பொதுத்துறை உயர் அலுவலர்களான இந்திய ஆட்சித் துறையினர், இந்தியக் காவல் துறையினர் இந்திய அயல்நாட்டுத் துறையினர் ஆகியவர்களை மத்தியப் பொதுத்துறை அலுவல் தேர்வாணைக் குழு தேர்ந்தெடுக்கிறது.

பொதுத்துறை அலுவல்களின் நியமனத்தில் இனம், சமயம், ஜாதி, பால், பிறப்பிடம் ஆகியவைகளின் அடிப்படையில் வேறு பாடுகள் காட்டக் கூடாது [29] இருப்பினும் சமூகத்தில் பிற்பட்ட அட்டவணைச் சாதியினருக்கும், மலைச்சாதியினருக்கும், பிற்பட்ட வர்களுக்கும், ஆங்கிலோ இந்தியர்கள் போன்ற சிறுபான்மை யினருக்கும் நியமனத்தில் ஒதுக்கீடுகள் செய்யப்பட்டுள்ளன. மத்தியப் பொதுத்துறை அலுவல் தேர்வாணைக்குழுவால் நடத்தப் படும் தேர்வுகளில் போட்டியிடுவதற்கான பயிற்சிகள், பொருளா தாரத்திலும் சமூகத்திலும் பிற்பட்டவர்களுக்கு அரசாங்கச் செலவில் அளிக்கப்படுகின்றன. இதற்காக நிருவாகப் பயிற்சிக் கல்லூரிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

### பிரான்சில் பொதுத்துறை அலுவல்

பிரான்சிலும் இங்கிலாந்தைப் போல் பொதுத்துறை அலுவ லுக்கு நிரந்தர அங்கத்தினர் நியமிக்கப்படுகிறார்கள். 1945 ஆம் ஆண்டில் பொதுத்துறை அலுவலில் சீர்திருத்தங்கள் செய்யப் பட்டன. அலுவலர்களுக்குப் பயிற்சி அளிக்கத் தேசிய நிர்வாகப் பள்ளி அமைக்கப்பட்டது. ஆண்டிற்கு ஒரு முறை அலுவலர்

[29] Article 16 of Constitution of India: 'There shall be equality of oppotunity for all citizens in matters relating to employment or appointment to any office under the state; No citizen shall on grounds only of religion, race, caste, sex, descent, place of birth, residence or any of them, be ineligible for, or discriminated against in respect of any employment or office under the state.'

களின் நியமனங்களுக்காகப் போட்டித் தேர்வுகள் நடத்தப்படு கின்றன. திறமையின் அடிப்படையில் அலுவலர்கள் தேர்ந் தெடுக்கப்படுகின்றனர்.

**சோவியத் ரஷ்யாவில் பொதுத்துறை அலுவல்**

பொதுவுடைமைக் கொள்கை கடைப்பிடிக்கப்படுவதாலும் அரசாங்கம் பலதுறை நடவடிக்கைகளைக் கவனிக்க வேண்டியுள்ள தாலும் சோவியத் ரஷ்யாவில் ஏராளமான பொதுத்துறை அலு வலர்கள் இருக்கின்றனர். இவ்வலுவலர்களின் நியமனங்களைச் சம்பந்தப்பட்ட துறைகளே செய்கின்றன. பொதுத்துறை அலுவல் தேர்வாணைக்குழு ரஷ்யாவிலும் உண்டு. ஆனால் இது நியமனங் களைச் செய்வதில்லை. பொதுத்துறை அலுவல் அமைப்புகளையும் அதற்கான விதிகளையுமே வகுக்கிறது. அலுவல்களைத் தரப் படுத்துகிறது. சோவியத் ரஷ்யாவின் பொதுத்துறை அலுவலர்கள் பொதுவுடைமைக் கட்சியைச் சார்ந்தவர்களாகவே இருக்கிறார்கள். பொதுவுடைமைக்கட்சி அலுவலர்களின் நடவடிக்கைகளைக் கண் காணிக்கிறது.

## முக்கிய வினாக்கள்

1. பொதுத்துறை அலுவல் அமைப்பையும் பணிகளையும் நியமன முறைகளையும் கூறுக.
2. தற்காலப் பொதுத்துறை அலுவலின் நிறை குறைகள் யாவை?
3. உலக நாடுகள் சிலவற்றின் பொதுத்துறை அலுவல் அமைப்பைக் கூறுக.
4. பிரிட்டன், பிரான்சு, அமெரிக்கா ஆகிய மூன்று நாடு களில் உள்ள ஆட்சித்துறை முறைகளை ஒப்பிடுக. (செ. ப. ஏப்ரல், 1969)
5. தற்கால அரசாங்கங்களில் 'அரசாங்க ஊழியர்களின்' பங்கையும் முக்கியத்துவத்தையும் விளக்குக. (செ. ப. க செப்டம்பர், 1973)

# 12. நீதித் துறை

(Judiciary)

**நீதித்துறையின் பணிகள்:** நீதி வழங்கல் — சட்ட விளக்கம் அளித்தல்—உரிமைகளின் காவலன்—அரசியலமைப்பின் காவலன்—நீதிவிசாரணைக்குழு—சட்டமியற்றல் - ஆலோசனை கூறுதல்—நிருவாகப் பணிகள்.

**நீதித்துறையின் சுதந்திரம்:** பதவியடையும் முறை—மக்களால் தேர்ந்தெடுக்கப்படுதல் — சட்டமன்றங்களால் தேர்ந்தெடுக்கப்படுதல்—செயல்துறையினரால் நியமிக்கப்படுதல் — நீதிபதிகளின் பதவிக்காலம் — நீதிபதிகளின் பணிப்பாதுகாப்பு — நீதிபதிகளின் ஊதியம் — நீதிபதிகளின் தகுதிகள்—நீதித்துறையைப் பிரித்தல்.

**சட்டத்துறை, செயல்துறைகளுடன் நீதித்துறையின் தொடர்பு:** நீதித்துறையும் சட்டத்துறையும் — நீதித்துறையும் செயல்துறையும்.

**நீதிப் புனராய்வு:** நீதிப்புனராய்வின் விளக்கம் — நீதிப்புனராய்வின் இலக்கணம் — நீதிப்புனராய்வின் தோற்றம்—சில நாடுகளில் நீதிப்புனராய்வு—அமெரிக்க ஐக்கிய நாடுகள் — இந்தியா—இங்கிலாந்து—நீதிப்புனராய்வின் நிறைகுறைகள் — நிறைகள் — குறைகள்.

**சில நாடுகளில் நீதித்துறை:** அமெரிக்க ஐக்கிய நாடுகள்—இந்தியா—இங்கிலாந்து.

**சட்டத்தின் ஆட்சி:** டைசியின் கருத்து — சட்டத்தின் ஆட்சியின் வரையறை.

**ஆட்சித்துறைச் சட்டம்:** ஆட்சித்துறைச் சட்டத்தின் தோற்றம்—ஆட்சித்துறைச் சட்டத்தின் இலக்கணம்—டைசியின் கருத்து—ஆட்சித்துறைச் சட்டத்தின் நிறைகள் — ஆட்சித்துறைச் சட்டத்தின் குறைகள் —

ஆட்சித்துறைச் சட்டத்தின் ஏற்புடைமை — ஒப்பீட்டு அட்டவணை.

அரசாங்கத்தின் முப்பெரும் நிறுவனங்களில் ஒன்ருன நீதித் துறை குடியாட்சி நாட்டில் மிக முக்கியமானதாகும். சமத்துவமும் சுதந்திரமும் சட்ட ஏடுகளில் இருந்தால் மட்டும் போதாது. அவைகள் தனி நபர்களிடையே செயல்துறையினரால் நடைமுறைப்படுத்தப்பட வேண்டும். முக்கியமான இப்பணியைக் கண்காணிப்பது நீதித் துறையாகும். பேராசிரியர் பிரைஸ் (Bryce) அவர்களின் கருத்துப்படி, நீதித்துறையின் நேர்மையே ஓர் அரசாங்கத்தின் உயர்வைக் காட்டும் அளவுகோலாகும். உரிமைகளைத் தீர்மானித்தும், தண்டித்தும், நிரபராதியைக் காத்தும் நீதித்துறை பெரும் பணியாற்றுகிறது.[1] ஹென்றி சிட்விக்கின் (Henry Sidwick) கூற்றுப்படி, அரசியல் சமுதாயத்தில் நீதித்துறையின் பணிகள் சிறப்புடையது மட்டுமன்று, ஏராளமானதுமாகும்.[2] நீதியின் ஜோதி அணைந்துவிட்டால் எங்கும் அருள் நீங்கி இருள் நிலவும் என்று பிரைஸ் கூறுகிருர்.[3] தற்காலத்தில் சாதாரண ஒரு குடிமகனின் நலனும் பாதுகாப்பும் நீதி நிருவாகத்தின் திட்டவட்டமான நேர்மையில் அடங்கியுள்ளன. குடியாட்சி நாட்டில் நீதித்துறையானது எண்ணிறந்த முக்கியப் பணிகளை ஆற்றுகின்றது.

## நீதித்துறையின் பயன்கள்

பேராசிரியர் கில் கிரைஸ்ட் (Gil Christ) கருத்துப்படி, 'நடைமுறையிலிருக்கும் சட்டத்தைத் தனி வழக்குகளில் செயல்படுத்தும் அரசாங்க அலுவலர்கள் நீதித்துறையினர் எனப்படுகின்றனர். ஒரு சட்டம் நல்லதா தீயதா என்பதை நீதிபதிகள் ஆராய வேண்டியதில்லை. சட்டத்தை ஒட்டி நீதி வழங்குவதே இவர்களது கடமையாகும். சட்ட வாசகத்திற்கு விளக்கம் கூறுபவராகவும் நீதிபதி இருக்கிருர். சட்ட ஆக்கத்தின் போது பின்வரக்கூடிய எல்லா வழக்குகளையும் எதிர்பார்த்துச் சட்டஞ் செய்ய இயலுவதில்லை. ஒரு வழக்கைத் தீர்ப்பதற்கு நேரடியான சட்டம் இல்லா

[1] Bryce : 'There is no better test of excellence of a government than the efficiency if its judicial system, for nothing more touches the welfare and security of the average citizen than his sense that he can rely on the certain and prompt administration of justice'.

[2] Henry Sidwick : 'The importance of the judiciary in political construction is rather profound than prominent'.

[3] Bryce : 'If the law be dishonestly administered the salt has lost its, flavour, if it be weakly and fitfully enforced, the guarantees or order fail, for it is more by the certainty than by the severity of punishment that offenders are repressed. If the lamp of justice goes out in darkness, how great is that darkness.'.

விடினும் நீதிபதிகள் வழக்கிற்குத் தீர்ப்புக் கூறவேண்டியவர்களாக இருக்கிறார்கள். இப்படிப்பட்ட வழக்குகள் குறிப்பிட்ட கோட்பாடுகளின் அடிப்படையில் தீர்க்கப்படுகின்றன. நியாய உணர்வின் வழியிலோ பொது அறிவின் வழியிலோ இவ்வழக்குகள் தீர்க்கப்படும்போது அவைகள் முன்சான்றுகளாக மாறிவிடுகின்றன. அவைகள் பின்வரும் வழக்குகளில் நீதிபதிகளால் கையாளப்படுகின்றன. இவ்விதமாக நீதிபதிகள் சட்டத்தை இயற்றுபவர்களாகவும் சட்டத்திற்கு விளக்கம் கூறுபவர்களாகவும் அமைகின்றனர்.[4]

**நீதி வழங்குதல்**

நீதிமன்றங்களின் முக்கியப் பணி நீதி வழங்குதல் ஆகும். தங்கள் முன் வரும் வழக்குகளுக்கு நீதி வழங்குதல் நீதிநிருவாகம் எனப்படுகிறது. தனி நபர்களிடையே தோன்றும் வழக்குகளுக்கும் நீதி வழங்கப்பட வேண்டும். நீதி வழங்குவதில் சட்டங்கள் அடிப்படையாகக் கொள்ளப்பட வேண்டும். வழக்குகளை விசாரிப்பதற்கும், தீர்ப்பு வழங்கப்படுவதற்கும் நடைமுறை விதிகள் உள்ளன.

வழக்குகளைத் தீர்ப்பதில் பல படிகள் கையாளப் படுகின்றன. வழக்கின் சூழ்நிலைகளை ஆய்வு செய்ய வேண்டும். செய்திகளைத் திரட்ட வேண்டும். சாட்சியங்களை விசாரிக்க வேண்டும். சாட்சியங்களில் வாய்மொழிச் சாட்சியம், ஆவணச் சாட்சியம் என இரு வகைகள் உண்டு. விவாதங்களும் எதிர்வாதங்களும் பரிசீலிக்கப்படவேண்டும். இவைகளின் பின் சம்பந்தப்பட்ட சட்ட விதிகளின்படி தீர்ப்பு வழங்கப்படவேண்டும்.

வழக்குகளில் உரிமை வழக்குகள் என்றும் குற்ற வழக்குகள் என்றும் வகைகள் உள்ளன. உரிமை வழக்குகளில் பாதிக்கப்பட்ட உரிமையானது மீட்கப்படுகிறது. ஈடுசெய்யும் பொறுப்பைக் குற்றவாளி ஏற்க வேண்டும். குற்ற வழக்குகளில் குற்றவாளி

[4] Gilchrist: 'The term Judiciary is an Americanism used to designate those officers of government whose function it is to apply the existing laws to individual cases. To a judge it is a matter of no importance whether in his opinion the law is good or bad; his duty is to apply it He is primarily an interpreter of law. No law, however, when it is made, can possibly foresee all the cases that may arise under it, and frequently judges have to decide cases in which no direct law is applicable, such cases are decided on various principles, such as equity or commonsense, and thus what is known as precedents are formed. Those precedents are followed by other judges in similar cases. In this way judges are law-makers as well as interpreters of law.'

தண்டிக்கப்படுகிறார். வழக்குகளை விசாரித்து நீதி வழங்குவது நீதிமன்றங்களின் தலையாய கடமையாகும்.

### சட்ட விளக்கம் அளித்தல்

• இயற்றப்பட்ட சட்டம் தெளிவற்றதாகவும், ஐயப்பாடுகளைத் தோற்றுவிப்பதாகவும் அமையலாம். பொருள் மயக்கம், சொல் மாறுபாடு, கருத்து முரண்பாடு ஆகியன எழுதப்பட்ட சட்டங்களில் தோன்றுதல் இயல்பேயாகும். இந்தச் சூழலில் ஐயப்பாடுகள் தீர்க்கப்படவேண்டும்; தெளிவுபடுத்தப்படவேண்டும். ஆனால், இந்த ஐயப்பாடுகளைத் தீர்க்கச் சட்டங்கள் செய்த சட்டசபைகளை அணுக இயலாது. நீதிமன்றங்களையே அணுக வேண்டும். நீதிமன்றங்கள் சட்டத்திற்கு விளக்கம் அளித்து ஐயப்பாடுகளை அகற்றுகின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றமும் இந்தியத் தலைமை நீதிமன்றமும் சாதாரணச் சட்டங்களுக்கும் அரசியலமைப்புச் சட்டங்களுக்கும் விளக்கம் அளிக்கின்றன.

### உரிமைகளின் காவலன்

மக்கள் தங்கள் உரிமைகள் பிறரால் பறிக்கப்பட்டாலோ அல்லது பறிக்கப்படலாம் என்று கருதினாலோ நீதிமன்றங்களில் முறையீடு செய்யலாம். உரிமைகள் பறிக்கப்படுவதைத் தடுத்து நிறுத்தி நீதிமன்றங்கள் தடை ஆணைகள் (Injunction) பிறப்பிக்கும். தடை ஆணைகளுக்குப் பணியாதவர்கள் நீதிமன்றத்தை அவமதித்தவர்களாகக் கருதப்பட்டுத் தண்டிக்கப்படுவர். நீதிமன்றங்கள் நீதிப்பேராணை(Writ) மூலம் மக்களின் உரிமைகளைக் காக்கின்றன. தனிநபரின் ஆக்கிரமிப்பிலிருந்தும் அரசாங்கத்தின் ஆக்கிரமிப்பிலிருந்தும் உரிமைகள் காக்கப்படுகின்றன.

### அரசியலமைப்பின் காவலன்

நீதிமன்றங்கள் அரசியலமைப்புச் சட்டத்தின் காவலனாகவும் பணியாற்றுகின்றன. அரசியலமைப்புச் சட்டங்கள் அடிப்படைச் சட்டங்களாகக் கருதப்படுகின்றன. அடிப்படையுரிமைகளின் பிறப்பிடமாக உள்ளன. மேலும், கூட்டாட்சி நாடுகளில் மாநிலங்களின் உரிமைகளையும் அரசியலமைப்பில் காணலாம். எனவே, அரசியலமைப்புப் புனிதமானதாகவும், நாட்டின் உன்னதச் சட்டமாகவும் கருதிக் காக்கப்படுகின்றது. அரசியலமைப்பிற்கு முரணான சட்டங்கள் இயற்றப்படும்போது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றமும் இந்தியாவின் தலைமை நீதிமன்றமும் நீதிப்புனராய்வின் வழி அச்சட்டங்களை அரசியலமைப்பிற்கு முரண்பட்டதெனக் கூறிச் செல்லத்தகாதனவாக்குகின்றன. அமெ

ரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிபதி ஹக்ஸ் (Hughes) கூறுவ தாவது, 'நாங்கள் அரசியலமைப்பால் ஆக்கப்பட்டவர்கள். ஆனால், நீதிபதிகள் கூறுவதே அரசியலமைப்பாகும்.'

**நீதி விசாரணைக்குழு**

அரசாங்க அலுவலர்கள் மீதோ அல்லது அமைச்சர்கள்மீதோ சாட்டப்படும் குற்றங்களை விசாரிக்க ஒரு நீதிபதியோ அல்லது பல நீதிபதிகளோ அடங்கிய விசாரணைக் குழுக்கள் நியமிக்கப்படலாம். செய்தனவற்றையும் செய்யத் தவறியனவற்றையும் நீதிபதிகள் விசாரித்துத் தீர்ப்பை அறிக்கையாகச் சமர்ப்பிப்பார்கள்.

**சட்டமியற்றல்**

பேராசிரியர் லாஸ்கியின் கூற்றுப்படி, நீதிமன்றங்கள் சட்டங் களை ஆய்கின்றன. ஆய்தலின்போது சட்டங்களை இயற்று கின்றன.[5] தன் முன் வரும் வழக்குகளுக்கு நீதிமன்றங்கள் நீதி பகரக் கடமைப் பட்டனவாகும். ஆனால் சில நேரங்களில் குறிப் பிட்ட வழக்கிற்குச் சட்டத்தின் துணைகொண்டு நீதிகூற இயலாத நிலையிருக்கும். இது சட்டத்தின் குறையால் நிகழ்வதாகும். நீதி, நியாயம், நேர்மை, ஆகியவைகளின் அடிப்படையில் நீதிபதிகள் தாங்களே ஒரு கொள்கையை வகுத்து நீதி கூறுகின்றனர். சட் டத்தில் இடம் இல்லாதபோது ஒரு கொள்கையைத் தோற்று வித்து நீதிகூறுதலின் மூலம் நீதிபதிகள் சட்டஞ்செய்கின்றனர். நீதிபதிகள் சட்டமியற்ற வேண்டும் என்று நீதிபதி ஹால்ம்ஸ் (Justice Holmes) கூறுகிறார்.[6] இங்கிலாந்தில் இவ்விதச் சட்டங் களுக்குத் தீர்ப்பு வழிச் சட்டங்கள் (Case Law) என்றும், நீதித் தீர்ப்புகளை அடிப்படையாகக் கொண்ட சட்டம்(Judge Made Law) என்றும் பெயர். தீர்ப்பு வழிச் சட்டம் பின்வரும் இதே போன்ற வழக்குகளிலும் பின்பற்றப்பட்டு முன்சான்றாக(Precedent)ஆகிறது. டைசியின் (Dicey) கூற்றுப்படி, முன்சான்றாகப் பின்வரும்வழக்கு களில் தீர்ப்புக்கூறுவதற்கு விதியாக அமைந்து சட்டமாகிறது.[7]

சட்டங்களுக்கு விளக்கம் கூறும்போதும் நீதிபதிகள் சட்டஞ் செய்கின்றனர். பொதுவாகச் சட்டங்களில் பரந்த எல்லைக்கோடு

[5] Laski: 'The courts find the law, but in firding it the court also makes it'

[6] Justice Holmes: 'Judges do and must legislate'.

[7] Dicey : 'The adhesion by our judges to precedent, that is thier habit of deciding one case in accordance with the principle, or supposed principle which governed a former case, leads inevitably to the gradual formation by, the courts of fixed rules for decision, which are in effect laws'.

களே காட்டப்பட்டுள்ளன. அவைகளை நிரப்புவதில் நீதிமன்றங்களுக்கும் பங்குண்டு. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பிற்குத் தலைமை நீதிமன்றம் விளக்கமளித்து அரசியலமைப்புச்சட்டத்தின் உட்பொருளை வளர்த்துள்ளது. எடுத்துக்காட்டாக வாணிபம் என்ற சொல்லுக்குத் தலைமை நீதிமன்றம் நூற்றுக்கணக்கான பொருள் கூறியுள்ளது. எனவே, தீர்ப்பு வழி மூலமும், விளக்கத்தின் மூலமும் நீதிமன்றங்கள் சட்டமியற்றுகின்றன.

### ஆலோசனை கூறுதல்

ஆலோசனை நல்கும் பணியையும் நீதிமன்றங்கள் செய்கின்றன. இந்தியக் குடியரசு தலைவர் அரசியலமைப்பு முக்கியத்துவம் வாய்ந்த சட்டங்களின் மீது தலைமை நீதிமன்றத்தின் ஆலோசனையைக் கோரலாம். இங்கிலாந்து அரசியாரும் சட்டப்பிரச்சினைகள் பற்றிப் பிரிவிக்கவுன்சிலின் அபிப்பிராயத்தைக் கேட்கலாம் நீதிமன்றங்கள் சட்டத்தின் மீதான தங்கள் கருத்தையும் ஆலோசனையையும் அளிக்கும்.

### நிருவாகப் பணிகள்

தலைமை நீதிமன்றமும் உயர்நீதிமன்றங்களும் தங்கள் அலுவலர்களை நியமித்துக் கொள்கின்றன. இவர்களின் பணிகளை ஒழுங்குபடுத்துவதும், தகுதிகாண் பருவம் முடித்தலும், விடுப்பு வழங்குதலும், ஊழிய விதிகளை வகுப்பதுமான நிருவாகச் செயல்களையும் செய்கின்றன. மேலும், திருமணங்களை நீதிமன்றங்கள் நடத்துகின்றன.

சிறுவர்களின் சொத்தை நிருவாகம் செய்வதற்காக நீதிமன்றங்கள் நிர்வாகிகளை நியமிக்கின்றன. சொத்துரிமை தீர்மானிக்கப்படும் வரை பிணக்குகள் உள்ள சொத்துக்களின் நிர்வாகத்தை நீதிமன்றங்கள் ஏற்கின்றன. தேர்தல் வழக்குகளில் நீதி கூறும் பொறுப்பும் மேல்முறையீடுகளின் வழி நீதிமன்றங்களுக்கு வருகின்றன.

## நீதித்துறையின் சுதந்திரம்

வல்லாட்சி நாட்டில் சர்வாதிகாரத்திலிருந்து பாதுகாப்பளிக்கவும், தனி மனிதனின் உரிமைகளைக் காக்கவும் நீதித்துறை சுதந்திரமாக இயங்கவேண்டும். அதே போலக் குடியாட்சி நாட்டிலும் உரிமைகள் பறிபோகும் சூழ்நிலையும், உரிமைகள் காக்கப்படவேண்டிய அவசியமும் ஏற்படுகின்றன. எனவே, நீதித்துறையின் சுதந்திரமும் அவசியமாகிறது. பெரும்பான்மையோரது

ஆட்சியே குடியாட்சியாகும். இப்பெரும்பான்மையார் சிறுபான்மையினரது உரிமைகளைப் பறிக்கலாம். வல்லோர் எளியோர் மீது ஆதிக்கம் செலுத்தலாம். இவைகளைத் தடுத்து உரிமைகளைப் பாதுகாக்க நீதித்துறையின் சுதந்திரம் அவசியமாகிறது.

நீதிபதிகள் மக்கள் உரிமைகளைக் காக்கக் கூடியவர்களாக இருப்பதால் சுதந்திரமாகச் செயல்படக் கூடியவர்களாகவும், நேர்மையுடையவர்களாகவும், துணிந்தவர்களாகவும், சாய்வற்றவர்களாகவும், அறிவுக் கூர்மையுடையவர்களாகவும், கற்றுத் தேர்ந்தவர்களாகவும், சட்ட ஞானம் படைத்தவர்களாகவும், சட்ட வாசகத்தையும், சட்டத்தின் உயிர்ப்பையும் மதித்துக் காப்பவர்களாகவும் இருக்க வேண்டும். பெரும்பான்மையினருக்கு எதிராகச் சிறுபான்மையினரின் உரிமையைக் காக்க வேண்டும். அரசாங்கத்திற்கெதிராகத் தனி மனிதனின் உரிமையைப் பேண வேண்டும். அச்சமின்றியும் சாய்வின்றியும் செயலாற்றவேண்டும். மக்களின் நம்பிக்கையைப் பெற வேண்டும். இவைகளுக்கெல்லாம் நீதித்துறையின் சுதந்திரம் அவசியமாகும். நீதித்துறை சுதந்திரமற்றதாகச் சார்புடையதாகவிருந்தாலோ, அதிகாரமில்லாது சக்தியற்றிருந்தாலோ நீதியின் நேர்மை குன்றும். எனவே, நீதித்துறையின் சுதந்திரம் எல்லா நாடுகளிலும் எல்லோராலும் வற்புறுத்தப்படுகிறது. நீதித்துறையின் சுதந்திரத்தை அடையும் வழிவகைகளைக் காணலாம்.

### பதவியடையும் முறை

நீதித்துறையின் சுதந்திரத்தில் நீதிபதிகளின் நியமனமுறை மிகுந்த ஆதிக்கமுடையதாகும். அரசியல் கட்சிகளின் தலையீடு இன்றியும், சட்டத்துறையில் தேர்ந்த அறிவுடையவர்கள் நீதிபதிகளாக நியமிக்கப்பட வேண்டும். மேலும் நீதிபதிகளின் நேர்மை, நாணயம், சார்பின்மை ஆகியவைகளும் நியமனத்தின்போது கவனம்பெறவேண்டும். நீதிபதிகளை நியமிப்பதில் மூன்றுமுறைகள் கையாளப்படுகின்றன. முதலாவது, நீதிபதிகள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுதல்; இரண்டாவது சட்டமன்றங்களால் தேர்ந்தெடுக்கப்படுதல்; மூன்றாவது, செயல்துறையினரால் தேர்ந்தெடுக்கப்படுதல் அல்லது நியமிக்கப்படுதல்.

### மக்களால் தேர்ந்தெடுக்கப்படுதல்

சுவிட்ஸர்லாந்து கோட்டங்களிலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சில மாநிலங்களிலும் நீதிபதிகள் மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மக்களால் நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்படும் முறை முதன் முதலில் பிரான்சு நாட்டில் ஆரம்பிக்

கப்பட்டது. மக்களின் இறைமையைக் காட்டுவதற்காகவும், அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டைக் கடைப்பிடிப்பதற்காகவும் நீதிபதிகளை நேரடியாகத் தேர்ந்தெடுக்கும் முறை புகுத்தப் பட்டது.

நீதிபதிகளை மக்கள் நேரடியாகத் தேர்ந்தெடுப்பதில் பல குறைகள் தோன்றுகின்றன. நீதிபதிகளுக்குச் சட்ட நுண்ணறிவும், நேர்மையும், நாணயமும் அவசியமாகும். இதன் அடிப்படையிலேயே இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இதைப் பொதுமக்கள் அறியார்கள். திறமையுடையவர்கள் நீதிபதிகள் தேர்தலில் தோல்வியடைவதும், திறமையற்ற, ஆனால் மக்களிடம் செல்வாக்குடைய நீதிபதிகள் தேர்தலில் வெல்வதும் நிகழும். நீதிபதிகள் தேர்தலில் போட்டியிடும் போது அரசியல்வாதிகளாகி விடுகின்றனர். அரசியல் கட்சிகளின் செல்வாக்குத் தேர்தலில் ஆதிக்கம் கொள்ளும். குறுகிய காலத்திற்கு நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்படுதலும் நல்லதல்ல. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நீதிபதி மறுதேர்தலிலும் தாம் வெற்றி பெறத் திட்டமிடுவார். நீதியின் நேர்மை குன்றும். சட்டப்படியான நீதி நிருவாகம் இருக்காது. பேராசிரியர் லாஸ்கியின் (Laski) கருத்துப்படி, 'நியமன முறைகள் எல்லாவற்றிலும் மக்களால் தேர்ந்தெடுக்கப் படும் முறை மோசமானதாகும்.'[8]

## சட்டமன்றங்களால் தேர்ந்தெடுக்கப்படுதல்

சட்டமன்றங்களால் நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்படுதல் சுவிட்ஸர்லாந்தின் சில கோட்டங்களிலும், சோவியத் ரஷ்யாவிலும் காணப்படுகின்றன. சட்டமன்றங்களால் நீதிபதிகள் தேர்ந்தெடுக்கப்படும் போது அரசியல் கட்சிகளின் தலையீடு தோன்றும். சட்டமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியான ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களே நீதிபதிகளாக நியமனம் பெறுவர். இது நீதியின் நேர்மையைக் குறைக்கும். மேலும் பொருத்தமான, திறமையுடைய, நாணயமான நீதிபதிகளைச் சட்டமன்ற உறுப்பினர்கள் தேர்வு செய்வது கடினமான காரியமாகும். சட்டமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட நீதிபதிகள் அரசியலில் நாட்டம் காட்டும் போது சாய்வுடையவர்களாகின்றனர். இம்முறைத் தேர்தலில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு தோல்வியுறுகிறது. சட்டமன்றத்திலிருந்து சுயேச்சையாக இருக்க வேண்டிய நீதிபதிகள் சட்டமன்றச் சார்பாளர் ஆகிவிடுகின்றனர். சட்டமன்றத்தின்

[8] Laski: 'Of all the methods of appointment, that of election by the people at large is without exception the worst.'

ஆதிக்கத்திற்கு உட்பட்டவர்களாகவே இருப்பர். நீதித்துறையில் சட்டமன்றத்தின் தலையீடு தோன்றும். நீதித்துறையின் சுதந்திரம் பாதிக்கப்பட்டு மக்களின் உரிமைகள் பறிபோகும்.

**செயல்துறையினரால் நியமிக்கப்படல்**

நீதிபதிகள் செயல்துறையினரால் நியமிக்கப்படுதலே சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. உலக நாடுகளில் பெரும்பான்மையான நாடுகள் நீதிபதிகளின் இம்முறை நியமனத்தையே கையாளுகின்றன. சட்டத்துறையில் தேர்ந்த அனுபவம் உடையவர்களையும், நாணயம் உடையவர்களையும் செயல்துறையினர் நியமனம் செய்யலாம். நீதிக்குழுவின் பரிந்துரையின் பேரில் செயல்துறையினர் நீதிபதிகளை நியமிப்பது சிறப்புடையதாகும். பேராசிரியர் லாஸ்கியின் (Laski) கருத்துப்படி, நீதிபதிகளடங்கிய நிலையான குழுவின் இசைவின் பேரிலும், நீதித்துறை அமைச்சரின் பரிந்துரையின் பேரிலும் செயல்துறைத் தலைவர் நீதிபதிகளை நியமனம் செய்யவேண்டும்.[9]

வழக்குரைஞர்களாகக் குறிப்பிட்ட காலம் பணியாற்றியவர்களும் திறமையின் அடிப்படையில் நியமனம் பெறுகின்றனர். தலைமை நீதிமன்ற நீதிபதிகளும் உயர்நீதிமன்ற நீதிபதிகளும் நியமனமுறையிலும், கீழ்நீதிமன்றங்களின் நீதிபதிகள் அரசாங்கப் பணியாளர் தேர்வாணைக் குழுவால் தேர்ந்தெடுக்கப்பட்டும் பதவியை அடைகிறார்கள். பதவியுயர்வின் வழியும் நீதிபதிகள் நியமனம் பெறுகின்றனர்.

இந்தியாவில் தலைமை நீதிமன்றத்தின் நீதிபதிகளும் உயர் நீதிமன்றத்தின் நீதிபதிகளும் தலைமை நீதிபதிகளின் பரிந்துரையின் பேரில் குடியரசு தலைவரால் நியமிக்கப்படுகிறார்கள். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் செனட்டின் இசைவின் பேரில் குடியரசு தலைவர் நீதிபதிகளை நியமிக்கிறார். இங்கிலாந்தின் தலைமை அமைச்சரும் சான்சலர் பிரபுவும் நீதிபதிகளின் நியமனத்திற்குப் பரிந்துரைக்கின்றனர். செயல்துறையினரால் நீதிபதிகள் நியமிக்கப்படுதல் சிறப்புடைய முறையாகக் கருதப்படுகிறது.

**நீதிபதிகளின் பதவிக்காலம்**

நீதித்துறையின் சுதந்திரம் நீதிபதிகளின் பதவிக்காலத்தையும் பொறுத்தே அமைகிறது. குறுகிய பதவிக்காலமாக இருந்

[9] Laski: 'All judicial appointments should be made, 'on the recommendation of the Minister of Justice, with the consent of standing committee of the Judges, which would represent all sides of their work.'

தால் நீதிபதிகள் நேர்மையுடனும், சார்பற்றும், சுதந்திரமாகவும் செயல்பட இயலாது. சுவிஸ் நாட்டின் கோட்டங்களிலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மாநிலங்களிலும் நீதிபதிகளின் பதவிக் காலம் குறுகியதாக உள்ளது. ஆனால், இவர்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படலாம்.

நீதிபதிகளின் நீண்ட பதவிக்காலம் நீதித்துறையின் சுதந்திரத்திற்கும், சார்பின்மைக்கும் வழி கோலும். இருப்பினும் நேர்மையற்ற நீதிபதிகள் நீண்ட காலம் பதவியிலிருக்க நேரிடும். நீண்டகாலப் பணிப்பாதுகாப்பு இருக்கும் போது நீதிபதிகளின் நேர்மை குன்றும். சட்டவிதிகளைப் புறக்கணித்தும் செயல்படுவர். எனவே, தடையில்லா நீண்ட பதவிக்காலமும் சிறப்புடையதன்று.

நீதிபதிகளுக்கு நன்னடத்தையும் திறமையும் இருக்கும் வரையில் நீண்ட பதவிக்காலம் அளிப்பதே சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. அமெரிக்க அரசியல் வல்லுநர் அலெக்ஸான்டர் ஹாமில்டன் (Alexander Hamilton) கருத்துப்படி நன்னடத்தை முறையில் நீதிபதிகளின் பதவிக்காலத்தைத் தீர்மானிப்பது தற்கால அரசாங்க முறையில் ஏற்பட்ட சிறந்த முன்னேற்றமாகும். முடியாட்சி நாட்டில் அரசனின் கொடுங்கோன்மையையும், குடியாட்சி நாட்டில் பிரதிநிதிகளின் ஆக்கிரமிப்பையும் நிலையான, நேர்மையான, சார்பற்ற நீதிநிருவாகத்தால் சிறப்பாகத் தடுக்க இயலும்.[10]

நீதிபதிகள் நீண்ட காலம் பதவியிலிருக்கும்போது சட்ட நுணுக்கங்களையும், முன்தீர்ப்பு முறைகளையும் நன்கு அறிய இயலும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நீதிபதிகள் வாழ்நாள் முழுவதும், இந்தியாவில் அறுபத்தைந்து வயது வரையிலும் பதவி வகிக்கின்றனர். ஆனால் தவறு செய்யின் அரசத்துரோகக் குற்றம் சாட்டிப் பதவியினின்றும் விலக்கப்படுவர்.

**நீதிபதிகளின் பணிப் பாதுகாப்பு**

நீதிபதிகள் சுதந்திரமாகப் பணியாற்றுவதற்கும், சார்பின்றிச் செயலாற்றுவதற்கும் அவர்களது பணிப்பாதுகாப்பு அவசியமாகும்.

[10] Alexander Hamilton: 'The standard of good behaviour for the continuance in office of the judicial magistracy is certainly one of the most valuable of the modern improvements in the practice of government. In a monarchy, it is an excellent barrier to the despotism of the prince; in a republic, it is no less excellent barrier to the encroachments and oppressions of the representative body. And it is the best expedient which can be devised in any government to secure a steady, upright and impartial administration of the laws.'

ஆட்சியாளருக்கு எதிராகவும், அதிகார வர்க்கத்திற்கு எதிராகவும், பெரும்பான்மையினருக்கு எதிராகவும் நீதிபதிகள் தீர்ப்புக்கூற வேண்டிவரும். தங்களை நியமனம் செய்தவர்களுக்கு எதிராகவும் தீர்ப்புகள் அமையலாம். இந்தச் சூழ்நிலைகளில் பணிப்பாதுகாப்பு இருந்தால் தான் நீதிபதிகள் சுதந்திரமாக நீதி கூற இயலும்.

நீதிபதிகளை எளிதில் நீக்க முடியாமையும் நியமித்தவர்கள் நீதிபதிகளை நீக்க இயலாமையும், நீதிபதிகளை நீக்கத் தனிமுறையும், நீதிபதிகள் மீது குற்றம் சாட்டுபவர் ஒருவராகவும், அதை விசாரிப்பவர் மற்றொருவராக அமைவதும் நீதிபதிகளின் பணிப் பாதுகாப்பை ஏற்படுத்துகின்றன. பாராளுமன்றத்தின் கீழவை குற்றம் சாட்டுவதையும் அதை மேலவை விசாரிப்பதையும் நாம் காணலாம்.

இந்தியாவில் நன்னடத்தையின்மைக்காகவும், திறமையின்மைக்காகவும் நீதிபதிகள் நீக்கப்படலாம். பாராளுமன்றத்தின் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையினரும், வந்திருந்து வாக்களிப்பவர்களில் மூன்றில் இரண்டுபங்கினரும் நீதிபதிகளின் விலக்கத்திற்கு ஆதரவாக வாக்களிக்க வேண்டும். அப்போதுதான் நீதிபதிகளை நீக்க இயலும். அரசியலமைப்புத் திருத்தத்திற்கு ஒப்பான கடினமுறை நீதிபதிகளின் நீக்கத்திற்கு வகுக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். இங்கிலாந்தில் லஞ்ச ஊழலிற்காகவும், நெறிமுறை தவறியதற்காகவும் நீதிபதிகள் நீக்கப்படலாம். பாராளுமன்றத்தின் இணைப்புக் கூட்டத்தில் நீதிபதிகளை விலக்குவதற்கான தீர்மானம் நிறைவேற்றப்பட்டால் அரசியார் நீதிபதிகளை விலக்குவார். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நீதிபதிகள் விலக்கப்படுவதற்குப் பிரதிநிதிகள் சபையில் அரசத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டு செனட்டில் விசாரிக்கப்பட வேண்டும். குற்றம் சாட்டும் அவைக்கு விசாரிக்கும் உரிமையும், விசாரிக்கும் அவைக்குக் குற்றம் சாட்டும் உரிமையும் இல்லை. சில நாடுகளில் மீட்புரிமை (Recall) மூலம் நீதிபதிகள் நீக்கப்படுகின்றனர். இம் முறையில் நீதித்துறையில் சுயேச்சை காணல் அரிது. ஸ்ட்ராங் (Strong) அவர்களின் கருத்துப்படி, முறைமைக்குட்பட்ட அரசுகளில் ஆளப்படுவோரின் உரிமைகள் பணிப்பாதுகாப்புடைய நீதிபதிகளால் காக்கப்படுகின்றன.[11]

[11] C. F. Strong : 'Thus are the ultimate rights of the governed in the most Constitutional states dcubly secured, since the judges, on who moargely rests in the last reslrt the guarantee of those rights, are not appointed by a process in which the notorious silkness of democracies plays any part, and they given a security of tenure which raises them above the exigencies of political expediency'

**நீதிபதிகளின் ஊதியம்**

நீதிபதிகளின் ஊதியம் கவர்ச்சியுடையதாகவும் உறுதியுடையதாகவும் இருந்தால்தான் நீதித்துறையின் சுதந்திரம் காக்கப்படும். நீதிபதிகள் நேர்மையிலிருந்து வழுவமாட்டார்கள். கவர்ச்சிகரமான ஊதியம் திறமையுடையவர்களைக் கவரும். நீதிபதிகளின் பதவிக்காலத்தில் அவர்களின் ஊதியமோ அவர்களுக்கு அளிக்கப்பட்ட சலுகைகளோ குறைக்கப்படக் கூடாது. இந்திய அரசியலமைப்பின்படி தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதிக்கு ரூபாய் ஐயாயிரமும், இதர நீதிபதிகளுக்கு நான்காயிரமும் ஊதியமாக வழங்கப்படுகிறது. ஓய்வுக் கால ஊதியமும் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

**நீதிபதிகளின் தகுதிகள்**

நீதிபதிகள் உயர்தகுதிகளும் அவர்களைச் சுயேச்சையுடையவர்களாக்கும். சட்டநுணுக்கத்திலும் சட்டத்திற்கு விளக்கம் அளிப்பதிலும், நீதிநிருவாகம் செய்வதிலும், தனிக்கருத்துக்களை உருவாக்குவதிலும் நீதிபதிகள் தலைசிறந்தவர்களாக இருக்க வேண்டும். கல்வி கேள்விகளில் சிறப்பில்லா நீதிபதிகள் சார்பற்றும் சுயேச்சையாகவும் இயங்கமாட்டார்கள். வழக்குரைஞர்களின் கைப்பாவையாகிவிடுவர். இந்தியாவில் பத்தாண்டுகள் உயர்நீதிமன்றத்தில் வழக்குரைஞர்களாகப் பணியாற்றியவர்களும், உயர்நீதிமன்றத்தில் ஐந்தாண்டுகள் நீதிபதிகளாக இருந்தவர்களும், சட்ட நிபுணர்களும் தலைமை நீதிமன்றத்தின் நீதிபதிகளாக நியமனம் பெறத் தகுதியுடையவர்களாவர்.

**நீதித்துறையை இதரத் துறைகளிலிருந்து பிரித்தல்**

நீதித்துறையில் சார்பின்மையும் சுதந்திரமும் நிலவ நீதித்துறை செயல்துறையிலிருந்தும், சட்டத்துறையிலிருந்தும் பிரிக்கப்பட வேண்டும். அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு நடைமுறைப் படுத்தப்பட வேண்டும். அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு நடைமுறைப்படுத்தப்பட வேண்டும். இந்திய அரசியலமைப்பின் அரசின் நெறிமுறைக் கோட்பாட்டில் நீதித்துறை மற்றத்துறைகளிலிருந்தும் தனித்தியங்க வேண்டுமெனக் கூறப்படுகிறது. இதற்குரிய நடவடிக்கைகளை அரசாங்கம் மேற்கொள்ள வேண்டும்.

நீதித்துறையும் செயல்துறையும் இணைந்திருந்தால் உயிர், உடைமை, உரிமை ஆகியவைகளுக்குப் பாதுகாப்பு இருக்காது. குற்றம் சாட்டுபவரும் நீதிவழங்குபவரும் ஒருவராக இருந்தால் நீதியின் நீர்மை குன்றும். இந்தியாவில் செயல்துறை

அதிகாரமும், நீதிகூறும் அதிகாரமும் ஒரே ஆணையாளரிடம் இருந்தன. குற்றம் சாட்டுபவரும் நீதிவழங்குபவரும் ஒருவராக இருந்தார். சுதந்திரமும் உரிமையும் காக்கப்பட நீதித்துறையும் செயல்துறையும் பிரிக்கப்படவேண்டும்.

நீதித்துறையும் சட்டத்துறையும் இணைந்திருந்தால் சட்டம் இயற்றுகிறவரே சட்டவிளக்கம் கூறுபவராகவும் இருப்பார். மேலும் நீதிபதிகள் அரசியல் வாதிகளாகிவிடுவர். சட்டத்துறை நீதி பதிகள் மீது ஆதிக்கம் கொள்ளும். நீதிபதிகள் சார்பற்றும் சுதந் திரமாகவும் செயலாற்ற இயலாது. எனவே, நீதித்துறையும் சட்டத்துறையும் பிரிந்திருக்க வேண்டும்.

## சட்டத்துறை, செயல்துறைகளுடன் நீதித்துறையின் தொடர்பு

அரசாங்கத்தின் முப்பெரும் நிறுவனங்களாகிய சட்டத்துறை, செயல்துறை, நீதித்துறை ஆகியவைகளிடையே ஒன்றிற்கொன்று தொடர்புண்டு. அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு கடைப்பிடிக்கப் பட்டாலும் முழு அளவில் செயல்படுத்த இயலுவதில்லை. அர சாங்கம் ஓர் அங்கமாகத் திறமையுடனும் இணக்கமாகவும் செயல் பட வேண்டியுள்ளதால் இந் நிறுவனங்களிடையே தொடர்பும் அவசியமாகிறது. நீதித்துறைக்கும் சட்டத்துறைக்கும் உள்ள தொடர்பையும் இங்குக் காணலாம்.

### நீதித்துறையும் சட்டத்துறையும்

நீதித்துறையின் பணிகளாகிய நீதிபரிபாலனம் செய்தலைச் சட்டத்துறையும் செய்கிறது. சட்டமன்றத்தின் மேலவைகள் பல நாடுகளில் நீதித்துறையின் பணிகளைச் செய்கின்றன. இங்கி லாந்தின் மேலவையான பிரபுக்கள் அவை நாட்டின் தலைமை நீதி மன்றமாகச் செயலாற்றுகிறது. சட்டப் பிரபுக்கள் (Law Lords) இப்பணிகளைச் செய்கின்றனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மேலவையான செனட் குடியரசுதலைவர் மீதான அரசத் துரோகக் குற்றத்தை விசாரணை செய்கிறது.

சட்டத்துறையின் பணிகளான சட்டமியற்றலை நீதிமன்றங் களும் செய்கின்றன. சட்டங்களுக்கு விளக்கம் அளிக்கும் போது நீதி மன்றங்கள் சட்டங்களை ஆக்குகின்றன. எலும்புக் கூடான சட்டங்களுக்கு சதை அளித்து உருவம் அளிக்கின்றன. சட்டங்கள் பரந்த எல்லைக்கோடுகளாக அமையும் போது அவற் றின் இடைவெளிகளை நிரப்பும் பொறுப்பு நீதிமன்றங்களைச் சாரு

கின்றன. மேலும், வழக்குகளை விசாரிக்கும் போது குறிப்பிட்ட வழக்கைத் தீர்ப்பதற்குச் சட்டங்களில் வழிவகை இல்லாவிடில் நீதிமன்றங்கள் நியாய உணர்வின் அடிப்படையில் கொள்கைகளை வகுத்துத் தீர்ப்பளிக்கின்றன. இவைகளே முன்தீர்ப்பு (Precedent) முறைகளாகவும், தீர்ப்புவழிச் சட்டமாகவும் (Case Law) அமைகின்றன. இவ்விதங்களில் நீதிமன்றங்கள் சட்டமன்றங்களின் பணிகளாகிய சட்ட ஆக்கத்தைச் செய்கின்றன.

சட்டமன்றங்களில் நிலவும் அரசியல் கட்சிகளின் ஆதிக்கம் நீதிமன்றங்களில் நுழையக்கூடாது. எனவே, நீதிபதிகள் சட்டமன்றங்களால் தேர்ந்தெடுக்கப்படுதல் விரும்பத்தக்கதல்ல. ஆனால் சட்டமன்றங்களுக்கு நீதிபதிகளைப் பதவியிலிருந்து விலக்கும் அதிகாரம் அளிக்கப்பட வேண்டும். இந்தியா, அமெரிக்க ஐக்கிய நாடுகள், இங்கிலாந்து ஆகிய நாடுகளில் நீதிபதிகளை நீக்கும் உரிமையைச் சட்டமன்றங்கள் பெற்றுள்ளன. நீதிபதிகளை நியமிக்கும் அதிகாரமில்லாத சட்டமன்றங்களுக்கு நீதிபதிகளைப் பதவியிலிருந்து நீக்கும் அதிகாரம் அளிக்கப்பட்டிருத்தல் முறையேயாகும்.

கூட்டாட்சி நாடுகளில் நீதிமன்றங்கள் அரசியலமைப்பின் பாதுகாவலனாகப் பணியாற்றுவதால், சட்டமன்றங்கள் இயற்றும் அரசியலமைப்பிற்கு முரணான சட்டங்களை நீதிமன்றங்கள் செல்லுபடியற்றதாக்குகின்றன. நீதிமன்றங்களுக்கு உள்ள இவ்வதிகாரம் நீதிப்புனராய்வு (Judicial Review) எனப்படும். இந்தியாவிலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் நீதிமன்றங்களுக்கு நீதிப்புனராய்வு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது.

ஒன்றிய ஆட்சியில் பாராளுமன்றம் அரசாங்கத்தின் இதர நிறுவனங்களைவிட உன்னதமாகக் கருதப்படுவதாலும் இது சட்டமன்றமாகவும், அரசியல் நிர்ணயசபையாகவும் செயல்படுவதாலும் பாராளுமன்றத்தின் சட்டங்களைப் புனராய்வு செய்யும் அதிகாரம் நீதிமன்றங்களுக்கு இல்லை. எனவே, பாராளுமன்றத்தின் சட்டங்களை அரசியலமைப்பிற்கு முரணானவை என்று கூறும் அதிகாரம் நீதி மன்றங்களுக்குக் கிடையாது. இங்கிலாந்தின் நீதிமன்றங்களுக்கு நீதிப்புனராய்வு அதிகாரம் இல்லை.

எழுதப்பட்ட அரசியலமைப்புகளில் நீதித்துறைக்கும் சட்டத்துறைக்குமுள்ள தொடர்பு அறுதியிடப்பட்டுள்ளது.

**நீதித்துறையும் செயல்துறையும்**

நீதித்துறையின் பணிகள் சிலவற்றைச் செயல் துறையினர் செய்கின்றனர். நீதிமன்றங்களால் தண்டிக்கப்பட்ட குற்றவாளி

களைச் செயல்துறைத் தலைவர் மன்னிக்கலாம்; தண்டனையை நீக்கலாம்; மாற்றலாம்; குறைக்கலாம். நீதிமன்றத்தால் கவனிக்கப்படாத தவறுகளைத்திருத்தவும், நிரபராதிகள் தவறுதலாகத் தண்டிக்கப்படுவதை நீக்கவும், தண்டனையை மறு ஆய்வு செய்யவும் செயல்துறையினருக்குக் கருணைகாட்டும் அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. செயல்துறையின் அலுவலர்கள் துறை சம்பந்தமான வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு அளிக்கின்றனர். தேர்தல்குழு தேர்தல் சம்பந்தமான வழக்குகளை விசாரிக்கின்றது. இவைகள் அரைகுறை நீதிப்பணிகளாகும் (Quasi-judicial function).

செயல்துறைப் பணிகள் சிலவற்றை நீதிமன்றங்களும் செய்கின்றன. நீதிமன்றங்கள் தனது அலுவலர்களை நியமித்துக் கொள்கின்றன. அவர்களது பணி சம்பந்தமான நடவடிக்கைகளை மேற்கொள்கின்றன. பிணக்குள்ள சொத்துகளைப் பராமரித்தலும், சிறுவர் சொத்துகளுக்குப் பாதுகாவலர் நியமிப்பதும், திருமணங்களை நடத்திவைப்பதும் நீதித்துறையின் செயல்துறைப்பணிகளாகும்.

செயல் துறையினர் பல நாடுகளில் நீதிபதிகளை நியமனம் செய்கின்றனர். ஆனால் நீதிபதிகளை நீக்கும் அதிகாரம் இவர்களுக்கு அளிக்கப்படுவதில்லை. செயல்துறைத் தலைவர் நீதிமன்றங்களின் ஆலோசனையையும், ஒரு குறிப்பிட்ட சட்டத்தின் மீதான அபிப்பிராயத்தையும் கேட்கலாம். நீதிமன்றங்கள் செயல்துறையினரின் அத்துமீறிய செயல்களைக் கண்டிக்கின்றன. மக்களின் உரிமைகளையும் சுதந்திரத்தையும் நீதிமன்றங்கள் காக்கின்றன. எனவே நீதித்துறை செயல்துறையின் தலையீடின்றிச் சுதந்திரமாகச் செயல்பட வேண்டும்.

## நீதிப்புனராய்வு

நீதிமன்றங்கள் அரசியலமைப்பின் பாதுகாவலனென்றும், அடிப்படையுரிமைகளின் காவலன் என்றும் கண்டோம். எழுதப்பட்ட அரசியலமைப்பையும் அதில் கூறப்பட்ட அடிப்படை உரிமைகளையும் காக்க வேண்டியது நீதிமன்றத்தின் பணிகளாகும். இப்பணிகளை ஆற்றுவதற்காக நீதிமன்றம் கையாளும் ஒரு கருவியே நீதிப்புனராய்வு (Judicial Review) ஆகும்.

### நீதிப்புனராய்வின் விளக்கம்

எழுதப்பட்ட அரசியலமைப்பில் குறிப்பாகக் கூட்டாட்சி முறையில் அரசியலமைப்பு மீயுயர்வுடையதாகும். அரசாங்கத்தின் முப்பொரும் நிறுவனங்களான சட்டத்துறை, செயல்துறை,

நீதித்துறை ஆகியன தங்கள் அதிகாரங்களை அரசியலமைப்பி லிருந்தே பெறுகின்றன. அரசியலமைப்பு நாட்டின் உன்னதச் சட்டமாகவும், புனிதத் தன்மையுடையதாகவும், அடிப்படைச் சட்டமாகவும், உரிமைகளின் தோற்றுவாயாகவும் அமைகிறது. மேலும் கூட்டாட்சியின் மத்திய அரசாங்கமும், கூட்டாட்சி உறுப்புகளான மாநில அரசாங்கங்களும் தங்கள் அதிகாரத்தை அரசியலமைப்பிடமிருந்தே பெறுகின்றன. எனவே மத்திய அரசாங்கத்தின் அதிகாரம், மாநில அரசாங்கங்களின் அதிகாரம், உரிமை, அரசாங்க நிறுவனங்களாகிய சட்டமன்றம், செயல் துறை, நீதிமன்றம் ஆகியவைகளின் அதிகாரம், உரிமை, மக்களின் அடிப்படை உரிமை ஆகிய அனைத்தின் தோற்று வாயும் மூலமும் அரசியலமைப்பாகும். எனவே, இவ்வரசியல மைப்புக் காக்கப்பட வேண்டும் ; பேணப்படவேண்டும் ; மதிக்கப் படவேண்டும்.

அதிகாரம் சர்வாதிகாரத்திற்கு இட்டுச் செல்லும். சட்டமியற் றும் அதிகாரம் பெற்றுள்ள பாராளுமன்றம் தனது வேகத்தின் காரணமாக அரசியலமைப்பால் தனக்கு அளிக்கப்பட்ட அதிகாரத்தை மிஞ்சி மக்களின் உரிமைகளையும், மாநிலங்களின் சுதந்திரத்தையும் பறிக்கும் சட்டங்களை ஆக்கலாம். செயல்துறை யினர் அரசியலமைப்பால் தங்களுக்கு அளிக்கப்பட்ட அதிகார வரம்பை மிஞ்சி நடக்கலாம். அரசியலமைப்பிற்கு அத்துமீறும் செயல்கள் தடுக்கப்பட வேண்டும். இவைகளைத் தடுப்பதற்காக நீதிமன்றங்களுக்கு உள்ள அதிகாரம் நீதிப்புனராய்வு எனப் படும்.

பாராளுமன்றத்தின் சட்டங்கள் அரசியலமைப்பிற்கு முரணாக அமைந்தால் அச்சட்டங்கள் அரசியலமைப்பிற்கு முரண் எனக் கூறி நீதிமன்றங்கள் அவைகளைச் செல்லுபடியற்றதாக்கும். இதே போலச் செயல்துறையினரின் செயல்கள் அரசியலமைப்பிற்கு முர ணாக இருந்தால் நீதிமன்றங்கள் அவைகளைப் பயனற்றதாக்குகின் றன. நீதிமன்றத்தின் இந்த அதிகாரம் நீதிப்புனராய்வு (Judicial Review) அதிகாரமென்றும், நீதித்துறையின் மறுப்பாணை (Judicial Veto) என்றும், நீதித்துறையின் மீயுயர்வு (Judicial Supremacy) என்றும் அழைக்கப்படுகிறது. இந்த நீதிப்புனராய்வு அதிகாரம் பொதுவாகத் தலைமை நீதிமன்றங்களுக்கே அளிக்கப்பட்டுள்ளன.

நீதிப்புனராய்வு அதிகாரம் ஓர் எதிர்மறை அதிகாரம் என்ப தைக் காணலாம். ஒரு செயலையோ, சட்டத்தையோ தடுப்பதற் கான அதிகாரமாதலால் எதிர்மறை அதிகாரம் என்கிறோம். தன் மீயுயர்வின் காரணமாக இவ்வெதிர்மறை அதிகாரத்தை நீதிமன்

றங்கள் கையாளுகின்றன. பாராளுமன்ற மீயுயர்வு, அதன் அதிகாரங்கள், உடன்பாட்டு அதிகாரங்களாகும். பாராளுமன்றம் தனது மீயுயர்வின் காரணமாக எந்தச் சட்டத்தையும்இயற்றலாம். ஆனால், நீதிமன்ற மீயுயர்வு காரணமாக நீதிமன்றங்கள் சட்டத்தை ஆக்குவதில்லை. அரசியலமைப்பு மேலாண்மையுடைய முறையிலேயே நீதிமன்றத்தின் மேலாண்மை தோன்றும் என்பதையும் கவனிக்க வேண்டும்.

### நீதிப்புனராய்வின் இலக்கணம்

புரூஸ்டர் (Breuster) இலக்கணப்படி, 'சட்டமன்றங்களின் அரசியலமைப்பிற்கு முரணான சட்டத்தையோ, செயல்துறையினரின் நடவடிக்கைகளையோ செல்லாதென அறிவிக்கும் நீதிமன்றங்களின் அதிகாரமே நீதிப்புனராய்வு ஆகும். சில வேளைகளில் இது நீதி மறுப்பாணை எனப்படுகிறது. ஏனெனில் நீதிமன்றங்களுக்கு 'முடியாது' என்று சொல்லும் அதிகாரமுண்டு. சற்றுக் குறைவான பொருளில் 'நீதித்துறை மேலாண்மை' எனப்படுகிறது.'[12]

பெர்த் (Berth) என்பவரது கருத்துப்படி, 'அரசியலமைப்பின் அடிப்படையில் அரசாங்கத்தின் மற்ற நிறுவனங்களின் செயல்களைப் பயனற்றதாக்கும் தலைமை நீதிமன்றத்தின் அதிகாரம் நீதிப்புனராய்வு எனப்படும்.'[13]

### நீதிப்புனராய்வின் தோற்றம்

நீதிப்புனராய்வு அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தோன்றிக் கூட்டாட்சி அமைப்புள்ள பல நாடுகளில் பின்பற்றப்படுகின்றன. கூட்டாட்சி அமைப்பில் மாநிலங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்கும் இடையே அதிகாரப் பங்கீடு இருப்பதால் பூசல்கள் தோன்றும் வாய்ப்பு உள்ளன. மேலும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பின்பற்றப்படுவதால் செயல்துறையினருக்கும் சட்டமன்றங்களுக்கும் இடையே போட்டிகளும் முரண்பாடுகளும் தோன்றும் வாய்ப்பு உள்ளது. எனவே, இம்முரண்பாடுகளையும், போட்டிகளையும், பூசல்களையும், தவிர்ப்பதற்காகக் கூட்டாட்சி நாடுகளில் நீதிப்புனராய்வு அதிகாரம் நடைமுறைப்படுத்தப்படுகிறது.

[12] R. W. Brewster : Judicial Review is the authority of the Courts to declare null and uiod acts of the legistative and executive branches of government held to be in conflict with conitsution. It is sometimes called judicial veto because the courts have the power to say 'no'. A less accurate designation is judicial supremacy.

[13] L. P. Berth ; Judicial Review is the power of the highest court of a jurisdiction to invalidate, on consiitutional grounds, the acts of other governmental agency with in that jurisdiction.'

மேலும் எழுதிய அரசியலமைப்பிலுள்ள அடிப்படை உரிமைகள் காக்கப்படுவதற்காகவும், சட்டமன்றமும் செயல்துறையினரும் இவ்வுரிமைகளில் தலையிடுவதைத் தவிர்க்கவும் நீதிப்புனராய்வு தோன்றியது.

**சில நாடுகளில் நீதிப்புனராய்வு : அமெரிக்க ஐக்கிய நாடுகள்**

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நீதிப்புனராய்வு அதிகாரம் தலைமை நீதிமன்றத்தால் பெரிதும் கையாளப்படுகிறது. மார்பரிக்கு எதிராக மாடிசன் தொடுத்த வழக்கில் அமெரிக்காவின் தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி ஜார்ஜ் மார்ஷல் (George Marshall) எது சட்டம் என்பதைக் கூறும் அதிகாரமும், தனிவழக்கில் சட்டவிதியைப் பயன்படுத்தும்போது சட்டத்திற்கு விளக்கம் கூறும் அதிகாரமும் தலைமை நீதிமன்றத்திற்கு உண்டெனக் கூறினர். இதனைப் பின்பற்றி நீதிப்புனராய்வு அதிகாரம் தலைமை நீதிமன்றத்திற்கு அளிக்கப்பட்டது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றம் குடியரசு தலைவர் பிராங்கிலின் ரூஸ்வெல்டின் (Franklin Roosevelt) புதுத் திட்ட சட்டங்கள் (New Deal Legislation) பலவற்றை நீதிப் புனராய்வு அதிகாரத்தினுல் பயனற்றதாக்கியது. தலைமை நீதி மன்றத்தைக் கட்டுப்படுத்த ரூஸ்வெல்ட் நடவடிக்கைகளை மேற் கொள்ள எண்ணினர். ஆனல் எண்ணம் செயலாக்கப்படவில்லை; கைவிடப்பட்டது.

**இந்தியா**

இந்தியாவின் தலைமை நீதிமன்றத்திற்கும், உயர்நீதி மன்றங் களுக்கும் நீதிப்புனராய்வு அதிகாரம் உண்டு. மத்தியப் பாராளு மன்றத்தின் சட்டங்களையும் மாநிலச் சட்டமன்றங்களின் சட்டங் களையும் இவ்வதிகாரத்தின் மூலம் அரசியலமைப்பிற்கு முரணனது எனக் கூறிப் பயனற்றதாக்கலாம். ஆனல் இந்திய நீதிமன்றங் களின் நீதிப் புனராய்வு அதிகாரம் அமெரிக்கத் தலைமை நீதி மன்றத்தின் புனராய்வு அதிகாரத்தின் அளவு இல்லை.

**இங்கிலாந்து**

இங்கிலாந்து ஒன்றிய அரசாக இருப்பதாலும், பாராளுமன்றத் தின் இறைமையும் மீயுயர்வும் போற்றப்படுவதாலும்இங்கிலாந்தின் நீதிமன்றங்களுக்கு நீதிப்புனராய்வு அதிகாரமில்லை. பாராளு மன்றத்தின் சட்டத்தை அரசியலமைப்பிற்கு முரணெனக் கூறிப் புயனற்றதாக்கும் அதிகாரம் நீதிமன்றங்களுக்கு இல்லை,

### நீதிப்புனராய்வின் நிறை குறைகள் : நிறைகள்

நீதிப்புனராய்வின் வழி மாநிலங்களின் உரிமைகள், மக்களின் அடிப்படை உரிமைகள், அரசியலமைப்பின் மேலாண்மை ஆகியன காக்கப்படுகின்றன. சட்டமன்றங்களின் அத்துமீறல்களும் செயல்துறையினரின் வல்லாட்சியும் தடுக்கப்படுகின்றன.

### குறைகள்

வளரும் சமுதாயத்திற்கேற்பவும், நெருக்கடி காலங்களுக் கேற்பவும் பொருளாதார மந்தத்திற்கேற்பவும் சட்டமன்றம் முன்னேற்றச் சட்டங்களை இயற்றமுடிவதில்லை. செயல்துறை யினர் நடவடிக்கைகளை மேற்கொள்ள இயலுவதில்லை. பிற்போக்கு வாதிகளான நீதிபதிகள் சட்டத்தின் உயிர்ப்பை உணராது சட்ட வாசகத்தைக் கட்டிக்காக்கின்றனர். நீதிப்புனராய்வு முன்னேற்றப்பாதையின் தடையாக அமைகிறது.

### அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நீதித்துறை

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நீதிமன்றங்கள் முக்கிய இடத் தைப்பெற்றுள்ளன. அமெரிக்க அரசியலமைப்பில் அதிகாரப் பிரி வினைக் கோட்பாடு கடைப்பிடிக்கப்படுவதால் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நீதித்துறையானது செயல்துறைக்கும் சட்டத்துறைக் கும் சமமான நிலையைப் பெற்றுள்ளது. மேலும், அமெரிக்கா கூட் டாட்சி அரசியலமைப்பை உடையது. கூட்டாட்சி அமைப்பில் கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் கூட்டாட்சியின் உறுப்பு அரசு களான மாநில அரசாங்கங்களுக்கும் இடையே அதிகாரப் பங்கீடு செய்யப்பட்டுள்ளது. இவைகளிடையே தோன்றும் பிணக்கு களைத் தீர்ப்பதற்கு மேலாண்மையுடைய தலைமை நீதிமன்றம் அவ சியமாகிறது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றம் அரசிய லமைப்பிடமிருந்து தனது அதிகாரங்களைப் பெற்றுள்ளது. இதில் தலைமை நீதிபதி ஒருவரும் இதர நீதிபதிகள் எண்மரும் உள்ளனர். செனட்டின் இசைவுடன் குடியரசு தலைவரால் நீதிபதிகள் நியமிக் கப்படுகின்றனர். தலைமை நீதிபதிக்கு ஆண்டிற்கு 13,000 டாலர் களும், இதர நீதிபதிகளுக்கு ஆண்டிற்கு 12,500 டாலர்களும் ஊதி யம் வழங்கப்படுகிறது. நீதிபதிகளின் பதவிக் காலத்தில் அவர் களது ஊதியம் குறைக்கப்படக்கூடாது. ஆயுட்காலம் முழுவதும் நீதிபதிகள் பதவியிலிருக்கலாம். நன்னடத்தையின்மை காரணமா கவும் துரோகக் குற்றம் சாட்டப்பட்டும் பதவியிலிருந்து நீதிபதிகள் விலக்கப்படலாம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றம் அரசியலமைப்பின் காவலனாகப் பணியாற்றுகிறது. அரசியலமைப்பிற்கு முரணாக அமெரிக்கக் காங்கிரசால் இயற்றப்படும் சட்டங்களை அரசியலமைப்பிற்கு முரணானது எனக் கூறிச் செல்லுபடியற்றதாக்கலாம். செயல்துறையினரது நடவடிக்கைகளும் அரசியலமைப்பிற்கு முரணாக இருக்கும் போது நீதிமன்றம் செல்லுபடியற்றதாக்குகிறது. மாநில உரிமைகளின் காவலனாகவும் குடிமக்களின் உரிமைகளின் காவலனாகவும் நீதிமன்றம் செயலாற்றுகிறது. மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் இடையே தோன்றும் முரண்பாடுகளையும், மாநில அரசாங்கங்களிடையே தோன்றும் பூசல்களையும் தலைமை நீதிமன்றம் விசாரிக்கும் உரிமை பெற்றுள்ளது. அரசியலமைப்பிற்கு விளக்கம் கூறும் அதிகாரமும் தலைமை நீதிமன்றத்திற்கு உண்டு. ஹாஸ்கின் (Haskin) கருத்துப்படி, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றத்தைப் போல் இவ்வுலகத்தில் வேறு எந்த நிறுவனமும் சிறப்புடன் செயலாற்றுவதில்லை.[14]

நீதிமன்றப் புனராய்வு (Judicial Review) அதிகாரம் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றத்திற்கு உண்டு. அரசியலமைப்பில் நீதிப்புனராய்வு அதிகாரம் சொல்லப்படவில்லையென்றாலும் உள்ளடங்கு அதிகாரத்தின்படி (Implied powers) தலைமை நீதிமன்றம் சட்டங்களைப் புனராய்வு செய்கிறது. தலைமை நீதிபதி மார்ஷல் இந்த உள்ளடங்கு அதிகாரக் கோட்பாட்டை வகுத்தார்.

சட்ட விளக்கம் (Judicial Interpretaion) கொடுக்கும் அதிகாரமும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றத்திற்கு உண்டு. சட்ட வாசகத்தில் தெளிவின்மை தோன்றும்போதும், வாசகத்தில் முரண்பாடுகள் இருக்கும் போதும், சொல்திரிபும் பொருள் மயக்கமும் காணும்போதும் தலைமை நீதிமன்றம் தெளிவுபடுத்துகிறது. தலைமை நீதிமன்றம் வாணிபம் (Commerce) என்ற சொல்லுக்கு நூற்றுக்கணக்கான பொருள் கூறியுள்ளது. அதே போல ஆயுதப்படை (Armed Forces) என்ற சொற்றொடருக்கும், போக்குவரத்து வழி (Means of Transport) என்ற சொற்றொடருக்கும் பல விளக்கங்களைத் தலைமை நீதிமன்றம் அளித்துள்ளது.

[14] F. J. Haskin : 'There is perhaps no other body in the world which conducts its business in a more impressive manner than the Supreme Court of U. S. A.'

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நீதிமன்றம் வன்மையாகக் குறைகூறப்படுகிறது. ஒன்பது நீதிபதிகளில் ஐவர் இசைவு தெரிவித்து நால்வர் தெரிவிக்காவிடினும் அத்தீர்ப்புச் செல்லக் கூடியதாக இருக்கிறது. மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய பாராளுமன்றம் நிறைவேற்றும் சட்டங்களையும் செல்லுபடியற்ற தாக்கும் இணைப்புச் சட்டமன்றமாகத் தலைமை நீதிமன்றம் விளங்குகிறது. குடியரசு தலைவர் ரூஸ்வெல்ட்டின் புதுத் திட்டங்கள் பலவற்றைத் தலைமை நீதிமன்றம் செல்லுபடியற்ற தாக்கியபோது தலைமை நீதிமன்றத்தைத் திருத்தியமைக்க ரூஸ்வெல்ட் எண்ணினார். ஆனால் இவரது திட்டத்தைப் பாராளுமன்றம் ஏற்கவில்லை.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றம் அரசிய லமைப்பின் பாதுகாவலனாகவும் உரிமைகளின் காவலனாகவும் அமைகிறது. அமெரிக்க அரசியலமைப்பின் சமநிலைச் சகடம் (Balance wheel) போலத் தலைமை நீதிமன்றம் பணியாற்றுகிறது.

அரசியலமைப்பு தலைமை நீதிமன்றத்தை மட்டுமே தோற்றுவித்தது. இதர நீதிமன்றங்களைத் தோற்றுவிக்கும் அதிகாரம் கூட்டாட்சிப் பாராளுமன்றத்திற்கு அளிக்கப்பட்டுள்ளது. இதன்படி மாநில நீதிமன்றங்களும், மாவட்ட நீதிமன்றங்களும் ஏற்படுத்தப்பட்டன. அமெரிக்காவின் மாநிலங்களில் 84 மாவட்ட நீதிமன்றங்களும் (District Courts), 11 மேல்முறையீட்டு நீதி மன்றங்களும் (Circuit Courts of Appeal) உள்ளன. மாவட்டங் களிலும் மாநிலங்களிலும் தோன்றும் வழக்குகளை இவைகள் முறையே விசாரிக்கின்றன. இவைகள் நீங்கலாக வரி நீதிமன்றம், சுங்க நீதிமன்றம் போன்ற சிறப்பு நீதிமன்றங்களும் (Special Courts) உள்ளன. இவைகள் தம் துறையில் எழும் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிக்கின்றன.

**இந்தியாவில் நீதித்துறை**

இந்தியா ஒரு கூட்டாட்சி நாடாகையால் மீயுயர்வுடைய நீதிமன்றம் அரசியலமைப்பின்படி ஏற்படுத்தப்பட்டுள்ளது. அரசியலமைப்பின் பாதுகாவலனாகவும் அடிப்படை உரிமைகளின் காவலனாகவும் தலைமை நீதிமன்றம் பணியாற்றுகிறது.

இந்தியக் குடியரசு தலைவரால் தலைமை நீதிமன்றத்தின் நீதிபதிகள் நியமிக்கப்படுகின்றனர். ஒரு தலைமை நீதிபதியும் பதிமூன்று இதர நீதிபதிகளும் தலைமை நீதிமன்றத்தில் உள்ளனர். இவர்கள் 65 வயது வரை பதவியில் இருக்கலாம். நன்னடத்தை யின்மை காரணமாகவோ திறமையின்மை காரணமாகவோ

பாராளுமன்றத்தின் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையினரும், வாக்களிப்பவர்களில் மூன்றில் இரண்டு பங்குப் பெரும்பான்மையினரும் நீதிபதிகளை விலக்கத் தீர்மானம் நிறைவேற்றலாம். அத்தீர்மானத்தின் மீது குடியரசு தலைவர் நீதிபதிகளைப் பதவியிலிருந்து விலக்குவார்.

தலைமை நீதிபதிக்கு மாதம் ரூபாய் 5000-மும் இதர நீதிபதிகளுக்கு மாதம் ரூபாய் 4000-மும் ஊதியம் வழங்கப்படுகிறது. நீதிபதிகளின் பதவிக்காலத்தில் இவ்வூதியங்களைக் குறைக்க இயலாது. மேலும், நீதிபதிகளின் ஊதியம் பாராளுமன்றத்தின் ஒப்புதலுக்குட்பட்டதல்ல.

இந்தியக் குடிமகனாகவும் ஐந்தாண்டுக் காலம் உயர்நீதிமன்றத்தின் நீதிபதியாகவும் அல்லது பத்தாண்டுக் காலம் உயர்நீதிமன்ற வழக்குரைஞராகவும் அல்லது சட்டநிபுணராகவும் உள்ள ஒருவரே தலைமை நீதிமன்றத்தின் நீதிபதியாக நியமனம் பெறத் தகுதியுடையவராவார்.

தலைமை நீதிமன்றம் பரந்த அதிகாரமுடையது. மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்குமிடையே தோன்றும் வழக்குகளையும் விசாரிக்கும். உயர்நீதிமன்றங்களிலிருந்து வரும் மேல்முறையீட்டு வழக்குகளிலும் தீர்ப்பளிக்கும். குடியரசு தலைவர் சட்டக்கருத்துப் பற்றித் தலைமை நீதிமன்றத்தின் ஆலோசனையைக் கோரலாம். தலைமை நீதிமன்றம் ஆலோசனை வழங்கும். தலைமை நீதிமன்றம் பதிவுரிமை நீதிமன்ற (Court of Record) மாகச் செயலாற்றுகிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நீதிமன்றத்தைப் போல் இந்தியாவின் தலைமை நீதிமன்றமும் நீதிப்புனராய்வு அதிகாரமுடையதாகும். அரசியலமைப்பிற்கு முரணான சட்டங்களைச் செல்லுபடியற்றதாக்கலாம். அரசியலமைப்பிற்கு விளக்கம் கூறும் அதிகாரமும் இந்தியாவின் தலைமை நீதிமன்றத்திற்கு உண்டு. தலைமை நீதிமன்றம் அடிப்படை உரிமைகளின் காவலனாகவும், அரசியலமைப்பின் காவலனாகவும் பணியாற்றுகிறது.

மாநிலங்களில் உயர்நீதிமன்றங்கள் உள்ளன. இவைகளும் அடிப்படை உரிமைகளின் காவலனாகப் பணியாற்றுகின்றன. உயர்நீதிமன்ற நீதிபதிகளும் குடியரசு தலைவரால் நியமிக்கப்படுகின்றனர். உயர்நீதிமன்றங்கள் உரிமை வழக்குகளையும் குற்ற வழக்குகளையும் விசாரிக்கின்றன. உயர்நீதிமன்றம் ஹேபியஸ் கார்பஸ் (Habeas Corpus), மாண்டமஸ் (Mandamus), புரொஹிபிஷன் (Prohibition), குவோ வாரண்டோ (Quo Warranto),

செர்சியோராரை (Certiorari) போன்ற பேராணைகளைப் பிறப்பிக்கலாம். உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதிக்கு ரூபாய் 4000 மும் இதர நீதிபதிகளுக்கு ரூபாய் 3500ம் மாத ஊதியமாக வழங்கப்படுகிறது. உரிமை வழக்குகளையும் குற்ற வழக்குகளையும் விசாரிப்பதற்காக உயர்நீதிமன்றத்தின் கண்காணிப்பின் கீழ் மாவட்ட நீதிமன்றங்களும் கீழ்நீதிமன்றங்களும் செயல்படுகின்றன.

**இங்கிலாந்தில் நீதித்துறை**

இங்கிலாந்து ஒன்றிய அரசு ஆதலால் இணைந்த ஒரு சீரான நீதிமன்றங்களே உள்ளன. மேலும் பாராளுமன்றம் இறைமை உடையதால் நீதிமன்றத்தின் மீயுயர்வினைக் காண இயலாது. பாராளுமன்றம் இயற்றும் சட்டங்களை நீதிப்புனராய்வு செய்து அரசியலமைப்பிற்கு முரணானது என்று கூறிச் செல்லுபடியற்றதாக்கும் அதிகாரம் நீதிமன்றங்களுக்குக் கிடையாது.

இங்கிலாந்தில் உரிமை வழக்குகளை(Civil case) விசாரிக்கவும், குற்றவியல் வழக்குகளை (Criminal case)விசாரிக்கவும் நீதிமன்றங்களுண்டு. பாராளுமன்றத்தின் மேலவையான பிரபுக்கள் அவையே இங்கிலாந்தின் தலைமை நீதிமன்றமாகும். மேலவையில் உள்ள ஒன்பது சட்டப் பிரபுக்கள் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிப்பர். இவர்களுக்கு ஊதியம் வழங்கப்படுகிறது.

உரிமை வழக்குகளை விசாரிப்பதற்காக வட்டார நீதிமன்றங்கள், உயர்நீதிமன்றம், மேல்முறையீட்டு நீதிமன்றம், பிரபுக்கள் மன்றம் எனப் பலவகை நீதிமன்றங்கள் உண்டு. உயர்நீதிமன்றத்தில் அரசர் நீதிமன்றப்பிரிவு, சான்சலர் பிரிவு, விவாகரத்து, கடல் துறைப்பிரிவு என்று முப்பிரிவுகள் உள்ளன.

குற்ற வழக்குகளை விசாரிப்பதற்காக அமைதிகாண் நீதிமன்றங்கள், சிறு குற்ற நீதிமன்றங்கள், ஆண்டுதோறும் கூடும் நீதிமன்றங்கள், உயர் குற்றநீதிமன்றங்கள், குற்றவழக்கு மேல்முறையீட்டு மன்றம், பிரபுக்கள் மன்றம் எனப் பலவகை நீதிமன்றங்கள் உண்டு.

பிரிவிகவுன்சில் என்னும் நீதிக்குழு குடியேற்றநிலை நாடுகளிலிருந்தும், குடியேற்ற நாடுகளிலிருந்தும் வரும் மேல்முறையீட்டு வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிக்கும். பிரிவிகவுன்சிலில் சான்சலர் பிரவும், சட்டப்பிரபுக்களும் உறுப்பினராக இருப்பர். அரசிற்கு ஆலோசனை கூறும் மன்றமாகவும் இது அமைகிறது.

## சட்டத்தின் ஆட்சி

சட்டத்தின் ஆட்சியின் பிறப்பிடம் இங்கிலாந்து. சட்டத்தின் உயர்வும் சட்டத்தின் மீயுயர்வும் சட்டத்தின் ஆட்சியின் சிறப்பு ஆகும். நாடு எதேச்சாதிகாரத்தாலும் தனிநபரின் விருப்பு வெறுப்பாலும் ஆளப்படுவதில்லை. சட்டத்தால் ஆளப்படுகிறது. அயல்நாட்டினரான டி டாக்யூ வில்லி (De Tocque Ville), வால்டேர் (Voltaire), டி லோம் (De lome) போன்றவர்கள் இங்கிலாந்தில் நிலவும் உரிமைகளுக்கும் சுதந்திரத்திற்கும் சட்டத்தின் ஆட்சியே காரணமென அறிந்தனர். இங்கிலாந்துப் பார்வையாளராக வந்திருந்த டி டாக்யூ வில்லி இந்நாட்டில் மக்கள் உரிமைகளை அனுபவிப்பதையும், வல்லாட்சியிலிருந்து சுதந்திரமாக இருப்பதையும், குடியாட்சி நிறுவனங்கள் நன்கு செயல்படுவதையும் நேரில் கண்டார். இவைகளுக்குக் காரணம் சாதாரணச் சட்டத்தின் மேலாண்மையும், சாதாரண நீதிமன்றங்களின் உயர்வுமே ஆகும்.

மக்களாட்சியில் சட்டத்தின் ஆட்சி முக்கியத்துவமுடையதாகும். குடிமக்களிடையே சமத்துவம் நிலவ வேண்டும். அவர்களது உரிமைகள் எதேச்சதிகாரத்திலிருந்து பாதுகாக்கப்பட வேண்டும். இங்கிலாந்து மக்கள் தங்கள் மன்னர்களிடம் பல நூற்றுண்டுகளாகப் போராடி உரிமைகளைப் பெற்றனர். மக்களின் அடிப்படை உரிமைகளைக் கூறும் அரசியலமைப்புச் சட்டங்கள் இங்கிலாந்தில் கிடையாது. உரிமைகள் வரலாற்றில் வளர்ந்தனவாகும்.

### பேராசிரியர் டைசியின் கருத்து

சட்ட ஆட்சிக் கோட்பாட்டைப் பேராசிரியர் டெய்சி (Dicey) தமது அரசியலமைப்பின் சட்டம் (The Law of the Constitution) என்னும் நூலில் முப்பொருளில் விவரித்துள்ளார்.[15]

முதலாவது குறிப்பிட்ட ஒரு சட்டத்தைப் புறக்கணித்தாலன்றி யாரும் தண்டிக்கப்படலாகாது. நீதிமன்றத்தால் விசாரிக்கப்படாமல்

[15] A. V. Dicey: 'No man is punishable or can be lawfully made to suffer in body or goods except for a distinct breach of law established in the ordinary legal manner before the ordinary courts of the land.'

'Not only with us is no man above the law, but that here, every man, whatever be his rank or condition is subject to the ordinary law of the realm and amenable to the jurisdiction of the ordinary tribunals.'

'The Constitution is pervaded by the Rule of Law on the ground that the general principles of the Constitution are with us the result of judicious decisions determining the rights of private persons in particular cases brought before the courts.' (The Law of the Constitution).

எவரும் தண்டிக்கப்படக்கூடாது. இங்குச் சட்டமென்பது சாதாரணச் சட்டமும்; நீதிமன்றமென்பது சாதாரண நீதிமன்றமும் ஆகும்.

சாதாரணச் சட்டத்தின் மேலாண்மையையும், சாதாரண நீதிமன்றத்தின் உயர்வையும் காணலாம். ஏதேச்சாதிகாரத்துடன் செயல்துறை ஒருவரைக் கைது செய்யவோ, சிறையிலடைக்கவோ உயிர், உரிமை, உடைமைகளைப் பறிக்கவோ இயலாது சட்டத்தை மீறியதற்காக மட்டுமே தண்டிக்கப்படலாம். அதுவும் நீதிமன்றத்தில் வெளிப்படையாக விசாரிக்கப்பட்டுக் குற்றம் எண்பிக்கப்பட்ட பிறகே தண்டிக்கப்படவேண்டும். குற்றம் சாட்டப்பட்டவர் வழக்குரைஞர்களை நியமிக்கவும், தற்காத்துக் கொள்ளவும் வாய்ப்பளிக்கப்பட வேண்டும். யதேச்சையாகச் சிறைப்படுத்தப்பட்டால் அவர் ஆளுரிமைக் காப்புப் (Habeas Corpus) பெற விண்ணப்பிக்கலாம். சட்டத்திற்கு முரணாகச் சிறை வைக்கப்படுதலோ, சட்டத்திற்கு முரணாகத் தண்டிக்கப் படுதலோ கூடாது.

இரண்டாவது, சட்டத்தைவிட உயர்ந்தவர் யாருமில்லை. எந்தத் தகுதியை உடையவராக எந்த நிலையில் இருந்தாலும் சாதாரணச் சட்டத்திற்கும் சாதாரண நீதிமன்றங்களுக்கும் கட்டுப் பட்டவரே ஆவார். சட்டமும் சட்டத்தினால் தோன்றும் உரிமைகளும் கடமைகளும் அனைத்துக் குடிமக்களுக்கும் சமமாகும்.

சாதாரணக் குடிமக்களும், அரசாங்க அலுவலர்களும், சமுதாயத்தில் உயர்நிலை எய்தியவர்களும் சாதாரணச் சட்டத்திற்கும் சாதாரண நீதிமன்றத்திற்கும் உட்பட்டவர்களாவர். சட்டத்தால் அளிக்கப்பட்ட அதிகார வரம்பை மீறிச் செயல்படும் அலுவலர்களும் சாதாரணச் சட்டத்தால் (Ordinary Law) சாதாரண நீதிமன்றத்தால் (Ordinary Court) சாதாரண முறையில் (Ordinary Manner) விசாரிக்கப்படுவர். டெய்சியின் கூற்றுப்படி, தலைமை அமைச்சர் முதல் காவலர் வரை யாராயினும் சட்டத்தை மீறிய செயல்களுக்குச் சாதாரணக் குடிமகனைப் போலப் பொறுப்பாக்கப் படுவர்.

மூன்றாவது, குடிமக்களது உரிமைகள் நீதிமன்றத்தீர்ப்புகளின் வழியாகத் தோன்றியனவாகும். தனியாள் சுதந்திரம், குழு அமைக்கும் உரிமை, கூடும் உரிமை என உரிமைகள் பல இங்கிலாந்து நீதிபதிகளால் காக்கப்பட்டனவாகும். நீதிபதிகளின் தீர்ப்புகளே அரசியலமைப்பின் விதிகளாக அமைந்துள்ளன.

அயல்நாடுகளில் மக்களின் அடிப்படை உரிமைகள் எழுதப்பட்ட அரசியலமைப்புகளில் உள்ளன. இங்கிலாந்தில் தனி மனிதனின் உரிமைகளின் விளைவாகவே அரசியலமைப்பின் விதிகள் தோன்றின. தவிர, அரசியலமைப்பின் விதிகள் காரணமாகத் தனி மனிதனின் உரிமைகள் பிறக்கவில்லை. எடுத்துக்காட்டாக, 1753ஆம் ஆண்டில் வடபிரிட்டன் என்ற பத்திரிக்கை ஆசிரியர் ஜான் வில்க்ஸ் (John Wilkes) என்பவர் மூன்றாம் ஜார்ஜ் மன்னரின் பேச்சை வன்மையாகக் கண்டித்து எழுதியிருந்தார். உள் துறைச்செயலாளராக இருந்த ஹாலிபாக்ஸ் பிரபு பொதுப் பற்றாணை (General Warrant) மூலம் பத்திரிக்கை ஆசிரியர், உதவியாசிரியர், அச்சிட்டோர் ஆகிய அனைவரையும் கைது செய்தார். சட்டப் புறம்பான பொதுப்பற்றாணைக்கும் சிறைப்படுத்தலுக்கும் எதிராக ஜான் வில்க்ஸ் வழக்குத் தொடர்ந்து வெற்றி பெற்றார். அரசு அலுவலர்கள் பத்திரிக்கை ஆசிரியருக்கு ஓராயிரம் பவுன் இழப்பீடு அளிக்க வேண்டியதாயிற்று. நீதிமன்றத் தீர்ப்பால் பாதுகாக்கப் பட்ட இந்த உரிமை ஒரு நிரந்தர அடிப்படை உரிமையாகி விட்டது. பின்வந்த வழக்குகளிலும் இத்தீர்ப்பு முறை பின்பற்றப் பட்டு உரிமை காக்கப்பட்டது. எனவே, இங்கிலாந்தின் அரசியல்மைப்பால் உரிமைகள் காக்கப்படுவதைவிட நீதிமன்றங்களாலும் நீதிமன்றத் தீர்ப்புகளாலும் காக்கப்படுகின்றன.

சட்டத்தின் ஆட்சி அரசாங்க அலுவலர்களிடையே குறிப் பிடத்தக்க மாறுபாடுகளை ஏற்படுத்தியுள்ளது. சட்டவிதிமுறை களுக்குப் புறம்பான நடவடிக்கைகளை மேற்கொள்ளும்போது தாங்கள் இழப்பீட்டிற்கு ஆளாக்கப்படுகின்றனர் என்பதை அலுவலர்கள் அறிந்துள்ளார்கள். மேலதிகாரிகளின் ஆணைப்படி கலகக் கூட்டத்தைக் கலைக்கும் காவலர்கள் கூட அவசியமின்றித் துப்பாக்கிச்சூடு நடத்துவதில்லை. தாங்கள் சொந்தப் பொறுப்பில் இழப் பீடு அளிக்க வேண்டியிருக்கும் என்பதையும், கொலைக்குற்றத்திற்கு ஆளாக வேண்டி வரும் என்பதையும் எண்ணுகிறார்கள். சட்டத் தின் ஆட்சி அலுவலர்களின் செயல்களை நெறிப்படுத்துவதுடன் மக்களின் உரிமைகளையும் பாதுகாக்கிறது.

**சட்டத்தின் ஆட்சியின் வரையறை**

பேராசிரியர் டைய்சி சட்டத்தின் ஆட்சியை வானளாவப் புகழ்ந்துள்ளார். ஆனால், சட்டத்தின் ஆட்சியை முழு அளவில் செயல்படுத்த முடியாததையும், இது வரையறைக்குட்பட்டுள்ள தையும் நாம் காணலாம்.

தற்கால அரசு மக்கள் நலம் நாடும் அரசாக (Welfare State) அமைந்துள்ளது. எனவே, கல்வி, பொதுச்சுகாதாரம், ஆயுள்

காப்புறுதி, நகர அமைப்புத்திட்டம், வணிகம் போன்ற பல துறைகளிலும் அரசாங்கம் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியுள்ளது. இதனுல் செயல்துறையினரின் அதிகாரம் அதிகரிக்கிறது. சட்டத்தையும் ஒழுங்கையும் மட்டும் கவனித்து வந்த அலுவலர்கள் மக்களின் சமுதாயத் துறையிலும் நலம் காண வேண்டியுள்ளனர். இதற்காக அரைகுறை நீதி அதிகாரங்கள் (Quasi Judicial Powers) அலுவலர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. எல்லா வழக்குகளையும் நீதிமன்றங்களே விசாரித்துத் தீர்ப்பளிப்பது தற்காலத்தில் இயலாததாகிவிட்டது. நீதிமன்றங்களின் வேலைப் பளு மிகுந்துள்ளது. மேலும் நிருவாகத்துறை சம்பந்தமான பிரச்சினைகளுக்குத் தீர்ப்பளிப்பதற்குக் குறிப்பிட்ட அரசாங்கத் துறையின் விதி முறைகளை நன்கு அறிந்திருக்க வேண்டும். துறை விதிகள் பற்றி அறிவு சம்பந்தப்பட்ட துறை அலுவலர்களுக்கு மிகுதியாக இருக்கும். எனவே, நிருவாக சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரித்துத் தீர்ப்புக்கூறும் அதிகாரம் துறை அலுவலர்களுக்கே அளிக்கப்பட்டுள்ளது. ஆட்சித்துறை நீதிமன்றங்களும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இரு உலகப் பெரும் போர்களின் போதும் நீதித்துறைக்கு மாறுபட்ட பல தனி நீதிமன்றங்கள் நிறுவப்பட்டன. மேலும் சில சமயங்களில் சாதாரண நீதிமன்றங்களுக்குச் செல்வதும் தடைசெய்யப்பட்டுள்ளன. 1946ஆம் ஆண்டின் இங்கிலாந்தின் தேசியக் காப்புறுதிச் சட்டம் ஆணையாளர்களை நியமித்து அவர்களுக்கு விதிகளையும், விதிமுறைகளையும் வகுக்கும் அதிகாரத்தையும், வழக்குகளை விசாரிக்கும் அதிகாரத்தையும் அளித்துள்ளது. இவ்வாணையாளர்கள் நீதிபதிகளுமல்லர்; இவர்கள் வகுத்த விதிகள் சாதாரணச் சட்டங்களும் அல்ல; இவர்களது அலுவலகம் சாதாரண நீதிமன்றங்களும் அல்ல. இவைகள் டெய்சியின் சட்டத்தின் ஆட்சிக்கோட்பாட்டிற்கு முரணுக இருப்பதையும், முழுமையான சட்டத்தின் ஆட்சி நடைமுறையில் இல்லாதிருப்பதையும் ஆட்சித்துறைச் சட்டங்களும், ஆட்சித் துறை நீதிமன்றங்களும் செயல்படுவதையும் காணலாம்.

ஒப்படைக்கப்பட்ட சட்டஞ்செய்யுரிமையின் காரணமாக ஆட்சித்துறையினர் விதிகளை வகுக்கின்றனர். சட்டமன்றங்களின் வேலைப்பளு அதிகரித்திருப்பதால் சட்ட விதிகள் அனைத்தையும் ஆக்குவதில்லை. சட்டத்தின் பரந்த எல்லைக் கோடுகளை மட்டும் சட்டமன்றம் வகுத்து அவைகளை நிரப்பும் அதிகாரத்தை ஒப்படைக்கப்பட்ட சட்டஞ்செய்யுரிமையால் (Delegated Legislation) ஆட்சித்துறையினருக்கு அளித்துள்ளது. ஆட்சித் துறையினர் தன் யுக்தி அதிகாரங்களைப் (Discretionary Powers) பயன்படுத்தி விதிகளை வகுத்துச் செயல்

படுத்துகின்றனர். இந்தத் தன் யுக்தி அதிகாரங்கள் சட்டத்தின் ஆட்சிக் கோட்பாட்டிற்கு முரணானவைகளாகும். இருப்பினும் தவிர்க்க முடியாதவைகளாகிவிட்டன. எனவே, சட்டத்தின் ஆட்சி நடைமுறையில் இல்லாதிருப்பதைக் காணலாம்.

'அரசர் தவறிழைக்க இயலாது' என்ற கோட்பாட்டின் படி அரசர்மீது நீதிமன்றத்தில் வழக்குத்தொடர இயலாது. அரசர் தலைமை அமைச்சரைத் துப்பாக்கியால் தலையில் சுட்டுக் கொன்றாலும் இங்கிலாந்தின் நீதிமன்றங்கள் கவனிக்க இயலாது என்று கூறப்படுகிறது. ஏனெனில், மன்னர் சட்டத்திற்கு மேற்பட்டவர், அப்பாற்பட்டவர். அவர் மீது குற்ற நடவடிக்கையோ, உரிமையியல் நடவடிக்கையோ மேற்கொள்ள இயலாது. அரசருக்கு அளிக்கப்பட்டுள்ள இத்தவிர்ப்புச் சட்டத்தின் ஆட்சிக்கு முரணானதாகும். அரசருக்கு அளிக்கப்பட்ட இச் சலுகை நாளடைவில் அரசு ஊழியர்களுக்கு அளிக்கப்படலா யிற்று. எனவே, டெய்சி கண்ட சட்டத்தின் ஆட்சி இங்கிலாந்தில் நிலவுவதில்லை.

சட்டத்தின் முன் சமத்துவம் என்ற சட்டத்தின் ஆட்சிக் கோட்பாடு இங்கிலாந்தில் மெய்ப்பிக்கப்படுவதில்லை. இராணுவ வீரர்கள் இராணுவச் சட்டத்தின்படி இராணுவ நீதிமன்றத்தில் விசாரிக்கப்படுகிறார்கள். நீதிபதிகள் என்ற முறையில் தாங்கள் செய்யும் குற்றங்களுக்கும் தவறுகளுக்கும் நீதிபதிகளுக்குப் பாதுகாப்பளிக்கப்படுகிறது. சர்வதேசச் சட்டத்தின்படி தூதாண்மை அலுவலர்களுக்குச் சட்டத்திலிருந்து விலக்கு அளிக்கப்படுகிறது. 1947ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டத்திற்கு முன் பிரபுக்கள் சாதாரண நீதிமன்றத்திலும், சாதாரண நீதிபதிகளாலும் விசாரிக்கப்படுவதில்லை. பிரபுக்களாலேயே விசாரிக்கப்பட்டனர். அரசர் எந்த ஒப்பந்தங்களையும் மீறலாம். இதற்காக நீதிமன்ற நடவடிக்கைகளை மேற்கொள்ள இயலாது. அயல் நாடுகளுக்குச் செல்லும் அனுமதிச் சீட்டை உள்துறைச் செயலாளர் வழங்கலாம். அல்லது வழங்க மறுக்கலாம் இதற்காக எந்த நீதிமன்றத்திலும் வழக்குத் தொடர இயலாது. தொழிற் சங்க அலுவலர்களின் செயல்களுக்காகத் தொழிற்சங்கத்தின் மீது நடவடிக்கை மேற்கொள்ள இயலாது.

டைசி கூறுவது போல இங்கிலாந்து மக்கள் உரிமைகள் அனைத்தும் நீதிமன்றத் தீர்ப்புகளில் இருந்தே தோன்றுவதில்லை. பொதுச்சட்டத்திலிருந்தும் தோன்றுகின்றன. பேச்சுரிமை, இல வசக்கல்வி, பத்திரிக்கைகளின் உரிமை, கூட்டம் கூடும் உரிமை,

ஓய்வு ஊதிய உரிமை ஆகிய பல பாராளுமன்றச் சட்டத்தால் தோற்றுவிக்கப்பட்டன.

சட்டத்தின் ஆட்சியில் அரசாங்க அலுவலர்களின் அத்து மீறிய நடவடிக்கைகளுக்குத் தனி முறையில் பொறுப்புச் சுமத்தப் படும். ஆனால், கருதிச் செய்த அத்துமீறல்களுக்கும், பணியின் போது தவிர்க்க இயலாத சூழ்நிலையில் நடந்த செயல்களுக்கும் வேறுபாடுகள் காட்டப்படவில்லை. மேலும், சட்டத்தால் அளிக்கப் பட்ட அதிகார வரம்பினை மீறி அரசாங்க அலுவலர்கள் இழைத்த நட்டத்திற்கு ஈடுபெறுதல் எளிதன்று. தீங்கு நிகழ்ந்த ஆறு மாத காலத்திற்குள் இழப்பீடு பெற நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும். தவறினால் நடவடிக்கை காலாவதியாகிவிடும். மேலும், அரசாங்க அலுவலருக்கு எதிராகக் கொண்டுவரப்படும் நடவடிக்கை நிரூபிக்கப்படவில்லையென்றால் ஏராளமான செலவுத் தொகை அளிக்கவேண்டும். குடிமக்கள் அரசாங்க அலுவலர் களுக்கு எதிராக நடவடிக்கை மேற்கொள்வது ஊக்குவிக்கப்படுவ தில்லை.

டைசியின் சட்டத்தின் ஆட்சிக் கோட்பாடுகள் வரையறைக் குட்பட்டதானாலும், அவைகளில் உண்மைகள் இல்லாமலில்லை. சட்டத்தின் ஆட்சி இங்கிலாந்தின் அரசியலமைப்பின் அடிப் படைக் கோட்பாடாகத் திகழ்கிறது. யதேச்சாதிகாரம் கட்டுப் படுத்தப்படுகிறது; ஒப்படைக்கப்பட்ட சட்டஞ்செய்யுரிமையின் செயல்முறைகள் கண்காணிக்கப்படுகின்றன; தன் யுக்தி அதிகா ரத்தைச் செயல்படுத்தும் முறை வரையறுக்கப்பட்டுள்ளது. சார் பற்ற சுதந்திரமான நீதிமன்றங்களும், சாதாரணச் சட்டங்களும் மக்களின் உரிமைகளைக் காத்து நிற்கின்றன.

## ஆட்சித்துறைச் சட்டம்

இங்கிலாந்து சட்டத்தின் ஆட்சியால் சிறப்புற்றிருப்பது போல பிரான்சு ஆட்சித்துறைச் சட்டத்தால் சிறப்புற்றிருக்கிறது. பிரான் சின் ஆட்சித்துறைச் சட்டத்திற்கு டிராய்ட் அட்மினிஸ்டிராடிப் (Droit Administratif) என்று பெயர் ஆகும். பிரான்சில் இரு வகைச் சட்டங்களும் இருவகை நீதிமன்றங்களும் நடைமுறையி லிருக்கின்றன. சாதாரண நீதிமன்றங்கள் எனப்படும் நீதித்துறை நீதிமன்றங்களும், ஆட்சித்துறை நீதிமன்றங்களும், தனியார் சட்டமும், பொதுச் சட்டமும் இருக்கின்றன. சாதாரண நீதி மன்றங்கள் (Ordinary Judicial Courts) குடிமக்களிடையே தோன் றும் வழக்குகளைத் தனியார் சட்டத்தின் (Private Law) மூலம்

தீர்க்கின்றன. ஆட்சித்துறை நீதிமன்றங்கள் (Administrative Courts) அரசாங்கத்திற்கும் அரசாங்க அலுவலர்களுக்கும் இடையே தோன்றும் வழக்குகளையும், அரசாங்க அலுவலர்களுக்கும் சாதாரணக் குடிமக்களுக்கும் இடையே தோன்றும் வழக்குகளையும் ஆட்சித் துறைச் சட்டத்தின் (Administrative Law) மூலம் தீர்க்கின்றன. பிரான்சிலும் மற்றச் சில ஐரோப்பிய நாடுகளிலும் நீதித் துறையில் இரு வகைச் சட்டங்களையும் நீதிமன்றங்களையும் காணலாம்.

## ஆட்சித் துறைச் சட்டத்தின் தோற்றம்

பிரான்சும் மற்ற ஐரோப்பிய நாடுகளும் ரோமானியச் சட்டத்தைப் பின்பற்றுகின்றன. ரோமானியச் சட்டத்தின்படி அரசு முக்கியமானதாகவும் அதுவே அதன் அடையப்படவேண்டிய குறிக்கோளாகவும் (end), மக்கள் கருவியாகவும் (Means) கருதப் படுகின்றது. எனவே, அரசின் அலுவலர்கள் தனிச் சிறப்புடையவர்களாகவும், சாதாரண நீதிமன்றத்திற்கும் சட்டத்திற்கும் அப்பாற்பட்டவர்களாகவும் எண்ணப்படுகின்றனர். பிரான்சின் புரட்சிக்கு முன்பே நீதித்துறை ஆட்சித்துறையின் மீது செல்வாக்குக் கொள்வது வெறுக்கப்பட்டது. பிரான்சில் தோன்றிய புரட்சியின் காரணமாக நீதித்துறையின் மீதான வெறுப்பும் ஐயமும் அதிகரித்தன. நீதித்துறை கட்டுப்படுத்தப்பட வேண்டுமென்பதும், ஆட்சியிலும் ஆட்சித்துறை அலுவலர்களின் நடவடிக்கைகளிலும் நீதித்துறையின் தலையீடு தவிர்க்கப்பட வேண்டுமென்பதும், புரட்சிக் கால அரசாங்கத்திலும் புரட்சிக்குப் பின் தோன்றிய அரசாங்கத்திலும் கொள்கையாக அமைந்தது. மேலும் மாண்டஸ்க்யூவின் அதிகாரப்பிரிவினைக் கோட்பாட்டின்படி நீதித் துறையும் செயல்துறையும் ஒன்றன்மீது ஒன்று ஆதிக்கம் செலுத்துவது தடுக்கப்பட்டது. ஆட்சித்துறையின் மீதான நீதித்துறையின் செல்வாக்கு ஆட்சித் துறையின் திறமையைக் குறைக்கும்.

புரட்சிக்காலத்தே நிலவிய சட்டமுறையும் நீதிமுறையும் நெப்போலியனால் பின்பற்றப்பட்டன. பிரான்சின் மூன்றாவது குடியரசிலும் ஆட்சித்துறைச் சட்டமும், ஆட்சித்துறை நீதிமன்றங்களும் தொடர்ந்து செயல்பட்டன. மேலும் நீதித்துறை வழக்குகளையும் ஆட்சித்துறை வழக்குகளையும் தீர்மானிப்பதற்காக ஒரு தனி நீதிமன்றமும் நிறுவப்பட்டது. பிரான்சு நாட்டின் நீதித் துறை வரலாற்றில் ஆட்சித்துறைச் சட்டம் முக்கிய இடத்தை வகிக்கிறது.

**ஆட்சித்துறைச் சட்டத்தின் இலக்கணம்**

ஆட்சித்துறைச் சட்டத்திற்குப் பல்வேறுபட்ட இலக்கணங்கள் கூறப்படுகின்றன. இங்கு அவைகளில் சிலவற்றைக் காணுதல் பயனுடையதாகும்.

பேராசிரியர் ஸ்ட்ராங் (Strong) அவர்களின் இலக்கணப்படி, ஆட்சித்துறைச் சட்டம் விதிகளின் தொகுப்பு ஆகும். இது ஆட்சித்துறை அலுவலர்களுக்கும் குடிமக்களுக்கும் இடையே உள்ள தொடர்பை ஒழுங்குபடுத்துகிறது. அரசு அலுவலர்களின் நிலையையும் குடிமக்களின் உரிமைகளையும், கடமைகளையும், நடைமுறைப்படுத்தும் முறையையும் தீர்மானிக்கிறது.,[16]

டாக்டர் ஜென்னிங்ஸ் (Dr. Jennings) கருத்துப்படி, 'ஆட்சித்துறைச் சட்டமென்பது ஆட்சித்துறையைப் பற்றிய சட்டமாகும். ஆட்சித்துறை அலுவலின் அமைப்பு, அதிகாரங்கள், கடமைகள் ஆகியனவற்றைத் தீர்மானிக்கிறது.,[17]

பேராசிரியர் வேடேவின் (Wade) கூற்றுப்படி, 'ஆட்சித்துறை சட்டமென்பது நீதித்துறையின் கட்டுப்பாட்டையோ ஒப்படைக்கப்பட்ட சட்டஞ்செய்யுரிமையையோ சார்ந்ததல்ல ; ஆட்சியைச் சார்ந்ததாகும்.[18]

மன்ரோ(Munro)கருத்துப்படி, ஆட்சித்துறைச்'சட்டமென்பது சட்டவியல் முறையாகும். அரசாங்க அலுவலர்கள் தங்கள் அலுவலின் போது ஆற்றிய செயல்களுக்குச் சாதாரண நீதிமன்றங்களுக்குப் பொறுப்பல்ல. தனிச் சிறப்பு நீதிமன்றங்களுக்கே பொறுப்புள்ளவர்கள்.,[19]

[16] Strong : 'The body of rules which regulate the relations of the administrative authority towards private citizens and determines the position of state officials, the rights and liabilities of private citizens in their dealings with these officials as representatives of the state and the procedure by which these rights and liabilities are enforced.'

[17] Dr. Jennings : 'Administrative law is the law relating to the administration. It determines the organisation, powers and duties of administrative authorities.'

[18] Prof. Wade: 'Administrative law is primarily concerned not with judicial control nor even legisltation by delegation but with administration. '

[19] W. B. Munro : 'Administrative law is a system of jurisprudence which on the other hand relieves public officials from amenability to the ordinary courts for acts performed in their official capacity, and on the other hand, sets up a special jurisdiction to hold them accountable.,

ரினி டேவிட் (Rene David) இலக்கணப்படி பிரான்சின் ட்ராயிட் அட்மினிஸ்ட்ரேட்டிப் விதிகளின் தொகுப்பாகும். இது ஆட்சிப் பொதுத்துறையின் அமைப்பையும் கடமைகளையும் தீர்மானிக்கிறது. ஆட்சித்துறை அலுவலர்களுக்கும் குடிமக்களுக்கும் உள்ள தொடர்பை ஒழுங்குபடுத்துகிறது.[20]

**பேராசிரியர் டைசியின் கருத்து**

டைசியின் கருத்துப்படி பிரான்சின் ஆட்சித்துறைச் சட்டம் கீழ்க்காண்பனவற்றைத் தீர்மானிக்கிறது.

(i) அரசு அலுவலர்களின் நிலையையும் கடமைகளையும் தீர்மானிக்கிறது.

(ii) அரசின் பிரதிநிதிகளாகிய பொதுத்துறை அலுவலர்களோடு தொடர்புகொள்ளும்போது தோன்றும் தனிக் குடிமகனின் உரிமைகளும் கடமைகளையும் தீர்மானிக்கிறது.

(iii) உரிமைகளும் கடமைகளும் நடைமுறைப்படுத்தக் கூடிய முறையையும் தீர்மானிக்கிறது.

பேராசிரியர் டைசி ஆட்சித்துறையின் சட்டத்தின் கொள்கைகளை விளக்கியுள்ளார். அரசாங்கமும், அரசாங்க அலுவலர்களும் குடிமக்களுக்கு எதிரான உரிமைகளையும் சலுகைகளையும் உடையவர்கள் ஆவர். இவ்வுரிமைகளையும் சலுகைகளையும் தீர்மானிப்பதில் தனி முறை கையாளப்படுகிறது. இம்முறை குடிமக்களிடையே உரிமைகளைத் தீர்மானிக்கும் முறையிலிருந்து மாறுபட்டதாகும். அரசாங்க நிறுவனங்களான செயல் துறையும் நீதித்துறையும் ஒன்றிற்கொன்று சுயேச்சையானவை.

டைசி ஆட்சித்துறைச் சட்டத்தின் தன்மைகளையும் பண்புகளையும் குறிப்பிடுகிறார். அரசாங்கம், அரசாங்க அலுவலர்கள் ஆகியவர்களுக்கும் குடிமக்களுக்கும் உள்ள தொடர்பு குடிமக்களிடையே உள்ள தொடர்பு முறையிலிருந்து வேறுபட்டதாகும். அரசிற்கும் குடிமக்களுக்கும் உள்ள தொடர்பில் சாதாரண நீதிமன்றங்கள் தலையிடுவதில்லை. ஆட்சித்துறை நீதிமன்றங்களே தொடர்பினைத் தீர்மானிக்கின்றன. சாதாரண நீதிமன்றத்திற்கும் ஆட்சித்துறை நீதிமன்றத்திற்கும் தங்கள் அதிகார வரம்பில் பிணக்குகள் தோன்

[20] Rene David: 'Droit Administratif can be defined Frances as the body of rules which determine the organisation and the duties of public administration and which regulatet the relations of the administrative authorities towards the citizens of the state.

றும். இவைகளைத் தீர்த்து வைக்கத் தனி நீதிமன்றங்கள் உண்டு. இவைகளுக்குப் பூசல் நீதிமன்றம் (Court of conflicts) என்று பெயர். அரசாங்க அலுவலர்கள் தங்கள் அதிகார வரையறைக்குள் செயல்படும்போதும், மேலதிகாரிகளின் ஆணைக்குட்பட்டுச் செயல் படும்போதும் தவறு நிகழ்ந்திருந்தால் அதற்குச் சாதாரண நீதி மன்றத்தின் தலையீட்டிலிருந்து பாதுகாப்பு உண்டு. இக்கூறுபாடு களைக் கொண்டதே ஆட்சித்துறைச் சட்டமாகும்.

## ஆட்சித்துறைச் சட்டத்தின் நிறைகள்

ஆட்சித்துறைச் சட்டத்தை பிரான்சின் மக்கள் தங்கள் சுதந்திரத்தின் அடிக்கல் எனக் கருதுகின்றனர். அரசாங்க அலு வலர்கள் குடிமக்களுக்குக் கருதி இழைத்த தீங்கும், அலுவலின் போது தவிர்க்க முடியாது நிகழ்ந்த தீங்கும் வேறுபடுத்தப்படு கின்றன. அலுவலர்கள் கருதி இழைத்த தீங்குகளுக்கு அவர்களிட மிருந்து சாதாரண நீதிமன்றத்தின் மூலம் இழப்பீடு பெறும் வாய்ப் பும், அலுவலின்போது நிகழ்ந்த தீங்கிற்கு அரசாங்கத்திடமிருந்து ஆட்சித்துறை நீதிமன்றத்தின் மூலம் இழப்பீடு பெறும் வாய்ப்பும் உள்ளன. எனவே, குடிமக்களுக்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்கப் படுகிறது.

பூசல் நீதிமன்றம் சாதாரண நீதிமன்றத்தால் விசாரிக்கப்பட வேண்டிய வழக்குகளையும், ஆட்சித்துறை நீதிமன்றத்தால் விசாரிக்கப்பட வேண்டிய வழக்குகளையும் ஆய்ந்து வேறுபடுத்து கிறது. மேல்முறையீடுகளின் மீதான அரசு குழுவின் தீர்ப்பு நேர்மையாகவும் சாய்தலின்றியும் அமைகிறது. அரசாங் கத்திற்கெதிரான வழக்குகளில் குடிமக்கள் வெல்வதைக் காணலாம்.

கார்னரின் கூற்றுப்படி, குடிமக்களுக்கு நல்ல பாதுகாப்பும், அர சாங்க அலுவலர்களால் இழைக்கப்பட்ட தீங்குகளுக்கு இழப்பீடும் வேறு எந்த நாட்டிலும் கிடைக்காத அளவிற்கு உறுதியாகக் கிடைக்கிறது.[21] இங்கிலாந்தில் ஒரு சாதாரணக் குடிமகன் இழப் பீடு பெறுதல் கடினமானதாகும். ஆனால் பிரான்சில் ஆட்சித்

[21] Garner: 'It can now be said without possibility of contradiction that there is no other country in which the rights of the private individuals are so well protected (as in France) against the arbitratiness, the abuses, and the illegal conduct of administrative authorities, and where people are so sure of receiving reparation for injuries sustained on account of such conduct.

துறை நீதிமன்றத்திலிருந்து உறுதியான இழப்பீட்டை எளிதில் பெறலாம்.

ஆட்சித்துறை நீதிமன்றத்தின் நீதிபதிகள் துறை நுணுக்கங்களையும் துறையின் விதிமுறைகளையும் சாதாரண நீதிமன்றத்தின் நீதிபதிகளைவிட நன்கு அறிந்திருப்பார்கள். எனவே ஆட்சித் துறை பற்றிய வழக்குகளில் சாதாரண நீதிமன்றங்களைவிட ஆட்சித்துறை நீதிமன்றங்கள் நேர்மையானதும், துரிதமானதுமான நீதி வழங்க இயலும்.

அரசாங்கப்பணி மேற்கொண்ட நேரத்தில் நிகழ்ந்த தீங்குகளுக்கு அரசாங்க அலுவலர்கள் தனிப்பட்ட முறையில் பொறுப்பாக்கப்படுதல் தவிர்க்கப்பட்டு அரசாங்கமே இழப்பீடு வழங்குவதால் அரசு அலுவலர்களுக்குப் பாதுகாப்பும் நியாயமும் கிடைக்கிறது.

ஆட்சித்துறை நீதிமன்றத்தில் வழக்காடுவதற்கான செலவு சாதாரண நீதிமன்ற வழக்கில் ஏற்படும் செலவைவிடக் குறைவாகும். மேலும், நீதி பெறுவதில் சாதாரண நீதிமன்றத்தில் ஏற்படும் காலதாமதம் ஆட்சித்துறை நீதிமன்றத்தில் ஏற்படுவதில்லை. சாதாரணச் சட்டத்துறையில் காணப்படும் நடைமுறை விதிகள் ஆட்சித்துறைச் சட்டத்தில் காணப்படுவதில்லை. எனவே தாமதம் தவிர்க்கப்படுகிறது.

ஆட்சித்துறைச் சட்டம் தொகுக்கப்படாததாகவும், தீர்ப்பு வழிச் சட்ட (Case Law) மாகவும் அமைந்துள்ளது. எனவே, நெகிழ்ந்து கொடுத்து மாறுபடும் சூழ்நிலைகளுக்குப் பொருத்த முடையதாக அமைகிறது.

ஆட்சித்துறை நீதிமன்றங்கள் சாதாரண நீதிமன்றத்தின் வேலைப் பளுவினைக் குறைக்கின்றன. தாமதமின்றி நீதி பெற இது வழிவகை செய்கிறது.

**ஆட்சித்துறைச் சட்டத்தின் குறைகள்**

ஆட்சித்துறைச் சட்டத்தில் தனிமனித சுதந்திரம் பாதுகாக்கப்படாது என்று ஆங்கிலேயர்களும் அமெரிக்கர்களும் கருதுகின்றனர். இதில் செயல்துறையினர் சாதாரண நீதிமன்றத்தில் விசா

ரிக்கப்படுவதில்லை. இவர்களுக்குத் தனிச் சலுகைகளும் பாது காப்புகளும் வழங்கப்பட்டுள்ளன.

ஆட்சித்துறை நீதிமன்றங்கள் அரசாங்க அலுவலர்களுக்குச் சாதகமாக அமைகின்றன. இந்த நீதிமன்றங்களிலிருந்து குடிமக் களுக்குச் சரியான நீதி வழங்கப்படுவதில்லை.

ஆட்சித்துறை நீதி முறையில் குற்றவாளியே நீதிபதியாகவும் அமைகிறார். ஆட்சித்துறை அலுவலரின் குற்றத்தை ஆட்சித் துறை நீதிமன்றமே விசாரிக்கும்போது நீதியின் நீர்மை குன்றி விடும்.

ஆட்சித்துறை நீதிமன்றங்கள் சட்டத்தின் அடிப்படையில் தீர்ப்பளிக்காமல் அரசாங்கக் கொள்கைகளின் அடிப்படையில் தீர்ப்பளிக்க வாய்ப்பு இருக்கிறது. நீதிபதிகளின் தீர்ப்புகள் நீதி மன்றங்களின் முன்தீர்ப்பின் (Precedent) அடிப்படையில் அமை யாமல் அரசியல் தீர்ப்பின் (Political Decision) அடிப்படையில் அமையும்.

### ஆட்சித்துறைச் சட்டத்தின் ஏற்புடைமை

ஆட்சித்துறைச் சட்டத்தின் மீதான குறைகள் மிகைப்படுத் தப்பட்டனவாகும். டைசி கருதுவது போல் ஆட்சித்துறை நீதி மன்றங்கள் ஒருசார்புடையனவாகவும், குடிமக்களின் உரிமைகளைப் பறிப்பனவாகவும் அமைவதில்லை. ஆட்சியாளர்களின் யதேச்சாதி காரத்திலிருந்து மக்கள் காக்கப்படாமலும் இல்லை. ஆட்சித்துறைச் சட்டம் தங்கள் சுதந்திரத்தின் அடிப்படை என்று பிரான்சு மக்கள் கருதுகிறார்கள். மேலும், ஆட்சித்துறையின் தலைமை நீதிமன்ற மாகிய நாட்டின் குழு (Council of State) பெரிதும் மதிக்கப்படு கிறது. இதன் சார்பின்மையும் நேர்மையும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றத்திற்கு ஒப்பாக எண்ணப் படுகிறது.

டைசியின் கூற்று இங்கிலாந்தில் மெய்ப்பிக்கப்படவில்லை. சமூகப் பொருளாதாரச் சீர்திருத்தச் சட்டங்களின் காரணமாக ஆட்சித்துறைச் சட்டமும் ஆட்சித்துறை நீதிமன்றமும் இங்கிலாந் திலும் தோன்றியுள்ளன. ஆட்சித்துறைச் சட்டம் சட்டத் தின் ஆட்சியின்மீது செல்வாக்குக் கொண்டுள்ளதைக் காணலாம்.

## ஒப்பீட்டு அட்டவணை

| ஆட்சித் துறைச் சட்டம் | சட்டத்தின் ஆட்சி |
|---|---|
| **வேற்றுமைகள் :** | |
| 1. அலுவலர்களுக்குத் தனிச் சட்டம். | அனைவருக்கும் ஒரே சட்டம். |
| ஆட்சித்துறைச் சட்டம் | சாதாரணச் சட்டம். |
| 2. அலுவலர்களுக்குத் தனி நீதிமன்றம் | அனைவருக்கும் ஒரே நீதி மன்றம். |
| ஆட்சித்துறை நீதிமன்றம் | சாதாரண நீதிமன்றம் |
| 3. அலுவலர்களுக்குத் தனிச் சலுகைகளும் பாதுகாப்பும் உண்டு. | இல்லை. |
| 4. அலுவலருக்கும் குடிமகனுக்கும் தனிமுறை | அனைவருக்கும் ஒரே முறை |
| 5. அரசாங்கம் இழப்பீடு கொடுக்கிறது. | அலுவலர்கள் இழப்பீடு கொடுக்க வேணடும். |
| 6. துரித விசாரணை | தாமத விசாரணை |
| 7. நீதிமன்ற வேலைப்பளு குறைவு | வேலைப்பளு அதிகம் |
| 8. வழக்காடச் செலவு குறைவு. | செலவு அதிகம். |
| **ஒற்றுமைகள் :** | |
| 1. செயலாட்சிக்குக் கட்டுப் பட்டவர்கள் | செயலாட்சிக்குக் கட்டுப்பட்டவர்கள் |
| 2. தீர்ப்பு வழிச்சட்டம். | தீர்ப்பு வழிச்சட்டம் |
| 3. அலுவலருக்கு எதிராக வழக்காடி உரிமை பெறல் | அலுவலருக்கு எதிராக வழக்காடி உரிமை பெறல். |

இங்கிலாந்தில் நிலவிய சட்டத்தின் ஆட்சி பற்றியும், பிரான்சில் நிலவும் ஆட்சித்துறைச் சட்டம் பற்றியும், அவைகளின் தன்மைகள், கூறுபாடுகள், வேறுபாடுகள், ஒற்றுமைகள் பற்றியும் கண்டோம். சட்டத்தின் ஆட்சிக்கும் ஆட்சித்துறைச் சட்டத்திற்குமுள்ள வேறுபாடுகள் சுருங்கிக் கொண்டு வருகின்றன. சட்டத்தின் ஆட்சி நிலவும் இங்கிலாந்தில் ஆட்சித்துறைச் சட்டத்தின்

தோற்றத்தையும், ஆட்சித்துறைச் சட்டம் நிலவும் பிரான்சில் சட்டத்தின் ஆட்சியையும் காணலாம்.

## முக்கிய வினுக்கள்

1. நீதித்துறையின் பணிகள் யாவை ?
2. நீதித்துறையின் சுதந்திரம் எவ்விதம் காக்கப்படுகிறது?
3. நீதித்துறைக்கும் அரசாங்கத்தின் இதரத் துறைகளுக்கும் உள்ள தொடர்பினை வரைக.
4. அமெரிக்க ஐக்கிய நாடுகள், இந்தியா, இங்கிலாந்து ஆகிய நாடுகளின் நீதித்துறையமைப்பைக் கூறுக.
5. சட்டத்தின் ஆட்சியை விளக்கி அதன் வரையறைகளை எடுத்துக்காட்டுக.
6. ஆட்சித்துறைச் சட்டத்தைத் தெளிவுபடுத்தி, அதன் நிறை குறைகளை ஆய்க.
7. சட்டத்தின் ஆட்சிக்கும் ஆட்சித்துறைச் சட்டத்திற்கும் ஒப்பீடு காட்டுக.
8. நீதித்துறைச் சுதந்திரத்தின் தேவை யாது. தற்கால மக்களாட்சியில் நீதித்துறை சுதந்திரமாக இயங்கக் கையாளப்படும் முறைகளை ஆய்க. (செ. ப.க. ஏப்ரல், 1972)
9. நீதிப்புனராய்வு, சட்டத்தின் ஆட்சி குறிப்பு வரைக. (செ. ப. க. ஏப்ரல், 1972)
10. சட்டத்தின் ஆட்சியை ஆட்சிச் சட்டத்தோடு ஒப்பிடுக. (செ. ப. க. ஏப்ரல், 1973)
11. தற்கால அரசுகளில் நீதித்துறைக்கு, சட்டத்துறைகளோடும் நிறைவேற்றுத்துறைகளோடுமுள்ள தொடர்பினை வாதிடுக. (செ. ப. க. செப்டம்பர், 1973)
12. ஆட்சித்துறைச் சட்டம் என்றால் என்ன ? சமீப காலத்தில் அதன் வளர்ச்சிக்குரிய காரணங்களைக் கூறுக. (செ. ப. க, செப்டம்பர், 1973)
13. சட்டத்தின் ஆட்சி என்றால் என்ன ? அது ஆட்சிச் சட்டத்திலிருந்து எவ்வாறு வேறுபடுகிறது ? (செ. ப. க. செப்டம்பர், 1975)
14. அமெரிக்க உச்ச நீதிமன்றம் குறிப்பு வரைக. (செ. ப. க. (செப்டம்பர், 1975)

# 13. அரசியல் கட்சிகள்

## (Political Parties)

**அரசியல் கட்சிகள்:** அரசியல் கட்சியின் இலக்கணம்—அரசியல் கட்சிகளின் தன்மைகள் — கட்சிகள் தோன்றுவானேன் ?

**அரசியல் கட்சிகளின் பங்கும் பணிகளும்.**

**அரசியல் கட்சிகளின் நிறைகளும் குறைகளும்:** அரசியல் கட்சிகளின் நிறைகள் — அரசியல் கட்சிகளின் குறைகள்.

**கட்சி முறைகள் :** இருகட்சி முறையும் பல கட்சி முறையும்— இரு கட்சி முறை—பல கட்சி முறை—இரு கட்சிமுறையின் நிறைகளும் பல கட்சிமுறையின் குறைகளும்—இரு கட்சிமுறையின் குறைகளும் —பல கட்சி முறையின் நிறைகளும் ஒருமைக் கட்சிமுறையும் பன்மைக் கட்சி முறையும்—ஒருமைக் கட்சி—ஒரு கட்சியும் பல கட்சியும் வேறுபாடுகள்.

இங்கிலாந்தில் அரசியல் கட்சிகள்—அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியல் கட்சிகள்— இந்தியாவில் அரசியல் கட்சிகள்— பிரான்சில் அரசியல் கட்சிகள்— சோவியத் ரஷ்யாவில் கட்சிமுறை.

**செல்வாக்குக் குழுக்கள்.**

அரசியல் கட்சிகள் குடியாட்சியின் முக்கிய அம்சமாக விளங்குகிறது. பிரதிநிதித்துவ மக்களாட்சியில் பொதுமக்கள் கருத்தை உருவாக்குவதற்கும், அரசாங்கத்திற்கும் குடிமக்களுக்கும் இடையே சுமுகமான தொடர்பை ஏற்படுத்துவதற்கும், குடியாட்சி அரசாங்கம் செயல்படுவதற்கும் அரசியல் கட்சிகள் இன்றியமையாதனவாகும். எனவே, அரசியல் கட்சிகள் பற்றிய அறிவும் தெளிவும் நமக்கு அவசியமாகிறது.

# அரசியல் கட்சிகள்

## அரசியல் கட்சியின் இலக்கணம்

**கெட்டில்** (Gettle) இலக்கணம்: 'அரசியல் கட்சி என்பது ஏறக்குறைய அமைப்புடையதோர் குடிமக்களின் அரசியல் குழுவாகும். தங்கள் அரசியல் அதிகாரத்தால் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்திப் பொதுக்கோட்பாடுகளைச் செயலாக்குவர்.'[1]

**பர்க்கின்** (Burk) இலக்கணம்: 'ஏற்றுக்கொண்ட சில கொள்கைகளின் அடிப்படையில் கூட்டு முயற்சியால் தேசிய நலனை முன்னேற்ற அமைக்கும் மக்கள் குழுவே அரசியல் கட்சியாகும்.'[2]

**ஃபைனர்** (Finer) கருத்து: 'அரசியல் கட்சி என்பது விருப்பமுடைய உறுப்பினர்களின் அமைப்புடைய குழுவாகும். இது தனது சக்தியை அரசாங்கத்தின் அதிகாரத்தை அடைவதில் செலுத்தும்.'[3]

**மேக் ஐவர்** (Mac Iver) கூற்று: 'அரசியல் கட்சி என்பது சில கொள்கையின் அடிப்படையில் அமைக்கப்பட்ட சங்கமாகும். இது அரசியலமைப்பு முறையில் அரசாங்கத்தை அமைக்க முற்படும்.'[4]

**லீக்காக்கின்** (Leacock) கருத்து: 'அரசியல் கட்சி என்பது கூட்டு முதலீட்டு நிறுவனத்தைப் (Joint Stock Company)போன்றதாகும். இதன் உறுப்பினர்கள் அரசியல் அதிகாரத்தை அடைவதில் பங்கு கொள்வர்.'

அரசியல் கட்சிகளின் இலக்கணங்களிலிருந்து அவைகளின் தன்மைகளை உய்த்துணரலாம்.

## அரசியல் கட்சிகளின் தன்மைகள்

அரசியல் கட்சிகள் அமைப்புடையனவாக இருக்கவேண்டும். அமைப்பு அற்ற கட்சிகள் தெருக்கூட்டம் போலாகிவிடும். தொடர்ந்து செயல்படுதல் இயலாது. அரசியல் கட்சிகள் கொள்கை

[1] Gettle: 'A political party consists of a group of citizens more or less organised, who act as a political unit and who by the use of their political power aim at controlling the government and carrying out its general policies'

[2] Burke: 'A party is a body of men united for promoting by their joint endeavours the national interest upon some particular principle in which they are all agreed.'

[3] Finer: 'A political party is an organised body with voluntary membership, its concerted energy being employed in the pursuit of political power.

[4] Mac Iver: 'Political party is an association organised in support of some principle or policy which by constitutional means it endeavours to make the determinant of government'

களின் அடிப்படையில் அமைய வேண்டும். அப்போதுதான் ஒருமித்த கொள்கைகளை உடையவர்கள் இணைந்து ஒரு கட்சியாக அமைய முடியும். அரசியல் கட்சிகள் தேசிய ரீதியில் அமைந்திருத்தல் சிறப்புடையதாகும். தேசிய நலனே கட்சிகளின் குறிக்கோளாக இருக்க வேண்டும். கட்சிகளுக்குத் திட்டங்கள் அவசியம். அப்போதுதான் திட்டங்களை நிறைவேற்றுதல் கட்சிகளின் நோக்கமாக அமையும். மேலும், அரசியல் கட்சிகளுக்கு அரசாங்கத்தை அமைக்க வேண்டுமென்ற எண்ணமும், அரசியல் அதிகாரத்தை அடைய வேண்டுமென்ற அவாவும் இருக்கவேண்டும். அரசாங்க அதிகாரத்தை அடைவதற்கும், அரசாங்கத்தை அமைப்பதற்கும் அரசியலமைப்பு முறையைக் கையாள வேண்டுமேயொழியப் பலாத்காரத்தைப் பயன்படுத்தக்கூடாது.

அரசியல் கட்சிகள் சுயநலக் கூட்டத்தி (Faction) லிருந்து வேறுபட்டதாகும். சுயநலக் கூட்டத்தினர் சுயநோக்குடையவர்களாகவும், குறிப்பிட்ட சிலர் நலன் பேணுபவராகவும் இருப்பர். அரசியல் கட்சிகளுக்குப் பரந்த நோக்கமும் தேசிய நலனும் முக்கியமாகும்.

அரசியல் கட்சிகள் அரசியலமைப்பில் இடம் பெற்றனவல்ல. சட்ட அமைப்பிற்கு வெளியே (Extra Constitutional and Extra Legal) தோன்றி வளர்ந்தனவாகும். இருப்பினும் சட்ட அமைப்பிற்கு அவசியமானதாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பை வகுத்த பெரியோர்கள் அரசியல் கட்சியைத் தவிர்க்க எண்ணினார்கள். கட்சிகளால் பிரிவும், குழப்பமும், முரண்பாடும் தோன்றும் எனக் கருதினார்கள். ஆனால் கூட்டாட்சியின் மத்திய அரசாங்கத்தை ஆதரிப்பவர்களும், கூட்டாட்சியின் உறுப்புகளான மாநிலங்களின் உரிமைகளை ஆதரிப்பவர்களுமாக இரு கட்சியினர் முறையே அலெக்ஸாண்டர் ஹாமில்டன் தலைமையிலும், தாமஸ் ஜெபர்சன் தலைமையிலும் தோன்றினர். கட்சிகள் பற்றின குறிப்புகள் அரசியலமைப்பில் காணப்படாவிடினும் குடியாட்சி நாடுகளில் கட்சிகள் நிலவுகின்றன.

அரசியல் கட்சிகள் அமைப்புடையனவாகவும், கொள்கையுடையனவாகவும், தேசியத் தன்மையுடையனவாகவும், திட்டங்களுடையனவாகவும் அரசாங்கத்தையமைக்கும் நோக்கமுடையனவாகவும், அரசியலமைப்பிற்குட்பட்டுச் சமாதான வழியைப் பின்பற்றுவனவாகவும் அமைய வேண்டும். இவைகள் சுயநலக் கூட்டத்திலிருந்து வேறுபட்டனவாகும். மேலும் அரசியலமைப்பிற்கு வெளியே தோன்றி வளர்ந்து அரசியலமைப்பின் மீது செல்வாக்குக் கொண்டுள்ளன.

### கட்சிகள் தோன்றுவானேன்?

மாறுபாடும் முரண்பாடும் மனித இயல்பாகும். உலகத்தில் இந்நாள்வரை கோடான கோடி மக்கள் தோன்றி மறைந்துள்ளனர்; வாழ்கின்றனர். ஆனால், இவர்களில் எந்த இருவரும் உடலாலும், உள்ளத்தாலும் ஒருதன்மையுடையவர்கள் இல்லை என்பதைத் துணிந்து கூற இயலும். இந்த முரண்பாட்டின் அடிப்படையில்தான் கட்சிகளின் தோற்றம் அமைந்துள்ளது. மேலும் பொருளியல் சித்தாந்தங்களில் மக்கள் வேறுபடுகின்றனர். பொதுவுடைமையைப் பேணுபவர்களும், தனிச்சொத்துப் பேணுபவர்களும் உண்டு. இவர்கள் முறையே கம்யூனிஸ்ட் கட்சியினராகவும், சுதந்திரக் கட்சியினராகவும் அமைகின்றனர். சூழ்நிலை காரணமாகவும் கட்சிகள் தோன்றுகின்றன. மகன் தந்தை பின்பற்றும் அரசியல் கட்சியில் சேருகிறுன். மலைவாழ் மக்கள், பிற்பட்ட மக்கள் தங்கள் நலம்பேணக் கட்சிகளை அமைக்கின்றனர். உழவர், ஆலைத் தொழிலாளர் தங்கள் கட்சிகளை அமைத்துக் கொள்கின்றனர். மத அடிப்படையிலும் அரசியல் கட்சிகள் தோன்றுகின்றன. இந்துமகாசபை, ஜனசங்கம், முஸ்லிம் லீக் ஆகிய கட்சிகளின் தோற்றம் சமய அடிப்படையைக் கொண்டனவாகும். மக்கள் தங்கள் நலம்பேணத் தங்களுக்கு இணக்கமானவர்களுடன் இணைந்து கட்சிகளைத் தோற்றுவிக்கின்றனர்.

## அரசியல் கட்சிகளின் பங்கும் பணிகளும்

குடியாட்சி நாட்டில் அரசியல் கட்சிகளின் பங்கும் பணிகளும் முக்கியமானவை. அரசியல் கட்சிகள் இல்லாவிடில் பிரதிநிதித்துவ மக்களாட்சி நடைபெற இயலாது. அரசியல் கட்சிகள் திட்டங்களையும் கொள்கைகளையும் வகுத்து வாக்காளர்களின் முன் சமர்ப்பிக்கின்றன. தங்கள் கொள்கைகளுக்கும் திட்டங்களுக்கும் மக்களிடம் ஆதரவு திரட்டுகின்றன. தங்கள் வேட்பாளர்களைத் தேர்ந்தெடுத்துத் தேர்தலில் போட்டியிடுகின்றன. தேர்தலில் பெரும்பான்மைத் தொகுதிகளில் வெற்றி பெற்ற அரசியல் கட்சி அரசாங்கத்தை அமைக்கிறது. தேர்தல் மேடைகளில் அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்ற நீண்டகாலத்திட்டங்களையும் குறுகிய காலத் திட்டங்களையும் வகுக்கின்றன. அவ்வப்போது பொது மக்களின் கருத்துகளையும் நாடித்துடிப்பையும் உணர்கின்றன. எதிர்க்கட்சியினர் காட்டும் குறைகளில் ஆளும்கட்சியினர் கவனம் செலுத்துகின்றனர். பெரும்பான்மையினரது ஆதரவு அகலா வண்ணம் நடந்துகொள்கின்றனர். பெரும்பான்மையை இழக்கும் போது பதவியிலிருந்து விலகி மாற்றுக் கட்சிக்கு இடம் அளிக்கின்றனர். கட்சிமுறை இருப்பதால் புரட்சியின்றி அமைதியான முறையில் அரசாங்கத்தை மாற்றியமைக்க இயலுகிறது.

பொதுமக்கள் கருத்தை உருவாக்குவதில் அரசியல் கட்சிகள் முக்கியப் பங்கு கொள்கின்றன. பல கட்சி வேட்பாளர்கள் தேர்தலில் போட்டியிடுகின்றனர். பல கொள்கைகள் வாக்காளர்கள் முன் வைக்கப்படுகின்றன. இவைகளில் ஒன்றை மக்கள் தேர்ந்தெடுக்க இயலுகிறது. இதன் வழியாகப் பொதுமக்களின் கருத்தை அறிய முடிகிறது.

பொது மக்களுக்கு அரசியல் அறிவை ஏற்படுத்துவதிலும் கட்சிகளின் பங்கும் பணியும் முக்கியமானதாகும். அரசியல் மேடைகளிலும், பத்திரிக்கைகளின் வாயிலாகவும், துண்டுப் பிரசுரங்களின் வழியும் பொதுமக்களுக்கு அரசியல் கல்வி அளிக்கப் படுகிறது.

பாராளுமன்றமுறை அரசாங்கத்தில் அரசியல் கட்சிகளின் பங்கு முக்கியமானது. ஆளும் கட்சியினரும் எதிர்க் கட்சியினரும் பாராளுமன்ற முறையை வெற்றிபெறச் செய்கின்றனர். ஆளும் கட்சியினர் அரசாங்க இயந்திரத்தை இயக்குகின்றனர். அரசாங்கத்தில் நிகழும் குறைகளைச் சுட்டிக்காட்டி எதிர்க்கட்சியினர் மக்களை விழிப்படையச் செய்கின்றனர். ஆளும் கட்சியினர் தங்கள் தவறைத் திருத்துவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது

பொதுவாழ்விலும், தங்கள் நாட்டின் அரசாங்கத்திலும் மக்கள் ஈடுபாடுடையவர்களாக இருப்பதற்கு அரசியல் கட்சிகளே காரண மாகும். அரசியல் கட்சிகள் தங்கள் கொள்கைகளை விளக்கும் போதும், மக்கள் வாக்குச் சாவடிகளுக்குச் சென்று வாக்களிக்கும் போதும் பொதுவாழ்வில் ஈடுபாடுடையவர்களாக மாறுகிறார்கள். இதன் காரணமாகத் தாங்கள் வாழும் வட்டாரத்தின் ஆட்சியில் மக்கள் ஆர்வத்துடன் பங்கு கொள்கின்றனர்.

அரசியல் கட்சிகள் அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் தொடர்பை ஏற்படுத்தும் இணைப்புச் சங்கிலியாக அமைகின்றன. பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் அரசியல் கட்சிகளைச் சார்ந்தவர்களாகவும் மக்களின் பிரதிநிதிகளாகவும் அமைகின்றனர். பாராளுமன்ற அரசாங்கத்தில் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை யுடையவர்களே அரசாங்கத்தை அமைக்கின்றனர். தலைவர் முறை அரசாங்கத்திலும் தலைவர் ஒரு கட்சியினராகவும் மக்களின் பிரதிநிதியாகவும் இருக்கிறார். கட்சிகளின் வழியாக அரசாங்கக் கொள்கைகளுக்கு மககளின ஆதரவு திரட்டப்படுகிறது. மக்களின் குறைகளும் அரசாங்கத்தை அடைகிறது. கட்சிகள் மக்களுக்கும் அரசாங்கத்திற்கும் தொடர்பை ஏற்படுத்துகின்றன.

அரசாங்கத்தின் நிறுவனங்களிடையே இணக்கத்தை ஏற்படுத்துவதிலும் கட்சிகள் பங்கு கொள்கின்றன. செயல்துறையும் பாராளுமன்றமும் சுமூகமாகச் செயல்படுவதற்கு அரசியல் கட்சிகளே காரணமாகும். பாராளுமன்ற முறையில் சட்டமன்றத்தில் பெரும்பான்மையுடையார் செயல்துறையினராக அமைந்து செயல் துறைக்கும் சட்டமன்றத்திற்குமிடையே நல்லுறவை ஏற்படுத்துகின்றனர். தலைவர் முறை அரசாங்கத்தில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பின்பற்றப்படுவதால் செயல்துறைக்கும் சட்டமன்றத்திற்கும் முரண்பாடு தோன்றலாம். இம் முரண்பாட்டை அகற்றுவதில் கட்சிகள் பங்கு கொள்கின்றன. மேலும், பாராளுமன்றத்தின் மேலவைக்கும் கீழவைக்கும் ஏற்படக்கூடிய பூசல்களும் கட்சி முறை இருப்பதால் தவிர்க்கப்படுகிறது. கீழவையில் நிறைவேறிய தீர்மானம் மேலவையில் உள்ள ஆளும் கட்சியினரால் ஆதரிக்கப்பட்டு நிறைவேற்றப்படுகிறது.

அரசாங்கத்தில் தொடர்ச்சி நிலவுவதற்கு அரசியல் கட்சிகளே காரணமாகும். ஆளும் கட்சியினர் மக்களின் நம்பிக்கையை இழக்கும்போது எதிர்க்கட்சியினர் அரசாங்கத்தை ஏற்று நடத்துகின்றனர். இதனால் அரசாங்கம் தொடர்ச்சியாக நடைபெற வழிவகை ஏற்படுகிறது. ஆளும் கட்சியினர் விழிப்புடன் செயல்படுகின்றனர். எதிர்க்கட்சியினர் விழிப்போடு கவனிக்கின்றனர்.

குடியாட்சி நாட்டில் அரசியல் கட்சிகளின் பங்கும் பணிகளும் முக்கியமானவைகளாகும். மன்ரோ (Munro) கூற்றுப் படி, 'சுதந்திரமான அரசியல் கட்சிகளின் அரசாங்கம் குடியாட்சியின் மறு பெயராகும்.'[5]

## அரசியல் கட்சிகளின் நிறைகளும் குறைகளும்

### அரசியல் கட்சிகளின் நிறைகள்

அரசியலில் நாகரிகமும், ஒழுங்கும், கட்டுப்பாடும் அரசியல் கட்சிகளால் தோன்றுகின்றன. தனது உறுப்பினர்கள் ஒழுங்கை மீறும்போது கட்சிகள் ஒழுங்கு நடவடிக்கைகளை மேற்கொள்ளுகின்றன. அரசியல் கட்சிகள் இல்லாவிடில் ஒழுங்கின்மையும் குழப்பங்களுமே தோன்றும்.

ஏழைகளும் தேர்தலில் நின்று வெற்றி பெறுவதற்கான வாய்ப்புகள் அரசியல் கட்சிகளால் ஏற்படுகின்றன. அரசியல் கட்சி தனது வேட்பாளர்களுக்காகத் தேர்தல் செலவுகளைச் செய்கிறது.

[5] Munro: 'Government by free political parties is merely another name for democratic government.

கட்சி ஊழியர்கள் தேர்தலில் பணியாற்றுகின்றனர். கட்சிச் சின்னத்தில் போட்டியிட்டு எளிதில் வெற்றிபெற முடிகிறது. கட்சியில் இல்லாத தனியாட்கள் போட்டியிட்டு வெற்றி பெறுதல் கடினமாகும்.

வேட்பாளரைத் தேர்தலுக்கு முன்பே கட்சி அறிமுகப்படுத்துகிறது வேட்பாளர்களின் குறைநிறைகளை மக்கள் சீர்தூக்கிப் பார்ப்பதற்கு காலமும் வாய்ப்பும் வாக்காளர்களுக்குக் கிடைக்கிறது. அரசியல் கட்சிகளின் தேர்தல் பிரச்சாரத்தினால் பல கட்சிகளின் கொள்கைகளை நன்கு அறிய வாய்ப்பு ஏற்படுவதோடு மக்களுக்குப் பொதுவாழ்வில் ஈடுபாடு தோன்றுகிறது.

மேக் ஐவர் கருத்துப்படி, அரசியல் கட்சிகள் வகுப்பு வாத அரசைத் தேசிய அரசாக மாற்றுகின்றன.[6] நிலச்சுவான்தார்களான பிரபுக்களே ஆட்சியில் செல்வாக்குக் கொண்டிருந்தனர். அதிகார வர்க்கத்தின் கையில் அரசாங்கம் இருந்தது. மதமும் மதக்குருமார்களும் அரசியலில் ஆதிக்கம் கொண்டிருந்தனர். இவ் வகுப்பார்களின் அரசை மாற்றியமைத்து அரசியல் கட்சிகள் தேசிய அரசைத் தோற்றுவித்தன.

அரசியல் கட்சிகள் மக்களின் மாறுபாடுகளுக்கு இடம் அளிக்கின்றன. மக்கள் ஒரே தன்மையுடையவர்கள் அல்லர். மாறுபட்ட தன்மையுடையவர்களாவர். கொள்கையில் வேறுபட்ட அரசியல் கட்சிகள் நிலவுவதால் மக்கள் தங்கள் விருப்பத்திற்கேற்ப அரசியற் கட்சிகளில் சேர்ந்து கொள்ளலாம்.

அரசியல் கட்சிகளின் முக்கியமான நன்மை பிரதிநிதித்துவ மக்களாட்சி நடைபெற வகை செய்வதாகும். கட்சிகள் இல்லையேல் குடியாட்சி முறையை நடைமுறைப்படுத்த இயலாது. அமெரிக்க ஐக்கிய நாடுகள் இவ்வுண்மையை நிரூபித்துள்ளன. அரசியல் கட்சிகளை அரசியல் அமைப்பை வகுத்த பெரியார்கள் ஒதுக்கி இருந்தும், அதன் தோற்றம் மக்களாட்சியில் தவிர்க்க முடியாதது ஆகிவிட்டது.

மக்களை ஒருமைப்படுத்துவதிலும் இணைப்பதிலும் அரசியல் கட்சிகள் பயனுடையனவாக இருக்கின்றன. பல்வேறுபட்ட மக்கள் கட்சியின் கொள்கையின் கீழ் இணைந்து இருக்கின்றனர். ஒவ்வோர் அரசியல் கட்சியிலும் இனத்தாலும், மதத்தாலும்,

[6] Mac Iver: 'The party system was in particular the mechanism by which the class state was trans formed into the nation-state.'

மொழியாலும் வேறுபட்டமக்கள் பலர் இருப்பதை நாம் காணலாம். கட்சிக் கொள்கையின் கீழ் இவர்கள் ஒன்றுபடுகின்றனர். இந்த ஒருமைப்பாடு அரசியல் கட்சியின் சாதனையாகும்.

அரசியல் கட்சிகளால் புரட்சிகள் தவிர்க்கப்படுகின்றன. பலாத்காரம் தவிர்க்கப்பட்டு நாகரிகமான எதிர்ப்பும், குறை கூறுதலும் ஏற்பட்டுள்ளன. அரசாங்கத்தை மாற்றுவதற்கு முற்காலத்தில் புரட்சிகள் பல நடந்தேறின. தற்காலத்தில் அரசியல் கட்சிகளின் காரணமாகப் புரட்சிகளின்றி அரசாங்கத்தை மாற்ற இயலுகிறது. அரசியல் கட்சிகள் இல்லையேல் பொதுமக்கள் கருத்தை எளிதில் பிரதிபலிக்க இயலாது. கொள்கையைக் காட்டி வெற்றி பெற்ற அரசியல் கட்சிகள் பொதுமக்களின் கருத்தைப் பிரதிபலிப்பனவாக அமைகின்றன. ஒரு கொள்கைக்கு மக்கள் காட்டும் ஆதரவிலிருந்து பொதுமக்களின் கருத்தை அறியலாம்.

**அரசியல் கட்சிகளின் குறைகள்**

அரசியல் கட்சிகள் மக்களிடையே பிளவை ஏற்படுத்துகின்றன. வலது சாரிகள் என்றும், இடதுசாரிகள் என்றும் தீவிரக் கொள்கைகளைக் கடைப்பிடிப்பதால், நாட்டில் குழப்பமும், அடிதடிகளும், இரத்தம் சிந்தலும் தோன்றுகின்றன.

மக்களை அரசியல் கட்சிகளின் அடிப்படையில் பிரிப்பது விரோதமானதாகும். ஆளுங்கட்சியில் உள்ளவர்கள் அனைவரும் மாறுபட்ட கொள்கையினர் எனக் கருதுவதும் எதிர்க்கட்சியில் உள்ளவர்கள் அனைவரும் மாறுபட்ட கொள்கையினர் எனக்கொள்வதும் தவறாகும். இந்தத் தவறான பிரிவின் அடிப்படையிலேயே அரசியல் கட்சிகள் அமைந்துள்ளன. நாட்டின் மக்களை இயற்கைக்கு மாறான செயற்கை முறையில் அரசியல் கட்சிகள் பிரிக்கின்றன.

அரசியல் கட்சிகள் பொதுமக்கள் கருத்தைத் தவறாகப் பயன் படுத்துகின்றன. சரியான பொதுமக்கள் கருத்து உருவாக்கப் படுவதில்லை. உண்மையை மறைத்து விடுவதும் பொய்யைப் பிரச்சாரம் செய்வதும் அரசியல் கட்சிகளிடையே காணலாம். ஒவ்வொரு கட்சியும் தங்கள் கோட்பாட்டைப் புகழ்ந்தும் மற்றக் கட்சியை இகழ்ந்தும் பொதுமக்களைக் குழப்பத்தில் ஆழ்த்துகின்றன. கொள்கையை முன்வைத்து மக்களின் சிந்தனையைத் தூண்டுவதற்குப் பதிலாக மக்களின் மனவெழுச்சி தூண்டப்படுகிறது. கட்சிகளின் கொடி, சின்னம் ஆகியவைகளைக் காட்டி மக்களின் பரிவைப் பெறுகின்றனர். தலைவர்களின் பெயரைக்

கூறியும், அவர்களது கூலோசங்களைக் கூறியும் மக்களைக் கட்சிகள் ஏமாற்றுகின்றன. முறைகேடாக எதிர்க்கட்சிகளைக் குறை கூறு வது கட்சிகளின் கொள்கையாக அமைந்துவிடுகிறது. இந்தச் சூழலில் சரியான பொதுமக்கள் கருத்து உருவாக்கப் படுவதில்லை.

அரசியல் கட்சிகளினால் தனிமனிதனின் ஆளுமை வளர்வ தில்லை. தனி மனிதன் தனது கருத்துக்களைத் தெரிவிக்க இயலு வதில்லை. கட்சித்தலைவர்கள் கட்சியில் செல்வாக்கு மிக்கவர்களா கவும் மற்றவர்கள் கண்மூடித்தனமாகத் தங்கள் கட்சித்தலைவரைப் பின்பற்ற வேண்டியவர்களாகவும் அமைகின்றனர். கட்சிக் கட்டுப்பாடு என்ற போர்வையில் தனியார் வெளியீடு தடுக்கப் படுகிறது. கட்சியின் முடிவையும் தலைவரின் முடிவையும் அப்படியே ஏற்க வேண்டியவர்களாகக் கட்சி உறுப்பினர்கள் அமை கின்றனர்.

திறமையுடையவர்களும், நல்லவர்களும், தேர்தலில் போட்டி யிடுவதை விரும்பாதவர்களும் கட்சியில் சேருவதில்லை. நாடு இவர் களின் சேவையைப் பயன்படுத்த இயலாது போகிறது. மேலும் பெரும்பான்மைக் கட்சியினரே அரசாங்கத்தை அமைப்பதால் எதிர்க்கட்சியிலிருக்கும் திறமை மிக்கவர்கள் அரசாங்கத்தில் நேரடிப் பங்கு கொள்வதற்கில்லை. எனவே, கட்சி முறையில் திறமையுள்ளவர்களுக்குச் சந்தர்ப்பங்கள் அளிக்கப்படுவதில்லை.

எதிர்க்கட்சிகள் எப்போதும் எதிர்க்கும் கட்சிகளாகவே அமை கின்றன. அரசாங்கம் நல்லதைச் செய்தாலும் எதிர்ப்பதைக் கொள்கைகளாகவும், கண்டனத் தீர்மானங்களைக் கொண்டு வரு வதில் கருத்துடையதாகவும் இருக்கின்றன. இதனால் பயனுள்ள சட்டங்களையும், அவசியமானதும் அவசரமானதுமான சட்டங்களை யும் துரிதமாக நிறைவேற்ற இயலுவதில்லை.

அரசியல் கட்சிகளினால் அநீதிகள் தோன்றுகின்றன. தேர்த லில் வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றிய அரசியல் கட்சிகள் சுயநலவாதிகளாக மாறுகின்றனர். பொதுநலனுக்காகச் சட்டங் கள் ஆக்கப்படுவதில்லை; நிர்வாகம் நடத்தப்படுவதில்லை. கட்சி நலனைப் பேணுவதிலேயே கருத்துடையவர்களாக அமைகின் றனர் வாக்குகளைப் பெறுவதற்கான சட்டங்களே செய்யப்படுகின் றன அரசாங்கப் பணியில் கட்சியில் ஈடுபாடு உடையவர்களும் கட்சி அனுதாபிகளும் சேர்க்கப்படுகின்றனர். திறமை உள்ள வர்கள் ஒதுக்கப்படுகின்றனர். தேர்தலில் உதவி செய்தவர்கள் கவனம் பெறுகின்றனர். அமெரிக்க அரசியலில் நிலவிய ஸ்பாயில் முறையின் சீர்கேடு அரசியல் கட்சியால் தோன்றியதாகும். பொது நீதி பாதிக்கப்பட்டு நாட்டில் அநீதி தோன்றுகிறது.

நாட்டின் நலனும் தேசிய நலனும் புறக்கணிக்கப்பட்டு கட்சி நலன் கவனிக்கப்படுகிறது. மக்களிடையே பிளவு மனப்பான்மை தோற்றுவிக்கப்படுகிறது. தேசத்தின் ஒருமைப்பாட்டிற்கு குந்தகம் விளைகிறது. தேசப்பற்றுப் புறக்கணிக்கப்பட்டுக் கட்சிப் பற்றும், கட்சித் தலைவர்களின் மீது பற்றும் தோற்றுவித்து வளர்க்கப்படுகின்றன.

ஒரு கட்சி முறையின் தோற்றம் குடியாட்சி முறையை அழிப்பதாக அமைந்துள்ளது. குடியாட்சிமுறை வெற்றிபெற வேண்டுமென்றால் குறைந்தது இரு அரசியல் கட்சிகளாவது இருக்க வேண்டும்.

அரசியல் கட்சிகளில் குறைகளும் நிறைகளும் இருப்பதைக் காண்கிறோம். குறைகள் இருக்கின்ற காரணத்தினால் கட்சிகளை அடியோடு அகற்றிவிட முடியாது. பிரதிநிதித்துவ மக்களாட்சி நடைபெற வேண்டுமென்றால் அரசியல் கட்சிகள் இன்றியமையாதனவாகும். எனவே, அரசியல் கட்சிகள் கொள்கை அடிப்படையில் அமைக்கப்பட வேண்டும். தூய்மை செய்யப்பட வேண்டும். நேர்மையும் நாணயமும் உடையவர்கள் அரசியல் கட்சியில் உறுப்பினர்களாகவும் தலைவர்களாகவும் இருக்க வேண்டும்.

பொதுக்கல்வி வளர்ச்சியினாலும், சார்பும் அச்சமும் அற்ற பத்திரிக்கைகளாலும், சரியான தலைவர்கள் தோற்றுவிக்கப்படுவதாலும், பொதுமக்கள் கருத்து முறையாக உருவாக்கப்படுவதாலும், குடிமக்களின் ஆளுமை வளர்க்கப்படுவதாலும் அரசியல் கட்சிகளின் குறைகளை அகற்றி அவைகளைத் தூய்மைப்படுத்த இயலும்.

பாராளுமன்றத்தில் குழுமுறையைக் கையாளுவதாலும், குடியொப்பம், தொடக்கவுரிமை, மீட்புரிமை, மக்கள் வாக்கெடுப்பு ஆகிய நேர்முகக் குடியாட்சி முறைகளுக்கு முக்கியத்துவம் அளிப்பதாலும், நல்ல குடியாட்சி மரபுகளைத் தோற்றுவிக்கப்படுவதாலும் அரசாங்கத்தில் அரசியல் கட்சிகளின் அக்கிரமத்தை அகற்றலாம் எனப் பேராசிரியர் சிட்விக் கருதுகிறார்.

## கட்சி முறைகள்

பிரதிநிதித்துவ மக்களாட்சி முறைக்கு அரசியல் கட்சிகள் அவசியம் என்று பார்த்தோம். அரசியல் கட்சிகளின் எண்ணிக்கை நாட்டிற்கு நாடு வேறுபடுகின்றன. ஒருசில நாடுகளில்

கட்சிமுறையும், சிலநாடுகளில் இரு கட்சி முறையும், மேலும் சில நாடுகளில் பல கட்சி முறையும் இருக்கின்றன. ஒரு நாட்டின் சூழ் நிலைகளுக்கேற்ப அரசியல் கட்சிகளின் எண்ணிக்கை மாறுபடு கின்றன. இரு கட்சி முறைக்கும் பல கட்சிமுறைக்குமுள்ள நிறை குறைகளையும், ஒரு கட்சி முறைக்கும் பன்மைக்கட்சி முறைக்கு முள்ள நிறைகுறைகளையும் காண்போம்.

### இரு கட்சி முறையும் பல கட்சி முறையும்

**இரு கட்சி முறை:** ஓர் அரசில் இரு அரசியல் கட்சிகள் மட்டும் இருந்து ஒன்று ஆளும் கட்சியாகவும், மற்றது எதிர்க்கட்சி யாகவும் செயல்பட்டால் இரு கட்சி முறை எனப்படும். இங்கிலாந் தில் நெடுநாளாக இரு கட்சிமுறை நடைமுறையில் உள்ளது. கன்சர்வேட்டிவ் கட்சி எனப்படும் பழமை வாதக் கட்சியும், லிபரல் கட்சி எனப்படும் மிதவாதக் கட்சியும் இருந்தன. தற் போது லிபரல் கட்சியின் இடத்தை லேபர் கட்சி எனப்படும் தொழிற்கட்சி பிடித்து விட்டது. இங்கிலாந்தில் பழமை வாதக் கட்சியும் தொழிற்கட்சியுமே உள்ளன. வேறுசில கட்சிகள் இருந் தாலும் அவைகள் அரசியலில் முக்கியத்துவம் உடையனவல்ல. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் டெமாக்கரிட்டிக் கட்சியும், ரிபப் பிளிக்கன் கட்சியும் உள்ளன. அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் இங்கிலாந்திலும் இரு அரசியல் கட்சிகளே அரசியல் வானில் முக் கியத்துவமுடையனவாக இருப்பதால் இரு கட்சிமுறை எனப்படு கிறது.

### பல் கட்சி முறை

ஒரு நாட்டின் அரசியலில் இரு கட்சிகளுக்கு அதிகமாகப் பல கட்சிகள் இருந்தால் பல கட்சிமுறை எனப்படுகிறது. பல ஐரோப் பிய நாடுகளில் குறிப்பாக பிரான்சு நாட்டில் பதினைந்திற்கு மேற் பட்ட அரசியல் கட்சிகள் இருக்கின்றன. இந்தியாவிலும் பல அரசியல் கட்சிகள் இருப்பதை நாம் காணலாம்.

### இரு கட்சிமுறையின் நிறைகளும் பல கட்சிமுறையின் குறைகளும்

இரு கட்சிமுறையில் பெரும்பான்மையுடைய ஒரு கட்சி ஆளும் கட்சியாகவும், பெரும்பான்மை பெறு மற்றக்கட்சி எதிர்க்கட்சியாக வும் அமைகின்றன. அரசாங்கம் நிரந்தரமுள்ளதாகவும், வலிமை யுள்ளதாகவும், நீண்டகாலத் திட்டங்களை வகுத்துச் சட்டமாக்கக் கூடியதாகவும் இருக்கும். இரும்புக் கம்பி போல வலிமை பெற்றி

ருக்கும். பேராசிரியர் லாஸ்கி[7] (Laski)யின் கருத்துப்படி இரு கட்சி முறையில் அரசாங்கம் தனது கொள்கைகளைச் சட்ட ஏட்டிற்குக் கொண்டு செல்ல முடியும். கட்சியில் ஒருமைப்பாடும் இணக்கமும் உடையவர்கள் அரசாங்கத்தை நடத்துவதால் குழு உணர்ச்சியுடனும் கூட்டுறவு உணர்ச்சியுடனும் செயல்படுவர். மேலும், பாராளுமன்ற முறை அரசாங்கத்திற்கு இரு கட்சிமுறை மிகச் சிறப்பாகப் பொருந்தும். தங்கள் தலைவரான தலைமை அமைச்சரின் கீழ் கூட்டுப் பொறுப்புடன் அமைச்சரவை இயங்கும்.

பல கட்சி முறையில் அரசாங்கத்தை அமைக்கும் அளவிற்கு எந்த ஒரு தனிக்கட்சிக்கும் பெரும்பான்மை கிடைக்காது. எனவே பல அரசியல் கட்சியினர் இணைந்து கூட்டுஅரசாங்கம் அமைப்பர். இவர்கள் கொள்கையிலும் திட்டங்களிலும் ஒருமைப்பாடு உடையவர்கள் அல்லர். கூட்டில் உள்ள ஒவ்வொரு கட்சிக்கும் ஒவ்வொரு கொள்கையும் திட்டமும் இருக்கும். இவைகள் ஒன்றிற்கொன்று முரண்பட்டனவாக அமையும். அரசாங்கக் கொள்கையிலும் திட்டங்களிலும் ஒருமைப்பாடு காண்பது அரிதாகிவிடும். இவைகள் திட்டமற்றதாகவும் அமையும். பல கட்சியினரிடையே நிலவும் கூட்டு ஒரு இணைப்புச் சங்கிலி போன்றதாகும். சங்கிலியின் ஒரு கண்ணி நெகிழ்ந்தால் சங்கிலியே வலுவற்றதாகும். இதேபோலக் கூட்டு அமைப்பில் உள்ள ஒரு கட்சி விலகினாலும் அரசாங்கம் ஆட்டம் காணும். மேலும் பல கட்சித் தலைவர்களும் கூட்டு அரசாங்கத்தில் இருப்பதால் ஒருவர் தலைமையை மற்றவர் முழு மனதோடு ஏற்க மாட்டார்கள். கூட்டரசாங்கத்தின் நிலையற்ற, வலிமையற்ற தன்மையையும், அடிக்கடி வீழ்வதையும் காணலாம். எனவே, நீண்டகாலக் கொள்கையை நிரந்தரமாகக் கடைப்பிடிக்க இயலாது. பிரான்சு நாட்டில் 1870ஆம் ஆண்டிலிருந்து 1934ஆம் ஆண்டிற்குள் 88 அமைச்சரவை மாறியதையும், ஒவ்வோர் அமைச்சரவையும் சராசரி ஒன்பது மாதகாலம் கூடப் பதவியில் இல்லாததையும், அதே நேரத்தில் இங்கிலாந்தில் 18 அமைச்சரவையே இருந்ததையும், அவைகள் சராசரி மூன்றரை ஆண்டுகள் பதவியிலிருந்ததையும் காணலாம். பிரான்சு ஓர் ஆண்டில் நான்கு மாதங்கள் அமைச்சரவையாலும், மீதமுள்ள எட்டு மாதங்கள் பாராளுமன்றத்தாலும் ஆளப்படுகிறது என்று கூறுவர். அரசாங்கம் அடிக்கடி மாறுவதால் அரசாங்கக் கொள்கைகளும் அடிக்கடி மாறும். ஓர் அரசாங்கம் மாறி மற்ற

[7] Prof. Laski: 'It is the only method by which the people can at the electoral period directly choose its government. It enables the government to drive its policy to the statute book. It makes known and intelligible the results of its failure. It brings an alternative government into immediate being.'

அரசாங்கம் ஏற்படுத்தப்படும் போது முந்திய அரசாங்கத்தின் திட்டங்கள் கைவிடப்பட்டுப் புதிய திட்டங்கள் கையாளப்படும். அரசாங்கம் அடிக்கடி மாறுவதால் அதிகார வர்க்கத்தினரான அரசாங்க அலுவலர்களின் ஆதிக்கம் தலை தூக்கும்.

இரு கட்சி முறையில் உள்ள எதிர்க்கட்சியினருக்கு அரசாங்கத்தை அமைக்கும் வாய்ப்பு இருக்கிறது. எனவே, பொறுப்புள்ள எதிர்க்கட்சியாகப் பணியாற்றி மக்களின் ஆதரவைப் பெற முயல்வர். தாங்கள் தெரிவிக்கும் எதிர்ப்பும் நியாயமானதாக உண்மையின் அடிப்படையில் அமையும். அரசாங்கமும் எதிர்க்கட்சியினரின் கருத்துகளை மனதில் கொண்டு செயலாற்றும்.

பலகட்சி முறையில் எதிர்க்கட்சியினர் ஒருமுகமாகச் செயல்படுவதில்லை. எதிர்க்கட்சியினரிடையே முரண்பட்ட கொள்கைகள் நிலவும். ஒருமைப்பாடுடைய எதிர்க்கட்சியாக இருக்காது. அனைவரின் ஆதரவும் உடைய ஓர் எதிர்கட்சித் தலைவரும் இருக்க இயலாது. எதிர்க்கட்சியினருக்கு அரசாங்கத்தை அமைக்கும் உறுதியான வாய்ப்பு இருக்க முடியாது. எனவே, எதிர்க்கட்சியினரிடமிருந்து பொறுப்பற்ற எதிர்ப்புகளே தோன்றும்,

இருகட்சி முறையில் எளிதில் அரசாங்கத்தை அமைக்க இயலுகிறது. இரு கொள்கைகளில் ஒரு கொள்கையும், இரு கட்சிகளில் ஒரு கட்சியும் அரசாங்கத்தை அமைப்பது திட்டமானதாகும். இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பதில் வாக்காளர்கள் குழப்பமின்றித் தெளிவுடையவர்களாக இருக்கின்றனர். ஒருகட்சி அரசாங்கத்தை அமைப்பதும், மற்றது எதிர்க்கட்சியாவதும் உறுதியானதாகும். அரசியலமைப்பு முறிவுபடாமல் செயல்படுகிறது.

பலகட்சி முறையில் ஒரு கட்சி அரசாங்கத்தை அமைப்பது இயலாததாகும். எக்கட்சி ஆட்சிக்கு வருமென்பதை வாக்காளர்கள் எண்ணிப் பார்க்க இயலாது. அரசாங்கத்தை அமைப்பதில் குழப்பங்களும் நெருக்கடிகளும் தோன்றுகின்றன. அரசியலமைப்பு முறிவுபடுவதற்கான வாய்ப்புகள் அடிக்கடி தோன்றுகின்றன.

இரு கட்சி முறையில் எளிதில் பொறுப்பை நிர்ணயிக்கமுடியும் அரசாங்கத்தின் திட்டங்களின் வெற்றிக்கும் தோல்விக்கும் ஒரே ஆளும் கட்சி ஆளாக்கப்படுகிறது. பல கட்சி முறையில் கூட்டு அரசாங்கம் அமைக்கப்பட்டிருப்பதால் தனி ஒரு கட்சி மீது பொறுப்பைச் சுமத்த இயலுவதில்லை. எக்கட்சியும் பொறுப்பை ஏற்பதில்லை. ஒரு கட்சி மற்றதன் மீது பொறுப்பைச் சாட்டுவது இயல்பாகிவிடுகிறது.

**இருகட்சி முறையின் குறைகளும் பல கட்சி முறையின் நிறைகளும்**

இரு கட்சிமுறையில் மக்கள் இருவகையாகப் பிரிக்கப்படுகின்றனர். மக்களிடையே இருகருத்துகளே இருக்குமெனத் தவறுனதும் செயற்கையானதுமான கருதுகோளின் பேரில் இரு கட்சிமுறை செயல்படுகிறது.[8] இரு கட்சிகளுக்கும் கருத்துகளுக்கும் மாறுபட்ட கருத்துடைய ஒருவருக்கு வாய்ப்பும் பிரதிநிதித்துவமும் அளிக்க இயலுவதில்லை. சிக்கல் மிக்க சமுதாயப் பொருளாதார அமைப்பில் இருக்கும் பல்வேறு குழுக்களுக்கும், நலன்களுக்கும், கருத்துக்களுக்கும் இரு கட்சிமுறையில் வாய்ப்பும் பிரதிநிதித்துவமும் அளிக்கப்படுவதில்லை.

பல கட்சிமுறையில் விரிந்த வாய்ப்புகள் உள்ளன. தங்கள் கருத்துகளுக்கேற்ப ஏதாவது ஒன்றிற்கு வாக்களிக்கலாம். இது மக்களின் இயற்கை நெறியை ஒட்டியுள்ளது. இயற்கையில் மக்கள் பல்வேறுபட்ட கொள்கைகளையும் கருத்துகளையும் உடையவர்களாக அமைகின்றனர். பல கட்சிமுறையில் பாராளுமன்றம் மக்களின் பல்வேறுபட்ட கொள்கைகளைப் பிரதிபலிப்பதாக அமைகிறது.

பேராசிரியர் ராம்சே மூர் (Ramsay Muir) கருத்துப்படி, இரு கட்சிமுறை சட்டமன்றங்களின் தரத்தையும் மதிப்பையும் குறைக்கின்றன. அமைச்சரவையின் வல்லாட்சி இரு கட்சி முறையில் தோன்றுகிறது. பாராளுமன்றத்தில் பெரும்பான்மையிருப்பதாலும், பெரும்பான்மையினர் தங்கள் கட்சியைச் சார்ந்தவர்களாக இருப்பதாலும், எதிர்க்கட்சிகள் எதிர்த்தாலும் தாங்கள் கொண்டுவரும் மசோதா நிறைவேறுவதாலும் அமைச்சரவை வல்லாட்சிப் போக்குடையதாகிறது. மேலும், பாராளுமன்றம் உயிரோடு செயல்படும் வரை அமைச்சர்களின் பதவி உறுதி செய்யப்படுவதால் அமைச்சரவை தன் வல்லாட்சிப் பாணியை மாற்றிக்கொள்வதில்லை.

பல கட்சிமுறையில் உள்ள கூட்டு அரசாங்கத்திலிருந்து ஒரு கட்சி விலகும் போது அமைச்சரவை வீழ்கிறது. அமைச்சரவையின் வல்லாட்சி தடுக்கப்படுகிறது எனவே, அமைச்சரவை பயபக்தியோடு இயங்கும்.

இருகட்சி முறைபில் பெரும்பான்மை என்ற பெயரில் சிறுபான்மையினர் ஆட்சிசெய்கின்றனர். பெரும்பான்மைத் தொகுதி

[8] Ramsay Muir : 'The division of a whole nation into only two politicalparties, must obviously be more less or unreal or orbitrary since it would beabsurd to suggest that these could ever be only two schools of thoughtin a nation.'

களில் வெற்றிபெற்றவர்களின் மொத்த வாக்குகள் சிறுபான்மை யினர் பெற்ற வாக்குகளைவிடக் குறைவாகவும் இருப்பதுண்டு. இந் நிலையில் குறைவான எண்ணிக்கையுடைய மக்களின் பிரதிநிதி கள் பெரும்பான்மையினர் என்ற பெயரில் ஆட்சி நடத்துகின்ற னர். பெரும்பான்மை மக்களின் வாக்கைப் பெற்றவர்கள் எதிர்க் கட்சியினராக இருக்க வேண்டியுள்ளது.

பலகட்சி முறையில் அமைக்கப்படும் கூட்டு அரசாங்கத்தில் பொதுவாக மக்களின் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றவர் களே ஆட்சி நடத்துவர்.

இருகட்சி முறையில் பெரும்பான்மையினரது யதேச்சாதி காரப் போக்கு நிலவுகிறது. சிறுபான்மையினரது நலன் புறக் கணிக்கப்படுகிறது. வென்ருேருக்குத் திறைப்பொருள் (Spoils-system) என்ற அமெரிக்காவின் ஸ்பாயில்ஸ் முறை தோன்று கிறது. அரசாங்க அலுவல்களில் பெரும்பான்மைக் கட்சியினர் நியமிக்கப்படுகின்றனர்.

பல கட்சி முறையில் கூட்டரசாங்கம் அமைக்கப்பட்டுள்ளதால் எக்கட்சியும் மற்றக் கட்சி மீது யதேச்சாதிகாரம் செலுத்துவதில்லை. மற்றக் கட்சிகளின் மீது சர்வாதிகாரம் கையாளப்பட்டால் அது கூட்டரசாங்கத்தின் வீழ்ச்சிக்கு அடிகோலும். எனவே, கட்சி களின் வல்லாட்சி தடுக்கப்படுகிறது.

இரு கட்சி முறையில் குறைகள் இருப்பினும் பல கட்சி முறையில் நிறைகள் பல இருப்பினும் நிரந்தரமான அரசாங்கத்தை அமைப் பதற்கும், கொள்கைகளை நடைமுறைப்படுத்துவதற்கும், அரசாங் கத்தின் திட்டங்களில் தொடர்ச்சியை ஏற்படுத்துவதற்கும் இரு கட்சி முறையே சிறந்ததெனப் பேரறிஞர் ஃபைனர் கூறுகிருர்.

### ஒருமைக்கட்சி முறையும் பன்மைக் கட்சிமுறையும்

**ஒருமைக் கட்சி :** ஹிட்லர் காலச் ஜெர்மனியும், முசோலினி கால இத்தாலியும், தற்கால சோவியத் ரஷ்யாவும் ஒரு கட்சி முறை யுள்ள நாடுகளாகும். ஜெர்மனியில் நாசிக் கட்சியும், இத்தாலி யில் பாஸிஸ்ட் கட்சியும் சோவியத் ரஷ்பாவில், கம்யூனிஸ்ட் கட்சியும் தவிர இதரக் கட்சிகளுக்கு இடமில்லை.

ஒருமைக் கட்சியுள்ள நாடுகள் பொதுவாக வல்லாட்சி நாடு களாகவே அமைகின்றன. கட்சியானது அரசாங்கத்தின் எல்லா

நிலைகளிலும் தலையிடுகிறது. அரசாங்க அலுவலர்கள் அனைவரும் கட்சியைச் சார்ந்தவர்களாகவும் கட்சியில் செல்வாக்கு உடைய வர்களாகவும் இருக்கின்றனர். கட்சியின் தீர்மானத்தைத் தீவிர மாகச் செயல்படுத்துகின்றனர்.

ஒரு கட்சிமுறையில் கட்சியானது அரசியலோடு நிற்பதில்லை. சமுதாய வாழ்விலும், பொருளாதார வாழ்விலும் தலையிடும். தேசிய ஒற்றுமை என்ற பெயராலும், சமுதாய ஒருமைப்பாடு என்ற பெயரிலும் மனித வாழ்வின் எல்லாத் துறையிலும் கட்சி தலையிட்டு வல்லாட்சியை ஏற்படுத்துகிறது.

**ஒரு கட்சியும் பல கட்சியும் வேறுபாடுகள்**

ஒரு கட்சிமுறைக்கும் பல கட்சிமுறைக்கும் பொதுவான அம் சங்களோ ஒற்றுமைகளோ காணல் அரிது. இரு முறைகளுக்கும் இடையே வேறுபாடுகளே நிலவுகின்றன.

ஒரு கட்சிமுறையில் வல்லாட்சியும், பல கட்சிமுறையில் குடி யாட்சியும் இருக்கின்றன. ஒரு கட்சி முறை நிலவும் அரசாங்கத் தில் சமுதாயத்திற்கும் அரசிற்கும் வேறுபாடுகள் காட்டப்படுவ தில்லை. எனவே, அரசாங்கம் சமுதாய வாழ்வில் தலையிடுகிறது. ஹிட்லரும் முசோலினியும் சமுதாயத்திற்கும் அரசிற்கும் வேறுபாடு காணவில்லை. ஆனால், பல கட்சிமுறையில் அரசிற்கும் சமுதாயத் திற்கும் வேறுபாடு உண்டு. அரசாங்கம் சமுதாய வாழ்வில் தலை யிடுவதில்லை.

ஒரு கட்சிமுறையில் அரசாங்க நிறுவனங்களான செயல்துறை யும், சட்டமன்றங்களும், நீதித்துறையும் வேறுபடுத்தப்படுவதோ பிரிக்கப்படுவதோ இல்லை. இவைகள் இணைந்தே செயல்படுகின் றன. பல கட்சிமுறையில் அரசாங்கத்தின் இந்நிறுவனங்கள் வேறுபடுத்தப்படுகின்றன. இவைகளிடையே அதிகாரங்களும் பிரிக்கப்பட்டுள்ளன.

ஒரு கட்சி முறை நிலவும் நாட்டில் கட்சியானது அரசாங்க நடவடிக்கைகளோடு அமையாது இதர நடவடிக்கைகளிலும் பங்கு கொள்கிறது. ஆனால் பல கட்சி முறையில் கட்சியானது அரசியல் நடவடிக்கைகளில் மட்டும் ஈடுபடும்.

ஒரு கட்சி முறையில் எதிர்க்கட்சிகளுக்கு இடமில்லை. ஒரே கருத்துத்தான் நிலவ வேண்டும். அதுவும் கட்சிக்கு ஆதரவான கருத்தாக அமைய வேண்டும். வாக்காளர்களுக்குப் பலவற்றில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு இல்லை. பல கட்சி முறையில்

எதிர்க்கட்சிகளுக்கு இடமுண்டு. மாறுபட்ட கருத்துகள் நிலவு கின்றன. பல கட்சிகளில் ஒன்றையும், பல கொள்கைகளில் விருப்பமான ஒன்றையும் தேர்ந்தெடுத்துப் பின்பற்றலாம்.

ஒரு கட்சி முறையில் கட்சியானது அரசியலமைப்பில் இடம் பெற்றதாகவும் இருக்கிறது. சோவியத் ரஷ்யாவின் கம்யூனிஸ்ட் கட்சி அரசியலமைப்பிலும் அரசாங்கத்திலும் நிரந்தர இடம் பெற்றுள்ளது. ஆனால் பன்மைக் கட்சி நிலவும் நாடுகளில் அரசியல் கட்சிகள் அரசியலமைப்பிற்கு அப்பாற்பட்டனவாக விளங்கு கின்றன. இவைகளுக்கு அரசியலமைப்பில் இடம் ஒதுக்கப்பட வில்லை.

ஒரு கட்சிமுறையில் கட்சியின் கட்டுப்பாடும் கட்சிக்குப் பணி வும் வற்புறுத்தப்படுகின்றன. வாதங்களுக்கும் பிரதிவாதங்களுக் கும் இடமில்லை. ஆனல், பல கட்சிமுறையில் எதிர்ப்புகளுக்கும், வாதங்களுக்கும், பிரதிவாதங்களுக்கும், விவாதித்தலுக்கும் வாய்ப்புகள் உண்டு. கட்சி உறுப்பினர்களுக்குக் கட்சியிலிருந்து விலகும் சுதந்திரமும், மாற்றுக் கட்சியில் சேரும் உரிமையும் அளிக் கப்படுகின்றன.

ஒரு கட்சிமுறையில் கட்சியின் தலைவரே அரசாங்கத்தின் தலைவராகவும், கட்சியின் தலைவர் மிகுந்த செல்வாக்குடையவராக வும் இருக்கிறார். ஆனால், பன்மைக் கட்சி முறையில் கட்சியின் தலைவர் ஒருவராகவும் அரசாங்கத்தின் தலைவர் வேறொருவராகவும் இருக்கலாம்.

ஒருமைக்கட்சி முறைக்கும் பன்மைக் கட்சிமுறைக்கும் வேறு பாடுகள் நிறைந்திருக்கின்றன. குடியாட்சி நாடுகள் பன்மைக் கட்சி முறையினையும், வல்லாட்சி நாடுகள் ஒரு கட்சி முறையினை யும் பின்பற்றுகின்றன. ஒரு நாட்டு மக்களின் மனப்பாங்கிற் கேற்ப அந்நாட்டில் ஆட்சி முறைகள் அமைகின்றன.

**இங்கிலாந்தில் அரசியல் கட்சிகள்**

இங்கிலாந்தில் அரசியல் கட்சிகள் படிப்படியாகத் தோன்றின வாகும். இங்கிலாந்து மன்னருக்கும் பாராளுமன்றத்திற்கும் இடையே நடைபெற்ற போராட்டத்தில் அரசியல் கட்சிகள் தோன்றின. ஸ்டூவர்டு மன்னர்களை ஆதரித்தவர்கள் குதிரை வீரர்கள் (Covaliers) என்றும், பாராளுமன்றத்தை ஆத ரித்தவர்கள் உருண்டைத் தலையர்கள் (Round Heads) என்றும் அழைக்கப்பட்டனர். நாளடைவில் மன்னரை ஆதரித்த

குதிரை வீரர்கள் டோரிகள் (Tories) எனவும், பாராளுமன்றத்தை ஆதரித்த உருண்டைத் தலையர்கள் விக்குகள் (Whigs) எனவும் வழங்கப்பட்டனர். 1832ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டம் தோன்றியபோது விக்குகள் மிதவாதிகள் (Liberals) எனவும், டோரிகள் பழமைவாதிகள் (Conservatives) எனவும் பெயரிடப் பட்டனர். பழமைவாதிகள் நிலச்சுவான்தார்களையும், மதகுருமார் களையும், அரசனையும் ஆதரிப்பவர்களாகவும், மிதவாதிகள் மத்திய வகுப்பாரையும், தொழிலாளர்களையும் ஆதரிப்பவர்களாகவும் அமைந்தனர். இருபதாம் நூற்றுண்டில் தொழிற்கட்சி (Labour Party) தோன்றி முக்கியத்துவம் அடைந்தது. மிதவாதிகளது கொள்கைகள் பலவற்றையும் தொழிற்கட்சி கொண்டிருந்ததால் மிதவாதிகளது செல்வாக்குக் குறைந்து, தொழிற்கட்சியின் செல் வாக்கு அதிகரித்தது. தற்போது இங்கிலாந்தில் பழமைவாதக் கட்சியும் தொழிற்கட்சியும் ஆதிக்கம் உடையனவாக அமைந்துள் ளன. மிதவாதக்கட்சியினரின் செல்வாக்கு மிகவும் குறைந் துள்ளது.

பழமைவாதக்கட்சியும், தொழிற்கட்சியும், மிதவாதக் கட்சி யும் தேசியக் கட்சிகளாகும். தங்கள் தலைமைக் கழகத்தை லண்டன் மாநகரில் அமைத்துள்ளனர். கட்சித் திட்டங்களைத் தீட்டுவதும், தேர்தல் கொள்கைகளை வகுப்பதும் தலைமைக் கழ கங்களின் பணியாகும். ஒவ்வொரு தொகுதியிலும் உள்ள கட்சி யின் கிளைக்கழகங்கள் தங்கள் மத்தியக் கழகத்தின் கொள்கைகளை யும் தீர்மானங்களையும் விளக்கி மக்களின் ஆதரவைத் திரட்டும்.

தேர்தலில் பெரும்பான்மையைப் பெற்ற கட்சி மாட்சிமை பொருந்திய அரசியாரின் ஆளும் கட்சியாகவும், மற்றக்கட்சி மாட்சிமை பொருந்திய அரசியாரின் எதிர்க்கட்சியாகவும் பணி யாற்றும். பெரும்பான்மைக் கட்சியினர் அமைச்சரவையை அமைத்து அரசாங்கத்தை நடத்துவர். பாராளுமன்றத்தின் தலை வர் தலைமை அமைச்சராக இருப்பார். எதிர்க்கட்சியினர் அர சாங்க நடவடிக்கைகளைக் கண்காணித்துக் குற்றங்குறைகளைச் சுட்டிக் காட்டுவர்.

பாராளுமன்ற அரசாங்கத்தை வெற்றிகரமாகச் செயலாக்கு வதில் இங்கிலாந்தின் இரு கட்சி முறை மிக சாதகமாக இருக்கிறது.

**அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அரசியல் கட்சிகள்**

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அரசியல் கட்சிகள் மக்கள் வாழ்வில் முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளன. பல பதவி

களுக்கான தேர்தல்கள் அடிக்கடி நடந்துகொண்டிருக்கின்றன. அமெரிக்கர்கள் அரசியல் கட்சிகளை மறந்து வாழ இயலாது. குடியரசு தலைவர், குடியரசின் துணைத்தலைவர் தேர்தல்கள் நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறையும், பிரதிநிதிகளின் சபைக்கான தேர்தல்கள் இரண்டாண்டுகளுக்கொரு முறையும், மூன்றில் ஒரு பகுதி செனட் உறுப்பினர்களின் தேர்தல்கள் இரண்டாண்டிற்கு ஒரு முறையும் நடைபெறுகின்றன. மேலும் மாநிலச் சட்டமன்றங் களுக்கான தேர்தல்களும், மாநில ஆளுநர்களின் தேர்தல்களும் உண்டு. பல மாநிலங்கள் தங்கள் நீதிபதிகளையும் அரசாங்க உயர் அலுவலர்களையும் தேர்ந்தெடுக்கின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு பின்பற்றப்படுவதால் சட்டத் துறைக்கும் செயல்துறைக்கும் இடையே சுமூகமான உறவை ஏற்படுத்துவதில் அரசியல் கட்சிகள் பெரும்பங்கு கொள் கின்றன.

கூட்டாட்சிவாதிகள் மத்தியக் கூட்டாட்சி அரசாங்கம் வலு வுள்ளதாகவும் அதிகாரம் மிக்கதாகவும் இருக்க வேண்டுமெனக் கருதினர். கூட்டாட்சி எதிர்ப்புவாதிகள் மாநிலங்களின் சுதந் திரத்தை வலியுறுத்தினர். ஹேமில்டன், ஜெபர்சன் தலைமை யிலான இரு பிரிவுகளும் அரசியல் கட்சிகளாக மாறின. கூட் டாட்சி ஆதரவாளர்கள் ரிபப்ளிக்கன் கட்சியாகவும் (Republican party) கூட்டாட்சி எதிர்ப்பாளர்கள் டிமாகிரடிக் கட்சியாகவும் (Democratic party) அமைந்தனர்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இருகட்சிமுறை வேரூன்றியது. 1800 முதல் 1824 வரை ரிபப்ளிக்கன் கட்சியினர் பதவியிலிருந் தனர். 1828 முதல் 1840 வரை டிமாகிரடிக் கட்சியினர் ஆட்சி யிலிருந்தனர். ஆனால் அடிமைப் பிரச்சினையின் காரணமாக டிமாகிரடிக் கட்சியினரின் செல்வாக்கு மங்கியது. ரிபப்ளிக்கன் கட்சி வேட்பாளரான ஆபிரஹாம் லிங்கன் பதவியடைந்தார். அடிமை ஒழிப்பில் வெற்றி பெற்றதால் (1861-1865) குடியரசு கட்சியின் செல்வாக்கு ஓங்கியது. சூழ்நிலை சந்தர்ப்பங்களுக் கேற்பக் கட்சிகள் மாறி மாறி வெற்றி பெற்று ஆட்சியைக் கைப் பற்றுகின்றன.

அமெரிக்காவில் அரசியல் கட்சிகள் தேசிய ரீதியில் அமைக் கப்பட்டுள்ளன. கட்சியின் தேசியக் கழகம் தலைமைக் கழக மாகும். தலைமைக் கழகத்தின் தலைவர் தேர்தல் திட்டங்களை வகுப்பார். கட்சி தேர்தலில் வெற்றி பெறுவதற்கான வழிவகை களைக் கவனிப்பார். கட்சியின் மாநிலக் கமிட்டிகளும், நகரக் கமிட்டிகளும், தொகுதிவாரிக் கழகங்களும் கட்சிக் கொள்கைகளை

பிரச்சாரம் செய்து மக்களின் ஆதரவைத் திரட்டும். இரு அரசியல் கட்சிகளின் அமைப்பும் ஏறக்குறைய ஒரே விதமாக உள்ளன. தேசிய அளவிலும், மாநிலங்களின் அளவிலும் கட்சியின் தேர்தல் திட்டங்கள் வகுக்கப்படுகின்றன.

ரிபப்ளிக்கன் கட்சி, டிமாகிரடிக் கட்சி ஆகியன தவிர சோஷலிஸ்ட் கட்சி, கம்யூனிஸ்ட் கட்சி என அரசியல் கட்சிகளும் நடைமுறையில் உள்ளன. ஆனால், இவைகளுக்கு ஆட்சியை அடையும் வாய்ப்பு இல்லை. எனவே, இங்கிலாந்தைப் போல இரு கட்சி முறை அமெரிக்காவிலும் நிலைபெற்றுள்ளது.

## இந்தியாவில் அரசியல் கட்சிகள்

இந்தியாவிலும் இங்கிலாந்தைப் போன்ற பாராளுமன்ற முறை அரசாங்கம் நடைமுறையிலுள்ளது. இங்கிலாந்தில் இரு கட்சி முறையும் இந்தியாவில் பல கட்சிமுறையும் நடைமுறையில் இருக்கின்றன.

1885ஆம் ஆண்டில் இந்தியத் தேசியக் காங்கிரஸ் கட்சி தோற்றுவிக்கப்பட்டது. இந்தியா சுதந்திரம் பெறுவதில் காங்கிரஸ் கட்சி மகத்தான பணியைச் செய்துள்ளது. இந்தியா குடியரசான பிறகு காங்கிரஸ் கட்சி மத்திய அரசாங்கத்திலும் மாநில அரசாங்கங்களிலும் ஆட்சியை அமைத்தது. 1957, 1962, 1967ஆம் ஆண்டுத் தேர்தல்களிலும் மத்திய அரசாங்கத்திலும், பெரும்பான்மையான மாநில அரசாங்கங்களிலும் காங்கிரஸ் கட்சி அரசாங்கம் அமைக்கப்பட்டது. 1969ஆம் ஆண்டில் காங்கிரஸ் கட்சி பழைய காங்கிரஸ், புதுக் காங்கிரஸ் என இரண்டாகப் பிரிந்தது. பாராளுமன்றத்தில் புதிய காங்கிரசுக்குப் பெரும்பான்மைப் பிரச்சினை ஏற்பட்டதால் 1971-ல் தேர்தல் நடத்தப்பட்டது. இதில் மிகுந்த பெரும்பான்மையுடன் புதிய காங்கிரஸ் மத்திய அரசாங்கத்தை அமைத்தது.

சுதந்திராக் கட்சி, பாரதீய ஜனசங்கம், பொதுவுடைமைக் கட்சி, சமூகப் பொதுவுடைமைக் கட்சி, திராவிட முன்னேற்றக் கழகம் போன்ற இதரக் கட்சிகளும் இருக்கின்றன. காங்கிரஸ் கட்சி சிண்டிகேட் என்றும் புதிய காங்கிரஸ் என்றும் பிரிந்தது போலப் பொதுவுடைமைக் கட்சியும் இந்தியப் பொதுவுடைமைக் கட்சி என்றும், மார்க்சீயப் பொதுவுடைமைக் கட்சி என்றும் பிரிந்தது. திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து பிரிந்து அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றியது.

இந்தியாவில் பல கட்சி முறை நிலவுகிறது. கட்சிப் பூசல்கள் காரணமாக அரசியல் கட்சிகள் பிரிவதும் புதுக்கட்சிகள் தோன்று

வதுமாக உள்ளன. பலாத்காரத்தில் நம்பிக்கையுடைய கட்சி களும் வட்டார நோக்குடைய கட்சிகளும், அயல் நாட்டினரின் அனுதாபத்திலிருக்கும் கட்சிகளும், கட்டுப்பாடு இல்லாத கட்சி களும் நாட்டின் முன்னேற்றத்திற்கும் குடியாட்சி முறைக்கும் குந்தகம் விளைவிக்கும்.

**பிரான்சில் அரசியல் கட்சிகள்**

பிரான்சு நாட்டில் பல கட்சி முறை நிலவுகிறது. அங்கு ஏற் படும் அரசியல் குழப்பங்களுக்கும் அமைச்சரவையின் நிலையற்ற தன்மைக்கும் பல கட்சி முறையே காரணமாகும். பொதுத் தேர் தல்களில் எந்த ஒரு கட்சிக்கும் தனிப்பெரும்பான்மை கிடைப் பதில்லை. எனவே, கூட்டு அரசாங்கம் அமைக்கப்படுகிறது. கூட்டுச் சேர்ந்து அரசாங்கத்தை அமைத்தவர்கள் கட்சி மாறும் போதும், கூட்டு அரசாங்கத்திற்குத் தங்கள் ஆதரவை மறுக்கும் போதும் அமைச்சரவை வீழ்ச்சியடைகிறது. அரசியலைப் பிரஞ்சு மக்கள் விளையாட்டுப் போல் கருதாமல் போர்க்களமாகக் கருது கிறார்கள்.

பிரான்சு மக்களின் தனித்தன்மையும், அவர்களது அரசியல் வரலாறும் பலகட்சி முறைக்கு அடிப்படைகளாய் அமைகின்றன. பிரான்சில் லூயி மன்னர்களின் வல்லாட்சியும், வல்லாட்சிக்கெதி ரான புரட்சியும், புரட்சிக்குப் பின் ஏற்படுத்தப்பட்ட குடியாட்சி யும், நெப்போலியனால் தோற்றுவிக்கப்பட்ட பேரரசும், அதன் பின் தோன்றிய குடியரசுகளும் ஒவ்வொன்றும் தங்களுக்கு ஆதர வாளர்களையும் எதிர்ப்பாளர்களையும் கொண்டிருந்தது. மக்க ளிடையே பல பிரிவுகள் நிலவின. இந்தப் பிரிவுகளே பல கட்சித் தோற்றத்திற்கு அடிப்படையாய் அமைந்தன.

தேசிய மயமாக்குவதைப் பிரான்சின் பொதுவுடைமைக் கட்சி ஆதரிக்கிறது. இது 1920ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்டது. சமூகப் பொதுவுடைமைக் கட்சி அமைதியான முறையில் பொரு ளாதார மாற்றத்தை ஏற்படுத்தத் திட்டமிடுகிறது. மக்கள் குடியரசு இயக்கம் நாட்டுடைமைக்கு எதிராகச் செயலாற்றுகிறது. பிரான்சின் தீவிரவாதக் கட்சி தனியார் சொத்தை ஆதரிப்பதுடன் நாட்டுடைமையாக்குதலை எதிர்க்கிறது. குடியரசின் இடது சாரி அணி பொதுவுடைமைக் கோட்பாட்டிற்கு முரண்பட்டதாக அமைந்துள்ளது. தளபதி டிகாலை ஆதரித்த பிரான்சு மக்கள் அணி வல்லாட்சிப்போக்கை ஆதரிப்பதோடு பிரான்சில் நிலையுள்ள அரசாங்கத்தை ஏற்படுத்துவதில் ஆர்வம் கொண்டுள்ளது. பிரான்சில் ஐந்தாவது குடியரசை டிகால் நிறுவி 1958-ல் புதிய தோர் அரசியலமைப்பைத் தோற்றுவித்தார்.

பிரான்சு நாட்டின் பலகட்சிமுறை இங்கிலாந்து, அமெரிக்க அரசியல் கட்சி முறையிலிருந்து மாறுபட்டதாக அமைந்துள்ளது. இங்கிலாந்தும் அமெரிக்காவும் இருகட்சி முறையின் எடுத்துக்காட்டுகளாகவும், பிரான்சு பலகட்சி முறையின் எடுத்துக் காட்டாகவும் இருக்கின்றன.

**சோவியத் ரஷ்யாவில் கட்சிமுறை**

சோவியத் ரஷ்யாவில் ஒருகட்சி முறை நடைமுறையிலிருக்கிறது. பொதுவுடைமைக்கட்சி ஒன்றே ரஷ்யாவில் அனுமதிக்கப்பட்ட கட்சியாகும். அரசியலமைப்பின் விதிகளில் இக்கட்சி இடம் பெற்றுள்ளது. பொதுவுடைமைக்கட்சி ரஷ்ய மக்களின் அரசியல் வாழ்விலும், சமுதாய வாழ்விலும், பொருளாதாரத்துறையிலும் ஆதிக்கம் கொண்டுள்ளது. கட்சிக்கும் அரசாங்கத்திற்கும் வேறுபாடு கொள்ளப்படுவதில்லை. கட்சியின் தலைவர்களே அரசாங்கத்தின் தலைவர்களாக இருக்கிறார்கள்.

பொதுவுடைமைக் கட்சி சிறந்த அமைப்புடையதாக விளங்குகிறது. நுண்ணியங்கள் (Cells) கட்சியின் சிறிய அலகுகளாகும். தொழிற்சாலைகளிலும் பண்ணைகளிலும் பொதுவுடைமைக் கட்சியின் நுண்ணியங்கள் இருக்கின்றன. நுண்ணியங்களுக்கு அடுத்த நிலையில் நகரக் கட்சிக் கமிட்டிகளும், மாவட்டக் கட்சிக் கமிட்டிகளும் உள்ளன. நகர, மாவட்டக் கமிட்டிகளின் இணைப்பாக வட்டாரக் கமிட்டி நிறுவனங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவைகளிலிருந்து பிரதிநிதிகள் பெருநிலப் பிரிவுக்கழகங்களுக்கு அனுப்பப்படுகின்றனர். கட்சியின் மத்தியக் குழு பொதுவுடைமைக் கட்சியின் உச்ச நிறுவனமாகும். மத்தியக் குழுவில் பிரிசிடியம், செயலகம், கட்சிக் கட்டுப்பாட்டுக் குழு என மூன்று பிரிவுகள் உண்டு. பிரிசிடியம் கொள்கைகளை வகுக்கிறது. செயலகம் அவைகளை நடைமுறைப்படுத்துகிறது. கட்டுப்பாட்டுக் குழு பொதுவுடைமைக் கொள்கைகள் செயல்படுவதைக் கண்காணிக்கிறது.

சோவியத் ரஷ்யாவின் ஒரு கட்சிமுறை வல்லாட்சிப் போக்குடையதாகவும், மக்களாட்சிக் கோட்பாட்டிற்கு முரண்பட்டதாகவும் கருதப்படுகிறது.

## செல்வாக்குக் குழுக்கள்

குடியாட்சி நாடுகளில் செல்வாக்குக் குழுக்கள் தோன்றியுள்ளன. தங்கள் நலனைக் காப்பதற்காக அமைக்கப்பட்ட குழுக்களே

செல்வாக்குக் குழுக்கள் (Pressure Group) எனப்படும்.[8] வணிகர்கள், ஆலைமுதலாளிகள், விவசாயிகள் போன்றோர் தங்கள் நலன்களைக் காப்பதற்காகக் குழுக்களையும், சங்கங்களையும், நிறுவனங்களையும் அமைத்துக் கொள்கின்றனர். செல்வாக்குக் குழுக்கள் சட்டமன்றங்களுடன் தொடர்பு கொண்டு தங்களுக்குச் சாதகமான சட்டங்களை இயற்றவும், பாதகமான சட்டங்களை நீக்கவும் முயற்சி செய்யும்.

செல்வாக்குக் குழுக்கள் அரசியல் கட்சிகளிலிருந்து மாறுபட்டனவாகும். கட்சிகள் விரிந்த அளவுத் திட்டங்களை வகுத்துச் செயல்படுகின்றன. பெரிய அமைப்புகளையுடையனவாகும். மேலும், அரசியல் கட்சிகள் ஆட்சியைக் கைப்பற்ற வேண்டுமென்ற குறிக்கோளையுடையன. செல்வாக்குக் குழுக்கள் தங்கள் குழுவின் நலனைக் காப்பதற்கான நடவடிக்கைகளையே மேற்கொள்ளும். பெரிய திட்டங்களையுடையனவாகவோ, அரசாங்கத்தை அமைக்கும் எண்ணம் உடையனவாகவோ இரா.

செல்வாக்குக் குழுக்கள் தொழில் அடிப்படையிலும், சமய அடிப்படையிலும் அமைகின்றன. அமெரிக்க இருப்புப்பாதைச் சங்கம், அமெரிக்க மருத்துவர் சங்கம், தபால் தந்தி ஊழியர்களின் தேசியக் கூட்டணி, தேசிய விவசாயிகள் ஒன்றியம், வணிகர் மன்றம், அகில இந்திய ஆசிரியர் கழகம், தேசிய கத்தோலிக்கநல அமைப்பு, ஓய்வு பெற்ற இராணுவ வீரர்கள் சங்கம், பஞ்சாலைத் தொழிலாளர்சங்கம் ஆகியன செல்வாக்குக் குழுக்களுக்கு எடுத்துக் காட்டுகளாகும். இங்கிலாந்தில் நூற்றுக்கணக்கான ஆதிக்கக் குழுக்கள் உள்ளன. புரூஸ்டர் (Brewster) கூற்றுப்படி, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மூன்று லட்சம் ஆதிக்கக் குழுக்கள் இருக்கின்றன. வகைப்படுத்த இயலாத அளவிற்குச் செல்வாக்குக் குழுக்கள் எண்ணிக்கையில் அதிகரித்துள்ளன.[9]

செல்வாக்குக் குழுக்கள் பல பணிகளை ஆற்றுகின்றன. பத்திரிக்கைகள் வழியும், துண்டுப்பிரசுரங்களின் மூலமும் பொது மேடைகளிலும் செல்வாக்குக் குழுக்கள் பிரச்சாரம் செய்து பொது

[8] Odegard: 'An interest group or pressure group is a formal organisation of people who share one or more common aims or concerns and who are trying to influence the course of events — in particular, the formation and administration of public policy by government — so as to protect and promote their interests.'

[9] Brewster: 'America's 3,00,000 pressure groups are so diverse that they defy classification. It is possible, however, to call some of them idea groups and others economic groups. Both categories are generally interested in direct or indirect political action.'

மக்கள் கருத்தைத் தங்களுக்குச் சாதகமாக உருவாக்குகின்றன. தங்களுக்குச் சாதகமாகச் செயலாற்றக் கூடிய வேட்பாளர்களுக்கு எல்லாவகையிலும் தேர்தலில் உதவுகின்றன. அமெரிக்க வணிகர்கள் சங்கமும், தேசிய விவசாயிகள் சங்கமும் பெண்வாக்காளர் கழகமும் தேர்தல்களில் முக்கியப் பங்கு கொள்கின்றன. அரசாங்க அலுவலர்களுடன் தொடர்புகொண்டு செல்வாக்குக் குழுக்கள் தங்கள் நலன்களைப் பேணுகின்றன. அவசிய மேற்படும்போது வேலை நிறுத்தங்களிலும் பலாத்காரத்திலும் செல்வாக்குக் குழுக்கள் இறங்குகின்றன. சட்டமன்ற உறுப்பினர்களோடு தொடர்புகொண்டு தங்கள் காரியங்களைச் சாதிக்கின்றன. தங்களுக்குச் சாதகமான மசோதாக்களை நிறைவேற்றுவதிலும், பாதகமானவற்றை நீக்குவதிலும் மசோதாவின் ஒவ்வொரு நிலையிலும் சட்டமன்ற நிறுவனங்களோடு நெருங்கிய தொடர்பு கொள்ளுவதால் செல்வாக்குக் குழுக்கள் பாராளுமன்றத்தின் மூன்றும் அவையெனப்படுகிறது.

குடியாட்சி நாட்டில் ஆதிக்கக் குழுக்கள் தவிர்க்க முடியாதன வாகிவிட்டன. தங்கள் நலனைப் பேணுவதில் இவைகள் நாட்டங்கொள்வது இயற்கையேயாகும். அரசியல் வாதிகள் தனிநபர்களை நாடுவதைவிடச்செல்வாக்குக் குழுக்களை அணுகுதல் எளிமையாகும். இவைகள் தங்கள் துறையில் வல்லுனர்களையும் தலைவர்களையும் தோற்றுவிக்கின்றன. பத்திரிக்கைகளை நடத்தியும் பிரசுரங்களை வெளியிட்டும் பொதுமக்கள் கருத்தை உருவாக்குவதிலும், பொதுமக்கள் கல்வியை வளர்ப்பதிலும் பங்கு கொள்கின்றன.

செல்வாக்குக் குழுக்கள் தங்கள் சுயநலத்திற்காகவே செயல்படுவதால் பல வேளைகளில் இவைகளது சுயநலம் பொது நலத்திற்கு முரணாக அமைகின்றன. செல்வாக்குக் குழுக்களிடையே அடிக்கடி முரண்பாடுகளும் தோன்றிப் பொது அமைதிக்குத் தீங்கு ஏற்படுகிறது. செல்வாக்குக் குழுக்கள் அரசாங்கத்தில் மிகுந்த செல்வாக்குடையதால் தங்கள் நலத்தைப் பேணுவதில் வெற்றி பெறுகின்றன. செல்வாக்கற்ற குழுக்கள் தங்கள் நலனைக் காக்க இயலுவதில்லை. செல்வாக்குக் குழுக்கள் அரசியலில் நிலவும் முறைகேடுகளுக்குக் காரணமாய் அமைகின்றன.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் செல்வாக்குக் குழுக்கள் மிகுந்த ஆதிக்க முடையனவாக உள்ளன. இங்கிலாந்திலும் செல்வாக்குக் குழுக்கள் செல்வாக்குடையன. இந்தியாவிலும் செல்வாக்குக் குழுக்கள் இருக்கின்றன. ஆனால் அமெரிக்காவைப் போல் வலிமையுடையனவாக அமையவில்லை.

## முக்கிய வினாக்கள்

1. அரசியல் கட்சிகளின் பங்கும் பணிகளும் யாவை?
2. கட்சிகளின் நிறைகுறைகள் யாவை?
3. இருகட்சி முறையையும் பலகட்சி முறையையும் ஒப்பிடுக.
4. ஒருமைக்கட்சி முறையையும் பன்மைக்கட்சி முறையையும் ஒப்பிடுக.
5. இங்கிலாந்து, அமெரிக்கா, இந்தியா, பிரான்சு, ரஷ்யா, ஆகிய நாடுகளின் அரசியல் கட்சிகள் பற்றிக் குறிப்பு வரைக.
6. செல்வாக்குக் குழுக்களைப்பற்றி ஒரு குறிப்பு வரைக.
7. தற்கால நாடுகளில் அரசியல் கட்சிகள் செய்யும் செயல்கள் யாவை? ஒருகட்சி முறை, இருகட்சி முறை, பலகட்சி முறை கட்சிகளிடையேயுள் ள வேறுபாடுகளைச் சான்றுகளுடன் நிறுவுக. (செ. ப. க. செப்டம்பர், 1969).
8. தற்காலத்தில் இந்தியாவிலுள்ள அரசியற் கட்சிகளைப் பற்றி ஒரு திறனாய்வுக் கட்டுரை வரைக. (செ. ப. க. ஏப்ரல், 1970)
9. அரசியல் கட்சிகள்— குறிப்பு வரைக. (செ. ப. க. செப்டம்பர், 1975.

# 14. உரிமைகள்

## (Rights)

உரிமைகளின் தன்மைகள்— உரிமைகளின் கோட்பாடுகள்— உரிமைகளின் வகைகள்— குடி உரிமைகள்— பொருளாதார உரிமைகள்— அரசியல் உரிமைகள்— உரிமைகளின் பாதுகாப்பு— உரிமைகளும் கடமைகளும்— இந்திய அரசியலமைப்பில் உரிமைகள்— இங்கிலாந்தில் உரிமைகள்— அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உரிமைகள்.

அரிஸ்ட்டாட்டிலின் கூற்றுப்படி மனிதன் வாழ்ந்தால் மட்டும் போதாது. நன்ருக வாழவேண்டும். நலன்கள் பாதுகாக்கப் பட்டால்தான் மனிதன் நன்ருக வாழ இயலும். தனது நலனையும் பேணிப் பொது நலனையும் பாதுகாப்பதற்கு ஒருவனுக்கு உள்ள சக்தியே உரிமைகள் எனப்படும். தனிமனிதனின் ஆளுமை வளர்ச்சிக்கும், சமுதாய வாழ்விற்கும், அரசியல் வாழ்விற்கும் உரிமைகள் இன்றியமையாதனவாகும்.

### உரிமைகளின் தன்மைகள்

உரிமைகள் தனித்தியங்குவதில்லை. சமுதாயத்தில் வாழ்பவர்களுக்கே உரிமைகள் உண்டு. உரிமைகள் சமுதாயத்தைச் சார்ந்தனவாகும். [1] தீவில் தனித்து வாழும் ராபின்சன் குருசோவிற்கு உரிமைகள் இருப்பதாகக் கூற இயலாது. உரிமைகள் கடமைகளோடு சார்ந்தனவாகும். நமது உரிமைகள் மற்றவர்களது கடமைகளாகவும், மற்றவர்களது உரிமைகள் நமது கடமைகளாகவும் அமைகின்றன. [2] பிறருக்கு அளித்த கடனைப் பெறுவது நமது உரிமையானல் அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டியது மற்றவரது கடமையாகும். உரிமைகள் மனிதனுக்கு இயற்கை

[1] Wilde: 'A right is not an actual power to do, or to prevent interference or to aid in the exercise of such power....Rights have meaning, therefore, only within the sphere of social relations,'

[2] Hobhouse: 'Rights and duties are conditions of social welfare, or as we define such welfare, of a life of harmony to this welfare every member of the community stands in a double relation. He has his share in it. That is the sum of his rights. He has to contribute his share, That is the sum of his duty.'

யானதாகும். இவைகள் சட்டத்தால் பாதுகாக்கப்பட வேண்டியவை. உரிமைகள் பொதுநலத்திற்கு ஏற்றதாகவும், பொது நலத்தைத் தழுவியதாகவும் அமைய வேண்டும். தீண்டாமையைப் பின்பற்றுவது உரிமை எனக் கருத இயலாது. உரிமைகள் மக்கள் அனைவரின் நலத்தையும் அடிப்படையாகக் கொண்டதாகும். நமக்கு இருக்கும் உரிமை மற்றவர்களுக்கும் உண்டு என்பது நினைவுகூரப்பட வேண்டும். உரிமைகள் தெளிவுடையனவாகவும், திட்டமுடையனவாகவும் அமைந்திருக்க வேண்டும். அப்போது தான் அவைகளைச் செயல்முறைப்படுத்த இயலும்.

### உரிமைகளின் கோட்பாடுகள்

உரிமைகள் பற்றியும் உரிமைகளின் தோற்றங்கள் பற்றியும் பல கோட்பாடுகள் நிலவுகின்றன. உரிமைகள் இயற்கையானவை; மனிதனோடு தோன்றியன; மனிதனிடமிருந்து பிரிக்க முடியாதன என்று உரிமைகளின் இயற்கைக் கோட்பாடு கூறுகிறது. நாடு இருப்பதால் உரிமைகள் மதிக்கப்படுகின்றன; காக்கப்படுகின்றன. நாடு உரிமைகளைத் தோற்றுவித்துக் காத்து நிற்கிறது. நாடு கூறுவதே உரிமைகள் ஆகின்றன. இக்கூற்றே சட்டவழி உரிமைக் கோட்பாடாகும். சொத்துகள் வரலாற்றின் தோற்றமாகும். எனவே, சொத்துரிமைகளும் படிப்படியாக வந்தனவாகும். இதேபோல உரிமைகள் அனைத்தும் படிப்படியான தோற்றமென உரிமைகளின் வரலாற்றுக் கோட்பாடு சொல்கிறது. சமுதாயத்திற்காக உரிமைகள் தோன்றினவென்றும், காக்கப்பட வேண்டுமென்றும் சமுதாய நலக் கோட்பாடு கூறுகிறது.

### உரிமைகளின் வகைகள்

உரிமைகளை அறவழி சார்ந்த உரிமைகள் என்றும், சட்டஞ் சார்ந்த உரிமைகள் என்றும் இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றோம். அறவழி சார்ந்த உரிமைகள் சட்டத்தால் வற்புறுத்தப் படுவதில்லை. சட்டப்படியான உரிமைகளைக் குடிஉரிமை, அரசியல் உரிமை, பொருளாதார உரிமை என்று பகுக்கலாம். இவைகள் அடிப்படை உரிமைகளாகவும் சட்டத்தால் மதிக்கப் பட்டுக்காக்கப்படுகின்றன.

### குடி உரிமைகள்

சமுதாயத்தில் மகிழ்ச்சியாக வாழவும் மனிதனாக வாழவும் குடியுரிமைகள் (Civic Rights) அவசியமாகின்றன. வாழ்வதற் காகவும், தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவும் உரிமைகள் உண்டு. இந்த உரிமைகளின் அடிப்படையில் தற்காப்பிற்காகத் தனியாள் மேற்கொள்ளும் நடவடிக்கைகள் சட்டத்தால் ஏற்றுக்

கொள்ளப்படுகின்றன. விருந்தும் மருந்தும் உண்பது தடுக்கப் படுவதில்லை. உண்ணாவிரதமிருப்பதும் தற்கொலை முயற்சியும் சட்ட விரோதங்களாகக் கொள்ளப்படுகின்றன. சுதந்திரத்திற் கான உரிமையும், நாடு முழுவதும் தடையின்றிச் செல்வதற்கான உரிமைகளும் உண்டு. சட்டத்திற்குட்பட்டு ஒருவன் விருப்பப் படி செயல்படலாம். நாடு முழுவதும் சுதந்திரமாக நடமாடுவதை தடைசெய்ய இயலாது. சட்டமுறைகளுக்குட்பட்டே ஒருவரைக் கைதியாக்கலாம்; காவலில் வைக்கலாம். நீதிமன்றத்தால் விசா ரிக்கப்பட்டுத் தண்டிக்கப்பட்டாலன்றி ஒருவரைச் சிறை வைக்கக் கூடாது. சட்ட முறைகளுக்குப் புறம்பாகக் கைது செய்தாலோ, காவலில் வைத்தாலோ, சிறை வைத்தாலோ ஆள் விடுவிப்பதற்கான பேராணைக்கு நீதிமன்றங்களை அணுக லாம். போர்க்காலங்களிலும் நெருக்கடி நேரங்களிலும் இவ் வுரிமை தற்காலிகமாகத் தள்ளி வைக்கப்படலாம். குடும்ப உரிமை யும் அளிக்கப்பட்டுள்ளது. மனிதனின் சமுதாய வாழ்விற்கும் நல வாழ்விற்கும் இவ்வுரிமை அவசியமாகிறது. திருமணம் செய்யவும், மக்களை ஈன்றெடுக்கவும், சொத்தில் வாரிசுரிமை பெறவும் உரிமை களுண்டு. மத உரிமையும், வழிபாட்டுரிமையும் காக்கப்படுகின்றன. ஒருவன் விரும்பும், நம்பும் மதத்தைப் பின்பற்றவும், போற்றிப் பேணவும், பரப்பவும் தடையில்லை. சமுதாயத்தின் பொது நல னுக்கு இடையூறு இல்லாத மதக்கோட்பாடுகளைப் பின்பற்றலாம். தற்கால அரசுகள் மதச் சார்பற்ற அரசுகளாக இருப்பதால் இவ் வுரிமை எல்லா மதத்தினருக்கும் வழங்கப்படுகிறது. பேச்சுரிமை யும் எழுத்துரிமையும் முக்கியமான உரிமைகளாகும். வரையறைக் குட்பட்டுச் சுதந்திரமாகத் தனது கருத்துகளை வெளியிடலாம். குடியாட்சி அரசாங்கத்தில் ஆளுவோரை ஆளப்படுவோரும், பெரும்பான்மையினரைச் சிறுபான்மையினரும் குறை கூறலாம். அரசாங்கம் விழிப்புடன் செயல்படவும் குறைகளை அகற்றவும் இவ் வுரிமை வழிவகை செய்யும். குற்றங்களைத் தூண்டும் பேச்சுகளோ, வெளியீடுகளோ, அவதூறுப் பேச்சுகளோ, வெளியீடுகளோ சட் டத்தால் தடைசெய்யப்படுகின்றன. எழுத்துச் சுதந்திரத்தில் பத்திரிக்கைச் சுதந்திரமும் அடங்கும். இவ்வுரிமை குடியாட்சி அரசாங்கம் நன்கு செயல்பட அவசியமாகும். அரசாங்கத்தின் நடவடிக்கைகளைக் குறைகூறுவதன் மூலம் பத்திரிக்கைகள் பொதுமக்கள் கருத்தை உருவாக்குகின்றன. அரசாங்கம் தனது கொள்கைகளை மாற்றிக் கொள்வதற்கும் வழியேற்படுகிறது. பொது நலனுக்கு எதிராகச் செல்லும் போதும், அவதூறுகளையும், உண் மைக்குப் புறம்பானவைகளையும் பிரசுரிக்கும் போதும்பத்திரிக்கைச் சுதந்திரம் கட்டுப்படுத்தப்படுகிறது. கூட்டம் கூடும் சுதந்திரமும், குழு அமைக்கும் சுதந்திரமும், சங்கம் ஏற்படுத்தும் உரிமைகளும்

உண்டு. அமைதியாகக் கூடவும் தங்கள் நலனைப் பேணவும் உரிமைகள் உண்டு. மனிதன் சமூக விலங்கு எனப்படுவதால் கூடுதலும் குழு அமைத்தலும் சமூக நலனைப் பேண வகை செய்யும். சமத்துவ உரிமை குடியாட்சியின் அடிப்படைக் கொள்கையைக் காட்டுகிறது. சட்டத்தின் முன் அனைவரும் சமம். இனத்தாலும், மதத்தாலும், பிறப்பிடத்தாலும், மொழியாலும், பல்வேறுபாட்டாலும் மக்கள் வேறுபடுத்தப்படக் கூடாது. தலைமை அமைச்சரிலிருந்து காவலர் வரை சட்டத்தின் ஆட்சிக்கு உட்பட்டவராக இருக்கவேண்டும். நாகரிகச் சமுதாயத்தில் முக்கிய உரிமை கல்வி கற்கும் உரிமையாகும். தன் திறமைக்கேற்ற கல்வி கற்கத் தடையிருக்கக்கூடாது. வேறுபாடு காட்டாமல் அரசாங்கம் கல்வி முன்னேற்றத்திற்கு வழிவகை செய்யவேண்டும். குறிப்பாகச் சிறுபான்மையினரின் கல்வியும் பண்பாடும் காக்கப்படவேண்டும். மொழியால் சிறுபான்மையினருக்கு அரசாங்க உதவியுடன் பள்ளிகள் நடத்தப்படுகின்றன. குடியாட்சி முறை வெற்றிபெற அனைவரும் கற்க வேண்டியதும், எழுத்தறிவின்மையை நீக்க வேண்டியதும் அவசியமாகும்.

**பொருளாதார உரிமைகள்**

சொத்துரிமை பொருளாதார உரிமையின்பாற்பட்டதாகும். சொத்துகளை வைத்திருக்கவும், வாங்கவும், விற்கவும் உள்ள உரிமையும், தன் சொத்துகளைத் தான் அனுபவிக்கும் உரிமையும், தனது சொத்துகளைப் பிறர் பறிக்காவண்ணம் காக்கும் உரிமையும் சொத்துரிமையாகும். தற்காலத்தில் சொத்துரிமை அளிப்பதில் முரண்பட்ட கருத்துகள் நிலவுகின்றன. அடிப்படை உரிமைகளில் சொல்லப்பட்ட சொத்துரிமை விதிகளை நீக்க வேண்டுமென்ற கொள்கையும் நிலவுகிறது. இது எப்படியிருப்பினும் அரசாங்கம் தனியார் சொத்துகளைப் பொதுக் காரியங்களுக்காக எடுத்துக்கொண்டு இழப்பு ஈடு வழங்கலாம். தொழில் செய்யும் உரிமை வாழும் உரிமையோடு இணைந்த ஒன்றாகும். தனக்கு விருப்பமான தொழிலைச் செய்யவும், அதற்கு நியாயமான ஊதியம் பெறவும் உரிமையுண்டு. ஒரே விதமான வேலைக்கு நபர்களுக்கேற்ப மாறுபட்ட ஊதியம் அளிப்பது அனுமதிக்கப்படுவதில்லை. தொழில் உரிமை பொதுவுடைமை நாடுகளில் நன்கு செயல்படுகிறது. சக்திக்கு ஏற்ற வேலையை அரசாங்கமே அளிக்கிறது. முதலாளித்துவ நாடுகளில் அவரவர்கள் விருப்பமான வேலைகளைத் தேடிக்கொள்ளலாம். ஒப்பந்தம் செய்யும் உரிமையும் அளிக்கப்பட்டுள்ளது. தனக்குச் சாதகமான ஒப்பந்தங்களை யாருடனும் செய்து கொள்ளலாம். இவ்வொப்பந்தங்கள் மீறப்படும்போது அரசு தனது அதிகாரத்தைப் பயன்படுத்தி ஒப்பந்தத்தை நடை

முறைப்படுத்துகிறது. ஆனால், பொது நலனுக்கு முரணானதும் சட்டவிரோதமானதுமான ஒப்பந்தங்களைச் செய்யக்கூடாது. ஓய்வு எடுத்துக்கொள்ளவும் ஓய்வு நேரத்தை அனுபவிக்கவும் உரிமைகள் உண்டு. ஒரு குறிப்பிட்ட ஊதியத்திற்கு அதிக நேர வேலை வாங்குவதும் அல்லது குறிப்பிட்ட நேர வேலைக்குக் குறைந்த ஊதியம் அளிப்பதும் சுரண்டல் எனக் கொள்ளப்படுகிறது. வயது போன காலத்திலும், ஓய்வு காலத்திலும், நோய்வாய்ப்பட்ட காலத்திலும், இயலாத காலத்திலும் பொது நலம் பேணும் அரசுகள் பாதுகாப்பு அளிக்கின்றன. இவைகளும் உரிமைகளாகக் கருதிச் செயல்படுத்தப்படுகின்றன.

### அரசியல் உரிமைகள்

ஆளப்படுவோருக்கு ஆட்சியில் பங்கு கொள்ளும் உரிமைகளும் அளிக்கப்படவேண்டும். குடியாட்சி முறையில் அரசியல் உரிமைகள் அளிக்கப்பட்டுப் பாதுகாக்கப்படுகின்றன. அரசியல் உரிமைகள் இதர உரிமைகளுக்கு அடிப்படையாய் விளங்குவதால் இவைகள் சட்டத்தால் பாதுகாக்கப்படுகின்றன. அரசியல் உரிமைகள் குடிமக்களுக்கு மட்டுமே அளிக்கப்படுகின்றன. அயல் நாட்டினருக்கு அளிக்கப்படுவதில்லை.

வாக்குரிமையின் மூலம் குடிமக்கள் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க இயலுகிறது. இப்பிரதிநிதிகளே அரசாங்கத்தை அமைக்கிறார்கள். வாக்குரிமைக்குச் சொத்து, கல்வி, வரி செலுத்துதல் போன்ற பல தகுதிகள் வற்புறுத்தப்பட்டன. ஆனால், தற்காலத்தில் எல்லோருக்கும் வாக்குரிமை என்ற கோட்பாடு மலர்ந்துள்ளது. குறிப்பிட்ட வயது வந்த ஆண்களும் பெண்களும் வாக்களிக்கலாம். பித்தர்களும், சிறுவர்களும், குற்றவாளிகளும் வாக்கிட அனுமதிக்கப்படுவதில்லை. வாக்களிக்கும் உரிமை போலவே தேர்தலில் போட்டியிட்டு வாக்குப் பெறும் உரிமையும் உண்டு. அரசாங்கத்தில் பதவிகளை அடையும் உரிமைகளும் அளிக்கப்பட்டுள்ளன. ஜாதி, மத, இன, பிறப்பிட வேறுபாடின்றி எந்தப் பதவிக்கும் போட்டியிடத் தகுதியும் உரிமையும் உண்டு. அப்பதவிகளுக்கான கல்வித் தகுதிகளும், அனுபவமும் வேண்டுமென்பது சொல்லாமலே பெறப்படும். முறையிடும் உரிமை ஒவ்வொரு குடிமகனுக்கும் உண்டு. தனக்கு இழைக்கப்பட்ட குறைகள் களையப்படுவதற்காக அரசாங்கத்திற்கோ சட்டமன்றங்களுக்கோ முறையீடுகள் செய்யலாம். சுவிட்ஸர்லாந்தின் சட்டத்தை மாற்றுவதற்கே விண்ணப்பிக்கும் உரிமை மக்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. அரசாங்கத்தைக் குறை கூறும் உரிமையும் குடிமக்களுக்கு இருக்கிறது. அரசாங்கக் கொள்கைகளையும் நடை

முறைகளையும் குறை கூறி அரசாங்கத்தின் கவனத்தை ஈர்க்கலாம். முறைகேடான அரசாங்கங்களை எதிர்க்கும் உரிமையும் உண்டென தேசத் தந்தை மகாத்மா காந்திஜீ அவர்கள் கூறினர். நிரந்தரமாக ஒரு மாநிலத்தில் தங்கும் உரிமையும் உண்டு. நிரந்தரமாகத் தங்குவதைப் பிறர் தடைசெய்ய இயலாது. குடிமக்கள் அயல்நாட்டிலிருக்கும் போது அரசாங்கம் அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும். இப்பாதுகாப்புப் பெறும் உரிமையுண்டு. தூதாண்மையுறவு ஏற்படுத்தித் தற்காலத்தில் அரசாங்கங்கள் இவ்வுரிமைகளைக் காக்கின்றன.

### உரிமைகளின் பாதுகாப்பு

குடிமக்களின் உரிமைகள் பல விதங்களில் காக்கப்படலாம். உரிமைகள் தற்காலத்தில் அரசியலமைப்புகளில் எழுதப்பட்டுள்ளன. இவ்வரசியல் அமைப்புகள் உன்னதமானதும் புனிதமானதுமான அடிப்படைச் சட்டமாகக் கருதப்படுகிறது. இச்சட்டத்தை எளிதில் அரசாங்கம் மாற்ற இயலாது. இதன்வழி உரிமைகள் காக்கப்படுகின்றன. மேலும், நீதிமன்றங்கள் அரசியலமைப்பின் பாதுகாவலனாகவும்,அதன் வழி உரிமைகளின் காவலனாகவும் செயலாற்றுகிறது. அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டின் மூலம் நீதிமன்றங்களுக்குச் சுதந்திரம் அளிக்கப்பட்டு உரிமைகளைக் காக்கும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ளது. இதன் வழியும் உரிமைகள் காக்கப்படுகின்றன. பொதுமக்களின் விழிப்பும், அவர்களது கருத்தும் உரிமைகளைக் காக்க இயலும். அரசாங்கம் உரிமைகளைப் பறிக்க முற்படும் போதும், ஒடுக்க முற்படும் போதும், பொதுமக்கள் எதிர்ப்புத் தெரிவித்துக் குறை கூறுதலின் மூலம் உரிமைகளைக் காக்கலாம். பொதுமக்கள் கருத்திற்கு முரண்பட்ட அரசாங்கம் நிலைக்க முடியாது. இவ்விதமாகப் பல வழிகளில் உரிமைகள் காக்கப்படலாம்.

### உரிமைகளும் கடமைகளும்

உரிமைகள் தனித்தியங்க முடியாது. உரிமைகளும் கடமைகளும் இணைந்தே இயங்குகின்றன.[8] உரிமைகளைக் கோரும் குடிமகன் தனது கடமைகளை மறத்தலாகாது. கடமையை ஆற்றும் ஒருவருக்கே உரிமை உண்டு. எனவே, குடிமக்களுக்கும் தாங்கள் நிறைவேற்ற வேண்டிய கடப்பாடுகள் உள்ளன.

[8] 'Rights without duties are like men without shadows; they one exist in fairy tales.'

'There can be no right without a corresponding duty, or duty without a corresponding right, any more than there can be a husband without wife, or a father without a child — Salmond.

ஒரு சிறந்த குடிமகன் தனக்குத்தானே செய்ய வேண்டிய கடமையும் உண்டு. தன்னைச் சிறந்த குடிமகனுக்கிக் கொள்ள வேண்டும். தனது குடும்பத்திற்கும் தன்னைச் சார்ந்தோருக்கும் உரிய கடமைகளை நிறைவேற்ற வேண்டும். சுகாதாரத்தைப் பின்பற்றித் தன் சுற்றத்தாருக்கும் தன் வட்டாரத்திற்கும் கடமை யாற்ற வேண்டும்.

தன் நாட்டிடம் பற்று உள்ளவனுகக் குடிமகன் இருக்க வேண்டும். உரிய வரியைச் செலுத்துதல் கடமையாகக் கருத வேண்டும். பொதுநல உணர்வோடு செயல்பட்டுத் தனது வாக்குரிமையை நல்வழியில் பயன்படுத்த வேண்டும். சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவதில் பொது அலுவலர்களுக்கு உதவுதல் குடிமகனின் கடனுகும். உழைப்பு தன்மேன்மைக்கும் நாட்டின் உயர்விற்கும் அவசியமாகும். பொறையுடைமையும் அநீதியைக் காணுமிடத்து எதிர்ப்பதும் நல்ல குடிமகனின் பண்பாகும்.

மானிட சமுதாயத்தின் நன்மைக்கும், உலக அமைதிக்கும், அரசுகளிடையே உறவிற்கும் குடிமகன் கைகொடுக்க வேண்டும்; குரல் கொடுக்க வேண்டும்.

**இந்திய அரசியல் அமைப்பில் உரிமைகள்**

இந்திய மக்களின் அடிப்படை உரிமைகள் எழுதப்பட்ட இந்திய அரசியலமைப்பின் மூன்றுவது பகுதியில் 12 முதல் 35 முடிய உள்ள விதிகளில் கூறப்படுகின்றன.

சமத்துவத்திற்கான உரிமைகள் ஐந்து விதிகளில் கூறப்பட்டுள்ளன. சட்டத்தின் முன் சமத்துவம் வழங்கப்படுகிறது. மதம், இனம், சாதி, பால், பிறப்பிடம் ஆகியவற்றின் அடிப்படையில் வேறுபாடுகள் தடுக்கப்படுகின்றன. அரசாங்க அலுவலில் சமவாய்ப்புகள் உறுதி செய்யப்படுகின்றன. தீண்டாமையும் விருதுகளும் ஒழிக்கப்பட்டுள்ளன.

சுதந்திரத்திற்கான உரிமைகள் நான்கு விதிகளில் சொல்லப்பட்டுள்ளன. பேச்சுரிமை, கூட்டம் கூடும் உரிமை, சங்கம் அமைக்கும் உரிமை, இந்தியா முழுவதும் செல்லும் உரிமை, இந்தியாவின் எப்பகுதியிலும் தங்கும் உரிமை, உடைமைகளை வைத்துக் கொள்ளவும், வாங்கவும், விற்கவும் உரிமை, எத்தொழிலையும் செய்யும் உரிமை ஆகியன வழங்கப்பட்டுள்ளன. தண்டனையிலிருந்து பாதுகாப்பு, உயிருக்கும் தனி மனித சுதந்திரத்திற்கும் பாதுகாப்பு, கைதுசெய்யப்பட்டுக் காவலில் வைக்கப்படாமலிருப்பதற்குப் பாதுகாப்பு என அரசியலமைப்புச் சட்டம் பாதுகாப்பளிக்கிறது.

சுரண்டப்படாமலிருப்பதற்கான உரிமை இரண்டு விதிகளில் காட்டப்படுகின்றன. கட்டாய வேலையும், குழந்தைகளை ஆலைகளில் நியமித்தலும் தடுக்கப்படுகின்றன.

மதச்சுதந்திரத்திற்கான உரிமை நான்கு விதிகளில் கூறப்படுகின்றன. நம்பிக்கையில், வழிபாட்டில், பேணுதலில், போற்றுதலில் மதச்சுதந்திரம் உண்டு. மத விவகாரங்களை நிர்வகிக்கும் உரிமையும், குறிப்பிட்ட மத வளர்ச்சிக்கு வரி மறுக்கும் சுதந்திரமும், மத போதனைக்குச் செல்லாதிருக்கும் உரிமையும் அளிக்கப்பட்டுள்ளன.

கல்வி, பண்பாட்டுரிமைகள் இரண்டு விதிகளில் சொல்லப்படுகின்றன. பெரும்பான்மையினர் நலன் காக்கப்படுகிறது. சிறுபான்மையினர் தங்கள் அவைகளை அமைத்து நிர்வகிக்கலாம்.

சொத்துரிமை மூன்று விதிகளில் கூறப்பட்டுள்ளன. சொத்துரிமைகள் அளிக்கப்படுகின்றன. பொது நலத்திற்குச் சொத்துகள் தேவைப்படும்போது அவைகளை எடுத்தாலும், அவைகளுக்கு அளிக்கப்படும் இழப்பு ஈட்டுத்தொகையும், இழப்பு ஈட்டுத் தொகைபற்றி நீதிமன்றத்திற்கு அதிகாரமின்மையும் விளக்கப்படுகின்றன.

அரசியலமைப்பு முறையில் பரிகாரம் தேடும் உரிமை நான்கு விதிகளில் காட்டப்பட்டுள்ளன. அரசியலமைப்பில் கூறப்பட்ட உரிமைகளை நடைமுறைப்படுத்தத் தலைமை நீதிமன்றத்தை அணுகலாம்.

இராணுவச் சட்டம் நடைமுறையிலிருக்கும்போது அடிப்படை உரிமைகள் கட்டுப்படுத்தப்படலாம். இராணுவ வீரர்களுக்கு உள்ள அடிப்படையுரிமையைப் பாராளுமன்றம் சட்டத்தால் கட்டுப்படுத்தலாம். இந்தியாவில் அடிப்படை உரிமைகள் அரசியலமைப்புச் சட்டத்தில் இடம் பெற்று நீதிமன்றங்களால் காக்கப்படுகின்றன.

**இங்கிலாந்தில் உரிமைகள்**

இங்கிலாந்து ஆவணமற்ற அரசியலமைப்பை உடையது. இருப்பினும், சில ஆவணங்கள் உண்டு. பெரிய சாசனம், உரிமைகள் மனு, உரிமைகள் மசோதா போன்ற ஆவணங்களில் சில அடிப்படை உரிமைகள் கூறப்பட்டுள்ளன. ஆனால், இந்த ஆவணங்களில் உரிமைகள் முழுமையாகக் கூறப்படவில்லை.

சட்ட ஆட்சியின் மூலமும் உரிமைகள் இங்கிலாந்தில் காக்கப் படுகின்றன. டைசியின் கூற்றுப்படி சட்டத்தைப் புறக்கணித் தால் அன்றித் தண்டிக்கப்படலாகாது; சட்டத்தின் முன் சமத் துவம் உண்டு. எல்லோரும் சாதாரணச் சட்டத்திற்கும் சாதாரண நீதிமன்றத்திற்கும் உட்பட்டவர்கள்; உரிமைகள் அரசியலமைப் பிலிருந்து தோன்றவில்லை; உரிமைகளினுல் அரசியலமைப்புத் தோன்றியது. எனவே, சட்டத்தின் ஆட்சியால் உரிமைகள் காக்கப்படுகின்றன.

இங்கிலாந்துப் பாராளுமன்றம் அவ்வப்போது சட்டத்தினுல் உரிமைகளை ஏற்படுத்துகிறது. அவ்வுரிமைகளைச் சட்டத் தொகுப் பில் (Statute Law) காணலாம்.

இங்கிலாந்தின் நீதிமன்றங்கள் உரிமைகளின் காவலனுக அமைகின்றன. வழக்குகள் தங்கள் முன்வரும்போது பொதுச் சட்டத்தின் (Common Law) அடிப்படையிலும், நேர்மை யின் (Equity) அட்ப்படையிலும் தீர்ப்பு வழங்கி உரிமைகளைக் காக்கின்றன.

### அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உரிமைகள்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்புத் தோற்று விக்கப்பட்டபொழுது அடிப்படை உரிமைகள் அதில் இடம்பெற வில்லை. 1917ஆம் ஆண்டில் அரசியலமைப்பில் பத்துத் திருத் தங்கள் மேற்கொள்ளப்பட்டு அடிப்படை உரிமைகள் சேர்க்கப் பட்டன.

பேச்சுச் சுதந்திரம், மதச்சுதந்திரம், பத்திரிக்கைச் சுதந்திரம், அமைதியாகக் கூட்டம் கூடும் உரிமை, சங்கங்கள் அமைக்கும் உரிமை, குடியிருப்பை மாற்றி பிறிதோரிடத்தில் குடியேறும் உரிமை, சொத்துச் சேர்க்கவும் வைத்திருக்கவும் உரிமை, பெண்கள் வாக்குரிமை, தொழிற் சுதந்திரம், சமத்துவ உரிமை, ஆகிய உரிமைகளும் சுதந்திரங்களும் அரசியலமைப்பில் இடம் பெற்றுள்ளன.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றம் அரசிய லமைப்பின் பாதுகாவலனுகச் செயலாற்றி அதன்வழி அமெரிக்க மக்களின் அடிப்படை உரிமைகளைக் காக்கிறது.

## முக்கிய வினாக்கள்

1. உரிமைகளின் வகைகளை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.
2. இந்தியாவின் அடிப்படை உரிமைகளைக் கூறி அவைகள் எவ்விதம் காக்கப்படுகின்றன என்பதையும் காட்டுக.
3. அடிப்படை உரிமைகள்- குறிப்பு வரைக. (செ. ப. க. ஏப்ரல், 1972)

# மேற்கோள் நூற்பட்டியல்

(Bibliography)

Alexander, L. M. , 'World Political Patterns' Rand Menlly Co., 1957.

American Pol. Sc. Association , 'Toward a More Responsible Two-party System' Newyork, Rinebart, 1956.

Adam, T. R. , 'Elements of State' Randon House, N. Y. 1960.

Adams anb Others, 'Foreign Governments and their Back-grounds.'

Barer, E. , 'Reflections on Government. London, O.U.P. 1948.

Barron, R. , 'Parties and politics in Modern France.'

Berth, L. P. , 'The Constitution and the Supreme Court' Row Peterson & Co., N. Y. 1962.

Brewster, K. W. , 'Government in Modern Society' Houghton Miffton Co. Bosson, 1958.

Bryce, J. , 'Modern Democracies' Newyork, Macmillan, 1921.

Carter anb Herz, ,'Government and Politics in the Twentieth Century', Thomas & Hudson, London, 1961.

Carter, Ranney anp Herz,, 'The Government of France' World Press Ltd., Calcutta, 1954.

Carter, B. E. , 'The Office of Prime Minister' Princeton University Press. 1956.

Coker, F.W. , 'Recent Political Thought', D. Appleton Century Co., N.Y. 1934.

Cole, G.D.H. , 'Social Theory', Methmen & Co. Ltd., London, 1921.

Coyle, D. C. , 'The United States Political System.'

Dawson, R. M. , 'Democratic Government in Canada 1957.'

Dunning, W. A., 'Political Theories from Rousseau to Spencer.'

Finer, H., 'Theory and Practice of Modern Government', Bombay, Asia Pub. House, 1961.

Ford, H. J., 'Representative Government', N.Y. Hold, 1924.

Frederich, Carl J., 'Constitutional Government and Democracy.,

Galloway, George, B., 'Congress and Parliament Washington' National Planning Association, 1955.

Garner, I. W., 'Political Science and Government 'World Press Ltd, Calcutta, 1951.

Gettell, R. G., 'Political Science' Calcutta, World Press, 1950.

Gilchrist, R. N., 'Principles of Political Science 'Oriant Longmans, 1961.

Hazard, I. N., 'The Soviet System of Government' University of Chicago Press, 1944.

Huber, Hans., 'How Switzerland Governed' Allahabad, Central Book Depot.

Joad, C.E.M., 'An Introduction to Modern Political Theory' London, O.U.P., 1953.

Kalvin, G. H. (Ed), 'Major Governments of Asia', N. Y., Cornell University Press, 1959.

Laponce, N., 'The Government of The Fifth Republic.'

Larson, I. A., 'Representative Government in Greek and, Roman History, Berkly, University of California Press, 1955.

Laski, H. I., 'The American Presidency' London, George Allen & Unwin, 1952.

Lindsay, A. D., 'The Modern Democratic State', O.U.P. New-york, 1962.

Mac Iver R. M., 'The web of Government, Y.N., Macmillan 1947.

May, Erskine, , 'Treatise on the Law, Privileges, Proceedings and Usages of Parliament.'

Mcilwain, C. H., 'Constitutionalism, Ancient and Modern', Carnell University Press, 1947.

Michels, R., 'Politicals Parties' Wden & Eder Paul, Dover Publication, N. Y. 1959.

Miller, I.D. B., 'The Nature of Politics',Gerald Duck-worth & Co. Ltd., London, 1962.

Morrison, H. : 'Parliament and Government.'

Munro, W.B., 'The Government of the United States' Macmillan & Co., N.Y. 1947.

Munro and Ayearst, , 'The Governments of Europe' Macmillan Co., N.Y., 1954.

Neumann, S., 'Modern Political Parties'University of Chicago Press, 1951.

Nicholas, H. S., 'The Australian Constitution, Australia Law Book, 1952.

Ogg and Ray, ' 'Introduction to American Government', N. Y., D. Appleton-Century, 1935.

Pearson, N (Tr), 'Cockpit of France.'

Potter, A. M., 'American Government and Politics.'

Robson, W. E. (ED) , 'The Civil Service in Britain and France' Newyork, Macmillan, 1956.

Ray,M. N., 'Politics, Power and Parties' Renaissance Publishers, Calcutta, 1960.

Sait, Edward, , 'Political Institution- A Preface', Appelton Century Co., N. Y. 1938.

Sen, D. K. , 'A Comparative Study of the Indian Constitution' Orient Longmans, 1960.

Seymond, R., 'The Making of the Pakistan' London, Faber & Faber, 1949.

Soltau,R. H. , 'An Introduction to Politics' Longmans, Green & Co., London, 1951.

Stewart, M. , 'Modern Forms of Government' George Allen & Unwin, 1959.

Strong, C. F. , 'Modern Political Constitutions' London, Sidgwick & Jackson.

Verney, Douglas, V., 'The Analysis of Political System' Routledge & Kegan Paul Ltd., 1959.

Vyshinsky, A. V. , 'The Law of Soviet State'.

Wheare, K. C., 'Modern Constitution' Newyork, Oxford, 1947

Wheare, K. C. , 'Legislatives' O.U.P. London, 1963.

Wheare,K.C. , 'Federal Government' Newyork, Oxford, 1947.

Williams and Harrison, , 'De Gaulle's Republic.'

wlliams P. , 'Politics in Post-war France London' Longmans, Green, 1958.

Wolfe, B. D. , 'Communist Totalitarianism' Beacon Press, Boston, 1961.

# கலைச்சொற்கள்

## A

Absolute Majority — முழுப் பெரும்பான்மை
Act of Settlement — அரசுரிமை நிர்ணயச்சட்டம்
Adhoc Committee — தாற்காலிகக் கமிட்டி, தற்காலிகக் குழு
Administration of Justice — நீதி செலுத்துதல், நீதி நிருவாகம்
Administrative Courts — ஆட்சித்துறைக் கோர்ட்டு, ஆட்சித்துறை நீதிமன்றம்
Administrative Law — ஆட்சித்துறைச் சட்டம்
Administrative Powers — ஆட்சி அதிகாரங்கள்
Admiralty — கடற்படை இலாகா
Adult Francise
Adult Suffrage — வயதுவந்தோர் வாக்குரிமை
Alternate Vote System — மாற்று வாக்கு முறை
Ambassador — தூதர்
Amendment — திருத்தம்
Anarchy — அரசியல் குழப்பம், ஆட்சி குலைந்தநிலை
Annual Financial Statement — ஆண்டு நிதிநிலை அறிக்கை
Appropriation Bill — நிதி ஒதுக்கீட்டு மசோதா
Arbitary Government — எதேச்சை அரசாங்கம்
Aristocracy — உயர் குடியாட்சி
Armed Forces — போர்ப்படை
Articles of Constitution — அரசியல் அமைப்பு விதிகள்
Assembly — (மக்கள்) சபை
Autocracy — தன்னரசு

## B

Balance of Power — (நாடுகளின்) அதிகாரச் சமநிலை
Bicameralism — ஈரவைச் சட்ட மன்றம்

Bill of Rights — உரிமைகள் சட்டப்பகர்வு
Bishop — தலைமை சமயக் குரு
Bolshvik Party — போல்ஷ்விக் கட்சி
Budget — வரவு செலவு திட்டம், பட்ஜெட்
By -Election — இடைத் தேர்தல்

## C

Cabinet — அமைச்சரவை
Cabinet-Government — அமைச்சரவை ஆட்சி
Canton — கான்டன் (சுவிஸ்)கோட்டம்

Case Law — தீர்ப்பு வழிச் சட்டம்
Central Government — மத்திய அரசு
Chamber of Deputies — பிரதிநிதிகள் மன்றம்
Chamber of Nationalities — நாட்டினர் மன்றம் (ஸ்விட்சர்லாந்து)
Chancellor — நிதித் தலைவர்
Chancellor of Exchequer — கருவூலத் தலைவர்,
Checks and Balances — சமநிலைத் தடையீடுகள்
City States — நகர அரசுகள்
Civil Service — பொதுத்துறை அலுவல்
Coalition Ministry — கூட்டு மந்திரிசபை
Collective Responsibility — கூட்டுப் பொறுப்பு
Colony — குடியேற்ற நாடு
Collegiate Executive — கூட்டாட்சிக் குழு
Commission — ஆணைக்குழு
Committee of Supply — வழங்கு குழு
Committee System — குழு முறை, கமிட்டி முறை
Committee of the whole House — முழு அவைக் குழு
Committee of ways and means — வழி வகைக் குழு
Common Law — பொதுநீதி, பொதுச் சட்டம்
Common Wealth, The — காமன்வெல்த் (பொது நலக் கூட்டு)
Communal Representation — வகுப்புப் பிரதிநிதித்துவம்
Communism — சமுதாயப் பொதுவுடைமை வாதம், பூரண சமதர்மம், கம்யூனிசம்
Concurrent List — ஒருங்கிணைப்பட்டியல்

| | | |
|---|---|---|
| Confederation | — | இணைக்கூட்டரசு (அ)நேசக் குழு |
| Conservatism | — | பழமைக் கொள்கை |
| Conservative Party | — | பழமை வாதக்கட்சி, கன்சர் வேட்டிவ் கட்சி |
| Constituency | — | தொகுதி |
| Constituent Assembly | — | அரசியற் நிருணய சபை |
| Constitution | — | அரசியல் அமைப்பு |
| Constitutional Government | — | அரசியல் அமைப்புக்கு உட் பட்ட அரசாங்கம் |
| Constitutionalism | — | அரசியல் முறைமைக் குட் படுகை |
| Constitutional Law | — | அரசியல் அமைப்புச் சட்டம் |
| Constitutional Monarchy<br>Constitutional Soverign | — | அரசியலமைப்புக்குட்பட்ட முடியாட்சி |
| Consul | — | ஆட்சித் தலைவர் |
| Convention | — | வழக்காறு, மரபு |
| Corporate State | — | தொழில் கூட்டுக் கழக அர சாங்கம், கார்பொரேட் அரசாங்கம் |
| Council of State | — | ராஜ்ய சபை, நாட்டு மேல் சபை |
| Court | — | நீதிமன்றம் |
| Criminal | — | குற்றவாளி |

## D

| | | |
|---|---|---|
| Decentralisation | — | அதிகாரத்தைப் பன்முகப் படுத்தல் |
| Defacto | — | நிகழ் முறையில் |
| De Jure | — | சட்ட முறையில் |
| Delegated Legislation | — | ஒப்படைக்கப்பட்ட சட்டஞ் செய்யுரிமை |
| Delegation of Powers | — | அதிகார ஒப்படைப்பு |
| Democracy | — | மக்களாட்சி |
| Despot | — | கொடுங்கோலன் |
| Despotism | — | கொடுங்கோன்மை, வல் லாட்சி |
| Dictatorship | — | சர்வாதிகாரம் |
| Direct Democracy | — | நேரடி மக்களாட்சி |

Direct Democratic Checks — நேர்முக மக்களாட்சித் தடைகள்
Direct Election — நேர்முகத் தேர்தல்
Direct Legislation — நேரடிச்சட்டம் இயற்றல்
Discretionary Powers — தன்யுக்த அதிகாரம்
Dissolution — கலைவு
Division of Powers — அதிகாரப் பங்கீடு
Doctrine of Implied Powers — குறிப்பதிகாரக் கொள்கை, பொதிந்துள்ள அதிகாரக் கொள்கை
Dominion Status — குடியேற்ற நாட்டு உரிமை நிலை
Double Citizenship — இரட்டைக் குடியுரிமை

## E

Economic Equality — பொருளாதாரச் சமத்துவம்
Election — தேர்தல், வாக்கெடுப்பு
Electoral College — தேர்வாளர் குழு
Electorate — வாக்காளர் தொகுதி, வாக்காளர்கள்
Emergency Powers — நெருக்கடி அதிகாரங்கள்
Enfranchisement — வாக்குரிமை அளிப்பு
Enlightened Despotism — அறிவுசான்ற வல்லாட்சி
Equity — நியாயம், அறிவு, நேர்மை
Executive — செயல்துறை
Executive, Plural — பன்மைச் செயற்குழு

## F

Federal Constitution — கூட்டாட்சி அரசியல் அமைப்பு
Federal Court — கூட்டாட்சி நீதிமன்றம்
Federal State — கூட்டாட்சி அரசு
Federation — கூட்டாட்சி
Female Suffrage — பெண்கள் வாக்குரிமை
Feudalism — நிலமானிய முறை
Fixed Executive — உறுதியுள்ள நிருவாகத்துறை
Flexible — நெகிழ்வுடைய, மாற்றக் கூடிய

Franchise — வாக்குரிமை, ஓட்டுரிமை
Fraternity — சகோதரத்துவம்
Functions — பணிகள்
Functional Representation — தொழில்வகைப் பிரதிநிதித்துவம்
Fundamental Rights — அடிப்படை உரிமைகள்

## G

General Assembly — பொதுச் சபை
General Will — பொது விருப்பம்
Government — அரசாங்கம், அரசு
Government Responsible — பொறுப்புடைய அரசு
Governor — ஆளுநர், கவர்னர்
Governor General — பொது ஆளுநர்

## H

Habeas Corpus Act — ஆட்கொணர் சட்டம்
His Majesty's Opposition — மன்னரின் எதிர்க்கட்சி
Holy Roman Empire — புனித ரோமானியப் பேரரசு
House of Assembly — சட்ட சபை (அசம்பிளி)
House of Commons — பொது மக்கள் மன்றம்
House of Lords — பிரபுக்கள் மன்றம், உயர் குடியினர் அவை
House of Representatives — பிரதிநிதிகள் சபை

## I

Impeachment — அரசத்துரோகக் குற்றம்
Imperialism — ஏகாதிபத்தியம், ஏகாதிபத்தியக் கொள்கை
Implied Powers — பொதிந்துள்ள அதிகாரங்கள்
Independence — விடுதலை, சுதந்திரம்
Indian Civil Service — இந்தியப் பொதுத் துறை அலுவல்
Indirect Election — மறைமுகத் தேர்தல்
Industrial Revolution — தொழில் புரட்சி
Initiative — தொடக்கவுரிமை 'இனிசியேடிவ்,

## J

Joint Session — இணையமர்வு
Joint Select Committee — கூட்டுச் சிறப்புக்குழு
Joint Sitting — சேர்ந்திருத்தல்
Judges — நீதிபதிகள்
Judicial Review — நீதிப் புனராய்வு
Judiciary — நீதித் துறை
Justice — நியாயம், நீதி
Justices of Peace — அமைதிகாண் நீதிபதிகள்

## K

King — மன்னன், அரசன்

## L

Labour Party — தொழிற் கட்சி
League of Nations — சர்வதேசச் சங்கம்
Legislation — சட்டம் இயற்றல்
Legislative Assembly — சட்டசபை, சட்ட அசெம்பிளி
Legislative Council — மேல்சட்டசபை, சட்டக் கவுன்சில்
Legislature — சட்டசபை
List System — பட்டியல் ஓட்டு முறை
Local Administration — உள்ளாட்சி, வட்டார ஆட்சி
Lords of Appeal — மேல்முறையீட்டு மன்றப் பிரபுக்கள்

## M

Manhood Suffrage — ஆண்கள் வாக்குரிமை
Manifesto — நோக்க விளக்கம்
Martial Law — இராணுவச் சட்டம்
Middle Ages — இடைக்காலம்
Minister — அமைச்சர், மந்திரி
Ministerial Responsibilities — அமைச்சரவை பொறுப்புகள்
Ministry — அமைச்சவை
Monarchy — முடியரசு

Monarchy, Absolute — வரம்பிலா முடியரசு
Monarchy, Limited — வரம்புடைய முடியரசு
Money Bill — பண மசோதா
Multi Member Constituency — பல உறுப்பினர் தொகுதி
Multi-National State — பல்லின தேசிய நாடு
Multi-Party System — பலகட்சி முறை

N

Nation — தேசம்
Nationality — தேசியத் தன்மை
National Assembly — தேசிய அவை
National Council — தேசியக் குழு
Nationalisation — தேசியமாக்குதல்
Nationalism — தேசியம்
New Deal — புதிய திட்டம்
Non-Parliamentary Executive — பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறை

O

Old age Pension — முதுமைப் பருவ ஓய்வூதியம்
Oligarchy — சிறுகுழு ஆட்சி,
Optional Referendum — விருப்பக் குடியொப்பம்
Original Jurisdiction — முதல் வழக்கு அதிகாரம்
Origin of the State — நாட்டின் தோற்றம்

P

Parliament — நாடாளுமன்றம், பாராளுமன்றம்
Parliamentary Executive — பாராளுமன்றச்சார்புள்ள நிருவாகத் துறை, பாராளுமன்ற முறைச் செயலாட்சி
Party Government — கட்சி அரசு
Party System — கட்சி முறை
Petition of Rights — உரிமை விண்ணப்பம்
Plebiscite — குடிமக்கள் நேர்முக வாக்கெடுப்பு

Political Parties — அரசியல் கட்சிகள்
Political Science — அரசியல் நூல்
Political Sovereignty — அரசியல் இறைமை
Political Theory — அரசியல் கோட்பாடு
Politics — அரசியல்
Polyarchy — பலராட்சி
Popular Initiation — மக்கள் தொடக்கவுரிமை
Popular Sovereignty — மக்கள் இறைமை
Preamble of the Constitution — அரசியலமைப்பின் முகப்பு
Preferential Vote — விருப்ப வரிசை ஓட்டு முறை
Preferential Voting — விருப்ப வரிசை வாக்களிப்பு
Presidential Government — தலைவர்முறை அரசாங்கம்
Presidium — பிரிசிடியம்
Prime Minister — பிரதம மந்திரி, தலைமை அமைச்சர்
Privy Council — பிரிவி கவுன்சில், உயரவை
Property — உடைமை, சொத்து
Proportional Representation — விகிதப் பிரதிநிதித்துவம்
Public Administration — பொதுத்துறை ஆட்சி
Public Opinion — பொதுமக்கள் கருத்து

## Q

Quasi Federation — அரைக் கூட்டாட்சி
Quota — வீதப்பங்கு

## R

Recall, Right of — மீட்புரிமை
Red Tapism — 'சிவப்புநாடா' முறை
Referendum — குடியொப்பம்(ரெபரெண்டம்)
Reformation — மதச்சீர்திருத்தம்
Renaissance — மறுமலர்ச்சி
Republic — குடியரசு
Representation — பிரதிநிதிக் கொள்கை
Reserved Subjects — ஒதுக்கிய துறைகள்
Reserve of Powers — ஒதுக்கப்பெற்ற அதிகாரங்கள்
Residuary Powers — எஞ்சிய அதிகாரங்கள்
Responsibility, Collective — கூட்டுப் பொறுப்பு
Rigid Constitution — நெகிழா அரசியலமைப்பு

Rights of Citizenship — குடிமை உரிமைகள்
Rule of Law — சட்டத்தின் ஆட்சி

## S

Scheduled Caste — அட்டவணையில்கண்ட சாதி
Second Ballot System — இரண்டாவது வாக்கெடுப்பு முறை
Second Chamber — மேல்சபை, இரண்டாம்சபை
Secular State — சமய சார்பற்ற நாடு
Security Tenure — பதவிக்காலப் பாதுகாப்பு
Self Government — சுயாட்சி, தன்னுட்சி
Senate — மேல்சபை, செனட்
Sentorial Courtesy — செனட்டின் இணக்கப் பண்பு
Separation of Powers — அதிகாரப் பிரிவினை
Session — கூட்டக் காலம்
Single Member Constituency — ஓர் உறுப்பினர் தொகுதி
Single Transferable Vote — ஒற்றை மாற்று வாக்கு
Social Contract — சமுதாய ஒப்பந்தம்
Social Insurance — (சமூக இன்சூரன்சு) சமூக ஈட்டுறுதி
Social Legislation — சமூகநலச் சட்டம்
Socialism — பொதுவுடைமை, சோஷலிசம், சமதர்மம்
Sovereignty — இறைமை
Spoils System — 'ஸ்பாயில்ஸ்' முறை
Standing Committee — நிலைக்குழு
Standing Orders — நிலை ஆணைகள்
State of Nature — இயற்கை நிலை
Statute Law — சட்ட நீதி
Suffrage — வாக்குரிமை
Supremacy of the Constitution — அரசியலமைப்பின் மேம்பாடு
Supreme Court — தலைமை நீதிமன்றம்

## T

Territory — ஆட்சி நிலம்
Totalitarinism — சர்வாதிகார ஆட்சி,சர்வாதிகாரத்துவம்
Treaty — உடன்படிக்கை

## U

Urta Vires — வரம்பு கடந்த
Union List — யூனியன் அரசாங்கப் பட்டியல்
Unitary ஒருமுக
United Nations Organisation — ஐக்கிய நாடுகள் சபை
Unicameralism — ஒரு சபை முறை
Unwritten Constitution — எழுதா அரசியலமைப்பு
Upper House — மேல் சபை
Usage — வழக்கம்

## V

Veto — மறுப்பாணை (வீடோ)
Vote — வர்க்கு, ஓட்டு
Voters — வாக்காளர்கள்
Vote of Censure — கண்டன வாக்கு
Vote of Confidence — நம்பிக்கை வாக்கு
Votes, Transferable — மாறிவரு ஓட்டு

## W

Welfare State — பொதுநல நாடு
Woman Franchise — பெண்கள் வாக்குரிமை
Written Constitution — எழுதிய அரசியலமைப்பு